# ஈசுவர இராச்சிய பரிபாலனப் பிரபாவம்

---

ஸ்வீடன்பர்க் சுவாமியார் லத்தீன் பாஷையில் இயற்றிய
இந்நூல், சென்ற "நியு ரிபார்மர்" பத்திராதிபரும்
சுத்தாத்துவித சைவசித்தாந்த பரமாக
நூற்கள் பல இயற்றியவருமான

## D. கோபால செட்டியாரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு

அ வ ரா ல்

லண்டன் ஸ்வீடன்பர்க் சோசையட்டியாருக்காக
சென்னையில் பிரசுரிக்கப்பட்டது




செ ன் னை

ஆ ன ந் தா அ ச் சு க் கூ ட த் தி ல்
பதிப்பிக்கப்பட்டது

1933




[விலை ரூ. 1-8-0

# முகவுரை.

மனம் வாக்குக் காயமுயிர் மன்னி யசைப்பானும்
அனமாதி போக மளிப்பானும்-நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறவி
ஆட்டிவிடு வானுமரன். சிவபோகசாரம்

எல்லா சமயங்களின் சாரமும், ஈசுவரன் ஒருவரிருக்கிறுரென்பதிலும், ஆன்மாக்கள் பற்றற்று அவர் காட்டும் அருள்வழி சென்று, அவருடைய சீர் பாதம் அடையவேண்டுமென்பதிலும், அப்பேறு பெருதல் பொருட்டு, அவரிடத்திலும், சகல ஆன்மாக்களிடத்திலும், அன்புபாராட்டி, நமக்காக யாதொன்றுமின்றி, பிறர் நன்மைக்காகவே, தொழில்பட வேண்டுமென்பதிலும், அமைந்திருக்கிறது. அந்த அருள்வழி நடக்கும் தருமவாழ்வைக் குறித்த பல நீதி சாஸ்த்திரங்கள் எல்லா சமயங்களிலு மிருப்பினும், இந்நூல் போன்று, எவ்வளவு தீயோனுயினும், அவ்வாழ்வை ஏற்றுக்கொண்டு, நன்னெறிக்கு திருப்பக்கூடிய, நூதனவழியில் விளக்கிக்காட்டும் நூல் இதுகாறும் வெளியானது இல்லை. சுமார் 160-வருடங்களுக்கு முன் ஸ்வீடன் தேசத்தில் திருவருள்பெற்று அரும்பெறல் அனுபூதிமானுகிய சுவிடன்பர்க் சுவாமியார் என்பவர் ஒருவரிருந்தனர். அவர் ஈசுவர வைராக்கியமுடையவராய், பரம கருணுநிதியாகிய இறைவன் அருளால் ஞானக்கண் திறக்கப் பெற்று, இதுகாறும் வெளியிடப்படாதிருந்த அநேக தெய்வ இரகசியங்களை உலகினர் அறிந்து உய்யுமாறு திருவாய் மலர்ந்தருளினர். அவர் இயற்றிய நூற்களெல்லாம் அநேகமாய் ஞானநூற்களே. அவைகளெல்லாம் சுத்தாத்வித சைவ சித்தாந்தத்தை ஒத்து இருப்பதுடன், நீலகண்டசிவாசாரியார் செய்தபாஷியத்தைப்போலும், அதிலுமிகுந்தும், தற்கால பூதசாஸ்த்திர அறிஞர்களும் ஏற்றுக்கொள்ளும்படி, சைவசித்தாந்தத்தை நன்கு விவரித்து காண்பித்து, வெகு மேன்மையுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அந்நூற்களை வாசித்த அநேக சைவசித்தாந்த சிகாமணிகளே, அவைகள் அங்ஙனம் சிறப்புற்றிருக்கின்றன வென்று நற்சாட்சியம் ஈந்திருக்கின்றனர். இந்நூல் ஓர் நீதிநூலாகவே விளங்குகிறது. இது எச்சமயத்தையும் தாழ்த்தவும், உயர்த்தவும், நிலைப்படுத்தவும் எழுதப்படவில்லை. இந்நூல் ஆசிரியருக்கு, எல்லா சமயங்களும் சம்மதமே. ஈசுவரனை ஏற்றுக்கொண்டு, அவர் காட்டும் அருள்வழிசென்று, தருமவாழ்வை நடத்தப்பட்டவர்கள் எச்சமயத்தை

சேர்ந்தோராயினும், மோக்ஷம் அடைவார்களென்று, இந்நூலிலேயே 101, 253, 254, 322, 326, 328, 330 இப்பிரிவுகளிலும், அவர் இயற்றிய இன்னொரு நூலாகிய சுவர்க்கமும் நரகமும் எனும் நூல் 319-வது பிரிவிலும், வேறு இதர நூல்களிலும் அவர் தெளிவாய்க் கூறியிருக்கின்றனர்.

இந்நூல் ஈசுவரன் பிரபஞ்சத்தையும் அதிலுள்ள சராசரங்கள் யாவற்றையும் அரசாளுகிறாரென்று கூறுகிறது. ஆனால், உலக சங்கடங்களுக்கும் சோதனைகளுக்கும், நீண்ட இடுக்கண்களுக்கும் உட்பட்டு வேதனையடைந்த சிலர், பராபரன் மானிடவாழ்க்கையில் பிரவேசிக்கிறதில்லை யென்றும், மனிதனுடைய வாழ்க்கையில் நடப்பதெல்லாம் விவேகத்துக்கும், தற்செயலுக்கும், அதிர்ஷ்டத்துக்கும், பிரகுருதிக்குமே ஆரோபிக்கலாமென்றும், அப்படி அவர் பிரவேசித்து, அரசாட்சி செய்யும்பட்சத்தில் அவர் ஏன் எல்லா மனிதர்களையும், நல்லவர்களாக்கக் கூடாதென்றும், வேதாகமங்கள் கூறுகிறபடி, அவர் அவ்வளவு அன்பும் இரக்கமும் உள்ளவராயின், உலகத்தில் பலவித தவறுதல்களும், ஆபத்துகளும், குரூரங்களும், துக்கமுள்ள யுத்தங்களும், அநீதிகளும், உபத்திரவங்களும், ஏன் இருக்கப் பார்த்துக்கொண்டிருக்கிறாரென்றும் கேழ்க்கிறார்கள். இதுவுமன்றி வேறுசிலர், தீவினைகள் செய்பவர்கள் தனவந்தர்களாகவும், கடவுளை நம்பி, அவரை கடைபிடித்து, நல்வினை செய்பவர்கள் தரித்திரர்களாகவும் ஏன் இருக்கிறார்கள் என்றும் கேட்கின்றனர். மற்ற சிலர், கடவுள் நம்மை ஏன் உண்டாக்கினார்? அப்படி ஒரு கடவுள் இருந்தால் அவர் தம்மட்டில் இருக்கலாகாதா? அவர் நம்மை உண்டாக்கி, பாவதுன்பங்களுக்கு ஏன் உடன்படுத்துகிறார்? அவர் நம்மை உண்டாக்காதிருந்தால், பாவம் செய்யவும், துன்பம் அனுபவிக்கவும் நேரிடாதிருக்குமே என்று கேட்கின்றனர்.

இவைகளுக்கும், இவைபோன்றும் இன்னும் அநேக கேழ்விகளுக்கும் சரியான உத்தரம் அளித்து, ஈசுவரஇராச்சிய பரிபாலனத்தை இந்நூல் நிலைநிறுத்துகிறது.

உலகத்தில் ஓர் தேசபரிபாலனத்துக்கு எப்படி ஓர் அரசாங்கமிருக்கின்றதோ, அப்படியே, பாசவசப்பட்டு அறிவும் ஆற்றலும்குன்றி, அப்பாசகாரியமாகிய தேகாதி பிரபஞ்சத்தை மெய்யெனக் கருதி, அதனிடத்தில் பற்றுவைத்து, பல துன்பங்களுக்குள்ளாய் உழலும் ஆன்மாக்களை இரட்சிக்கும் பொருட்டு, ஈசுவரனுடைய சன்மார்க்க இராச்சியபரிபாலனம் ஒன்று இருக்கிறது.

வள்ளலார் சரித்திரம் அடியில் வருமாறு கூறுகிறது:—

விந்து மோகினி மானென விரிந்த
தத்துவக் காட்டிற் றனித்திடு முயிரை
ஆணவ வேங்கை யொருபா லடர்ப்ப
மாயைக் குடாவடி வொருபான் மயக்க
காமியக் கடமா வொருபாற் கறுவ
இருவினை மலைப்பாம் பொருபா லிழுக்க
ஆசையா மண்ணை யொருபா லறைய
குலமெனு ஞமலி யொருசார் குரைப்ப
கல்விக் கானியா ளொருசார் கவரச்
சமயச் சூறை யொருசார் தாக்க
அவாவெனும் படுதீ யறிவைக் கொறுவ
மாயா வாத வனசரர் வெருட்ட
இன்னண மாவி யிடருறுங் காலை
உயிரிடை யொளிபுக் கிருந்த வொருவாத்
தாயினும் சாலத் தயாநிதி யிரங்கிக்
கட்கடை வாளார் காடற மாற்றலும்
உட்கின யாவு முயிர் பிழைத்தன்றே.

சிவஞானசித்தியார், சுபக். II. 3, 1. கூறுவது:—

அரன்விதி யருள தென்றே யறைந்தன னதுவு முன்னே
தரைநர கருந்து றக்கந் தனுகர ணாதியெல்லாம்
வருவதுஞ் செய்தநாதி மலங்களிம் மருந்தாற் றீர்த்தும்
பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமுஞ் சூட்டும்.

இக்கருத்தையே கொண்டு, இந்நூலாசிரியரும் மானிட ஜாதியிலிருந்து ஓர் சுவர்க்கத்தை ஏற்படுத்த வேண்டு மென்பது ஈசுவர இராச்சிய பரிபாலனத்தின் கருத்து என்கிறார்.

இந்த ஈசுவர இராச்சியத்தின் பெருமை அளப்பரியது. அதற்கு அரசன் பரம கருணாநிதியாகிய சிவபெருமான் தான். அவர் பெருமையை "மறையினாலும், அயனால் மாலால், மற்றுங்—குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்றது." அவரை அரசன் என்பதால், அவர் பெருமை முழுமையும் காட்டப்படவில்லை. இவர், "தாயும் தந்தையும், பல்லுயிர்க்கும் தாமேயாய தலைவனார்." இவர் "கருப்பைக்குள் முட்டைக்கும், கல்லினுட்டேரைக்கும், விருப்புற் றமுதளிக்கும் மெய்யர்." இவர் தன்னுடைய உயிரையே நமக்கு நமதாகக் கொடுத்திருக்கிறார். இவருக்கு கருணையே ரூபம், ஆனந்தமே

சரீரம். இவர் தம்பொருட்டு செய்வது யாதொன்றுமின்றி உயிர்களாகிய பிறர்பொருட்டே எதையும் செய்வர். இவர் செங்கோலே அண்டபிண்ட சராசரங்களனைத்தும் செல்லும்.

இந்த சிவராஜ சக்கரவர்த்தியினிடம் அருள் எனப்படும் சத்தி ஒன்று இருக்கிறது. அவ்வருட்சத்தியால் உலகம் காரியப்பட்டு வருகிறது. அவ்வருட் சத்தியானது ஆன்மாக்களை ஆணவமலத்தினின்றும் விடுவித்து, இறைவனுருடைய திருவடிகளில் சேர்க்க திருவுள்ளம் கொண்டபோது, இச்சாசத்தி எனப்படும். ஆன்மாக்களை அவ்வாறு காத்தற்கு, அறிவு எழுந்தபோது ஞான சத்தி எனப்பட்டது. அவைகளை அவ்வாறு காத்தல் வேண்டி, சிருட்டியாதி தொழில்களைச்செய்யும் அவசரத்தில் கிரியாசத்தி எனப்பட்டது. இவ்வாறு சிவபெருமானது சத்தி ஒன்றே காரிய வேறுபாட்டால், இச்சா ஞானக் கிரியாசத்திகளாக சொல்லப்பட்டது. அந்த பரம இச்சாசத்தி, பரம ஞான சத்திகளின் அரசாங்கத்தைத் தான் ஈசுவர இராச்சியம் என்று கூறுவது.

இச்சத்திகளின் தன்மையையும், அவைகள் எங்ஙனம் பிரபஞ்சத்தை சிருட்டித்தன என்கிற இரகசியங்களையும், இந்நூலாசிரியர் எழுதிய பதி பசுபாசவிளக்கமெனும் நூலிலும், இந்நூலிலும், திருவாய் மலர்ந்தருளியதை அறிந்துகொண்டால், இந்த சிவராஜசக்கரவர்த்தி ஒவ்வொரு பொருளுக்கும் அவைகளின் நுண்ணிய பாகங்களுக்கும் தன்னிடமே யிருந்து உயிரைச் செலுத்தி, அவைகளுக்குள்ளுமிருக்கிறார் என்பது விசதமாகும். அப்படி அவர் நின்று, நம்மையாளும் சங்கதி, நமக்கு தெரியக்கூடாதென்பது, இந்தஈசுவர இராச்சிய பரிபாலனத்தின் ஓர் சட்டம் அல்லது இரகசியம். மனிதன் அந்த பராமரிப்பின் தொழிற்பாடுகளை பார்க்கவும் கூடாது, உணரவும் கூடாது என்பதும், ஆயினும் அந்த இராச்சிய பரிபாலனத்தை ஒத்துக்கொண்டு வாழ வேண்டுமென்பதும் அவர் கருத்து. ஏனென்றால், அந்த இராச்சியபரிபாலனத்தை ஒருவன் அறிந்துகொண்டால், அவன் விவேகத்தை அனுசரித்து செயல்படமாட்டான். அந்த தெய்வ அரசியலுக்கு விரோதமாய் நடந்து, அதைக் கெடுத்து, அழித்துவிடுவான். பின்னர் கடவுள் இல்லை என்பான். தானேயும் கூட கடவுளாக்கிக்கொள்வான். இன்னும் இதர அநேக காரணங்கள் விஸ்தாரமாய் இந்நூலில் இதைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. குற்றம் குறைந்து, குணம் மேலிட்டு அருள்வழி நடக்குங்கால், மனிதனுக்கு அந்த ஈசுவர இராச்சியபரிபாலனம் தெரியும்.

பரம கருணாநிதியாகிய இறைவன் நமது துன்பம் நிறைந்த நிலைமைக்கு இரங்கி பாசசம்பந்தத்தினின்றும் நம்மை விடுவித்து முத்தியின் இன்பத்தைத் தரவேண்டி, தனுகாணுதிகளையும் பல வேதாகமங்களையும் புறத்துணையாகத்

தந்து, அவற்றைப் பொருந்தி, நமது அறிவு இச்சை செயல்கள் தொழில்படுதற்கு, அவற்றுடன் பிரிப்பின்றி அகத்துணையாகவு மிருக்கிறார். அப்படி உள்ளிருந்து ஒவ்வொரு உயிரையும் நடத்துகிறபடியினால், தமிழ்வேதமும்

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
உருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவ பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே.

என்றருளிச் செய்தது.

இதைக் கொண்டும், இதுபோன்ற ஆன்றோர் பலர் வாக்கியங்களைக் கொண்டும், அப்படி எல்லாம் தெய்வச் செயலாயின், நாம் செய்யும் தீவினைகளும் ஈசுவரன் செயல்தானே, நாம் அவைகளுக்கு உத்தரவாதியாக நியாயமில்லை என்று அறிவிலிகள் கூறுகின்றனர்.

அன்னோர் தெய்வபரிபாலனத்தின் சுபாவத்தை அறிந்திருந்தால் அவ்வாறு கூறமாட்டார். சுத்தமொன்றையும் அசுத்தமொன்றையும் காணப்போந்த கண், சூரியன் உதவியன்றி, அவற்றைத் தானே காணுதல் முடியாது. கதிரொளிகாட்டக் கண் காணுமுண்மையால், அக்காட்சிக்கு கதிரொளியே காரணமென்பது வெளிப்பட்டது. கண்ணொளியோடு கதிரொளி கலந்திருக்குமுண்மையால், கதிரொளி கலவாத கண் தானே ஒன்றையும் காணாது. ஆதலால், சுத்தத்தைக்கண்ட சுகமும், அசுத்தத்தைக்கண்ட சுகமின்மையும், கண்ணுக்கோ, கதிரொளிக்கோவெனின் கண்ணுக்கேயன்றி கதிரொளிக்கல்லாமை வெளிப்படலால், நன்மை தீமைகளை நாடும் உயிர்கள்பால் நிகழும் யாவும், உயிர்கட்கே என்று ஏற்படுகிறது.

மேலும் சூரியன் வாளாயிருக்கவும், அதனிடத்தில் உள்ள வெப்பத்தால் தாமரை அரும்புவதும், மலர்வதும் வாடுவதுமாகி யிருப்பதுபோல, கடவுளின் அருட்சத்தி விசேடத்தால், பிரபஞ்ச காரியங்கள் யாவும் நடைபெறுகின்றன.

செய்யவேண்டியது இதுவென்றும், செய்யத்தகாதது இதுவென்றும், வேதாகமங்களில் வெளிப்படுத்தி, நன்னெறியில் சென்று உய்யவேண்டுமென்று கடவுள் நமக்கு அறிவைக் கொடுத்தார்.

தாயுமானவர் கூறுகிறதாவது:—

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாமமிட்டதே.

கடவுள் அப்படி உணர்த்துவதெல்லாம் நாம் அந்த அறிவை தீயவழிகளில் உபயோகப்படுத்தும் பொருட்டல்ல. எதுபோலெனில், ஒருபிதாவானவர் கத்தி எழுத்தாணி செய்வித்து, பிள்ளையிடம் கத்தியால் சட்டத்தை வார்ந்துகொள், எழுத்தாணியால் எழுது என்றுசொல்லி, அதை அவனிடம் கொடுத்தால், அவன் அவ்விரண்டும் செய்யாமல், கழுத்தில் குத்திக்கொண்டால், அந்தக்குற்றம் பிதாவைச்சாராது, அப்பிள்ளையைச் சாருதல் போலும். ஆகையினால், அறிவை நாம் தீயவழிகளில் உபயோகப்படுத்தினால் நம்குற்றமேயன்றி இறைவன் கருணையின் குற்றமாகாது.

பராபரன் அறிவைக் கொடுத்ததுடன்,அதை மனிதன் தன் இஷ்டமான விதம் உபயோகிக்கும் சுதந்தரத்தையும் கொடுத்தார். அந்த சுதந்தரத்தை தீயவழிகளில் உபயோகப்படுத்துவதினால், எல்லா துன்பங்களும் விளைந்தன. அப்படி பராபரன் மனிதனுக்கு சுதந்தரம் கொடுக்காமல், பயமுறுத்தியும், இதர புறம்பான வழிகளில் அவன் நல்வழியில் நடக்கும்படி, அவன் இஷ்டத்துக்கு விரோதமாய் செய்தால், அவன் உண்மையாக சீர்படமாட்டான். அது சீர்படுதலுமல்ல. மேலும் சுதந்தரமில்லாமல், ஒருமனிதன் செய்யும் காரியங்களுக்கு அவன் உத்தரவாதியாகமாட்டான்; அவன் நற்செய்கைகளுக்கும் மதிப்புகிடையாது; தீயசெயல்களுக்கும் தண்டனை கிடையாது. ஆகையால் அந்த சுதந்தரமன்றி மனிதன் மனிதனாகமாட்டான். இந்நூலில் இதுவிஷயம் அதிக விவரமாய் கூறியிருக்கிறது.

மனிதனானவன் தனக்கு கொடுத்திருக்கும் சுதந்தரத்தைக் கொண்டு, தன் அறிவை அருள் காட்டும் வழியில் செலுத்தி, தரும வாழ்வு வாழவேண்டும். அதாவது ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய ஆன்மாவையும், மனதையும், சரீரத்தையும் ஒரு வழிபடுத்தி, பின்னிட்டு ஓர் சரீரத்தில் ஒவ்வொரு அங்கமும் பாகமும், தங்களையே மறந்து, முழுசரீரத்தையும் தானாகநினைத்து அதற்காக பாடுபடுகிறது போலவும், முழு சரீரமும் ஒவ்வொரு நுண்ணிய பாகத்தையும்கூட தானாக நினைத்து, தன்னைமறந்து அவைகளுக்காக பாடுபடுகிறது போலவும், உலகத்தில் உள்ள ஆன்மாக்கள் எல்லாருடனும் ஒவ்வொரு ஆன்மாவும், தன்னை மறந்து ஏகமாகி, பின்னிட்டு பரம கருணாநிதி

யாகிய இறைவனுடனும் ஏகமாயின், அப்பொழுது தான், மனிதனால் செய்யப் படும் இதம் அகிதங்களெல்லாம் கடவுள் செயலென்று சொல்லத்தகும்.

தாயுமான சுவாமிகள் முதலிய பெரியோர் எல்லாம் சிவன் செயலென்று உணர்ந்து, தீவினையை கனவிலும் நினையாதவர்களா யிருந்தார்கள். எல்லாம் சிவமயமாகவும், எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகவும் இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோயிலாகக்கண்டு, நிராசை, அன்பு, அருள் பொறை, ஞானமாகிய இவைகளின் மயமாகிவிளங்கினர்கள். இன்பதுன்பம் இரண்டையும் ஈசனருளாக கண்டு அனுபவித்தார்கள். அத்தகைய ஒழுக்கங்கள்ஒன்றுமின்றி மலத்தை உண்டு, சேற்றிற் புரண்டு, மகிழும் பன்றிகளைப்போல் உலகவாழ்க்கையில் உழன்று கிடக்கும் எம்போலியர் சிவன்செயலென்று தீவினைகளைச்செய்தால் நிரயத் துன்பமே உண்டாகும்.

இதுவரையில் ஈசுவர இராச்சியத்தின் சட்டங்கள் அல்லது இரகசியங்களில் ஒன்று இரண்டை மாத்திரம் எடுத்து சுருக்கமாய் சொல்லப்பட்டது.

இதுவுமன்றி, ஈசுவர இராச்சியத்தின் சுபாவம் என்னவென்றும், மனிதனவன், பராபரன் சீர்பாதம் அடைய, அந்த பரம கருணாநிதியாகிய இறைவன் மனிதனுள் நின்று, அவனுடைய சித்தத்திலும் புத்தியிலும் என்ன தொழிற்பாடு செய்கிருரென்றும், அதற்கு இணங்கி, மனிதனானவன் புறம்பே என்னசெய்ய வேண்டுமென்றும், இன்னும் அநேக அரியபெரிய இரகசியங்கள் இந்நூலில் முதன்முதல் வெளியிடப்பட்டிருக் கின்றன. அவைகளை எல்லாம் இச்சிறு முகவுரையில் கூறமுடியாது. சுவர்க்கத்துக்கு போகும் பாதை இந்நூலில் போடப்பட்டும், அந்த பாதை முழுமையும் பிரகாசமுள்ள விளக்குகள் ஏற்றப்பட்டு மிருக்கின்றன. அப்பாதையில் மனிதர்கள் நடப்பது ஒன்றுதான் வேண்டியிருக்கிறது. மேலும், இந்நூலில் தாயுமானவர் கூறிய அகண்டகார சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் ததும்பிக்கிடக்கிறது.

இந்நூல் இவ்வித பல பெருமைகள் பெற்றிருப்பதினால், இதை நான் லத்தீன் பாஷையிலிருந்து தமிழில் மொழிபெயர்த்நூள்ளேன். இதை எல்லோரும் வாசித்து அருள்வழி நின்று, தருமவாழ்வு நடத்தி, உய்யவேண்டுமென்று எல்லாம் வல்ல பரமனை பிரார்த்திக்கின்றனன்.

1933ஞு ஜனவரிமீ 15-உ
சென்னை

D. கோபால செட்டி.

# விஷய அட்டவணை.

தெய்வபரிபாலனம் ஆண்டவரின் இச்சாஞானசத்திகளின் அரசியல் (பி. 1-26) — பிரிவு

மனிதனுனவன் தன்னிடமேயிருந்து போல, புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளை பாவங்களாக நீக்கவேண்டுமேன் பது, தெய்வபரிபாலனத்தின் ஓர் சட்டமாயிருக்கிறது. வேறுவித மாய் அல்லாமல் இவ்விதமாகத்தான் ஆண்டவர் உள்ளான மனிதனிலிருக்கும் தீமைகளை நீக்கி அப்பொழுது அதே காலத் தில் புறம்பானதில் இருப்பவைகளையும் நீக்கக்கூடும். (பி. 100-128)

**மனிதனானவன் தெய்வ பராமரிப்பின் கிருத்தியங்கள் எதையாவது பார்த்து உணரக்கூடாதென்பதும், அப்படியிருந்தாலும் அதைத் தெரிந்து ஒத்துக்கொள்ள வேண்டுமென்பதும், தெய்வபராமரிப்பின் ஓர் சட்டமாயிருக்கிறது (பி. 175-190).**

தெய்வபரிபாலனம் நித்தியமானவைகளுக்கு பிரயாசைப் படுகிறது; நித்தியமான பொருள்களோடு இணங்குகிற வரையில் மாத்திரம் அநித்தியப் பொருள்களை மதிக்கிறது (பி. 214-220).

தெய்வப்பரிபாலனம் எவனுக்கும் தீமை அல்லது நன்மையை பிரத்தியேகமாய் தனதாக்குகிறதில்லை, ஆனால் மனிதனுடைய சொந்தபுத்தியே இரண்டையும் தனதாக்கிக் கொள்ளுகிறது (பி. 308-321.)

## ஒவ்வொருவனும் சீர்படுத்தப்படக்கூடியவனா யிருக்கிறான், தலைவிதி என்பது கிடையாது (பி. 322-330).

ஆண்டவர் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு எதிரிடையாக நடக்கூமுடியாது; ஏனென்றால், அவைகளுக்கு விரோதமாய் நடத்தல் அவருடைய பரம இச்சாசத்திக்கு விரோதமாயும், அவருடைய பரம ஞானசத்திக்கு விரோதமாயும், இவ்விதமாக தனக்கே விரோதமாயும் நடத்தலாக இருக்கும் (பி. 331-340).

# ஈசுவர இராச்சிய பரிபாலனப் பிரபாவம்.

## தெய்வ பரிபாலனம், ஈசனுடைய இச்சாஞான சத்திகளின் அரசியல்.

1. ஈசுவரன் அரசு என்னவென்றும், அது ஆண்டவருடைய **இச்சாசத்தியினுடையவும், ஞானசத்தியினுடையவும்** அரசியலென்று மறிந்துகொள்ளும் பொருட்டு, அந்த விஷயத்தைக்குறித்து எழுதிய நூலில் முன்னமே கூறப்பட்டு காண்பிக்கப்பட்டபரம **இச்சாசத்தியையும் ஞானசத்தியையும்** குறித்துக் கூறிய விஷயங்களை தெரிந்துகொள்ளுதல் பிரதானமா யிருக்கிறது. அவைகள் பின் பற்றுவன. ஆண்டவரில் **இச்சாசத்தி ஞானசத்திக்கு** சேர்ந்தது. **பரம ஞானசத்தி பரம இச்சாசத்திக்கு** சேர்ந்தது (பிரி. 34-39). **பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும்**, அவைகளால் சிருட்டிக்கப்பட்ட மற்றவைகளில் இருந்து நிலைத்திருக்கவேண்டும் (பி.47-51). பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களும், **பரம இச்சாசத்தியினுலும் ஞானசத்தியினுலும்** சிருட்டிக்கப்பட்டன (பி. 52,53,151-156). பிரபஞ்சத்தின் எல்லாபொருள்களும் **பரம இச்சாசத்தியையும் ஞானசத்தியையும்** ஏற்பவை களாயிருக்கின்றன (பி. 55-60). ஆண்டவர் தேவர்கள் முன்பாக ஓர் **சூரியனைப்போல்** தோன்றுகிறார்; அங்கிருந்து புறப்படும் சூடு அன்பா யிருக்கிறது, அங்கிருந்து புறப்படும் **ஒளி** ஞானமாயிருக்கிறது (பி. 83-88, 89-92, 93, 98, 296-301). ஆண்டவரிடமிருந்து வெளிப்படும் **பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும்** ஒன்றுகிறது (பி. 99-102). **ஏகோவாவா** யிருக்கிற சதாகால **ஆண்டவர்** பிரபஞ்சத்தையும் அதிலுள்ள எல்லா பொருள்களையும் சூனியத்திலிருந்தல்லாமல், தன்னிடமிருந்தே

சிருட்டித்தார் (பி. 282-284, 290-295). இந்த விஷயங்கள் **பதிபசு பாசவிளக்கம்** எனப் பெயரிடப்பட்ட நூலில் காணப்படுகின்றன.

2. இவைகளிலிருந்து, அதே நூலில் சிருட்டியைக்குறித்து, விவரித்தவைகளோடு ஒத்துப்பார்த்தால், ஆண்டவரின் **பரம இச்சா சத்தியினுடையவும், ஞான சத்தியினுடையவும்** அரசாட்சி, **ஈசுவர இராஜாங்கம்** என்று சொல்லப்பட்டதா யிருக்கிறதென்று உண்மை யாக விசதமாகும்; ஆனால், அங்கே ஆண்டவருடைய அரசாட்சியா கும், சிருட்டிக்கப்பட்ட பிறகு பொருள்களின் நிலைமைகளை பரா மரித்தலைக்குறித்து அல்லாமல் சிருட்டியைப்பற்றி கூறப்பட்ட படியினால், இது இப்பொழுது விவரிக்கப்படவேண்டும். சிருட்டிக் கப்பட்டிருக்கிற பொருள்களில், **பரம இச்சாசத்தியினுடையவும், ஞானசத்தியினுடையவும்,** அல்லது **தேய்வ நன்மையினுடையவும் உண்மையினுடையவும்** ஐக்கியத்தின் பரி பாலனத்தைக்குறித்து இந்த பிரிவு கூறும்; அதைப்பற்றி பின் தொடரும் ஒழுங்கில் நாம் பேசுவோம்.

I. பிரபஞ்சமும், அதற்கு பொதுவாகவும் சிறப்பாகவும் சேர்ந்த எல்லாபொருள்களும், **பரம இச்சாசத்தியிலிருந்து பரம ஞானசத்தியினால்** சிருட்டிக்கப்பட்டன.

II. **பரம இச்சாசத்தியும், ஞான சத்தியும்** ஆண்டவரிடமிருந்து ஒன்றாக வெளிபடுகிறது.

III. இந்த ஒரு பொருள், ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் எதோ ஒரு உருவத்திலிருக்கிறது.

IV. ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளும் மொத்தத் திலும் பகுதியிலும் அவ்விதம் ஒன்றாயிருக்கவேண்டு மென்பதும், அப்படி யில்லாவிட்டால் அது அப்படி செய்யப்படவேண்டு மென்பதும் ஈசுவரவிதி.

V. அன்பின் நன்மை, ஞானத்தின் உண்மையோடு சேர்ந் திருக்கிற வரையில் தவிர நன்மையாகாது; ஞானத்

தின் உண்மை அன்பின் நன்மையோடு சேர்ந்திருக்கிற வரையில் தவிர உண்மையாகாது.

VI. ஞானத்தின் உண்மையோடு சேராத அன்பின் நன்மை, தானே நன்மையாகாது, ஆனால் அது பார்வைக்கு நன்மையாக இருக்கிறது; அன்பின் நன்மையோடு சேராத ஞானத்தின் உண்மை தானே உண்மையாகாது, ஆனால் அது பார்வைக்கு உண்மையாயிருக்கிறது.

VII. ஆண்டவர் எதையும் பிரிக்கப்பட இடங்கொடுக்கிறதில்லை. ஆகையினால் அது நன்மையிலும், அதே காலத்தில் உண்மையிலும் இருக்கவேண்டியது. அல்லது அது தீமையிலும் அதே காலத்தில் பொய்யிலும் இருக்க வேண்டியது.

VIII. நன்மையிலும் அதேகாலத்தில் உண்மையிலும் இருக்கப்பட்டது, எதோ ஒரு பொருளாயிருக்கிறது; தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலு மிருக்கிறது யாதொன்று மாகாது.

IX. ஆண்டவருடைய அரசாட்சி, தீமையையும் அதனுடன் கூட இருக்கும் பொய்யையும் சமநிலைக்கும், சும்பந்தத்துக்கும், பரிசுத்த படுத்தலுக்கும், உதவவும், இவ்விதமாக நன்மையையும் உண்மையும் சேரவும் செய்கிறது.

3. I. பிரபஞ்சமும், அதற்கு பொதுவாகவும் சிறப்பாகவும் சேர்ந்த எல்லா பொருள்களும், பரம இச்சாசத்தியிலிருந்து பரம ஞான சத்தியினால் சிருட்டிக்கப்பட்டது.

பதிபசுபாச விளக்கமெனும் நூலில், ஏகோவாவா யிருக்கிற சதாகால ஆண்டவர், தன் தத்துவத்தில் பரம இச்சாசத்தியாகவும் ஞானசத்தியாகவு மிருக்கிறாரென்றும், பிரபஞ்சத்தையும் அதைச் சேர்ந்த எல்லா பொருள்களையும் தன்னிடமிருந்தே சிருட்டித்தா

ரென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதனால், பிரபஞ்சமும், அதைப் பொதுவாகவும் சிறப்பாகவும் சேர்ந்த எல்லா பொருள்களும், பரம இச்சாசத்தியிலிருந்து பரம ஞானசத்தியினால் சிருட்டிக்கப்பட்டதென்று தொடருகிறது. அதே நூலில், ஞானமில்லாமல் அன்பு என்னவாவது செய்ய முடியாதென்றும், அம்மாதிரியே, அன்பில்லாமல் ஞானம் ஏதாகிலும் செய்ய முடியாதென்றும் கூட அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், ஞானமில்லாமல் அன்பும், புத்தியில்லாமல் சித்தமும், ஏதாகிலும் நினைக்கமுடியாது. அது எதையும் பார்க்கவும் உணரவும்கூட முடியாது, யாதொன்றையும் சொல்லவும் முடியாது; ஆகையினால், ஞானமில்லாமல் அன்பும், அல்லது புத்தியில்லாமல் சித்தமும், எதையும் செய்யமுடியாது. அம்மாதிரியே, அன்பில்லாமல் ஞானமும், சித்தமில்லாமல் புத்தியும் யாதொன்றையும் நினைக்கமுடியாது, ஏதாகிலும் ஒன்றைப் பார்க்கவும் உணரவும் முடியாது, எதையும் சொல்லவும் முடியாது; ஆகையினால், அன்பில்லாமல் ஞானமும் அல்லது சித்தமில்லாமல் புத்தியும், யாதொன்றையும் செய்யமுடியாது; ஏனென்றால் அன்பு நீக்கப்பட்டபோது, அதன் பின்னர் இச்சையும், இவ்வண்ணம் சேட்டித்தலுமில்லை. மனிதன் விஷயத்தில் அவன் ஏதாகிலும் ஒன்றை செய்யும்போது, அது அப்படியிருப்பதினால், இச்சாசத்தியேயாயும் ஞானசத்தியேயாயு மிருக்கும் கடவுள் விஷயத்தில் அவர் பிரபஞ்சத்தையும் அதிலுள்ள எல்லா பொருள்களையும் சிருஷ்டித்து உண்டாக்கினபோது அது அப்படி விசேஷமாயிருந்தது. பிரபஞ்சமும் அதை பொதுவாகவும் சிறப்பாகவும் சேர்ந்த எல்லா பொருள்களும், பரம இச்சா சத்தியிலிருந்து பரம ஞானசத்தியினால் சிருட்டிக்கப்பட்டதென்று, உலகத்தில் பார்வைக்குக் காட்டப்படும் எல்லா பொருள்களினாலும் நிரூபிக்கப்படலாம். விசேஷித்த ஒரு பதார்த்தத்தை மாத்திரம் எடுத்துக்கொள், கொஞ்சம் ஞானத்துடன் அதை பரிசோதனை செய், நீ தெளிவிக்கப்படுவாய். ஒரு மரத்தையாவது, அதன் விதையையாவது, அதன் பழத்தையாவது, அதன் மலரையாவது, இலையையாவது, எடுத்துக்கொள்; உன்னிடத்தில் இருக்கும் ஞானத்தை சேர்த்து, ஒரு நல்ல பூதக்கண்ணாடிகொண்டு அந்தப் பொரு

ளைப்பார், அதிசயமுண்டாக்குகிறவைகளை நீ பார்ப்பாய்; நீ பார்க்காதிருக்கிற உள்ளானவைகள் இன்னும் அதிக அதிசயமுண்டாக்குகிறதாயிருக்கின்றன. அதன் ஒன்றன்பின் ஒன்ருய் வரும் தொடர்ச்சியின் ஒழுங்கை அதாவது மரமானது, புதுவிதை உண்டாக்கப்படுகிறவரையில் கூட, விதையிலிருந்து எப்படி வளர்கிறதென்று கவனி; ஒவ்வொரு தொடர்பான நிலைமையிலும், தானே இன்னும் அதிகம் வியாபிக்க இடைவிடாத முயற்சி இல்லையா என்று ஆலோசி; ஏனென்ருல், அது சாயும் இறுதிப்பொருள், அதில் விஸ்தாரமாய் பலிக்கிற சுபாவம் புதிதாயிருக்கிற விதையாயிருக்கிறது. ஆகவே ஆத்துமார்த்தமாய் கூட நீ நினைக்கவிரும்பினுல், (நீ மனங்கொண்டால், இதை செய்யலாம்) இங்கே ஞானத்தைப்பார்க்கமாட்டாயா? ஆத்துமார்த்த யோசனையில் நீ தூரம் செல்ல இச்சித்தால், இது விதையிலிருந்து அல்லவென்றும், அம்மாதிரியே சுத்தமான நெருப்பாயிருக்கிற பூலோக சூரியனிடமிருந்தல்லவென்றும், ஆனுல் முடிவற்ற ஞானமுள்ள **கடவுளாகிய சிருட்டி கர்த்தாவிடமிருந்து** வரும் விதையிலிருக்கிறதென்றும், அது சிருட்டிகாலத்தில் விதையில் இருந்தது மட்டுமல்லாமல், அதில் பின்னிட்டு நிலையாயிருக்கிறதென்றும், அதிகமாய் அறிந்துகொள்ளமாட்டாயா? ஏனெனில், இருத்தல் இடைவிடாது நிலைத்தல்போல, பரிபாலனம் இடைவிடாத சிருட்டியாயிருக்கிறது. செய்கையிலிருந்து சித்தத்தை நீக்கினுல், பிறகு வேலை நிற்பதுபோலும், அல்லது பேச்சிலிருந்து எண்ணத்தை எடுத்துவிட்டால் பேச்சு நிற்பதுபோலும், அல்லது சலனத்திலிருந்து முயற்சியை எடுத்து விட்டால், சலனம் நிற்பதுபோலும், சுருங்கச் சொல்லில், காரியத்திலிருந்து காரணத்தை எடுத்துவிட்டால் காரியம் அழிந்துபோதல் போலும், இம்மாதிரியே மற்றவைகளிலும் இது இருக்கிறது. உண்மையாய், அவ்வித ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் சத்தி கொடுக்கப்பட்டிருக்கிறது; ஆனுல் சத்தியானது தன்னிடமேயிருந்து சேட்டிக்காமல், அந்தசத்தியை கொடுத்தவனிடமிருந்து சேட்டிக்கிறது. பட்டுநூற் பூச்சியைப் போலும், தேனீயைப்போலும், அல்லது எந்த இதர சிறிய பிராணியைப்போலும் பூமியின் பேரிலுள்ள வேறு எந்த விசேஷமான

பொருளை கவனித்துப்பார்; அதை முதலில் பிரகுருதி சம்பந்தமாயும் பின்னிட்டு புத்திசம்பந்தமாயும், கடைசியில் ஆத்துமார்த்தமாயும் பார்: பிறகு, நீ ஆழ்ந்து நினைக்கக் கூடுமானால், எல்லா பொருள்களைப் பார்த்தும் அதிசயப்படுவாய்; உனக்குள்ளே, ஞானத்தை நீ பேசாவிட்டால், "இந்தப் பொருள்களில் தெய்வத்தை யார் பார்க்கிறதில்லை? அவைகளெல்லாம் பரம ஞானசக்தியைச் சேர்ந்தது" என்று நீ ஆச்சரியத்துடன் சொல்லுவாய். சிருட்டிக்கப்பட்ட பொருள்கள் எல்லாம் மனிதன் வரையில்கூடவும் மனிதனிலிருந்து அவர்கள் வெளிப்பட்ட **சிருட்டிகர்த்தா** வரையிலும், அவைகள் எப்படித் தங்கள் ஒழுங்கில் தொடருகின்றனவென்றும், எல்லாப்பொருள்களின் சம்பந்தமும், நீ ஒத்துக் கொள்ளப் பிரியப்பட்டால், எல்லா பொருள்களின் பரிபாலனமும், சிருட்டிகர்த்தா, மனிதனோடு சேர்வதின்பேரில் எப்படி சார்ந்திருக்கிறதென்றும் தெரிந்துகொண்டு, சிருட்டிக்கப்பட்ட எல்லா பொருள்களையும் நீ மதித்தால், இது இன்னும் அதிகமாய் அப்படியிருக்கும். பின்வருவதில் **பரம இச்சாசத்தி** எல்லா பொருள்களையும் சிருட்டித்ததென்றும், ஆனால் **பரம ஞானசத்தி** யில்லாமல் எதையும் சிருட்டிக்கவில்லை யென்றும் அறிந்துகொள்ளலாம்.

### 4. II. பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் ஆண்டவரிடமிருந்து ஒன்றாகப் புறப்படுகின்றன.

**பதிபசுபாச விளக்க** மெனும் நூலில் காண்பித்ததிலிருந்தும், முக்கியமாய் அங்கே கூறிய பின் வருகிறவைகளிலிருந்தும், இதுவும்கூட வெளிப்படையாகிறது. சொரூபமும் தடத்தமும் ஆண்டவரிடத்தில் திட்டமாய் ஒன்றாயிருக்கிறது (பி. 14-17). ஆண்டவரில் முடிவற்ற பொருள்கள் திட்டமாய் ஒன்றாயிருக்கின்றன (பி. 17 - 22). **பரம இச்சாசத்தி பரம ஞானசத்திக்கு** சேர்ந்தது, **பரம ஞானசத்தி பரம இச்சாசத்திக்கு** சேர்ந்தது (பி. 34 - 39). அன்பு ஞானத்தை விவாகம் செய்துகொள்ளாவிட்டால், ஏதாகிலும் ஒன்றையும் உண்டாக்க முடியாது (பி. 401-403). அன்பு ஞானத்தோடு சேர்ந்தாலொழிய எதையும் செய்யமுடியாது (பி.409-410). ஆண்டவரில் **பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும்**

ஒன்றுயிருக்கிறதுபோல, பரமார்த்த சூடும் பரமார்த்த ஒளியும், ஆண்டவரிடமிருந்து ஒரு சூரியனுக புறப்படுவதில் ஒன்றுகின்றன (பி. 99 - 102). ஆரோபித்த இடங்களில் காண்பித்ததிலிருந்து அந்த பிரமேயத்தின் உண்மை வெளிப்படையாயிருக்கிறது. ஆனுல் பரஸ்பரம் பிரத்தியேகமான இரண்டு பொருள்கள் எப்படி ஒன்றுக நடிக்குமென்று தெரிந்திருக்காதபடியினுல், ஒரு உருவமில்லாமல் எந்த ஒன்றும் இருக்க முடியாதென்றும், ஆனுல் உருவமே அந்த ஒன்றை உண்டாக்குகிறதென்றும், பிறகு அந்த உருவத்தை நிலைப் படுத்தும் பொருள்கள் ஒவ்வொன்றுக வேறுனதாக யிருந்தும் (2) இணைந்திருக்கிறதற்கு தக்கபடி, உருவமானது எந்த ஒரு பொருளையும் அதிக பூரணமாய் செய்கிறதென்று நான் இங்கே காண்பிக்கவிரும்புகிறேன். **ஒரு உருவமில்லாமல் எந்த ஒன்று மிருக் காது, ஆனுல் அந்த உருவமே அந்த ஒன்றை உண்டாக்குகிறது:—** அதி சிந்தையாய் நினைக்கும் ஒவ்வொருவனும் ஒரு உருவமில்லா மல் எந்த ஒன்றும் இருக்கமுடியாதென்றும், அப்படி எந்த ஒன்று வது இருந்தால், அது உருவமென்றும் தெளிவாய் அறிந்து கொள்ளலாம். ஏனென்றல், நிலைத்திருக்கும் ஒவ்வொரு பொரு ளும், அதன் உருவத்திலிருந்து குணமென்று சொல்லப்பட்டதை யும், நிலைமை மாறுதல் அதற்கு மற்ற பொருள்களுக்கும் உள்ள சம் பந்தம் முதலியவைகள் ஆரோபிக்கக் கூடியவைகளையும் கூடப் பெறுகிறது. ஆதலால் உருவமில்லாததற்கு குணமென்பதில் ஏதா கிலும் ஒன்றுமில்லை. குணத்தின் எதையும் உடைத்தாயிராதது உண்மையில் கூட சூனியமாகவேயிருக்கிறது. உருவமே இவை களை எல்லாம் கொடுக்கிறது. ஒரு உருவத்திலிருக்கும் எல்லா பொருள்களும், அந்த உருவமானது பூரணமாயிருந்தால், ஒரு சங்கிலியின் வளையம் மற்ற வளையத்தை பரஸ்பரமாய் மதிக்கிறது போல ஒன்றை ஒன்று பரஸ்பரமாய் மதித்தபடியினுல், உருவமே அந்த ஒன்றையும், குணத்தையும், நிலைமையையும், இயக்கும் சக்தியையும், இவ்விதமாக உருவத்தின் பூரணத்துக்கு தக்கபடி எதையும், நிரூபிக்கக்கூடிய பதார்த்தத்தையும் உண்டாக்குகிற தென்றும் பின் தொடருகிறது. உலகத்தில் கண் பார்க்கக்கூடிய ஒவ் வொரு பொருளும் அவ்வித ஒருபொருளாயிருக்கிறது; ஜகத்தின்

(3) உள்ளான பாகத்திலாவது சூக்கும உலகத்திலாவது எங்கேயிருந்தாலும், கண்ணால் பார்க்கப்படாத ஒவ்வொரு பொருளும் அவ்வித ஒரு பொருளாய்கூட இருக்கிறது. ஒரு மனிதன் அவ்வித ஒரு பொருளாயிருக்கிறான். மானிடசங்கம் அவ்வித ஒன்றாயிருக்கிறது; திருச்சபையும், ஆண்டவர் முன்பாக இருக்கும் தேவர்கள் முழு சுவர்க்கமும் அவ்வித ஒன்றாயிருக்கிறது; சுருங்கச்சொல்லில் பொதுவாகமட்டு மல்லாமல், ஒவ்வொரு நுண்ணியதிலும் கூட சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சம் அவ்வித ஒன்றாயிருக்கிறது. ஒவ்வொரு பொருளும் எல்லா பொருள்களும் உருவங்களாயிருக்க வேண்டுமானால், எல்லா பொருள்களையும் சிருஷ்டித்தவர் உருவமாகவே யிருக்க வேண்டுமென்பதும், உருவங்களாக சிருட்டிக்கப்பட்ட எல்லா பொருள்களும் உருவத்திலிருந்தே தோன்றவேண்டு மென்பதும் ஆவசியமானது. ஆகையினால் பதிபசுபாசவிளக்க மெனும் நூலில், இதுதான் பின்வருமாறு அறிவிக்கப்பட்டது. பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும் ஒரு பொருளாக இருக்கிறது, அது உருவமாக இருக்கிறது (பி. 40-43). பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும் தன்னில் தானே பொருளாகவும் உருவமாகவு மிருக்கிறது. இம்மாதிரியாக, உண்மையேயாகவும், ஒரே உண்மையாகவும் இருக்கிறது (44-46). பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும் ஆண்டவரில் ஒன்றாயிருக்கிறது. (பி. 14 - 17, பி. 18-22); அவைகள் ஆண்டவரிடமிருந்து ஒன்றாக புறப்படுகின்றன (பி. 99-102லும்; வேறு இடங்(4) களிலும்). உருவமானது அந்த ஒருபொருளை, அந்த உருவத்தை நிலைப்படுத்தும் பொருள்கள் ஒவ்வொன்றாக வேறு வேறானதாயிருந்து, அப்படியிருந்தும் சேர்ந்திருக்கிறதற்கு தக்கபடி, அதிசம்பூர்ணமாய் செய்கிறது. புத்தி உயர்த்தப்பட்டாலொழிய அந்த புத்திக்கு இது எட்டுகிறதில்லை; ஏனென்றால், தோற்றமானது அந்த உருவத்தை உண்டாக்கும் பொருள்களின் சமத்துவத்தின் ஒப்பனைகளால் மாத்திரம் ஒரு உருவமானது அந்த ஒரு பொருளை செய்யக்கூடுமென்பதாயிருக்கிறது. இந்த விஷயத்தைப்பற்றி நான் தேவர்களுடன் அடிக்கடி பேசியிருக்கிறேன்; தங்களுடைய அறிஞர்கள் தெளிவாய் அறிந்துகொள்ளுகிறதும், குறைந்த அறிவுள்ளவர்கள் மங்கலாய்ப்பார்க்கிறதுமான அது ஓர் இரகசியமென்றும், ஆனால்,

தன்னை உண்டாக்குகிற பொருள்கள் ஒவ்வொன்றாக வேறு வேறானதாயிருந்து, அப்படியிருந்தும், ஒவ்வொன்றும் தன்னிட விசேஷமான முறைமையில் சேர்ந்திருக்கிறதற்கு தக்கபடி ஒரு உருவமானது அதிக பூரணமாயிருக்கிறதென்பது உண்மையென்றும், அவர்கள் சொன்னார்கள். ஒருமிக்க எடுத்துகொண்டால் சுவர்க்கத்து உருவத்தை உண்டாக்குகிற சுவர்க்கங்களிலிருக்கும் கூட்டங்களாலும், அன்றியும் ஒவ்வொரு கூட்டத்தில் தேவர்களாலும் அவர்கள் இதை ஊர்ஜிதப் படுத்துகிறார்கள். ஏனென்றால் எந்த தேவனானாலும், அதிகத் தெளிவாய் தானேயாய், இவ்விதமாக சுவேச்சையாய் இருந்து, தன்னிடமே இருந்தும் தன்னிட சொந்த அன்பிலிருந்தும் போல், தன் தோழர்களை நேசிக்கிறதற்கு தக்கபடி ஒரு கூட்டத்தின் உருவம் பரிபூரணமானதாயிருக்கிறது. நன்மை உண்மைகளின் விவாகத்தால் கூட அவைகள் எவ்வளவு தெளிவாய் இரண்டாயிருக்கிறதோ, அவ்வளவு பூரணமாய் அவைகள் ஒன்றாகுமென்றும், அன்புடனும் ஞானத்துடனும் கூட அம்மாதிரியே என்றும், வேறானதாயில்லாதது தாறுமாறானதென்றும், அதிலிருந்து உருவத்தில் எல்லா குறைவுகளும் விளைகிற (5) தென்றும், அவர்கள் உதாரணங்களால் தெளிவித்தார்கள். ஆனால் பூர்த்தியாய் வேறுவேறான பொருள்கள் சேர்க்கப்பட்டு எப்படி ஒன்றாகிறதென்பதை, அநேக பொருள்களாலும், முக்கியமாய் தங்கள் போர்வைகளால் வேறுவேறானதாயும், தங்கள் ஓர்வித வெண்மைநிறமான நரம்புகளால் சேர்க்கப்பட்டதாயும், தன்னில் உள்ள வேறுவேறானதாயிருந்தும், சேர்க்கப்பட்டதாயிருக்கிற கணக்கற்ற பொருள்களிருக்கிற மனிதனிலிருப்பவைகளாலும் கூட அவர்கள் நிஜப்படுத்தினார்கள். அப்படியே ஒன்றாக தவிர வேறுவிதமாய் அறியப்படாத அன்புக்கும், அதைச்சேர்ந்த எல்லாபொருள்களுக்கும், ஞானத்துக்கும் அதைச்சேர்ந்த எல்லா பொருள்களுக்கும், அதே என்றும் அவர்கள் காண்பித்தார்கள்; இந்த விஷயங்களைப்பற்றி, **பதிபசுபாசமேனும்** நூலிலும் (பி. 14-22), **சுவர்க்கத்தைகுறித்தும் நரகத்தைகுறித்தும்** எழுதிய நூலிலும் அதிகமாய் பார்க்கலாம், (56,489). இது தேவர்கள் ஞானத்தைச் சேர்ந்தபடியால் எடுத்து காட்டப்பட்டது.

5. III இந்த ஒன்றான பொருள் ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் எதோ ஒரு வடிவத்திலிருக்கிறது.

ஆண்டவரிடத்தில் ஒன்றாயிருக்கிறதும், அவரிடமிருந்து ஒன்றாய் புறப்படுகிறதுமான **பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும்** சிருட்டிக்கப்பட்ட ஒவ்வொருபொருளிலும் எதோ ஒரு உருவத்தி லிருக்கின்றன என்பது **பதிபசுபாச விளக்கமேனும்,** நூலில் பல இடங்களில் நிஜப்படுத்தப்பட்டதிலிருந்தும், முக்கியமாய் 47-51, 55-60, 282-284, 290-295, 313-318, 319-326, 349-357, பிரிவு களிலும் விசதமாகிறது; சதாகாலம் ஆண்டவராயிருக்கிற **சிருஷ்டி கர்த்தாவாகிய** கடவுள் **தன்னிட** மிருந்தே, ஆத்துமசம்பந்தமான உலகத்து **சூரியனை** நிர்மாணித்து, அந்த **சூரியன்** மூலமாய் பிரபஞ் சத்தின் எல்லா பொருள்களையும் நிர்மாணித்தபடியினால், தெய்வ மானது ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் இருக்கிற தென்றும், ஆதலால், ஆண்டவரிடமிருந்து வெளிப்பட்டதும், அதில் ஆண்டவர் இருப்பதுமான, **அந்த சூரியன்** முதல் பொரு ளாய் மட்டுமல்லாமல், எல்லா பொருள்களும் உண்டாகிற ஒரே ஒரு பொருளாயிருக்கிற தென்றும், அங்கே காண்பிக்கப்பட்டிருக் கிறது; அது ஒன்றே ஒரு பொருளாயிருப்பதினால், ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் அது இருக்கிறதென்றும், ஆனால், உபயோகங்களுக்குத்தக்கபடி முடிவற்ற விகர்ப்பங்களோடு இருக்கிறதென்றும் தொடர்கிறது. இப்படியிருக்கையில், ஆண் டவரிடத்தில் **இச்சாசத்தியும் ஞானசத்தியும், அவரிட** மிருந்து வரும் **சூரியனில்** தெய்வீக தீயும், சோதியும், அந்த **சூரியனிட** மிருந்து பரமார்த்த சூடும் ஒளியும் இருக்கிறபடியினாலும், இந்த இரண்டும் ஒன்றாகிறபடியினாலும், இந்த ஒன்றானபொருள் சிருட் டிக்கப்பட்ட ஒவ்வொருபொருளிலும் எதோ ஒருவடிவத்தில் இருக்கிறதாக தொடர்கிறது. இதனால்தான் பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், நன்மைக்கும் உண்மைக்கும், உண்மை யாய் அவைகளின் ஐக்கியத்திற்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; அல்லது, அதே அருத்தம்கொள்ளுகிறபடி, பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், அன்பிற்கும் ஞானத்துக்கும், அவைக

ளின் சேர்க்கைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், நன்மை அன்பைச்சேர்ந்தது, உண்மை ஞானத்தை சேர்ந்தது; ஏனென்றால், அன்பானது, தனக்கு சேர்ந்த எல்லாவற்றையும் நன்மை என்று சொல்லுகிறது, ஞானமானது தனக்கு சேர்ந்த எல்லாவற்றையும் உண்மை என்று சொல்லுகிறது. ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் இவைகளின் சேர்க்கை இருக்கிறதென்பது பின்வருவதில் அறியப்படும்.

6. எல்லா பொருள்களும் உண்டாகிற முதற்பொருளாயும் கூட இருக்கிற ஒரே ஒரு பொருள் இருக்கிறதாக அநேகரால் ஒத்துக்கொள்ளப்படுகிறது; ஆனால், அந்த பொருள் சுபாவத்தில் என்னவென்று தெரிந்திருக்கப்படவில்லை. வேறொன்றும் அதிக கலப்பற்றதாயில்லை யென்று சொல்லும்படியாக, அது அவ்வளவு கலப்பற்றதாயிருக்கிறதென்றும், அதை யாதொரு பரிமாணமுமில்லாத ஒரு புள்ளிக்கு ஒப்பிடலாமென்றும், அவ்வித புள்ளிகளின் முடிவற்ற எண்களின் கூட்டங்களால், பரிமாணத்தின் உருவங்கள் உண்டாகிறதென்றும், நம்பப்படுகிறது.

ஆனால் இது இடவரை என்கிற அபிப்பிராயத்தில் உண்டாகிற ஒருபோலி நியாயம்; ஏனென்றால், இந்த அபிப்பிராயத்தினால், அவ்வித சின்னஞ்சிறிய பொருள் இருப்பதாகதோன்றுகிறது; அப்படியிருந்தாலும் எந்த பொருளும் எவ்வளவு அதிக கலப்பற்றதாயும் சுத்தமானதாயுமிருக்கிறதோ, அவ்வளவு நிரம்பியதும் முடிவானதாயுமிருக்கிறதென்பது உண்மை. இந்த காரணத்துக்காக, எவ்வளவுஅதிக உள்ளிடமாக எந்தப்பொருளும் பரிசோதிக்கப்படுகிறதோ,அவ்வளவு அதில் பார்க்கப்படும் பொருள்கள் அதிக ஆச்சரியமானதாகவும், பூரணமானதாகவும், அழகுள்ளதாகவும் இருக்கின்றன; இவ்விதமாக, முதற்பொருளில், எல்லாவற்றிலும் மிகவும் அதிக ஆச்சரியமானதும், பூரணமானதும், அழகுள்ளதுமான பொருள்கள் இருக்கின்றன. முன்கூறியபடி, ஆண்டவரிடமிருந்து வருகிறதும், அதில் ஆண்டவர் இருக்கிறதுமான சிவ சூரியனிட மிருந்து முதற்பொருள் உண்டாகிறபடியினால், இது

அப்படியிருக்கிறது; இவ்விதமாக, அந்த சூரியனே, தான் இடவரைக்குட்படாதபடியினல், எல்லாவற்றிற்கும் எல்லாமாயிருக்கிறதும், சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில், மிகப்பெரியதிலும் சின்னஞ்சிறியதிலும் இருக்கிறதுமான ஒரே பொருளாயிருக்கிறது. அந்த சூரியன் எல்லா பொருள்களும் உண்டாகிற முதற் பொருளாயும், ஒரே பொருளாயுமிருக்கிறபடியினல், பொருள்களென்றும், கடைசியில் ஜடப்பொருள்களென்றும், சொல்லப்பட்ட அதிலிருந்து உற்பத்தியாகும் பொருள்களில் தோன்றக்கூடியதைப் பார்க்கிலும், முடிவற்றதாய் அதிகபொருள்கள் அந்தப்பொருளி (2) லிருப்பதாக ஏற்படுகிறது. அதற்கு தக்கபடி எல்லா சம்பூரணங்களும் குறைகிற இருமடங்கான பேதமுள்ள காரணகாரிய சம்பந்தங்களால் அந்த சூரியனிட மிருந்து, அவைகள் இறங்குகிறபடியினல், அவைகள் இவைகளில் தோன்ருது. ஆகவே, மேல் சொல்லியபடி, எந்த பொருளேயும் எவ்வளவு உள்ளுக்குள்ளாய்ப்பரிசோதிக்கிருேமோ, அதில் பார்க்கப்படும் பொருள்கள் அவ்வளவு ஆச்சரியமானதாயும், பூரணமானதாயும், அழகுள்ளதாயும் இருக்கின்றன. தெய்வமானது ஒரு வடிவத்தில், ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலுமிருக்கிறதென்றும், ஆனல், காரணகாரிய சம்பந்தங்களின் மூலமாய் இறங்கும் காலங்களில் குறைவு குறைவாகவும், மூடுவதால் உயர்ந்த காரணகாரிய சம்பந்தப்பட்ட பொருளிலிருந்து பிரிக்கப்பட்ட தாழ்ந்தகாரியப் பொருள், பூலோக ஜடப்பொருள்களால் தடுக்கப்பட்டபோது, இன்னும் குறைவாயும் தோன்றுகிறதென்றும், நிஜப்படுத்த இவைகள் கூறப்பட்டன. ஆனல் சிவசூரியனேப் பற்றியும் (பி. 83-172) காரணகாரிய சம்பந்தங்களேப்பற்றியும், (பி. 173-281), பிரபஞ்ச சிருட்டியைப்பற்றியும் (பி. 282-357), பதிபசுபாச விளக்கமெனும் நூலில் அறிவிக்கப்பட்டவைகள் வாசிக்கப்பட்டு அறிந்து கொள்ளப்பட்டால் ஒழிய, இவைகளெல்லாம் தெளிவற்றதாய் தோன்றவேண்டியிருக்கும்.

7. IV. ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளும், முழுதிலும் பகுதியிலும் அவ்வித ஒன்றுன பொருளாயிருக்க வேண்டுமென்பதும்,

அது அப்படியில்லாவிட்டால் அப்படிச்செய்யப்படவேண்டுமென்பதும் ஈசுவரவிதி.

அதாவது, ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும் பரம இச்சாசத்தியிலிருந்தும், அதேகாலத்தில் பரம ஞானசத்தியிலிருந்தும் ஏதோ கொஞ்சமிருக்கவேண்டும்; அல்லது அதே ஆகிறபடி ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும், நன்மையும் உண்மையும், அல்லது நன்மையுடையவும் உண்மையுடையவும் சேர்க்கையிருக்கவேண்டும். பின்வரும் பக்கங்களில்மேலே சொல்லியபடி (பி. 5) நன்மை அன்புக்கும், உண்மைஞானத்துக்கும் சேர்ந்ததாயிருப்பதால், நன்மை, உண்மை என்கிற மொழிகள், அன்பு ஞானம் என்பவைகளுக்குப்பதிலாகவும், நன்மையுடையவும் உண்மையுடையவும் விவாகம் என்பது, அன்புடையவும் ஞானத்துடையவும் ஐக்கியம் என்பதற்குப்பதிலாகவும், பல இடங்களில் உபயோகப்படுத்தப்படும்.

8. முந்திய பிரிவிலிருந்து, ஆண்டவரில் ஒன்றாயிருக்கிறதும், ஆண்டவரிடமிருந்து ஒன்றாய் புறப்படுகிறதுமான பரம இச்சாசத்தியும், பரம ஞானசத்தியும் அவரால் சிருட்டிக்கப்பட்ட ஒவ்வொருபொருளிலும் ஏதோ ஒரு உருவத்தில் இருக்கின்றனவென்பது தெளிவாயிருக்கிறது. அந்த ஏகத்வத்தை அல்லது நன்மையுடையவும், உண்மையுடையவும் விவாகம் என்று சொல்லப்பட்ட ஐக்கியத்தைக்குறித்து விவரங்களோடு சிலது இப்பொழுது சொல்லப்படவேண்டும். I. இந்த விவாகமானது ஆண்டவரிடத்திலேயே யிருக்கிறது; ஏனென்றால், முன் சொல்லியபடி, பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் அவரிடத்தில் ஒன்றாயிருக்கின்றன. II. அது ஆண்டவரிடமிருந்து வருகிறது; ஏனென்றால், அவரிடமிருந்து புறப்படும் ஒவ்வொருபொருளிலும், அன்பும் ஞானமும் முற்றும் சேர்க்கப்பட்டிருக்கின்றன; அந்த இரண்டும் ஆண்டவரிடமிருந்து ஒரு சூரியனைப் போல் புறப்படுகின்றன; பரம இச்சாசத்தி சூடாகவும், பரம ஞானசத்தி ஒளியாகவும் புறப்படுகின்றன. III. உண்மையாக, தேவர்களால் அவைகள்

இரண்டாகப் பெற்றுக்கொள்ளப்படுகின்றன, ஆனால், அவைகள் அவர்களில் ஆண்டவரால் சேர்க்கப்பட்டிருக்கின்றன; திருச்சபை யைச்சேர்ந்த மனிதர்களிடத்திலும் அம்மாதிரியே. IV. சுவர்க் கத்து தேவர்களுள்ளும், திருச்சபையைச்சேர்ந்த மனிதர்களுள் ளும்; அன்பும் ஞானமும் ஆண்டவரிடமிருந்து ஒன்றாக உள்ளே பாய்வதினாலும், தேவர்களும் மனிதர்களும் அவைகளைப்பெற்றுக் கொள்வதினாலும், வேதத்தில் ஆண்டவரை **மணமகன்** என்றும், **கணவன்** என்றும், சுவர்க்கமும் திருச்சபையும் மணமகளென் றும், மனைவியென்றும் சொல்லப்படுகின்றன. V. ஆகையால், சுவர்க்கமும் திருச்சபையும் பொதுவாகவும், சுவர்க்கத்து ஒரு தேவனும் திருச்சபையின் ஒரு மனிதனும் சிறப்பாகவும், அந்த ஐக்கியத்திலாவது அல்லது நன்மையுடையவும் உண்மையுடைய வும் விவாகத்திலாவது எவ்வளவு தூரம் இருக்கிறார்களோ, அவ்வ ளவு தூரம், அவர்கள் ஆண்டவருடைய பிரதிமையாகவும் சாயலாக வும் இருக்கிறார்கள். ஏனென்றால், இந்த இரண்டும் ஆண்டவரில் ஒன்றாகவும், உண்மையில் ஆண்டவராகவுமிருக்கின்றன. VI. சித்த மும் புத்தியும், இவ்விதமாக, நன்மையும் உண்மையும் ஒன்றாகும் போது, அல்லது அதேவாகிறபடி, தருமமும் பக்தியும் ஒன்றா கிறபோது, அல்லது இன்னும் அதேவாகிறபடி, வேதத்தில் கூறும் சித்தாந்தமும் அதை அனுசரித்த வாழ்க்கையும், ஒன்றா கிறபோது, சுவர்க்கத்திலும் திருச்சபையிலும் பொதுவாயும், அன் றியும், சுவர்க்கத்து ஒரு தேவனிலும், திருச்சபையின் ஒரு மனித னிலும், அன்பும் ஞானமும் ஒன்றாயிருக்கின்றன. VII. ஆனால், மானிடசிருட்டியும், முக்கியமாய் இருதயத்தோடும் சுவாசா சயங்களோடும், சித்தத்துடையவும் புத்தியுடையவும் அன்னு வயமும் சொல்லப்பட்ட **பதிபசுபாச விளக்க** மெனும் நூலில் (பாகம் V, பி. 358-432) அந்த இரண்டும் மனிதனிலும் அவனைச் சேர்ந்த எல்லா பொருள்களிலும் எப்படி ஒன்றாகின்றனவென் பது மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

9. பிராணிவர்க்கத்திலும் விருக்ஷவர்க்கத்திலும் மனித னுக்கு கீழேயும் அல்லது அவனுக்கு புறம்பாகவுமிருக்கும்

பொருள்க்ளில், அந்த இரண்டும் எப்படி ஒன்ருகிறதென்பது, இப்பொழுது பின்வருவதில் முழுவதிலும் கூறப்படும்; ஆனல், இந்த பின்வரும் மூன்று விஷயங்களும் முந்தி சொல்லப்பட வேண்டும். **முதலாவது,** ஆண்டவர் சிருட்டித்த பிரபஞ்சத்திலும் அதைச்சேர்ந்த ஒவ்வொன்றிலும் எல்லாவற்றிலும், நன்மை யுடையவும் உண்மையுடையவும் விவாகமிருந்தது. **இரண்டாவது,** இந்தவிவாகமானது சிருட்டிக்குப்பின் மனிதனில் பிரிக்கப்பட்டது. **மூன்ருவது,** சிருட்டிக்கப்பட்டது ஒன்ருக்கப்பட வேண்டுமென் பதும், இவ்விதமாக நன்மையுடையவும் உண்மையுடையவும் விவாகம் முன்னிலைமைக்கு கொண்டு வரப்படவேண்டு மென்ப தும் ஈசுவரவிதி. இந்த மூன்று விஷயங்களும் **பதிபசுபாச** மெனும் நூலில் மிகுதியாய் நிஜப்படுத்தப்பட்டிருக்கிறபடியினல், இன்னும் அதிக ரூபகாரம் வேண்டியதில்லை. ஒவ்வொரு சிருட் டிக்கப்பட்ட பொருளிலும், சிருட்டி முதல், நன்மையின் விவாக மும் உண்மையின் விவாகமும் இருந்தபடியினலும், அது பிறகு பிரிக்கப்பட்டபடியினலும், **ஆண்டவர்** அதை முன்னிலைமைக்கு கொண்டுவர இடைவிடாமல் பாடுபடுகிருரென்றும், ஆதலால், அதன் யதாஸ்திதி, அதைக்கொண்டு, ஆண்டவரோடு மனிதன் மூலமாய் சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் சேர்க்கை ஈசுவர விதிஎன்றும், தனக்கு இருக்கும் அறிவினலும் கூட எந்த மனித னும் தெரிந்து கொள்ளலாம்.

**10. V. அன்பின் நன்மை ஞானத்தின் உண்மையோடு சேர்க்கப் பட்டிருக்கிறதற்குமேல் நன்மையல்ல; ஞானத்தின் உண்மை அன் பின் நன்மையோடு சேர்க்கப்பட்டிருக்கிறதற்குமேல் உண்மையல்ல.**

நன்மையும் உண்மையும் தாங்கள் உற்பத்தியானதி லிருந்து இதை அடைகின்றன. தன் தொடக்கத்தில் **நன்மை** ஆண்டவரிலிருக்கிறது; அப்படியே உண்மையும்; ஏனென்ருல், ஆண்டவர் **நன்மை**யேயாகவும் **உண்மையே** யாகவுமிருக்கிருர்; அவ ரிடத்தில் அந்த இரண்டும் ஒன்ருயிருக்கின்றன. இதனல் தான் சுவர்க்கத்து தேவர்களிலும், பூமியின்பேரிலுள்ள மனிதர்களிலும்

இருக்கும் நன்மை, அது உண்மையோடு சேர்க்கப்பட்டிருக்கிற அளவுதவிர தானே நன்மையாயில்லை; உண்மையானது நன்மையோடு சேர்க்கப்பட்டிருக்கிற அளவு தவிர தன்னில் தானே உண்மையாயில்லை. ஒவ்வொரு நன்மையும் ஒவ்வொரு உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகின்றனவென்று தெரிந்திருக்கிறது; ஆகவே, நன்மையானது உண்மையோடும், உண்மையானது நன்மையோடும் ஒன்றாகிறபடியினால், நன்மையானது தன்னில் தானே நன்மையாகவும்; உண்மையானது தன்னில் தானே உண்மையாகவும் இருக்க, ஏற்றுக்கொள்ளப்படும் பொருளில், அதாவது, சுவர்க்கத்து ஒரு தேவனிலும், பூமியின் பேரிலுள்ள ஒரு மனிதனிலும் ஒன்றாகவேண்டுமென்பது ஏற்படுகிறது.

11. பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் உண்மைக்கும் நன்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றனவென்று உண்மையாய் தெரிந்திருக்கிறது; ஏனென்றால், நன்மை என்பதால், அன்பின் எல்லா பொருள்களையும், சர்வசாதாரணமாய் கிரகித்து அகப்படுத்துவது என்று அறிந்துகொள்ளப்படுகிறது; உண்மை என்பதால், ஞானத்தின் எல்லா பொருள்களையும், சர்வசாதாரணமாய் கிரகித்து அகப்படுத்துவதென்று அறிந்துகொள்ளப்படுகிறது. ஆனால் நன்மையானது உண்மையோடு சேர்ந்தாலொழிய, ஒன்னவாவதுமில்லை யென்றும், உண்மையானது நன்மையோடு சேர்ந்தாலொழிய என்னவாவதுமில்லை என்றும், இன்னும் தெரியாது. நன்மையானது, உண்மையில்லாமல் ஏதோ ஒன்று என்றும், உண்மையானது நன்மையில்லாமல் ஏதோ ஒன்றென்றும், உண்மையாக தோற்றமிருக்கிறது. அப்படியிருந்தாலும் அவைகள் அப்படி இல்லை; ஏனென்றால், தன்னுடைய எல்லா பொருள்களும் நன்மைகள் என்று சொல்லப்பட்ட அன்பானது, ஒரு பொருளின் சொரூபம்; தன்னுடைய எல்லா பொருள்களும் உண்மைகள் என்று சொல்லப்பட்ட ஞானமானது, **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி 14-16) காண்பித்தபடி அந்த சொரூபத்திலிருந்து வந்த ஒரு பொருளின் தடத்தம்; ஆதலால், தடத்தமில்லாமல் சொரூபமும், சொரூபமில்லாமல் தடத்தமும், ஏதா

கிலுமில்லாததுபோல, உண்மையில்லாமல் நன்மையும், நன்மை (2) யில்லாமல் உண்மையும் யாதொன்றுமாகிறதில்லை. அம்மாதிரியேகூட, ஏதோ ஒன்றுக்கும் சம்பந்தமில்லாமலிருக்கிற நன்மை என்பது என்ன? அது யாதொன்றையும் சேட்டிக்காமலும், எந்த உணர்ச்சியையும் உண்டாக்காமலுமிருப்பதால், அதை நன்மை என்று சொல்லலாமா? சேட்டிக்கிறதும், பார்க்கப்பட்டு உணரப்பட தானே இணங்குகிறதுமான நன்மையோடு சம்பந்தப்பட்ட ஏதோ ஒன்று புத்தியிலுள்ளதுடன் சம்பந்தப்பட்டிருப்பதால், உண்மையோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. இது அல்லது அது நல்லதென்று சொல்லாமல், நன்மையைக்குறித்துமாத்திரம் யாருடனாவது நீர் பேசும், அந்த நன்மை ஏதாகிலுமாகுமா? ஆனால், நன்மையோடு ஒன்றாக அறியப்படுகிற இது அல்லது அதிலிருந்து, அது ஏதோ ஒன்றாகிறது. இது புத்தியில் தவிர வேறு எவ்விதத்திலும் நன்மையோடு சேர்க்கப்படவில்லை. புத்திக்கு சேர்ந்த ஒவ்வொன்றும் உண்மைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது, இச்சித்தலோடும் அம்மாதிரியே: ஒருவன் இச்சிப்பதை தெரிந்துகொள்ளாமலும் பார்க்காமலும், நினைக்காமலும் இச்சித்தல் யாதொன்றுமாகாது. இவைகள் சகிதமாக அது ஏதோ ஒன்றாகிறது. எல்லா இச்சித்தலும் அன்புக்கு சேர்ந்தது, நன்மையோடு சம்பந்தப்பட்டிருக்கிறது; எல்லா தெரிந்துகொள்ளலும், பார்த்தலும் நினைத்தலும், புத்தியைச்சேர்ந்தது. உண்மையோடு சம்பந்தப்பட்டிருக்கிறது: ஆகவே, இச்சித்தல் ஏதாகிலும் ஒன்றுமில்லை, இதை அல்லது அதை இச்சித்தல், ஏதோ ஒன்று என்று விசதமாகிறது. ஒரு உபயோகமானது ஒரு நன்மையாயிருக்கிற (3) தினால், ஒவ்வொரு உபயோகத்தோடும் அதேமாதிரிதான், தன்னுடன், ஒன்றாயிருக்கக்கூடிய ஏதாகிலும் ஒன்றுக்கு, நிச்சயப்படுத்தப்பட்டாலொழிய, அது உபயோகமாகாது. இவ்விதமாக அது ஏதாகிலும் ஒன்றாகாது. உபயோகமானது, புத்தியிலிருந்து, அதற்கு நிச்சயப்படுத்தக்கூடிய அதன் ஒன்றை அடைகிறது; புத்தியிலிருந்து வருவதும், உபயோகத்தோடு கூட்டப்பட்டிருக்கிறதும், ஒட்டியிருக்கிறதுமானது, உண்மையோடு சம்பந்தப்பட்டிருக்கிறது; அதிலிருந்து உபயோகமானது தன்

(4) குணத்தை அடைகிறது. இந்த சில விஷயங்களால், உண்மையில்லாமல் நன்மை ஏதாகிலும் ஒன்றுகிறதில்லை யென்றும், மேலும், நன்மையில்லாமல் உண்மை ஏதாகிலும் ஒன்றுகிறதில்லையென்றும், விசதமாகிறது. உண்மையோடு நன்மையும், நன்மையோடு உண்மையும், எதோ ஒன்றுகின்றனவென்று சொல்லப்படுகிறது; ஆகவே, பொய்யுடன் தீங்கும், தீங்குடன் பொய்யும், ஏதாகிலும் ஆகிறதில்லை யென்று தொடருகிறது; ஏனென்றால், பின் சொல்லப்பட்டவைகள் முன் சொல்லப்பட்டவைகளுக்கு எதிரானதாயிருக்கின்றன. எதிரிடையானது அழிக்கிறது. இந்த சங்கதியில், அந்த எதோ ஒன்றை அழிக்கிறது. ஆனால் பின்வருவதில் இதைப்பற்றி அதிகம் சொல்லப்படும்.

12. ஆனால், காரணத்தில், நன்மை உண்மைகளுடைய ஒரு விவாகமிருக்கிறது, அன்றியும், காரியத்தில் காரணத்திலிருந்து நன்மை உண்மைகளுடைய ஒரு விவாகமிருக்கிறது. காரணத்திலிருக்கும் நன்மை உண்மைகளுடைய விவாகம், சித்தம் புத்திகளிட அல்லது அன்பு ஞானங்களிட விவாகமாயிருக்கிறது; ஒரு மனிதன் இச்சிக்கிறதும் நினைக்கிறதுமான எல்லாவற்றிலும், அதிலிருந்து அவன் முடிவுசெய்கிறதிலும் உத்தேசிக்கிறதிலும், இந்த விவாஹமிருக்கிறது. இந்த விவாகமானது காரியத்தில் பிரவேசித்து அதை உண்டாக்குகிறது. ஆனால் ஒருமிக்க இருப்பவைகள் பிறகு பின் வருபவைகளை உண்டாக்குகிறபடியினால், காரியத்தை உற்பத்திசெய்வதில், இந்த இரண்டும் வேறுவேறானதாய் தோன்றுகின்றன. உதாரணமாக: போஷிக்கப்படவும், உடுத்தப்படவும், இருப்பிடம் உடைத்தாயிருக்கவும், பகிரங்கமான உத்தியோகத்தையும் வேலையையும் செய்யவும், ஜனங்களோடு கொண்டாடவும், ஒரு மனிதன் இச்சித்து நினைக்குங்கால், அவன் முதலில் இச்சித்து நினைக்கிறான் அல்லது ஏககாலத்தில் தீர்மானித்து அபிப்பிராயம் கொள்ளுகிறான். ஆனால், காரியங்களாக அவைகளை தீர்மானித்த போது, அவனுடைய சித்தத்திலும் சிந்தனையிலும், இன்னும் ஒன்றாகஇருந்தாலும், ஒன்று மற்றொன்றுக்கு பின் தொடருகிறது. இந்த காரியங்களில் உபயோகங்கள், அன்பு அல்லது நன்

மைக்கு சேர்ந்திருக்கின்றன. உபயோகங்களுக்கு சாதனங்கள், புத்தி அல்லது உண்மைக்கு சேர்ந்திருக்கின்றன. எவனுவது ஒருவன் அன்பின் நன்மைக்கும், ஞானத்தின் உண்மைக்கும், எதற்கு சம்பந்த மிருக்கிறதென்றும், மேலும், இந்த சம்பந்த மன்னது காரணத்திலும், காரியத்திலும் எப்படி யிருக்கிறதென்றும், தெளிவாய் அறிந்துகொண்டால், அவன் விவரங்களோடு இந்த் சாதாரண உண்மைகளை உறுதிப்படுத்துவான்.

13. அன்பானது ஒரு மனிதனுடைய உயிரை உண்டாக்குகிறதென்று பல சமயங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இது ஞானத்தினின்று பிரிக்கப்பட்ட அன்பு என்றுவது, காரணத்தில் உண்மையிலிருந்து பிரிக்கப்பட்ட நன்மை என்றுவது அருத்தம் கொள்ளுகிறதில்லை; ஏனென்றுல், வேருன அன்பு அல்லது வேருன நன்மை, யாதொன்று மாகிறதில்லை. ஆகையால் ஆண்டவரிடமிருந்து வருகிற மனிதனுடைய மிகவும் உள்ளான உயிரை உண்டாக்குகிற அன்பு, அன்பும் ஞானமும் சேர்ந்ததாயிருக்கிறது. மனிதன் பெற்றுக்கொள்பவனு யிருக்கிறவரையில், அவனுடைய உயிரை உண்டாக்குகிற அன்புங்கூட காரணத்தில் வேருன அன்பல்ல, காரியத்தில் அப்படியிருக்கும் அன்பாயிருக்கிறது. ஏனென்றுல், தன் குணத்தை நீக்கியபின் அன்பானது அறிந்து கொள்ளப்படமுடியாது, அதன் குணம் ஞானமாயிருக்கிறது; குணம் அல்லது ஞானம், அன்பாயிருக்கிற அதன் சொரூபத்திலிருந்து மாத்திரம் உண்டாகக்கூடும். இதனுல், அவைகள் ஒன்றுயிருக்கின்றன. நன்மை விஷயத்திலும் உண்மை விஷயத்திலும் அம்மாதிரியே. இப்படியிருக்கையில், அன்பிலிருந்து ஞானம் வருகிறது போல், நன்மையிலிருந்து உண்மை வருகிறப்படியினுல், இரண்டும் ஒன்று சேர்ந்து, அன்பு அல்லது நன்மை என்று சொல்லப்படுகின்றன; ஏனென்றுல், அன்பு தன்னுடைய உருவத்தில் ஞானமாயிருக்கிறது, நன்மையானது தன்னுடைய உருவத்தில் உண்மையாயிருக்கிறது; ஏனென்றுல், வேறு எந்தமூலத்திலுமல்லாமல், உருவத்திலிருந்து, எல்லாகுணங்களும் உண்டாகின்றன. இவைகளிலெல்லாமிருந்து, நன்மையானது, அதன் உண்மையோடு

சேர்ந்திருக்கிறதற்குமேல் நன்மை நன்மையல்லவென்றும், உண்மையானது நன்மையோடு சேர்ந்திருக்கிறதற்குமேல், உண்மை உண்மை யல்லவென்றும் விசதமாகும்.

**14. VI. ஞானத்தின் உண்மைக்கு சேர்க்கப்படாத அன்பின் நன்மை தன்னில்தானே நன்மையாகாது, ஆனால் அது வெளிவேஷமான நன்மையாயிருக்கிறது; அன்பின் நன்மைக்கு சேர்க்கப்படாத ஞானத்தின் உண்மைதன்னில்தானே உண்மையாகாது. ஆனால், அது வெளிவேஷமான உண்மையாயிருக்கிறது.**

தன் உண்மையோடு சேர்க்கப்பட்டாலொழிய தானே நன்மையாயிருக்கிற எந்த நன்மையுமில்லை யென்பதும், தன் நன்மையோடு சேர்க்கப்பட்டாலொழிய, தானே உண்மையாயிருக்கிற எந்த உண்மையுமில்லை என்பதும் உண்மையாயிருக்கிறது. அப்படியிருந்தும், உண்மைக்கு வேறாக நன்மையும், நன்மைக்கு வேறாக உண்மையும் இருக்கின்றன. வேஷதாரிகளிடத்திலும், முகஸ்துதி செய்பவர்களிடத்திலும், எல்லாவித கெட்ட மனிதர்களிடத்திலும், அன்றியும், எந்த பரமார்த்த நன்மையிலுமில்லாமல், ஜட நன்மையிலிருக்கிறவர்களிடத்திலும் அவைகள் அப்படியிருக்கின்றன. இவர்கள் திருச்சபைக்கும், தங்கள் தேசத்திற்கும், ஜன சமுகத்திற்கும், தங்களை ஒத்த தங்கள் நகரவாசிகளுக்கும், தரித்திரர்களுக்கும், ஏழைகளுக்கும், அமங்கலிக்கும், அநாதபிள்ளைக்கும், நன்மைசெய்யக்கூடும். அவர்கள் உண்மைகளைக்கூட அறிந்துகொள்ளக்கூடும்; புத்தியிலிருந்து அவைகளை நினைக்கவும்கூடும்; சிந்தனையிலிருந்து அவைகளை பேசவும் கற்பிக்கவும்கூடும். என்றாலும், அவர்களுக்குள்ளிருக்கும் நன்மைகளும் உண்மைகளும், உள்ளுக்குள்ளாய், இம்மாதிரியாக தங்களுக்குள்ளேயே நன்மைகளாயும் உண்மைகளாயும்இல்லை. ஆனால் அவர்கள்பார்வைக்கு அப்படி யிருக்கிறார்கள், இவ்விதமாக வெளிவேஷமுள்ளவர்களா யிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் நன்மைக்கேயாகவும் உண்மைக்கேயாகவும் அல்லாமல், தங்களுக்கேயாகவும் உலகத்துக்காகவும், மாத்திரம் இருக்கிறார்கள், அதனால் அவைகள் நன்மை உண்மைகளிலிருந்து வரவில்லை; ஆதலால் இருதயத்துக்கல்லாமல், அவைகள்வாயிக்கும் சரீ

ரத்துக்கு மாத்திரம் சேர்ந்தவை. களிம்பின்பேரிலும், ஊழ்த்தமரத்தின்பேரிலும் அல்லது மலத்தின்பேரிலும் போடப்பட்ட பொன்னுக்கும் வெள்ளிக்கும் உச்சரிக்கப்பட்ட உண்மைகள், போய்விடுகிற சுவாசத்துக்கும், அல்லது மறைந்துபோகிற மருளான வெளிச்சத்துக்கும், அவைகள் பார்வைக்கு நிஜமான உண்மைகளைப்போல் தோன்றினாலும், ஒப்பிடலாம். ஆயினும், அவைகளைப் பேசப்பட்டவர்களிடத்தில், அவ்வித உண்மைகள் வெளிவேஷமானதாய் மாத்திரமிருக்கின்றன; அப்படியிருந்தாலும், இந்த விஷயம் தெரியாமல், அவர்களை ஏற்றுக்கொண்டு கேட்கிறவர்களுக்கு அவைகள் வேறுவிதமாயிருக்கலாம்; ஏனென்றால், புறம்பானவை, ஒருவனுடைய சொந்த உள்ளானவைகளுக்கு தக்கபடி ஒவ்வொருவனையும் இயக்குகிறது. ஓர் உண்மையானது யார்சொன்னபோதிலும், மற்றவனிட காதில் பிரவேசித்து, தன் நிலைமைக்கும் குணத்துக்கும் தக்கபடி மனதினால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. எந்த பரமார்த்த நன்மையினுமல்லாமல், ஜடநன்மையில் பரம்பரையாயிருக்கப்பட்டவர்கள் விஷயத்தில் சங்கதி ஏறக்குறைய அம்மாதிரியே யிருக்கிறது. ஏனென்றால் ஒவ்வொரு நன்மையினதும், ஒவ்வொரு உண்மையினதும் உள்ளானது, பரமார்த்தமானதா யிருக்கிறது, இது பொய்களையும் தீங்குகளையும் துரத்துகிறது, ஜடமாய் மாத்திரமிருப்பது அவைகளுக்கு அனுகூலம் செய்கிறது; தீங்குகளுக்கும் பொய்களுக்கும் அனுகூலம் செய்தலும், நன்மைசெய்தலும் ஒத்துப்போகிறதில்லை.

15. நன்மை உண்மையிலிருந்தும், உண்மை நன[redacted]ருந்தும் பிரிக்கப்படலாம். பிரிக்கப்பட்ட போதும், பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட அறிந்துகொள்ளும் மனோசத்தியும், சுதந்தரம் என்று சொல்லப்பட்ட சேட்டிக்கும்சத்தியும், மனிதனுக்கு இருக்கிறபடியினால், நன்மையைப்போலவும் உண்மையைப்போலவும் தோன்றுகின்றன. இந்த மனோசத்திகளை துர்விநியோகம் செய்வதால் மனிதனானவன் தான் உள்ளிருக்கிறதற்கு வேறாக புறத்தே தோன்றக்கூடும்; ஆதலால், ஒரு துஷ்டமனிதன் நன்மையைச்செய்து உண்மையைப்பேசக்கூடும், அல்லது ஒரு பேயே,

ஒளியுள்ள ஒரு தேவனைப்போல் நடிக்கக்கூடும். ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி **பதிபசுபாசவிளக்கம்** எனும் நூலில் பின்வரும் வாக்கியங்களைப் பார்க்கவும் :— பகுத்தறியுடைமை, சுதந்திரம் என்று சொல்லப்பட்ட மனிதனுக்கு சொந்தமான மனோசக்திகளை துர்வினியோகம் செய்வதிலிருந்து தீமை உற்பத்தியாகிறது (பி. 264-270). இந்த இரண்டு சக்திகளும் துஷ்டர்களிடத்திலும் நல்லவர்களிடத்திலும் இருக்கின்றன (பி. 425). ஞானத்துடன் விவாகமாகாத அன்பும், உண்மையோடு விவாகமாகாத நன்மையும் யாதொன்றையும் செய்யமுடியாது (பி. 401). ஞானம் அல்லது புத்தியுடன் சேர்ந்தாலொழிய, அன்பானது எதிலும் சேட்டிக்கிறதில்லை (பி. 409). அன்பு ஞானம் அல்லது புத்தியுடன் தானே சேர்ந்துகொள்ளுகிறது, அது ஞானத்தையும் அல்லது புத்தியையும் தன்னுடன் பரஸ்பரமாய் சேர்க்கப்பட செய்கிறது (பி. 410-412). ஞானம் அல்லது புத்தி, அன்பினால் தனக்கு கொடுக்கப்பட்ட சக்தியினால், உயர்த்தப்பட்டு, சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு சேர்ந்த பொருள்களைப்பார்த்து அவைகளை ஏற்றுக்கொள்ளக்கூடும் (பி. 413). அம்மாதிரியே, அன்பு உயர்த்தப்பட்டு, தன்னுடைய மனைவியாகிய ஞானத்தை அந்தபரிமாணம் நேசித்தால், சுவர்க்கத்திலிருந்துவரும் சூட்டைச்சேர்ந்த பொருள்களை ஏற்றுக்கொள்ளக்கூடும் (பி. 414, 415). இல்லாவிட்டால் அன்பு, தன்னுடனேயே ஒன்றாக சேட்டிக்க, ஞானம் அல்லது புத்தியை அதன் உன்னதத்திலிருந்து கீழே இழுக்கிறது (பி. 416-418). அவைகள் ஒருமிக்க உயர்த்தப்பட்டால், அன்பானது புத்தியில் பரிசுத்தப்படுத்தப் படுகிறது (பி. 419-421). புத்தியில், ஞானத்தினால் சுத்தப்படுத்தப்பட்ட அன்பானது, சூக்குமமும் அதிசூக்குமமுமானதாகிறது. ஆனால் புத்தியில் அசுசியாக்கப்பட்ட அன்பு இந்திரிய சம்பந்தமுள்ளதாகவும், சரீரசம்பந்தமுள்ளதாகவு மாகிறது (பி. 422-424). அன்புடனும் ஞானத்துடனும் அவைகளின் சேர்க்கையுடனும் போல, தருமத்துடனும், பக்தியுடனும், அவைகளின் சேர்க்கையுடனும், அது அம்மாதிரியேயிருக்கிறது (பி. 427-430). சுவர்க்கங்களில் தருமம் என்னமாயிருக்கிறது (பி. 431).

16. VII. ஆண்டவர் எந்த பொருளேயும் கூறுசெய்யப்பட இடம் கொடுக்கிறதில்லை. ஆகையினுல், அது நன்மையிலும் அல்லது அதேகாலத்தில் உண்மையிலும் இருக்கவேண்டும் அல்லது, அது தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலும் இருக்கவேண்டும்.

ஆண்டவருடைய தெய்வபராமரிப்பு, முக்கியமாய் ஒருமனிதன் நன்மையிலும், அதே காலத்தில் உண்மையிலுமிருக்கவேண்டுமென்கிற நோக்கம் கொள்ளுகிறது. இதற்காக அது பாடுபடுகிறது; ஏனென்ருல், இவ்விதமாக ஒருமனிதன் அவனுடைய சொந்த நன்மையாகவும், அவனுடைய சொந்த அன்பாகவும், அன்றியும், அவனுடைய சொந்த உண்மையாகவும், அவனுடைய சொந்த ஞானமாகவுமிருக்கிருன்; ஏனென்ருல், இதனுல் அப்பொழுது ஆண்டவருடைய பிரதிமையாயிருப்பதால் மனிதன் மனிதனுகிருன். ஆனுல், ஒருமனிதன் உலகத்திலிருக்கையில் நன்மையிலும், அதேகாலத்தில் பொய்யிலும், பின்னும் தீமையிலும் அதேகாலத்தில் உண்மையிலும், பின்னும் தீமையிலும் அதேகாலத்தில் நன்மையிலும், இவ்விதமாக இருமடங்காக இருக்கக்கூடுமாகையாலும், இந்த கூறுபாடு அந்த பிரதிமையை அழித்து, மனிதனை அழிக்கிறபடியினுலும், ஆண்டவருடைய பரிபாலனம் அதற்கு சேர்ந்த எல்லா பொருள்களிலும், ஒவ்வொரு பொருளிலும், இந்த கூறுபாடு இருக்கக்கூடாதென்று நோக்கத்தில் வைத்திருக்கிறது. நன்மையிலும் அதேகாலத்தில் தீமையிலும் இருப்பதைவிட, தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலும் இருப்பது குறைந்த கெடுதியை உண்டாக்கக்கூடியதால், ஆண்டவர் இஷ்டப்பட்டதுபோல் அல்லாமல், கடைத்தேற்றமாயிருக்கிற நோக்கத்தின் பொருட்டு, இதை தடுக்க சக்தியற்றவர்போல் அதற்கு இடங்கொடுக்கிருர். மனிதனுடைய அன்பு கீழே இருக்கையில், அவனது புத்தியானது ஞான ஒளிக்கு உயர்த்தப்படவும், உண்மைகளை பார்க்கவும், அல்லது கேட்டபோது அவைகளை ஒத்துக்கொள்ளவும் கூடுமாகையால், ஒரு மனிதன் தீமையிலும் அதேகாலத்தில் உண்மையிலும் இருக்கக்கூடுமென்பதும், கடைத்தேற்றமாயிருக்கிற நோக்கத்தின் பொருட்டு ஆண்டவர்

இதை தடுக்கமுடியாதென்பதும் காரணமாயிருக்கிறது; ஏனென்றால், ஒருமனிதன் இவ்விதமாக புத்தியோடு சுவர்க்கத்திலும், ஆனால், அன்போடு நரகத்திலும் இருக்கக்கூடும். இந்த சுபாவத்தை உடையனாயிருக்கும் பாத்தியதையை மனிதனுக்கு மறுக்கமுடியாது; ஏனென்றால் அவன் மனிதனாயிருக்கவும், மிருகங்களிலிருந்து விசேஷித்தறியப்படவும் அவன் குணப்படுத்தப்பட்டு, இவ்விதமாக இரக்ஷிக்கப்படவும் காரணமாயிருக்கிறதுமான பகுத்தறிவுடைமையும் சுதந்தரமும், அவனிடமிருந்து நீக்கமுடியாது; ஏனென்றால், இவைகளினால் ஒருமனிதன் ஞானத்துக்கு ஒத்து செயல்படக்கூடும்; ஞானத்துக்கு சேராத ஒரு அன்புக்கு தக்கபடிகூட அவன் செயல்படக்கூடும்; இவைகளினால்கூட மேலிருக்கும் ஞானத்திலிருந்து, கீழிருக்கும் அன்பை அவன் பார்க்கக்கூடும். இந்த விதமாக, தன்னுடைய வாழ்க்கையினுடையவும் கொள்கையினுடையவும், சிந்தனைகளையும், உத்தேசங்களையும், பிரியங்களையும், இவ்விதமாக தீமைகளையும் பொய்களையும், மேலும், நன்மைகளையும் உண்மைகளையும் பார்க்கக்கூடும்; அதை தனக்குள்ளேயே அறிந்து ஒத்துகொள்ளாவிட்டால், அவன் சீர்படுத்தப்படமாட்டான். இந்த இரண்டு மனோசக்திகளையும் பற்றி சிலது முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. பின்வருவதில் இன்னும் அதிகம் சொல்லப்படும். ஒருமனிதனானவன் நன்மையிலும் அதேகாலத்தில் உண்மையிலும், மேலும் தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலும், அவைகளில் ஒன்றுவிட்டு ஒன்றுயும் கூட ஏன் இருக்கக்கூடு மென்பதற்கு இதுதான் காரணம்.

17. உலகத்தில் ஒரு மனிதனானவன் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அல்லது தீமையினுடையவும் பொய்யினுடையவும் எதோ ஒரு சேர்க்கையில் அல்லது ஐக்கியத்திற்குள் கஷ்டத்துடன் வரக்கூடும். ஏனென்றால், அவன் உலகத்திலிருக்கிறவரையில் சீர்ப்படுதல் அல்லது குணப்படுதலின் ஓர் ஸ்திதியில் வைக்கப்படுகிறான். ஆனால் இறந்த பிறகு, ஒவ்வொரு மனிதனும் சீர்திருத்தப்படவும் குணப்படுத்தப்படவும் இனி முடியாதபடியினால், எதோ ஒன்றுக்குவருகிறான்; அவன் உலகத்தில் தன்

னுடைய வாழ்க்கைக்கு, தக்கபடி அதாவது ஆளுகிற அன்பு இருந்ததற்கு தக்கபடி அப்பொழுது நிலைக்கிறான். ஆகையினால், அவனுடைய வாழ்க்கை தீமையை நேசிக்கும் வாழ்க்கையாயிருந்திருந்தால், குருக்களிடமிருந்தும், தரும உபதேசத்திலிருந்தும், அல்லது வேதத்திலிருந்தும் தான் அறிந்து கொண்ட எல்லா உண்மையும் நீக்கப்படுகிறது; இது நீக்கப்பட்டபிறகு, அவனுடைய தீமையோடு ஒத்துப்போகிற பொய்யை ஓர் கடற்பஞ்சு தண்ணீரை உறிஞ்சுகிறதுபோல் தன்னில் நிரப்புகிறான். இன்னொரு முறையில், அவனுடைய வாழ்க்கையானது, நன்மையைநேசிக்கும் வாழ்க்கையாயிருந்திருந்தால், கேழ்வியாலும் வாசிப்பதினாலும் தான் உலகத்தில் அறிந்து கொண்டதும், ஆனால் தன்னிடத்தில் ஊர்ஜிதப்படுத்தாததுமான எல்லா பொய்யும் அப்போது நீக்கப்படுகிறது; அதற்குப்பதிலாக அவனுடைய நன்மையோடு ஒத்துப் போகிற உண்மை அவனுக்கு கொடுக்கப்படுகிறது. ஆண்டவருடைய பின்வரும் வார்த்தைகளால் இது கருதப்படுகிறது:—"அவனிடத்திலிருக்கிற தாலந்தை எடுத்து, பத்து தாலந்து உள்ளவனுக்குக் கொடுங்கள். உள்ளவனெவனோ அவனுக்கு கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; இல்லாதவனிடத்திலிருந்து உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும்" (மத்தே. XXV. 28, 29; XIII. 12; மாற்கு IV. 25; லூக். VIII. 18; XIX. 24-26).

18. நன்மையும், தீமையும், அதுவுமல்லாமல், நன்மையும் அதேகாலத்தில் தீமையின் பொய்யும், தீமையும் அதேகாலத்தில் நன்மையின் உண்மையும், சேர்க்கப்பட முடியாதபடியினால், இறந்த பிறகு ஒவ்வொருவனும் நன்மையிலும், அதேகாலத்தில் உண்மையிலும், அல்லது தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலும், இருக்கவேண்டுமென்பது நிலைக்கிறது; ஏனென்றால் அவைகள் எதிரிடையானவைகள். எதிரிடையானவைகள் ஒன்று மற்றொன்றை அழிக்கிறவரையில் ஒன்றோடொன்று போராடுகின்றன. வெளிப்படுத்தின விசேஷத்தில், லவோதிக்கேயரிட சபைக்கு தெரிவித்த, பின்வரும் ஆண்டவரின் வார்த்தைகளால்

தீமையிலும், அதேகாலத்தில் நன்மையிலும் இருக்கப்பட்டவர் கருதப்படுகிறது. "உன்கிரியைகளை அறிந்திருக்கிறேன்; நீ குளிரு மல்ல அனலுமல்ல; நீ குளிராயாவது ஆனலாயாவது இருந் தால் நலமாயிருக்கும். இப்படி நீ குளிருமின்றி அனலு மின்றி வெதுவெதுப்பா யிருக்கிறபடியினுல், உன்னை என் வாயினின்று வாந்தி பண்ணிப்போடுவேன்" (III. 15,16). ஆண் டவரிட பின்வரும் வார்த்தைகளாலும்கூட: "இரண்டு எஜமான் களுக்கு ஊழியஞ்செய்ய ஒருவனாலுங்கூடாது; ஒருவனைப்பகைத்து, மற்றவனைச்சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப்பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்" (மத்தே. VI. 24).

19. VIII. நன்மையிலும் அதேகாலத்தில் உண்மையிலும் இருக்கப்பட்டது ஏதோ ஒன்றுகிறது; தீமையிலும் அதேகாலத்தில் பொய்யிலும் இருக்கப்பட்டது, யாதோன்றுமாகாது.

நன்மையிலும், அதேகாலத்தில் உண்மையிலும் இருக்கப் பட்டது, ஏதோ ஒன்று என்று மேலே (பி. 11) கூறியதில் அறிந்துகொள்ளலாம். தீமையானது அதேகாலத்தில் பொய்யா னது ஏதாகிலும் ஒன்றுகிறதில்லை யென்று, இதிலிருந்து ஏற்படு கிறது. அது யாதொன்றுமாயில்லை என்பதால், அதற்கு எந்த வல் லமையும் பரமார்த்த உயிரும் இல்லையென்று அருத்தம் கொள்ளப் படுகிறது. நரகத்திலிருக்கப்பட்டவர்களாகிய, நன்மையிலும் அதே காலத்தில் தீமையிலும் இருக்கப்பட்டவர்களெல்லாம், நிஜமாகவே தங்களுக்குள்ளே வல்லமையுள்ளவர்களாயிருக்கிறுர்கள்; ஏனென் றுல், தீங்கில் இருப்பவன் தீமையை செய்யக்கூடும், அவன் அதை ஆயிரம் வழிகளில்கூட செய்கிறுன்; அப்படியிருந்தாலும், கெட் டவர்களுக்கு அவர்களுடைய தீங்கிலிருந்து தீங்குசெய்யக்கூடும்; ஆனுல், சில வேளைகளில் செய்யப்படுகிறபடி, அவர்களுடைய தீங் குடன் சேர்ந்தாலொழிய நல்லவர்களுக்கு கொஞ்சம்கூட தீங்கு (2) செய்யமுடியாது; அவர்களோடு இருக்கிற துஷ்டர்களின் உபா திகளாயிருக்கிற சோதனைகளும், தங்களுடைய தீமைகளிலிருந்து நல்லவர்கள் தப்புவிக்கப்படக் கூடிய, அதிலிருந்து உண்டாகும்

போர்களும், அதிலிருந்து வருகின்றன. துஷ்டர்களுக்கு வல்லமை யில்லாதபடியினால், ஆண்டவர் முன்பாக முழுநரகமும் சூனியமாக யிருப்பது மட்டுமல்லாமல், திரளான அனுபவத்தால் ஊர்ஜிதப் படுத்தப்படுவதை நான் பார்த்திருக்கிறபடி, வல்லமை விஷயத்தில் சுத்த சூனியமாயிருக்கிறது. ஆனால் துஷ்டர்கள் எல்லாம் வல்ல மையுள்ளவர்களாக, தாங்களே நம்புகிறார்கள். நல்லவர்கள் எல்லாம் வல்லமை யில்லாமலிருக்கிறதாக தாங்களே நம்புகிறார்கள். துஷ்டர் கள் எல்லாவற்றையும், ஆண்டவருக்கு யாதொன்றுமல்லாமல் தாங்கள் சொந்தவல்லமைக்கும், இவ்விதமாக சூழ்ச்சிக்கும் வன் மத்துக்கும் சாட்டுகிறபடியினால் இது இப்படியிருக்கிறது. ஆனால் நல்லவர்கள் தங்களுடைய சொந்தபுத்திக்கு யாதொன்றும் சாட் டாமல், சர்வ வல்லமையுள்ள ஆண்டவருக்கு எல்லாவற்றையும் சாட்டுகிறார்கள். இன்னமும், தீமையும் பொய்யும்சேர்ந்து, தங் களிடத்தில் பரமார்த்த உயிரில்லாதபடியினால் யாதொன்றுமாகிற தில்லை; இந்த காரணத்துக்காக பாதாளவாசிகளின் உயிர், உயிர் என்று சொல்லப்படாமல் மரணம் என்று சொல்லப்படுகிறது. ஆகையினால், ஏதாகிலும் ஒன்றாகப்பட்ட எல்லாப்பொருள்களும் உயிருக்கு சேர்ந்திருப்பதால், மரணத்துக்கு சேர்ந்த யாதொன்று மிருக்கமுடியாது.

20. தீமையிலும் அதேகாலத்தில் உண்மைகளிலும் இருக் கின்றவர்களை, உயரப்பறந்து, தங்களுடைய சிறகுகளை உபயோ கப்படுத்தக் கூடாமல் செய்யப்பட்டபோது கீழேவிழுகிற கழுகு களுக்கு ஒப்பிடலாம்; ஏனென்றால் உண்மைகளை தெரிந்து கொண்டு, அவைகளைப்பேசி, அவைகளை கற்பித்தும், வாழ்க்கை யில் கடவுளை மதிக்காவிட்டால், தாங்கள் இறந்த பிறகு, சரீரமில் லாத ஆன்மாக்களானபோது, மனிதர்களும் அப்படியே செய் கிறார்கள். தங்களுடைய புத்திக்குச் சேர்ந்த பொருள்களால் உய ரத் தாங்களே ஏறிக்கொள்ளுகிறார்கள்; சில வேளைகளில் அவர்கள் சுவர்க்கங்களில் பிரவேசித்து சோதியுள்ள தேவர்களைப்போல் பாசாங்கு செய்கிறார்கள்; ஆனால் அவர்களிடமிருந்து உண்மைகள் நீக்கப்பட்டு, அவர்கள் வெளியே அனுப்பப்பட்டபோது, நரகத்

தில் விழுகிறார்கள். அல்லாமலும், கழுகுகள் என்பவை, ஞானப் பார்வையுள்ள கொள்ளைக்காரர்களாகிய மனிதர்கள் என்று அர்த்தம் கொள்ளுகின்றன; சிறகுகள் என்பவை பரமார்த்த உண்மைகளைக் கருதுகின்றன. தங்கள் வாழ்க்கையில் கடவுளை மதிக்காதவர்கள் அப்பேர்ப்பட்டவர்களென்று சொல்லப்பட்டது. வாழ்க்கையில் கடவுளை மதித்தலென்பது, இந்த அல்லது அந்த தீங்கு அவருக்கு விரோதமான பாவமென்று நினைத்து, அதனால் அதை செய்யாதிருத்தலென்பதைத் தவிர வேறொன்றும் கருத வில்லை.

21. IX **ஆண்டவருடைய தெய்வபரிபாலனம், தீமையையும் அதனுடன்கூட இருக்கும் பொய்யையும் சமநிலைக்கும் சம்பந்தத்திற்கும் சுத்தப்படுத்தலுக்கும் உபயோகமாகவும், இவ்விதமாக மற்றவர்களிடத்தில் உண்மையையும் நன்மையையும் சேரவும் செய்கிறது.**

முன் சொல்லியதிலிருந்து, **ஆண்டவருடைய தெய்வபரிபாலனம்** மனிதரில் உண்மையானது நன்மையோடும், நன்மையானது உண்மையோடும் சேர்க்கப்பட இடைவிடாமல்பாடுபடுகிறதென்று விசதமாகும்; ஏனென்றால் இந்த சேர்க்கையானது, திருச்சபையாகவும் சுவர்க்கமாகவுமிருக்கிறது. இந்த சேர்க்கையானது ஆண்டவரிலும், அவரிடமிருந்து புறப்படும் எல்லாவற்றிலுமிருக்கிறது. இந்த சேர்க்கையிலிருந்துதான் சுவர்க்கமும் திருச்சபையும் ஒரு விவாகமென்று சொல்லப்படுகின்றன; ஆகையினால், வேதத்தில் கடவுளின் இராச்சியம், ஒரு விவாகத்துக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. அந்த சேர்க்கையிலிருந்துதான் இஸ்ரவேல் திருச்சபையில், ஓய்வுநாள் ஆராதனையின் மிகவும் பரிசுத்தமானதாயிருந்தது; ஏனென்றால் அது அந்த சேர்க்கையை அருத்தம் கொண்டது. அதிலிருந்துகூடதான் வேதத்திலும், அதிலிருக்கும் ஒவ்வொன்றிலும், எல்லாவற்றிலும் நன்மை உண்மைகளின் ஒருவிவாகமிருக்கிறது; இதைப்பற்றி **பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கொள்கை** என்னும் நூலைப் பார்க்கவும் (பி. 80-90). நன்மை உண்மைகளின் விவாகம் ஆண்டவருக்கும் திருச்சபைக்குப் உள்ள விவாகத்திலிருந்து உண்டா

கிறது; இது ஆண்டவரின் அன்பு ஞானங்களின் விவாகத்திலிருந்து வருகிறது; ஏனென்றால், நன்மை அன்புக்கு சேர்ந்தது, உண்மை ஞானத்துக்கு சேர்ந்தது. இவைகளிலிருந்து, மனிதனில் நன்மையை உண்மையோடும், உண்மையை நன்மையோடும் சேர்ப்பது, தெய்வபரிபாலனத்தின் இடைவிடாத கருத்தாயிருக்கிறதென்று அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால், அவ்விதமாக ஆண்டவரோடு மனிதன் சேர்க்கப்படுகின்றான்.

22. ஆனால் அநேகர் பக்தியை தருமத்திலிருந்து பிரிப்பதினால், முக்கியமாய் இந்த விவாகத்தை உடைத்து விட்டபடியினாலும், உடைத்துக் கொண்டிருக்கிறபடியினாலும்—ஏனென்றால் பக்தி உண்மைக்கும், உண்மை பக்திக்கும், தருமம் நன்மைக்கும், நன்மை தருமத்துக்கும் சேர்ந்திருக்கிறது—அதனால் தங்களுக்குள்ளேயே தீமையையும் பொய்யையும் அவர்கள் சேர்த்து, இவ்விதமாக ஆண்டவருக்கு எதிரிடையானவர்களாய் விட்டபடியினாலும், அப்படி ஆகிக்கொண்டு இருக்கிறபடியினாலும், நன்மையும் உண்மையும் மற்றவர்களில் ஐக்கியப்பட உபகாரம்செய்ய, சமநிலையினாலும், உறவினாலும், சுத்தப்படுத்தலினாலும், ஆண்டவரால் முன்னமே சித்தப்படுத்தப்பட்டிருக்கிறது.

23. சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலிருக்கும் சமநிலை என்பதால் மற்றவர்களிடத்தில் நன்மை உண்மைகளின் சேர்க்கை உண்டாக ஆண்டவர் சித்தப்படுத்திவைத்திருக்கிறார். ஏனென்றால், நரகத்திலிருந்து பொய் சகிதமாக தீமையானது இடைவிடாமல் வெளியேபோகிறது; ஆனால் சுவர்க்கத்திலிருந்து உண்மை சகிதமாக நன்மையானது இடைவிடாமல் வெளியே வருகிறது. இந்த சமநிலையில், ஒவ்வொருமனிதனும் உலகத்திலிருக்கும் வரையில் வைக்கப்பட்டிருக்கிறான்; அதன் மூலமாக, அவன் சீர்படுத்தப்படக்கூடிய, நினைக்கிறதும், இஷ்டப்படுகிறதும், பேசுகிறதும், செய்கிறதுமாகிய சுதந்திரத்தில் வைக்கப்படுகிறான். மனிதனுக்கு சுதந்தரம் உற்பத்தியாகிற இந்த பர

மார்த்த சமநிலையைப்பற்றி, **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலைப் பார்க்கவும் (பி. 589-596, பி. 597-603).

24. நன்மை உண்மைகள் ஐக்கியப்பட ஆண்டவர் **உறவு** என்பதை சித்தப்படுத்தியிருக்கிருர்; ஏனென்ருல் நன்மையின் குணம், கீழ் தரமான நன்மையுடனிருக்கும் உறவினுலும், தீமையுடனிருக்கும் அதன் பரஸ்பர விரோதத்தினுலும் மாத்திரம் தெரிந்துகொள்ளப்படுகிறது. இதிலிருந்து அதன் குணம் ஏற்படுகிறபடியினல், இவ்விடமிருந்து, புலப்பாட்டையும், இந்திரிய ஞானத்தையும் கொடுக்கும் எல்லாம் வருகின்றது; ஏனென்ருல், இவ்விதமாக மனேரஞ்சிதமான ஒவ்வொன்றும், கீழ்தரமான இன்பமுள்ளவைகளினுலும், இன்பம் தராதவைகளின் மூலமாயும், அழகுள்ள ஒவ்வொன்றும், குறைந்த அழகுள்ளதிலிருந்தும், அவலட்சணமானதின் மூலமாயும், அம்மாதிரியே அன்பைச்சேர்ந்த ஒவ்வொரு நன்மையும் குறைந்த நன்மையிலிருந்தும் தீமையின் மூலமாயும், ஞானத்தைச்சேர்ந்த ஒவ்வொரு உண்மையும், குறைந்த உண்மையிலிருந்தும், பொய்யின் மூலமாயும் அறிந்துகொள்ளப்பட்டு உணரப்படுகிறது. மிகப்பெரியதிலிருந்து சின்னஞ்சிறியது வரையில் ஒவ்வொரு பொருளிலும், வேற்றுமை இருக்கவேண்டும்; சின்னஞ்சிறியதிலிருந்து மிகப்பெரியது வரையில், அதன் எதிரானதில்கூட வேற்றுமை இருந்து, அவைகளுக்குள்ளே சமநிலை உண்டானல், அப்பொழுது இருபக்கத்திலுமிருக்கும் பரிமாணங்களுக்குத் தக்கப்படி ஓர் உறவு ஏற்படுத்தப்படுகிறது; அந்தப்பொருளை அறிதலும், உணர்தலும் அதிகரிக்கிறது, அல்லது குறைக்கப்படுகிறது. ஆனல் ஒரு எதிரானது அந்த புலப்பாடுகளையும் ஸ்பரிசத்தையும் நீக்கும் அல்லது உயர்த்துமென்று தெரியப்படவேண்டும். ஓர் எதிரானபொருள் அதன் எதிரானபொருளுடன் கலந்தபோது, அது அவைகளை நீக்கிவிடுகிறது. ஆனல் அதுதானே கலக்காதபோது, அது அவைகளை உயர்த்துகிறது; அதன்பொருட்டு ஆண்டவர், சுவர்க்கத்திலிருந்து நரகத்தை வேருக பிரிப்பதுபோல், மனிதனிலிருக்கும் நன்மையையும் தீமையையும், கலக்காதபடி மிகு நன்ருய்ப்பிரிக்கிருர்.

25. ஒன்று சோதனைகளாலும், மற்றது புளித்து பொங்குதலினாலும், இரண்டு விதத்தில் உண்டாக்கப்படுகிற **பவித்திர படுத்துகையின்** மூலமாய் மற்றவர்களிடத்தில் நன்மையும் உண்மையும் ஐக்கியப்பட **ஆண்டவர்** முன்னமேயோசித்து உபாயம் செய்திருக்கிறார். **பரமார்த்த சோதனைகள்** என்பவை, நரகத்திலிருந்து வெளிக்குவிடப்படுவதும், மனிதனுக்கு மாறுதலுண்டாக்குகிறதுமான, தீமைகளுக்கும் பொய்களுக்கும் விரோதமான சண்டைகளைத்தவிர, வேறொன்றுமில்லை; இவைகளினால், அவன் தீமைகளிலிருந்தும் பொய்களிலிருந்தும் சுத்தப்படுத்தப்படுகிறான். அவனிடத்தில் நன்மையானது உண்மையோடும், உண்மையானது நன்மையோடும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. **பரமார்த்த புளிப்புகள்** சுவர்க்கங்களிலும் பூமியின்பேரிலும் பலவழிகளில் சம்பவிக்கின்றன; ஆனால் அவைகள் என்னவென்றும், எப்படி உண்டாகப்படுகின்றனவென்றும் உலகத்தில் தெரிந்திருக்கப்படவில்லை. ஏனென்றால், வேற்றியல்புள்ள பொருள்கள் பிரிக்கப்படுகிறதும், ஓரியல்புள்ளவைகள் சேர்க்கப்படுகிறதும், சுத்தமும் தெளிவும், அதனால் விளைகிறதுமான புளித்து பொங்குதலை உண்டாக்க சாப்பாட்டிலும் புதிய திராட்சரசத்திலும் போடப்பட்ட புளிப்புகளைப்போல், ஜன சமூகத்தில் அனுப்பப்பட்டபோது, செயல்படுகிற பொய்கள் சகிதமான தீமைகளிருக்கின்றன. ஆண்டவரின் பின்வரும் வார்த்தைகளால் அருத்தம் கொள்ளப்படுகிறவைகள் அவைகள் தான்: "பரலோகராஜ்யம் புளித்தமாவுக்கு ஒப்பாயிருக்கிறது; அதை ஒரு ஸ்திரி எடுத்து முழுவதும் புளிக்கும் வரைக்கும், மூன்றுபடிமாவிலே அடக்கிவைத்தாள்" (மத்தே XIII. 33; லூக். III. 21.).

26. நரகத்திலிருப்பவர்களிடத்தில் தீமையும் பொய்யும் ஐக்கியப்படுவதிலிருந்து, இந்த உபயோகங்கள் ஆண்டவரால் சித்தப்படுத்தப்பட்டிருக்கிறன; ஏனென்றால், சுவர்க்கத்துக்கு மேலுமட்டுமல்லாமல், நரகத்தின் மேலும் இருக்கும் ஆண்டவருடைய இராஜ்யம், உபயோகங்களில் ராஜ்யமாயிருக்கிறது; உபயோகத்தைச்செய்யாத எந்த மனிதனும் அதன் மூலமாய் அது செய்யப்

படாத எந்த பொருளும் அங்கே இருக்கப்படாது என்பது ஈசுவரவிதி.

**ஆண்டவருடைய தெய்வபரிபாலனம் மானிட ஜாதியைக்கொண்டு ஒரு சுவர்க்கத்தை ஏற்படுத்த நோக்கம் கொள்ளுகிறது.**

27. ஆதியிலிருந்து சிருட்டிக்கப்பட்ட எந்த தேவர்களாலும் சுவர்க்கம் உண்டாகவில்லையென்றும், சோதியுள்ள ஓர் தேவனாக சிருட்டிக்கப்பட்டு, சுவர்க்கத்திலிருந்து தள்ளப்பட்ட எந்தபேயினாலும் நரகம் உண்டாக்கப்படவில்லையென்றும், ஆனால், நன்மையினிடத்தில் அன்புபாராட்டி, அதிலிருந்து உண்மையின் உணர்ச்சியி லுள்ளவர்களிடத்திலிருந்து சுவர்க்கமும், தீமையினிடம் அன்புபாராட்டி, அதிலிருந்து பொய்யின் உணர்ச்சியிலுமிருக்கப் பட்டவர்களிடமிருந்து நரகமும், இவ்விதமாக சுவர்க்கமும் நரகமும் இரண்டும் மானிடவர்க்கத்திலிருந்து உண்டாகின்றன வென்றும், தேவர்களோடும் அசரீரிகளோடும் நெடுங்காலம் சகவாசம் செய்ததால், எனக்கு தெரியப்படுத்தப்பட்டு, நிரூபிக்கப் பட்டிருக்கிறது. **நரகத்தையும் சுவர்க்கத்தையும்** குறித்த நூலிலும் (பி. 311 - 316), **கடைசியானதீர்ப்பு** என்கிற சிறிய நூலிலும் (பி. 14 - 27), **கடைசியான தீர்ப்பைக்குறித்தும், ஆதி முதல் அந்தம் வரையில் பரமார்த்த உலகத்தைக் குறித்தும் தொடர்ச்சி** எனும் நூலிலும்கூட, இந்த விஷயத்தைப்பற்றி கூறியதையும் பார்க்கவும். இப்படியிருக்கையில், மானிடவர்க்கத்திலிருந்து சுவர்க்கம் உண்டாகிறபடியினாலும், எம்பிரானுடன் சதாகாலம் இருத்தல் சுவர்க்கமானபடியினாலும், சிருட்டித்தலின் **ஆண்டவர்** கருத்து அதுதான் என்று தொடர்கிறது; சுவர்க்கமானது சிருட்டித்தலின் நோக்கமாயிருந்தபடியினால், அவருடைய தெய்வபரிபாலனத்தின் நோக்கமாக அது இருக்கிறது. **ஆண்டவர்** பிரபஞ்சத்தை தனக்காக அல்லாமல், சுவர்க்கத்தில் தான்கூடி இருக்கப்போகிறவர்கள் பொருட்டு சிருட்டித்தார்; ஏனென்றால், பரமார்த்த அன்பு தனக்கு சொந்தமானதை மற்றவனுக்கு

கொடுக்க விரும்புகிறது; இதை அது செய்யக்கூடிய அளவு, அது அதன் சொரூபத்திலும், அதன் சமாதானத்திலும், அதன் மோக்ஷானந்தத்திலுமிருக்கிறது. முடிவற்று, அவ்விதமாயிருப்பதாக **ஆண்டவருடைய** பரம இச்சாசத்தியிலிருந்து, பரமார்த்த அன்பு இதை அடைகிறது. அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் ஆசீர்வாதங்களையும் சுகங்களையும் **ஆண்டவர்** கொடுக்கக்கூடியதும், இவைகளை **தன்னிட**மிருந்தே அவர்களுக்கு கொடுக்கிறதுமான, தேவர்களானவர்களும் தேவர்களாகிறவர்களுமாகிய மனிதர்களால் அமைந்திருக்கிற ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க **பரம இச்சாசத்தி**, ஆதலால், **தெய்வபரிபாலனம்** நோக்குகிறதென்று இதிலிருந்து ஏற்படுகிறது. **அவர்** அவர்களுக்கு வேறு வழியில் கொடுக்கமுடியாது; ஏனென்றால், சிருட்டி முதல் **அவர்**களிடத்தில் தன்னையே போன்றசாயலும் ரூபமும் இருக்கிறது; அவர்களிலிருக்கும் சாயல் ஞானம், அவர்களிலிருக்கும் ரூபம் அன்பு; அவர்களிலிருக்கும் **ஆண்டவர்** ஞானத்துடன் சேர்ந்த அன்பாகவும், அன்புடன் சேர்ந்த ஞானமாகவும் யிருக்கிறார்; அல்லது அதேவாகிறபடி, உண்மையோடு சேர்ந்த நன்மையாகவும், நன்மையோடு சேர்ந்த உண்மையாகவுமிருக்கிறார்; அந்த ஐக்கியத்தைப்பற்றி (3) முந்திய பிரிவில் சொல்லப்பட்டது. ஆனால், பொதுவாகவும், அல்லது அநேகர் விஷயத்தில் சுவர்க்கம் என்னவென்றும், சிறப்பாகவும் அல்லது ஒருவருடன் என்னவென்றும், பரமார்த்த உலகத்தில் என்னவென்றும், ஜடலோகத்தில் அது என்னவென்றும், தெரியாதபடியினால்—அப்படியிருந்தும் சுவர்க்கத்தை உண்டாக்குவது **தெய்வபரிபாலனத்தின்** நோக்கமானபடியினால், இதைதெரிந்துகொள்ளவேண்டியது பிரதானமானது—பின்வரும் ஒழுங்கில் இந்தவிஷயத்தை கொஞ்சம் வெளிச்சத்தில்வைக்க நான்விரும்புகிறேன். (I) சுவர்க்கமென்பது ஆண்டவரோடு ஐக்கியப்படுதல். (II) மனிதனானவன் சிருட்டிமுதல் ஆண்டவரோடு அதிகம் நெருங்க சேர்க்கப்படக்கூடியவனாயிருக்கிறான். (III) ஒரு மனிதனானவன் எவ்வளவு அதிக சமீபமாய் ஆண்டவரோடு சேர்க்கப்பட்டிருக்கிறானோ, அவ்வளவு அதிகம் ஞானியாகிறான். (IV) ஒரு மனிதனானவன் எவ்வளவு அதி சமீபமாய் ஆண்டவரோடு

சேர்க்கப்பட்டிருக்கிருனே, அவ்வளவு அதிகமாய் சுகமுள்ளவ னுகிருன். (V) ஒருமனிதனுனவன் எவ்வளவு அதிகசமீபமாய் ஆண் டவரோடு சேர்க்கப்பட்டிருக்கிருனே, அவ்வளவு, தான் தனக்கு சொந்தமென்று அதிக தெளிவாய் தனக்கே தோன்றுகிருன். மேலும் தான் அவ்வளவு ஆண்டவருடையவனென்று அதிக தெளிவாய் அறிந்துகொள்ளுகிருன்.

28. I. **சுவர்க்கமென்பது ஆண்டவரோடு ஐக்கியப்படுதல்.** சுவர்க்கமென்பது தேவர்களிடமிருந்து அல்லாமல், ஆண்டவரிடமிருந்துவரும் சுவர்க்கமாயிருக்கிறது; ஏனென்ருல், தேவர்கள் இருக்கப்பட்டதும், சுவர்க்கத்தை உண்டாக்குகிறதுமான அன்பும் ஞானமும், அவர்களிடமிருந்தல்லாமல் ஆண்டவரிடமிருந்து வருகின்றன. மேலும் அவர்களில், நிஜமாகவே ஆண்டவராயிருக்கின்றன; அன்பும் ஞானமும், ஆண்டவருடையதாகவும், சுவர்க்கத்தில் ஆண்டவராகமிருக்கிறபடியினுலும், அன்பும் ஞானமும் தேவர்களின் உயிரை உண்டாக்குகிறபடியினுலும், அவர்களுடைய உயிரானது ஆண்டவருடையதென்றும், இதுவுமல்லாமல், ஆண்டவரே என்றும்கூட தெளிவாயிருக்கிறது. தேவர்களே ஆண்டரால் உயிரோடிருப்பதாக ஒத்துக்கொள்ளுகிருர்கள்; சுவர்க்கமென்பது ஆண்டவரோடு ஐக்கியப்படுதலென்று இதிலிருந்து விசதமாகும். ஆனுல், ஆண்டவரோடு ஐக்கியப்படுதல் பலவிதமாயிருப்பதாலும், ஆதலால், சுவர்க்கமானது ஒருவனுக்கு இருப்பதுபோல் மற்றவனுக்கு இல்லாதபடியினுலும், சுவர்க்கமானது ஆண்டவருடன் ஐக்கியப்படுதலுக்குத் தக்கபடியிருக்கிறதென்று கூட தொடர்கிறது. பின்வரும் பிரிவில் அந்த ஐக்கியமானது சமீபம் சமீபமாய் அல்லது தூரம் தூரமாயிருக்கிறதென்று (2) பார்க்கப்படும்; அந்த ஐக்கியத்தைப்பற்றி, அது எப்படி உண்டாக்கப்படுகிறது, அது என்ன குணமுடையதாயிருக்கிறது என்று இப்பொழுது சிலது சொல்லப்படும்: அது ஆண்டவர் தேவர்களோடும், தேவர்கள் ஆண்டவரோடும் ஐக்கியப்படுதலாயிருக்கிறது; இவ்விதமாக அது பரஸ்பரமாயிருக்கிறது. ஆண்டவர் தேவர்களின் உயிரினுடைய அன்பிற்குள்பாய்கிருர், தேவர்

கள் அவரை ஞானத்தில் பெற்றுகொண்டு, அதனல் அவர்கள் தங்கள் முறையில் ஆண்டவரோடு தாங்களே சேருகிறார்கள். ஆனல், தேவர்களுக்கு, ஆண்டவரோடு ஞானத்தினல் தாங்களே சேருவதாக தோன்றுகிறதென்று, நன்றாய் தெரிந்திருக்கப்பட வேண்டும்; அப்படியிருந்தாலும், ஆண்டவர் அவர்களை தன்னேடு ஞானத்தினல் சேர்க்கிறார்; ஏனென்றால், அவர்கள் ஞானம்கூட ஆண்டவரிடமிருந்துவருகிறது. ஆண்டவர் தேவர்களோடு நன்மையினல் தானே சேருகிறாரென்றும், தேவர்கள் தங்கள் முறையில் ஆண்டவருடன் உண்மையினல் சேருகிறாரென்றும் சொல்லப்பட்டால் அதேவாகிறது; ஏனென்றால், எல்லா நன்மையும் அன்பைச்சேர்ந்தது, எல்லா உண்மையும் ஞானத்தைச்சேர்ந்தது. (3)ஆனல், இந்த பரஸ்பர ஐக்கியமானது, விளக்கமின்றி சிலர்தான் அறிந்துகொள்ளக்கூடிய இரகசியமாயிருக்கிறதினல், கிரகித்தலுக்கு பொருந்தியிருக்கிற பொருள்களால் கூடியவரையில் நான் அதை தெளிவாக்குகிறேன். பதிபசுபாச விளக்கம் எனும் நூலில் (பி. 404,405) அன்பு ஞானத்தோடு எப்படிதானே சேருகிறது அதாவது,உண்மையினிடத்து ஆசை உண்டாகிறதென்று தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற ஆசையினலும், உண்மை உணர்ச்சி உண்டாகிற விவேகத்தின் பொருட்டு ஆசையினலும், சிந்தனை உண்டாகிற, தெரிந்துகொண்டு விவேகத்துடன் அறிந்துகொள்ளப்பட்டதை பார்க்க கொள்ளும் ஆசையினலும், அப்படி சேருகிறதென்று மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த எல்லா ஆசைகளிலும் ஆண்டவர் பாய்கின்றார், ஏனென்றால், அவைகள் ஒவ்வொருவனுடைய உயிரின் ஆசையிலிருந்து உற்பத்தியாகப்பட்டவைகளாயிருக்கின்றன; தேவர்கள் அந்த பெருக்கை தத்துவபோதத்திலும் சிந்தனையிலும் பெற்றுக்கொள்ளுகிறார்கள்; ஏனென்றால், அந்தபெருக்கானது ஆசைகளிலல்லாமல் இவைகளில் அவர்
(4) களுக்கு பார்க்கக்கூடியதாகிறது. இப்படியிருக்கையில், ஆண்டவரிடமிருந்துவருகிற ஆசைகளிலிருந்து உண்டானபோதிலும், அறிவுகளும் சிந்தனைகளும் அவர்களுடைய சொந்தமானதாக தேவர்களுக்கு தோன்றுகிறபடியினல், ஆண்டவர் அவர்களை தன்னேடு சேர்த்துகொண்டபோதிலும், தேவர்கள் ஆண்டவரோடு

பரஸ்பரமாய் தாங்களே சேர்ந்துக்கொள்ளுகிறார்களென்கிற தோற்றமிருக்கிறது; ஏனென்றால், அன்புக்குச்சேர்ந்த ஆசை, அவர்கள் ஆன்மாவானபடியினால், ஆசையே உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் விளைவிக்கிறது; ஆசையில்லாமல் எந்த பொருளையும் கிரகிக்கவும் நினைக்கவும் யாராலுமுடியாது. ஒவ்வொருவனும் ஆசைக்குதக்கபடி கிரகித்து நினைக்கிறான். ஆதலால், ஆண்டவரோடு தேவர்களுடைய பரஸ்பர ஐக்கியம் தேவர்களிட மிருந்தல்ல வென்றும், ஆனால் அவர்களிடமிருந்து வருவதுபோல் மாத்திரம் தோன்றுகிறதென்றும் விசதமாகிறது. திருச்சபையோடு ஆண்டவருடைய ஐக்கியமும், சுவர்க்கத்துக்கடுத்ததும், பரமார்த்தமானதுமாகிய விவாகம் என்று சொல்லப்படும் ஆண்டவரோடு திருச்சபையின் ஐக்கியமும்கூட இவ்விதமானதாயிருக்கிறது.

29. பரமார்த்த உலகத்தில் எல்லா ஐக்கியமும் நிரீட்சணத்தால் சித்தியாக்கப்படுகிறது. அங்கே எவனாவது ஒருவன் மற்றவனோடு பேசும்பொருட்டு, ஆசைகொண்டு அவனை நினைத்துக் கொண்டிருந்தால், மற்றவன் உடனே எதிரில் வருகிறான். அவர்கள் ஒருவரை ஒருவர் முகத்துக்குமுகம் எதிராய் பார்க்கிறார்கள்; எவனாவது ஒருவன் மற்றவனை அன்பின் பிரியத்தினால் நினைத்து கொண்டிருந்தால், அப்படியே நடக்கிறது; ஆனால் இந்த நேசத்தால், ஐக்கியம் சித்தியாக்கப்படுகிறது; ஆனால் மற்றதால், அபிமுகம் மட்டும்கிடைக்கிறது. பரமார்த்த உலகத்திலிருப்பதெல்லாம் பரமார்த்தமாயிருக்கிறதென்கிற காரணத்தினால், அந்த உலகத்துக்கு இதுவிசேஷமானதாயிருக்கிறது; எல்லாம் ஸ்தூலமாயிருக்கிற ஜடலோகத்தில் அதுவேறுவிதமாயிருக்கிறது. ஸ்தூலலோகத்தில் மனிதர்கள் விஷயத்தில் அவர்களினுடைய ஆன்மாவின் நேசங்களிலும் சிந்தனைகளிலும் அதே சம்பவிக்கிறது; ஆனால், பரமார்த்த உலகத்தில் இடங்கள் தோற்றங்களாக மாத்திரமிருக்கையில், ஸ்தூல லோகத்தில் இடங்களிருக்கிறபடியினால், பரமார்த்த (2) உலகத்தில் ஒவ்வொருவனுடைய ஆன்மாவின் சிந்தனையில் ஏற்படுவது நிஜமாய் சித்தியாக்கப்படுகிறது. தேவர்களோடு ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவரோடு தேவர்களின் வெளிப்

படையான பரஸ்பர ஐக்கியமும், எப்படி சித்தியர்க்கப்படுகிற தென்று தெரிந்திருக்கும்படி இது சொல்லப்பட்டிருக்கிறது; ஏனென்றால்; நேசங்களுக்கும் நெற்றியானது அன்பிற்கும், அவன் கண்களானது ஞானத்துக்கும் அதின் அறிவுகளுக்கும், அனுவயப்படுகிறதென்கிற காரணத்தினால் எல்லா தேவர்களும் முகத்தை ஆண்டவர் பக்கம் திருப்புகிறார்கள்; ஆண்டவர் நெற்றியினிடத்து அவர்களைப்பார்க்கிறார். தேவர்கள் ஆண்டவரை கண்களால் பார்க்கிறார்கள். அப்படியிருந்தாலும் தேவர்கள் தாங்களே ஆண்டவரிடம் முகத்தை திருப்புகிறதில்லை. ஆனால் ஆண்டவர் அவர்களை தன்னிடமே திருப்புகிறார்; அவர்களுடைய உயிரின் அன்பிற்குள்ளே பெருகுவதினால் இதை அவர்செய்கிறார்; அதன் மூலமாய் அறிவுகளிலும் சிந்தனைகளிலும் அவர் பிரவேசித்து, அவ்வித (3) மாக அவர்களை திருப்புகிறார். சிந்தனைகளுக்கும், சிந்தனைகளிலிருந்து, அன்பிலிருந்துவரும் அன்புக்கும் அவ்வித சுற்று, மானிடமனதில் எல்லாவற்றிலுமிருக்கிறது; அந்த சுற்றை உயிரின் சுற்று என்று சொல்லலாம். இந்த விஷயங்களைப்பற்றி, **பதி பசுபாச விளக்கமெனும்** நூலில் பின்வருபவை போன்ற சிலவற்றைக்கூட பார்க்கலாம்:— தேவர்கள் முகத்தை **சூரியனாக** ஆண்டவரிடம் இடைவிடாமல் திருப்புகிறார்கள் (பி. 129-134). தேவர்களின் மனது, சரீரம் எனும் இரண்டின் உள்ளானவைகள், **சூரியனாக** ஆண்டவரிடம் அம்மாதிரியே திருப்பப்படுகின்றன (பி. 135-139). எவ்வித குணமுள்ள ஒவ்வொரு ஆன்மாவும் தன்னிடம் ஆளும் அன்பிற்கு அம்மாதிரியே தானே திரும்பிக்கொள்ளுகிறது (பி. 140-145). அன்பானது ஞானத்துடன்தானே சேர்ந்துகொண்டு, ஞானத்தை பரஸ்பரமாய் சேர்க்கப்படசெய்கிறது (பி. 410-412). தேவர்கள் ஆண்டவரிலிருக்கிறார்கள், ஆண்டவர் அவர்களிலிருக்கிறார்; தேவர்கள் பெற்றுக்கொள்ளப்பட்டவர்களானபடியினால், ஆண்டவர் மாத்திரம் சுவர்க்கமாயிருக்கிறார் (பி. 113-118).

30. ஸ்தூல லோகத்தில் **எம்பிரானது** சுவர்க்கம் திருச்சபை என்று சொல்லப்படுகிறது; இந்த சுவர்க்கத்து தேவன்,

**எம்பிரானோடு** ஐக்கியப்பட்ட திருச்சபையின் மனிதனாயிருக்கிறான்; அவன் உலகத்தை விட்டுப் போனபிறகு, சூக்கும சுவர்க்கத்து தேவனாகக்கூட ஆகிறான். தேவர்கள் சுவர்க்கத்தைப்பற்றி கூறியிருக்கப்பட்டவைகள் திருச்சபை என்று சொல்லப்பட்டமானிட சுவர்க்கத்தைப் பற்றியும், அம்மாதிரியே அறிந்துகொள்ளப்பட வேண்டுமென்று, இதிலிருந்து விசதமாகிறது. மனிதனிடத்தில் சுவர்க்கமாகிற, ஆண்டவரோடு பரஸ்பர ஐக்கியப்படுதலென்பது, பின்வரும் வார்த்தைகளால் ஆண்டவரால் வெளியிடப்பட்டிருக்கிறது: "என்னில் நிலைத்திருங்கள், நான் உங்களில் நிலைத்திருப்பேன். ஒருவன் என்னிலும், நான் அவனிலும் நிலைத்திருந்தால் அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான். என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது (யோவான் XV. 4, 5)."

31. ஆண்டவரானவர் அங்கிருக்கும் எல்லாரோடும் பொதுப்பட சுவர்க்கமாகமட்டு மிருக்கிறதல்லாமல், அங்கிருக்கும் ஒவ்வொருவரோடும் பிரத்தியேகமாய் அப்படி யிருக்கிறாரென்று இவைகளிருந்து விசதமாகும்; ஏனென்றால் ஒவ்வொரு வானவனும், எல்லாவற்றிலும் சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாயிருக்கிறான்; **சுவர்க்கமும் நரகமும்** என்னும் நூலில் பார்க்கப்படுகிறபடி, பொதுப்பட சுவர்க்கமானது எவ்வளவு தேவர்களிருக்கிறார்களோ, அவ்வளவு **சுவர்க்கங்களால்** அமைந்திருக்கிறது (பி. 51-58). இது அப்படி யிருக்கிறபடியினால், ஆண்டவர் தேவர்கள் மத்தியில் சுவர்க்கத்தில் இருக்கிறாரென்றும், அல்லது ஒரு அரசன் தன்னிட இராச்சியத்தில் இருப்பதுபோல் அவர் அவர்களோடு யிருக்கிறாரென்றும், அநேகர் முதலில் நினைக்கிற பிழையை யாரும் வளர்க்கவிடவேண்டாம். தோற்றம் விஷயத்தில் அங்கிருக்கும் **சூரியனில்,** **அவர்** அவர்களுக்கு மேலேயிருக்கிறார்; ஆனால் அன்பு ஞானங்களுடைய அவர்கள் வாழ்வு விஷயத்தில், **அவர்** அவர்களிலிருக்கிறார்.

32. II. மனிதனானவன் சிருட்டிமுதல் ஆண்டவரோடு அதிகம் அதிகமாய் நெருங்க சேர்க்கப்பட கூடியவனா யிருக்கிறான். பதிபசுபாச

**விளக்கம்** எனும் நூலில் மூன்ருவது பாகத்திலும், முக்கியமாய் பின்வருவதிலும் **படிகளைப்** பற்றி காண்பிக்கப்பட்டதிலிருந்து இது விசதமாகும்:—சிருட்டிமுதல் மனிதனில் மூன்று பிரத்தியேக படிகள் அல்லது உன்னதப்படிகள் இருக்கின்றன (பி. 230-235). இந்த மூன்று படிகளும் பிறந்தது முதல் ஒவ்வொரு மனிதனிலும் இருக்கின்றன. அவைகள் திறக்கப்பட்டபோது, மனிதன் ஆண்டவரிலிருக்கிருன், ஆண்டவர் அவனிலிருக்கிருர் (பி. 236–241). எல்லா பக்குவங்களும் படிகளோடும், அவைகளுக்கு தக்கபடியும் அதிகரித்து ஏறுகின்றன (பி. 199-204). சிருட்டிமுதல் மனிதனவன், இந்த படிகளால் ஆண்டவரோடு அதிகம் அதிகமாய் நெருங்கசேர்க்கப்படக்கூடியவனுயிருக்கிருனென்று, அதிலிருந்து (2) விசதமாகும். ஆனுல் படிகள் என்பவை என்னவென்றும், அவைகள் பிரத்தியேகமான அல்லது உன்னதப் படிகள் என்றும் தொடர்ச்சியான அல்லது அகலப்படிகளென்றும் இருமடங்கான விதமாகயிருக்கிறதென்றும், மேலும் அவைகளின் வித்தியாசம் என்னவென்றும் நன்ருய்தெரிந்திருப்பது அவசியமானது; இன்னமும், ஒவ்வொருமனிதனும் சிருட்டி முதலும், அதிலிருந்து பிறந்ததுமுதலும், மூன்று பிரத்தியேகமான படிகளை அல்லது உன்னதப்படிகளை உடைத்தாயிருக்கிருனென்றும், மனிதன் பிறந்தபோது, ஸ்தூலமென்று சொல்லப்பட்ட முதல் படியில் வந்து, அவன் பகுத்தறிவுள்ளவனுகிற வரையில்கூட தொடர்ச்சியினுல், தனக்குள்ளேயே இந்த படியை அதிகரிக்கலாமென்றும், தெய்வ உண்மைகளாயிருக்கிற ஒழுங்கைக்குறித்த சூக்கும சுவர்க்கத்து சட்டங்களுக்கு தக்கபடி அவன் வாழ்ந்தால், சூக்கும சுவர்க்க சம்பந்தமானதென்று சொல்லப்படுகிற இரண்டாவது படிக்கு அவன் வருகிருனென்றும், தெய்வ நன்மைகளாயிருக்கிற ஒழுங்கைக் குறித்த அதிசூக்கும சுவர்க்கசம்பந்தமான சட்டங்களுக்கு தக்கபடி அவன் வாழ்ந்தால், அதிசூக்கும சுவர்க்க சம்பந்தமானதென்று சொல்லப்படுகிற மூன்ருவது படிக்குக்கூட அவன் வரக் (3)கூடுமென்றும் தெரிந்துகொள்வதும் அவசியமானது. இந்தபடிகள், உலகத்தில் தன் வாழ்க்கைக்கு தக்கபடி ஆண்டவரால் மனிதனில் நிஜமாய் திறக்கப் படுகின்றன: ஆனுல் உலகத்தை அவன்

விட்டுவிடுகிறவரையில், தெரியும்படியாயும் இந்திரியகிராகியமாயும் திறக்கப்படுகிறதில்லை; அவைகள் திறக்கப்பட்டு, பின்னிட்டு பூரணமாக்கப் படுகிறதற்கு தக்கப்படி, மனிதன் ஆண்டவரோடு, அதிகமாய் நெருங்க சேர்க்கப்படுகிறான். அதிக சமீபத்தில் வருவதால், இந்த ஐக்கியம் எப்பொழுதும் அதிகரித்துக் கொண்டே யிருக்கலாம். தேவர்கள் விஷயத்தில் அது எப்பொழுதும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது; அப்படியிருந்தாலும், ஆண்டவர் முடிவற்றவராயும், தேவன் முடிவுள்ளவனாகவு மிருப்பதாலும், முடிவற்றதற்கும் முடிவுள்ளதற்கும் எந்தஅளவும் இல்லாதபடியினாலும், ஒருவானவன் ஆண்டவரிட இச்சாசத்தி யுடையவும், ஞானசத்தியுடையவும் முதல்படியை அடையவும் முடியாது அல்லது தொடவும்கூட முடியாது. மனிதனுடைய நிலைமையையும், அவனுடைய உன்னதத்தையும், ஆண்டவரை சமீபித்தலையும் இந்த படிகளைப்பற்றிய அறிவு இருந்தாலொழிய எவனும் அறிந்துக்கொள்ள முடியாதாகையால் பதிபசுபாசவிளக்கம் எனும் நூலில் அவைகள் பிரத்தியேகமாய் யோசிக்கப்பட்டிருக்கிறது (பி. 173-281). அதைப்பார்க்கவும்.

33. ஒரு மனிதன் ஆண்டவரோடு அதிக சமீபமாய் எப்படி சேர்க்கப்படக் கூடுமென்றும், பிறகு அந்த ஐக்கியம் எப்படி சமீபம் சமீபமாய் இருப்பதாக தோன்றுகிறதென்றும் இப்பொழுது சுருக்கமாய் சொல்லப்படும். இந்திரியகிராகியமான அறிவினால் மாத்திரம் அல்லாமலும், பகுத்தறியும் விவேகத்தினால் மாத்திரம் அல்லாமலும், ஞானத்தினால் மாத்திரம்கூட அல்லாமலும், ஆனால் அவைகளோடு சேர்ந்த வாழ்க்கையினால், **ஒருமனிதன் அதிகம் அதிகமாய் நெருங்க ஆண்டவரோடு சேர்க்கப்படுகிறான்.** மனிதனுடைய உயிர் அவனுடைய அன்பு, அன்பு பலவிதமானதாயிருக்கிறது. பொதுப்பட, தீமையினிடத்து அன்பும், நன்மையினிடத்து அன்புமிருக்கிறது. தீமையினிடத்து அன்பு பாராட்டல் என்பது விபசாரத்தையும், சலஞ்சாதித்தலையும், மோசத்தையும் தெய்வதூஷணையையும் மற்றவர்களுடையபொருள்களைப் பரித்துக் கொள்ளுதலையும் நேசித்தலாயிருக்கிறது; தீமையினிடத்து அன்பு

இவைகளை நினைத்தலிலும், அவைகளை செய்தலிலும், இன்பத்தையும் மகிழ்ச்சியையும் காண்கிறது. ஆசைகளாயிருக்கிற இந்த அன்பின் உற்பவங்கள், தானே தீர்மானித்துகொண்ட தீமைகள் எவ்வளவோ அவ்வளவு இருக்கின்றன. இந்த அன்பின் உணர்ச்சிகளும் சிந்தனைகளும், தீமைகளை உபகரித்து அவைகளை நிலைப்படுத்துகிற பொய்கள் எவ்வளவுஇருக்கின்றனவோ, அவ்வளவு இருக்கின்றன. புத்தியானது சித்தத்துடன் ஒன்றுகிறது போல, இந்தபொய்கள் தீமைகளோடு ஒன்றுகின்றன; ஒன்று மற்றொன்றுக்கு சேர்ந்திருக்(2)கிறதால் அவைகள் ஒன்று மற்றொன்றிலிருந்து பிரிக்கப்படுகிறதில்லை. இப்படியிருக்கையில் ஒவ்வொருவனுடைய உயிரின் அன்பிற்குள்ளும், அதன் நேசங்கள் மூலமாய் உணர்ச்சிகளிலும் சிந்தனைகளிலும் ஆண்டவர் பாய்கிறபடியினாலும், அதற்கு எதிரிடையாய் மேல் சொல்லியபடி பாயாதபடியினாலும், துராசைகளாயிருக்கிற தீமையினிடத்து ஆசை, தன்னுடைய நேசங்களோடு நீக்கப்படுகிறதற்கு தக்கபடி மாத்திரம், அவர் நெருங்க தானே சேரக்கூடுமென்று தொடருகிறது. இவைகள் ஸ்தூலமனிதனில் இருக்கிறபடியினாலும், மனிதனானவன் தன்னிட ஸ்தூல தன்மையில் செய்கிறது எதையும் தானே செய்கிறதாக உணருகிறபடியினாலும், மனிதன் அந்த அன்பின் தீமைகளை தன்னிடமே இருந்து போல நீக்கவேண்டியது; அப்பொழுது, அவன் அவைகளை நீக்குகிற அளவு, ஆண்டவர் அதிக சமீபத்தில் வந்து அவனோடு தானே சேருகிறார். மனிதனே கதவுகளை சாற்றிவைத்துக்கொண்டு, அவைகள் திறக்கப்படாதபடி வெளியிலிருந்து அமுக்கிக்கொண்டும், தள்ளிக்கொண்டுமிருக்கிறவரையில், துராசைகள் தங்கள் இன்பங்களோடு, ஆண்டவர் முன்பாக வழியை அடைத்து கதவுகளை மூடுகின்றனவென்றும், ஆண்டவரால் அவைகள் வெளியில் தள்ளப்பட முடியாதென்றும், விவேகத்தினால் ஒவ்வொருவனும் அறிந்துகொள்ளலாம். வெளிப்படுத்தின விசேஷத்தில் கூறியிருக்கும் ஆண்டவரின் வார்த்தைகளால் மனிதன் தானே அவைகளை திறக்கவேண்டுமென்பது விசதமாகிறது :—

"இதோ வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்; ஒருவன் என் சத்தத்தைக்கேட்டு கதவை திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போசனம் பண்ணுவேன், அவனும் என்னோடே (3)போசனம் பண்ணுவான்" (III-20). ஒருவன் தீமைகளை பேயாட்டமானதென்றும், ஆண்டவரின் உட்பிரவேசத்துக்கு விகாதமானதென்றும் ஒழிக்கிறவரையில், அவன் அதிகம்அதிகமாய் ஆண்டவரோடு நெருங்க சேர்க்கப்படுகிறான் என்றும், அவ்வளவு அநேக இருளானதும், உக்கிரமுமான பேய்களைப்போல் அவைகளை அருவருக்கிறவன், எல்லாறிலும் அதிகமாக சமீபமாய் சேர்க்கப்படுகிறானென்றும் இதிலிருந்து விசதமாகிறது; ஏனென்றால், தீமையும் பேயும் ஒன்றுகின்றன, தீமையின் பொய்யும் சாத்தானும் ஒன்றுகின்றன. ஏனென்றால், ஆண்டவரின் உட்பெருக்கு நன்மையினிடத்து அன்பிலும் அதன் நேசங்களிலும், இந்நேசங்கள் மூலமாய் மனிதன் இருக்கப்பட்ட நன்மையிலிருந்து அவைகளை உண்மைகளாக்குகிறவைகளை எல்லாம் அடைகிற உணர்ச்சிகளிலும் சிந்தனைகளிலும் பாய்கிறதுபோல, நரகத்து, அதாவது பேயின்பெருக்கு தீமையினிடத்து அன்பிலும், துராசைகளாயிருக்கிற அதன் நேசங்களிலும், இவைகளின் மூலமாய், மனிதன் இருக்கப்பட்ட தீமையிலிருந்து, அவைகளை பொய்களாக்குகிறவைகளை எல்லாம் அடைகிற உணர்ச்சிகளிலும் சிந்தனைகளிலும் பாய் (4) கிறது. அந்த ஐக்கியம் எப்படி அதிக சமீபமாய் தோன்றுகிறது: ஸ்தூலமனிதனிடத்திலிருக்கும் தீமைகள் ஒழிக்கப்பட்டு, தள்ளப்படுவதினால் எவ்வளவு முழுதும் நீக்கப் படுகிறதோ, அவ்வளவு அதிகம் சமீபமாய் மனிதன் ஆண்டவரோடு சேர்க்கப்படுகிறான். ஆண்டவராகவே இருக்கிற அன்பும் ஞானமும் இடவரைக்குட்படாதபடியினால்—அன்பைச் சேர்ந்த நேசமும், ஞானத்தை சேர்ந்த சிந்தனையும் இடத்துக்கு சம்பந்தப் படாதபடியினால்—அன்பு ஞானங்களால் உண்டாகும் சேர்க்கைக்கு தக்கபடி, ஆண்டவர் அதிக சமீபத்திலிருப்பதாக தோன்றுகிறார். இதற்கு எதிராய் அன்பு ஞானங்களை ஒழித்தலுக்கு தக்கபடி அதிக தூரத்திலிருப்பதாக தோன்றுகிறார். விண்ணுலகத்தில் இடமென்பது இல்லை. ஆனால் அங்கே தூரங்களும், தூரங்களே பரமார்த்தமா

யிருக்கிற அரிமுகமும், நேசங்களின் ஒப்பனைக்கும், ஒவ்வாமைக்கும் தக்கபடி தோற்றங்களாயிருக்கின்றன. ஏனென்ருல், முன் சொல்லியபடி தாங்களே பரமார்த்தமான அன்பைச் சேர்ந்த நேசங்களும், ஞானத்தைச்சேர்ந்த சிந்தனைகளும் இடவரைக்குட்பட்டதல்ல. இந்தவிஷயத்தைப்பற்றி **பதிபசுபாசவிளக்கமெனும்** நூலில் காண்பித்ததை பார்க்கவும் (பி. 7-10, 69-72, வேறு இடங்களிலும்). ஆண்டவரின் பின் வரும் வார்த்தைகளால், தீமைகள் நீக்கப்பட்ட மனிதனுடன் ஆண்டவர் ஐக்கியம் என்பது கருதப்படுகிறது :—

(5) **"இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் தேவனை தரிசிப்பார்கள்"** (மத்தே V. 8): **இவைகளாலும் என் கற்பனைகளைப் பெற்றுக்கொண்டு அவைகளைக் கைக்கொள்ளுகிறவன்............நாங்கள் அவனிடத்தில் வந்து அவனோடு வாசம்பண்ணுவோம்** (யோவான், XIV. 21, 23). கற்பனைகளைப் பெற்றுக்கொள்ளல் என்பது தெரிந்துகொள்ளல், அவைகளைக்கைக்கொள்ளல் என்பது அன்பு பாராட்டல்; ஏனென்ருல், **" என் கற்பனைகளை கைக்கொள்ளுகிறவனெவனோ அவன்தான் என்பேரில் அன்பு பாராட்டுகிருன்"** என்று கூட அங்கே கூறப்பட்டிருக்கிறது.

34. III. **ஒரு மனிதனவன் ஆண்டவரோடு எவ்வளவு அதிகம் நெருங்க சேர்க்கப்படுகிருனோ, அவ்வளவு ஞானமுள்ளவனுகிருன்.** மனிதனுக்கு சிருட்டி முதல், அதிலிருந்து பிறந்ததுமுதல் உயிரின் மூன்றுபடிகளிருக்கிறபடியினுல் (மேலே பி. 32 பார்க்கவும்), அவனிடத்தில் மூக்கியமாய் ஞானத்தின் மூன்று அந்தஸ்துகளிருக்கின்றன. ஐக்கியத்தை அனுசரித்து மனிதனிடத்தில், திறக்கப்படுகிறபடிகள் இவைகள்தான்; அன்பு ஐக்கியமாகவேயிருக்கிறபடியினுல், அந்த அன்பின்படி அவைகள் திறக்கப்படுகின்றன: ஆனுல் அந்தஸ்துகளுக்கு தக்கப்படியிருக்கும் அன்பின் ஏற்றத்தைபற்றி, மனிதனுக்கு தெளிவற்ற உணர்ச்சிமாத்திரம்யிருக்கிறது; ஆயினும் ஞானத்தின் ஏற்றம், ஞானம் என்னவென்று அறிந்துகொண்டு பார்க்கிறவர்களால், தெளிவாய் அறிந்துகொள்

ளப்படுகிறது. அன்பானது நேசங்கள் மூலமாய், உணர்ச்சிகளிலும் சிந்தனைகளிலும் பிரவேசிக்கிறபடியினாலும், சரீரத்தின் புறம்பான பார்வைக்கு அன்னுவயப்படுகிற மனதின் உட்பார்வைக்குள் இவைகள் நிலைகொள்ளுகிறபடியினாலும், ஞானத்தின் அந்தஸ்துகள் பார்க்கப்படுகின்றன. இதனால்தான் ஞானத்தை விளைவிக்கிற அன்பின் நேசம் தோன்றாமல், ஞானம் தோன்றுகிறது. மனிதனால் நிஜமாய் செய்யப்பட்ட எல்லா பொருள்களுக்கும் அதே மாதிரியிருக்கிறது. சரீரமானது அவைகளை எப்படி செய்கிறது என்பது பார்க்கப்படுகிறது; ஆனால், ஆன்மா எப்படி செய்கிறதென்பது பார்க்கப்படுகிறதில்லை; அப்படியேகூட, மனிதன் எப்படி ஆலோசிக்கிறான், உணருகிறான், நினைக்கிறான் என்பது பார்க்கப்படுகிறது; நன்மை உண்மைகளது நேசமாயிருக்கிற அவர்களுடைய ஆன்மா, ஆலோசனையையும், உணர்ச்சியையும் சிந்தனையையும் விளைவிக்கும்விதம் பார்க்கப்படுகிறதில்லை. ஸ்தூலமானதென்றும், சூக்குமமானதென்றும், அதிசூக்குமமானதென்றும் ஞானத்தின் மூன்று அந்தஸ்துகளிருக்கின்றன. மனிதனானவன் உலகத்திலிருக்கும்போது ஞானத்தின் ஸ்தூலபடியிருலிருக்கிறான். இந்தபடியானது, அவனில் அதன் உயர்ந்த நுனிக்கு அப்பொழுது பூரணமாக்கப்படலாம் என்றாலும், சூக்குமமானபடி ஸ்தூலபடியுடன் தொடர்ச்சியாய் சேர்க்கப்படாமல், அதனுடன் அன்னுவயங்களால் சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், அது சூக்குமமானபடிக்குள் பிரவேசிக்கமுடியாது. இறந்தபிறகு மனிதனானவன் ஞானத்தின் சூக்குமமானபடியிலிருக்கிறான்; இந்தபடிகூட, உயர்ந்த நுனிவரையில் பூரணமாக்கப்படக்கூடியதாயிருக்கிறது. அப்படியிருந்தாலும், அதிசூக்குமமான படியானது சூக்குமமானபடியுடன் தொடர்ச்சியாய் சேர்க்கப்படாமல், ஆனால் அதனுடன் அன்னுவயங்களால் சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், அது ஞானத்தின் அதிசூக்குமமானபடிக்குள் பிரவேசிக்கமுடியாது. இதனால், ஞானமானது மும்மடங்கான அளவில் உயர்த்தப்

(2) (line at "யையும் விளைவிக்கும்விதம்")

(3) படக்கூடுமென்றும், ஒவ்வொருபடியிலும் சாதாரணமான அளவில் உயர்ந்த நுனிக்கு பூரணப்படுத்தப்படலாமென்றும் விசதமாகலாம். இந்தப்படிகளின் உயர்ச்சியின் அந்தஸ்துகளையும், அவைகளை

பூரணபடுத்தலையும் கிரகிக்கிறவன், வாக்குக்கு எட்டாதது என்று தேவர்கள் ஞானத்தைக்குறித்து கூறப்பட்டதை கொஞ்சமட்டும் அறிந்துகொள்ளக்கூடும்; மேலும், தங்கள் ஞானத்திலிருந்து வருகிற தேவர்களின் சிந்தனையில் உள்ள ஆயிரம் எண்ணங்கள், தங்கள் ஞானத்திலிருந்து வருகிற மனிதர்களின் சிந்தனையில் ஒற்றையான எண்ணத்தைமாத்திரம் காண்பிக்கக் கூடியதாய் அவ்வளவு வாக்குக்கு எட்டாததாயிருக்கிறது; தேவர்கள் சிந்தனையிலிருக்கும் தொள்ளாயிரத்து தொண்ணூத்தி ஒன்பது எண்ணங்கள், இயல்பிற்கு மேற்பட்டவைகளாதலால் உள்ளே பிரவேசிக்க முடியவில்லை. இது அப்படியிருக்கிறதென்று அடிக்கடி நேரிட்ட உயிருள்ள அனுபவத்தால் தெரிந்துகொள்ள எனக்கு அருள்செய்யப்பட்டது. ஆனால் மேலே கூறியபடி ஆண்டவர்மாத்திரம் சூக்குமமான படியையும், அதிசூக்கும படியையும் திறக்கிற படியினாலும், அதுவும் அவராலேயே ஞானமுள்ளவர்களாயிருக்கப் பட்டவர்களிடத்தில் மாத்திரம் அம்மாதிரி செய்யப்படுகிறதினாலும், தீமையாயிருக்கிற பேயை தங்களிடமிருந்தே தள்ளுகிறவர்கள் ஆண்டவரிடமிருந்து, ஞானிகளானபடியினாலும், ஆண்டவரோடு ஐக்கியப்படுவதினாலும், அந்த ஐக்கியத்திற்கு தக்கபடியும் ஒழிய, தேவர்களின் வாக்குக்கு எட்டாத ஞானத்தை யாரும் அடையமுடியாது.

35. ஆனால், ஞானமானது அன்போடு சேர்க்கப்பட்டாலொழிய, அநேகவிஷயங்களை தெரிந்து, அவைகளைக் கொஞ்சம் வெளிச்சத்தில்பார்த்து, அவைகளைப்பற்றி புத்திசாலித்தனமாய் சம்பாஷிக்க சக்தியுள்ளவனாயிருத்தல், யாரிடத்திலும் ஞானமென்று யாரும் நம்பக்கூடாது; ஏனென்றால், அன்பானது அதனுடைய ஆசைகளால் ஞானத்தை விளைவிக்கிறது. அது அன்புடன் சேர்க்கப்படாவிட்டால், காற்றில் மறைந்துபோகிற உற்கை போலவும், கீழேவிழும் நட்சத்திரம்போலவும், இருக்கிறது; ஆனால் அன்புடன் சேர்ந்த ஞானம், சூரியனுடைய நிலைகொள்ளும் ஒளிபோலவும், ஸ்திரமான நட்சத்திரத்தைப்போலவும் இருக்

கிறது. தீமைபொய்களின் துராசைபேய் கூட்டங்களை வெறுக்கிற அளவு, ஒரு மனிதனுக்கு ஞானத்தினிடத்து அன்பு இருக்கிறது.

36. உணர்ச்சிக்கு எட்டும் ஞானம், அதனிடத்துகொண்ட ஆசையிலிருந்து உண்மையை, முக்கியமாய் ஆத்தும சம்பந்தமான உண்மையை, உணர்த்தலாயிருக்கிறது; ஏனென்றால்; ஜனசமுக உண்மையும், சன்மார்க்க உண்மையும், பரமார்த்த உண்மையும் இருக்கின்றன. பரமார்த்த உண்மையின்பேரில் பிரியங்கொண்டு, அந்த உண்மையை அறிந்தவர்கள், சன்மார்க்க உண்மையையும் ஜனசமுக உண்மையையும் கூட அறிந்தவர்களாயிருக்கிறார்கள்; ஏனென்றால், பரமாத்த உண்மையினிடத்துகொள்ளும் ஆசை, இந்த உணர்ச்சிகளுக்கெல்லாம் ஆன்மாவாயிருக்கிறது. நான் சிலசமயங்களில் தேவர்களோடு ஞானத்தைப்பற்றி பேசியிருக்கிறேன்; ஆண்டவர் ஞானமே ஆனபடியினால், ஞானமானது ஆண்டவருடன் ஐக்கியப்படுதலென்றும், தன்னிடமேயிருந்து நரகத்தைதள்ளுகிறவன், அவன்தள்ளுகிற அளவு, அந்த ஐக்கியத்தை அடைகிறானென்றும், அவர்கள் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தை ஒரு திவ்வியமானதும், அதிகமாய் அலங்கரிக்கப்பட்டதுமானதும், பன்னிரண்டுபடிகளால் ஏறக்கூடியதுமான ராஜமாளிகையைப்போலிருப்பதாக தங்களுக்குள்ளேயே சாயல்காட்டுகிறார்களென்றும், ஆண்டவர் அருளால், அவரோடு ஐக்கியப்பட்டாலொழிய முதல்படியை எவனும் எட்டுகிறதில்லையென்றும் அந்த ஐக்கியத்திற்குதக்கபடி ஒவ்வொருவனும், மேலே போகிறானென்றும், அவன் மேலே ஏறுகையில், எவனும் தன்னிடமேயிருந்து ஞானியாகாமல், ஆண்டவர் அருளால் அப்படியிருக்கிறானென்றும் அவன் அறிந்துகொள்ளுகிறானென்றும், மேலும், ஒரு மனிதனுக்கு தெரிந்திருக்கிற பொருள்களை, அவனுக்குதெரியாதவைகளோடு ஒப்பிட்டால், அவைகள் சிலதுளிகள் ஒரு பெரிய ஏரிக்கு ஒப்பிட்டதுபோலிருக்கிறதென்றும், அவர்கள் சொன்னார்கள். ஞான அரண்மனைக்கு இருக்கும் பன்னிரண்டுபடிகள், உண்மைகளோடு சேர்ந்த நன்மைகளையும் நன்மைகளோடு சேர்ந்த உண்மைகளையும் குறி காட்டுகின்றன.

37. IV. ஒரு மனிதன் ஆண்டவருடன் எவ்வளவு அதிக சமீபமாய் சேர்க்கப்படுகிருனே, அவ்வளவு அதிக சுகமுள்ளவனுகிருன். ஆண்டவருடன் ஐக்கியத்தின் பிரகாரம் உயிரினுடையவும் ஞானத்தினுடையவும் படிகளைப்பற்றியும், மேலே கூறியபடி (பி. 32, 34) சுகத்தின்படிகளைப் பற்றியும் அதையே சொல்லலாம்; ஏனென்ருல், சூக்குமமானதென்றும் அதிசூக்குமமானதென்றும் சொல்லப்பட்ட மனதின் மிக உயர்ந்தபடிகள் மனிதனில் திறக்கப்படுகிறபோது, ஆனந்தங்கள், அல்லது சுகங்களும் சந்தோஷங்களும் ஏறுகின்றன. இந்த உலகத்தில் அவன் வாழ்க்கைக்கு பிறகு இந்த படிகள் சதாகாலம் அதிகரிக்கின்றன.

38. தீமைக்குச்சேர்ந்த துராசைகளின் இன்பங்களில் இருக்கப்பட்ட எவனும், தேவர்கள் சுவர்க்கமிருக்கப்பட்ட நன்மையைச்சேர்ந்த ஆசைகளின் சந்தோஷங்களைப்பற்றி எதையும் தெரிந்துகொள்ளமுடியாது; ஏனென்ருல், இந்த சந்தோஷங்கள், உள்ளானவைகளில் ஒன்றுக்கொன்று முழுமையும் எதிரிடையாயிருக்கின்றன. அப்படியிருப்பதால், மேற்பாகத்தில் மாத்திரம் கொஞ்சமட்டும் பேதப்பட்டாலும், புறம்பானவைகளில் உள்ளுக்குள்ளாய் எதிரானதாயிருக்கின்றன. ஒவ்வொரு அன்புக்கும் அதன் சொந்த சந்தோஷங்களிருக்கின்றன; விபசாரம் செய்யவும், சலஞ்சாதிக்கவும், மோசம்செய்யவும், திருடவும், குரூரமாயிருக்கவும், பின்னும், மிகவும் அதிக துஷ்டர்களிடத்தில், திருச்சபையின் பரிசுத்தமான பொருள்களை நிந்திக்கவும், கடவுளுக்கு விரோதமாய் அவர்களின் விஷத்தை கொட்டவும், கொள்ளும் ஆசையைப்போன்ற தீமையினிடத்து அன்புகூட துராசைகளிலிருக்கப்பட்டவர்களோடு அவைகளை உடைத்தாயிருக்கின்றது. சுய அன்பிலிருந்து ஆளுகை செய்யகொள்ளும் அன்பு, இந்த சந்தோஷங்களுக்கு தலையூற்ருயிருக்கிறது; மனதின் உள்ளானவைகளை சூழ்ந்திருக்கிற துராசைகளிலிருந்து அவைகள் வருகின்றன. அவைகளிலிருந்து அவைகள் சரீரத்தில் பாய்ந்து, அங்கே தசைநார்களுக்கு இன்பம் தருகிற அசுத்தமானவைகளை தூண்டுகின்றன. இவ்விதமாக துராசைகளுக்குத்

தக்கபடி, மனதில் சந்தோஷத்திலிருந்து சரீரத்துக்கு இன்பம் (2) வருகிறது. இவ்விதமான துராசைகளிலிருக்கிறவர்களின் சரீர தசைநார்களை இன்பம் காட்டுகிற அசுத்தமானவைகள் என்னவென்றும், அவைகளின் குணம் என்னவென்றும் சூக்கும லோகத்தில் இறந்த பிறகு எவனும் தெரிந்துகொள்ளலாம்: பொதுப்பட, அவைகள் வெளிறினதாகவும், மலமுள்ளதாகவும், எரு நாற்றமுள்ளதாகவும், சிறுநீர் நாற்றமுள்ளதாகவும் இருக்கின்றன; ஏனென்றால், நரகங்கள் இவ்வித அசுத்தமான பொருள்களால் மிகுந்திருக்கின்றன. அவைகள் அன்னுவயங்களென்பதை **பதிபசுபாச விளக்க** மெனும் நூலில் (பி. 422,424) தெரிந்துகொள்ளலாம். ஆனால், அவைகள் இருக்கப்பட்டவர்கள் நரகத்தில் பிரவேசித்த பிறகு, இந்த அசுத்தமான இன்பங்கள் பயங்கரமான பொருள்களாக மாற்றப்படுகின்றன. இப்பொழுது பேசப்போகும், சுவர்க்கத்து சுகத்தின் சுபாவத்தை தெரிந்துகொள்ள உதவ, இவைகளெல்லாம் சொல்லப்பட்டன. ஒவ்வொருபொருளும் அதன் எதிரானதிலிருந்து அறிந்துகொள்ளப்படுகிறது.

39. சுவர்க்கத்து வாழ்வுகளும், மனோஹரங்களும், இன்பங்களும் இரம்மியந்தரும் தன்மைகளும், சுருங்கச்சொல்லில், சுவர்க்கத்து ஆனந்தங்கள் வார்த்தைகளால் விவரிக்கப்பட முடியாது. ஆனால் சுவர்க்கத்தில் அறிவுக்கு அவைகள் எட்டும்; ஏனென்றால், அறிவுக்குமாத்திரம் எட்டப்பட்டவைகள் விவரிக்கப்படமுடியாது; அது சிந்தனைகளின் பாவனைகளுக்கும் அதிலிருந்து வார்த்தைகளுக்கும் எட்டுகிறதில்லை; ஏனென்றால், புத்தி மாத்திரம் பார்க்கிறது. அது அன்பு அல்லது நன்மையைச்சேர்ந்தவைகளை யல்லாமல் ஞானம் அல்லது உண்மையைச் சேர்ந்தவைகளைப் பார்க்கிறது; ஆகையினால் அந்த ஆனந்தங்கள் வாக்குக்கு எட்டுகிறதில்லை; அப்படியிருந்தாலும், ஞானத்துடன் சமானமான அந்தஸ்த்தில் ஏறுகின்றன; அவைகளின் வேதங்கள் எல்லையற்றதாயிருக்கின்றன, மேலும் ஒவ்வொன்றும் சோல்லமுடியாத (2) தாயிருக்கின்றன. நான் இதைப்பற்றி கேட்டுமிருக்கிறேன். இதைப்பார்த்துமிருக்கிறேன். ஆனால் மனிதனனவன் தன்னிட

மிருந்தேபோலவும், அப்படியிருந்தும் ஆண்டவரிடமிருந்து, தீமையினிடத்தும் பொய்யினிடத்தும் கொள்ளும் அன்பின் துர்ஆசைகளை நீக்குகிறபோது, இந்த ஆனந்தங்கள் பிரவேசிக்கின்றன; ஏனென்றால், தீமை பொய்களிடத்து கொள்ளும் அன்பின் துராசைகளுக்கு எதிரானதாயிருக்கிற நன்மை உண்மைகளைச் சேர்ந்த ஆசைகளின் ஆனந்தங்களாக அவைகள் இருக்கின்றன. நன்மை உண்மைகளிடத்து கொள்ளும் அன்பின் ஆசைகளுடைய ஆனந்தங்கள் ஆண்டவரிடமிருந்து இவ்விதமாக, உள்ளுக்குள்ளானவைகளிலிருந்து ஆரம்பிக்கின்றன; அதிலிருந்து, அவைகள் தாங்களே தாழ்ந்த பொருள்களுக்கும், இறுதியானவைகளுக்கும் கூட பரவுகின்றன; இவ்விதமாக தேவனை நிறப்பி, அவனை முழுமையும் இன்பம்போல இருக்கச்செய்கின்றன. இவ்வித ஆனந்தங்கள், முடிவற்றவேற்றுமைகளுடன், நன்மை உண்மைகளைச்சேர்ந்த ஒவ்வொரு ஆசையிலும், முக்கியமாய், ஞானத்தின் ஆசையிலும்யிருக்கின்றன.

40. தீமைக்குச்சேர்ந்த துராசைகளின் இன்பங்களும், நன்மையைச்சேர்ந்த நேசங்களின் இன்பங்களும் ஒப்பிடப்படமுடியாது; ஏனென்றால், தீமையைச்சேர்ந்த துராசைகளின் இன்பங்களில், பேயானது உள்ளுக்குள்ளாயிருக்கிறது. நன்மையைச் சேர்ந்த நேசங்களின் இன்பங்களில், ஆண்டவர் உள்ளுக்குள்ளாயிருக்கிறார். ஓர் ஒப்பனைசெய்யவேண்டுமானால், தீமையைச்சேர்ந்த துராசைகளின் இன்பங்களை பாயாத நீரிலிருக்கும் தவளைகளுடையவும், துர்க்கந்தத்திலிருக்கும் பாம்புகளுடையவும் காமவிகாரமுள்ள இன்பங்களுக்கு ஒப்பிடலாம்; ஆனால், நன்மையைச்சேர்ந்த ஆசைகளின் இன்பங்களை, தோட்டங்களிலும் புஷ்பசயனங்களிலுமுள்ள மனதின் இன்பங்களுக்கு ஒப்பிடலாம்; ஏனென்றால், மண்டூகங்களையும் சர்ப்பங்களையும் இயக்கப்பட்டவைகள்போன்ற பொருள்கள், நரகங்களில் தீமையைச்சேர்ந்த துராசைகளில் இருக்கிறவர்களைகூட இயக்குகின்றன; தோட்டங்களிலும் புஷ்பசயனங்களிலும் உள்ள மனதை இயக்கப்பட்டவைகள்போன்ற பொருள்கள், சுவர்க்கங்களில் நன்மையைச்சேர்ந்த ஆசைகளிலிருக்கப்பட்

டவர்களேகூட இயக்குகின்றன; ஏனென்றால், மேலேகூறியபடி ஒத்துப்போகிற அசுத்தமானபொருள்கள் தீமையை இயக்குகின்றன, ஒத்துப்போகிற சுத்தமானபொருள்கள் நன்மையை இயக்குகின்றன.

41. எவனுகிலும் ஆண்டவரோடு எவ்வளவு அதிகமாய் நெருங்க சேர்க்கப்படுகிறானோ, அவ்வளவு அதிகமாய் சுகமுள்ளவனுகிறானென்று, இவைகளிலிருந்து விசதமாகும். ஆனால் இந்த சுகமானது உலகத்தில் அரிதாய் தானே காண்பித்துக்கொள்ளுகிறது; ஏனென்றால், அப்பொழுது மனிதன் ஸ்தூல நிலைமையிலிருக்கிறான், ஸ்தூலமானது சூக்குமமானதுடன் தொடர்ச்சியினுலல்லாமல், ஆனால் அன்னுவயங்களால் சம்பந்தப்படுகிறது; தீமைகளுக்கு விரோதமாய் முக்கியமாய் சண்டை செய்வதால் உண்டாகிற எதோ ஒரு மனதின் அமைதியினுலும் சமாதானத்தாலும் தவிர இந்த போக்குவரவு உணரப்படுகிறதில்லை. ஆனால் மனிதனுனவன், உலகத்தைவிட்டு சென்றபிறகு செய்கிறபடி, ஸ்தூல ஸ்திதியை போட்டுவிட்டு, சூக்கும ஸ்திதிக்குள் பிரவேசிக்கும்போது, மேலேவிவரித்த சுகமானது படிப்படியாய்தானே வெளியாகிறது.

42. V. ஒருமனிதன் ஆண்டவருடன் எவ்வளவு அதிகமாய் நெருங்க சேர்க்கப்படுகிறானோ, அவ்வளவு அதிக தெளிவாய் தான் தன் சொந்தமென்று தனக்கே தோன்றுகிறான்; மேலும் அவன் ஆண்டவருடையவனென்றும் அவ்வளவு தெளிவாய் அறிந்து கொள்ளுகிறான். ஒருவன் எவ்வளவு நெருங்க ஆண்டவரோடு சேர்க்கப்படுகிறானோ, அவ்வளவு குறைவாய் தான் தன் சொந்தமாயிருக்கிறானென்கிற ஒரு தோற்றமிருக்கிறது. எல்லா துன்மார்க்கர்களுக்கும், தாங்கள் சட்டத்தின் நுகத்தடியில் இல்லையென்றும், எவனும் தன்னிடமிருந்தே நன்மை செய்யமுடியாதென்றும், சமயக் கொள்கையிலிருந்து நம்புகிறவர்களுக்கு கூட, அது அப்படி தோன்றுகிறது. ஏனென்றால், பின்சொன்னவர்களும் துஷ்டர்களும், நன்மையைமட்டும் தவிர தீமை நினைக்கவும் இச்சிக்கவும் இடங்கொடாதிருத்தல், தன்னுடைய சொந்தமாக இருத்தல்

அல்லவென்பதைத் தவிர வேறுவிதமாய் அறிந்துகொள்ள சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள்; ஆண்டவரோடு சேர்க்கப்பட்டவர்கள், தீமையை நினைத்து இச்சிக்க சக்தியுள்ளவர்களாக வாவது இஷ்டமுள்ளவர்களாகவாவது இல்லாதபடியினால், இந்த இரண்டு வகுப்பினரும் தங்களுக்கே தோன்றுவதிலிருந்து, இது ஒருவனுடைய சொந்தமாயிருத்தல் அல்லவென்றும் தீர்மானிக்கிறார்கள்; அப்படியிருந்தபோதிலும் அதற்கு எதிரிடையானது உண்மையாயிருக்கிறது.

43. நரகத்து சுதந்திரமுமிருக்கிறது, சுவர்க்கத்து சுதந்திரமுமிருக்கிறது. தீமையை நினைத்து இச்சித்தலும், ஜனசமூக சட்டங்களும், சன்மார்க்க சட்டங்களும் தடுக்காதவரையில், அதைப்பேசி, செய்தலும் நரகத்து சுதந்திரத்திலிருந்து வருகிறது; ஆனால், நன்மையை நினைத்து இச்சித்தலும், சக்தி கொடுக்கப்பட்டிருக்கிறவரையில், அதைப் பேசி செய்தலும், சுவர்க்கத்து சுதந்திரத்திலிருந்து வருகிறது. ஒவ்வொருவன் விஷயத்திலும் எல்லா சுதந்திரமும் அவனுடைய அன்பிலிருந்து வருகிறபடியினால், மனிதன் நினைப்பதும், இச்சிப்பதும், பேசுவதும், சுதந்திரத்திலிருந்து செய்வதும், யாதெனிலும் அதை தன் சொந்தமாக பார்க்கிறான்; ஆகையினால், தீமையினிடத்து அன்பு பாராட்டுகிறவர்கள், நரகத்து சுதந்திரம் சுதந்திரமே என்பதைத் தவிர வேறுவிதமாய் பார்க்கிறதில்லை; ஆனால், நன்மையினிடத்து அன்பு பாராட்டுகிறவர்கள், சுவர்க்கத்து சுதந்திரம் சுதந்திரமே என்றும், அதனால் அதற்கு எதிரானது இரண்டுக்கும் அடிமைத்தனமென்றும் காண்கிறார்கள்; என்றாலும், எதோ ஒன்று சுதந்திரமென்று யாராலும் மறுக்கமுடியாது; ஏனென்றால், தங்களுக்குள்ளேயே எதிரானதாயிருக்கிற சுதந்திரத்தின் இருவகைகள், ஒவ்வொன்றும் சுதந்திரமாகவே இருக்கமுடியாது. மேலும், நன்மையால் நடத்தப்படுதல் சுதந்திரமென்றும், தீமையால் நடத்தப்படுதல் அடிமைத்தனமென்றும் மறுக்கப்பட முடியாது; ஏனென்றால், நன்மையால் நடத்தப்படுதல் ஆண்டவரிடமிருந்து வருகிறது, தீமையால் நடத்தப்படுதல் பேயினிடமிருந்து வருகிறது. இப்படி

யிருக் (2)கையில், தன்னுடைய அன்பைச்சேர்ந்தபடியினுல் சுதந்திரத்திலிருந்து ஒருமனிதன் செய்வதெல்லாம் தன்சொந்தமாக தோன்றுகிறபடியினுல், (மேல் கூறியபடி ஒருவனிட அன்பிலிருந்து செயல்படுதல், சுதந்திரத்திலிருந்து செயல்படுதலாயிருக்கிறது) ஆண்டவரோடு ஐக்கியப்படுதல் ஒரு மனிதனை சுதந்திரமுள்ளவனுகவும், ஆகையினுல் அவன் சொந்தமாகவும் தனக்கே தோன்றச் செய்கிறது என்று தொடருகிறது. ஆண்டவருடன் ஐக்கியம் எவ்வளவுநெருங்கியிருக்கிறதோ, அவ்வளவு அதிக சுதந்திரமுள்ளவனுகவும், அதனுல் அதிகமாய் தன்னுடைய சொந்தமாகவும் அவன் தோன்றுகிறுன். தனக்கு சொந்தமாக அதிக தெளிவாய் தனக்குத் தான் தோன்றுகிறுனென்பது, **பரம இச்சாசத்தி** தனக்குசொந்தமானதை மற்றவர்களுடையதாகவும், இவ்விதமாக ஒரு மனிதனுடையதாகவும், ஒரு தேவனுடையதாகவுமிருக்க இச்சிக்கக் கூடியதாயிருப்பதினுல், ஏற்படுகிறது. எல்லா சூக்கும அன்பும், தலைமையாய் **பரம இச்சாசத்தி**, அவ்விதமானதாயிருக்கிறது. இன்னமும்: ஆண்டவர் எவனையும் எவ்விதத்திலும் பலவந்தம் செய்கிறதில்லை; ஏனென்றுல், கட்டாயப்படுத்தப்பட்டு ஒருவன் ஏற்றுக்கொண்ட எந்த பொருளும், அவனுடையதாக தோன்றுகிறதில்லை; ஒருவனுடைய சொந்தமாக தோன்றுதது, அவனுடைய அன்பினுல் செய்யப்பட்டதாயிருக்கமுடியாது. இவ்விதமாக அவனுடைய சொந்தமாக அவனுக்கு சேர்க்கப்படமுடியாது. ஆகையினுல் மனிதனுனவன் ஆண்டவரால் சுதந்திரத்தில் தொடர்ச்சியாய் நடத்தப்படுகிறுன். மேலும் சுதந்திரத்தில்கூட சீர்படுத்தப்பட்டும், குணப்படுத்தப்படுகிறுன். ஆனுல், இதைப்பற்றி பின்வருவதில் அதிகம் சொல்லப்படும்; மேலே (பி. 4) சிலதுகூட பார்க்கப்படலாம்.

44. ஒரு மனிதன் ஆண்டவரோடு எவ்வளவு அதிக சமீபமாய் சேர்க்கப்படுகிறுனே, அவ்வளவு மேல் காண்பித்தபடி (பி. 34-36), அதிக ஞானமுள்ளவனுகிறுனுகையால், தனக்கே சொந்தமாக அவன் எவ்வளவு தெளிவாய் தனக்கே தோன்றுகிறுனே, அவ்வளவு தெளிவாய் அவன் ஆண்டவருடையவனென்று

அறிந்துகொள்ளுகிறனென்பது ஏற்படுகிறது; ஞானமும் இதை கற்பிக்கிறது, மேலும் இதை அறிந்துகொள்ளுகிறது. மூன்றுவது சுவர்க்கத்து தேவர்கள்கூட, தேவர்களுக்குள் அதிக ஞானமுள்ளவர்களானபடியினல், இதை அறிந்து கொள்ளுகிறர்கள், இன்னமும், அதையே அவர்கள் சுதந்திரம் என்கிறர்கள். ஆனல் தங்களாலேயே நடத்தப்படுதல் அடிமைத்தனமென்கிறர்கள். ஆண்டவரானவர், ஞானத்திலிருந்துவரும் அவர்களுடைய உணர்ச்சிக்கும் சிந்தனைக்கும் சேர்ந்த பொருள்களில் உடனே பாயாமல், நன்மையிடத்து கொள்ளும் அன்பின் ஆசைகளிலும், இவைகளின் மூலமாய் மற்றவைகளிலும் பாய்கிறரென்பதையும், தங்களுக்கு ஞானம் வருகிற ஆசைக்குள் பாய்தலே அவர்கள் அறிந்துகொள்ளுகிறர்களென்பதையும், அதின்மேல் ஞானத்திலிருந்து நினைப்பதெல்லாம் தங்களிடமிருந்தே போலும், அம்மாதிரியாக தங்கள் சொந்தமாக தோன்றுகிறதென்பதையும், இதனல் ஒரு பரஸ்பர ஐக்கியம் ஸ்தாபிக்கப்படுகிற தென்பதையும் காரணமாககூட சொல்லுகிறர்கள்.

45. ஆண்டவருடைய தெய்வ பரிபாலனம், மானிட வமிசத்திலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க கருதுகிறபடியினல், அந்த நோக்கமானது மானிடவமிசம் தன்னுடனேயே ஐக்கியப்படவேண்டுமென்று இருக்கிறதாகவும் (பி. 28-31 பார்க்கவும்), மேலும், மனிதனுக்கு சுவர்க்கம் அதிகமாய் உள்ளுக்குள்ளாயிருக்கிறபடியினல், அவன் **அவருடன்** அதிகமதிகமாய் நெருங்க சேர்க்கப்பட்டிருக்க, அதன் நோக்க மிருக்கிறதாகவும் (பிரிவு 32-33), மேலும் இந்த ஐக்கியத்தினல் மனிதன் அதிக ஞானமுள்ளவனக வேண்டுமென்று அதன் நோக்க மிருக்கிறதாகவும் (பி. 34-36), ஞானத்திலிருந்தும் அதற்கு தக்கபடியும் மனிதனுக்கு சுவர்க்கம் உண்டாகிறபடியினலும், அதனல் அவனுக்கு சுகம்கூட உண்டாகிற படியினலும், அவன் அதிக சுகமுள்ளவனகிறனென்கிறதாகவும் (பி.37-41), முடிவாய் மனிதனைவன் தனக்கே அதிக தெளிவாய் தனது சொந்தமாக தோன்றவேண்டுமென்றும், அப்படியிருந்தும் அவன் ஆண்டவருடையவனென்று அதிக தெளிவாய் அறிந்துகொள்ள

வேண்டுமென்றும் அதன் நோக்கமிருக்கிறதாகவும் பின்தொடரு கிறது (பி. 42-44). இவைகளெல்லாம் ஆண்டவருடைய **தேய்வபரி பாலனத்**தை சேர்ந்தவைகள்; ஏனென்றால், அவைகளெல்லாம் தன் நோக்கமாய் வைத்திருக்கிற சுவர்க்கமாயிருக்கின்றன.

**தான் செய்வதிலெல்லாம் ஆண்டவருடைய தெய்வபரிபாலனம் முடிவற்றதும் நித்தியமானவைகளுக்கு பிரயாசைப் படுகிறது.**

46. கிருஸ்துவ உலகத்தில் கடவுளானவர் முடிவற்றவர் என்றும், நித்தியமானவர் என்றும் தெரிந்திருக்கிறது; ஏனென்றால் **அதனேசியஸ்** என்பவரிடமிருந்து நாமம் தரித்த **திரியேகத்துவம்** என்கிற கொள்கையில், **பிதாவாகிய கடவுள்** முடிவற்றவரென்றும், நித்தியமானவரென்றும், சர்வ வல்லமை யுள்ளவரென்றும், சொல்லப்பட்டிருக்கிறது; அம்மாதிரியே **குமாரனாகிய கடவுளும், பரிசுத்த ஆவியாகிய கடவுளும்** இருக்கிறார்களென்றும், அப்படியிருந்தும் மூன்று முடிவற்றதும் நித்தியமானதும் சர்வ வல்லமையுள்ளதுமான பொருள்கள் அல்லாமல், ஒரே பொருள் இருப்பதாக சொல்லப்படுகிறது. கடவுளானவர் முடிவற்றவராயும் நித்தியமானவராயு மிருப்பதால், முடிவின்மையும் நித்தியத்துவமும் தவிர வேறொன்றும் கடவுளைப்பற்றி சொல்ல முடியாதென்று இதிலிருந்து ஏற்படுகிறது. ஆனால் முடிவின்மையும் நித்தியத்துவமும் என்னவென்று முடிவு வுள்ளதினால் கிரகிக்கப்பட மாட்டாது என்றாலும், அது கூடும்: முடிவுள்ளது முடிவற்றதை பிடிக்க முடியாதபடியினால், அது கிரகிக்கப்படமுடியாது; குணத்தில் அவைகள் என்னவென்று பார்க்கப்படாவிட்டாலும், பொருள்கள் இருக்கிறதாக பார்க்கப்படுகிற, பிரித்து எடுத்த மானதக்காட்சிகளிருக்கிறபடியினால், அது கிரகிக்கப்படக் கூடும். முடிவற்றவரா யிருப்பதால் கடவுளும், முடிவற்றதா யிருப்பதால் தெய்வமும், சொரூபம் என்றும், சாரமும் பொருளுமே என்றும், அன்பே என்றும், ஞானமே என்றும், நன்மையே என்றும், உண்மையே என்றும், இவ்விதமாக தானே யிருப்பது என்றும், அதைப்பார்க்கிலும் மனி

தனே என்றும் இவ்விதபாவனைகள் முடிவற்றவரைப்பற்றி கொடுக்கப்பட்டிருக்கின்றன; மேலும், முடிவற்றவர் எல்லாமாயிருக்கிருரென்று சொல்லப்பட்டால், முடிவற்ற ஞானம் சர்வஞ்ஞானம் என்றும், முடிவற்ற சக்தி சர்வ வல்லமை யென்றும், இவ்வித பாவனை (2)கள் கூட கொடுக்கப்பட்டிருக்கின்றன. அப்படியிருந்தாலும் கால இடவரைகள் பாவனைகளுக்கு எல்லே ஏற்படுத்தி, பிரித்துஎடுத்த பாவனைகளை ஒன்றுமில்லாமல் செய்யவேண்டி யிருப்பதினுல், பிரகுருதியிலிருந்து சிந்தனை அடைகிற பொருள்கள், முக்கியமாய் இடம் காலம் என்கிற பிரகுருதியின் இரண்டு குணங்களிலிருந்து, சிந்தனை அடைகிற பொருள்கள் அந்தபாவனையிலிருந்து நீக்கப்பட்டாலொழிய, இவைகள் சிந்தனையின் தெளிவின்மையில் விழுகின்றன. கிரகிக்கமுடியாததா யிருப்பதினுல் ஒருவேளை இல்லைஎன்பதில் விழுகின்றன. ஆனுல் அந்தப்பொருள்கள் தேவர்களிடத்திலிருப்பதுபோல் மனிதனில் இருக்கும் பாவனையிலிருந்து நீக்கப்பட்டால், அப்பொழுது **முடிவற்றவர்** மேலே விரித்துச் சொல்லியவைபோன்ற அபிப்பிராயங்களால் கிரகிக்கப்படக் கூடும்; மனிதனுனவன் எல்லாமாயிருக்கிற முடிவற்ற கடவுளால் சிருட்டிக்கப்பட்ட படியினுல், அவன் எதோ ஒரு பொருளென்றும், **பொருளாகவே** யிருக்கிற முடிவற்ற கடவுளால் அவன் சிருட்டிக்கப்பட்ட படியினுல், அவன் ஒரு முடிவுள்ள பொருளென்றும், மேலும் **ஞானமாகவே** யிருக்கிற முடிவற்ற கடவுளால் அவன் சிருட்டிக்கப்பட்டிருப்பதால், அவன் ஞானமென்றும் கூட, இன்னனபலவாறு கிரகிக்கப்படலாம்; ஏனென்றுல், முடிவற்ற கடவுள் **எல்லாமாயும், பொருளேயாயும், ஞானமேயாயும்** இருந்தாலொழிய, மனிதன் யாதொன்றுமாகான்; இவ்விதமாக, மனோரத சிருட்டிக்காரரென்று சொல்லப்படுகிற வீண் பிரமையுள்ளவர்கள் சொல்லுகிறபடி, அவன் யாதொன்றுமில்லாததாகவும் அல்லது இருத்தலின் ஒரு பாவனையாக மாத்திரம் இருப்பான். **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் காண்பித்ததிலிருந்து, தெய்வத்தின்சாரம் **இச்சாசத்தி** என்றும் **ஞானசத்தி**யென்றும் (28-39), **பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் பொருளே** யென்றும், **உருவமே** யென்றும், மேலும் அவருடைய சொந்தந் **தானே** யென்றும், **ஒன்றே** யென்றும் (பி. 40-46), கடவுளானவர்

பிரபஞ்சத்தையும் அதிலுள்ள எல்லாவற்றையும் சூனியத்திலிருந், தல்லாமல், தன்னிடமேயிருந்துசிருட்டித்தாரென்றும் (பி.282-284), தெளிவாயிருக்கிறது. ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளும், முக்கியமாய் மனிதனும், அவனிலிருக்கும் அன்பும் ஞானமும், இருக்கும் தன்மையின் பாவனைகளாக மாத்திரமல்லாமல், எதோ சிலபொருள்களென்று இதிலிருந்து ஏற்படுகிறது; ஏனென்றால், கடவுள் முடிவற்றவரா யிருந்தாலொழிய, முடிவுள்ள பொருள்கள் இருக்கமாட்டாது; **முடிவற்றவர்** எல்லாமாயிருந்தாலொழிய, எந்த பொருளுமிருக்கமாட்டாது. கடவுளானவர் எல்லாவற்றையும் தன்னிடமே யிருந்து சிருட்டித்திருந்தா லொழிய, யாதொன்றும் இருக்காது. சுருங்கச்சொல்லில், **கடவுளிருக்கிறபடியினுல் நாமிருக்கிறோம்.**

47. **தெய்வபராமரிப்பைப்** பற்றி இபபொழுது பேசவேண்டியிருப்பதாலும், அது செய்கிற எல்லாவற்றிலும், முடிவற்றதையும் நித்தியமானதையும் அது மதிக்கிறதென்று இங்கே காண்பிக்கப் படவேண்டி யிருப்பதாலும், சில ஒழுங்கில் செய்யப்பட்டாலொழிய இது தெளிவாய் சொல்லப்படக் கூடாமையாலும், அந்த ஒழுங்கு பின் தொடருமாறு இருக்கவேண்டும்: I. தானே முடிவற்றதாயும் தானே நித்தியமானதாயு மிருக்கும் பொருள் தெய்வத்துக்கு அந்நிய மல்லாதது. II. தானே முடிவற்றதாகவும் நித்தியமானதாயுமிருக்கும் பொருள் முடிவுள்ள பொருளில் இருக்கும் தன்னிடமிருந்துவந்த முடிவற்றதும் (நித்தியமானதுமாகிய) பொருளை மதிக்கவேண்டும். III. **தெய்வபராமரிப்பு** அது செய்கிற எல்லாவற்றிலும் தன்னிடமே யிருந்துவந்த முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளை, முக்கியமாய், மானிடவமிசத்தை இரக்ஷிக்க மதிக்கிறது. IV. முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளின் ஓர்பிரதிமை, இரக்ஷிக்கப்பட்ட மானிடவமிசத்திலிருந்து ஏற்பட்ட தேவர்கள் உலகத்தில் இருக்கிறது. V. கடவுளுடைய பிரதிமையாயிருக்கிற, ஒருமனிதனை ஆண்டவர் முன்பாகயிருக்க விண்ணோர் உலகத்தை உருவாக்குவதில் முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளை மதித்தல், தெய்வபராமரிப்பின் அந்தரங்க கருத்தாயிருக்கிறது.

48. I. **தானே முடிவற்றதாயும் தானே நித்தியமானதாயுமிருக்கும் பொருள் தெய்வத்துக்கு அந்நியமில்லாதது. பதிபசுபாசம்** எனும் நூலில் அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டதிலிருந்து இது விசதமாகலாம். தானே முடிவற்றதும் தானே நித்தியமானதும் **தெய்வம்** என்பது, தேவர்கள் கருத்துக்கு ஒத்தது; முடிவற்றது என்பதால், தேவர்கள் தெய்வத்தின் சொரூப நிலையையும் நித்தியமானதென்பதால், தெய்வத்தின் தடத்த நிலையையும் தவிர வேறொன்றையும் அறிந்து கொள்ளுகிறதில்லை. ஆனால் தானே முடிவற்றதாயும், தானே நித்தியமானதாயுமிருக்கும் பொருள் தெய்வமென்பது, மனிதர்களால் அறிந்துகொள்ளவும் கூடும், அப்படி செய்யவும் முடியாது. **முடிவற்றவரைப்** பற்றி இடவரைக் குட்படுத்தாமலும், **நித்தியமானவரை** பற்றி காலவரைக்குட்படுத்தாமலும் நினைக்கிறவர்களால், அது அறிந்துகொள்ளப்படும்; ஆனால் முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளைப்பற்றி கால இடவரைக் குட்படுத்தி நினைக்கிறவர்களால் அது அறிந்துகொள்ளப் பட முடியாது. இவ்விதமாக, உயர்ந்த மட்டத்தில், அதாவது பகுத்தறிவுள்ள மனதில் அந்தரங்கமாய் நினைக்கிறவர்களால், அது அறிந்துகொள்ளப்படும்; ஆனால் தாழ்ந்தமட்டத்தில், அதாவது வெளியாய் நினைக்கிறவர்களால் அது அறிந்துகொள்ளப்பட முடி(2)யாது. அதை அறிந்துகொள்ளக் கூடியவர்கள், எல்லையற்ற இடம் இருக்க முடியாதென்று நினைக்கிறார்கள்; அம்மாதிரியே, பொருள்கள் உண்டான, நித்தியமாயிருக்கிற முடிவற்றகாலமும் இருக்கமுடியாதென்று நினைக்கிறார்கள்; ஏனென்றால் முடிவின்மைக்கு ஆதி அந்தமென்கிற எந்த முடிவுமில்லை, அல்லது அது எல்லைகளற்றதாயிருக்கிறது; தன்னிடமே யிருந்து ஒரு முடிவற்ற பொருளும் கூட யிருக்காது என்று அவர்கள் நினைக்கிறார்கள்; ஏனென்றால், **தன்னிடமே இருந்து** என்பது, ஒரு எல்லையையும், அது உண்டான ஒரு ஆரம்பத்தையும் அல்லது முந்தின பொருளையும் உத்தேசிக்கிறது; ஆகையினால் தன்னிடமே யிருந்துவந்த முடிவற்றதும் நித்தியமானதுமான பொருளைப்பற்றி பேசுதல் அருத்தமில்லாததாயிருக்கிறது; ஏனென்றால், இது **சத்தாகிய** சொரூப பொருளை தன்னிடமிருந்தே வந்ததாக பேசுதல் போலிருக்கிறது;

இது ஒன்றுக்கொன்று ஒவ்வாததாயிருக்கிறது: ஏனென்றால் தன்னிடமேயிருந்துவந்த ஒரு முடிவற்றபொருள், ஒரு முடிவற்றதிலிருந்து வந்த முடிவற்றபொருளாக யிருக்கும், தன்னிடமேயிருந்துவந்த **சத்து, சத்தினிட** மிருந்துவந்த **சத்தாகும்**; இந்த முடிவற்ற பொருளும் **சத்தாகிய** சொரூபப் பொருளும் **முடிவற்ற பொருளோடு** ஒரே பொருளாகும், அல்லது முடிவுள்ளதாகும். பகுத்தறிவுள்ள மனதில் அந்தரங்கமாய் பார்க்கக்கூடிய இந்த காரணங்களினாலும், இதைப் போன்ற காரணங்களாலும், தானே முடிவற்றதாயும் தானே நித்தியமானதாயுமிருக்கிற பொருளிலிருக்கிற தாகவும், இந்த முடிவற்றதும் நித்தியமுமானதுமாகிய பொருள், எல்லா பொருள்களும் உண்டாகிற தெய்வமென்று தெளிவாயிருக்கிறது.

49. காலஇடவரைக் குட்படாத ஏதாகிலும், ஒன்றையும் அதுயிருக்கிறது மட்டுமல்லாமல், அது எல்லாமாயும்கூட இருக்கிறதையும் எல்லாபொருள்களுக்கும் உற்பத்திஸ்தானம் அதுவே என்பதையும், தன்னுடைய பகுத்தறிவுள்ள மனதில் ஒருவன் அந்தரங்கமாய் எப்படி கிரகிக்க கூடுமென்று அநேகர் தங்களுக்குள்ளே நினைப்பார்கள். ஆனால், அன்பாகிலும் அல்லது அதன் ஆசைகளில் யாதாவது ஒன்றாகிலும், ஞானமாகிலும், அதன் உணர்ச்சிகளில் யாதாவது ஒன்றாகிலும், இதுவல்லாமல், சிந்தனையாகிலும் காலஇடவரைக் குட்பட்டதாவென்று உள்ளுக்குள்ளாய் யோசித்துப்பார்; அவைகள் அப்படி இல்லையென்று தெரிந்து கொள்வாய்; தெய்வமானது இச்சாசத்தியேயாகவும் ஞானசத்தியேயாகவு மிருக்கிறபடியினால், தெய்வமானது காலஇடவரைக் குட்பட்டதாக நினைக்கமுடியாது; அம்மாதிரியே முடிவற்ற பொருளையும் நினைக்கமுடியாது. இதை தெளிவாய் அறிந்துகொள்ள, சிந்தனையானது காலஇடவரைக்குட்பட்டதா என்கிற கேழ்வியை ஆராய்ந்துபார்; சிந்தனையானது பத்து அல்லது பன்னிரண்டுமணிகாலம் செல்வதாக வைத்துக்கொள்; இந்த கால அளவு ஒன்று அல்லது இரண்டுமணிகளாக மாத்திரம் தோன்றுதா? கூடுமாகில் அது ஒன்று அல்லது இரண்டு நாட்களாக தோன்றுதா? சிந்தனை வருகிற ஆசையின் நிலைமைக்கு தக்கபடி அதன் தோற்றமிருக்கிறது. அந்த ஆசையானது, காலத்

தின் சிந்தனையற்ற சந்தோஷத்தைச் சேர்ந்த ஒன்றாயிருந்தால், சிந்தனையில் கழித்த பத்து அல்லது பன்னிரண்டு மணிகள் கஷ்டத்துடன் ஒன்று அல்லது இரண்டுமணிகளாகிறது. ஆனால் ஆசையானது காலம் கவனிக்கப்பட்ட துக்கத்தை சேர்ந்த ஒன்றாயிருந்தால், விஷயம் தலைக்கீழாயிருக்கிறது. காலமானது, சிந்தனை உண்டாகிற ஆசையின் நிலைமைக்கு தக்கபடி ஒரு தோற்றமாக மாத்திரமிருக்கிறதென்று இதனால் தெளிவாகிறது. நடக்கும்போதாகிலும் அல்லது பிரயாணம் செய்யும்போதாகிலும், சிந்தனையிலிருக்கும்போது வெளியில் தூரத்துக்கும் அது அப்படியே இருக்கிறது.

50. தேவர்களும் அசரீர சூக்குமசரீரிகளும் அன்பைச் சேர்ந்த ஆசைகளாகவும், ஆசையிலிருந்துவந்த சிந்தனைகளாகவுமிருக்கிறபடியினால், அவர்கள் காலஇடவரைகளுக் குட்படாமல், அவைகளின் தோற்றத்தில் மாத்திரம் இருக்கிறார்கள். அவர்களுக்கு, ஆசைகளின் நிலைமைகளுக்கும், ஆசைகளிலிருந்துவரும் சிந்தனைகளின் நிலைமைகளுக்கும் தக்கபடி, காலம் இடம் என்கிற காட்சி யிருக்கிறது. ஆசையினால் ஒருவன் மற்றவனை, அவனோடு பேச அல்லது அவனைப் பார்க்க, உத்தேசத்தோடும் வாஞ்சையோடும் ஆசைகொண்டு நினைத்துக் கொண்டிருந்தால், மற்றவன் (2) அவன் முன்பாக காண்பிக்கப்படுகிறான். அதனால் தான், தன்னோடு ஒரே மாதிரியான ஆசையிலிருக்கிற ஒவ்வொரு மனிதனோடும் அசரீர ஆன்மாக்கள் ஹாஜராயிருக்கின்றன; தங்களுடன் ஒப்பான தீமையினிடத்து ஆசையிலிருக்கப்பட்டவனோடு துஷ்டபேய்களும், தன்னுடன் ஒப்பான நன்மையினிடத்து ஆசையிலிருக்கப்பட்டவனோடு நல்ல அசரீரி ஆன்மாக்களும் இருக்கின்றன; அவன் தங்களுடைய கூட்டத்தில் சேர்க்கப்பட்டது போல், அவ்வளவு ஆஜராயிருக்கின்றன. இடமும் காலமும் அபிமுகம்விஷயத்தில் யாதொன்றும் செய்கிறதில்லை; ஏனென்றால், ஆசையும் அதிலிருந்து வரும் சிந்தனையும் காலஇடவரைக்கு உட்பட்டதல்ல; தேவர்களும் அசரீர ஆன்மாக்களும் ஆசைகளாகவும், ஆசையின் சிந்தனைகளாகவும் (3) மிருக்கின்றன. இது அப்படி யிருக்கிறதென்று அநேக வருஷ காலத்திய உயிருள்ள அனுபோகத்திலிருந்தும், ஐரோப்பியர்வி

லும், அதன் பல இராச்சியங்களிலும் சிலருடனும், ஆசியாவிலும் ஆபிரிக்காவிலும், அதன் பல இராச்சியங்களிலும் சிலருடனும், அவர்கள் இறந்த பிறகு அநேகருடன் பேசியதிலிருந்தும்தெரிந்து கொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது; அவர்கள் எல்லாரும் என் சமீபத்திலிருந்தார்கள்; ஆனால் அவர்கள் காலஇடவரைக்கு உட்பட்டிருந்தால், ஒருவழி பிரயாணமும், அதைச் செய்ய காலமும் இடையில் வந்திருக்க வேண்டும். நிஜமாகவே ஒவ்வொரு மனி (4) தனும் இதை தன்னிலேயே அல்லது தன்னுடைய சொந்த மனதில், இயல்பாயுள்ளதிலிருந்து தெரிந்துகொள்ளுகிறான்; ஆசியா, ஆபிரிக்கா, ஐரோப்பாவில், இறந்துபோன யாரோ ஒருவனுடன், உதாரணமாக, **கால்வின், லூதர், மேலாங்கதன்,** இவர்களோடும், அல்லது ஏதோ ஒரு வேந்தனோடும், ஆளுகிறவனோடும், தூர தேசத்திலுள்ள குருவோடும் நான் பேசினதாக சொன்னபோது எவனும் ஸ்தல தூரத்தைக் குறித்து நினைக்கவில்லை என்பதிலும், அங்கே வசிப்பவர்களிடம் அவன் எப்படி பேசக்கூடும், பூமியும் கடலும் மத்தியிலிருக்கும்போது அவர்கள் வந்து அவனோடு எப்படி இருக்கக்கூடும் என்கிற சிந்தனைகூட உற்பத்தியாகவில்லை என்பதிலும், அதைப்பற்றி எனக்கு சாட்சியமிருந்தது. ஒருவன் சூக்கும லோகத்திலுள்ளவர்களைப் பற்றி நினைத்துக்கொண்டிருக்கும்போது, கால இடவரைக்கு உட்பட்டு நினைக்கிறதில்லை என்று இதிலிருந்துகூட எனக்கு விசதமானது. அப்படியிருந்தும் அவர்களுக்கு காலத்தோற்றமும் இடத்தோற்றமும் இருக்கிறதென்பது **சுவர்க்கமும் நரகமும்** (பி. 162-169, 191-199) எனும் நூலில் பார்க்கலாம்.

51. முடிவற்றதும் நித்தியமானதுமான பொருள், இவ்விதமாக ஆண்டவர், கால இடவரைக்குட்படுத்தாமல் நினைக்கப்பட வேண்டுமென்றும், அப்படி நினைத்தலும் கூடுமென்றும், மேலும், பகுத்தறிவுள்ள மனதில் அந்தரங்கமாய் நினைக்கப்பட்டவர்களுக்கு அப்படி நினைத்தல் கூடுமென்றும், அப்பொழுது முடிவற்றதும் நித்தியமானதுமான பொருள், தெய்வத்தைப்போன்ற **ஒன்றே** என்றும் இவைகளிலிருந்து இப்பொழுது விசதமாகும். இவ்வண்ணம்

தேவர்களும் அசரீர ஆன்மாக்களும் நினைக்கிறார்கள். கால இடவரைக் குட்படாத சிந்தனையிலிருந்து, தெய்வத்தின் சர்வ வியாபகத்துவத்தையும், தெய்வ சர்வவல்லமையையும், மேலும் சதாகால தெய்வத்தையும் அறிந்து கொள்ளலாம்; ஆனால் இடத்தினாலும் காலத்தினாலும் உண்டாகும் அபிப்பிராயம் ஒட்டிக்கொண்டிருக்கிற சிந்தனையிலிருந்து ஒன்றையும் கிரகிக்க முடியாது. இடமும் காலமும் பிரகுருதியின் குணங்களாயிருப்பதினாலும், ஆனால், தெய்வமானது அவைகளுக்கு உட்படாதபடியினாலும், சதாகால கடவுளைக் குறித்து சிந்தனையிருக்கக் கூடுமென்றும், சதாகாலத்திலிருந்து பிரகுருதியைக் குறித்து அப்படி யிருக்க முடியாதென்றும், ஆதலால் கடவுளால் பிரபஞ்சம் சிருட்டிக்கப் படுதலைப்பற்றி சிந்தனை இருக்கக் கூடுமென்றும், ஆனால் பிரகுருதியிலிருந்து சிருட்டியைக் குறித்து சிந்தனை ஒன்றுமேகிடையாதென்றும், இவைகளிலிருந்து விசதமாகிறது. தெய்வமானது காலஇடவரைக் குட்படாதது என்பதை **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் பார்க்கலாம் (பி. 7-10, 69-72, 73-76 லும் மற்றஇடங்களிலும்).

52. II. **தன்னில் தானே முடிவற்றதும் நித்தியமுமான பொருள் முடிவுள்ளதில் தன்னிடமே இருந்துவந்த முடிவற்றதும் நித்தியமானதுமான பொருளை மதிக்கவேண்டி யிருக்கிறது.** தன்னில்தானே முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருள் என்பதால் முன்பிரிவில் காண்பித்தபடி, தெய்வமே என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. முடிவுள்ளது என்பதால், தெய்வத்தால் சிருட்டிக்கப்பட்ட எல்லா பொருள்களும், முக்கியமாய் மனிதர்களும், அசரீர ஆன்மாக்களும் தேவர்களும் அருத்தம் கொள்ளப்படுகின்றன; தன்னிடமேயிருந்து முடிவற்றதும் நித்தியமாகிய பொருளை பார்த்தல் என்பது, ஒரு மனிதன் கண்ணாடியில் தன்னுடைய பிரதிமையையே பார்க்கிறது போல், தெய்வத்தை அவைகளில் **தன்னையே** பார்த்தலாயிருக்கிறது. அது அப்படியிருக்கிற தென்பது, **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் அனேக இடங்களிலும், முக்கியமாய் சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில், மனிதனுடைய பிரதிமையும், முடிவற்றதும் நித்தியமானதுமான பொருளின் பிரதிமையும் (பி. 317-318), இவ்வண்

ணம் சிருட்டிகர்த்தாவாகிய கடவுளின் அதாவது சதாகால, ஆண்டவரின் ஓர் பிரதிமையும், இருக்கிறதாக சொல்லப்பட்ட இடங்களிலும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் தன்னில் தானே தெய்வமானது ஆண்டவரில் இருப்பதாக தெரியப்படவேண்டும்; ஆனால் தன்னிடமேயிருந்து வரும் தெய்வம், சிருட்டிக்கப்பட்ட பொருளில் ஆண்டவரிட மிருந்து வரும் தெய்வமாக யிருக்கிறது.

53. ஆனால், அதிகமாய் முற்றும் அறிந்துகொள்ளப்படும் பொருட்டு, இதுவிவரித்து உரைக்கப்படவேண்டும். தெய்வமானது தெய்வத்தை மாத்திரம் பார்க்கும்; அது தெய்வத்தை, தன்னால் சிருட்டிக்கப்பட்ட பொருளில் தவிர வேறு எவ்விதத்திலும் பார்க்காது. அது அப்படியிருக்கிறதென்பது, எவனும் தன்னிலேயே தனக்கு சொந்தமாயிருப்பதிலிருந்து தவிர, மற்றொருவனை மதிக்க மாட்டானென்பதிலிருந்து விசதமாகிறது. மற்றொருவனை நேசிக்கிறவன் தன்னிடமே யிருக்கும் தன்னிட சொந்த அன்பிலிருந்து மதிக்கிறான்; ஞானமுள்ள ஒருவன், தன்னிலேயே யிருக்கும் தன்னிட ஞானத்திலிருந்து மதிக்கிறான். நிஜமாகவே, அவன் மற்றவன் தன்னை நேசிக்கிறானென்றும், அல்லது தன்னை நேசிக்கிறதில்லை என்றும், அவன் ஞானமுள்ளவனென்றும் அல்லது அவன் ஞானமில்லாதவனென்றும் அறிந்துகொள்ளக்கூடும்; ஆனால், தன்னிடமேயிருக்கும் அன்பிலிருந்தும் ஞானத்திலிருந்தும் அவன் இதை தெரிந்துகொள்ளுகிறான்; ஆகையால் அவன் மற்றவனை நேசிக்கிறதுபோல், மற்றவன் தன்னை நேசிக்கிற அளவும், அல்லது தான் ஞானமுள்ளவனா யிருக்கிறதுபோல், மற்றவன் ஞானமுள்ளவனா யிருக்கிற அளவும், அவன் மற்றவனோடு தானே சேருகிறான்; ஏனென்றால், அந்த விதமாக அவர்கள் ஒன்றாகிறார்கள். தன்னில் தானே தெய்வத்துடனும் அதைப்போன்றே யிருக்கிறது; ஏனென்றால், தன்னில் தானே தெய்வமானது ஒருமனிதன், அசரீரஆன்மா அல்லது ஒருதேவனைப்போன்ற மற்றொருவரிடமிருந்து தன்னையே பார்க்காது; ஏனென்றால், அவைகளில் எல்லா பொருள்களும் உண்டாகிற தன்னில் தானே தெய்வமாயிருக்கிற யாதொன்றும் கிடையாது; தெய்வத்தன்மை ஒன்றுமில்லாத மற்றொன்றிலிருந்து

தெய்வத்தைப் பார்த்தல், தெய்வமல்லாததிலிருந்து தெய்வத்தைப் பார்த்தலாயிருக்கும். அது முடியாத காரியம். இதினால் தான், தெய்வத்தோடு சம்பந்தப்பட்டதெல்லாம் மற்றவர்களிட மிருந் தல்லாமல் ஆண்டவரிடமிருந்து உண்டாக்கும்படியாக, ஆண்டவர் மனிதனுடனும் அசரீர ஆன்மாவுடனும், வானவரோடும், சேர்ந் திருக்கிறார். ஏனென்றால், எவனுகினும் ஒருவனுக்கு இருக்கும் எல்லா நன்மையும், எல்லா உண்மையும், தன்னிடமேயிருந்தல்லா மல், ஆண்டவரிடமிருந்து உண்டாகிறதென்றும், நிஜமாகவே ஆண் டவரிட மிருந்தல்லாமல், ஒருவனுக்கு அவருக்கு பெயரிடவும், **ஏசு**வென்ம் று**கிரிஸ்து** வென்றும் அவருடைய பெயர்களை பேசவும் முடியாதென்றும் தெரிந்திருக்கிறது. தெய்வமாகவே யிருக்கிற முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருள் முடிவுள்ளதிலிருக் கும் எல்லா பொருள்களையும் மட்டின்றி பார்க்கிறதாகவும், அவர் களில் இருக்கும் அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் ஏற்ற லுக்கு தக்க அளவு அவர்களோடு தானே அவர் சேருகிறதாகவும், இதிலிருந்து இப்பொழுது ஏற்படுகிறது. சுருங்கச் சொல்லில், தன்னுடைய சொந்தமானதில்லாமல் ஆண்டவர், மனிதனிலும், தேவனிலும், ஒரு இருப்பிடத்தை வைக்கவும் அவர்களில் தங்கவும் முடியாது; தீமையாயிருப்பதினால், அவர்களுக்கு உரித்தானதில் இருக்கமாட்டார்; அது நன்மையானதா யிருந்தாலும், தன்னில் தானேயும், தன்னிடமிருந்தேயும் முடிவற்றதைப்பற்ற சக்தியற்ற தாயிருக்கிற முடிவுள்ளதாயிருக்கிறது. முடிவுள்ள பொருள் முடி வற்ற பொருளை பார்க்க எக்காலத்திலும் முடியாதென்றும், ஆனால் முடிவற்ற பொருள் தன்னிடமிருந்தே முடிவற்ற பொருளை முடி வுள்ள பொருள்களில் பார்க்கக் கூடுமென்றும், இவைகளிலிருந்து விசதமாகிறது.

54. தங்களுக்குள் அளவு சம்பந்தமொன்று மில்லாதபடி யினாலும், முடிவுள்ளது முடிவில்லாதிருக்கிறதைக் கைக்கொள்ள சக்தியற்றதாயிருக்கிறபடியினாலும், முடிவற்றபொருள் முடிவுள்ள பொருளோடு சேர்க்கப்படாததுபோல் தோன்றுகிறது; அப்படி யிருந்தாலும், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 282, 284.)

காண்பித்தப்படி, முடிவற்றபொருள் தன்னிடமேயிருந்து எல்லா பொருள்களையும் சிருட்டித்தபடியாலும், முடிவற்றபொருள், தன்னிடமேயிருந்துவந்த முடிவற்றதைத்தவிர, முடிவுள்ளவைகளில் எதையும் பார்க்கமுடியாதபடியினாலும், இது முடிவுள்ள பொருள்களுக்கு தங்களுக்குள் இருப்பதுபோல தோன்றக்கூடுமாகையாலும், ஐக்கியமிருக்கிறது. இவ்விதமாக, முடிவுள்ளதிலிருந்தல்லாமல், முடிவுள்ளதிலுள்ள முடிவற்றபொருளிலிருந்து, முடிவுள்ளதற்கும் முடிவற்றதற்கும் ஓர் அளவு சம்பந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அவ்விதமே, முடிவுள்ளது முடிவற்றதைப் பிடிக்க சக்தியுள்ளதாயிருக்கிறது; அப்படி தன்னில்தானே முடிவுள்ளதல்ல, அவனிலிருக்கும் அதிலிருந்தே முடிவற்றதிலிருந்து தன்னிடமிருந்தேபோல் அதற்கு சக்தியிருக்கிறது. ஆனால், இதைப் பற்றி இப்பொழுது தொடருவதில் அதிகம் சொல்லப்படும்.

55. தெய்வபராமரிப்பு, தான் செய்வதிலெல்லாம், தன்னிடமேயிருந்து வந்த முடிவற்றதும் நித்தியமானதுமாகியதை முக்கியமாய், மானிடவமிசத்தை இரக்ஷிக்க மதிக்கிறது. தன்னில் தானே முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருள், தன்னில்தானே தெய்வமாக, அல்லது தன்னிலேயே ஆண்டவராக இருக்கிறது; ஆனால் தன்னிடமேயிருந்து வந்த முடிவற்றதும் நித்தியமானபொருள், புறப்படும் தெய்வமாய் அல்லது தன்னிடமேயிருந்து, சிருட்டிக்கப்பட்ட மற்றவர்களிலும், இவ்விதமாக மனிதர்களிலும், தேவர்களிலுமிருக்கும் ஆண்டவராயிருக்கிறது; இந்த தெய்வமானது தெய்வபராமரிப்புடன் அந்நியமில்லாததாயிருக்கிறது; ஏனென்றால் ஆண்டவரானவர், தன்னிடமேயிருந்துவரும் தெய்வத்தினால், எல்லாபொருள்களும் சிருட்டிக்கப்பட்ட ஒழுங்கில் அவைகளை சேர்த்து பிடிக்கப்பட சித்தப்படுத்திவைத்திருக்கிறார்; புறப்படும் தெய்வமானது இதை செய்கிறபடியினால், இவைகளெல்லாம் தெய்வபராமரிப்பாகிறது.

56. தெய்வபராமரிப்பானது, தான் செய்வதிலெல்லாம், தன்னிடமேயிருந்துவரும் முடிவற்றதும், நித்தியமாகியதைப்

பார்க்கிறதென்பது, சிருட்டிக்கப்பட்ட ஒவ்வொருபொருளும், முடிவற்றவராயும், நித்தியமானவராயும் இருக்கும் முதற்பொருளிலிருந்து இறுதிப்பொருள்கள்வரையில் புறப்படுகிறதென்பதிலிருந்தும், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில், பிரபஞ்சத்தின் சிருட்டியை குறித்துசொல்லும் பாகத்தில் காண்பித்திருக்கிறபடி, இறுதியானதிலிருந்து, அது வந்த முதற்பொருளுக்குபோகிறதென்பதிலிருந்தும், விசதமாகும். அது உற்பத்தியானமுதற்பொருள், எல்லா விருத்தியடைதலிலும், அதிக அந்தரங்கமாயிருப்பதினால், புறப்படும் தெய்வம் அல்லது தெய்வபராமரிப்பு, தான் செய்வதிலெல்லாம் முடிவற்றதும், நித்தியமானதுமாகிய பொருளின் ஒரு பிரதிமையை பார்க்கிறது என்பது தொடருகிறது. அது இதை எல்லாபொருள்களிலும் பார்க்கிறது: ஆனால் சிலபொருள்களில், உணர்ச்சியின் திருஷ்டாந்தத்துக்காகவும்,மற்றவைகளில் அவைகளுக்காக அல்லாமலும் பார்க்கிறது. எல்லா பொருள்களின் வேற்றுமையிலும், எல்லாபொருள்களின் காய்த்தலிலும் பெருகுதலிலும், உணர்ச்சியின் திருஷ்டாந்தத்துக்கு (2) அந்த பிரதிமையை அது தெரியக்காட்டுகிறது.**எல்லாபொருள்களின் வேற்றுமையில் முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளின் ஒரு பிரதிமை,** மற்றொன்றைப்போன்று ஒரே மாதிரியிருக்கிற ஒரு பொருளில்லை என்பதிலிருந்தும், அனந்தகாலம்வரையில் அப்படியிருக்க முடியாதென்பதிலிருந்தும் தெளிவாயிருக்கிறது. முதலில் சிருட்டிக்கப்பட்டதிலிருந்து, மானிடர்களுடைய முகங்களிலும், மேலும் அவர்கள் முகங்கள் குறிப்பாயிருக்கிற அவர்களுடைய மனதிலிருந்தும், மேலும், ஆசைகளிலிருந்தும், உணர்ச்சிகளிலிருந்தும், சிந்தனைகளிலிருந்தும் மனது ஏற்படுகிறபடியினால், அவைகளிலிருந்தும், இது கண்ணுக்குப் புலப்படுகிறது. இந்த காரணத்துக்காக சர்வவியாபகமுள்ள சுவர்க்கத்தில் ஒரே மாதிரியிருக்கிற இரண்டு தேவர்களாவது, இரண்டு சூக்கும சரீரமுள்ள ஆன்மாக்களாவது இல்லை. அனந்த காலம்வரையில் இருக்கவும் முடியாது. ஸ்தூல லோகத்திலும் சூக்கும லோகத்திலும் இரண்டிலுமுள்ள, பார்வைக்கு உட்பட்ட எந்த பொருள் விஷயத்திலும் அப்படியேயிருக்கிறது. வேற்றுமையானது முடிவற்றதென்

(3) றும் நித்தியமானதென்றும் இதிலிருந்து விசதமாகும். எல்லா பொருள்களின் கனிகொடுத்தலிலும் பெருகுதலிலும் முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பொருளின் ஒரு பிரதிமை, கந்த மூலவர்க்கத்தின் விதைகளில், தங்கியிருக்கும் சக்தியிலிருந்தும், பிராணிவர்கத்தில், முக்கியமாய் மீன்கள் இனத்திலிருக்கும் ஈனும் சக்தியிலிருந்தும் விசதமாகிறது; ஏனென்றால், தங்களுடைய சக்திகளுக்கு தக்கபடி அவைகள் கனிகொடுக்கச்செய்யப்பட்டாலும், விருத்தியாக்கப்பட்டாலும், ஒருஜீவ காலத்திற்குள் முழு உலகத்தினுடையவும் பிரபஞ்சத்தினுடையவும் பரப்பை நிரப்பும். அதிகரிக்கும் சக்தியில், அனந்தகாலம் தானே விருத்தியடையும் முயற்சி மறைந்துகிடக்கிறது என்று இதிலிருந்து விசதமாகிறது. சிருட்டி முதல் கனிகொடுத்தலும் பெருகுதலும் தவராது இருந்தமையாலும், எப்பொழுதும் அவைகள் நிற்காதபடியினாலும், இந்த சக்தியில், அனந்தகாலம் தானே விருத்தியடைய முயற்சியிருக்கிறது.

57. அன்பைச்சேர்ந்த ஆசைகள் விஷயத்திலும், ஞானத்தைச்சேர்ந்த உணர்ச்சிகள் விஷயத்திலும் மனிதர்களிடத்தில் அதேமாதிரி இருக்கிறது. அவைகள் இரண்டின் பேதம் முடிவற்றதாயும் நித்தியமானதாயுமிருக்கிறது; பரமார்த்தமாயிருக்கிற அவைகளின் காய்த்தலும் பெருகுதலுங்கூட அப்படியேயிருக்கிறது. ஒரே தன்மையதாகும்படி மற்றொருவனுடையது போன்ற ஆசையையும் உணர்ச்சியையும் எந்த மனிதனும் அநுபவிக்கிறதில்லை; மேலும் அவ்விதமானது எப்பொழுதும் இருக்க முடியாது. மேலும், முடிவின்றி ஆசைகள் காய்க்கப்படலாம், உணர்ச்சிகள் பெருகச்செய்யலாம். அறிவானது குறையாததென்பது தெரிந்திருக்கிறது. எல்லையில்லாமலும் அல்லது மட்டின்றியும், சதாகாலமும் இந்த காய்க்கும் சக்தியும் பெருகும் சக்தியும், மனிதர்களில் ஸ்தூலப்பொருள்களிலிருக்கிறது; ஆனால் சூக்கும தேவர்களுக்கு அது சூக்கும பொருள்களிலும், அதிசூக்கும தேவர்களுக்கு அதிசூக்கும பொருள்களிலுமிருக்கிறது. பொதுவாய் இப்படி யிருப்பது ஆசைகளும், உணர்ச்சி

களும் அறிவுகளுமட்டுமல்ல. ஆனால், அவைகளிலிருக்கும் ஒவ்வொரு தனித்த பொருளும், குறிப்பாக அதிக நுண்ணிய பொருளும் கூட அப்படி இருக்கிறது. அவைகள் தன்னிடமே யிருந்து முடிவற்றும் நித்தியமாயிருக்கப் பட்டதினால், தானே முடிவற்றதும் நித்தியமானதுமாகியபொருளிலிருந்து உண்டாகிறபடியினால், அவைகள் அவ்வண்ண மிருக்கின்றன. ஆனால் முடிவுள்ள பொருளுக்கு தன்னிடமே தெய்வத்தின் எதுவும் யில்லாதபடியினால், மனிதன் அல்லது தேவனில் அவனுக்கு சொந்தமாக அவ்வித பொருளில்லை; அதிக நுண்ணிய பொருளும் யில்லை; ஏனென்றால், ஒரு மனிதன் அல்லது வானவன் முடிவுள்ளவனாகவும், தன்னில் தானே இறந்தவனாயும் ஒரு ஆசயமாயும் மாத்திரம் இருக்கிறான்; அவனில் உயிருள்ளது, கிட்டுமானத்தால் அவனுடன் சேர்க்கப்பட்டிருக்கிறதும், அவனுடைய சொந்தமாக தோன்றுவதுமாகிய புறப்படும் தெய்வத்திலிருந்து வருகிறது. விஷயம் அப்படியிருக்கிறதென்பது பின் வருவதில் அறிந்துகொள்ளலாம்.

58. மேலே காண்பித்தபடி (பி. 27-45) மானிடவர்க்கத்திலிருந்து ஒரு சுவர்க்கத்தை ஏற்படுத்தவேண்டுமென்பது தெய்வபராமரிப்பின் நோக்கமா யிருக்கிறபடியினால், அந்த தெய்வபராமரிப்பு, மானிட வமிசத்தை முக்கியமாய் இரக்ஷிப்பதில், தன்னிடமே யிருந்து முடிவற்றும் நித்தியமாயும் இருக்கிறதை மதிக்கிறது; இது முடிவாயிருப்பதினால், மனிதனை சீர்படுத்தலும் குணப்படுத்தலும், இம்மாதிரியாக அவனுடைய மோக்ஷம் என்பது தெய்வபராமரிப்பு முக்கியமாய் பார்க்கப்பட்டதென்று ஏற்படுகிறது. ஏனென்றால், சுவர்க்கமானது இரட்சிக்கப்பட்டவர்கள் அல்லது குணப்பட்டவர்கள் சேர்ந்து உண்டாகிறது. மனிதனை குணப்படுத்தலென்பது, ஆண்டவரிடமிருந்துவரும் தெய்வத்தில் சேர்க்கப்பட்டிருப்பதுபோல் நன்மையையும் உண்மையையும் அல்லது அன்பையும் ஞானத்தையும் அவனில் கூட்டுதலா யிருக்கிறபடியினால், தெய்வ பராமரிப்பு மானிடவமிசத்தை இரக்ஷிப்பதில் முதன்மையாய் இதை பார்க்கிறது; ஏனென்றால், மனிதனில் முடிவற்றதும் நித்தியமாயிருக்கும் பொருளின் பிரதிமை, நன்மை

உண்மைகளின் விவாகத்தில் மாத்திரம் இருக்கிறது, புறப்படும் தெய்வம் மானிடவமிசத்தில் இதை செய்கிறதென்பது **பரிசுத்த ஆவி** என்று சொல்லப்பட்ட புறப்படும் தெய்வத்தினுல் நிரப்பப் பட்டு, வேதத்தில் சொல்லப்பட்ட வருமுன் அறிவித்தவர்களிட மிருந்தும், மேலும் ஞானம் உண்டாக்கப்பட்டு சுவர்க்கத்து வெளிச்சத்தில் தெய்வ உண்மைகளை அறிந்து பார்க்கப்பட்டவர்க ளிடமிருந்தும், முக்கியமாய், சந்நிதியையும் உட்பெருக்கையும் ஐக்கியத்தையும் விவேகத்துடன் பார்க்கப்பட்ட **தேவர்களிடமிருந் தும்** தெரிந்துகொள்ளப்படுகிறது; ஆனுல், தேவர்கள்கூட அந்த ஐக்கியமானது, சேர்க்கை என்று சொல்லக்கூடியதாய் மாத்திரம் இருக்கிறதென்று ஒத்துக்கொள்ளுகிறுர்கள்.

59. தெய்வபரிபாலனம், மனிதன் அபிவிர்த்தியிலெல்லாம் அவனுடைய நித்தியமான நிலைமைக்கு பிரயாசப்படுகிறதென்று இன்னும் தெரியாது; ஆனுல், தெய்வமானது முடிவற்றபொருளா யும் நித்தியமானபொருளாயு மிருப்பதாலும், முடிவற்றதும் நித் தியமாயிருக்கும் பொருள் அல்லது தெய்வம் காலவரைக்குட்படா மல், அதனுல் எதிர்கால பொருள்கள் எல்லாம் அதின் எதிரிலிருக் கிறபடியினுலும், அது வேறு யாதொன்றையும் பார்க்கமுடியாது; தெய்வமானது அவ்விதமாயிருப்பதினுல், நித்தியமானது, அது செய்யும் எல்லா வற்றிலும், ஒவ்வொன்றிலும், இருக்கிறதாக தொடருகிறது. ஆனுல் கால இடவரைக்கு உட்பட்டு நினைக்கப் பட்டவர்கள், காலத்துக்கு சம்பந்தப்பட்டவைகளை அவர்கள் நேசிக்கிறுர்கள் என்பது மாத்திரமல்லாமல், சுவர்க்கத்திலிருப்பதி லிருந்து அல்லாமல் உலகத்திலிருப்பதிலிருந்து அவர்கள் நினைக்கி றதினுலும் கூட, பிரயாசத்துடன் இதை அறிந்து கொள்ளுகிறுர் கள்; சுவர்க்கமானது அவர்களுக்கு பூமியின் முடிவு இருக்கிற அவ்வளவு தூரம் இருக்கிறது. ஆனுல், தெய்வத்தோடு ஐக்கியப் பட்டவர்கள் ஆண்டவரைக் கொண்டு நினைக்கிறபடியினுல், நித்திய மில்லாத இது என்னவென்றும், இம்மைக்குறிய பொருள்கள் தாரதம்மியம் பார்த்தால் சூனியம் போலில்லையா என்றும், முடிவாக்கப் பட்டபோது அது கூட சூனியமாகிறதில்லையா என்

றும், தங்களுக்குள்ளே நினைத்துக்கொண்டு, தற்கால விஷயங்களை நினைக்கும்போது, நித்தியமானதிலிருந்து கூட அவர்கள் நினைக்கிறார்கள். நித்தியமான பொருளின் விஷயத்தில், அது வேறு விதமா யிருக்கிறது ; இதுமட்டும் இருக்கிறது; ஏனென்றால், அதன் சொரூபப் பொருள் முடிவற்றிருக்கிறது. ஒருவன் தற்காலத்திலிருந்து நினைக்கும்போது இவ்வண்ணம் நினைத்தல், நித்தியமானதிலிருந்து அதே காலத்தில் நினைத்தலா யிருக்கிறது ; ஒரு மனிதன் அப்படி நினைத்து, அதே காலத்தில் அம்மாதிரி வாழ்ந்தால், அக்காலத்தில், அவனுடன் இருக்கும் புறப்படும் தெய்வம் அல்லது தெய்வ பரிபாலனம், எல்லா அபிவிருத்தியிலும், சுவர்க்கத்தில் அவனுடைய சதாகால வாழ்வை மதித்து, அதற்கு கொண்டுபோய் விடுகிறது. நல்லவனும் கெட்டவனுமாகிய ஒவ்வொரு மனிதனிலும் இருக்கும் தெய்வம் நித்தியமானதை மதிக்கிறதென்பது, பின் வருவதில் அறிந்து கொள்ளப்படும்.

60. IV. **முடிவற்றதும் சதாகாலமுள்ளதுமான பொருளின் பிரதிமை தேவர்கள் உலகத்தில் இருக்கிறது.** அவசியம் தெரிந்து இருக்கவேண்டிய பொருள்களில், தேவர்கள் சுவர்க்கம் கூட சேர்ந்திருக்கிறது ; ஏனென்றால், சமய கோட்பாடுள்ள ஒவ்வொருவனும் அதை நினைத்து, அங்கே போக விரும்புகிறான். ஆனால், சுவர்க்கமானது அதற்கு போகும் வழி தெரிந்தவர்களுக்கும், அதில் நடப்பவர்களுக்கும் தவிர மற்றவர்களுக்கு கொடுக்கப்படுகிறதில்லை. இந்த வழியானது கூட, சுவர்க்கத்தை உண்டாக்குகிறவர்களின் குணத்தை தெரிந்து கொள்வதிலிருந்தும், ஒருவன் உலகத்திலிருந்து தன்னுடன் தேவர்கள் குணத்தை கொண்டு போனாலொழிய, எவனும் தேவனாகிறதில்லை அல்லது, சுவர்க்கத்துக்கு வருகிறதில்லை என்பதிலிருந்தும் கொஞ்சம் தெரிந்து கொள்ளப் படலாம்; இதில், அதில் நடப்பதிலிருந்து அந்த வழியின் அறிவும், அதை தெரிந்துகொள்வதால், அந்த வழியில் நடப்பதுமிருக்கிறது. சூக்கும உலகத்தில் கூட, சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டத்துக்கும், நரகத்து ஒவ்வொரு கூட்டத்துக்கும் நீளும் வழிகள் பிரத்தியட்சமா யிருக்கின்றன ; ஒவ்வொருவனும், தன்னிட

மிருந்தே போல், தன்னுடைய வழியை பார்க்கிறான். ஒவ்வொரு அன்புக்கும் அங்கே வழிகள் ஒன்றாயிருப்பதால், அவன் அதை பார்க்கிறானென்பது ஏற்படுகிறது: அந்த அன்பானது அதை திறந்து, அவனை அவனுடைய தோழர்களிடம் கொண்டு போகிறது. எவனும் தன்னுடைய அன்பின் வழியைத் தவிர மற்ற வழிகளைப் பார்க்கிறதில்லை. தேவர்கள், சுவர்க்க அன்புகளைத் தவிர வேறொன்றுமில்லை யென்பது இதிலிருந்து தெளிவாகிறது; ஏனென்றால், அப்படியில்லாவிட்டால், சுவர்க்கத்துக்கு போகும் வழிகளை அவர்கள் பார்த்திருக்கமாட்டார்கள்: ஆனால் சுவர்க்கத்தைக் குறித்து விவரித்துக் கூறினால், இது அதிக தெளிவாயிருக்கும்.

61. ஒவ்வொரு மனிதனுடைய ஆன்மாவும் ஆசையாகவும், அதிலிருந்து உண்டாகும் சிந்தனையாகவுமிருக்கிறது; எல்லா ஆசையும் அன்பைச்சேர்ந்திருக்கிறபடியினாலும், சிந்தனை புத்தியைச் சேர்ந்திருக்கிறபடியினாலும், ஒவ்வொரு ஆன்மாவும் தன்னுடைய சொந்த அன்பாகவும், அதிலிருந்து தன்னுடைய சொந்த புத்தியாகவும் இருக்கிறது; தானே வீட்டிலிருந்துகொண்டு தியானிக்கும் காலத்தில் சம்பவிக்கிறபடி, ஒரு மனிதன் தன்னுடைய சொந்த ஆன்மாவிலிருந்து மாத்திரம் நினைக்கும்போது, அவனுடைய அன்புக்குச்சேர்ந்த ஆசையிலிருந்து நினைக்கிறான் என்பது அதற்கு காரணமாயிருக்கிறது. இதனால், இறந்தபிறகு ஆகிறபடி, ஒரு மனிதன் சூக்கும சரீரமுள்ள ஆன்மாவாகும்போது, தன்னுடைய சொந்த இச்சையிலிருந்து வந்த ஆசையாக யிருக்கிறானென்றும், அவனுடைய ஆசைக்கு சேர்ந்ததாயிருக்கிறதை விட இதர சிந்தனையாகவில்லை என்றும் விசதமாகலாம். அவனுடைய இச்சையானது தீமையினிடத்து இச்சையாயிருந்தால், அவன் துராசையாயுள்ள ஒரு தீங்கான ஆசையாக இருக்கிறான். அவனுடைய இச்சையானது, நன்மையை நேசித்தலாயிருந்தால், அவன் ஒரு நல்ல ஆசையாயிருக்கிறான்; ஒவ்வொருவனுடனும் தீமைகளை பாவங்களாக தள்ளினவரையில் நல்ல ஆசையானது இருக்கிறது; ஒவ்வொருவனுடனும் அம்மாதிரி அவன் தீமைகளை தள்ளாத

வரையில் தீங்கான ஆசை யிருக்கிறது. இப்படியிருக்கையில், எல்லா சூக்கும சரீர ஆன்மாக்களும் தேவர்களும் ஆசைகளா யிருக்கிறபடியினால், எங்கும் நிறைந்த தேவர் சுவர்க்கம் நன்மையி னுடைய எல்லா ஆசைகளின் இச்சையைத் தவிர வேறொன்று மில்லையென்றும், அதிலிருந்து உண்மையினுடைய எல்லாஉணர்ச்சி களின் ஞானமென்றும் தெளிவாயிருக்கிறது. எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியாலும், ஆண்டவ ரானவர் **இச்சாசத்தியேயாகவும் ஞானசத்தியே** யாகவும் யிருக்கிற படியினாலும், தேவர் சுவர்க்கம் அவருடைய பிரதிமையாயிருக்கிற தென்று தொடருகிறது; **பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும்** தங்க ளுடைய உருவத்தில் **மனிதனாக** யிருக்கிறபடியினால், தேவர் சுவர்க்கமும் அவ்வித உருவத்திலிருப்பதைவிட வேறுவிதமாய் இருக்க முடியாதென்றுகூட ஏற்படுகிறது. ஆனால் இதைப்பற்றி, பின்வரும் பிரிவில் அதிகம் சொல்லப்படும்.

62. தேவர்கள் சுவர்க்கம் ஆண்டவருடைய பிரதிமையாக யிருக்கிறபடியினாலும், ஆண்டவர் முடிவற்றவராகவும் நித்திய மானவராகவும் இருக்கிறபடியினாலும், அந்த தேவர் சுவர்க்கம் முடிவற்றதும் நித்தியமா யிருப்பதுமாகிய பொருளின் பிரதிமை யாயிருக்கிறது. சுவர்க்கம் உண்டாக்கிய அநேக ஆயிரங்கள் கணக் கான தேவர் இருக்கிறார்களென்பதினாலும், சுவர்க்கத்து இச்சை யில் சாதாரண ஆசைகள் கணக்கற்றதாய் இருப்பதுபோல அவ் வளவு அநேக கூட்டங்களாக அவைகள் ஏற்படுத்தப்படுகிறதென் பதினாலும், ஒவ்வொரு கூட்டத்திலும் உள்ள ஒவ்வொரு தேவ னும், அவனுடைய சொந்த ஆசையாய் தெளிவாயிருக்கிறானென் பதினாலும், அவ்வளவு அநேக ஆசைகளிலிருந்து பொதுவாகவும் சிறப்பாகவும் **சுவர்க்கத்து உருவம்** இருக்கிறதென்பதினாலும், ஒரு மனிதன் ஒன்றாயிருப்பதுபோல், ஆண்டவர் முன்பாக ஒன்றுபோ லிருக்கிற உருவங்களுக்கு உருவமாயிருக்கிற **பரம இச்சாசத்தியின்** உருவத்தில் பிரவேசிக்கிறவர்கள் எவ்வளவு அதிகமாயிருக்கிறார் களோ, அவ்வளவு அதிக பூரணமாக அந்த ஐக்கியமாகிறபடியி னால், எண்கள் அதிகரிக்கிறதற்கு தக்கபடி, இந்த உருவமானது

எப்பொழுதும், பக்குவப்பட்டு வருகிறது என்பதினாலும், அவனுடைய முடிவின்மையினுடையவும் நித்தியத்துவனுடையவும் பிரதிமை தோன்றுகிறது. இவைகளிலிருந்து, முடிவற்றதும் நித்தியமாயிருக்கிறதுமாகிய பொருளின் ஓர் பிரதிமை தேவர்கள் சுவர்க்கத்தில் தெரியக் காட்டப்படுகிற தென்பது தீர்க்கமாய் வெளிப்படையாயிருக்கிறது.

63. இந்த சுருக்கமான விவரணையிலிருந்து ஏற்பட்ட சுவர்க்கத்தைக் குறித்த அறிவிலிருந்து, நன்மையிடத்துகொள்ளும் அன்பிலிருந்துவருகிற ஆசையானது, ஒருமனிதனுக்கு சுவர்க்கமாகிறதென்று, வெளிப்படையாயிருக்கிறது. ஆனால், தற்காலத்தில் இது யாருக்குத்தெரியும்? இதுவன்றி, நன்மையிடத்துகொள்ளும் அன்பிலிருந்துவரும் ஆசையானதுகூட என்னவென்றும், நன்மையிடத்துகொள்ளும் அன்பிலிருந்து வரும் ஆசைகள் எண்ணற்றவை என்றும், இதுவன்றி முடிவற்றவை என்றும் யாருக்கு தெரியும்? ஏனென்றால், முன்சொல்லியபடி, ஒவ்வொருதேவனும், தெளிவாய் தன்னுடைய சொந்த ஆசையாகயிருக்கிறான்; சுவர்க்கத்து உருவம், அங்கிருக்கும், பரமஇச்சர்சத்தியின் எல்லா ஆசைகளின் உருவமாயிருக்கிறது. அதேகாலத்தில் அன்பேயாகவும், அதேகாலத்தில் ஞானமேயாகவும், ஒருமிக்க முடிவற்றவராகவும் நித்தியமானவராயும் இருக்கிறவர் தவிர யாராலும் எல்லா ஆசைகளையும் இந்த உருவத்தில் சேர்த்தமுடியாது; ஏனென்றால், முடிவற்றதாயும் நித்தியமானதாயுமிருக்கிறது எல்லா உருவத்திலுமிருக்கிறது. முடிவற்றது ஐக்கியத்திலும், நித்தியமானது நித்தியத்துவத்திலுமிருக்கிறது; முடிவற்றதும் நித்தியமாயிருப்பதும் அதிலிருந்து பிரிக்கப்பட்டால், ஒரு நொடி நேரத்தில் அது அழிந்துபோகும். ஆசைகளை உருவமாக சேர்க்க வேறுயாரால்முடியும்? இதுவுமன்றி, அதில் புகும் தனித்த ஒன்றைக்கூட சேர்க்க வேறுயாரால் முடியும்? ஏனென்றால், எல்லாவற்றையும் குறித்து சர்வவியாபக அபிப்பிராயம் இல்லாவிட்டால், ஒன்றுசேர்க்கப்பட முடியாது; எல்லாவற்றிலும் சர்வவியாபகமுள்ளது, ஒவ்வொன்றைக்குறித்து தனித்த அபிப்பிராயமிருந்தாலொழிய சேர்க்கப்பட

மாட்டாது. அந்த உருவத்தை கூட்டுகிறவைகள் அநேகஆயிரங்கள் கணக்காயிருக்கின்றன; அநேகஆயிரங்கள் கணக்கானது ஒவ்வொரு வருஷமும் அதில் பிரவேசிக்கின்றன. அப்படியே எப்பொழுதும் செய்யும். எல்லாகுழந்தைகளும் அதற்குள்வருகின்றன; நன்மையினிடத்துகொள்ளும் அன்பின் ஆசைகளிருப்பதுபோல் அவ்வளவு அநேக பாலியதிசை கடந்தவர்கள் அதில் பிரவேசிக்கிருர்கள். இவைகளிலிருந்து, வானேர் உலகத்தில், முடிவற்றவரும் நித்தியமாயிருப்பவரின் பிரதிமையை மறுபடியும் பார்க்கலாம்.

64. V. **தன்னுடைய பிரதிமையாயிருக்கிற ஒரு மனிதனைப் போல ஆண்டவர் முன்பாக தோன்றும்படி, வானேர் உலகத்தை உருவப்படுத்துவதில், முடிவற்றவராயும் நித்தியமானவராயுமிருப்பவரை மதித்தல், தெய்வபரிபாலனத்தின் உள்ளுக்குள்ளான கருத்தாயிருக்கிறது.** எங்கும் நிறைந்த சுவர்க்கமானது ஆண்டவர் முன்பாக ஒரு மனிதனைப்போலிருக்கிறதென்பதும், சுவர்க்கத்து ஒவ்வொருகூட்டமும் அம்மாதிரியிருக்கிறதென்பதும், அதிலிருந்து, ஒவ்வொரு தேவனும் பூரண உருவத்தில் மனிதனுயிருக்கிருனென்பதும், சதாகாலம் ஆண்டவராயிருக்கிற, சிருட்டிகர்த்தாவாகிய கடவுள் மனிதனுயிருக்கிறபடியினுல் இது இப்படியிருக்கிறதென்பதும், **சுவர்க்கத்தையும் நரகத்தையும்** குறித்த நூலில் (பி. 59-86) பார்க்கப்படலாம். மேலும், அதிலிருந்து, மனிதனுடைய எல்லாபொருள்களுடனும் சுவர்க்கத்து எல்லாபொருள்களின் ஒரு அன்னுவயமிருக்கிறதென்பதும், பார்க்கப்படலாம் (பி. 87-102). எங்கும் நிறைந்த சுவர்க்கம் ஒருமனிதனைப்போலிருக்கிறதென்பது என்னுல் பார்க்கப்படவில்லை; ஏனென்ருல், எங்கும் நிறைந்த சுவர்க்கம், ஆண்டவரால் மாத்திரம்தவிர வேறுயாராலும் பார்க்கப்பட முடியாது; ஆனுல், சுவர்கத்து, மிகப்பெரியதும் மிகக்குறைவானதுமான ஓர் முழுகூட்டமும் ஒருமனிதனைப்போல் தோன்றியதென்பது, என்னுல் பலதடவைகளில் பார்க்கப்பட்டிருக்கிறது; முழுமொத்தத்தில் சுவர்க்கமாயிருக்கிற எல்லாவற்றிலும் பெரியகூட்டம், அம்மாதிரியே, ஆண்டவர்முன்பாகதவிர தோன்றுகிறதென்றும், ஒவ்வொரு தனித்ததேவனும் தன்னுடைய எல்லா உருவத்

திலும் மனிதனுயிருப்பதற்கு இதுதான் காரணமென்றும் சொல்லப்பட்டது.

65. எங்கும் நிறைந்த சுவர்க்கமானது ஆண்டவருடைய பார்வையில் ஒரு மனிதனு யிருக்கிறபடியினால், ஒரு மனிதனிலிருக்கும் அங்கங்களும், ஆந்திரீகமும், அவயவங்களும் போல, சுவர்க்கமானது அவ்வளவு அநேக பொதுக் கூட்டங்களாக பேதம் காட்டப்படுகிறது; ஒவ்வொரு பொதுக் கூட்டமும், ஒவ்வொரு ஆந்திரீகத்திலும் அங்கங்களிலும் மிகப் பெரிய பாகங்களிலிருக்கிறது போல, அவ்வளவு அநேக குறைவாய் பொதுவான அல்லது சிறப்பான கூட்டங்களாகவும், பேதம் காட்டப்படுகிறது. இதிலிருந்து சுவர்க்கத்தின் குணம் வெளிப்படையா யிருக்கிறது; இப்படி யிருக்கையில், ஆண்டவர் தாமே மனிதனு யிருப்பதினுலும், சுவர்க்கமானது அவருடைய பிரதிமையா யிருப்பதினுலும், சுவர்க்கத்திலிருப்பது என்பது, ஆண்டவரிலிருப்பதாக சொல்லப்படுகிறது. ஆண்டவர் தானே மனிதனு யிருக்கிறரென்பது, **பதி பசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 11-13, 285-289) பார்க்கப்படலாம்.

66. நன்மையுடையவும், அதே காலத்தில் உண்மையுடையவும் ஒவ்வொரு ஆசையும், அதன் வடிவத்தில் ஒரு மனிதனுயிருக்கிறதென்கிற தேவதா சம்பந்தமானதென்று சொல்லக்கூடிய இந்த இரகசியத்தை இவைகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்; ஏனென்றால், ஆண்டவரிடமிருந்து புறப்படும் ஏதாகிலும் அவருடைய இச்சாசத்தியிலிருந்து, அது நன்மையினுடைய அன்பென்றும், அவருடைய ஞான சத்தியிலிருந்து, அது உண்மையினுடைய ஆசை யென்றும், ஊகிக்கிறது. ஆண்டவரிடமிருந்து புறப்படும் உண்மையின் ஆசை, உணர்ச்சியாகவும், அதிலிருந்து தேவனிலும் மனிதனிலும் உண்மையின் சிந்தனைபோலவும் தோன்றுகிறது; ஏனென்றால், உணர்ச்சியும் சிந்தனையும், ஆண்டவரிடமிருந்து, உண்மையின் ஆசையோடு ஏகமாக புறப்பட்ட

போதிலும், இவைகள் வரப்பட்ட ஆசையைக் குறித்து கவனிக்காமல், அவைகளைக் குறித்து கவனம் செலுத்தப்படுகிறது.

67. இப்படியிருக்கையில், சிருட்டி முதல் மனிதனானவன் சின்னஞ்சிறிய உருவத்தில் சுவர்க்கமாகவும், அதிலிருந்து ஆண்டவரின் ஓர் பிரதிமையாகவுமிருக்கிற படியினாலும், தேவர்கள் இருக்கிற அளவு, சுவர்க்கமானது அவ்வளவு அநேக ஆசைகளால் அமைந்திருக்கிற படியினாலும், ஒவ்வொரு ஆசையும் அதன் உருவத்தில் மனிதனாயிருக்கிற படியினாலும், உருவத்தில் சுவர்க்கமாயும், அதினால் ஆண்டவரின் ஒரு பிரதிமையாயும் செய்யப்பட தெய்வபரிபாலனம் மனிதனுடன் தொடர்ச்சியாயிருக்கிறதென்பது, ஏற்படுகிறது; அவன் இந்த ஆசையாக செய்யப்பட, நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஆசையால், இது செய்யப்படுகிறபடியினால், இது தொடர்ச்சியான தெய்வ பரிபாலனமா யிருக்கிறது. ஆனால், மனிதனானவன் இங்கே அல்லது அங்கே சுவர்க்கத்திலும் அல்லது இங்கே அல்லது அங்கே தெய்வ சுவர்க்கத்து மனிதனிலும் இருக்க, அதன் அந்தரங்கமிருக்கிறது; ஏனென்றால், அவ்விதமாக அவன் ஆண்டவரிலிருக்கிறான், ஆனால், ஆண்டவர் சுவர்க்கத்துக்கு வழி காட்டப் பட்டவர்கள் விஷயத்தில் இது செய்யப்படுகிறது. ஆண்டவர் இதை முன் அறிந்துகொள்ளுகிற படியினால், மனிதனானவன் இம்மாதிரி யிருக்க இடைவிடாது சித்தப்படுத்திக்கூட வைக்கிறார்; ஏனென்றால், இவ்விதமாக, சுவர்க்கத்துக்கு வழி காட்டப்பட தானே விடுகிறவன், சுவர்க்கத்தில் தன்னுடைய சொந்த இடத்திற்கு போக தயாராக்கப் படுகிறான்.

68. மேல் கூறியபடி மனிதனில் அங்கங்களும், ஆந்திரீகமும், அவயவங்களும் இருக்கிறது போல, அவ்வளவு அநேக கூட்டங்களாக சுவர்க்கமானது பேதம் காட்டப்படுகிறது; இவைகளில் எந்த பாகமும் தன்னுடைய சொந்தமானது தவிர, எந்த இடத்திலும் இருக்க முடியாது. ஆகையினால், தெய்வ அதிசூக்கும மனிதனில் தேவர்கள் அவ்வித பகுதிகளாக யிருப்பதினாலும், உலகத்தில் மனிதர்களா யிருந்தவர்கள் தவிர வேறு யாரும் தேவர்களாக செய்யப்

படாத படியினாலும், சுவர்க்கத்துக்கு நடத்தப்பட தானே விடுகிற மனிதன், அவனுடைய சொந்த இடத்துக்கு ஆண்டவரால் அதனுடன் ஒத்துப்போகிற நன்மையினுடையவும் உண்மையினுடையவும் அவ்வித ஆசையினால், இடைவிடாது தயாராக்கப்படுகிறானென்று ஏற்படுகிறது. இந்த இடத்தில்கூட, ஒவ்வொரு மானிட தேவனும், உலகத்தைவிட்டுப் போன பிறகு எழுதிவைக்கப்படுகிறான். சுவர்க்கத்தைக் குறித்து தெய்வ பரிபாலனத்தின் அந்தரங்க கருத்து இதுதான்.

69. ஆனால், சுவர்க்கத்துக்கு நடத்தப்பட்டு அங்கே எழுதி வைக்கப்பட விடாதவன், நரகத்தில் அவனுடைய சொந்த இடத்துக்கு தயாராக்கப் படுகிறான்; ஏனென்றால், மனிதன் தன்னாலேயே நரகத்தின் மிகவும் தாழ்ந்த இடத்துக்கு இடை விடாமல் போகிறான். ஆனால் ஆண்டவரால் இடைவிடாமல் பிடித்துவைக்கப் படுகிறான்; பிடித்துவைக்க முடியாதவன் உலகத்தை விட்டுப் போன பிறகு, உடனே எழுதி வைக்கப்படுகிற அங்கே ஏதோ ஒரு இடத்துக்கு தயார் செய்யப்படுகிறான்; இந்த இடமானது சுவர்க்கத்தில் ஏதோ ஒரு இடத்துக்கு எதிர்முகமா யிருக்கிறது; ஏனென்றால், நரகமானது சுவர்க்கத்துக்கு நேரிய எதிரானதாயிருக்கிறது. ஆகையினால், மானிட தேவன், நன்மை உண்மைகளின் ஆசைக்கு தக்கபடி சுவர்க்கத்தில் அவனுடைய சொந்த இடம் கொடுக்கப்படுகிறது போல, மானிட பேய், தீமை பொய்களின் ஆசைக்கு தக்கபடி, நரகத்தில் அவனுடைய சொந்த இடம் கொடுக்கப்படுகிறது; ஏனென்றால், ஒன்றுக்கொன்று எதிரிடையாய் ஒப்பான ஸ்திதியில் வைக்கப்பட்ட இரண்டு எதிரிடையான பொருள்கள் சம்பந்தத்தில் வைக்கப்படுகின்றன. நரகத்தைக் குறித்து கடவுளின் அந்தரங்க சங்கற்பம் இதுதான்.

## மனிதர்களுக்கு தெரிந்திருக்காத தெய்வ பரிபாலனத்தின் கட்டளைகளிருக்கின்றன.

70. ஓர் தெய்வபரிபாலன மிருக்கிறதென்பது தெரிந்திருக்கிறது; அது என்ன சுபாவமுடையதென்பது தெரியப்படவில்லை.

ஆண்டவருடையதை அவருக்கு ஆரோபிக்கவும், மனிதனுடைய தல்லாததை எந்த மனிதனுக்கும் ஆரோபிக்கப்படாமலிருக்கும் படிக்கும், தேவர்களின் ஞானத்திற்குள் இதுவரையில் மறைந்து கிடந்ததும், ஆனால் இப்பொழுது வெளிப்படுத்தப்பட வேண்டியதுமான இரகசியமாக தெய்வபரிபாலனத்தின் கட்டளைகளிருக்கிறபடியினால், இது தெரிந்திருக்கப்படவில்லை. ஏனென்றால், உலகத்தில் அநேகர் மானிட புத்தி இல்பொருளென்றும், தெய்வாதீனமென்பதும் தற்செயல் என்பதும் வெறும் வார்த்தைகளென்றும், தெரியாமல் எல்லாவற்றையும் தங்களுக்கேயும் தங்கள் புத்திக்கும் ஆரோபிக்கிறார்கள்; அல்லது அவர்கள் அம்மாதிரியே ஆரோபிக்க முடியாததை தெய்வாதீனமானதென்றும், தற்செயலானதென்
(2) றும் சொல்லுகிறார்கள். கடவுளுடைய கட்டளைகள் தேவர்கள் ஞானத்தில் இதுவரையில் மறைந்து கிடந்த இரகசியங்களென்று சொல்லப்படுகின்றன. கிருஸ்துவ உலகத்தில் தெய்வ விஷயங்களில் புத்தியானது, சமயத்தினால், மூடப்பட்டிருக்கிறதனால், இப்படி யிருக்கிறது; தெய்வ பரிபாலனம் இருக்கிறது என்பது மாத்திரம் தவிர அதைப்பற்றி எதையும் அறிந்துகொள்ளவும், மேலும் அது இருக்கிறது அல்லது இல்லை என்பதையும், அதனுடன் அது சர்வ வியாபகமாக மாத்திரம் இருக்கிறதா அல்லது பிரத்தியேகமாக கூட இருக்கிறதா என்பதையும் தர்க்கிக்கவும், தனக்கு இஷ்டமில்லாத படியினால் மனிதன் சக்தியற்றவனாகும் படிக்கும், அல்லது சக்தியற்றவனான படியினால் இஷ்டமில்லாதவனாகும்படிக்கும், புத்தியானது அந்த விஷயங்களில் அவ்வளவு மந்தமானதாயும் எதிர்க்கிறதாயும் ஆய்விட்டது. புத்தியானது தெய்வ விஷயங்களில் சமயத்தினால் மூடப்பட்டபடியினால், இன்
(3) னும் அதிக தூரத்துக்கு போகக்கூடவில்லை; ஆனால், தானே நன்மையாயிருக்கிற நன்மையை மனிதன் தானே செய்யமுடியாதென்றும், தானே உண்மையா யிருக்கிற உண்மையை தன்னிடமே யிருந்து நினைக்க முடியாதென்றும், திருச்சபையில் ஒத்துக்கொள்ளுகிற படியினாலும், இது தெய்வ பரிபாலனத்துடன் ஒன்றாயிருக்கிறதினாலும், ஒன்றினிடத்தில் விசுவாசம் வைத்தல், மற்றதிலிருக்கும் விசுவாசத்தின் பேரில் சார்ந்திருக்கிறது;

ஆகையினால், ஒன்று உறுதிப்படுத்தப் படாமலும், மற்றது இல்லை எனப்படாமலும், இவ்விதமாக இரண்டும் அழிந்து போகாதபடி, தெய்வபரிபாலனம் எது என்று எல்லா ஆதாரங்களாலும் வெளிப் படுத்தப்பட வேண்டும். ஆயினும், மனிதனுடைய சித்தத்தையும் புத்தியையும் சேர்ந்தவைகளை ஆண்டவர் சித்தப்படுத்தி ஆளும் கட்டளைகள் தெரியப்படுத்தப் பட்டாலொழிய, இது வெளிப்படுத் தப்பட முடியாது; ஏனென்றால், இந்த கட்டளைகள், தெய்வபரி பாலனத்தின் குணத்தை தெரியும்படி செய்கிறது; அதன் குணத்தை தெரிந்தவன் மட்டும் அதை ஒத்துக்கொள்ளக் கூடும்; ஏனென்றால், அவன் அதை அப்பொழுது பார்க்கிறான். இந்த காரணத்துக்காக தேவர்கள் ஞானத்தில் இதுவரையில் மறைந் திருந்த, தெய்வபரிபாலனத்தின் கட்டளைகள், இப்பொழுது வெளிப்படுத்தப் படுகின்றன.

### மனிதனானவன், விவேகத்தை அனுசரித்து சுவேச்சையிலிருந்து செயல்பட வேண்டுமென்பது தெய்வ பரிபாலனத்தின் ஓர் கட்டளை.

71. மனிதனுக்கு தான் பிரியப்படுகிறபடி நினைக்கும் சுதந் தரமும், இச்சிக்கும் சுதந்தரமும் உண்டென்றும், ஆனால் தான் ஏதாகிலும் நினைப்பதை சொல்லவும், தான் ஏதாகிலும் இச்சிப் பதை செய்யவும் சுதந்தரமில்லை என்றும் தெரிந்திருக்கிறது. ஆகையினால், இவ்விடத்தில் கருதப்பட்ட சுதந்தரம் இரண்டும் ஒன்றாகும்போது தவிர, ஸ்தூலமல்லாமல் சூக்கும சுதந்திரமாக யிருக்கிறது; ஏனென்றால், நினைத்தலும் இச்சித்தலும் சூக்கும மானது, ஆனால், பேசுதலும் செய்தலும் ஸ்தூலமானது. மேலும், அவைகள், மனிதனில் தெளிவாய் பேதம் காட்டப்படு கின்றன; ஏனென்றால், தான் பேசாததை ஒரு மனிதன் நினைக்கக் கூடும், தான் செய்யாததை இச்சிக்கக் கூடும்; இதனால், மனிதனில் சூக்குமமானதும் ஸ்தூலமானதும் பிரித்துக் காட்டப்படுகின் றன என்று தெளிவா யிருக்கிறது; ஆகையால், மனிதன் ஒன்றி லிருந்து மற்றொன்றுக்கு தீர்மானத்தால் தவிர செல்லமுடியாது.

இந்த தீர்ப்பு முதலில் நெகிழ்த்தப்பட்டு, திறக்கப்படுகிற ஓர் கதவுக்கு ஒப்பிடப்படலாம். இராச்சியத்தின் தேசாசார சட்டங்களின் படிக்கும், ஜன சமூகத்தின் சன்மார்க்க சட்டங்களின் படிக்கும், விவேகத்திலிருந்து நினைத்து இச்சிக்கிறவர்களில், இந்த கதவு திறந்தது போல இருக்கிறது; ஏனென்றால், அவர்கள் நினைப்பதை அவர்கள் சொல்லுவார்கள், தாங்கள் இச்சிப்பதை செய்வார்கள்; ஆனால் அந்த கதவானது அந்த சட்டங்களுக்கு விரோதமாக நினைத்து இச்சிக்கிறவர்களில் மூடப்பட்டது போல் இருக்கிறது. தன்னுடைய இச்சைகளையும், அதனால் ஏற்பட்ட சலனங்களையும் கவனிக்கப்பட்ட எவனும் அவ்வித தீர்மானம் வருகிறதாகவும், சில சமயங்களில் தனித்த சம்பாஷணையிலும், தனித்த செயலிலும் அடிக்கடி வருகிறதாகவும், காண்பான். விவேகத்துக்கு தக்கபடி சுதந்திரத்திலிருந்து செயல்படுதலென்பதினால், சுவேச்சையாய் நினைத்தலும் இச்சித்தலும், அதிலிருந்து, விவேகத்தை அனுசரித்திருக்கிறதை சுவேச்சையாய் பேசுதலும், செய்தலும் கருதப்படுகிறதென்று தெரிந்திருக்கும்படியாக இவைகளெல்லாம் முந்தி சொல்லப்பட்டன.

72. தெய்வபரிபாலனம் நன்மையையும் உண்மையையும் குறித்து நினைக்கவும் இச்சிக்கவும் இடைவிடாமல் தன்னை நடத்திக் கொண்டிருக்கும்போது, முக்கியமாய் மனிதனானவன் இவ்விதமாக தீங்கையும் பொய்யையும் நினைக்கவும் கூட சுதந்தரத்தை உடையவனாகயிருக்கிற படியினால், இது தெய்வபரிபாலனத்தின் சட்டமாயிருக்கக் கூடுமென்று சிலருக்கு மட்டும் தெரிந்திருக்கிறபடியினால், இது அறியப்பட நாம் வேறான படிகளால் போகவேண்டும்; அது பின்வரும் ஒழுங்கில் செய்யப்படும். I. மனிதனுக்கு விவேகமும் சுதந்தரமும் அல்லது பகுத்தறிவுடைமையும் சுவேச்சையுமிருக்கிறது, இந்த இரண்டு மனோசக்திகளும் மனிதனில் உள்ள ஆண்டவரிடமிருந்து வருகிறது. II. விவேகத்தைச் சேர்ந்திருந்தாலும், இல்லாவிட்டாலும், தன்னுடைய விவேகத்துக்கு ஒத்திருந்தால், சுதந்திரத்திலிருந்து ஒரு மனிதன் செய்வது ஏதாகிலும், தன்னுடையதாக அவனுக்கு தோன்றுகிறது.

III. தன்னுடைய சிந்தனையை அனுசரித்து, சுதந்திரத்திலிருந்து ஒரு மனிதன் செய்கிற ஏதாகிலும், அவனுடையதாக அவனுக்கு சேர்க்கப்பட்டு, நிலைக்கிறது. IV. இந்த மனோசக்திகள் இரண்டினுலும், மனிதனுனவன், ஆண்டவரால் சீர்திருத்தப்பட்டு, குணப்படுத்தப்படுகிறுன்; அவைகளில்லாமல் அவன் சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்பட முடியாது. V. தான் நினைத்து செய்யும் நன்மையானதும் உண்மையானதுமாகிய ஒவ்வொன்றும், தன்னிடமிருந்தல்லாமல் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்று ஒத்துக்கொள்ள அவைகளால் அவன் நடத்தப்படக்கூடிய அளவு, இந்த இரண்டு மனோசக்திகளாலும் ஒரு மனிதனுனவன் சீர்திருத்தப்பட்டு, குணப்படுத்தப் படுகிறுன். VI. மனிதனுடன் ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவரோடு மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும், இந்த இரண்டு மனோ சக்திகளால் உண்டாக்கப்படுகிறது. VII. மனிதனிலிருக்கும் இந்த இரண்டு மனோசக்திகளை, ஆண்டவரானவர், தன்னுடைய தெய்வ பரிபாலனத்தின் எல்லா போக்குகளிலும், பழுதில்லாமலும் பரிசுத்தமாகவும் வைக்கிறுர். VIII. ஆகையால், விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து மனிதன் செயல்பட வேண்டுமென்பது தெய்வபரிபாலனத்தைச் சேர்ந்தது.

73. I. **மனிதனுக்கு விவேகமும் சுதந்தரமும் அல்லது பகுத்தறிவுடைமையும் சுவேச்சையுமிருக்கிறது. இந்த இரண்டு மனோசக்திகளும் மனிதனில் ஆண்டவரிடமிருந்து வருகின்றன.** பகுத்தறிவுடைமையாயிருக்கிற அறிந்துகொள்ளும் மனோசக்தியும், சுவேச்சையாயிருக்கிற நினைக்கிறதும், இச்சிக்கிறதும், பேசுகிறதும், அறிந்துகொண்டதை செய்கிறதுமாகிய மனோசக்தி மனிதனுக்கு உண்டென்பதும், இந்த இரண்டு மனோசக்திகளும் மனிதனில் ஆண்டவரிடமிருந்துவருகிறதென்பதும், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 264-270, 425; அதனுடன் கூட மேலே பி. 43, 44) சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல், சிந்தனையின் பொருளாக செய்யப்பட்டபோது, இந்த மனோசக்திகளின் ஒவ்வொன்றைக் குறித்தும் அநேக சந்தேகங்கள் நேரிடக்கூடுமாகையால், இந்த முன்னுரையில் மனிதனிலிருக்கும் விவேகத்துக்கு தக்கபடி செயல்படும்

சுதந்தரத்தைப் பற்றி சிலவற்றை நான் சொல்ல விரும்புகிறேன், (2) ஆனால் அன்பும் சுதந்தரமும் ஒன்றாகும்படி, எல்லா சுதந்தரமும் அன்பைச் சேர்ந்ததென்று முதலில் தெரிந்திருக்கப்பட வேண்டியது; அன்பானது மனிதனுடைய உயிராயிருக்கிறபடியினால், சுதந்தரமும் அவனுடைய உயிரைக்கூட சேர்ந்ததாயிருக்கிறது; ஏனென்றால், ஒரு மனிதனுக்கு இருக்கும் எல்லாசந்தோஷமும் அவனுடைய அன்பிலிருந்து வருகிறது, எந்தசந்தோஷமும் வேறு எந்தமூலத்திலிருந்தும் வருகிறதில்லை; அன்பின் சந்தோஷத்திலிருந்து செயல்படுதல் சுதந்தரத்திலிருந்து செயல்படுதலாகிறது; ஏனென்றால், ஒரு மனிதனைவன் ஒரு நதியின் நீரோட்டத்தால் பொருள்கள் கொண்டு போகப்படுகிறபடி, சந்தோஷத்தால் நடத்தப்படுகிறான். இப்படியிருக்கையில், சிலது ஒத்தும், சிலது ஒவ்வாமலுமிருக்கும் அநேக அன்புகளிருக்கிறபடியினால், அம்மாதிரியே சுதந்திரத்தின் அநேக விதங்கள் இருக்கின்றனவென்று ஏற்படுகிறது. பொதுவாக, ஸ்தூலமானதென்றும், (3) பகுத்தறிவுள்ளதென்றும், பரமார்த்தமானதென்றும் மூன்று சுதந்தரங்களிருக்கின்றன. ஸ்தூலசுதந்தரத்தை ஒவ்வொரு மனிதனும் பிதிர்தனமாக உடைத்தாயிருக்கிறான்; அதிலிருந்து, தன்னைத்தானேயும் உலகத்தையும்தவிர வேறு ஒன்றையும் அவன் நேசிக்கிறதில்லை. அவனுடைய முதல்வாழ்வு வேறொன்றுமில்லை; எல்லாதீங்குகளும், இந்த இரண்டு அன்புகளிலிருந்தும் உண்டாகுகிறபடியினாலும், அதிலிருந்துகூட அன்பைச்சேர்ந்த தீங்குகளாக ஆகிறபடியினாலும், தீமைகளை நினைத்தலும் இச்சித்தலும் ஸ்தூல சுதந்தரமென்றும், அவைகளை தர்க்கிப்பதினால் தன்னிலேயே அவன் ஸ்திரப்படுத்திக்கொண்டபோது, அவனுடைய விவேகத்துக்கு தக்கபடி சுதந்தரத்திலிருந்து, அவைகளை செய்கிறானென்றும் ஏற்படுகிறது. அப்படி செய்தல், சுவேச்சை என்று சொல்லப்பட்ட அவனுடைய மனோசக்தியிலிருந்துவருகிறது; அவைகளை ஸ்திரப்படுத்தல், பகுத்தறி உடைமை என்று, சொல்லப்பட்ட (4) அவனுடைய மனோசக்தியிலிருந்துவருகிறது. உதாரணமாக: ஒரு மனிதன் பிறந்திருக்கிற அன்பிலிருந்து, அவன் விபசாரம் செய்யவும், மோசம் செய்யவும், தேவதூஷணை செய்யவும், பழி

வாங்கவும் விரும்புகிறுன். இந்த தீங்குகளை தன்னிலேயே ஸ்திரப் படுத்தி, அதனுல் தன்னிடமிருக்க அனுமதிகொடுக்கப்பட்டதாக செய்கிறபோது, அவைகளிடத்துகொள்ளும் அன்பின் சந்தோஷத்திலிருந்து, விவேகத்துக்கு ஒத்ததுபோல், அவன் சுவேச்சையாய் அவைகளை நினைத்து இச்சிக்கிறுன்; தேசாசாரமான சட்டங்கள் தடுக்காதவரையில் அவன் பேசி, செயல்படுகிறுன். மனிதனுக்கு சுதந்தரம் அல்லது சுவேச்சையிருக்கிறபடியினுல், ஆண்டவரிட தெய்வபரிபாலனத்திலிருந்துதான் அவன் அப்படி செய்ய விடப்படுகிறுன். பரம்பரையாயிருக்கிறதினுல், சுபாவத்தில் மனிதன் இந்த சுதந்தரத்திலிருக்கிறுன்; தன்னையும் உலகத்தையும் நேசித்தலின் சந்தோஷத்திலிருந்து தர்க்கித்தலினுல், தங்களுக்(5)குள்ளே ஸ்திரப்பட்டிருக்கிறவர்கள் இந்த சுதந்தரத்திலிருக்கிறுர்கள். **பகுத்தறிவுள்ள சுதந்தரம்,** கௌரவம் அல்லது லாபத்துக்காக கீர்த்தியை நேசித்தலிலிருந்துவருகிறது. இந்த அன்பின் சந்தோஷமானது, புறத்தில் சன்மார்க்கனுக தோன்றவேண்மென்பதாயிருக்கிறது; அவன் இந்த கீர்த்தியை நேசிக்கிறபடியினுல், அவன் மோசம்செய்து அபகரிக்கிறதில்லை, விபசாரம்செய்கிறதில்லை, பழிவாங்குகிறதில்லை, தேவதூஷணையும் செய்கிறதில்லை; இதை விவேகத்துக்குச் சேர்ந்த விஷயமாக அவன் செய்கிறபடியினுல், அவன் புத்தியை அனுசரித்து, மனப்பூர்வகமாயும், நியாயமாயும், கற்புள்ளவனுயும், சிநேகிதமாயும், சுதந்தரத்திலிருந்துகூட நடக்கிறுன்; அவன் விவேகத்தினுல், அப்படி வாழ்தலுக்கு அனுகூலமாக நன்றுய் பேசவும் கூடும். ஆனுல், அவனுடைய பகுத்தறிவுள்ள மனேசக்தி, ஸ்தூலமாகமாத்திரம் இருந்து, அதேகாலத்தில் பரமார்த்தமாக இல்லாவிட்டால், இந்த சுதந்திரம், உள்ளானதாயல்லாமல், புறம்பான சுதந்தரமாக மாத்திரமிருக்கிறது; ஏனென்றுல், அவன் நன்மையானவைகளை மேல் கூறியபடி, உள்ளுக்குள்ளாய் நேசிக்காமல், கீர்த்திக்காக புறம்பே மாத்திரம் நேசிக்கிறுன்; ஆகையினுல், அவன் செய்யும் நற்காரியங்கள் தாமே நல்லவைகளல்ல. இவைகள் பொதுஜன நன்மைக்காக செய்யப்பட வேண்டுமென்று அவன் சொல்லவும் கூடும்; ஆனுல் அவன், பொதுஜன நன்மையினிடத்து கொள்ளும் அன்பினுல்

அல்லாமல், அவனுடைய சொந்த கௌரவம் அல்லது லாபத்தின் அன்பிலிருந்து இதைச் சொல்லுகிறான். ஆகையினால், அவனுடைய சுதந்தரம் பொதுஜன நன்மையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்து எதையும் அடைகிறதில்லை; அவனுடைய விவேகம் அவனுடைய அன்புடன் உடன்படுகிறபடியினால், அதுவும் எதையும் அடைகிறதில்லை. ஆகையினால், இந்த பகுத்தறிவுள்ள சுதந்தரம் உள்ளுக்குள்ளாய் ஸ்தூல சுதந்தரமாயிருக்கிறது. ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்திலிருந்து, இந்த சுதந்தரம்கூட ஒவ்
(6) வொருவனுக்கும் விடப்பட்டிருக்கிறது. பரமார்த்த சுதந்தரம் நித்திய வாழ்வினிடத்து கொள்ளும் ஆசையிலிருந்து வருகிறது. தீங்குகள் பாவங்களென்று நினைத்து, ஆகையினால் அவைகளை இச்சிக்காதவனும், அதே காலத்தில் ஆண்டவரை எதிர்பார்க்கிறவனும் தவிர வேறு யாரும் இந்த அன்பிற்குள்ளும், அதன் சுகானுபோகத்திற்குள்ளும் வருகிறதில்லை. ஒரு மனிதன் ஆரம்பத்தில் இதை செய்தால் அவன் அந்த சுதந்திரத்திலிருக்கிறான்; ஏனென்றால், அவனுடைய மிக உள்ளுக்குள்ளான அல்லது மிக உயர்ந்த அன்பிலிருந்து வருகிற அதிகம் உள்ளான அல்லது மிக உயர்ந்த சுதந்திரத்திலிருந்து ஒழிய, பாவங்களானபடியினால் தீங்குகளை இச்சிக்காதபடி, ஆகையால் அவைகளைசெய்யாதபடி யாரும் சக்தியுள்ளவனுயில்லை. முதலில் இந்த சுதந்தரம், சுதந்தரமாக காணப்படவில்லை, அப்படி யிருந்தாலும் அது அப்படி யிருக்கிறது; ஆனால், அது பிறகு அப்படித்தோன்றுகிறது, அப்பொழுது, மனிதனானவன் நினைப்பதிலும், இச்சித்தலிலும், பேசுவதிலும், நன்மையானதையும், உண்மையானதையும் செய்வதிலும், விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுகிறான். ஸ்தூல சுதந்தரம் குறைந்து, உதவுகிறதானபோது, இந்த சுதந்தரம் அதிகரிக்கிறது; அது தானே பகுத்தறிவுள்ள சுதந்
(7) தரத்துடன் சேர்ந்துகொண்டு, அதை சுத்தம் செய்கிறது. உயிர் நித்தியமானதென்றும், நித்தியத்தில் ஓர் உயிரின் எப்பொழுதும் முடிவில்லாத சுகானுபோகத்துடனும் ஆநந்தத்துடனும் ஒத்துப் பார்த்தால், காலவரைக்குட்பட்ட ஓர் வாழ்வின் நித்தியமில்லாத சுகானுபோகமும், ஆனந்தமும் ஒரு விரைந்துசெல்லும் நிழ

லைப் போல மாத்திரம் இருக்கின்றனவென்று, சிந்திக்க எவன் ஒருவன் இஷ்டமுள்ளவனு யிருந்தாலும், அவன் இந்த சுதந்தரத்துக்குள் வரலாம்; மனிதனுக்கு பகுத்தறிவுடைமையும், சுவேச்சையும் யிருக்கிறபடியினுலும், இந்த இரண்டு மனோசக்திகளும் வருகிற ஆண்டவரானவர் இடைவிடாமல் சக்தியை கொடுக்கிறபடியினுலும், அவன் விரும்பினுல், அப்படி நினைக்கலாம்.

74. II. **சுதந்தரத்திலிருந்து ஒரு மனிதன் செய்கிறது யாதெனிலும், விவேகத்தை அனுசரித்து இருந்தாலும், இல்லாவிட்டாலும் அவனுடைய விவேகத்துக்குச் சரியா யிருந்தால், அவனுக்கு தன்னுடையது போல் தோன்றுகிறது.** மனிதனுக்கு சொந்தமான பகுத்தறிவுடைமையும் சுவேச்சையும் என்னவென்பது, மனிதர்களை மிருகங்களோடு ஒத்துப்பார்த்தாலொழிய அதிக தெளிவாய் தெரிந்துகொள்ளப்பட முடியாது; ஏனென்றுல், இவைகளுக்கு பகுத்தறிவுடைமையும் அல்லது அறிந்துகொள்ளும் மனோசக்தியும், எந்த சுவேச்சையும், அல்லது தன்னிஷ்டமாய் இச்சிக்கும் மனோசக்தியும் இல்லை; ஆகவே, அவைகளுக்கு புத்தியும் சித்தமும் இல்லை; ஆனுல், புத்திக்குப் பதிலாக உணர்வும், சித்தத்திற்குப் பதிலாக ஆசையுமாகிய இரண்டு ஸ்தூல பொருள்கள் அவைகளுக்கு உண்டு. மேலும், அந்த இரண்டு மனோசக்திகளும் இல்லாதபடியினுல், அவைகளுக்கு சிந்தனையுமில்லை. ஆனுல், சிந்தனைக்குப் பதிலாக, அவைகளின் புறம்பான பார்வையுடன் அன்னுவயத்தால் ஒன்று (2) கிற உள்ளான பார்வை அவைகளுக்குண்டு. ஒவ்வொரு ஆசையும் தான் நேசிப்பதை ஒரு சகவாசியாக உடைத்தாயிருக்கிறது; ஸ்தூல அன்பைச் சேர்ந்த ஓர் ஆசைக்கு உணர்வு உண்டு. சூக்கும அன்பைச் சேர்ந்த ஆசைக்கு பகுத்தறியும் அறிவும் உண்டு; அதிசூக்கும அன்புக்குச் சேர்ந்த ஆசைக்கு ஞானமும் உண்டு; ஏனென்றுல், தான் நேசிப்பது சகவாசியாக இல்லாவிட்டால், ஆசையானது யாதொன்றுமாகிறதில்லை. ஏனென்றுல், அது உள்பொருளாக அல்லாமல் இருத்தலைப்போலவும், அதைப்பற்றி யாதொன்றும் சொல்லக்கூடாத உருவமில்லா பொருள்போலவும் இருக்கிறது. ஆதலால், சிருட்டிக்கப்பட்ட ஒவ்வொரு பொருளி

னும், மேலே அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டபடி, நன்மை உண்மைகளுடைய விவாகத்துக்கு சம்பந்தம் காட்டக்கூடிய ஏதோ ஒன்று இருக்கிறது. மிருகங்களில், ஆசை உணர்வுகளின் விவாக மிருக்கிறது; இங்கே ஆசையானது ஸ்தூல நன்மையைச் (3) சேர்ந்தது. உணர்வானது ஸ்தூல உண்மையைச் சேர்ந்தது. இப்படியிருக்கையில் ஆசையும் உணர்வும், அவைகளில் ஒன்றுபோல முற்றும் செயல் படுகிறபடியினாலும், அவைகளின் ஆசை அவைகளின் உணர்வுக்கு மேலேயும், அவைகளின் உணர்வு அவைகளின் ஆசைக்கு மேலேயும் உயர்த்தப்பட முடியாத படியினாலும், ஆனால், உயர்த்தப்பட்டால், அவைகள் இரண்டும் சேர்த்து உயர்த்தப்படுகிற படியினாலும், மேலும், அதிலும், அல்லது அதின் ஒளியினுள்ளும் சூட்டினுள்ளும், அவைகள் உயர்த்தப்படக்கூடிய சூக்குமமனது, அவைகளுக்கு இல்லாத படியினாலும், அவைகளுக்கு அறிந்துகொள்ளும் மனோசக்தி அல்லது பகுத்தறி உடைமையும், தன்னிஷ்டமாய் இச்சிக்கும் சக்தி அல்லது சுவேச்சையும் இல்லை; ஆனால் ஸ்தூல ஆசை மாத்திரம் அதன் உணர்வுடன் அவைகளுக்குண்டு. அவைகளுக்கு இருக்கும் ஸ்தூல ஆசையானது, ஆகாரம் எடுத்துக் கொள்ளவும், இருப்பிடம் தேடவும், சந்ததி உண்டாக்கவும், கெடுதியிலிருந்து தப்பித்துக் கொள்ளவும், அவைகளை விலக்கவும், இவைகளுக்கு வேண்டிய அறிவு பெறவும், கொள்ளும் ஆசையாயிருக்கிறது. அவைகளின் உயிரின் நிலைமை இவ்விதமா யிருப்பதினால் நான் இதை விரும்புகிறேன், அதை விரும்புகிறதில்லை யென்றும், இது எனக்குத் தெரியும், அது எனக்குத் தெரியாது யென்றும், இன்னும் குறைவாய் நான் இதை அறிந்து கொள்ளுகிறேன், இதை நேசிக்கிறேனென்றும் நினைக்க அவைகளுக்கு சக்தியில்லை; ஆனால், அவைகள் தங்களுடைய ஆசையிலிருந்து, அவைகளுடைய உணர்வினால், பகுத்தறிவுடைமையும், அல்லது சுவேச்சையும் இல்லாமல் கொண்டுபோகப் படுகின்றன. ஸ்தூல உலகத்திலிருந்தல்லாமல் பரமார்த்த உலகத்திலிருந்து தான் அவைகள் அப்படி கொண்டுபோகப் படுகின்றன. ஏனென்றால், ஸ்தூல உலகத்தில் பரமார்த்த உலகத்துடன் சம்பந்தப்படாத ஒன்றுமில்லை; காரியங்களை உண்டுபண்ணுகிற எல்லா

காரணங்களும் அங்கிருந்து வருகின்றன. இந்த விஷயத்தைப்பற்றி கீழே (பி. 96) கூட பார்க்கலாம்.

75. மனிதன் விஷயத்தில் அது வேறுவிதமா யிருக்கிறது; அவனுக்கு ஸ்தூல அன்பைச்சேர்ந்த ஆசைமட்டுமல்லாமல், சூக்குமமானதும், அதிசூக்கும சம்பந்தமானதுமாகிய அன்பின் ஆசை கூட உண்டு; ஏனென்றால், பதிபசுபாச விளக்க மெனும் நூலில் மூன்றுவது பாகத்தில் காண்பித்தபடி, மானிட மனது மூன்று அந்தஸ்துகளா யிருக்கின்றன; ஆகையினுல், ஒரு மனிதனுனவன் ஸ்தூல உணர்விலிருந்து, ஆத்தும சம்பந்தமான பகுத்தறியும் விவேகத்துக்கும், இதிலிருந்து சுவர்க்க சம்பந்தமான ஞானத்துக்கும் உயர்த்தப்படக் கூடும்; பகுத்தறியும் அறிவும், ஞானமுமாகிய இரண்டிலுமிருந்து, அவன் ஆண்டவர் பக்கம் சாயலாம்; இவ்விதமாக அவருடன் சேர்க்கப்படலாம்; இந்த காரணத்தால், அவன் சதாகாலம் இருக்கிருன். ஆனுல், ஆசை விஷயத்தில் பகுத்தறிவுடைமையிலிருந்து புத்தியை உயர்த்த சக்தியையும், சுதந்தரத்திஞல், அப்படி செய்ய ஆசையையும், மனிதன் உடைத்தாயிருந்தா (2) லொழிய, இந்த உன்னத மிருக்காது. இந்த இரண்டு மனே சக்திகளால், மனிதன் தனக்கு வெளியே தன் சரீரத்தின் ஐம்புலன்களால் பார்க்கிற பொருள்களைப்பற்றி தனக்குள்ளே நினைக்க சக்தியுள்ளவனு யிருக்கிருன் கீழே நினைத்துக்கொண்டிருப்பதைப் பற்றி, அவன் மேலே கூட நினைக்கக்கூடும். ஏனென்றால், நான் இதை நினைத்தேன் என்றும், நான் இதை நினைக்கிறேனென்றும், மேலும், நான் இதை இச்சித்தேன், நான் இதை இச்சிக்கிறேன் என்றும்; அல்லது மறுபடியும், அது அப்படி யிருக்கிறதென்றும், இதை நான் அறிந்து கொள்ளுகிறேன் என்றும், அது அவ்விதமா யிருப்பதிஞல் இதை நேசிக்கிறேனென்றும், இன்னன பலவற்றையும் எவனெருவனும் சொல்லக்கூடும். அதிஞல், தன் கீழே இருப்பது போல் பார்த்துக்கொண்டு, மனிதனுனவன் ஒரு சிந்தனைக்கு மேலே நினைக்கக் கூடுமென்று தெளிவாயிருக்கிறது. இந்த சக்தியானது, மனிதனுக்கு பகுத்தறிவுடைமையிலிருந்தும், சுதந்திரத்திலிருந்தும் வருகிறது; பகுத்தறிவுடைமையிலிருந்து தான்

மேலானதை நினைக்கும் சக்தியும், சுதந்திரத்திலிருந்து, ஆசையிலிருந்து அப்படி நினைக்க தான் இச்சிக்கும் சக்தியும் வருகின்றது. ஏனென்றால், அப்படி நினைக்க அவனுக்கு சுதந்தரமிருந்தா (3) லொழிய, அவனுக்கு சித்தமும், இவ்விதமாக சிந்தனையும் இருக்காது. ஆகையினால், சன்மார்க்கமானதும் பரமார்த்த சம்பந்தமானதுமாகிய நன்மையும் உண்மையும் என்னவென்பதல்லாமல், உலகத்தையும் அதன் சுபாவத்தையும் தவிர வேறு ஒன்றையும் அறிந்துகொள்ள விரும்பாதவர்கள், உணர்ச்சியிலிருந்து பகுத்தறியும் விவேகத்துக்கும், இன்னும் குறைவாய் ஞானத்துக்கும், உயர்த்தப்பட மாட்டார்கள்; ஏனென்றால், இந்த மனோசக்திகளை அவர்கள் விகாதம்செய்து விட்டார்கள்; ஆகையினால், தாங்கள் இச்சித்தால், அறிந்து கொள்ளவும், தங்களுக்குள் நடப்பட்டிருக்கும் பகுத்தறிவுடைமையி லிருந்தும் சுதந்தரத்திலிருந்தும் இச்சிக்கவும், அவர்களுக்கு சக்தியிருக்கிற அளவு மாத்திரம் அவர்கள் மனிதர்களாக தாங்களே செய்து கொள்ளுகிறார்கள். இந்த இரண்டு மனோ சக்திகளிலிருந்துதான், மனிதர்கள் நினைக்கவும், சிந்தனையிலிருந்து பேசவும் சக்தியுள்ளவர்களா யிருக்கிறார்கள்; மற்ற விஷயங்களில், அவர்கள் மனிதர்கள் அல்ல, மிருகங்கள்; இந்த மனோசக்திகளை துர்வினியோகம் செய்வதால், சிலர் மிருகங்களிலும் தாழ்ந்தவர்களா யிருக்கிறார்கள்.

76. மங்கலாகாத பகுத்தறிவுடைமையிலிருந்து எவனாகிலும் ஒருவன், மனிதனானவன் அது தன்னுடையதென்கிற தோற்றமில்லாமல் தெரிந்துகொள்ளும் எந்த ஆசையிலாவது, அறிந்துகொள்ளும் எந்த ஆசையிலாவது இருக்க முடியாதென்று பார்க்கலாம் அல்லது கிரகிக்கலாம்; ஏனென்றால், எல்லா இரஞ்சிதமும் சந்தோஷமும், இவ்விதமாக சித்தத்துக்குச் சேர்ந்த எல்லாம், அன்பைச் சேர்ந்த ஆசையிலிருந்து வருகிறது. ஆசையிலிருந்து ஏதோ ஒருவித சந்தோஷமிருந்தாலொழிய, எதையும் தெரிந்துகொள்ளவும், எதையும் பகுத்தறிவுடன் அறிந்துகொள்ளவும், யார் விரும்புவான்? தான் தாக்கப்பட்டது தன்னுடையதாக தோன்றினாலொழிய, ஆசையின் இந்த சந்தோஷம் யாருக்கு

இருக்கும்? யாதொன்றும் தனதாக அல்லாமல், எல்லாம் மற்றவர்களுடையதாக யிருந்தாலும், யாராவது ஒருவன் தன்னுடைய சொந்த ஆசைகளிலிருந்து, தன்னிடமிருந்தே போல் தெரிந்துகொள்ளவும், பகுத்தறிவுடன் அறிந்துகொள்ளவும் ஆசைகளில்லாத மற்றவனுடைய மனதில் எதையாவது புகட்டினாலும், அதை அவன் பெற்றுக்கொள்ள இஷ்டப்படுவானா? இது மாத்திரமல்லாமல், அதை பெற்றுக்கொள்ளக் கூடுமா? மதியீனன் என்றும் மரத்தூண் என்றும் சொல்லப்படுகிறவனாக அவன் இருக்க மாட்டானா? ஒரு மனிதன் உணருகிறதும், அதிலிருந்து சிந்தனையும் தெரிந்துகொள்ளலும் உண்டாகிறதும், உணர்ச்சிக்கு தக்கபடி அவன் இச்சித்து செய்கிறதுமான ஒவ்வொன்றும் உள்ளே பாய்ந்தாலும், அது மனிதனுடையதாக தோன்றுதல் ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தை சேர்ந்ததென்று, இதிலிருந்து தெளிவாய் விசதமாகிறது; ஏனென்றால், முன் சொல்லியபடி, மனிதன் வேறு விதமாய் எதையும் பெற்றுக்கொள்ள மாட்டான். இவ்விதமாக எந்த பகுத்தறியும் அறிவும் ஞானமும் கொடுக்கப்படமாட்டான். நன்மையாகவும் உண்மையாகவும் இருக்கப்பட்டதெல்லாம் மனிதனுடையதல்லாமல், ஆண்டவருடையதென்றும், அப்படியிருந்தும் மனிதனுக்கு தன்னுடையதுபோல் தோன்றுகிறதென்றும் தெரிந்திருக்கிறது; எல்லா நன்மையும் உண்மையும் அப்படிதோன்றுகிறபடியினால், திருச்சபையினுடையவும், சுவர்க்கத்தினுடையவும், அதனால், அன்பினுடையவும் ஞானத்தினுடையவும், தருமத்தினுடையவும் பக்தியினுடையவும் எல்லாபொருள்களும் அப்படியேதோன்றுகின்றன; அப்படியிருந்தும், அவைகளில் ஒன்றுகூட மனிதனுடையதல்ல. அவைகளை தன்னிடமேயிருந்தேபோல், தான் பார்ப்பதாக தனக்கு தோன்றினாலொழிய ஆண்டவரிடமிருந்து யாராலும் அவைகளைப் பெற்றுக்கொள்ள முடியாது. இவைகளிலிருந்து, ஒரு மனிதன் சுதந்தரத்திலிருந்து செய்கிற யாதானாலும், அது விவேகத்துக்குச் சேர்ந்ததாயிருந்தாலும் சேராததாயிருந்தாலும், அவனுடைய விவேகத்துக்கு ஒத்திருந்தால், அவனுடையதாக தோன்றுகிறதென்கிற உண்மை விசதமாகிறது.

77. பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட தன்னுடைய மனேசக்தியிலிருந்து, இந்த அல்லது அந்த நன்மை, சர்வ ஜனங்களுக்கும் உபயோகமானதென்றும், இந்த அல்லது அந்த தீங்கு அதற்கு கெடுதியானதென்றும் தெரிந்துகொள்ள, யாருக்கு சக்தியில்லே? உதாரணமாக, நியாயமும் உண்மையும், விவாகத்தைச்சேர்ந்த கற்புடைமையும், ஜனசமுகத்துக்கு உபயோகமானதென்றும், அநியாயமும் வஞ்சமும், மற்றவர்களின் பெஞ்சாதிகளுடன் விபசரிக்கிற சம்பந்தங்களும், அதற்கு கெடுதியானதென்றும், ஆதலால், இந்த தீங்குகளே கெடுதிகளென்றும், நன்மைகளே லாபங்களென்றும் யாருக்குத்தெரியாது? ஆகையால், தான் இஷ்டப்பட்டால், இவைகளை தன்னுடைய விவேகத்துக்குச் சேர்ந்த விஷயங்களாக யார்செய்யமுடியாது? அவனுக்கு பகுத்தறிவுடைமையுமிருக்கிறது, சுதந்தரமுமிருக்கிறது. இந்த ஆலோசனைகளிலிருந்து, மனிதனெனவன் தன்னிடமேயிருக்கும், அந்த தீங்குகளை நீக்குகிற அளவு, அவனுடைய சுதந்தரமும், பகுத்தறிவுடைமையும், வெளிப்படுத்தபட்டு, தாங்களே தோன்றி, மிதப்படுத்தி, உணர்ச்சியையும் சக்தியையும் கொடுக்கின்றன; அவன் இதைசெய்கிற அளவு, ஒரு சினேகிதன் சினேகிதர்களை மதிக்கி(2)றதுபோல, அவன் அந்த நன்மைகளை மதிக்கிருன். பகுத்தறிவுடைமை என்று சொல்லப்படுகிற அவனுடைய மனேசக்தியிலிருந்து ஒரு மனிதனெனவன், தீங்குகளுக்குபதிலாக பாவங்களின் உணர்ச்சியும், நன்மைகளுக்குபதிலாக தருமகைங்கரியங்களும் உணர்ச்சியும் மாத்திரம் அவனுக்கிருந்தால், பரமார்த்த உலகத்தில் பொது உபயோகத்துக்கு இருக்கும் நன்மைகள் விஷயத்திலும், அங்கே கெடுதியானவைகளாயிருக்கிற தீங்குகள் விஷயத்திலும், இவைகளிலிருந்து பிறகு தீர்மானங்கள் செய்யலாம். அவனுக்கு பகுத்தறிவுடைமையும் சுதந்தரமும் இருக்கிறபடியினுல், தான் இஷ்டப்பட்டால், இதைக்கூட, தன்னுடைய விவேகத்துக்குச்சேர்ந்த விஷயமாக செய்யலாம்; அதே தீங்குகளை பாவங்களாக அவன் தள்ளுகிற அளவு, இவைகள் வெளிப்படுத்தப்பட்டு, தாங்களேதோன்றி, மிதப்படுத்தி உணர்ச்சியையும் சக்தியையும் கொடுக்கின்றன; அவன் இதைசெய்கிற அளவு ஓர் அயலான் அய

லானை, இருபக்கங்களிடத்துமிருக்கும் அன்பிலிருந்து மதிக்கிறது (3) போல், தருமத்தின் நன்மைகளை அவன் மதிக்கிறான். இப்படி இருக்கையில், அங்கீகாரத்தின் பொருட்டும், ஐக்கியத்தின் பொருட்டும், விவேகத்தை ஒத்து, ஒரு மனிதன் சுவேச்சையாய் செய்யும் எதுவும் அவனுடையதாக அவனுக்குத் தோன்றவேண்டுமென்றும், ஆண்டவருடைய சித்தமாயிருப்பதினாலும், இந்த வேலை விவேகத்துடனேயே ஒத்து இருப்பதினாலும், தன்னுடைய சதாகால சுகமாக இருப்பதினால், மனிதன் விவேகத்தைக் கொண்டு, இதை இச்சிக்கக்கூடுமென்றும், ஆண்டவரின் தெய்வ சக்தியை பிரார்த்திப்பதினால் அதை செய்யக்கூடுமென்றும், பின் தொடருகிறது.

78. III. **தன்னுடைய சிந்தனையை அனுசரித்து, சுவேச்சையிலிருந்து ஒரு மனிதனானவன் செய்யும் ஏதாகிலும், அவனுக்குச் சொந்தமாக நியமிக்கப்பட்டு, நிலைக்கிறது.** மனிதனுக்கு சொந்தமானதும் அவனுடைய சுதந்திரமும் ஒன்றாகிறபடியினால், இது இப்படியிருக்கிறது. மனிதனுக்கு சொந்தமானது, அவனுடைய உயிரைச்சேர்ந்தது; ஒரு மனிதன் உயிரிலிருந்து செய்வது எதோ, அதை அவன் சுதந்தரத்திலிருந்து செய்கிறான்; மேலும், அன்பானது ஒவ்வொருவனுடைய உயிராயிருப்பதினால், மனிதனுக்கு சொந்தமானது, அவனுடைய அன்பைச் சேர்ந்ததா யிருக்கிறது; தன்னுடைய உயிரின் அன்பிலிருந்து ஒரு மனிதன் செய்வது எதோ, அதை அவன் சுதந்தரத்திலிருந்து செய்கிறான். எவன் ஒருவனுடைய உயிர் அல்லது அன்பாக எது இருந்தபோதிலும், அவன் கூட அதை நினைக்கிறான் என்பதினாலும், அது சிந்தனையால் ஸ்திரப்படுத்தப்படுகிறதென்பதினாலும், அப்படி ஸ்திரப்படுத்தப்பட்டபோது, சிந்தனையை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து அவன் அப்பொழுது செய்கிறதினாலும், மனிதனானவன் சிந்தனையை (2) அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுகிறான். ஏனென்றால், மனிதன் செய்வது எதையும் சித்தத்திலிருந்து புத்தியினால் அவன் செய்கிறான். சுதந்தரமானது சித்தத்தைச் சேர்ந்தது, சிந்தனையானது புத்திக்குச் சேர்ந்தது. மனிதனானவன் சுதந்திரத்தி

லிருந்து கூட விவேகத்துக்கு எதிரிடையாய் செயல்படக்கூடும்; மறுபடியும், சுதந்தரத்திலிருந்தல்லாமல் விவேகத்தை அனுசரித்து அவன் செயல்படக்கூடும்; ஆனால் அப்படி செய்யப்பட்டவைகள், மனிதனுக்கு உரித்தாக்கப் படுகிறதில்லை; அவைகள் அவனுடைய ஆன்மா அல்லது இருதயத்துக்கு சேர்ந்ததாயல்லாமல், அவனுடைய நாவுக்கும் சரீரத்துக்கும் மாத்திரம் சேர்ந்தவைகளாயிருக்கின்றன; ஆனால், அவனுடைய ஆன்மாவுக்கும் இருதயத்துக்கும் சேர்ந்த பொருள்கள், வாயினாலும் சரீரத்தினாலும் கூட செய்யப்பட்டபோது, அவனுக்கு உரித்தாக்கப்படுகின்றன. இது இப்படியிருக்கிறதென்று அநேக திர்ஷ்டாந்தங்களால் விவரப்படுத்தலாம்; (3) ஆனால் அவைகளுக்கு இது இடமல்ல. மனிதனுக்கு உரித்தாக்கப்பட்டிருத்தல் என்பதனால், அவன் உயிரில் பிரவேசித்து, அவனுடைய உயிரைச்சேர்ந்ததாகி, அதனால் அவனுடைய சொந்தமாதல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. ஆயினும், மனிதனுக்கு சொந்தமானது எந்த பொருளுமில்லை என்பதும், ஆனால் அப்படி இருப்பதுபோல் அவனுக்கு தோன்றுகிறதென்பதும், பின்வருவதில் அறிந்துகொள்ளலாம். நினைப்பதிலும், இச்சிப்பதிலும், பேசுவதிலும், செய்வதிலும் அது தனதுபோல் தோன்றுகிறபடியினால், விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து ஒரு மனிதன் செய்கிற ஒவ்வொரு நன்மையும் அவனுடையதாக நியமிக்கப்படுகிறதென்று மாத்திரம் இங்கே சொல்லப்படட்டும்; அப்படி யிருந்தாலும் மேலே (பி. 76) பார்க்கக்கூடியபடி நன்மையானது மனிதனுடையது அல்ல, ஆனால் மனிதனிலுள்ள ஆண்டவருடையது. ஆனால் தீங்கானது மனிதனுக்கு எப்படி உரித்தாக்கப்படுகிறதென்பது சரியான பிரிவில் பார்க்கப்படலாம்.

79. தன்னுடைய சிந்தனையின்படி சுதந்தரத்திலிருந்து ஒரு மனிதன் செய்வது கூட நிலைத்திருக்கிறதாக சொல்லப்படுகிறது; ஏனென்றால், மனிதன் தனதாக்கிக்கொண்ட எதுவும் வேறோடு அழிக்கப்பட முடியாது; அது அன்பைச்சேர்ந்ததாகவும், அதே காலத்தில் அவன் விவேகத்தைச் சேர்ந்ததாகவும், அல்லது அவன் சித்தத்தை சேர்ந்ததாகவும், அதே காலத்தில் அவன் புத்தியை

சேர்ந்ததாகவும், அதனால் அவனுடைய உயிரைச் சேர்ந்ததாகவும் ஆய்விட்டது. நிஜமாகவே, அது நீக்கப்படலாம்; அப்படியிருந்தும், அது எறியப்பட முடியாது; அது நீக்கப்பட்ட போது, மையத்திலிருந்து விருத்தத்தின் சுற்றளவுக்கு மாற்றப்பட்டது (2) போல், மாற்றப்பட்டு, அங்கே அது தங்குகிறது. அது தங்குதல் என்றால் இதுதான் கருதப்படுகிறது. உதாரணமாக, (வஞ்சித்து அபகரித்தல் போலவும், தேவதூஷணை செய்தல் போலவும் பழி வாங்குதல் போலவும், விபசாரம் செய்தல் போலவும்) அதன் சிலவற்றை அன்பின் சுகானுபவத்திலிருந்து செய்வதால், ஒரு மனிதன் வாலிபத்திலும் யௌவனத்திலும் கொஞ்சம் தீங்கை தனக்கே உரித்தாக செய்துக்கொண்டால், அப்போது, அவைகளை சிந்தனையின்படி சுதந்தரத்திலிருந்து அவன் செய்தபடியினால், அவன் அவைகளைத் தனதாக்கி கொண்டான்; ஆனால், அவன் பின்னிட்டு மனந்திரும்பி, அவைகளை தள்ளி வெறுக்கத் தக்கதாயிருக்கிற பாவங்களாக அவைகளை நோக்கி, அம்மாதிரி விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து அவைகளை விட்டுவிட்டால், அப்பொழுது, அந்த தீங்குகள் எதிரிடையாயிருக்கிற நன்மைகள் அவனுக்கு நியமிக்கப்படுகின்றன. இந்த நன்மைகள் அப்பொழுது மையமாகி தீங்குகளை சுற்றளவுகள் வரையில், அவைகளிலிருந்து திரும்புதலுக்கும், அவைகளை வெறுத்தலுக்கும் தக்கபடி, அதிக தூரத்துக்கு நீக்குகின்றன. அப்படி நீக்குவதினால் நிர்மூலமாக்கப்பட்டதாக தோன்றினாலும், அவைகள் நிர்மூலமாக்கப்பட்டதென்று சொல்லும்படியாக, அப்படி எறியப்பட முடியாது; ஒரு மனிதன் தீங்குகளிலிருந்து பின்வாங்கப்பட்டு, ஆண்டவரால் நன்மைகளில் பிடிக்கப்படுவதினால், இது சம்பவிக்கிறது; பரம்பரையான தீமை விஷயத்திலும், அம்மாதி (3) ரியே மனிதனுடைய எல்லா நிஜமான தீமை விஷயத்திலும், அது அப்படி செய்யப்படுகிறது. தாங்கள் ஆண்டவரால் நன்மையில் பிடிக்கப்பட்டபடியினால், தாங்கள் தீங்குகளில்லாதவர்கள் என்று நினைத்தவர்களாகிய, சுவர்க்கத்தில் சிலர் விஷயத்தில் அனுபவத்தினால் இது நிஜப்படுத்தப்பட்டதை கூட நான் பார்த்திருக்கிறேன்; ஆனால், தாங்களிருந்த நன்மையானது, தங்களுடைய

சொந்தமானதென்று அவர்கள் நம்பாதபடி, தங்களிடமிருந்தே தீங்குகளில் தாங்கள் இருந்ததாகவும், ஆனால், ஆண்டவரிட மிருந்து நன்மைகளிலிருந்ததாகவும், அவர்கள் ஒத்துக்கொள்ளு கிற வரையில் கூட, சுவர்க்கத்திலிருந்து கீழே விடப்பட்டு, தங்க ளுடை தீங்குகளில் திரும்ப அனுப்பிவிடப்பட்டார்கள்; இப்படி ஒத்துக்கொண்ட பிறகு, அவர்கள் மறுபடியும் சுவர்க்கத்துக்கு வழி காட்டப்பட்டார்கள். ஆகையால், நன்மைகள் மனிதனில் எப் பொழுதும் ஆண்டவருடையதா யிருக்கிறதென்பதைத் தவிர வேறு எந்த வழியிலும் அவைகள் மனிதனுக்கு உரித்தாகப்படு கிறதில்லை யென்றும், இதை மனிதன் ஒத்துக்கொள்ளுகிற வரை யில், நன்மையானது மனிதனுக்கு தன்னுடையதுபோல் தோன்ற, அதாவது, அயலானை அல்லது தன்னுடைய தருமத்தை தன்னிட மிருந்தே போல் நேசிக்கிறதாகவும், தன்னிடமிருந்தேபோல் நம்புகிறதாகவும் அல்லது பக்தியுடையவனுகிறதாகவும், நன்மை யைச் செய்து உண்மைகளை அறிந்துகொள்ளுகிறதாகவும், அவ்வி தமாய் தன்னிடமிருந்தே விவேகமுள்ளவனுக இருக்கிறதாகவும், அவனுக்குத் தோன்ற, ஆண்டவர் அருள் செய்கிறுரென்றும் தெரி ந்திருக்கட்டும். இதிலிருந்து, அறிவு உண்டாக்கப்பட்டவன், அதில் மனிதனிருக்க வேண்டுமென்று ஆண்டவரிட சித்தமா யிருக்கிற தோற்றத்தின் சுபாவத்தையும் வலிமையையும் பார்க்க லாம்; ஆண்டவர் மனிதனுடைய மோக்ஷத்துக்காக, இதை இச்சிக்கி றுர்; ஏனென்றுல், இந்த தோற்றமின்றி யாரும் ரக்ஷிக்கப்பட முடியாது. இந்த விஷயத்தைப்பற்றி மேலே காண்பித்ததை (பி. 42-45) யும் கூட பார்க்கவும்.

80. மனிதன் சும்மாய் நினைக்கிறது எதுவும் அவனுக்கு உரித்தாக்கப் படுகிறதில்லை, தருணம் வாய்த்தபோது அதை செய் யும்படியான அளவு கூட அதே காலத்தில் இச்சித்தாலொழிய, அவன் இச்சிக்க நினைக்கிறதும் கூட அவனுக்கு உரித்தாக்கப்படு கிறதில்லை. அப்பொழுது மனிதன் அதை செய்யும்போது, அவன் இச்சையிலிருந்து புத்தியினுல், அல்லது சித்தத்தின் ஆசையி லிருந்து புத்தியின் சிந்தனையினுல் அதை செய்கிறுனென்பது

காரணமாயிருக்கிறது; ஆனால், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் ஐந்தாவது பாகத்தில், அநேக இடங்களில் காண்பித்தபடி, புத்தியானது சித்தத்துடன் தானே சேராதபடியினாலும், அல்லது புத்தியின் சிந்தனையானது, சித்தத்தின் ஆசையுடன் தானே சேராதபடியினாலும், ஆனால், சித்தமும் அதன் ஆசையும் புத்தியுடனும், அதன் சிந்தனையுடனும் தாங்களே சேருகிற படியினாலும், அது சிந்தனையைமட்டும் சேர்ந்ததா யிருக்கிறவரையில் அது தனதாக்கப்படமாட்டாது. ஆண்டவருடைய அடியில் கண்ட வார்த்தைகளால் இதுதான் கருதப்படுகின்றது: "வாய்க்குள்ளே போகிறது மனுஷனை தீட்டு படுத்தாது, வாயிலிருந்து புறப்படுகிறதே மனுஷனை தீட்டு படுத்தும்" (மத்தே. XV. 11; அதனுடன் கூட 17, 18, 19). ஞானார்த்தத்தில், சிந்தனையானது வாயினால் பேசுகிற படியினால், **வாய்** என்பதால் சிந்தனை என்று அருத்தம் கொள்ளப்படுகிறது; அந்த அருத்தத்தில் இருதய மென்பதால், அன்பைச் சேர்ந்த ஆசை யென்று அருத்தம் கொள்ளப்படுகிறது; இந்தஆசையிலிருந்து மனிதன் நினைத்துப்பேசினால், அப்பொழுது அவன் தானே அசுத்தமுள்ளவனாக செய்துக் கொள்ளுகிறான். (லூக். VI. 45ல்) இருதயம் என்பது அன்பு அல்லது சித்தத்தைச் சேர்ந்த ஆசை யென்றுகூட அருத்தம் கொள்ளப்படுகிறது; வாய் என்பது புத்தியைச் சேர்ந்த சிந்தனை என்று அருத்தம் கொள்ளப்படுகிறது.

81. ஒப்புக்கொள்ளத் தக்கதாக ஒரு மனிதன் நம்புகிற தீங்குகள், அவன் அவைகளை செய்யாவிட்டாலும் கூட அவனுக்குக் கூட உரித்தாக்கப் படுகின்றன; ஏனென்றால்; சம்மதமிருப்பதினால், சிந்தனையில் ஒப்புக்கொள்ளப் படுதல், சித்தத்திலிருந்து வருகிறது. ஆகையினால், ஒரு மனிதனானவன் எந்த தீங்கையாவது ஒப்புக்கொள்ளக் கூடியதாக நம்பினால், உள்ளான நிர்ப்பந்தங்களிலிருந்து அதை விடுதலை செய்கிறான்; பயங்களாயிருக்கிற புறம்பான நிர்ப்பந்தங்களால் மாத்திரம் அதை செய்யாமல் தடுக்கப்படுகிறான். மனிதனுடைய ஆன்மா தீங்குக்கு அனுகூலமாயிருக்கிற படியினால், புறம்பான நிர்ப்பந்தங்கள் நீக்கப்பட்டபோது, ஒப்புக்

கொள்ளக் கூடியதாக அவன் அதை செய்கிறான்; இதற்குள்ளே அவன் தன்னுடைய ஆன்மாவில் இடைவிடாமல் அதை செய்கிறான். ஆனால், இதைப்பற்றி, **வாழ்க்கை போதம்** எனும் நூலை (பி. 108-113) பார்க்கவும்.

82. IV. **இந்த இரண்டு மனோசக்திகள் மூலமாய் மனிதனை வன் ஆண்டவரால் சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்படுகிறான்; அவைகளில்லாமல் அவன் சீர்திருத்தப்பட்டு, குணப்படுத்தப்பட முடியாது.** ஒரு மனிதன் மறுபடியும் பிறவாவிட்டால், தேவனுடைய ராஜ்ஜியத்தை அடையமாட்டான் என்று ஆண்டவர் கற்பிக்கிறார் (யோவான் III. 3, 5, 7); ஆனால், மறுபடியும் பிறத்தல் அல்லது புனர்ஜன்மம் கொடுக்கப்படுதல் என்பது சிலருக்குத் தான் தெரியும். அன்பும் தருமமும் என்னவென்றும், ஆகையினால், பக்தி என்னவென்றும் தெரிந்திருக்கப் படவில்லை என்பது காரணமாயிருக்கிறது; ஏனென்றால், நன்மையையும் உண்மையையும் போலவும், சித்தத்தைச் சேர்ந்த ஆசையையும், புத்தியைச் சேர்ந்த சிந்தனையைப் போலவும், தருமமும் பக்தியும் ஒன்றாகிற படியினால், அன்பும் தருமமும் என்னவென்று தெரியாதவன், பக்தியானது என்னவென்று தெரிந்துகொள்ள முடியாது; அந்த ஐக்கியத்தைப்பற்றி, **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலையும் (பி-427-431), **புதிய எருசலேம் நகரத்து கொள்கையையும்** (பி. 13-24), பார்க்கவும்; ஆனால் மேலே (பி. 3-20) அது பார்க்கப்படலாம்.

83. மனிதன் பரம்பரையாய், தன்னுடைய பெற்றோர்களிடமிருந்து, எல்லாவித தீமைகளிலும், அந்த தீங்குகளை நீக்குவதால், பரமார்த்தமானவனாக செய்யப் படக்கூடிய சக்தியுடன், பிறந்திருக்கிறானென்பது, மறுபடியும் பிறந்தாலொழிய தேவனுடைய இராச்சியத்திற்கு யாரும் வரமுடியாதென்கிறதற்கு காரணமா யிருக்கிறது; அவன் பரமார்த்தமானவனாகா விட்டால், சுவர்க்கத்துக்கு வரமுடியாது. ஸ்துலமா யிருப்பதிலிருந்து பரமார்த்தமாக செய்யப்படுதல், மறுபடியும் பிறத்தல் அல்லது புனர்ஜன்மம் கொடுக்கப்படுதலா யிருக்கிறது. ஆனால், மனிதன் எப்

படி குணப்படுத்தப் படுகிறானென்று தெரிந்திருக்க, பின் வரும் மூன்று விஷயங்கள் ஆலோசிக்கப் படவேண்டும்: நரகதண்டனையின் நிலைமையாயிருக்கிற அவனுடைய முதல் நிலைமையின்குணம்; சீர்திருத்தத்தின் நிலைமையாயிருக்கிற அவனுடைய இரண்டாவது நிலைமையின் குணம்; புனர்ஜன்ம நிலைமையாயிருக்கிற அவனுடைய மூன்றாவது நிலைமையின் (2) குணம். நரகாக்கினைத் தீர்ப்பு நிலைமையாயிருக்கிற, மனிதனுடைய முதல் நிலைமையை, ஒவ்வொருவனும் தன்னுடைய பெற்றோர்களிடமிருந்து பாரம்பரியாய் அடைந்திருக்கிறான்; ஏனென்றால், மனிதனானவன் அங்கிருந்து, தன்னையும் உலகத்தையும் நேசிப்பதிலும், ஊற்றுகளாக இவைகளிலிருந்து எல்லாவித தீங்குகளிலும், பிறந்திருக்கிறான். இந்த ஆசைகளின் சந்தோஷங்களால் அவன் நடத்தப்படுகிறான், அந்த சந்தோஷங்கள் தான் தீங்குகளிலிருப்பதாக அவனுக்குத் தெரியாதபடி செய்கின்றன; ஏனென்றால் ஒரு ஆசையின் ஒவ்வொரு சந்தோஷமும் நன்மையாக மாத்திரம் உணரப்படுகிறது; ஆகையினால் கூட, ஒரு மனிதன் குணப்படுத்தப்பட்டாலொழிய தன்னையும் உலகத்தையும் எல்லாவற்றிற்கும் மேலாக நேசித்தல் நன்மையே என்பதும் எல்லாரையும் அதிகாரஞ் செய்தலும், மற்ற எல்லாருடைய செல்வத்தை சுவாதீனம் செய்துக்கொள்ளல், முக்கியமான நன்மை யென்பதும் தவிர அவனுக்கு வெறொன்றும் தெரியாது. இதிலிருந்து கூட எல்லா தீங்குகளும் உண்டாகின்றன; ஏனென்றால், 'தன்னையே தவிர, அன்பிலிருந்து வேறு யாரையும் மதிக்கிறதில்லை; அல்லது அன்பிலிருந்து மற்றவனை அவன் மதித்தால், அது சேர்ந்து செயல்படும் (3) போது பேய் பேயை மதிக்கிறது போலவும், திருடன் திருடனை மதிக்கிறது 'போலவுமிருக்கிறது. அவைகளிலிருந்து தாங்கள் அடைகிற சந்தோஷத்தின் பொருட்டு, தங்களிடமிருந்து பெருக்கெடுக்கிற இந்த ஆசைகளையும் தீமைகளையும் தங்களுக்குள்ளே ஸ்திரப்படுத்துகிறவர்கள், ஸ்தூலமாக நின்று, சரீரமுள்ள இந்திரிய சுக சம்பந்தமுள்ளவர்களாகிறார்கள்; தங்கள் ஆன்மாவிற்கு சேர்ந்த தங்களுடைய சொந்த சிந்தனையில், அவர்கள் பைத்தியம் பிடித்தவர்களா யிருக்கிறார்கள்; அப்படி யிருந்தா

னும், அவர்கள் மனிதர்களா யிருக்கிறதினுலும், ஆகையால் அவர் களுக்கு பகுத்தறிவுடைமையும், சுவேச்சையும் இருக்கிறபடியினு லும், உலகத்திலிருக்கும்போது விவேகத்துடன், பேசவும் செயல் படவும், அவர்கள் சக்தியுள்ளவர்களா யிருக்கிறுர்கள்; ஆனுல், அவர்கள் இதைக்கூட தங்களையும் உலகத்தையும் நேசிப்பதி லிருந்து செய்கிறுர்கள். இறந்த பிறகு, அவர்கள் சரீரமில்லாத ஆன்மாக்களான போது, உலகத்திலிருந்தபோது தங்கள் ஆன் மாவில் தாங்கள் பெற்றிருந்ததைத் தவிர வேறு சந்தோஷங்களை உடைத்தாயிருக்க அவர்கள் சக்தியற்றவர்களா யிருக்கிறுர்கள்; வேதனை என்பதாலும், நரகத்து நெருப்பு என்பதாலும், வேதத் தில் கருதப்படுகிற, சந்தோஷமில்லாததாயும், வருத்துகிறதாயும், அச்சமுண்டாக்கத் தக்கதாயும் இப்பொழுது திருப்பப்பட்ட நர கத்துக்கு அடுத்த அன்பின் சந்தோஷமாக, அந்த சந்தோஷ மிருக்கிறது. மனிதனுடைய முதல் நிலைமை, நரக தண்டனையின் ஓர் நிலைமையா யிருக்கிறதென்றும், குணப்படுத்தப்பட ஒத்துக் கொள்ளாதவர்கள் அதில் இருக்கிறதாகவும், இதிலிருந்து வெளிப் (4) படையாயிருக்கிறது. சீர்படுத்தப்படும் நிலைமையா யிருக்கிற மனிதனுடைய இரண்டாவது நிலைமை, சுவர்க்கத்திலிருக்கும் ஆனந்தத்தின் பொருட்டு சுவர்க்கத்தையும், இவ்விதமாக, அவ னுக்கு சுவர்க்கத்து ஆனந்தம் வருகிற கடவுளைக் குறித்தும் தான் நினைக்கிற நிலைமையா யிருக்கிறது; ஆனுல், முதலில் தன் பேரிலே கொள்ளும் ஆசையின் சந்தோஷத்திலிருந்து இந்த சிந் தனை உண்டாகிறது. அவனுக்கு சுவர்க்கத்து ஆனந்தம் அவ்வித சந்தோஷமா யிருக்கிறது. ஆனுல், அந்த அன்பின் சந்தோஷம், அதிலிருந்து வரும் தீமைகளின் சந்தோஷங்களுடன் சேர்ந்து அரசுபுரிகிறவரையில், சுவர்க்கத்தை சமீபித்தல், என்பது பிரார்த் தனையைக் கொட்டுதலாகவும், பிரசங்கங்களை கவனித்து கேட்ட லாகவும், இராப்போசனத்துக்கு போகுதலாகவும், ஏழைகளுக்கு கொடுத்தலாகவும், வறுமையுள்ளவர்களுக்கு உதவுதலாகவும், கோயில்களுக்கு பணம் செலவு செய்தலாகவும், தர்ம வைத்திய சாலைகளுக்கு தன்னுடைய நன்கொடைகளை செய்தலாகவும், இதைப்போன்ற மற்றதாகவும் இருக்கிறதாகத் தவிர வேறு வித

மாய் அவன் அறிந்துகொள்ள மாட்டான். அதுவுமல்லாமல் இந்த நிலைமையிலிருக்கப் பட்டவனுக்கு, பக்தியை சேர்ந்ததா யிருந்தாலும் அல்லது பக்தியையும் தருமத்தையும் சேர்ந்ததா யிருந்தாலும், சமயம் கற்பிக்கும் விஷயங்களை நினைத்தல் மாத்தி ரம் இரக்ஷிக்கிறதென்பதைத் தவிர, வேறொன்றும் தெரியாது; இவைகளை நினைத்தல் இரக்ஷிக்கிறதென்பதைத் தவிர வேறு வித மாய் அவன் அறிந்து கொள்ளுகிறதில்லை யென்பதற்கு, அவன் இருக்கும் அதன் சந்தோஷங்களில் இருக்கிற தீமைகளைப் பற்றி யாதொன்றும் நினைக்கிறதில்லை என்பது, காரணமா யிருக்கிறது; அவைகளின் சந்தோஷங்கள் இருக்கிற வரையில், தீமைகளும் கூட இருக்கின்றன; இடைவிடாமல் எழுப்பி விடுகிறதும், எந்த பயமும் தடுக்காவிட்டால் அவைகளை கூட உற்பத்தி செய்கிறது மான, அவைகளின் இச்சைகளிலிருந்து இன்பங்கள் உண்டா
(5) கின்றன. தீங்குகள் மோகங்களிலும், அதிலிருந்து அவர்கள் அன்பின் சந்தோஷங்களிலும் நிலைக்கிற வரையில், உலகத்துக்கு நிஜமாக காணப்படுவதும், அப்படியிருந்தும் நிஜமில்லாததுமான புறம்பானவைகளில் மாத்திரம் தவிர, எந்த விசுவாசமும், தரும மும்,தேவபக்தியும், உபாசனையும் அவர்களுக்கு இல்லை. பருக முடி யாத, அசுத்தமான ஊற்றிலிருந்து வரும் ஜலத்துக்கு அவர்கள் ஒப்பிடப்படலாம். மனிதனுனவன் சமயத்திலிருந்து சுவர்க்கத்தை யும் கடவுளையும் நினைத்து, அப்படியிருந்தும் தீமைகளை குறித்து பாவங்களாக யாதொன்றும் நினைக்காதவனுக இருக்கிற வரையில், அவன் இன்னும் முதல் நிலைமையி லிருக்கிறான். ஆனுல், பாவம் என்கிற ஒரு பொருளிருக்கிறதாக அவன் நினைக்க ஆரம்பிக்கும் போது, அவன் இரண்டாவது நிலைமைக்கு அல்லது சீர்திருத்தப் படும் நிலைமைக்கு வருகிறான்; இது அல்லது அது பாவமென்று, நினைக்கும்போதும், அதை கொஞ்சதூரம் தானே சோதித்து, அதை இச்சிக்காதபோதும், இன்னும் அதிகமாய் அதிலிருக்கி
(6) ருன். புனர்ஜன்ம மெடுக்கும் நிலைமையாயிருக்கிற, மனிதனுடைய மூன்றுவது நிலைமை, முந்திய நிலைமையை எடுத்துக்கொண்டு, அதை நிலைப்படுத்துகிறது. மனிதனுனவன் தீமைகளை பாவங் களாக விட்டுவிட்டு, அவைகளை தள்ளுகிற அளவு விர்த்தியாகும்

போது அது ஆரம்பிக்கிறது, அவைகளுக்கு விரோதமாக அவன் போராடுகிற அளவு அது பூரணமாக்கப் படுகிறது; பிறகு, ஆண்டவருடைய உதவியைக் கொண்டு அவன் ஜெயிக்கிற அளவு அவன் குணப்படுத்தப்படுகிறான். குணப்படுத்தப்பட்டவன் விஷயத்தில், உயிரின் ஒழுங்கு தலைகீழா யிருக்கிறது; ஸ்தூலமா யிருப்பதிலிருந்து, அவன் பரமார்த்தமாக செய்யப்படுகிறான்; ஏனென்றால், பரமார்த்தமானதிலிருந்து பிரிக்கப்பட்ட ஸ்தூலமானது, ஒழுங்குக்கு எதிரிடையா யிருக்கிறது, , பரமார்த்தமானது ஒழுங்கை அனுசரித்து யிருக்கிறது; ஆகையினால், மறுபடியும் பிறந்த மனிதன் தருமத்திலிருந்து செயல்படுகிறான்; தன்னுடைய தருமத்துக்குச் சேர்ந்ததா யிருக்கிறதை தன்னுடைய பக்திக்கு சேர்ந்ததாயிருக்க அவன் செய்கிறான்; என்றாலும், அவன் உண்மைகளில் இருக்கிறவரையில், பரமார்த்தமாக மாத்திரம் செய்யப்படுகிறான்; ஏனென்றால், ஒவ்வொரு மனிதனும், உண்மைகளாலும், அவைகளை அனுசரித்த வாழ்வினாலும் மறுபடியும் பிறப்பிக்கப்படுகிறான்; ஏனென்றால், உண்மைகளால், அவன் வாழ்க்கையை அறிந்து கொள்ளுகிறான், அந்த வாழ்க்கையினால், அவன் உண்மைகளை செய்கிறான். ஆகையினால், சுவர்க்கம் இருக்கப்பட்ட பரமார்த்த விவாகமாயிருக்கும் நன்மையையும் உண்மையையும் அவன் சேர்க்கிறான்.

85. பகுத்தறிவுடைமையினால் தீமையானது எதுவென்றும், நன்மையானது எதுவென்றும், அதிலிருந்து: பொய் எதுவென்றும் நிஜம் எதுவென்றும் அவன் அருத்தம் செய்துகொண்டு அறிந்துகொள்ளக் கூடுமாகையினாலும், அப்படி அருத்தம்செய்துகொண்டு தெரிந்துகொண்டதை சுவேச்சையினால் அவன் இச்சிக்கக் கூடுமாகையாலும், மனிதனானவன் பகுத்தறிவுடைமையென்றும் சுவேச்சையென்றும் சொல்லப்பட்ட இரண்டு மனோசக்திகளால் சீர்படுத்தப்பட்டு குணப்படுத்தப்படுகிறானென்பதும், அவைகளில்லாமல் அவன் சீர்படுத்தப்பட்டு குணப்படுத்தப்படமாட்டானென்பதும் ஏற்படுகிறது. ஆனால், தீமையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்துவரும் இன்பம் அரசுபுரிகிறவரையில், அவன்

சுவேச்சையாய் நன்மையையும் உண்மையையும் இச்சித்து, அவனுடைய விவேகத்துக்குச் சேர்ந்ததாக அவைகளை செய்யமாட்டான்; ஆகையினால், அவைகளை உரித்தாக்கச்செய்து கொள்ளமாட்டான்; ஏனென்றால், மேலே காண்பித்தபடி, விவேகத்தை அநுசரித்து சுதந்தரத்திலிருந்து ஒரு மனிதன் செய்யும் காரியங்கள், அவனுடையது போல் நியமிக்கப்படுகின்றன; அப்படி உரித்தாக்கப்பட்டாலொழிய, மனிதனானவன் சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்படுகிறதில்லை. மேலும் தீமையினிடத்தும் பொய்யினிடத்தும் கொள்ளும் அன்பிலிருந்துவரும்இன்பம் நீக்கப்பட்டபோது, நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் அன்பிலிருந்து வரும் இன்பத்திலிருந்து, அவன் முதலில் செயல்படுகிறான்; ஏனென்றால், அன்பிலிருந்து வரும் இரண்டு எதிரிடையான இன்பங்கள் ஒரேகாலத்தில் கொடுக்கப்படுகிறதில்லை. அன்பைச்சேர்ந்த இன்பத்திலிருந்து செயல்படுதல், சுதந்திரத்திலிருந்து செயல்படுதலாயிருக்கிறது; விவேகம் அந்த அன்பிற்கு சகாயம் செய்கிறபடியினால், அது விவேகத்தை அநுசரித்து செயல்படுதலுமாகிறது.

86. துன்மார்க்கர்களாகிலும் நல்லவர்களாகிலும் எல்லா மனிதர்களும் பகுத்தறிவுடைமையையும் சுவேச்சையையும் உடைத்தாயிருக்கிறபடியினால், நல்லவனைப்போல கெட்டவனும் உண்மையை தெரிந்துகொண்டு நன்மை செய்யக்கூடும். ஆனால் விவேகத்தை அநுசரித்து சுதந்தரத்திலிருந்து ஒரு துன்மார்க்கன் அப்படி செய்யமுடியாது. ஆனால் நல்ல மனிதன் அப்படி செய்யக்கூடும்; ஏனென்றால் துன்மார்க்கன் தீமையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்து வரும் இன்பத்திலிருக்கிறான். ஆனால் நல்லமனிதன் நன்மையிடத்துகொள்ளும் அன்பிலிருந்துவரும் இன்பத்திலிருக்கிறான். ஆகையினால் துன்மார்க்கன் அறிந்து கொள்ளுகிற உண்மையும் அவன்செய்யும் நன்மையும், அவனுடையதாக்கப் படுகிறதில்லை. ஆனால் நல்லவனுக்கு அவனுடைய தாக்கப்படுகிறது; தன்னுடையதுபோல் நியமிக்கப்படாமல், எந்த சீர்படுதலும், குணப்படுதலும் இல்லை. ஏனென்றால், துன்மார்க்க

ரிடத்தில் தீங்குகளும் பொய்களும் மையத்திலிருப்பது போலிருக்கின்றன. நன்மைகளும் உண்மைகளும் சுற்றளவுகளிலிருப்பது போலிருக்கின்றன; ஆனல், நல்லவர்களிடத்தில், உண்மைகளுடன் நன்மைகள் மையத்திலிருக்கின்றன. பொய்களுடன் தீங்குகள் சுற்றளவுகளி லிருக்கின்றன; இரண்டு நிலைமைகளிலும், மையத்தி லிருக்கும் பொருள்கள் தீயிலிருந்து வரும் சூடு போலவும், மையத்திலிருக்கும் பனிக்கட்டியிலிருந்து வரும் குளிர்ச்சி போலவும், மையத்தை சேர்ந்த பொருள்கள் சுற்றளவுகள் வரையில் கூட தாங்களே வியாபிக்கின்றன. இவ்விதமாக, துன்மார்க்கன் விஷயத்தில், சுற்றளவிலுள்ள நன்மைகள், மையத்தைச் சேர்ந்த தீமைகளினல் அசுத்தப்படுத்தப் படுகின்றன; நல்லவர்கள் விஷயத்தில், சுற்றளவிலுள்ள தீங்குகள், மையத்தைச் சேர்ந்த நன்மைகளிலிருந்து சாந்தமாகின்றன. தீங்குகள் குணப்படுத்தப் பட்ட மனிதனை குற்றவாளி யாக்குகிறதில்லை யென்பதற்கும், நன்மைகள் குணப்படுத்தப் படாதவனை இரக்ஷிக்கிறதில்லை என்பதற்கும் இதுதான் காரணம்.

87. V. **இந்த இரண்டு மனேசக்திகளால், ஒரு மனிதன், நினைத்து செய்யும் உண்மையும் நன்மையுமான ஒவ்வொன்றும், தன்னிடமிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து வருகிறதாக ஒத்துக் கொள்ள அவன் நடத்தப்படக்கூடிய அளவு, அவன் சீர்படுத்தப்பட்டு, குணப்படுத்தப் படக்கூடும்.** சீர்படுதல் என்னவென்றும், மறுபடியும் பிறத்தல் என்னவென்றும், மேலும், பகுத்தறிவுடைமை சுவைச்சை எனும் இரண்டு மனேசக்திகளால் மனிதன் சீர்படுத்தப்பட்டு மறுபடியும் பிறப்பிக்கப் படுகிறனென்றும் கொஞ்சம் மேலே சொல்லப்பட்டது; அவைகள் மூலமாய் இது செய்யப்படுகிறதால், அவைகளைப்பற்றி இன்னம் கொஞ்சம் சொல்லப்பட வேண்டும். மனிதனுக்கு, பகுத்தறிவுடைமையி லிருந்து அறிந்துகொள்ளும் சக்தியும் சுவேச்சையிலிருந்து இச்சிக்கும் சக்தியும், இரண்டும் தன்னிடமிருந்தே போல அவனுக்கு உண்டு; ஆனல், சுதந்தரத்திலிருந்து நன்மையை இச்சிக்கவும், அதி லிருந்து விவேகத்துக்கு அனுசரித்து அதை செய்யவும் சக்தி

யுள்ளவனு யிருக்கிறது, மறுபடியும் பிறந்தவர்களுக்கு மாத்திரம் முடியும். ஒரு துன்மார்க்கன் சுதந்தரத்திலிருந்து தீமையை மாத் திரம் இச்சிக்கக் கூடும்; ஸ்திரப்படுத்துதலினுல் விவேகத்தைப் போல் தான் செய்கிற சிந்தனைகளுக்குத் தக்கபடி அவன் அதை செய்கிருன். தீமையானது நன்மையுடன் சமமாய் ஸ்திரப்படுத் தப் படலாம்; ஆனுல், ஸ்திரப்படுத்தப் பட்டபோது பொய்க ளாகிற போலி நியாயங்களாலும் தோற்றங்களாலும், தீமையானது ஸ்திரப்படுத்தப் படுகிறது; அது ஸ்திரப் படுத்தப்பட்ட போது, அது விவேகத்தைச் சேர்ந்ததுபோலத் தோன்றுகிறது.

88. உள்ளான புத்தியிலிருந்து எந்த சிந்தனையாவது உடைய ஒவ்வொருவனும், இச்சிக்கும் சக்தியும் அறிந்துகொள் ளும் சக்தியும், மனிதனிட மிருந்தல்லாமல், சக்தியையே உடைத்தா யிருக்கிறவரிடமிருந்து அல்லது அதன் சாரத்தில் சக்தியை உடைத்தா யிருக்கிறவரிடமிருந்து வருகிறதென்று அறிந்து கொள்ளலாம். அந்த சக்தி எதிலிருந்து வருகிறதென்று மாத்தி ரம் யோசித்துப் பாருங்கள். அதன் சொந்த வல்லமையினும், அதாவது தன்னிடமே, இவ்விதமாக தன்னிடமிருந்தே, அதை உடைத்தாயிருக்கிறவரிடமிருந்து அது வருகிறதில்லையா? சக்தி தானே தெய்வமா யிருக்கிறது. ஒவ்வொரு சக்திக்கும் அதற்கு கொடுக்கப்பட வேண்டிய போதியது வேண்டும்; இவ்விதமாக, உள்ளான அல்லது மேலான ஒன்றிலிருந்து தீர்மானம் இருக்க வேண்டும். கண்ணனது தன்னிடமே இருந்து பார்க்க முடியாது, காது தன்னிடமே இருந்து கேட்க முடியாது, வாய் தன்னிடமே யிருந்து பேசமுடியாது, கை தன்னிடமே இருந்து, செய்ய முடி யாது. அதற்கு வேண்டியது கொடுக்கப்பட வேண்டும்; அதி லிருந்து மனதிலிருந்து வரும் தீர்மானம் வேண்டும். அந்த மனது அதற்கு முடிவு கட்டப்பட்ட உள்ளான அல்லது மேலான எதோ ஒன்றிலிருந்து தவிர, தன்னிடமே யிருந்து, மனதானது இதை அல்லது அதை நினைக்கவும் இச்சிக்கவும் சக்தியுடையதா யில்லை, அறிந்து கொள்ளும் சக்தி விஷயத்திலும் இச்சிக்கும் சக்தி விஷ யத்திலும் அதே மாதிரிதான்; தன்னிலேயே இச்சிக்கும் சக்தியை

யும் அறிந்து கொள்ளும் சக்தியையும் உடைத்தா யிருக்கிறவரால் (2) மாத்திரம் இவைகள் கொடுக்கப்படும். இவைகளிலிருந்து, பகுத்தறிவுடைமை என்றும், சுவேச்சை என்றும் சொல்லப்பட்ட இந்த இரண்டு மனோசக்திகளும் மனிதனிட மிருந்தல்லாமல், ஆண்டவரிட மிருந்து வருகின்றனவென்று இவைகளிலிருந்து தெளிவா யிருக்கிறது; அவைகள் ஆண்டவரிடமிருந்து வருகிற படியினால், மனிதனானவன் தன்னிடமிருந்தேபோல் மாத்திர மல்லாமல், தன்னிடமே யிருந்து எதையும் இச்சிக்கிறதில்லை யென்றும், அறிந்து கொள்ளுகிறதில்லை யென்றும் ஏற்படுகிறது. ஒவ்வொரு நன்மையின் இச்சித்தலும், ஒவ்வொரு உண்மையின் அறிந்துகொள்ளலும், மனிதனிட மிருந்தல்லாமல், ஆண்டவரிட மிருந்து வருகிறதாக அறிந்துகொண்டு நம்புகிறவன் எவனும் தன்னிலேயே, அது அப்படி யிருக்கிறதென்று ஸ்திரப்படக்கூடும். **ஒரு மனிதன் தன்னிடமே யிருந்து எதையும் பெற்றுக்கோள்ள மாட்டானேன்றும், தன்னிடமே யிருந்து எதையும் செய்யமாட்டா னேன்றும்** வேதம் கற்பிக்கிறது **(யோவா. III. 27; XV .5.).**

89. எல்லா இச்சித்தலும் அன்பிலிருந்தும், எல்லா அறிந்து கொள்ளுதலும் ஞானத்திலிருந்தும் வருகிற படியினால், இச்சிக்கும் சக்தி **பரம இச்சாசத்தி** யிலிருந்தும், அறிந்துகொள் ளும் சக்தி **பரம ஞானசக்தி** யிலிருந்தும் வருகிறதென்றும், ஆகையி னால், இரண்டும் தானே **பரம இச்சாசக்தியாயும்**, தானே **பரம ஞான சக்தியாயு** மிருக்கிற ஆண்டவரிட மிருந்து வருகின்றதென்றும் தொடர்கிறது. விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து செயல்படுதல், வேறு இதர மூலத்திலிருந்து இல்லை யென்று, இதி லிருந்து ஏற்படுகிறது. சுதந்தரமானது அன்பைப் போல, இச் சித்தலிலிருந்து பிரிக்கப்படமுடியாத படியினால், ஒவ்வொருவனும் விவேகத்தை அனுசரித்து செயல்படுகிறான். ஆனால், மனிதனில், ஒரு உள்ளானதும் ஒரு புறம்பானதுமான சித்தம் இருக்கிறது; உள்ளானதை அனுசரித்து அதே காலத்தில் செயல்படாமல் இருக்கும்போது, புறம்பானதை அனுசரித்து அவன் செயல்படக் கூடும்; ஆகையினால், வேஷதாரியாகவும் முகஸ்துதிகாரனாகவும்

அவன் நடிக்கிறான்; அப்படி யிருந்தாலும், புறம்பான இச்சை சுதந்தரத்திலிருந்து வருகிறது; ஏனென்றால், தான் இருப்பதற்கு வேறாகத் தோன்றும்படி கொள்ளும் மனிதனுடைய ஆசையிலிருந்தும், அல்லது உள்ளான சித்தத்தைச் சேர்ந்த அன்பிலிருந்து தான் உத்தேசித்திருக்கிற சில தீமையினிடத்து கொள்ளும் அன்பிலிருந்தும், அது வருகிறது. ஆனால், முன் சொல்லியபடி, ஒரு துன்மார்க்கன் சுதந்தரத்திலிருந்து அவனுடைய விவேகத்துக்குத் தக்கபடி தீங்கைத் தவிர வேறு எதையும் செய்ய முடியாது; விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து அவன் நன்மை செய்ய முடியாது. நிஜமாகவே, அவன் அதை செய்யலாம். ஆனால், நன்மையா யில்லாதவை புறம்பான சுதந்தரம் அடைகிற அவனுடைய சரியான சுதந்தரமா யிருக்கிற உள்ளான சுதந்தரத்திலிருந்து அதை செய்ய முடியாது.

90. இந்த இரண்டு மனோசக்திகளால், மனிதனானவன், தான் நினைத்து செய்யும் நன்மையும் உண்மையுமான ஒவ்வொன்றும், தன்னிடமிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து வருகிறதென்று ஒத்துக்கொள்ள வழி காட்டப்படுகிற அளவு அவன் சீர்படுத்தப்பட்டு மறுபடியும் பிறப்பிக்கப் படலாமென்று சொல்லப்படுகிறது. மனிதனானவன் இந்த இரண்டு மனோசக்திகளால், மாத்திரம் இதை ஒத்துக் கொள்ளுவான் என்பதற்குக் காரணம், முன்னமே கூறியதிலிருந்து வெளிப்படையா யிருக்கிறபடி, அவைகள் ஆண்டவரிடமிருந்து வருகின்றன வென்பதும், மனிதனில் ஆண்டவருடையதென்பதுமா யிருக்கிறது. ஆகையினால், மனிதனானவன், ஆண்டவரிட மிருந்தல்லாமல், இதை தானே செய்ய முடியாதென்பது தொடர்கிறது; அப்படி இருந்தாலும், தன்னிடமிருந்தே போல், அதை அவன் செய்யக்கூடும்; இதை ஆண்டவர் ஒவ்வொருவருக்கும் கொடுக்கிறார். அது தன்னாலேயே ஆயிற்று என்று அவன் நம்பினாலும், அவனுக்கு ஞானம் வரும்போது, தன்னாலேயே அல்லவென்று அவன் ஒத்துக்கொள்ளுவான்; இல்லாவிட்டால், அவன் நினைக்கும் உண்மையும், அவன் செய்யும் நன்மையும், தாமே உண்மையும் நன்மையு மல்ல; ஏனென்றால், ஆண்

டவரல்லாமல், மனிதன் அவைகளிலிருக்கிறான்; மனிதனிலிருக்கும் நன்மை, மோட்சத்தின் பொருட்டாக இருந்தால், புண்ணிய நன்மையா யிருக்கிறது; ஆனால், ஆண்டவரிலிருக்கப்பட்ட நன்மை புண்ணியமானதல்ல.

91. ஆனால், ஆண்டவரை ஒத்துக்கொள்ளுதலும், நன்மையையும் உண்மையுமா யிருக்கிற எல்லாம், அவரிடமிருந்து வருகிறது என்று ஒத்துக்கொள்ளுதலும், ஒரு மனிதனை சீர்படுத்தப்பட்டு குணப்படச் செய்கிறதென்பது, சிலருடைய புத்திக்கு தான் எட்டும்; ஏனென்றால், ஆண்டவர் சர்வ வல்லமையுள்ளவரா யிருந்து, எல்லாருடைய பரகதியையும் கோருகிறபடியினாலும், அவருக்கு இரக்கம் வரும் பட்சத்தில், அதிலிருந்து அவர் எதையும் செய்யவும், இச்சிக்கவும் கூடுமாகையாலும், அந்த ஒத்துக்கொள்ளுதல் என்ன செய்கிறதென்று நினைக்கப் படலாம். ஆனால், இவ்விதமாக நினைத்தல், ஆண்டவரிட மிருந்தல்ல; ஆகையினால், புத்தியின் உள்ளான பார்வையிலிருந்து அதாவது எந்த போதனையினாலும் அது வருகிறதில்லை. ஆகையினால், அப்படி ஒத்துக்கொள்ளுதல் என்ன செய்கிறதென்று இங்கே சுருக்கமாய்ச் சொல்
(2) லப்பட வேண்டும். இடங்கள் தோற்றங்களாக மாத்திரம் இருக்கிற பரமார்த்த உலகத்தில், ஞானம் சந்நிதானத்தை உண்டாக்குகிறது, அன்பு ஐக்கியத்தை உண்டாக்குகிறது; மறுதலையாயும் அப்படியே. ஞானத்திலிருந்து ஆண்டவரை ஒத்துக்கொள்ளுதலு மிருக்கிறது, அன்பிலிருந்து அவரை ஒத்துக் கொள்ளுதலு மிருக்கிறது. அதையே பார்த்தால் அறிவாக மாத்திரமிருக்கும் ஞானத்திலிருந்து ஆண்டவரை ஒத்துக்கொள்ளுதல், உபதேசத்திலிருந்து வருகிறது; அன்பிலிருந்து ஆண்டவரை ஒத்துக்கொள்ளுதல், அதை அனுசரித்த வாழ்விலிருந்து வருகிறது; இது ஐக்கியத்தை கொடுக்கிறது; ஆனால், மற்றது சந்நிதானத்தைக் கொடுக்கிறது. ஆண்டவரைக் குறித்த உபதேசத்தை தள்ளப்பட்டவர்கள் அவரிடமிருந்து தாங்களே நீங்கிக் கொள்ளுகிறார்கள் என்பதற்கு இதுதான் காரணம்; அவர்கள் வாழ்க்கையையும் கூட தள்ளுகிற படியினால், அவர்கள் அவரிடமிருந்து தாங்களே பிரிந்து

கொள்ளுகிறார்கள். ஆனால் வாழ்வைத் தவிர, உபதேசத்தை தள்ளாதவர்கள், எதிரிலிருக்கிறார்கள்; அப்படி யிருந்தும் பிரிக்கப் பட்டிருக்கிறார்கள். கூடிப் பேசி, ஆனால் ஒருவரை ஒருவர் நேசிக்காத சினேகிதர்கள் போல அவர்களிருக்கிறார்கள். இருவரில் ஒருவன் மற்றவனோடு சினேகிதனைப் போல பேசி, ஆனால் அவனை (3) விரோதி போல் வெறுக்கிற இரண்டு மனிதர்களைப் போல் இருக்கிறார்கள். இது இப்படி யிருக்கிறதென்பது, நன்றாய் கற்பிக்கிறவனும், நன்றாய் வாழ்கிறவனும், இரக்ஷிக்கப்படுகிறானென்கிறதும், ஆனால் நன்றாய் கற்பித்து துன்மார்க்கமாய் வாழ்கிறவன் இரக்ஷிக்கப் படுகிறதில்லை யென்கிறதும், மேலும் கடவுளை ஒத்துக் கொள்ளாதவன் இரக்ஷிக்கப்படமாட்டா னென்கிறதுமாகிய பொது அபிப்பிராயத்திலிருந்து கூட தெரிந்திருக்கப் பட்டிருக்கிறது. ஆண்டவரைக் குறித்து, பக்தி என்று சொல்லப்பட்டதிலிருந்து நினைத்து, தருமத்திலிருந்து எதையும் செய்யாதிருத்தல் என்னவிதமான சமயமென்று இவைகளிலிருந்து தெளிவா யிருக்கிறது. ஆகையினால், ஆண்டவர் சொல்லுகிறதாவது: "என்னை ஆண்டவரே! ஆண்டவரே! என்று நீங்கள் சொல்லியும், நான் சொல்லுகிறபடி நீங்கள் செய்யாமல் போகிறதென்ன? என்னிடத்தில் வந்து, என் வார்த்தைகளைக் கேட்டு, அவைகளின்படி செய்கிறவன், கற்பாறையின் மேல் அஸ்திபாரம் போட்டு, ஒரு வீடு கட்டின மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான். ஆனால், என் வார்த்தைகளைக் கேட்டும் அவைகளின்படி செய்யாதவனோ அஸ்திபாரமில்லாமல், மண்ணின் மேல் வீடு கட்டினவனுக்கு ஒப்பாயிருக்கிறான் (லூக். VI. 46-49)."

92. VI. **மனிதனுடன் ஆண்டவர் ஐக்கியப்படுகிறதும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும், இந்த இரண்டு மனோசக்திகளால் சித்தியாக்கப்படுகிறது.** எவனாவது ஒருவன் ஆண்டவருடன் சேர்க்கப்பட்டிருக்கிற அளவு, அவன் குணப்படுத்தப்படுகிறபடியினால், ஆண்டவருடன் ஐக்கியப்படுதலும், குணப்படுதலும், ஒன்றாயிருக்கின்றன. ஆகையினால், குணப்படுதலைப்பற்றி மேலே சொல்லியதெல்லாம், ஐக்கியத்தைப் பற்றியும் சொல்லப்

படலாம்; ஐக்கியத்தைப்பற்றி இங்கே சொல்லியது குணப்படு தலைப்பற்றியும் சொல்லப்படலாம். மனிதனுடன் ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும் இருக்கின்றனவென்று, ஆண்டவரே **யோவானில்** கற்பிக்கிறார்: என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன். ஒருவன் என்னிலும் நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான் (XV. 4, 5.). "நான் என் பிதாவிலும், நீங்கள் என்னிலும்; நான் உங்களிலும், இருக்கிறதை அந் நாளிலே நீங்கள் அறிவீர்கள்" (XIV. 20.) அது பரஸ்பரமாய்

(2) கூட இருந்தாலொழிய, மனங்கள் ஐக்கியப்படுகிறதில்லை என்றும் பரஸ்பரமானது சேர்க்கிறதென்றும், விவேகத்திலிருந்து மாத்திரம் எவனும் அறிந்துகொள்ளலாம். ஒருவன் மற்றவனை நேசித்து, திரும்ப நேசிக்கப்படாவிட்டால், அப்பொழுது ஒருவன் சமீபிக்கும்போது, மற்றவன் போய்விடுகிறான்; ஆனால், அவன் திரும்ப நேசிக்கப்பட்டால், அப்பொழுது, ஒருவன் சமீபிக்கும்போது மற்றவனும்கூட சமீபிக்கிறான்; ஐக்கியமும் உண்டாகிறது. அல்லாமலும், அன்பானது நேசிக்கப்பட இச்சிக்கிறது; இது அதில் நடப்பட்டிருக்கிறது; அது திரும்ப நேசிக்கப்படுகிற அளவு, அது தன்னிலேயும், தன் இன்பத்திலேயு மிருக்கிறது. ஆண்டவர் மாத்திரம் மனிதனை நேசித்து, மனிதனால் திரும்ப நேசிக்கப்படாவிட்டால், ஆண்டவர் சமீபிப்பார் என்றும் மனிதன் போய்விடுவானென்றும், இவைகளிலிருந்து வெளிப்படையா யிருக்கிறது. இவ்விதமாக ஆண்டவர் மனிதனிடம் வந்து அவனுக்குள் பிரவேசிக்க இடைவிடாமல் இச்சிப்பார், மனிதனனவன் தானே திரும்பி கொண்டு போய்விடுவான். நரகத்திலிருக்கிறவர்கள் விஷயத்தில் இதுதான் நிலைமை; ஆனால் சுவர்க்கத்திலிருக்கிறவர்கள் விஷயத்

(3) தில் பரஸ்பர ஐக்கியமிருக்கிறது. ஆண்டவரானவர் மனிதனுடன் அவனுடைய மோட்சத்திற்காக ஓர் ஐக்கியத்தை விரும்புகிறபடியினால், மனிதனில் பரஸ்பரமான ஏதோ ஒன்று இருக்கவேண்டுமென்று கூட அவர் சித்தப்படுத்தி வைக்கிறார். தான் இச்சித்து சுதந்தரத்திலிருந்து செய்கிற நன்மையும், அந்த இச்சையிலிருந்து தான் நினைத்து விவேகத்தை அனுசரித்துப் பேசு

கிற உண்மையும் தன்னிடமே யிருந்தேபோல் தோன்றுகிறதென்பதும், அவனுடைய சித்தத்திலிருக்கும் இந்த நன்மையும், அவன் புத்தியிலிருக்கும் இந்த உண்மையும், தன்னுடைய சொந்தமாக தோன்றுகிறதென்பதும், மனிதனிலிருக்கும் பரஸ்பரமாக இருக்கிறது. நிஜமாகவே, அவைகள் அவனுடைய சொந்தமானவைகளைப் போல, மனிதனுக்கு, தன்னிடமேயிருந்துபோலவும், தன்னிட சொந்தம் போலவும், எவ்வித வித்தியாசமும் இல்லாமல் தோன்றுகின்றன; எவனாவது ஒருவன் எந்த புத்தியினாலாவது வேறு விதமாய் அது இருப்பதாக பார்க்கிறானோ என்று யோசித்துப்பார். தன்னிட மிருந்தேபோல் தோன்றும் இந்த தோற்றத்தைப்பற்றி மேலே பார் (பி. 74-77); அவனுடைய சொந்தமாக உரித்தாக்குதலைப்பற்றி ( பி. 78-81) பார்க்கவும். மனிதனானவன், ஆண்டவரிடமிருந்து அல்லாமல், தன்னிடமே யிருந்து நன்மையை செய்கிறதில்லை யென்றும், உண்மையை நினைக்கிறதில்லை யென்றும், அவன் ஒத்துக்கொள்ளவேண்டுமென்பது மாத்திரம் வித்தியாசமாயிருக்கிறது; ஆகையினால் அவன் செய்யும் நன்மையும், அவன் நினைக்கும் உண்மையும் அவனுடையதல்ல. அது உண்மையான படியினால், சித்தத்திலிருக்கும் கொஞ்சம் அன்பிலிருந்து அப்படி நினைத்தல், ஐக்கியப்படுதலை உண்டாக்குகிறது; இவ்விதமாக மனிதன் ஆண்டவரைப் பார்க்கிறான், ஆண்டவரும் மனிதனைப் பார்க்கிறார்.

93. எல்லா நன்மைகளும் ஆண்டவரிடமிருந்து வருகிறதாக நம்புகிறவர்களுக்கும், நன்மையானது தங்களிடமே யிருந்து வருகிறதாக நம்புகிறவர்களுக்கும் வித்தியாசம் என்னவென்பது, பரமார்த்த உலகத்தில் கேட்கவும், பார்க்கவும் எனக்கு அருள் செய்யப்பட்டது. நன்மையானது ஆண்டவரிடமிருந்து வருவதாக நம்புகிறவர்கள், முகத்தை அவர் பக்கம் திருப்பி, நன்மையின் இன்பத்தையும் பரமானந்தத்தையும் அடைகிறார்கள். ஆனால், நன்மையானது தங்களிடமே யிருந்து வருவதாக நம்புகிறவர்கள், தாங்கள் யோக்கியதையை உடைத்தா யிருந்ததாக தங்களுக்குள்ளே நினைத்துக்கொண்டு தங்களையே எதிர்பார்க்கிறார்கள்;

அவர்கள் தங்களையே எதிர்பார்க்கிற படியினால், நன்மையின் இன்பமா யில்லாமல், தீமையின் இன்பமா யிருக்கிற தங்களுடைய சொந்த நன்மையின் இன்பத்தை மாத்திரம் அவர்கள் அறிந்து கொள்ளக் கூடும்; ஏனென்றால், மனிதனுடைய சொந்தமனது தீமையா யிருக்கிறது; தீமையின் இன்பம், நன்மையாகப் பார்க்கப்பட்டபோது, நரகமா யிருக்கிறது. நன்மையை செய்து, அது தங்களிடமே யிருந்து வந்ததாக நம்பினவர்கள், இறந்த பிறகு, எல்லா நன்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்கிற உண்மையை ஏற்றுக் கொள்ளாவிட்டால், நரகத்திலுள்ள பிசாசுகளுடன் கலந்து, கடைசியில் அவர்களோடு ஒன்றாகிறார்கள்; ஆனால், இந்த உண்மையை ஏற்றுக் கொள்பவர்கள் சீர்படுத்தப் படுகிறார்கள். ஆனால், தங்கள் வாழ்க்கையில், கடவுளை எதிர்பார்த்தவர்கள் தவிர வேறு யாரும் அதைப் பெற்றுக் கொள்ளுகிறதில்லை: தங்கள் வாழ்வில் கடவுளை எதிர்பார்த்தல் என்பது, தீமைகளை பாவங்களாக தள்ளுதலைத் தவிர வேறொன்று மில்லை.

94. மனிதனுடன் ஆண்டவர் ஐக்கியமும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும், மனிதன் அயலானைத் தன்னையே போல நேசித்தலினாலும், ஆண்டவரை எல்லாவற்றிற்கும் மேலாக நேசித்தலினாலும், நிறைவேற்றப் படுகிறது. அயலானைத் தன்னையே போல் நேசித்தல் என்பது அவன் விஷயத்தில் கபடமாயும் அநியாயமாயும் நடக்காமலும், அவன் பேரில் அருவருப்பு கொண்டு, அவனுக்கு விரோதமாய் பழி தீர்க்க எரிந்து கொண்டிராமலும், அவனை நிந்திக்காமலும் அவனுக்கு அபகீர்த்தி உண்டாக்காமலும், அவனுடைய பெண்சாதியுடன் விபசாரம் செய்யாமலும், அவனுக்கு விரோதமாய் இதைப்போன்ற இதர காரியங்களைச் செய்யாமலும் இருப்பதை விட வேறொன்றுமில்லை. இவ்விதமான காரியங்களை செய்கிறவர்கள் அயலானை தங்களையே போல நேசிக்கிறதில்லை யென்று யாருக்குத் தெரியமாட்டாது? ஆனால், அயலானுக்கு விரோதமாய் அவைகள் தீங்குகளா யிருக்கிற படியினாலும், அதே காலத்தில் ஆண்டவருக்கு விரோதமாய் பாவங்களா யிருக்கிறதினாலும், இவ்விதமான காரியங்களை செய்

யாதவர்கள், அயலானுடன் உண்மையாயும், நியாயமாயும், சினேகிதமாயும், விசுவாசமாயும் நடக்கிறார்கள்; ஆண்டவரும் அம்மாதிரியாகவே செய்கிறபடியினால், பரஸ்பர ஐக்கியம் சம்பவிக்கிறது; பரஸ்பர ஐக்கியம் இருக்கும் காலத்தில், ஒரு மனிதன் அயலானுக்கு எதைச் செய்தாலும், ஆண்டவரிடமிருந்து அவன் செய்கிறான்; ஆண்டவரிடமிருந்து ஒரு மனிதன் செய்யும் ஏதாகிலும் நன்மையாயிருக்கிறது; அப்பொழுது, அவனுக்கு, மனுஷன் அயலானல்ல, ஆனால் அந்த மனிதனிடமிருக்கும் நன்மை அயலானாகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக ஆண்டவரை நேசித்தலென்பது, வேதத்தில் ஆண்டவர் இருக்கிறபடியினால் வேதத்திற்கும், திருச்சபையின் பரிசுத்தமான பொருள்களில் ஆண்டவரிருக்கிற படியினால், திருச்சபையின் பரிசுத்தமான பொருள்களுக்கும், ஒவ்வொரு மனிதனுடைய ஆன்மாவும் ஆண்டவருடைய கையிலிருப்பதினால், எவனுடைய ஆன்மாவுக்கும் எந்த தீங்கும் செய்யாமலிருப்பதைத் தவிர வேறொன்றுமில்லை. பிரமாண்டமான பாவங்களாக இந்த தீங்குகளை ஒழிக்கிறவர்கள் ஆண்டவரை எல்லாவற்றிற்கும் மேலாய் நேசிக்கிறார்கள்; ஆயினும் அயலானை தங்களையே போல நேசிக்கிறவர்கள் தவிர, இதை வேறு யாராலும் செய்யமுடியாது; ஏனென்றால், அந்த இருவரும் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

95. மனிதனுடன் ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவருடன் மனிதன் ஐக்கியமும் இருக்கிறபடியினால், ஒன்று ஆண்டவர் பொருட்டும், மற்றது மனிதன் பொருட்டுமாக கட்டளைகளின் இரண்டு கற்பலகைகள் யிருக்கின்றன. ஒரு மனிதன் தன்னிடமிருந்தே போல மனிதன் பொருட்டிருக்கும் கற்பலகையின் பேரிலுள்ள கட்டளைகளை எவ்வளவு செய்கிறானோ, அவ்வளவே ஆண்டவர் தன்னுடைய கற்பலகையின் பேரிலுள்ள கட்டளைகளை செய்ய அவனுக்கு சக்தி உண்டாக்குகிறார். ஆனால், எல்லாம் அயலானிடத்து அன்பு பாராட்டுதலைக் குறிக்கிற தன் சொந்த கற்பலகையின் கட்டளைகளை செய்யாதவன், எல்லாம் ஆண்டவ

ரிடத்து அன்பு பாராட்டுதலைக் குறிக்கிற ஆண்டவருடைய கற்பலகையின் பேரிலுள்ள கட்டளைகளை செய்ய முடியாது. ஒரு கொலைபாதகனும், திருடனும், விபசாரியும், பொய்சாட்சியும், ஆண்டவரை எந்த மாதிரியாய் நேசிக்கக் கூடும்? அவ்வித நடத்தையுள்ளவனாயிருத்தலும், ஆண்டவரிடத்து அன்பு பாராட்டலும், ஒன்றுக்கொன்று ஒவ்வாததாயிருக்கின்றனவென்று விவேகம் சொல்லுகிறதில்லையா? பிசாசு அவ்விதமானதல்லவா? அது கடவுளை வெறுக்கிறதல்லாமல் வேறு விதமாய் செய்யுமா? ஆனால், ஒரு மனிதன் கொலையையும், விபசாரத்தையும், திருட்டையும், பொய் சாட்சியம் சொல்லுதலையும், நரகத்துக்கு அடுத்ததாக வெறுப்பில் வைத்தால், அப்பொழுது அவன் ஆண்டவரை நேசிக்கக்கூடும்; ஏனென்றால், அவன் அப்பொழுது முகத்தை பிசாசிடமிருந்து ஆண்டவர் பக்கம் திருப்புகிறான்; அவன் முகத்தை ஆண்டவர் பக்கம் திருப்பினால், அன்பும் ஞானமும் அவனுக்கு கொடுக்கப்படுகின்றன: இவைகள் கழுத்தின் பிடரியின் மூலமாய் அல்லாமல், முகத்தின் மூலமாய் மனிதனுக்குள் பிரவேசிக்கின்றன. ஆண்டவருடன் ஐக்கியமானது வேறு எந்த வழியிலுமல்லாமல், இந்த வழியில் சம்பவிக்கிறபடியினால், அந்த இரண்டு கற்பலகைகளும் ஒரு உடன்படிக்கை என்று சொல்லப்படுகின்றன; ஒரு உடன்படிக்கையானது இருவருக்குள் நடப்பது.

96. VII. **மனதனிலிருக்கும் இந்த இரண்டு மனோசக்திகளையும், ஆண்டவர் தம்முடைய தெய்வபரிபாலனத்தின் போக்கில் எல்லாம், கெடுதி செய்யாமலும் பரிசுத்தமாயும் வைக்கிறார்.** காரணங்களாவன: இந்த இரண்டு மனோசக்திகள் இல்லாமல் மனிதன் ஒரு புத்தியையும் ஒரு சித்தத்தையும் உடைத்தாயிருக்கமாட்டான், இவ்விதமாக அவன் மனிதனாகயிருக்கமாட்டான், மறுபடியும்; இந்த இரண்டு மனோசக்திகள் இல்லாவிட்டால், மனிதன் ஆண்டவருடன் சேர்க்கப்பட சக்தியுள்ளவனாயிருந்திருக்க மாட்டான்; இவ்விதமாக சீர்ப்படுத்தப்படவும் குணப்படுத்தப் படவும், சக்தியுள்ளவனாயிருந்திருக்க மாட்டான்; இன்னமும், இந்த இரண்டு

மனோசக்திகள் இல்லாவிட்டால் மனிதனுக்கு, மரணமின்மையும் சதாகால வாழ்வும் இருக்கமாட்டாது. இது அப்படி யிருக்கிற தென்று, இரண்டு மனோசக்திகளா யிருக்கிற சுவேச்சையும் பகுத்தறிவுடைமையும் என்னவென்று முன் பக்கங்களில் கூறியபடி தெரிந்துக் கொள்வதினால், நிஜமாகவே அறிந்து கொள்ளப்படலாம்; ஆனால் காரணங்களாக சற்று முன் சொல்லியவைகள் முடிவுகளாக பார்வைக்குக் காட்டப்பட்டால் ஒழிய, தெளிவாய் அறிந்து (2) கொள்ளப்பட முடியாது; ஆகையினால், அவைகள் விரித்துரைக்கப் படவேண்டும். இந்த இரண்டு மனோசக்திகளும் இல்லாவிட்டால், மனிதனுக்கு சித்தமும் புத்தியும் இருக்காது; இவ்விதமாக அவன் மனிதனாக இருக்கமாட்டான். ஏனென்றால், தன்னிடமிருந்தே போல் சுவேச்சையாய் இச்சிக்க சக்தியுள்ளவனா யிருப்பதிலிருந்து மாத்திரம் ஒரு மனிதனுக்கு சித்த மிருக்கிறது; தன்னிடமிருந்தேபோல் சுவேச்சையாய் இச்சித்தல், சுவேச்சை என்று சொல்லப்படுகிற ஆண்டவரால் இடைவிடாமல் கொடுக்கப்படுகிற மனோசக்தியிலிருந்து வருகிறது; ஒரு விஷயம் விவேகத்துக்கு அடுத்ததா இல்லையா, என்று தன்னிடம் இருந்தேபோல தெரிந்துகொள்ள சக்தியுள்ளவனா யிருத்தலிலிருந்து மாத்திரம் மனிதனுக்கு புத்தி யிருக்கிறது; ஒரு விஷயம் விவேகத்தை அடுத்ததா இல்லையா என்பதை அறிந்து கொள்ளுதல், பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட, ஆண்டவரால் இடைவிடாமல் கொடுக்கப்பட்ட மற்ற மனோசக்தியிலிருந்து வருகிறது. இந்த மனோசக்திகள் சித்தத்தையும் புத்தியையும் போல மனிதனில் தாங்களே சேருகின்றன; இவ்விதமாக, ஒரு மனிதன் இச்சிக்கக் கூடுமாகையால், அவன் அறிந்து கொள்ளவும்கூட முடியும்; ஏனென்றால், அறிந்து கொள்ளும் தன்மையின்றி இச்சிக்கும் தன்மை கொடுக்கப்படுகிறதில்லை. அறிந்து கொள்ளுதலென்பது, அதன் பங்காளி அல்லது கூட்டாளி; அது இல்லாமல் அது இருக்க முடியாது; ஆகையினால், சுவேச்சை என்று சொல்லப்படு (3) கிற மனோசக்தியுடன், பகுத்தறிவுடைமை என்று சொல்லப்படுகிற மனோசக்தி கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னமும், புத்தியிலிருந்து சித்தத்தை நீர் எடுத்துவிட்டால், நீர் யாதொன்றையும்

அறிந்துகொள்ள மாட்டீர்; வேலைக்காரனுக்கு கருவிகள்போலிருப்பதினால், அறிவுகள் என்று சொல்லப்பட்ட அந்த உதவிகள், எதிரிலிருந்தாலும், அல்லது அதேகாலத்தில் திறக்கப்பட்டாலும், நீர் எவ்வளவு இச்சிக்கிறீரோ, அவ்வளவு அறிந்துகொள்ள சக்தியுள்ளவனாயிருக்கிறீர். சித்தமும் அன்பும் ஒன்றாக செயல்படுகிறபடியினால், நீர் இச்சிக்கிற அளவு, அதாவது அறிந்து கொள்ள நீர்நேசிக்கிற அளவு நீர் தெரிந்துகொள்ளக்கூடுமென்று சொல்லப்படுகிறது. நிஜமாகவே, இது ஒரு அசத்தியாபாசம்போல் தோன்றுகிறது; ஆனால், அறிந்துகொள்ள நேசிக்காதவர்களுக்கு, ஆகையினால், இச்சிக்காதவர்களுக்கு அது அப்படித் தோன்றுகிறது; இச்சிக்காதவர்கள், அவர்களால் முடியாதென்று சொல்லுகிறார்கள். ஆனால், யார் அறிந்துகொள்ள முடியாதவர்களென்பதும், கஷ்டத்துடன் மாத்திரம் யார் அறிந்துகொள்ளுவார்களென்பதும், பின்வரும் (4) பிரிவில் தெரியப்படுத்தப்படும். சுவேச்சையென்று சொல்லப்படும் மனோ சக்தியிலிருந்து ஒரு சித்தத்தையும், பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட மனோ சக்தியிலிருந்து ஒரு புத்தியையும், ஒரு மனிதன் உடைத்தாயிருந்தாலொழிய, அவன் மனிதனாகமாட்டானென்று ரூபகாரமில்லாமலே வெளிப்படையாயிருக்கிறது. மிருகங்களுக்கு இந்த மனோசக்திகள் இல்லை. மிருகங்கள் இச்சிக்கவும் அறிந்துகொள்ளவும் சக்தியுள்ளவைகளாயிருக்கின்றனபோல தோன்றுகிறது. ஆனால், அவைகள் அப்படி இல்லை; அவைகள் மாத்திரம் செய்வதை செய்ய அவைகளை நடத்தி ஏவுகிற அதன் தோழியாக அறிவுடன் சேர்ந்து, தானே ஆவலாயிருக்கும் இயல்பான ஆசையாக அது யிருக்கிறது. அவைகளின் அறிவில், நிஜமாகவே, ஒரு தேசாசாரமானதும், சன்மார்க்கமானதுமான அம்சமிருக்கிறது. ஆனல் இவைகள் அறிவுக்கு மேலிருப்பவைகள் அல்ல; ஏனென்றால், அதைக்குறித்த, சன்மார்க்கமானதும் அதனால் விளையும் பகுப்பான சிந்தனையை காண்பிக்கும் பரமார்த்தமானதும் அவைகளுக்கு இல்லை. நிஜமாகவே, அவைகள் எதையும் செய்ய கற்பிக்கப்படலாம்; ஆனால், அவைகளின் அறிவுடனும், அதே காலத்தில் அவைகளின் ஆசையுடனும் தானே சேர்ந்துகொள்ளுகிறதும், பார்வை அல்லது கேள்வி மூல

மாய் மறுபடியும் விளைவிக்கப்படுகிறதுமான சுபாவிகமான எதோ ஒன்ருய் மாத்திரம் இது இருக்கிறது; ஆனுல், எந்தவிதத்திலும் அது சிந்தனையைச் சேர்ந்த விஷயமாகிறதில்லை. இன்னும் குறை வாய் அவைகளில் விவேகத்துக்குச் சேர்ந்த விஷயமாயில்லை. ஆனுல், இது விஷயத்தைப்பற்றி மேலே (பி. 74) எதோ சிலது (5) பார்க்கப்படலாம். **இந்த இரண்டு மனேசக்திகள் இல்லாமல், மனிதன் ஆண்டவருடன் சேர்க்கப்படவும், இவ்விதமாக சீர்ப்படுத்தப் படவும், குணப்படுத்தப்படவும், சக்தியுள்ளவனுக யிருந்திருக்கமாட் டான்** என்பது மேலே காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஏனென்ருல், தீமையுள்ளவர்கள் நல்லவர்களாகிய இருவகையாருடனும் ஆண்ட வர் இந்த இரண்டு மனேசக்திகளிலும் வாசம் செய்கிருர்; அவை களின் மூலமாய் ஒவ்வொரு மனிதனேடும் அவர் தானே சேர்ந்து கொள்ளுகிருர். அதனுல்தான் ஒரு தீங்குள்ள மனிதனும் நல்ல வனும் அறிந்துகொள்ளக்கூடும்; அதிலிருந்து தான், அவனுக்கு செல்வாக்குடன் நன்மையின் சித்தமும், உண்மையின் புத்தியும் இருக்கிறது; அவைகள் செய்கையில் அப்படி இல்லையென்பது இந்த மனேசக்திகளை துர்விநியோகம் செய்வதால் உண்டாகிறது. ஒவ்வொரு மனிதனேடும் இந்தமனேசக்திகளில் ஆண்டவர் வாசம் செய்கிருரென்பது, அவருடைய சித்தத்தின் உட்பெருக்கிலிருந்து உண்டாகிறது; மனிதனுல் **அவர்** ஏற்றுக்கொள்ளப்பட வேண்டு மென்பதும், அவனுள் தான் வாசம் செய்யவேண்டுமென்பதும், சதாகால வாழ்வின் ஆனந்தங்களை அவனுக்குக் கொடுக்கவேண்டு மென்பதுமாகிய இவைகள் ஆண்டவருடைய **இச்சாசத்திக்கு** சேர்ந்தவைகளானபடியினுல் அவருடைய **சித்தத்தை** சேர்ந்தவை களா யிருக்கின்றன. ஆண்டவரின் இந்த சித்தம்தான் மனிதனில் அவன் தானே நினைத்து, பேசி இச்சித்து செயல்பட்டதுபோல் (6) தோன்றச்செய்கிறது. ஆண்டவருடைய உட்பெருக்கு இது விஷயத்தில் பாடுபடுகிறதென்பது பரமார்த்த உலகத்தில் அநேக விஷயங்களால் ரூபகாரம் செய்யப்படலாம். ஏனென்ருல், சில சமயங்களில் ஓர் தேவன் தான் ஆண்டவனென்று தவிர வேருென் றும் தெரியாதபடி, ஆண்டவர் அவனை தன்னுடைய தெய் வீகத்தால் நிரப்புகிருர். ஆகையால், தாங்களே ஏகோவா

என்று சொல்லிக்கொண்டவரும், வேதத்தில் சொல்லப்பட்டவர்களுமாகிய அபிராகாமாலும் ஹாகாராலும், கிடியனுலும் பார்க்கப்பட்ட தேவதூதர்கள் இவ்விதமாய் நிரப்பப்பட்டார்கள். ஒரு சூக்கும சரீர ஆன்மாவுக்குத் தான் மற்றதென்று தெரியாத வரையில், அம்மாதிரிகூட ஒரு ஆன்மா மற்றதால் நிரப்பப்படக்கூடும். நான் இதை அடிக்கடிப்பார்த்திருக்கிறேன். ஆண்டவர் எல்லாவற்றையும் இச்சையால் செய்கிருரென்றும், அவர் இச்சிக்கிறது செய்யப்படுகிறதென்றும் சுவர்க்கத்தில்கூட தெரிந்திருக்கிறது. இவைகளிலிருந்து, இந்த இரண்டு மனேசக்திகளால் ஆண்டவர் மனிதனுடன் தானே சேர்ந்துகொள்ளுகிருர் என்றும், மனிதனை பரஸ்பரமாய் சேர்க்கப்படச் செய்கிருரென்றும், வெளிப்படையாயிருக்கிறது. ஆனுல், மனிதனுனவன் இந்த மனேசக்திகளால் எப்படி பரஸ்பரமாய் சேர்க்கப்படுகிருனென்பதும், அதனுல், அவைகளால் அவன் எப்படி சீர்ப்படுத்தப்பட்டு குணப்படுத்தப்படுகிருனென்பதும், மேலே சொல்லப்பட்டது. கீழே அதிகம் சொல்லப்படும். (7) இந்த இரண்டு மனேசக்திகளும் இல்லாமல் மனிதனுக்கு மரணமின்மையும் நித்தியத்துவமும் இருக்காது என்பது, ஆண்டவருடன் ஐக்கியமும், அதனுடன் சீர்ப்படுதலும், குணப்படுத்தலும், அவைகளால் உண்டாகிறதென்றும், ஐக்கியத்தால் மரணமின்மையும், சீர்ப்படுதலாலும், குணப்படுதலாலும், சதாகால வாழ்வும் மனிதனுக்கு உண்டென்றும் சற்று முன் சொல்லியவைகளிலிருந்து ஏற்படுகிறது. முன் சொல்லியபடி, இந்த இரண்டு மனேசக்திகளால், நல்லவன் கெட்டவனுகிய ஒவ்வொரு மனிதனுடனும் ஆண்டவரின் ஐக்கிய மிருக்கிறபடியினுல், ஒவ்வொரு மனிதனுக்கும் மரணமின்மை இருக்கிறது. ஆனுல், உள்ளுக்குள்ளானதிலிருந்து இறுதியானவைகள் வரையில் பரஸ்பர ஐக்கியமிருக்கிற மனிதனுக்குமாத்திரம் சதாகால வாழ்வு அதாவது சுவர்க்கத்து வாழ்வு உண்டு. இவைகளிலிருந்து, ஆண்டவர் மனிதனில் இந்த இரண்டு மனேசக்திகளை தன்னிட தெய்வ பரிபாலனத்தின் எல்லா அபிவிர்த்திகளிலும் கெடாமலும் பரிசுத்தமாகவும் ஏன் வைக்கிருர் என்பதற்கு காரணங்களை அறிந்து கொள்ளலாம்.

97. VIII. **ஆகையினுல்தான், மனிதன் சுதந்தரத்திலிருந்து விவேகத்தை அனுசரித்து செயல்படவேண்டுமென்பது தெய்வபரிபாலனத்தின் கருத்தாயிருக்கிறது.** விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுதலும், சுவேச்சையிலிருந்தும் பகுத்தறிவுடைமையிலிருந்தும் செயல்படுதலும் ஒரே பொருளாயிருக்கிறது; சித்தத்திலிருந்தும் புத்தியிலிருந்தும் செயல்படுதல்கூட அப்படியே இருக்கிறது; ஆனுல், விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்தும், அல்லது சுவேச்சையிலிருந்தும் பகுத்தறிவுடைமையிலிருந்தும் செயல்படுதல் ஒரு விஷயம். விவேகத்தையே அனுசரித்து சுதந்திரத்திலிருந்தேயும், அல்லது சுவேச்சையிலேயே இருந்தும் பகுத்தறிவுடைமையிலேயே இருந்தும் செயல்படுதல் வேறு விஷயம்; ஏனென்ருல், தீமையினிடத்துகொள்ளும் அன்பிலிருந்து தீங்கு செய்து, அதை தன்னிலேயே ஸ்திரப்படுத்துகிறவன்கூட, நிஜமாக விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுகிருன்; அப்படியிருந்தாலும் அவனுடைய சுதந்தரம் தன்னில்தானே சுதந்தரமாகவும், அல்லது சுதந்தரமாகவேயும் இருக்கிறதில்லை. ஆனுல் தன்னில்தானே அடிமைத்தனமாயிருக்கிற நரகத்துக்கடுத்த சுதந்தரமாக மெய்யாக இருக்கிறது; அவனுடைய விவேகம் தன்னில்தானே விவேகமாயில்லை. ஆனுல், அது போலியாகவோ அல்லது பொய்யாகவோ அல்லது ஸ்திரங்களினுல் விவேகமாகத்தோன்றுகிறதாகவோ இருக்கிறது; அப்படியிருந்தாலும், இரண்டும் தெய்வபரிபாலனத்தைச் சேர்ந்தவைகள்; ஏனென்ருல், தீமையை இச்சிக்கும் சுதந்தரமும், ஸ்திரப்படுத்துதலால், அதை விவேகத்துக்கு அனுசரித்ததுபோல் தோன்றச்செய்தலும், ஸ்தூல மனிதனிடமிருந்து நீக்கப்பட்டால், சுவேச்சையும் பகுத்தறிவுடைமையும், அவைகளுடன் சித்தமும் புத்தியும் அழிந்துபோகும். அவனை தீமையிலிருந்து இழுத்து சீர்ப்படுத்த முடியாது; ஆகையினுல், அவன் ஆண்டவருடன் சேர்க்கப்படவும், சதாகாலமிருக்கவும் முடியாது. ஆகையினுல், ஆண்டவரானவர், மனிதன் தன் கண்ணின் கண்மணியைப் பாதுகாப்பதுபோல் மனிதனில் சுதந்திரத்தைப் பாதுகாக்கிருர். அப்படியிருந்தாலும், ஆண்டவர் சுதந்தரத்தின் மூலமாய் தீங்குகளிலிருந்து

மனிதனை இடைவிடாமல் பின்னுக்கு இழுக்கிறார்; சுதந்திரத்தின் மூலமாய் அவர் எவ்வளவு தூரம் அவனை அப்படி பின் இழுக்கக் கூடுமோ, அவ்வளவுதூரம் சுதந்திரத்தின் மூலமாய் நன்மையானதை அவர் நடுகிறார். இவ்விதமாக, நரகத்துக்கு அடுத்த சுதந்தரத்துக்குப் பதிலாக சுவர்க்கத்து சுதந்தரத்தை அவனுக்கு ஒன்றன்பின் ஒன்றாய் தானம் கொடுக்கிறார்.

98. ஒவ்வொரு மனிதனுக்கும் சுவேச்சை என்று சொல்லப்படுகிற இச்சிக்கும் மனோசக்தியும், பகுத்தறிவுடைமை என்று சொல்லப்படுகிற அறிந்துகொள்ளும் மனோசக்தியும் உண்டென்று மேலே சொல்லப்பட்டது; ஆனால், இந்த மனோசக்திகள் மனிதனில் பொருந்த வைக்கப்பட்டதுபோல் இருக்கின்றனவென்று நன்றாய் தெரியப்பட வேண்டியது; ஏனென்றால், அவனுடைய மானிடத் தன்மையே அவைகளிலிருக்கின்றது; ஆனால், சற்று முன்சொல்லியபடி, விவேகத்தை அநுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுதல் ஒன்று, விவேகத்தையே அநுசரித்து சுதந்தரத்திலிருந்தே செயல்படுதல் வேறு ஒன்று. ஆண்டவரால் குணப்படுத்தப்பட இடங்கொடுத்தவர்கள் தவிர வேறுயாரும் விவேகத்தையே அநுசரித்து சுதந்தரத்திலேயே யிருந்து செயல்பட முடியாது; ஆயினும், மற்றவர்களெல்லாம் அவர்கள் விவேகத்தைப்போல தோன்றச் செய்கிற சிந்தனையை அநுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுகிறார்கள். அப்படியிருந்தாலும், ஒவ்வொரு மனிதனும் பைத்தியக்காரனாகவும் அல்லது மிதமிஞ்சி மூடனாகவும் பிறந்திருந்தாலொழிய, விவேகத்தையே அடையவும், அதனால் சுதந்தரத்தையே அடையவும், சக்தியுள்ளவனாயிருக்கிறான்; ஆனால் எல்லாரும் ஏன் அப்படி செய்கிறதில்லை என்பதற்கு அநேக காரணங்கள் பின் வருவதில் தெரியப்படுத்தப்படும். சுதந்தரமே அல்லது சுவேச்சையே, விவேகத்தையே அல்லது பகுத்தறிவுடைமையையே சேர்த்து கொடுக்கப்படாதவர்களும் பிரயாசையுடன் அவைகள் கொடுக்கப்படக் கூடியவர்களும் யார் என்று மாத்திரம் (2) இங்கே சொல்லப்படும். சுவேச்சையுமே பகுத்தறி

வுடைமையுமே, பைத்தியக்காரர்களாக பிறந்தவர்களுக்கும் அவர்கள் அப்படி யிருக்கிறவரையில் பைத்தியக்காரர்களான வர்களுக்கும் கொடுக்கப் படமாட்டாது. சுவேச்சையுமே, பகுத்தறிவுடைமையுமே மூடர்களாகவும் மந்த புத்தி யுள்ளவர்களாகவும் பிறந்தவர்களுக்கும் மனதின் உள்ளானவைகளை கெடுத்த அல்லது முழுமையும் மூடின சோம்பேரித்தனம் அல்லது வியாதியின் திமிரிலிருந்தும் அல்லது மிருகத் தன்மையான (3) வாழ்வின் மேல் கொள்ளும் அன்பிலிருந்தும் அம்மாதிரியான எவனுக்கும் கொடுக்கப்பட மாட்டாது. சுவேச்சையுமே பகுத்தறிவுடைமையுமே, கிருஸ்து உலகத்தில் ஆண்டவரின் தெய்வத் தன்மையையும் வேதத்தின் பரிசுத்தத்தையும் முழுமையும் இல்லையென்று கூறி, இந்த மறுப்பை இறக்கிற வரையில் தங்களுக்குள்ளே ஸ்திரப்பட ஆதரித்தவர்களுக்குக் கொடுக்கப்பட மாட்டாது; ஏனென்றால், இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப் (4) படாத பரிசுத்த ஆவிக்கு விரோதமாய் செய்யும் பாவத்தினால் இது தெரிந்துகொள்ளப்படுகிறது. (மத்தே. XII. 31, 32). அதுவுமல்லாமல், சுவேச்சையும் பகுத்தறிவுடைமையும் தெய்வத்துக்கு அல்லாமல், பிரகுருதிக்கு எல்லா பொருள்களையும் சாட்டி, பார்க்கப்பட்ட பொருள்களிலிருந்து தர்க்கித்தலினால், தங்கள் சமயமாக இதை செய்து கொண்டவர்களுக்கும் கொடுக்கப்படமாட்டாது; ஏனென்றால், இவர்கள் நாஸ்தீகர்களா யிருக்கிறார்கள். பொய்யை உறுதிப்படுத்துகிறவன் உண்மையை மறுப்பவனானபடியினால், சுவேச்சையும் பகுத்தறிவுடைமையும் சமயத்தின் பொய்களில் தாங்களே அதிகமாய் ஸ்திரப்பட்டவர்களுக்கு பிரயாசத்துடன் கொடுக்கப்படும்; ஆனால், எந்த சமயத்திலிருந்தபோதிலும் அம்மாதிரி தாங்களே ஸ்திரப்படாதவர்களுக்கு அவைகள் கொடுக்கப்படும்; இந்த விஷயத்தைப்பற்றி **பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து சித்தாந்தம்** எனும் நூலில் காண்பிக்கப்பட்டதைப் பார்க்கவும் (பி. 91-97). சிசுக்களும் குழந்தைகளும் சுவேச்சையிலும் பகுத்தறிவுடைமையிலும், யௌவன காலம் வருகிற வரையில் வரமுடியாது; ஏனென்றால், மனிதனில், மனதின் உள்ளானவைகள் ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படுகின்றன; அவ்

வேளையில் பூமியில் முளைக்க முடியாத, பழுக்காத ,பழத்தின் விதைகளைப்போல் அவைகளிலிருக்கின்றன.

99. சுதந்தரமும் பகுத்தறிவுடைமையும், ஆண்டவருடைய தெய்வத்துவத்தையும், வேதத்தின் பரிசுத்தத்தையும் மறுத்தவர்களுக்கும், அதுவுமல்லாமல், தெய்வத்துக்கு விரோதமாக பிரகுருதிக்கு அனுகூலமாக தாங்களே ஸ்திரப்பட்டவர்களுக்கும் கொடுக்கப் படாதென்றும், சமயப் பொய்களில் பல விதத்தில் தாங்களே ஸ்திரப் பட்டவர்களுக்கு பிரயாசையுடன் கொடுக்கப் படுமென்றும் சொல்லப்பட்டது; அப்படி யிருந்தாலும் அவர்களெல்லாம் தாங்களே மனோசக்தியை இழக்கவில்லை. பேய்களாகவும் சாத்தான்களாகவுமான நாஸ்திகர்கள், தேவர்களைப் போல் ஞான இரகசியங்களை அறிந்திருக்கிறார்களென்றும், ஆனால் அப்படி அறிந்திருத்தல், அவைகளை மற்றவர்களிடத்திலிருந்து கேட்டபோது மாத்திரம் என்றும், தங்கள் சொந்தமான சிந்தனைகளுக்கு அவர்கள் திரும்பியபோது, தாங்கள் விரும்பாதபடியினால், அவர்கள் அறிந்துகொள்ளவில்லை யென்றும் நான் கேழ்விப் பட்டிருக்கிறேன். ஆனால், தீமையினிடத்து கொள்ளும் அன்பும், அதிலிருந்து உண்டாகும் இன்பமும் அவர்களை கெட்ட வழியில் கொண்டு போகாவிட்டால், அறிந்துகொள்ள அவர்களும் கூட விரும்பக் கூடுமென்று அவர்களுக்குக் காண்பிக்கப் பட்டது; அதைக்கேட்டபோது இதைக்கூட அவர்கள் அறிந்து கொண்டார்கள்; அப்படிச் செய்ய அவர்களுக்கு சக்தியிருந்ததாயும், அதை உடைத்தாயிருக்க தாங்கள் விரும்பவில்லை யென்றும் நிச்சயமாய் சொன்னார்கள்; ஏனென்றால், அதன் மோகத்தில், வரும் இன்பத்திலிருந்து, தீமையாயிருக்கிற தாங்கள் இச்சிப்பதை இச்சிக்க, அவர்கள் சக்தியுள்ளவர்களா யிருந்திருக்க மாட்டார்கள். பரமார்த்த உலகத்தில் அதைப்போன்ற ஆச்சரியமான விஷயங்களை நான் அடிக்கடி கேழ்விப்பட்டிருக்கிறேன்; அவைகளிலிருந்து, ஒவ்வொரு மனிதனுக்கும் சுவேச்சையும் பகுத்தறிவுடைமையும் உண்டென்றும், ஒவ்வொருவனும் தீமைகளைப் பாவங்களாக நீக்கினால், சுவேச்சையிலேயும் பகுத்தறி வுடைமையிலேயும்

வரலாமென்றும் நான் முழுமையும் ஸ்திரப்படுத்தப் பட்டேன். ஆனால், உலகத்தில் சுவேச்சையிலேயும் பருத்தறிவுடைமையிலேயும் வராத பருவமடைந்த மனிதன் அவைகளுக்குள் இறந்த பிறகு மறுபடியும் எப்பொழுதும் வரமாட்டான்; ஏனென்றால், அப்பொழுது அவனுடைய உயிரின் நிலைமை, உலகத்திலிருந்தது போல சதா காலம் இருக்கும்.

---

**மனிதனானவன் தன்னிடமிருந்தே போல புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளைப் பாவங்களாக நீக்க வேண்டுமென்பதும், வேறு விதமாய் அல்லாமல் இவ் விதமாக ஆண்டவர் உள்ளான மனிதனிலிருக்கும் தீமைகளை நீக்கி, அப்பொழுது, அதே காலத்தில் புறம்பானதில் இருப்பதை நீக்கக் கூடுமென்பதும், தெய்வ அரசியலின் விதியா யிருக்கிறது.**

100. **நன்மையேயாயும் உண்மையேயாயும்** யிருக்கும் ஆண்டவர், மனிதனிலிருக்கும் தீமைகளும் பொய்களும் நீக்கப்பட்டால் ஒழிய அவனில் பிரவேசிக்க முடியாதென்று விவேகத்திலிருந்து மாத்திரம் ஒவ்வொருவனும் அறிந்து கொள்ளலாம்; ஏனென்றால், தீமையானது நன்மைக்கு எதிரிடையா யிருக்கிறது, பொய்யானது உண்மைக்கு எதிரிடையா யிருக்கிறது; இரண்டு எதிரிடையானவைகள் எவ்விடத்திலும் கலக்கப்பட முடியாது. ஆனால், ஒன்று மற்றொன்றுக்கு சமீபத்தில் வந்தால், ஒன்று மற்றொன்றுக்கு இடங்கொடுக்கிற வரையில் நடக்கிற ஒரு சண்டை சம்பவிக்கிறது; கீழ்ப்படுகிறது போய் விடுகிறது, மற்றது அந்த இடத்துக்கு வருகிறது. சுவர்க்கமும் நரகமும், அல்லது ஆண்டவரும்

பிசாசும் இவ்வித எதிரிடையிலிருக்கின்றன. பிசாசு அரசாட்சி செய்யுமிடத்தில் ஆண்டவர் பிரவேசிக்கக்கூடுமென்றும் அல்லது நரகமிருக்கு மிடத்தில் சுவர்க்கம் இருக்கக் கூடுமென்றும் யாராவது அறிவுக்கேற்ப நினைக்கக்கூடுமா? ஆண்டவர் பிரவேசிக்க வேண்டுமானால், பிசாசு நீக்கப்படவேண்டு மென்றும், அல்லது சுவர்க்கம் பிரவேசிக்க, நரகம் நீக்கப்படவேண்டுமென்றும், சுபாவ புத்தியுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் கொடுக்கப்பட்டிருக்கும் அறிவுடைமையிலிருந்து யாருக்கு தெரியாது? ஆபிரகாம் என்பவர் சுவர்க்கத்திலிருந்து, நரகத்திலிருந்த தனவந்தனுக்கு சொல்லியவைகளினால், இந்த எதிரிடை கருதப்படுகிறது: "இவ்விடத்திலிருந்து உங்களிடத்திற்குக் கடந்து போகவும், அவ்விடத்திலிருந்து எங்களிடத்திற்குக் கடந்து வரவும் மனதுள்ளவர்களுக்குக் கூடாதபடிக்கு, எங்களுக்கும் உங்களுக்கும் நடுவே பெரும் பிளப்பு உண்டாக்கப் பட்டிருக்கிறது" (லூக். XVI. 16). தீமையே நரகம், நன்மையே சுவர்க்கம்; அல்லது அதேவாகிறபடி, தீமையே பிசாசு, நன்மையே ஆண்டவர்; தீமை அரசாளும் மனிதன் சின்னஞ்சிறிய உருவத்தில் நரகமா யிருக்கிறான்; நன்மை அரசாளும் மனிதன் சின்னஞ்சிறிய உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிறான். விஷயம் இப்படி யிருக்கையில், சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போகாதபடி அவ்வளவு விஸ்தாரமான பிளப்பு உண்டாக்கப் பட்டிருப்பதினால், சுவர்க்கம் நரகத்திற்குள் எப்படி பிரவேசிக்கும்? ஆண்டவர் சுவர்க்கத்துடன் உள்ளேவரும் பொருட்டு, நரகமானது முழுமையும் நீக்கப்படவேண்டுமென்று இதிலிருந்து ஏற்படுகிறது.

101. ஆனால், அநேகருக்கு, முக்கியமாய் தருமத்திலிருந்து பிரிக்கப்பட்ட பக்தியில் தாங்களே ஸ்திரப்பட்டவர்களுக்கு, தாங்கள் தீமைகளிலிருக்கும்போது நரகத்திலிருக்கிறார்களென்று தெரியாது; அதுவுமல்லாமல் தீமைகளைப்பற்றி அவர்கள் யாதொன்றும் நினைக்காதபடியினால், தீமைகள் என்னவென்றுகூட அவர்களுக்குத் தெரியாது; ஏனென்றால், தாங்கள் சட்டத்தின் நுகத்

தடியில் இல்லையென்று, இவ்விதமாக சட்டம் அவர்களைக் குற்ற வாளியாக தீர்மானிக்கிறதில்லை என்றும், பரகதிக்கு அவர்கள் யாதொன்றையும் செய்யக்கூடாதபடியினால், தங்களிடமிருந்து எந்த தீமையையும் நீக்கமுடியாதென்றும், மேலும், தங்களிடமே யிருந்து எந்த நன்மையும் செய்யமுடியாதென்றும், அவர்கள் சொல்லுகிறார்கள். இவர்கள்தான் தீமையைப்பற்றி நினைக்க அசட்டை செய்கிறவர்கள்; இதை அவர்கள் அசட்டை செய்கிற படியினால், அவர்கள் அதில் இடைவிடாமலிருக்கிறார்கள். மத்தே யுவில் (XXV. 32, 33, 41-46) ஆண்டவரால் கூறப்பட்ட வெள் ளாடுகள் என்பதினால் இவர்கள் கருதப்படுகிறார்களென்று **பக்தி யைக்குறித்த புதிய எருசலேம் நகரத்துக்கோட்பாடு** எனும் நூலில் பார்க்கலாம் (பி. 61-68). அவர்களைப்பற்றி 41-வது வாக்கியத் தில் சொல்லப்பட்டது :— "சபிக்கப்பட்டவர்களே, என்னைவிட்டு, பிசாசுக்காகவும், அவன் தூதர்களுக்காகவும்; ஆயுத்தம் பண்ண (2) ப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள்." ஏனென் றால், தங்களுக்குள்ளேயிருக்கும் தீமைகளைப்பற்றி யாதொன்றை யும் நினைக்காதவர்கள் அதாவது தங்களையே சோதித்து, பின் னிட்டு அவைகளை விட்டுவிடாதவர்கள், தீமை என்பது என்ன வென்று அறியாதவர்களாயிருந்து, பிறகு அதை அதிலிருக்கும் சந்தோஷத்தினால் நேசிக்கவேண்டும்; ஏனென்றால், அது என்ன வென்று தெரியாதவன், அதை நேசிக்கிறான்; அதைப்பற்றி நினைக்க அசட்டை செய்கிறவன், இடைவிடாமல் அதிலிருக்கி றான், அவன் பார்க்காத குருடனைப்போலிருக்கிறான்; ஏனென் றால், கண் அழகுள்ளதையும் அழகில்லாததையும் பார்க்கிறது போல, சிந்தனையானது நன்மையையும் தீமையையும் பார்க்கிறது. தீமையை நினைக்கிறவனும், அதை இச்சிக்கிறவனும், அதனு டன், கடவுள் முன்பாக தீமையானது தோன்றுகிறதில்லை என்று நம்புகிறவனும், அப்படித் தோன்றினால், அது மன்னிக்கப் படுகிறதென்று நம்புகிறவனும் தீமையிலிருக்கிறான்; ஏனென்றால், அவன் நிஜமாகவே தீங்கு இல்லாதவனென்று தானே நினைத்துக் கொள்ளுகிறான். அவர்கள் தீமை செய்யாமல் விலங்கினால், இவை கள் கடவுளுக்கு விரோதமான பாவங்களென்று அல்லாமல், சட்

டங்களுக்கும் கீர்த்திக்கும் பயப்படுகிறதினுல், அப்படிச் செய்கிருர்கள்; அப்படியிருந்தாலும், மனிதனுடைய ஆன்மாதான் அப்படி நினைக்கிறதும் இச்சிக்கிறதுமாயிருக்கிறபடியினுல், அவர்கள் அவைகளை தங்கள் ஆன்மாவில் செய்கிருர்கள்; ஆகையினுல், ஒரு மனிதனுனவன் தன்னுடைய ஆன்மாவில் உலகத்தில் நினைப்பதை, உலகத்தைவிட்டு அவன் சூக்கும சரீர ஆன்மாவானபோது செய்கிருன். ஒவ்வொரு மனிதனும் இறந்தபின் வருகிற சூக்கும உலகத்தில், உன்னுடைய சமயம் என்னவென்ருவது, உன்னுடைய கொள்கை என்ன வென்ருவது கேட்கப்படாமல், ஆனுல் உன்னுடைய வாழ்வு என்னவென்றும், இவ்விதமாக அதன் சுபாவமும் குணமும் என்னவென்றும் கேட்கப்படுகிறது; ஏனென்ருல், ஒருவனுடைய வாழ்க்கை என்னமாயிருக்கிறதோ, அம்மாதிரிதான் அவனுடைய சமயமும் கோட்பாடுமிருக்கிறதென்று தெரிந்திருக்கிறது. ஏனென்ருல், வாழ்க்கையானது தனக்காகவே கொள்கையையும் சமயத்தையும் உண்டாக்குகிறது.

102. இப்பொழுது சொன்னதிலிருந்து, தீமைகள் மனிதனுல் நீக்கப்படவேண்டுமென்பது தெய்வபரிபாலனத்தின் ஓர் சட்டமென்று விசதமாகும்; ஏனென்ருல், அவைகள் நீக்கப்படாவிட்டால், ஆண்டவர் மனிதனுடன் சேர்க்கப்படவும், தன்னிடமே இருந்து மனிதனை சுவர்க்கத்துக்கு வழிகாட்டவும் முடியாது. ஆனுல், மனிதனுனவன் தன்னிடமிருந்தேபோல், புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளை நீக்கவேண்டுமென்றும், மனிதனுனவன் தன்னிடமிருந்தேபோல இதை செய்தாலொழிய, ஆண்டவர் அவனில் அவன் உள்ளான மனிதனில் இருக்கும் தீமைகளை நீக்க முடியாதென்றும் தெரிந்திருக்காதபடியினுல், இவைகள் விவேகத்துக்கு முன் அதன் வெளிச்சத்தில் பின் வரும் ஒழுங்கில் வைக்கப்படும்:— I ஒவ்வொரு மனிதனுக்கும் சிந்தனையின் புறம்பானதும் உள்ளானதுமிருக்கிறது. II. மனிதனுடைய சிந்தனையின் புறம்பானது தன்னில்தானே அதன் உள்ளானதைப் போல் ஒரே குணமுடையதாயிருக்கிறது. III. தடுக்கிறபடியினுல் புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள் நீக்கப்படுகிறவரையில்

உள்ளானது தீமையின் மோகங்களிலிருந்து சுத்தப்படுத்தப்பட முடியாது. IV. புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள், மனிதன் மூலமாய் தவிர ஆண்டவரால் நீக்கப்படமுடியாது. V. ஆகையினால், மனிதனானவன் தன்னிடமிருந்தேபோல, புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளைநீக்கவேண்டியது. VI. ஆண்டவர், பிறகு உள்ளான மனிதனிலிருக்கும் தீமையின் மோகங்களிலிருந்தும், புறம்பானதிலிருக்கும் தீமைகளிலேயிருந்தும் மனிதனை சுத்தப்படுத்துகிறார். VII. தெய்வபரிபாலனத்தின் இடைவிடாத தொழிற்பாடு, தீமைகளும் அவைகளின் மோகங்களும் நீக்கப்படுகிறவரையில் மாத்திரம், செய்யக்கூடிய சதாகால வாழ்வின் சுகங்களை அவனுக்குக் கொடுக்க, தான் சக்தியுள்ளவராயிருக்க, மனிதனை தன்னோடும், தானே மனிதனோடும் சேர்ப்பதன் பொருட்டாயிருக்கிறது.

103. I. **ஒவ்வொரு மனிதனுக்கும் சிந்தனையின் ஓர் புறம்பானதும் உள்ளானதும் உண்டு.** இங்கே சிந்தனையின் புறம்பானதும் உள்ளானதும் என்பதால் சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் உள்ளானதும் புறம்பானதும் தவிர வேறொன்றும் அருத்தம் கொள்ளப்படாத புறம்பானதும் உள்ளானதுமான மனிதன் என்பதால் கொள்ளும் அருத்தமேகொள்ளப்படவேண்டும்; ஏனென்றால், சித்தமும் புத்தியும் மனிதனை உண்டாக்குகிறது: இந்த இரண்டும் சிந்தனைகளில் வெளிப்படையாகிறபடியினால் சிந்தனையின் புறம்பானதும் உள்ளானதும் என்று நாம் சொல்லுகிறோம். இப்படியிருக்கையில், மனிதனுடைய சரீரமல்லாமல், அவனுடைய சூக்குமசரீர ஆன்மாதான் இச்சிக்கிறதும் தெரிந்துகொள்ளுகிறதும், ஆகையினால் நினைக்கிறதுமா யிருப்பதினால், இந்த புறம்பானதும் உள்ளானதும், மனிதனுடைய ஆன்மாவின் புறம்பானதும் உள்ளானதுமாயிருக்கின்றனவென்று பின் தொடருகிறது. பேசும்போதும் அல்லது வேலை செய்யும்போதும், சரீரம் செய்வது மனிதனுடைய ஆன்மாவின் உள்ளானது அல்லது புறம்பானதிலிருந்துவந்த ஓர் காரிய சித்தியாயிருக்கிறது. ஏனென்றால், சரீரமானது கீழ்ப்படிதலாய் மாத்திரம் இருக்கிறது.

104. ஒவ்வொரு மனிதனும் வயது ஏறும் காலத்தில் சிந்தனையின் ஒரு புறம்பானதும் உள்ளானதும், ஆகையினால் சித்தத்தினுடையவும் அல்லது புத்தியினுடையவும் ஒரு புறம்பானதும் உள்ளானதும் அல்லது புறம்பான மனிதனையும் உள்ளான மனிதனையும் போல், ஒன்றாயிருக்கிற சூக்குமசரீர ஆன்மாவின் புறம்பானதும் உள்ளானதும் உடைத்தாயிருக்கிறானென்பது, மற்றவனுடையவும், தான் கூட்டத்திலிருக்கும்போதும், தானே யிருக்கும்போதும் தன்னுடையவும் சொந்த வார்த்தைகளிலிருந்தும் செயல்களிலிருந்தும் ஏற்படுகிறபடி, சிந்தனைகளையும் உள்ளக் குறிப்புகளையும் கவனிக்கும் எவனுக்கும் வெளிப்படையா யிருக்கிறது. ஏனென்றால் ஒருவன் மற்றவனோடு புறம்பான சிந்தனையிலிருந்து சினேகிதமாய் பேசியும், உள்ளான சிந்தனையில் விரோதமாய் இருக்கக் கூடும். ஒருவன் உட்கருத்தில் அயலானைக்குறித்து விசாரப்படாமலும் கடவுளுக்கு பயப்படாமலு மிருக்கும் போது, புறம்பான சிந்தனையிலிருந்தும், அதே காலத்தில் அதன் ஆசையிலிருந்தும், அவன் அயலானிடத்தும் கடவுளிடத்தும் அன்பு பாராட்டுதலைப்பற்றிப் பேசக்கூடும். ஒருமனிதனானவன் புறம்பான சிந்தனையிலிருந்தும் அதனுடன் ஆசையிலிருந்தும், தேசாசாரசட்டங்களின் நியாயத்தைக் குறித்தும், சன்மார்க்க வாழ்வின் ஒழுக்கத்தைக் குறித்தும் கொள்கைகளைப் பற்றியும், பரமார்த்த வாழ்வைக் குறித்தும் பேசக்கூடும். அப்படியிருந்தாலும், தான் மாத்திரம் தனியா யிருக்கும் காலத்தில், உள்ளான சிந்தனையிலிருந்தும் அதன் ஆசையிலிருந்தும், தேசாசாரசட்டங்களுக்கும், சன்மார்க்க வாழ்வின் ஒழுக்கத்துக்கும், சித்தாந்தங்களுக்கும், ஞான வாழ்விற்கும் விரோதமாய் அவன் பேசலாம். தீமையின் மோகங்களிலிருந்தும் உலகத்தின் முன்பாக தாங்கள் அவைகளில் இல்லையென்று தோன்ற விரும்புகிறவர்கள் அப்படிச் செய்கிறார்கள். (2) அநேகர்கூட மற்றவர்கள் பேசுவதை அவர்கள் கேட்கும்போது பேச்சில் நினைப்பதுபோல, தங்களுக்குள்ளே உள்ளுக்குள்ளாய் நினைக்கிறார்களா? அவர்களை நம்பலாமா அல்லது வேண்டாமா? அவர்கள் எண்ணுவதுதான் என்ன? வென்று தங்களுக்குள்ளே நினைத்துக்கொள்ளுகிறார்கள்; முகஸ்துதிகாரர்களும் வேஷ

தாரிகளும் இரட்டிப்பான சிந்தனையை உடைத்தாயிருக்கிறார்களென்று தெரிந்திருக்கிறது. ஏனென்றால், அவர்களுக்கு தங்களையே தடைசெய்யவும், தங்கள் உள்ளான கருத்துகளை வெளிப்படுத்தாமல், ஜாக்கிரதையாயிருக்கவும் சக்தியுண்டு; அது தோன்றாதபடி கதவுகளை சாத்துகிறதுபோல், சிலர் அதிகம் அதிகமாய் உள்ளுக்குள்ளாய் மறைக்கக் கூடும். புறம்பான சிந்தனையும் உள்ளான சிந்தனையும் மனிதனுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது, உள்ளான சிந்தனையிலிருந்து புறம்பான சிந்தனையை அவன் பார்த்து அதைப்பற்றி யோசிக்கவும், அது தீமை அல்லது தீமையல்லாதது, என்று தீர்மானிக்கவும், அவன் சக்தியுள்ளவனாயிருக்கிறதிலிருந்து தெளிவாய் வெளிப்படுகிறது. மானிடமனது அவ்விதமானது என்பது சுவேச்சை என்றும் புத்தியென்றும் சொல்லப்படுகிற ஆண்டவரிடமிருந்து வருகிற இரண்டு மனோசக்திகளால் ஏற்படுகிறது. இவைகளிலிருந்து மனிதன் ஓர் புறம்பானதும், ஓர் உள்ளானதுமான சிந்தனையை உடைத்தாயிருந்தாலொழிய தன்னிடமே எந்த தீங்கையும் அறிந்துகொள்ளவும், பார்க்கவும், சீர்திருத்தப்படவும் சக்தியற்றவனாயிருந்திருப்பான்; அதுவுமல்லாமல், ஒரு மிருகத்தைப்போல் சப்தங்களை உச்சரிப்பது தவிர நிஜமாகவே பேச சக்தியற்றவனாயிருந்திருப்பான்.

105. சிந்தனையின் உள்ளானது உயிரின் அன்பிலிருந்தும், அதன் ஆசைகளிலிருந்தும், அதிலிருந்து உணர்ச்சிகளிலிருந்தும் உண்டாகிறது; சிந்தனையின் புறம்பானது உயிரின் அன்புக்கு உறுதிப்படுதலுக்கும் அதன் முடிவுக்கு வழி வகையாகவும் உதவுகிற ஞாபகத்திலிருக்கும் பொருள்களிலிருந்து உண்டாகிறது. இளம்பிராயத்திலிருந்து வாலிப வயதுவரையில் கூட, அதன் உள்ளானதை அப்பொழுது உண்டாக்குகிற தெரிந்து கொள்ள கொள்ளும் ஆசையிலிருந்து சிந்தனையின் புறம்பானதில் மனிதனிருக்கிறான்; இதுவுமன்றி, அவனுடைய பெற்றோர்களிடமிருந்து, அவனோடுபிறந்த உயிரின் அன்பிலிருந்து, அதிலிருந்துவரும் மோகத்தினுடையவும், விருப்பத்தினுடையவும் சிலது சம்பவிக்கிறது. ஆனால், பின்னிட்டு, அவன் உயிரின் அன்பு, அவன் வாழ்

கிற வழியை அனுசரித்து ஸ்திரப்படுத்தப்படுகிறது; அதன் ஆசைகளும், அவைகளிலிருந்து வரும் உணர்ச்சிகளும், அவன் சிந்தனையின் உள்ளானதை உண்டாக்குகிறது. உயிரின் அன்பி லிருந்து, அது உபயோகிக்கும் வழி வகைகளின் அன்பு உண்டா கிறது; அதன் இன்பங்களும் அதனால் ஞாபகத்திலிருந்து அழைக் கப்பட்ட அறிவுகளும் அவன் சிந்தனையின் புறம்பானதை உண் டாக்குகின்றன.

106. II. **மனிதனுடைய சிந்தனையின் புறம்பானது தன்னில் தானே, அதன் உள்ளானதைப்போல அதே குணத்தையுடையதாயிருக் கிறது.** மனிதனானவன் பாதாதிகேசம்வரையில் அவன் உயிரின் அன்புயிருக்கிறதுபோல இருக்கிறானென்று, மேலே காண்பிக்கப் பட்டது. ஆகையினால், இங்கே, மனிதனுடைய உயிரின் அன் பைப்பற்றி, சிலது முதலில் சொல்லப்படவேண்டும்; ஏனென் றால், இது செய்யப்படுகிறவரையில், உணர்ச்சிகளுடன் சேர்ந்து, மனிதனுடைய உள்ளானதை உண்டாக்குகிற ஆசைகளைக்குறித் தும், சிந்தனைகளுடன் சேர்ந்து, அவனுடைய புறம்பானதை உண்டாக்குகிற ஆசைகளின் இன்பங்களைப்பற்றியும், யாதொன் றும் சொல்லப்படமுடியாது. அன்புகள் பலவிதமாயிருக்கின்றன; ஆனால், அவைகளில் இரண்டு, சுவர்க்கத்து அன்பும், நரகத்து அன்பும், பிரபுக்கள்போலவும் அரசர்கள்போலவும் இருக்கின் றன. சுவர்க்கத்து அன்பு என்பது ஆண்டவரிடத்தும், அயலா னிடத்தும் பாராட்டும் அன்பாயிருக்கிறது; நரகத்து சம்பந்தமான அன்பு, தன்னையும் உலகத்தையும் நேசித்தலாயிருக்கிறது. இந்த அன்புகளும் அந்த அன்புகளும், நரகமும் சுவர்க்கமும் இருப் பதுபோல ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருக்கின்றன; ஏனென் றால், தன்னையும் உலகத்தையும் நேசிப்பதிலிருக்கப்பட்டவன், தன்னைத் தவிர, வேறு யாருக்கும் நன்மையை செய்ய விரும்புகிற தில்லை; ஆனால், ஆண்டவரையும் அயலானையும் நேசிப்பதிலிருப் பவன், எல்லாருக்கும் நன்மை உண்டாக இச்சிக்கிறான். இந்த இரண்டு அன்புகளும் அதிக பேதத்துடன் மனிதனுடைய உயி ரின் அன்புகளாயிருக்கின்றன. சுவர்க்கத்து அன்பானது, ஆண்ட

வர் வழிகாட்டுகிறவர்களின் உயிரின் அன்பாயிருக்கிறது; நரகத்து (2) அன்பானது பிசாசுவழி காட்டுகிறவர்களின் உயிரின் அன்பாயிருக்கிறது. ஆனால், எவனுடைய உயிரின் அன்பும், ஆசைகளென்று சொல்லப்படுகிற உற்பன்னமானவைகள் இல்லாமல் இருக்கமுடியாது. நரகத்து சம்பந்தமான அன்பின் உற்பவங்கள் தீமையினுடையவும் பொய்யினுடையவும் ஆசைகளாய், கிரமமாய், மோகங்களாயிருக்கின்றன; சுவர்க்க சம்பந்தமான அன்பின் உற்பவங்கள் நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஆசைகளாய், கிரமமாய் அன்பு பாராட்டும் ஆசைகளாயிருக்கின்றன, கிரமமாய் மோகங்களாயிருக்கிற நரக சம்பந்தமான ஆசைகள், தீங்குகளிருக்கிறதுபோல அநேகமாயிருக்கின்றன; கிரமமாய் அன்பு பாராட்டும் ஆசைகளாயிருக்கிற சுவர்க்க சம்பந்தமான ஆசைகள், நன்மைகளிலிருப்பது அநேகமாயிருக்கின்றன. அன்பானது அதன் ஆசைகளில் ஓர் பிரபு தன்னுடைய சமஸ்தானத்திலிருப்பதுபோலவும், ஓர் அரசன் தான் இராஜ்ஜியத்திலிருப்பதுபோலவும் வாசம்செய்கிறது; அவைகளின் அதிகாரமும் ஆதிபத்தியமும் மனதுக்கு சம்பந்தப்பட்டவைகள் பேரிலும், அதாவது மனிதனுடைய சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் பொருள்கள் பேரிலும், அதிலிருந்து சரீரத்தின் பொருள்கள் பேரிலும் செல்லுகின்றன. மனிதனுடைய உயிரின் அன்பு, முழு மனிதனை அதன் ஆசைகளாலும், அதிலிருந்து உணர்ச்சிகளாலும், அதன் இன்பங்களாலும், அதிலிருந்து சிந்தனைகளாலும் அரசாளுகிறது; அவன் மனதின் உள்ளானது ஆசைகளாலும், அதிலிருந்து உணர்ச்சிகளாலும், புறம்பானது ஆசைகளின் இன்பங்களாலும், அதிலிருந்த சிந்தனைகளாலும் ஆளப்படுகின்றன.

107. இந்த அரசியலின் உருவம் கொஞ்சமட்டும் உவமானங்களால் அறிந்துகொள்ளலாம். நன்மை உண்மைகளின் ஆசைகளோடு சுவர்க்க அன்பும், அதிலிருந்து உணர்ச்சிகளும், அதனுடன் இந்த ஆசைகளிலிருந்துவரும் இன்பங்களும், அதிலிருந்துவரும் சிந்தனைகளும், தன் கிளைகளுக்கும், இலைகளுக்கும், அதன் கனிகளுக்கும் பேர்பெற்ற ஒரு மரத்துக்கு ஒப்பிடலாம். உயிரின்

அன்பு மரமாயிருக்கிறது; இலைகளோடு கிளைகள், நன்மை உண்மைகளின் ஆசைகளாயும், அவைகளின் உணர்ச்சிகளாயுமிருக்கின்றன; கனிகள், அவைகளின் சிந்தனைகளோடு ஆசைகளின் இன்பங்களாயிருக்கின்றன. ஆனால் நரக சம்பந்தமான அன்பு மோகங்களாயிருக்கிற தீமையினிடத்தும் பொய்யினிடத்தும் கொள்ளும் அதன் ஆசைகளோடும், அதனுடன் இந்த மோகங்களின் இன்பங்களோடும், அதிலிருந்துவரும் சிந்தனைகளோடும் ஒரு சிலந்திப்பூச்சிக்கும், அதை சுற்றியிருக்கும் வலைக்கும் ஒப்பிடப்படலாம். அன்பே சிலந்திப்பூச்சியாயிருக்கிறது; தீமையினுடையவும் பொய்யினுடையவும் மோகங்களும், அதன் உள்ளான தந்தரங்களும், சிலந்திபூச்சியின் ஆசனத்துக்கு அதிக சமீபத்திலுள்ள வலைபோன்ற நூல்களாயிருக்கின்றன; இந்த மோகங்களின் இன்பங்களும், அவைகளின் கிருத்திரமமான உபாயங்களும், ஈக்கள் பிடிக்கப்பட்டு, சிக்கில் அகப்பட்டு, சாப்பிடப்படுகிற இடங்களில் இருக்கும் அதிக தூரத்திலுள்ள நூல்களாயிருக்கின்றன.

108. இந்த உவமானங்களால் சித்தம் புத்திகளின் எல்லா பொருள்களுடையவும், உயிரின் அன்பினொடு மனிதன் மனதினுடையவும், ஐக்கியத்தை தெரிந்து கொள்ளப்படலாமென்றாலும், பகுத்தறிவுடன் அறிந்துகொள்ள முடியாது. அந்த ஐக்கியம் இந்த வழியில் பகுத்தறிவுடன் அறிந்து கொள்ளப்படலாம்: எவ்விடத்திலும் சேர்ந்து ஒன்றாகிற மூன்று பொருள்களிருக்கின்றன; இவைகளுக்கு முடிவென்றும், காரணமென்றும், காரியமென்றும் பெயர்; இங்கே உயிரின் அன்பு முடிவாயும், உணர்ச்சிகளோடு ஆசைகள் காரணமாயும், சிந்தனைகளோடு ஆசைகளின் இன்பங்கள் காரியமாயு மிருக்கின்றன; ஏனென்றால், முடிவானது காரணத்தின் மூலமாய், காரியத்தில் வருகிறமாதிரி, அன்பானது அதன் ஆசைகளின் மூலமாய் அதன் இன்பங்களுக்கும், அதன் உணர்ச்சிகள் மூலமாய் அதன் சிந்தனைகளுக்கும் வருகிறது. இன்பங்கள் சித்தத்தைச்சேர்ந்ததாயும், சிந்தனைகள் அதிலிருந்து புத்தியைச் சேர்ந்ததாயும் இருக்கும்போதும், இவ்விதமாக அங்கே முழு சம்மதியு மிருக்கும்போது, காரியங்கள்தாமே

மனதின் சந்தோஷங்களிலும், அவைகளின் சிந்தனைகளிலும் இருக்கின்றன. அப்பொழுது அவைகள் அவனுடைய ஆன்மாவின் காரியங்களா யிருக்கின்றன; அவைகள் சரீரத்தின் செயலுக்குட்படாவிட்டாலும் சம்மதமிருக்கும் போது, செயலில் இருப்பதுபோல் இருக்கின்றன; அவைகள் அப்பொழுதுகூட சரீரத்தில் சேர்ந்திருக்கின்றன; அங்கே அவனுடைய உயிரின் அன்புடன் வாசம் செய்கின்றன; யாதொன்றும் தடுக்காவிட்டால், சம்பவிக்கிற சலனத்துக்காக அவைகள் பெருமூச்சு விடுகின்றன. தங்கள் ஆன்மாவில் தீமைகளை ஒத்துக்கொள்ளுகிறவர்களிடத்தில், தீமையின் மோகங்களும், தீமைகளுமே இவ்விதமாயிருக்கின்றன. இப்படி யிருக்கையில், முடிவானது காரணத்துடனும், காரணத்தின் மூலமாய் காரியத்துடனும் தானே சேருகிறதுபோல உயிரின் அன்பு சிந்தனையின் உள்ளானதுடனும், இதன் மூலமாய் அதன் புறம்பானதுடனும் தானே சேருகின்றன. ஆகையினால், மனிதனுடைய சிந்தனையின் புறம்பானது, தன்னில்தனே அதன் உள்ளானது இருப்பதுபோல இருக்கிறதென்று வெளிப்படையாயிருக்கிறது; ஏனென்றால், முடிவானது தனக்குச் சேர்ந்ததை எல்லாம் காரணத்துக்கும், காரணத்தின் மூலமாய் காரியத்துக்கும் கொடுக்கிறது. ஏனென்றால், காரணத்தில் இருப்பதைத் தவிர காரியத்திலும், காரணத்தின் மூலமாய் முடிவிலும், முக்கியமானது ஒன்றுமில்லை. முடிவானது இவ்விதமாக காரணத்திலும் காரியத்திலும் பிரவேசிக்கிற மிகவும் பிரதானமானதா யிருப்பதினால், காரணமும் காரியமும் நடுவானதும் இறுதியானதுமான முடிவுகளென்று சொல்லப்படுகின்றன.

109. மனிதனுடைய சிந்தனையின் புறம்பானது, உள்ளானது இருப்பதுபோல தன்னில் தானே யில்லையென்று சில சமயங்களில் தோன்றுகிறது; ஆனால், அதைச் சுற்றியிருக்கும் உள்ளானவைகளோடு உயிரின் அன்பு, மத்தியமானதின்பேரில் கொள்ளும் அன்பு என்று சொல்லப்படுகிற ஒரு ஈடானதை தனக்குக் கீழே வைத்து தன்னுடைய மோகங்களில் யாதொன்றும், தானே வெளியே காண்பிக்காதபடி கவனம் செய்து காவல்செய்ய அதை ஏற்

படுத்துகிறதினால், இது சம்பவிக்கிறது; ஆகையால், இந்த பதிலானது, உயிரின் அன்பாயிருக்கிற அதன் தலைவன் கபடத்திலிருந்து, இராச்சியத்தின் தேசாசாரங்களையும், விவேகத்தின் சன்மார்க்கமானவைகளையும், திருச்சபையின் பரமார்த்த விஷயங்களையும் அனுசரித்துப் பேசி செயல்படுகிறது. பேச்சிலும், செய்கையிலும், அவர்கள் இருப்பதாகத் தோன்றுகிறதுபோல அவ்விதமாய் இல்லையென்று எவனும் தெரிந்துகொள்ளாதபடி, சிலர் இதை அவ்வளவு கபடமாயும் சூட்சும புத்தியுடனும் செய்கிறார்கள். கடைசியில் மறைக்கும் வழக்கத்தினால், அவர்களுக்கே அது வேறுவிதமாய்த் தெரியாமல் போய்விடுகிறது. எல்லா வேஷதாரிகளும் இவ்விதமாய் இருக்கிறார்கள்; இருதயத்தில் அயலானைப்பற்றிக் கவனிக்காமலும், கடவுளுக்கு பயமில்லாமலும் இருந்தபோதிலும், அயலானை நேசித்தலைப்பற்றியும், கடவுளிடத்து அன்பு பாராட்டுதலைப் பற்றியும் பிரசங்கம் செய்கிற குருக்களும் இவ்விதமாய் இருக்கிறார்கள். நியாயத்துக்காக உற்சாகமிருப்பதுபோல் நடித்து விவேகத்திலிருந்து தீர்ப்பை சொல்லியும், வெகுமதிக்கும் சினேகிதத்துக்கும் தக்கபடி தீர்ப்புசெய்கிற நியாயாதிபதிகள் அப்படிப்பட்டவர்கள்; லாபத்தின் பொருட்டு உண்மையாய் செயல்படும்போது இருதயத்தில் உண்மையல்லாமலும் மோசக்கருத்துள்ளவர்களாயுமிருக்கிற வர்த்தகர்களும் அப்பேர்ப்பட்டவர்கள்; எல்லா மனிதருக்கும் உள்ள பகுத்தறிவுடைமையிலிருந்து விவாகத்தின் கற்புடைமையைப்பற்றி பேசுகிற விபசாரிகளும் அப்பேர்ப்பட்டவர்
(2) கள்; இம்மாதிரியே மற்றவர்களுக்கும். ஆனால் இதே ஜனங்கள் தங்கள் உயிரின் பதிலான மத்தியமானதைப்பற்றியும், தாங்கள் அதற்கு உடுத்திய ராஜசம்பந்தமான உடுப்புகளையும், நேர்த்தியான நார்களையும் பற்றியும், கொள்ளும் அன்பை நீக்கி அதின் பேரில் அதன் சொந்த வீட்டு உடுப்பைப் போட்டால், அவர்கள் அப்பொழுது நினைக்கிறார்கள். அதைப் போன்ற உயிரின் அன்பில் இருக்கும் தங்கள் மிகவும் பிரியமுள்ள சினேகிதர்களோடு, தங்கள் சிந்தனையிலிருந்து அதற்கு நேர் எதிரானதை அவர்கள் சில சமயங்களில் பேசுகிறார்கள். அவ்வளவு நியாயமாயும், உண்மையாயும், தேவபக்தியுடனும் மத்தியத்திலிருப்பதின்பேரில் கொள்

ளும் அன்பினால் அவர்கள் பேசியபோது, அவர்களின் சிந்தனை யின் உள்ளானதின் குணம் அதன் புறம்பானதில் இல்லையென்று நம்பப்படலாம்; அப்படியிருந்தாலும், அது இருந்தது; அவர் களில் கபடமிருக்கிறது; தன்னையும் உலகத்தையும் நேசித்தல் அவர்களிலிருந்து, கௌரவம் அல்லது செல்வத்தின் பொருட்டு, இறுதியான தோற்றம் வரையில் அதின் கபடம் ஒரு கீர்த்தியை சம்பாதிக்க வேண்டுமென்பதாயிருக்கிறது. உள்ளானதின் இந்த குணம், அவர்கள் சிந்தனையின் புறம்பானதில், அவர்கள் அவ்வித மாய்ப் பேசி, செயல்படும்போது இருக்கிறது.

110. ஆயினும், சுவர்க்க சம்பந்தமான அன்பில் இருக்கப் பட்டவர்களுடன், சிந்தனையின் உள்ளானதும் புறம்பானதும், அல் லது உள்ளானமனிதனும், புறம்பானமனிதனும், அவர்கள் பேசும் போது ஒன்றுகப்பேசுகிறார்கள்; அவர்களுக்கு எந்த வித்தியாச மும் தெரியாது. அவர்கள் உயிரின் அன்பு, நன்மையின் ஆசையுட னும், உண்மையின் உணர்ச்சிகளுடனும், அவர்கள் நினைத்து, அதிலிருந்து பேசி, செய்யும் எதிலும் ஒரு ஆன்மாவைப்போ லிருக்கிறது. அவர்கள் குருக்களாக இருந்தால், அயலானிடத்துக் காட்டும் அன்பிலிருந்தும், ஆண்டவரிடத்து பாராட்டும் அன்பி லிருந்தும் அவர்கள் பிரசங்கம் செய்கிறார்கள்; நியாயாதிபதிக ளாயிருந்தால், நியாயத்திலேயேயிருந்து நியாயம் செலுத்துகிறார் கள்; வர்த்தகர்களாயிருந்தால், உண்மையிலிருந்தே செயல்படுகி றார்கள்; விவாகமானவர்களாயிருந்தால், கற்புடைமையிலிருந்தே மனைவியை நேசிக்கிறார்கள்; இம்மாதிரியே மற்றதற்கும். அவர்கள் உயிரின் அன்புகூட, அதற்குக்கற்பித்து புத்தியிலிருந்து செயல் பட நடத்துகிறதும், கொள்கையின் உண்மைகளுக்காக, அதே காலத்தில் உயிரின் நன்மைகளுக்காக உற்சாகம் என்கிற உடுப்பு களை உடுத்துகிறதுமான, அதன்பிரதியாளாக மத்தியத்திலிருக்கும் பொருளின்பேரில் கொள்ளும் அன்பை உடைத்தாயிருக்கிறது.

111. III. புறம்பானமனிதனிலிருக்கும் தீமைகள் நீக்கப்படா தவரையில், அவைகள் தடுக்கிறபடியினால், உள்ளானது தீமையின்

**மோகங்களிலிருந்து சுத்தப்படுத்தமுடியாது.** மனிதனுடைய சிந்தனையின் புறம்பானது, அவனுடைய சிந்தனையின் உள்ளானதைப் போல, தன்னிடத்திலேயே அதே குணத்தை உடையதாயிருக்கிறது என்றும், ஒன்று மற்றொன்றிற்குள்ளிருக்கிறதுபோல மட்டும் அல்லாமல், ஒன்று மற்றொன்றிலிருந்து வருகிறதுபோல கூட இருக்கும் பொருள்கள்போல் அவைகள் ஒட்டிக்கொள்ளுகின்றனவென்றும், ஆகையினால் மற்றதும் அதேகாலத்தில் நீக்கப்பட்டால் ஒழிய ஒன்று நீக்கப்படமுடியாது என்றும் மேலே சொல்லியதிலிருந்து, இது ஏற்படுகிறது. ஒரு உள்ளானதிலிருந்து வருகிற ஒவ்வொரு புறம்பானதுடனும், முந்தியதிலிருந்துவரும் ஒவ்வொரு பிந்தியதுடனும், ஒரு காரணத்திலிருந்துவரும் ஒவ்வொரு (2) காரியத்துடனும் அப்படியேயிருக்கிறது. கெட்டவர்கள் விஷயத்தில் மோகங்கள் தந்திரங்களுடன் சேர்ந்து சிந்தனையின் உள்ளானதையும், மோகங்களின் இன்பங்கள் தந்திரங்களுடன் சேர்ந்து, அவர்களோடு சிந்தனையின் புறம்பானதையும் செய்கிறபடியினாலும், கடைசி சொன்னவை மற்றவைகளோடு ஒன்றாகச் சேர்க்கப்படுகிறபடியினாலும், புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள் நீக்கப்படாதவரையில், உள்ளானது மோகங்களிலிருந்து சுத்தப்படுத்தப்படமுடியாதென்று ஏற்படுகிறது. மனிதனுடைய உள்ளான சித்தம், மோகங்களிலிருப்பதாயும், உள்ளான புத்தி தந்திரங்களிலிருப்பதாயும், புறம்பான சித்தம் மோகங்களின் இன்பங்களிலிருப்பதாயும், புறம்பான புத்தி தந்திரங்களிலிருந்துவரும் உபாயங்களிலிருப்பதாயும் தெரியப்படவேண்டும். மோகங்களும் அவைகளின் இன்பங்களும் ஒன்றாகிறதென்றும், தந்திரங்களும் உபாயங்களும் ஒன்றாகிறதென்றும், எந்த மனிதனும் அறிந்துகொள்ளலாம்; மேலும், இந்த நான்கும் ஓர் வரிசையிலிருக்கிறதாயும், ஒன்று சேர்ந்து ஒரு பொட்டணம்போலாகிறதென்றும் கூட அறிந்துகொள்ளலாம்; மோகங்களால் அமைந்த உள்ளானது, தீங்குகளால் அமைந்த புறம்பானது நீக்கப்பட்டால் ஒழிய, எறிந்து விடப்படமுடியாது என்று அதிலிருந்து மறுபடியும் வெளிப்படையாயிருக்கிறது. ஆசைகள் தங்கள் இன்பங்களின் மூலமாய் தீங்குகளை விளைவிக்கின்றன; ஆனால் சித்தத்தினுடைய

வும், புத்தியினுடையவும் சம்மதியிலிருந்துவருகிற தீமைகளுக்கு இடங்கொடுக்கலாமென்று நம்பினால், அப்பொழுது, இன்பங்களும் தீமைகளும் ஒன்றாகின்றன. அந்த சம்மதி என்பது செய்கை என்று தெரிந்திருக்கிறது; ஆண்டவரும் இதைத்தான் சொல்லுகிறார்: "ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரம் செய்தாயிற்று" (மத்தே. V. 28). மற்ற தீமைகளுடனும் அம்மாதிரியே யிருக்கிறது.

112. மனிதனுவன் தீமையின் மோகங்களிலிருந்து சுத்தப்படுத்தப்படவேண்டுமானால், தீமைகள் புறம்பான மனிதனிலிருந்து எல்லாவிதத்திலும் நீக்கப்படவேண்டுமென்று, இவைகளிலிருந்து இப்பொழுது விசதமாகிறது; ஏனென்றால், இது செய்யப்படுகிற வரையில், மோகங்களுக்கு வெளியேவர வழியில்லை; வெளியே போகும் வழியில்லாவிட்டால், மோகங்கள் உள்ளே நின்று, தங்களிடமிருந்தே இன்பங்களை வெளியேவிட்டு, அவ்விதமாய் மனிதனை சம்மதிக்கும்படி பலவந்தம் செய்து, இவ்விதமாக செய்கையில் கொண்டுவந்து விடுகிறது. ஆசைகள் சிந்தனையின் புறம்பானதின் மூலமாய் சரீரத்தில் பிரவேசிக்கின்றன; ஆகையினால், சிந்தனையின் புறம்பானதில், சம்மதம் இருக்கும் காலத்தில், தெரிந்துகொண்ட இன்பம் சரீரத்திலிருப்பதினால் அவைகள் சரீரத்தில் உடனே இருக்கின்றன. மனது இருப்பதுபோல் சரீரமும், இவ்விதமாக முழுமனிதனும் இருக்கிறதென்பது, **பதி பசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 362-370) பார்க்கப்படலாம். (2) இது உவமானங்களாலும், உதாரணங்களாலும் கூட தெளிவிக்கப்படலாம். உவமானங்களால்:—ஆசைகளை அதன் சுகானுபோகங்களோடு, நெருப்புக்கு ஒப்பிடலாம்; எவ்வளவு அதிகமாய் அது எழுப்பப்படுகிறதோ, அவ்வளவு அதிகமாய் எரிகிறது; அது பரவ எவ்வளவு தன்னிஷ்டமாய் விடப்படுகிறதோ, அவ்வளவு விசாலமாய், ஒரு நகரத்தில் வீடுகளையும், காட்டில் மரங்களையும் அழிக்கிற வரையில், பரவுகிறது. தீமையினிடத்து கொள்ளும் ஆசைகள் வேதத்தில்கூட நெருப்புக்கும், அதிலிருந்து தீமைகளின் பெரும் நெருப்புக்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றன.

தீமையின் ஆசைகள், சூக்கும உலகத்தில் அவைகளின் இன்பங்களோடு சேர்த்துகூட நெருப்புகளைப்போலத் தோன்றுகின்றன; நரகத்து நெருப்பு என்பது வேறொன்றுமில்லை. அவைகளை மண் மேடுகளும், அல்லது அணைக்கட்டுகளும், உடைந்து போனபோது, நீர் பிரவாகங்களுக்கும் ஜலப்பிரளயங்களுக்கும் கூட ஒப்பிடலாம். அவைகளை தன்னிஷ்டப்படி விட்டுவிட்டாலும், அல்லது அவைகள் சொஸ்தப்படுத்தப்படாவிட்டாலும், சரீரத்துக்கு மரணத்தைக் கொண்டுவருகிற மாமிசத்தை அழுகச்செய்யும் புண்களுக்கும் ரணங்களுக்கும்கூட அவைகளை ஒப்பிட
(3) லாம். உதாரணங்களால்:—புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள் நீக்கப்படாவிட்டால், ஆசைகளும் அதின் இன்பங்களும் வளர்ந்து பெருகுகின்றனவென்று தெளிவாயிருக்கிறது. ஒரு திருடன் எவ்வளவு அதிகமாய் திருடுகிறானோ, அவ்வளவு அதிகமாய், கடைசியில் நிற்கக்கூடாதபடி, திருடுவதற்கு ஆசைப்படுகிறான்; அப்படியேதான் மோசக்காரன் அவ்வளவு அதிகமாய் மோசம் செய்கிறான். அருவருப்புக்கும், பழி வாங்குதலுக்கும், விசேஷ போகத்துக்கும், மட்டின்மைக்கும், விபசாரத்துக்கும், தெய்வ தூஷணைக்கும் அதே மாதிரிதானிருக்கிறது. தன்னிடம் கொள்ளும் அன்பிலிருந்து அரசாளும் ஆசை, எவ்வளவு தடுக்கப்படாமலிருக்கிறதோ, அவ்வளவு அதிகமாய் வளருகிறதென்று தெரிந்திருக்கிறது; உலகத்தினிடத்து கொள்ளும் ஆசையிலிருந்து வரும் எல்லாவற்றையும் தான் அடையவேண்டுமென்கிற ஆசைக்கும் விஷயம் அப்படியே; அவைகளுக்கு எல்லை அல்லது முடிவு இல்லைபோல் தோன்றுகிறது. புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள் நீக்கப்படாத வரையில், அவைகளின் ஆசைகள் விருத்தியடைகின்றன வென்றும், மறுபடியும் தீமைகள் தடுக்கப்படாத வரையில் ஆசைகள் அதிகப்படுகின்றனவென்றும், இதிலிருந்து வெளிப்படையா யிருக்கிறது.

113. மனிதனுக்கு தன்னுடைய தீமையின் ஆசைகளைக் குறித்து உணர்ச்சி யிருக்கமுடியாது; நிஜமாகவே, அவன் அவைகளின் இன்பங்களை அறிந்துகொள்ளுகிறான்; அப்படி யிருந்தா

னும், அவன் அவைகளைப்பற்றி நினைக்கிறதில்லை; ஏனென்றால், அந்த இன்பங்கள் சிந்தனைகளை வசியம் செய்துகொண்டு, ஆலோசனையைத் துரத்துகின்றன. ஆகையினால், ஒருவனுக்கு அவைகள் தீங்குகள் என்று எதோ ஒரு இதர மூலத்திலிருந்து தெரியாவிட்டால், அவன் அவைகளை நன்மைகளென்று சொல்லுவான்; அவன் சிந்தனையின் புத்தியை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து, அவன் அதை செய்வான்; இதை அவன் செய்யும்போது, அவைகளைத் தனதாகவே செய்துக் கொள்ளுகிறான். அவைகள் இடம் கொடுக்கத் தக்கவைகளென்று அவைகளை ஸ்திரப்படுத்துகிற அளவு, அவன் உயிரின் அன்பாயிருக்கிற அரசுபுரியும் அன்பின் ராஜ பரிவாரத்தை அவன் அதிகப்படுத்துகிறான். ஆசைகள் அதன் ராஜசபையாகின்றன; ஏனென்றால், அவைகள் அவைகளின் மூலமாய் அதன் ராஜ்ஜியமாகிற புறம்பானவைகளை ஆளுகிற வேலைக்காரர்களும் ஏவற்காரர்களும் போலிருக்கின்றன. ஆனால், அரசன் இருப்பது போலவே, வேலைக்காரர்களும் ஏவற்காரர்களுமிருக்கிறார்கள், இராஜ்ஜியமும் அம்மாதிரியே யிருக்கிறது. அரசன் பிசாசா யிருந்தால், அப்பொழுது அவனுடைய மந்திரிகளும், ஏவற்காரர்களும் வெறிகளா யிருக்கிறார்கள்; அவனுடைய ராஜ்ஜியத்தின் பிரஜைகள், பைத்தியக்காரர்களா யிருந்த போதிலும், புத்திசாலி என்று அவர்கள் சொல்லுகிற மந்திரிகள், போலி நியாயங்களிலிருந்தும், கண் மாயங்களிலிருந்தும், தர்க்கித்தலினால் உண்மைகளைப் போல தோன்றச் செய்கிறதும், அவைகளை உண்மைகள் போல ஒத்துக்கொள்ளப்படக்கூட செய்கிறதுமான எல்லாவித பொய்களா யிருக்கின்றார்கள். மனிதனுடைய இவ்வித நிலைமை புறம்பான மனிதனிலிருக்கும் தீங்குகளை நீக்கினால் ஒழிய மாற்றப்படக் கூடுமா? அம்மாதிரியே கூட, தீமைகளோடு ஒட்டிக்கொண்டிருக்கிற ஆசைகளும் நீக்கப்படுகின்றன. அப்படி இல்லாவிட்டால், ஆசைகள் விட்டுப்போக எந்த வழியும் திறந்திருக்க வில்லை; ஏனென்றால், முற்றிகை போடப்பட்ட நகரம் போலும், மூடப்பட்ட புண் போலும் அவைகள் மூடப்பட்டிருக்கின்றன.

114. **IV. புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகள் மனிதனைக் கொண்டு தவிர, ஆண்டவரால் நீக்கப்பட முடியாது.** மனிதனானவன், பரிசுத்த தேவ பிரசாதத்தை எடுக்க அணுகும் முன், தன்னையே பரிசோதிக்க வேண்டுமென்கிறதும், தன்னுடைய பாவங்களை அறிந்து, அவைகளை ஒத்துக்கொள்ள வேண்டுமென்கிறதும், பாவங்கள் பிசாசுகளிடமிருந்து வருவதால் அவைகளை ஒழித்து விட்டு தள்ளுவதினால் மனம் திரும்புதலை செய்யவேண்டுமென்கிறதும், அப்படிச் செய்யாவிட்டால் அவனுடைய பாவங்கள் மன்னிக்கப்படாமல் அவன் நரகத்தை அடையச் செய்யப்படுவானென்கிறதுமான, இந்த கொள்கை எல்லா கிருஸ்துவ திருச்சபைகளிலெல்லாம் ஏற்றுக்கொள்ளப் படுகிறது. பக்திமார்க்கத்தில் மாத்திரம் இருந்தபோதிலும், ஆங்கிலேயர்கள் தேவபிரசாத எச்சரிப்பில், பகிரங்கமாய்ப் பரிசோதனையைப் பற்றியும், ஒத்துக்கொள்ளுதலைப் பற்றியும், பாவங்களைச் செய்ததாக ஒத்துக்கொள்ளுதலைப் பற்றியும், மனம் திரும்புதலைப்பற்றியும், வாழ்க்கையைப் புதிதாக்குதலைப்பற்றியும் கற்பிக்கிறார்கள்; "அப்படிச் செய்யாவிட்டால், பிசாசு **யூதாஸ்** என்பவனுக்குள் பிரவேசித்தது போல, அது அவர்களுக்குள் பிரவேசித்து, எல்லா அநியாயங்களாலும் அவர்களை நிரப்பி, சரீரத்தையும் ஆன்மாவையும் அழிக்கும்" என்கிற இந்த வார்த்தைகளால் இவைகளைச் செய்யாதவர் பயமுறுத்தப் படுகிறார்கள். பக்தி மார்க்கத்தில் மாத்திரம் இருக்கும் ஜெர்மன் தேசத்தாரும், ஸ்வீடன் தேசத்தாரும், டேனியர்களும், தேவ பிரசாதத்தில் சொல்லும் பிரார்த்தனையில் அதையே கற்பிக்கிறார்கள்; அப்படிச் செய்யாவிட்டால், அவர்கள் பரிசுத்தமானதையும் அசுத்தமானதையும் கலந்ததற்காக நரகதண்டனைக்கும், சதாகால தண்டனைக்கும் உள்ளாவார்களென்றுகூட அவர்கள் பயமுறுத்துகிறார்கள். இராப் போஜனத்துக்கு வர இருக்கப்பட்டவர்கள் முன்பாக உரத்த சத்தத்துடன் குருவினால் இது வாசிக்கப்படுகிறது; அது அப்படி யிருக்கிறதென்று முழுமையும் ஒத்துக் (2) கொள்ளப்பட்டு அவர்களால் உற்றுக் கேட்கப்படுகிறது. அப்படி யிருந்தும் இதே ஜனங்கள் அதே தினம் பக்தியைப்பற்றி மாத்திரமும், ஆண்டவர் அவர்களுக்காக அதை நிறைவேற்றிய

படியினால், கூட்டளே அவர்களே தண்டனையிடுகிறதில்லை யென்றும், தங்களிடமிருந்தே சுகிர்தமானது தவிர அவர்கள் எந்த நன்மையும் செய்ய முடியாதென்றும், இவ்விதமாக பக்திமாத்திரமே தவிர கிரியைகளுக்கு இரக்ஷிப்பது யாதொன்றுமில்லையென்றும் பிரசிங்கப் பதைக்கேட்டபோது, முந்தி ஒத்துக்கொண்டதை முழுமையும் மறந்தும், பக்தியைப்பற்றி மாத்திரம் பிரசிங்கித்ததிலிருந்து அவர்கள் நினைக்கிறவரையில் அதைத்தள்ளியும், வீட்டிற்கு திரும்பப் போகிறார்கள். ஒன்றுக்கொன்று எதிரிடையான இரண்டு பொருள்கள் இரண்டும் நிஜமாய் இருக்கமுடியாதபடியினால், பரிசோதனையில்லாமலும், நினைவு கூறுதலில்லாமலும், ஒத்துக்கொள்ளுதலில்லாமலும், பாவங்களை நீக்காமலும், இவ்விதமாக மனம் திரும்புதல் இல்லாமலும், அவைகள் மன்னிக்கப்படாமல், இவ்விதமாக மோட்சமில்லாமல் சதாகால நரகதண்டனை உண்டென்பது நிஜமா அல்லது ஆண்டவர் சிலுவையின் உபாதியினால், பக்திமார்க்கத்தில் இருப்பவர்களுக்கு அனுகூலமாக மனிதனுடைய எல்லா பாவங்களுக்கும் முழுபரிகாரம் செய்துவிட்டபடியினால், இவ்வித பொருள்கள் மோக்ஷத்துக்கு அனுகூலமாக ஒன்றும் செய்கிறதில்லை என்பதும், இது அப்படியிருக்கிறதென்கிற நம்பிக்கையோடும், ஆண்டவருடை புண்ணியத்தின் சாட்டுகையில் நம்பிக்கையோடும், பக்தியை மாத்திரம் உடையவர்கள், பாவமில்லாமல் இருந்து, அலம்பினபிறகு முகம் பிரகாசிக்கிறவனைப்போல கடவுள் முன்பாக தோன்றுகிறார்கள் என்பது நிஜமா? மனிதன் தானே பரி
(3) சோதித்துக்கொள்ளவேணுமென்பதும், தன்னுடைய பாவங்களைப்பார்த்து ஒத்துக்கொண்டு, பிறகு அவைகளே விட்டுவிடவேண்டுமென்பதும், அப்படியில்லாவிட்டால் நரக தண்டனைதவிர மோக்ஷமில்லையென்பதும், கிருஸ்துவ உலகத்தில் எல்லா திருச்சபைகளின் பொதுவான சமயமென்று, இதிலிருந்து வெளிப்படையாகிறது. இதுகூட தெய்வ உண்மையே என்பது, மனிதன் மனது திரும்ப கட்டளையிடப்பட்ட வேதத்தின் வாக்கியங்களிலிருந்து இது வெளிப்படையாகிறது. பின்வருவதிலிருந்து போல:—யோவான் சொன்னது, மனம் திரும்புதலுக்கு ஏற்ற கனிகளே கொடுங்கள்; இப்பொழுதே கோடாரியானது மரங்களின்

வேர் அருகே வைத்திருக்கிறது; ஆகையால், நல்லகனிகொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலேபோடப்படும். (லூக்கா. III. 8, 9.); "நீங்கள் மனம் திரும்பாமற்போனல், எல்லாரும் அப்படியே கெட்டுப்போவீர்கள் என்று இயேசு சொன்னர். (லூக்கா XIII. 3-5.); மனம் திரும்பி, சுவிசேஷத்தை விசுவாசியுங்கள் என்று சொல்லி, இயேசு தேவனுடைய ராஜ்யத்தைக் குறித்து பிரசிங்கித்தார் (மார். I. 14, 15); இயேசு தன்னுடைய சிஷ்யர்களை அனுப்பினர், அவர்கள் புறப்பட்டுப்போய் மனிதர்கள் மனம் திரும்பவேண்டுமென்று பிரசிங்கித்தார்கள் (மார். VI. 12); அபோஸ்தலர்களுக்கு, மனம் திரும்புதலும் பாவ மன்னிப்பும் சகலதேசத்தாருக்கும் பிரசங்கிக்கவேண்டுமென்று இயேசு சொன்னர் (லூக் XXIV; 47); யோவான் பாவ மன்னிப்புக்கு மனம் திரும்புதலுக்கேற்ற ஞான ஸ்நானத்தைக்குறித்துப் பிரசங்கம் செய்தார் (மார். I. 4; லூக் III. 3). கொஞ்சம் புத்தியுடன் இதைப்பற்றிக்கூட நினைத்து பாருங்கள்; உமக்கு சமயம் என்பது ஒன்றிருந்தால், பாவங்களிலிருந்து மனம் திரும்புதல் சுவர்க்கத்துக்கு போகும்வழி யென்றும், மனம் திரும்புதலிலிருந்து வேறானது பக்தி பக்தியல்லவென்றும், மனம் திரும்பாதபடியினல் பக்தியில் இல்லாதவர்கள், நரகத்துக்குப் போகும்வழியில் இருக்கிறார்களென்றும் நீர் அறிந்துகொள்வீர்.

115. தருமத்திலிருந்து வேறான விசுவாசத்திலிருந்து "மனுஷன் நியாயப்பிரமாணத்தின் கிரியைகளில்லாமல் விசுவாசத்தினலேயே நீதிமான் ஆக்கப்படுகிறான்" என்று (ரோம. III. 28), பால் என்பவர் ரோமர்களுக்கு சொல்லியதிலிருந்து, அதில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், சூரியனைத்தொழுகிறவர்களைப்போல் இந்த வாக்கை தொழுகிறார்கள்; சூரியன்பேரில் முழுசக்தியுடனும் தங்கள் கண்களை நாட்டி, அதனல் வெளிச்சத்தின் மத்தியில் அவர்கள் எதையும் பார்க்கக் கூடாதபடி பார்வையானது அவ்வளவு இருள் சூழ்ந்ததாகிறவர்கள் போலாகிறார்கள். ஏனென்றால் அங்கே சட்டத்தின் கிரியை என்பதினல் அங்கே எங்கும் சட்டம் என்று சொல்லப்படும் தன்னுடைய புஸ்தகங்களில் மோசே என்

பவர் சொல்லிய சடங்குகள் என்றும், தசாக்கினையின் கட்டளைகள் அல்லவென்றும், அவர்கள் அறிந்துகொள்ளுகிறதில்லை. ஆகையினால், தசாக்கினையின் கட்டளைகளால் அவ்விதமாய் அருத்தம் கொள்ளாதபடி, "விசுவாசத்தினாலே நியாயப்பிரமாணத்தை அவமாக்குகிறோமா? அப்படியல்ல; நியாயப்பிரமாணத்தை நிலைநிறுத்துகிறோமே" என்று சொல்லி, அவர் அதைவிரித்துணர்த்தியிருக்கிறார் (அதே அத்தி. வாக்கியம் 31). இந்த வாக்கியத்திலிருந்து, தருமத்திற்கு வேறான விசுவாசத்தில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், சூரியனைப் பார்ப்பதுபோல் இந்த வாக்கியத்தை உற்றுப் பார்ப்பதினால், பால் என்பவர் விசுவாசத்தின் கட்டளைகள் தருமக் கிரியைகளா யிருப்பதாக விரித்துச் சொல்லுவதைப் பார்க்கிறதில்லை. தன் கட்டளைகளில்லாமல் விசுவாசம் என்பது என்ன? தீமையானகிரியைகளை அவர் விரித்துச் சொல்லி, அவைகளைச் செய்கிறவர்கள், சுவர்க்கத்துக்குள் பிரவேசிக்க மாட்டார்களென்று சொல்லுவதை, அவர்கள் அறிந்துகொள்ளுகிறதுமில்லை. தப்பிதமாய் அறிந்துகொண்ட இந்த தனித்த வாக்கியத்திலிருந்து என்ன குருட்டுத்தனம் உண்டாக்கப்பட்டதென்று, இதிலிருந்து வெளிப்படையாகிறது.

116. புறம்பான மனிதினிலிருக்கும் தீமைகள் மனிதன் மூலமாய்த் தவிர நீக்கப்பட முடியாதென்பதற்குக் காரணமானது, ஒரு மனிதன் கேட்கிறதும், பார்க்கிறதும், நினைக்கிறதும், இச்சிக்கிறதும், பேசுகிறதும், செய்கிறதும், எதாயிருந்தாலும் அவனுடைய சொந்தமாக முழுமையும் தோன்றுகிறது, ஆண்டவரின் தெய்வ பரிபாலனத்திலிருந்து வருகிறது என்பதாயிருக்கிறது. இந்த தோற்றமில்லாவிட்டால் மனிதனில் தெய்வ உண்மையை ஏற்றுக் கொள்ளுதலும் எந்த நன்மையைச் செய்ய தீர்மானமும் அன்பையும் ஞானத்தையும், அவைகள் அல்லாமல் தருமத்தையும், விசுவாசத்தையும் தனதாக்குதலும், ஆகையினால் ஆண்டவருடன் ஐக்கியப்படுதலும், ஆதலால், சீர்படுதலும், குணப்படுதலும், இவ்விதமாக மோட்சமும் இல்லை என்று மேலே காண்பிக்கப்பட்டிருக்கிறது (பி. 71-95, அதன் பின்வருவதிலும்). இந்த தோற்றமில்லா

மல், பாவங்களிலிருந்து மனம் திரும்புதலும் விசுவாஸமும்கூட இருக்க முடியாதென்பதும், அதனுடன் இந்த தோற்றமில்லாமல் மனிதன் மனிதனுயில்லாமல், மிருகத்தைப் போல், பகுத்தறிவுள்ள உயிரில்லாதவனு யிருக்கிறனென்பது விசதமாகிறது. இஷ்டப்படு கிறவன், பரமார்த்தமானதும் சன்மார்க்கமானதும், தேசாசாரமானதுமான உண்மையையும் நன்மையையும் ஒரு மனிதனுனவன் தன்னிடமேயிருந்து நினைக்கிறன் என்பதைத் தவிர வேறு எந்த தோற்றமாவது இருக்கிறதா என்று தன் விவேகத்துடன் கூடி ஆலோசித்துப் பார்க்கட்டும்; நன்மையாயும் உண்மையாயும் யிருக்கும் எல்லா பொருள்களும், ஆண்டவரிடமிருந்து வருகிறதாகவும், மனிதனிடமிருந்து எதுவும் வருகிறதில்லை யென்றும் கூறும் இந்த கோட்பாடை பிறகு ஏற்றுக்கொள்ளட்டும்; மனிதன் தன்னிடமிருந்தே போல, நன்மையைச் செய்ய வேண்டுமென்கிறதும், உண்மையை நினைக்க வேண்டுமென்கிறதும், அப்படியிருந்தாலும் அவைகள் ஆண்டவரிடமிருந்து வருகின்றனவென்று ஒத்துக்கொள்ளுகிறதும், ஆகையால் அதனுடன் ஒரு மனிதனுனவன் தன்னிட மிருந்தேபோல் தீமைகளை நீக்கவேண்டுமென்கிறதும், அப்படியிருந்தும் அதை ஆண்டவரிடமிருந்து செய்வதாக எப்பொழுதும் ஒப்புக்கொள்ளவேண்டு மென்கிறதுமாகிய இந்த பயனை ஒத்துக்கொள்ளமாட்டாஞ?

117. பார்வைக்குத் தெரியும்படி செய்யாதபடியினுல், தீமைகளில் தாங்கள் இருக்கிறதாகத் தெரியாதவர்கள் அநேகரிருக்கிறர்கள்; ஏனென்றுல் தேசசட்டங்களுக்கும், அதனுடன் பெயர்போய் விடுமென்பதற்கும், அவர்கள் பயப்படுகிறுர்கள். வழக்கத்திலிருந்தும் அப்பியாசத்திலிருந்தும், தங்கள் கௌரவத்துக்கும் செல்வத்துக்கும் கெடுதியானவைகளென்று தீமைகளை நீக்க அவர்கள் கற்றுக்கொள்ளுகிறுர்கள். ஆனுல் தீமைகள் பாவங்களென்றும், கடவுளுக்கு விரோதமானவைகளென்றும், ஒரு சமய விதியினின்று அவர்கள் அவைகளை நீக்காவிட்டால், அப்பொழுது தீமையின் ஆசைகள் அதன் இன்பங்களோடு அவர்களுக்குள், அசுத்தமான ஜலம் நிறுத்தப்பட்டது அல்லது பாயாமல் நின்றதுபோல நிற்கிறது.

தங்களுடைய சிந்தனைகளையும் உட்குறிப்புகளையும் அவர்கள் பரிசோதித்தால், பாவம் என்பது என்னவென்று அவர்களுக்குத் (2) தெரிந்திருக்கும் பட்சத்தில், அந்த ஆசைகளைப் பார்ப்பார்கள். தருமத்திலிருந்து வேறான விசுவாசத்தில் தாங்களே ஸ்திரப் பட்டவர்கள் அநேகரிருக்கிறார்கள்; சட்டமானது தங்களை தண்டிக்கிறதில்லை என்று நம்புகிறதினால், அவர்கள் பாவங்களைக்கூட கவனிக்கிறதில்லை; பாவங்கள் இருக்கின்றனவா என்பதையே சிலர் சந்தேகித்து, அப்படி யிருந்தாலும், அவர்கள் மன்னிக்கப்படுகிற படியினால் அவைகள் கடவுள் முன்பாக பாவங்கள் அல்லவென்று நினைக்கிறார்கள். தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய வாழ்க்கையும் அதன் சூழ்ச்சியும், எல்லா பொருள்களையும் உண்டாக்குகிறதென்றும், தெய்வ பராமரிப்பு ஒன்றும் உண்டாக்குகிறதில்லையென்றும் நம்புகிறவர்கள் கூட, சுபாவிகமான சன்மார்க்க போதகர்களா யிருக்கிறார்கள், கௌரவம் அல்லது லாபம் அடையும் பொருட்டு, கீர்த்திக்காகவும், யோக்கியதைக்கும் உண்மைக்கும் பெயர் எடுக்க முயற்சியாய் வெளிக்குக் காட்டுகிறவர்கள்கூட அப்பேர்ப்பட்டவர்களா யிருக்கிறார்கள். ஆனால் இவ்வித நடத்தையுள்ளவர்களும், சமயத்தை அலக்ஷியம் செய்தவர்களும், இறந்த பிறகு, தாங்கள் மனிதர்களைப் போல தாங்களுக்கே தோன்றியும், ஆனால் தூரத்திலிருப்பவர்களுக்கு **தேவன்** போலத் தோன்றியும், மோகங்கள் நிறைந்த அசரீர ஆன்மாக்களாகிறார்கள். ஆந்தைகளைப் போல் வெளிச்சத்தில் அல்லாமல் இருட்டில் பார்க்கிறார்கள்.

118. இவைகளிலிருந்து, **மனிதனானவன் தன்னிடமிருந்தே போல், புறம்பான மனிதனிலிருந்து தீமைகளை நீக்க வேண்டுமென்கிறதா யிருக்கிற** ஐந்தாவது பிரிவின் ஸ்திரப்படுத்துதல் ஏற்படுகிறது; இது புதிய **எருசலேம் நகரத்து வாழ்க்கை போதம்** எனும் நூலில் மூன்று பிரிவுகளில் விஸ்தரித்தது விவரிக்கப்படுவதை பார்க்கப்படலாம்: ஒன்றில், தீமைகளுக்கு விரோதமாய் சண்டை செய்வதால் தவிர, உள்ளுக்குள்ளாய் அவைகள் பேரில் வெறுப்புக் கொள்ளும்படி எவனும் அவைகளை நீக்கமுடியாது

(பி. 92-100): மற்றொன்றில் விஸ்தரித்தது:—மனிதனானவன் தன்னிடமிருந்தே போல், பாவங்களை தீமைகளாக நீக்கி, அவைகளுக்கு விரோதமாய் சண்டை செய்யவேண்டும் (பி. 101-107): மூன்றாவதில் விஸ்தரித்தது:—அவைகள் பாவங்கள் என்கிற காரணத்தை தவிர வேறு எந்த காரணத்துக்கும் ஒருவன் தீமைகளை நீக்கினால், அவன் அவைகளை நீக்குகிறதில்லை, ஆனால் அவைகள் உலகத்தின் முன்பாகத் தோன்றாதபடி மாத்திரம் தடுக்கிறான் (பி. 108-113).

119. VI. **அப்பொழுது ஆண்டவர் உள்ளான மனிதனிலிருக்கும் தீமைகளின் ஆசைகளிலிருந்தும் புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளிலேயே யிருந்தும் மனிதனை சுத்தம் செய்கிறார்.** மனிதனானவன் தன்னிடமிருந்தே போல் தீமைகளை நீக்கும்போது, ஆண்டவர் அப்பொழுது தீமைகளின் ஆசைகளிலிருந்து அவனை சுத்தம் செய்கிறார் என்பதற்குக் காரணம், ஆண்டவருக்கு அதற்கு முன் அவனை சுத்திகரிக்க முடியாதென்பதா யிருக்கிறது; ஏனென்றால், தீமைகள் புறம்பான மனிதனிலிருக்கின்றன, தீமையின் ஆசைகள் உள்ளான மனிதனிலிருக்கின்றன; அவைகள் வேர்களும் அடிமரமும் போல சேர்க்கப் பட்டிருக்கின்றன, ஆனபடியினால், தீமைகள் நீக்கப்பட்டால் ஒழிய சந்து கிடையாது; ஏனென்றால், அவைகள் தடுத்து கதவை மூடுகின்றன; சற்று மேலே கூறியபடி, மனிதன் மூலமாய்த் தவிர இது ஆண்டவரால் திறக்கப்பட முடியாது. மனிதனானவன் இவ்விதமாக தன்னிடமிருந்தேபோல கதவைத் திறக்கும்போது, அப்பொழுது, ஆண்டவர் அதே காலத்தில் ஆசைகளை நிர்மூலப் படுத்துகிறார். ஆண்டவர் மனிதனுடைய உள்ளுக்குள்ளானதிலும், உள்ளுக்குள்ளானதிலிருந்து பின் வருவதில் எல்லாவற்றிலும், இறுதியானவைகள் வரையில் கூட செயல்படுகிறார் என்பதும், இறுதியானவைகளில் மனிதனானவன் இருக்கிறானென்பதும் கூட காரணமா யிருக்கிறது; ஆகையினால், இறுதியானவைகள் மனிதனாலேயே மூடிவைக்கப்படுகிற அளவு, எந்த சுத்திகரிப்பும் உண்டாகாது; ஆனால், ஆண்டவர் நரகத்தில் சேட்டிக்கிற மாதிரியே, உள்ளானதிலும் சேட்டிக்க மாத்திரம்

கூடும் (ஆசைகளிலும் அதே காலத்தில் தீமைகளிலும் இருக்கும் மனிதன் நரகத்தின் ஓர் உருவமாயிருக்கிறான்); அந்த செய்கை, ஒன்று மற்றொன்றை அழிக்காதபடிக்கும், நன்மையும் உண்மையும் பங்கப்படுத்தப் படாதபடிக்கும் மாத்திரம் அவ்வித ஏற்பாடாயிருக்கிறது. ஆண்டவர் கதவை தான் உள்ளே வர மனிதனை இடைவிடாமல் பிரேரித்து பலவந்தம் செய்கிறாரென்பது அவருடைய சொந்த வாக்கிலிருந்தே வெளிப்படையாகிறது: "இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன், ஒருவன் என் சத்தத்தைக் கேட்டு, கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடு போஜனம் பண்ணுவேன், அவனும் என்னோடு போஜனம் பண்ணுவான்" (வெளி. III. 20).

120. மனிதனுக்கு அவனுடைய மனதின் அல்லது அவனுடைய உள்ளிருக்கிற மனிதனுடைய உள்ளான நிலைமையைப் பற்றி யாதொன்றும் தெரியாது; அப்படியிருந்தும், அங்கே ஒன்றுகூட மனிதனுடைய அறிவுக்கு எட்டாத முடிவற்ற பொருள்கள் இருக்கின்றன. ஏனென்றால், மனிதனுடைய சிந்தனையின் உள்ளானது அல்லது அவனுடைய உள்ளிருக்கிற மனிதன், அவனுடைய ஆன்மாவாகவே யிருக்கிறது; அதற்குள், அவனுடைய சரீரத்திலிருப்பது போல முடிவற்றதாயும் கணக்கற்றதாயும் அநேக பொருள்கள் இருக்கின்றன; நிஜமாக அதிக கணக்கற்ற பொருள்கள் கூட இருக்கின்றன. ஏனென்றால், மனிதனுடைய ஆன்மா, அதன் உருவத்தில் மனிதனா யிருக்கிறான், அதற்குச் சேர்ந்த எல்லாபொருள்களும், மனிதனுடைய சரீரத்திலுள்ள எல்லா பொருள்களோடும் அன்னுவயப் படுகின்றன. இப்படி யிருக்கையில், மனிதனுக்கு எந்த உணர்ச்சியிலிருந்தும், அவனுடைய மனது அல்லது ஆன்மா, சரீரத்துக்குச் சேர்ந்த எல்லா பொருள்கள் பேரிலும் சேர்ந்தும், தனித்தனியாயும் செயல்படும் விதம் ஒன்றும் தெரியாததுபோல், ஆண்டவர் அவனுடைய மனது அல்லது ஆன்மாவின் எல்லா பொருள்கள் பேரிலும் அதாவது அவனுடைய அசரீர ஆன்மாவின் எல்லா பொருள்கள் பேரிலும், எந்தவிதத்தில் செயல்படுகிறாரென்றும் கூட, அவனுக்

குத்தெரியாது. சேட்டையானது இடைவிடாமலிருக்கிறது; இதில் மனிதன் ஒன்றும் செய்கிறதில்லை; அப்படி யிருந்தாலும், மனிதன் புறம்பானது மூடிவைக்கிற வரையில் ஆண்டவர், மனிதனை, அவனுடைய ஆன்மாவில் அல்லது உள்ளிருக்கிற மனிதனிலிருக்கும் தீமையின் எந்த ஆசையிலிருந்தும் சுத்தப்படுத்த முடியாது. ஒவ்வொன்றிலும் முடிவற்ற பொருள்கள் இருந்தபோதிலும், அவைகளின் ஒவ்வொன்றும் அவனுக்கு ஒன்ருக மாத்திரம் தோன்றுகிற தீமைகளால் மனிதன் தன்னுடைய புறம்பானதை மூடி வைக்கிருன்; மனிதனுனவன் ஒன்ருக இதை நீக்கினுல், பிறகு ஆண்டவர் அதிலிருக்கும் முடிவற்ற பொருள்களை நீக்குகிருர். ஆண்டவர் அப்பொழுது உள்ளிருக்கும் மனிதனிலிருக்கும் தீமையின் ஆசைகளிலிருந்தும், புறம்பானதிலிருக்கும் அவனுடைய தீமைகளிலிருந்தும், மனிதனை சுத்தி செய்தலென்பதினுல், இது தான் அருத்தம் கொள்ளப் படுகிறது.

121. திருச்சபை கற்பிக்கிறதை நம்புதல்மாத்திரம், ஒரு மனிதனை தீமைகளிலிருந்து சுத்தம் செய்கிறதென்று அநேகர் அபிப்பிராயப்படுகிருர்கள். சிலர் நன்மையைச் செய்தல் சுத்தம் செய்கிறது என்று நம்புகிருர்கள்; சிலர் திருச்சபையைச் சேர்ந்தவைகளைத் தெரிந்து கொள்ளுதலும், பேசுதலும், கற்பித்தலும், அப்படிச் செய்கிறதென்றும், சிலர் வேதத்தையும், தெய்வபக்தியுள்ள புஸ்தகங்களை வாசிப்பதும், சிலர் கோவில்களுக்கு பலமுறை போகுதலும், பிரசங்கத்தைக்கேட்டலும், முக்கியமாய் பரிசுத்த இராப்போஜனத்தை எடுத்துக்கொள்ளுதலும், அப்படிச் செய்கிறதென்றும், மற்றவர்கள், உலகத்தை விட்டுவிட்டு தாங்களே தெய்வ பக்திக்கு சமர்ப்பிக்கப்படுதலும், அப்படிச் செய்கிறதென்றும், இன்னும் சிலர் எல்லா பாவங்களையும் செய்த குற்றவாளிகளாக ஒத்துக்கொள்ளுதலும், அப்படி செய்கிற தென்றும் இவ்விதமாக பலவிதமாக நம்புகிருர்கள். என்ருலும், இவைகளெல்லாம், ஒரு மனிதன் தன்னையே பரிசோதித்து, தன் பாவங்களை அறிந்து, அவைகளை ஒத்துக்கொண்டு, அவைகளுக்காகத் தானே குற்றவாளியாக்கிக்கொண்டு அவைகளை விட்டுவிட்டு மனம் திரும்பினு

லொழிய, அவனை சுத்திசெய்கிறதேயில்லை; அவன், இதை எல்லாம் தன்னிடமிருந்தே போல் செய்யவேண்டும். அப்படியிருந்தாலும், அவன் அதை ஆண்டவரிடமிருந்து செய்வதாக தன் இருதயம் (2) ஒத்துக்கொள்ளுதலிலிருந்து செய்யவேண்டும். இது செய்வதற்கு முன், முன்சொல்லியவைகள் உதவாது; ஏனென்றால், அவைகள் புண்ணியமானவைகளாய் அல்லது கள்ளமானவைகளாய் இருக்கின்றன; அவைகளைச் செய்கிறவர்கள் தங்கள் வியாதிகளால், ஈனமாய் நாறுகிற அழகுள்ள வேசிகளைப் போல் தேவர்கள் முன்பாக சுவர்க்கத்தில் தோன்றுகிறார்கள்; அல்லது அழகுள்ளவர்களாகத் தோன்றும்படி மைபூசிய அந்தக்கேடான ஸ்திரிகளைப் போலவும், அல்லது நாடகசாலையின் வேஷம்போட்ட கூத்தர்களைப்போலவும் பரிகாசக்காரர்களைப் போலவும், மானிட உடுப்பிலிருக்கும் வாலில்லாக்குரங்குகள் போலவும் தோன்றுகிறார்கள். ஆனால் தீமைகள் நீக்கப்பட்டபோது மேலே கூறிய செய்கைகள், அவர்கள் அன்பைச் சேர்ந்தவைகளாகின்றன. சுவர்க்கத்தில் தேவர்கள் முன்பாக அழகுள்ள மானிடர்களைப்போலவும், அவர்களுடைய கூட்டாளிகளைப் போலவும், உடந்தைக்காரர்களைப் போலவும், அவர்கள் தோன்றுகிறார்கள்.

122. ஆனால் ஒரு மனிதன் மனம் திருப்பும் வேலையில் ஆண்டவரை மாத்திரம் பார்க்கவேண்டுமென்று நன்றாய்த் தெரிந்திருக்கப்படவேண்டும்; பிதாவாகிய கடவுளை மாத்திரம் பார்த்தால், அவன் சுத்தப் படுத்தப்படமாட்டான்; குமாரன் பொருட்டு பிதாவை பார்த்தாலும், அல்லது குமாரனை மனிதனாக மாத்திரம் பார்த்தாலும், சுத்தமாகப்படமாட்டான்; ஏனென்றால், ஒரு கடவுளிருக்கிறார், ஆண்டவர் அவரே, அவருடைய தெய்வீகத்தன்மையும், மானிடத்தன்மையும் **ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை** எனும் நூலில் காண்பித்தபடி ஒருவராயிருக்கிறார். மனம் திரும்பும் வேலையில் ஆரம்பிக்கும் ஒவ்வொருவனும் ஆண்டவரை மாத்திரம் எதிர்பார்க்கும்படி, மனம் திரும்புகிறவர்களில் பாவவிமோசனங்களை ஸ்திரப்படுத்துகிற பரிசுத்த **இராப் போஜனத்தை** அவர் ஏற்படுத்தினார். அந்த **போஜனம்** அல்லது

நற்கருணையில் ஆண்டவரை மாத்திரம் பார்க்க ஒவ்வொருவனும் வைக்கப்படுகிறபடியினால், அது அதை ஸ்திரப்படுத்துகிறது.

123. VII. ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தின் இடைவிடாத பிரயத்தனமானது, மனிதனுக்கு சதாகால வாழ்வின் ஆனந்தங்களை அவர் கொடுக்கச் சக்தியுள்ளவராயிருக்கும் பொருட்டு, தன்னுடனே மனிதனையும், தானே மனிதனுடனும் சேர்க்கவேண்டுமென்பதா யிருக்கிறது; தீமைகளும் அதன் மோகங்களும் நீக்கப்படுகிறவரையில் மாத்திரம் அது செய்யப்படக்கூடும். மனிதனை தன்னுடனேயும் தன்னையே மனிதனுடனும் சேர்க்க ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தின் இடைவிடாத முயற்சி என்றும், இந்த ஐக்கியம் சீர்திருத்தப்படுதலென்றும், குணப்படுத்தப்படுதலென்றும் சொல்லப்படுகிறதா யிருக்கிறதென்றும், அதிலிருந்து மனிதனுக்கு மோக்ஷம் உண்டென்றும் மேலே (பி. 27-45) காண்பிக்கப்பட்டது. கடவுளுடன் ஐக்கியம் என்பது சதாகால வாழ்வும் மோக்ஷமும் என்று யாருக்குத் தெரியாது? சிருட்டி முதல் மனிதர்கள் கடவுளின் சாயலாகவும் ரூபமாகவு மிருக்கிறார்களென்று நம்புகிற ஒவ்வொருவனும், கடவுளின் சாயலும் ரூபமும் என்னவென்று (ஆதியாக. I, 26-27) தெரிந்த ஒவ்வொருவனும் அதை அறிந்து (2)கொண்டிருக்கிறான். நல்ல ஸ்திதியிலுள்ள விவேகமிருக்கும் எவனொருவன், தன்னுடைய பகுத்தறிவுடைமையிலிருந்து நினைக்கையிலும், தன்னுடைய சுதந்தரத்திலிருந்து நினைக்க இச்சிக்கையிலும், தன்மையில் சமமான மூன்று கடவுள் இருக்கிறார்களென்றும், தெய்வ சொரூபம் அல்லது தெய்வ இயல்பு பாகிக்கக்கூடுமென்றும் நம்பக்கூடும். தேவனிலும் மனிதனிலும், ஆன்மாவும் சரிரமும், இவைகளிலிருந்து உயிரின் ஒரு வெளிப்பாடும் இருக்கிறதென்று கிரகிக்கப்படக் கூடியது போல, ஒரே கடவுளில் ஒரு திரியேகமிருப்பதாக நினைக்கப்பட்டு கிரகிக்கப்படக்கூடும்; ஒன்றிலிருக்கும் இந்த திரியேகம் ஆண்டவரில் மாத்திரம் இருக்கிறபடியினால், ஐக்கியமும் அவருடன் இருக்கவேண்டுமென்று ஏற்படுகிறது. உம்முடைய பகுத்தறிவுடைமையும், அதேகாலத்தில் நினைக்கும் சுதந்தரத்தையும் உபயோகப்படுத்தினால், இந்த

உண்மையை, அதன் வெளிச்சத்தில் நீர் பார்ப்பீர்; ஆனால்
முதலில் கடவுளிருக்கிறாரென்றும், ஒரு சுவர்க்க மிருக்கிறதென்
(3) றும், சதாகால வாழ்வு இருக்கிறதென்றும் ஒத்துக்கொள்.
கடவுள் ஒருவரா யிருக்கிறபடியினாலும், சிருட்டி முதல் மனிதன்
அவருடைய சாயலாகவும் ரூபமாகவும் உண்டாக்கப்பட்ட படியி
னாலும், நரகத்துக்கு அடுத்த ஆசையினாலும், அதன் மோகங்களி
னாலும், அவைகளின் சுகானுபவங்களாலும், எல்லா தீமைகளை
யும் நேசிக்க நேரிட்டு, அதனால் கடவுளின் சாயலையும் ரூபத்தை
யும் தன்னிலே அழித்துவிட்ட படியினாலும், ஆண்டவருடைய
தெய்வ பராமரிப்பின் இடைவிடாத முயற்சி மனிதனை தன்னுட
னேயும், தன்னையே மனிதனுடனும் சேர்க்கவும், இவ்விதமாக
மனிதனை தன்னுடைய சாயலாகச் செய்யவும் இருக்கிறதென்று
ஏற்படுகிறது. ஆண்டவர் மனிதனுக்கு சதாகால வாழ்வின்
ஆனந்தத்தைக் கொடுக்கவேண்டுமென்கிற முடிவுக்கு, இது இருப்
(4) பதாகக்கூட பின் தொடருகிறது; ஏனென்றால், பரம இச்சா
சத்தி அம்மாதிரியானதா யிருக்கிறது. ஆனால், ஆண்டவர் பரம
இச்சாசத்தியாக மாத்திரமல்லாமல், பரம ஞானசத்தியாகவும்கூட
யிருப்பதினாலும், பரம இச்சாசத்தி, அதன் சொந்த பரம ஞான
சத்தியிலிருந்தும், அதற்குத் தக்கபடியும் தவிர, யாதொன்றையும்
செய்யாதபடியினாலும், மனிதனானவன் புறம்பான மனிதனிலிருக்
கும் பாவங்களை தன்னிடமிருந்தே போல் நீக்கினாலொழிய **அவர்**
மனிதனுக்கு அவைகளைக் கொடுக்கமாட்டார். அதுவுமல்லாமல்,
தன்னுடைய சாயலாகவும் அவனை செய்யவும் மாட்டார். விவே
கத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து நடப்பதால் மனிதன்
மனிதனாகிற படியினால், அப்படிச் செயல்பட விடப்பட்டா
லொழிய, மனிதன் கடவுளுடன் சேர்க்கப்பட்டு, இவ்விதமாக சீர்
திருத்தப்பட்டு, குணப்படுத்தப்பட்டு, இரக்ஷிக்கப்பட முடியா
தென்பது, ஆண்டவருடைய பரமஞானசத்தியை ஒத்திருக்கிறது;
ஆண்டவருடைய ஞானசத்தியை ஒத்திருப்பது, அவருடைய
தெய்வபரிபாலனத்தைச் சேர்ந்ததாயும் கூட யிருக்கிறது.

124. இதனுடன், தெய்வபரிபாலனத்தின் குணத்தை தெரிந்துகொள்ளக் கூடிய தேவர்கள் ஞானத்தைச் சேர்ந்த இரண்டு இரகசியங்களை நான் சேர்க்கிறேன்; ஆண்டவர் மனிதனி லிருக்கும் எந்த விசேஷமானதின் பேரிலும், எந்த விதத்திலும் தனித்து செயல்படாமல், ஒரே காலத்தில் எல்லாவற்றின்பேரிலும் செயல்படுகிறார் என்பது ஒன்று; மிகவும் உள்ளுக்குள்ளானதி லிருந்தும், மிகவும் புறம்பானதிலிருந்தும், ஒரே காலத்தில் செயல் படுகிறார் என்பது மற்றொன்று. ஆண்டவர் மனிதனிலிருக்கும் எந்த விசேஷமானதின் பேரிலும், எந்த விதத்திலும் தனித்து செயல்படாமல் அவனுக்குச் சேர்ந்த எல்லா பொருள்கள் பேரிலும் ஒரே காலத்தில் செயல்படுகிறாரென்பது, மனிதனுக்குச் சேர்ந்த எல்லா பொருள்க ளும் அவ்வித சம்பந்தத்திலிருப்பதினாலும், அந்த சம்பந்தத்தினால், பல பொருள்களாக அல்லாமல், ஒன்றாக செயல்படும் பொருட்டு அவ்வித உருவத்திலும் இருப்பதினாலும் ஏற்படுகிறது. மனித னானவன் சரீரம் விஷயத்தில் அவ்வித சம்பந்தத்திலும், அந்த சம்பந்தத்தால்அவ்வித உருவத்திலு மிருக்கிறானென்று தெரிந் திருக்கிறது. மானிட மனதுகூட அதிலிருக்கும் எல்லா பொருள் களின் சம்பந்தத்திலிருந்து அதைப் போன்ற உருவத்திலிருக் கிறது. ஏனென்றால், மானிடமனது சூக்கும மனிதனாகவும், உண் மையாய் மனிதனாகவும்கூட இருக்கிறது. இதிலிருந்து தான், சரீ ரத்தில் மனிதனுடைய மனதாயிருக்கிற அவனுடைய ஆன்மா, அதன் எல்லா உருவத்திலும் மனிதனாயிருக்கிறது. ஆகையினால், இறந்தபிறகு ஒரு மனிதனானவன், உலகத்தில் தன்னுடைய சரீ ரத்தை உண்டாக்கிய போர்வைகளை போட்டுவிட்டானென்கிற வித்தியாசத்துடன் மாத்திரம் உலகத்திலிருந்த போது இருந்த (2) படி, அவ்வளவு மனிதனா யிருக்கிறான். இது இப்படி யிருக்கை யில், மானிட உருவமானது, எல்லா பாகங்களும் ஒன்றாக செயல் படுகிற பொதுவான மொத்தத்தை உண்டாக்கும்படியான வித மாயிருப்பதினால், ஒரு பாகமானது, மற்றவைகளின் சம்மதியில் லாமல் இடத்தைவிட்டு அசைக்கவும், ஸ்திதியில் மாற்றவும் முடி யாது; ஏனென்றால், ஒன்று அது இருக்கும் இடத்திலிருந்து நீக் கப்பட்டு, நிலைமையில் மாற்றப்பட்டால், ஒன்றாக செயல்படுகிற

உருவம் நஷ்டமடையும் ஆண்டவர், எந்த ஒரு அணுவின்பேரிலும் எப்பொழுதும் செயல்படாமல், எல்லாவற்றின்பேரிலும் ஒரே காலத்தில் செயல்படுகிறார் என்று இதிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது. ஆகையினால், சர்வவியாபகமான தேவர்கள் சுவர்க்கம், ஆண்டவர் பார்வையில், ஒரு மனிதனைப் போல இருப்பதினால், அவர் அதன் பேரில் சேட்டிக்கிறார். ஒவ்வொரு தேவனும் எல்லாவற்றிலும் குறைந்த உருவத்தில் ஒரு சுவர்க்கமாயிருப்பதினால், ஒவ்வொரு தேவன் பேரிலும் அம்மாதிரியே கூட சேட்டிக்கிறார். அம்மாதிரியே கூட, ஒவ்வொரு மனிதன் பேரிலும், அவனுடைய மனதின் எல்லா பொருள்களின் பேரிலும், சமீபமாயும், இவைகள் மூலமாய் அவன் சரீரத்தின் எல்லா பொருள்கள் பேரிலும் அவர் சேட்டிக்கிறார்; ஏனென்றால், மனிதனுடைய மனது அவன் ஆன்மாவாயிருக்கிறது, ஆண்டவருடன் அது ஐக்கியப் படுவதற்குத் (3) தக்கபடி ஒரு தேவனாயிருக்கிறது, சரீரமானது கீழ்ப்படிதலாயிருக்கிறது. ஆனால், ஆண்டவர் கூட மனிதனிலிருக்கும் தனித்த பொருள்கள் பேரில் தனித்தும், உண்மையாக, மிகவும் தனித்த பொருள்கள்பேரிலும் தனித்தும், அதே காலத்தில் அவனுடைய உருவத்தின் எல்லா பொருள்கள் மூலமாயும் சேட்டிக்கிறாரென்று நன்றாய்க் கவனிக்கவேண்டும்; ஆனால், அவர் தனித்த பொருள்களில் எந்த பொருளின் அல்லது எந்த பாகத்தின் நிலைமையையும், முழு உருவத்துக்கும் தக்கபடியல்லாமல் மாற்றுகிறதில்லை. ஆனால் பின் வருவதில் இதைப்பற்றி அதிகம் சொல்லப்படும். ஆண்டவருடைய தெய்வபரிபாலனம் தனித்த பொருள்களிலிருப்பதினால், சர்வ வியாபகமாயிருக்கிறதென்றும், சர்வ வியாபகமாயிருப்பதினால், தனித்த பொருள்களிலிருக்கிறதென் (4) றும் அங்கே காண்பிக்கப்படும். **ஆண்டவர் உள்ளுக்குள்ளானதிலிருந்தும், இறுதியானதிலிருந்தும், ஒரே காலத்தில் சேட்டிக்கிறார்;** ஏனென்றால், பொதுவாகவும் சிறப்பாகவும் எல்லா பொருள்களும் உறவு முறையில் வேறு விதத்தில் அல்லாமல் அம்மாதிரியாக வைக்கப்பட்டிருக்கின்றன; மத்தியிலுள்ளவைகள், உள்ளுக்குள்ளானதிலிருந்து, இறுதியானவைகள் வரையில், உள்ளானவைகள் போல தொடர்பாய் சார்ந்திருக்கின்றன; இறுதியானவைகளில்

அவைகள் சேர்ந்திருக்கின்றன; ஏனென்றால், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் மூன்றாவது பாகத்தில் காண்பித்தபடி, இறுதியானதில் எல்லா பொருள்களும் முதலிலிருந்து ஒருமிக்க இருக்கின்றன. இதனால் கூட, சதாகால ஆண்டவர், அல்லது **ஏகோவா** என்பவர் முதலானதிலிருந்து இறுதியானது வரையில் ஒரே காலத்திலிருக்கும் பொருட்டும், அம்மாதிரியாக, முதற் பொருள்களிலிருந்து இறுதியானவைகள் மூலமாய் முழு உலகத்தை ஆளவும், இம்மாதிரியாக அவருடைய ஞானசக்தியின் கட்டளைகளாகக் கூடயிருக்கிற அவருடைய தெய்வ பரிபாலனத்தின் கட்டளைகளுக்குத் தக்கபடி தான் இரக்ஷிக்கக் கூடியவர்களை இரக்ஷிக்கவும், உலகத்திற்கு வந்து இறுதியானவைகளில் மானிடத் தன்மையை போட்டுகொண்டு அதை சுமந்தார். இவ்விதமாக தான், கிருஸ்துவ உலகத்தில் தெரிந்திருக்கிறபடி, ஆண்டவர் உலகத்திற்கு வந்தாலொழிய எந்த சாகும் மனிதனும் இரக்ஷிக்கப்பட மாட்டான்; இதைப்பற்றி **புதிய எருசலேம் நகரத்து பக்தி** நூலை பார்க்கவும் (பி. 35). இதனால் தான் ஆண்டவர் முதற் பொருளென்றும் இறுதிப் பொருளென்றும் சொல்லப்படுகிறார்.

125. ஆண்டவருடைய தெய்வ பரிபாலனம் மனிதனை தன்னுடனும், மனிதனுடன் தன்னையும் சேர்க்க எப்படி தொழில்படுகிறதென்று கிரகிக்கப் பட, இந்த தேவதா சம்பந்தமான இரகசியங்கள் முந்தி சொல்லப்பட்டன; இது மனிதனுக்குச் சேர்ந்த ஏதோ ஒரு தனித்த பொருளின் பேரில் தனிமையா யல்லாமல், ஆனால் அவனுக்கு சேர்ந்த எல்லாவற்றின் பேரிலும் ஒரு முறையில் செய்யப்படுகின்றது; அது மனிதனுடைய உள்ளுக்குள்ளானதிலிருந்தும், அவனுடைய இறுதியானதிலிருந்தும் ஒரே காலத்தில் செய்யப்படுகின்றன. மனிதனுடைய உள்ளுக்குள்ளானது, அவனுடைய உயிரின் அன்பா யிருக்கிறது; இறுதிப் பொருள்கள் அவன் சிந்தனையின் புறம்பானதில் இருக்கிற பொருள்களா யிருக்கின்றன; மத்தியிலிருக்கும் பொருள்கள், அவன் சிந்தனையின் அந்தரங்கத்திலிருக்கும் பொருள்களா யிருக்கின்றன. கெட்ட மனிதனில், இவைகள் எந்த குணமுள்ளவைகள் என்பது, முன்

னமே காண்பிக்கப்பட்டது; ஆண்டவர், மனிதனுடன் சேர்ந்து அல்லாமல், ஒரே காலத்தில் உள்ளுக்குள்ளானவைகளிலிருந்தும், இறுதியானவைகளிலிருந்தும் செயல்பட மாட்டாரென்று, இதிலிருந்து மறுபடியும் தெளிவாகிறது; ஏனென்றால், மனிதன், ஆண்டவருடன் சேர்ந்து இறுதிப் பொருள்களிலிருக்கிறார். ஆகையினால், மனிதன், தன் சுதந்திரத்திலிருப்பதால், அவன் இஷ்டப்படி செய்ய இருக்கும் இறுதிப் பொருள்களில் செய்கிறதுபோல, ஆண்டவர், மனிதனுடைய உள்ளுக்குள்ளானதிலிருந்தும், அவைகளுக்குப் பின்வருவதிலிருந்தும், இறுதிப் பொருள்கள் வரையிலும்கூட சேட்டிக்கிறார். மனிதனுடைய அந்தரங்கத்திலிருப்பதும், இறுதிப் பொருள்கள் வரையில் அவைகளுக்குப் பின்வருவதிலிருப்பதும், மனிதனுக்கு முழுமையும் தெரியாது; ஆகையினால், ஆண்டவர் எப்படி, எதை அங்கே செய்கிறாரென்று அவனுக்கு முழுமையும் தெரியாது; ஆனால், அந்தப் பொருள்கள் இறுதிப் பொருள்களோடு ஒன்றாகச் சேர்கிற படியினால், அவன் தீமைகளை பாவங்களாக நீக்கி ஆண்டவரை எதிர் பார்க்கவேண்டுமென்பதை விட அதிகமாய்த் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. வேறு வழியில்லாமல், இம்மாதிரியாக தான், பிறந்தது முதல் நரகத்துக்கு அடுத்ததாயிருக்கிற அவனுடைய உயிரின் அன்பு ஆண்டவரால் நீக்கப்பட்டு, சுவர்க்கத்துக்கு அடுத்த உயிரின் அன்பு, அதற்குப் பதிலாக நடப்படக் கூடும்.

126. நரகத்துக்கு அடுத்த உயிரின் அன்புக்குப் பதிலாக, சுவர்க்கத்துக்கு அடுத்த உயிரின் அன்பு ஆண்டவரால் நடப்பட்டால், அப்பொழுது, நன்மை உண்மைகளுடைய ஆசைகள் தீமை பொய்களின் மோகங்களுக்குப் பதிலாக நடப்படுகின்றன; நன்மையின் ஆசைகளின் இன்பங்கள், தீமை பொய்களின் மோகங்களின் இன்பங்களுக்குப் பதிலாக நடப்படுகின்றன; சுவர்க்கத்து அன்பின் நன்மைகள், நரகத்து அன்பின் தீமைகளுக்குப் பதிலாக நடப்படுகின்றன. அப்பொழுது, கபடத்துக்குப் பதிலாக விவேகமும், பொல்லாங்கான சிந்தனைகளுக்குப் பதிலாக, ஞான சிந்தனைகளும் நடப்படுகின்றன. இவ்விதமாக, மனிதன் மறுபடியும்

பிறந்து, புதிய மனிதனாகிறான். தீமைகளுக்குப் பதிலாக எவ்வித நன்மைகள் தொடருகின்றனவென்பது **புதிய எருசலேம் நகரத்து வாழ்க்கை போதம்** எனும் நூலில் (பி. 67-73, 74-79, 80-86, 87-91) பார்க்கலாம்; தீமைகளை பாவங்களாக மனிதனானவன் நீக்கி அவைகளை விட்டுவிடுகிற அளவு, ஞானத்தின் உண்மைகளை அவன் நேசிக்கிறான் என்பதை (பி. 32-41) லும், அவ்வளவு தூரம் விசுவாசத்தை யுடையவனாயும், பரமார்த்தமானவனாகவும் யிருக்கிறான் என்பதை (பி. 42-52) லும் பார்க்கவும்.

127. பரிசுத்த தேவபிரசாதம் பெருவதற்கு முன் கிருஸ்துவ கோவில்களிலெல்லாம் வாசிக்கப்பட்ட எச்சரிப்புகளிலிருந்து முழு கிருஸ்துவ உலகத்தின் பொதுவான சமயம், மனிதன் தன்னையே பரிசோதித்து, தன்னுடைய பாவங்களைப் பார்த்து, அவைகளை ஒத்துக்கொண்டு, கடவுள் முன்பாக அறிக்கையிட்டு, அவைகளை விட்டுவிட வேண்டுமென்றும், இதுதான் மனம் திரும்புதலென்றும், பாவவிமோசன மென்றும், அதனால் மோட்சமென்றும் மேலே காண்பிக்கப் பட்டது. முழு கிருஸ்துவ உலகத்திலும் ஏற்றுக்கொள்ளப் பட்டதும், **அதனேசியஸ்** என்பவர் பெயரால் ஏற்பட்டதுமான சமயத்திலிருந்து அதே கூட விசதமாகிறது: அதன் முடிவில் பின்வரும் வார்த்தைகளிலிருக்கின்றன:—"ஆண்டவர் உயிரோடிருப்பவர்கள் பேரிலும், இறந்து போனவர்கள் பேரிலும் தீர்ப்பு சொல்ல வருவார்; அவர் வரும்போது, நன்மை செய்தவர்கள் சதாகால வாழ்வில் பிரவேசிப்பார்கள், தீமை செய்தவர்கள் சதாகால நெருப்பில் விழுவார்கள்."

128. இறந்த பிறகு ஒவ்வொருவனுக்கும் அவன் அவனுடைய செய்கைகளுக்குத் தக்கபடி ஓர் வாழ்வு கொடுக்கப்படுகிறதென்று வேதத்திலிருந்து தெரிந்து கொள்ளாதவன்யார்? வேதத்தைதிறந்து, அதை வாசித்துப் பார், இதை நீ தெளிவாய்ப் பார்ப்பாய்; ஆனால், இதை செய்யும் காலத்தில் விசுவாசம் என்பதிலிருந்தும், அதனால் மட்டும் குற்றமில்லை என்று தீர்மானிப்பதிலிருந்தும், சிந்தனைகளை நீக்கு. தன்னுடைய வேதத்தில் இதை ஆண்ட

வர் எங்கும் கற்பிக்கிறரென்பதற்குச் சாட்சியமாக, இந்த சில உதாரணங்களை எடுத்துக்கொள்: "நல்ல கனிகொடாத மரமெல்லாம் வெட்டுண்டு, அக்கினியிலே போடப்படும். ஆதலால், அவர்களுடைய கனிகளினுலே அவர்களை அறிவீர்கள்" (மத்தே. VII. 19, 20). "அந்நாளில், அநேகர் என்னை நோக்கி, கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினுலே தீர்க்க தரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினுலே அநேக அற்புதங்களைச் செய்தோமல்லவா? என்பார்கள். அப்பொழுது நான் ஒருக்காலும், உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைகாரரே, என்னைவிட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன்" (மத்தே. VII. 22, 23,). "ஆகையால், நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு, இவைகளின்படி செய்கிறவன் எவனே, அவனைக் கன்மலையின் மேல் தன் வீட்டைக்கட்டின புத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பிடுவேன். நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு இவைகளின்படி செய்யாதிருக்கிறவன் எவனே, அவன் தன் வீட்டை மணலின் மேல் கட்டின புத்தியில்லாத மனுஷனுக்கு ஒப்பிடப்படுவான்" (மத்தே. VII. 24, 26; லூக். VI. 46-49.). (2) மனுஷகுமாரன் தம்முடைய பிதாவின் மகிமை பொருந்தினவராய் வருவார்; அப்பொழுது அவனவன் கிரியைக்குத் தக்கதாக அவனவனுக்குப் பலனளிப்பார்" (மத்தே. XVI. 27). "தேவனுடைய ராஜ்யம் உங்களிடத்திலிருந்து நீக்கப்பட்டு, அதற்கேற்ற கனிகளைத் தருகிற ஜனங்களுக்குக் கொடுக்கப்படும்" (மத்தே. XXI. 43). "அதற்கு அவர் தேவனுடைய வசனத்தைக் கேட்டு, அதின்படி செய்கிறவர்களே, எனக்குத்தாயும், எனக்கு சகோதரருமாயிருக்கிறுர்களென்றுர்" (லூக். VIII. 21). "நீங்கள் வெளியே நின்று, ஆண்டவரே, ஆண்டவரே எங்களுக்குத் திறக்கவேண்டுமென்று சொல்லிக் கதவைத் தட்டும்போது, அவர் பிரதியுத்திரமாக: "நீங்கள் எவ்விடத்தாரோ, உங்களை அறியேன், அக்கிரமக்காராகிய நீங்களெல்லோரும் என்னை விட்டு அகன்று போங்கள்" (3) என்று அவர் சொல்லுவார் (லூக். XIII. 25-27). "அப்பொழுது, நன்மை செய்தவர்கள் ஜீவனை அடையும்படி எழுந்திருக்கிறவர்களாகவும், தீமை செய்தவர்கள் ஆக்கினையை அடை

யும்படி எழுந்திருக்கிறவர்களாகவும் புறப்படுவார்கள்'' (யோவா. V. 29). "பாவிகளுக்குத் தேவன் செவி கொடுக்கிறதில்லை என்று அறிந்திருக்கிறோம்; ஒருவன் தேவபக்தி யுள்ளவனுயிருந்து அவருக்குச் சித்தமானதைச் செய்தால் அவனுக்குச் செவிகொடுப்பார்'' (யோவா. IX. 31). "நீங்கள் இவைகளை அறிந்திருக்கிற படியினல் இவைகளைச் செய்வீர்களானல், பாக்கியவான்களாயிருப்பீர்கள்'' (யோவா. (XIII. 17). "என் கற்பனைகளைப் பெற்றுக்கொண்டு அவைகளைக் கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில் அன்பாயிருப்பான், நான் அவனிடத்தில் அன்பாயிருந்து, அவனிடம் வந்து, அவனுடன் வசிப்பேன்'' (யோவா. XIV. 21,23; அதனுடன் 15, 24.). "நான் உங்களுக்குக் கற்பிக்கிற யாவையும் நீங்கள் செய்வீர்களானல், என் சிநேகிதரா யிருப்பீர்கள். நீங்கள் போய் கனி கொடுக்கும்படிக்கும், உங்கள் கனி நிலைத்திருக்கும்படிக் (4) கும் நான் உங்களை ஏற்படுத்தினேன்'' (யோவா. XV. 14, 16). ஆண்டவர் யோவானுக்குச் சொல்லியது: எபேசு சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், "உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். ஆனாலும், நீ ஆதியில் கொண்டிருந்த அன்பை விட்டாய் என்று உன்பேரில் எனக்குக் குறை உண்டு; ஆகையால், மனந் திரும்பி, ஆதியில் செய்த கிரியைகளைச் செய்வாயாக; இல்லாவிட்டால், உன் விளக்குத்தண்டை அதனிடத்தினின்று நீக்கி விடுவேன்'' (வெளி. II. 1, 2, 4, 5.). சிமிர்னசபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன்னுடைய கிரியைகளை நான் அறிந்திருக்கிறேன்'' (வெளி II. 8,9.). பெர்கமு சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன்னுடைய கிரியைகளை அறிந்திருக்கிறேன். மனந் திரும்பு'' (வெளி. II 12, 13, 16). தீயத்தீரா சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன் கிரியைகளையும் உன் அன்பையும், நீ முன்பு செய்த கிரியைகளிலும் பின்பு செய்த கிரியைகள் அதிகமா யிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்'' (வெளி II. 18, 19). சர்தை சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன், நீ உயிருள்ளவனென்று பெயர்கொண்டிருந்தும் செத்தவனுயிருக்கிறாய்

உன் கிரியைகள் தேவனுக்கு முன் நிறைவுள்ளவைகளாக நான் காணவில்லை; மனம் திரும்பு" (வெளி III, 1, 2, 3.). பிலதெல்பியா சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன் கிரியைகளை நான் அறிந்திருக்கிறேன்" (வெளி III. 7, 8). லவதோக்கியா சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்: "உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். மனம் திரும்பு" (வெளி III. 14, 15, 19). "பரலோகத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகக் கேட்டேன்; அது: கர்த்தருக்குள் மரிக்கிறவர்கள் இதுமுதல் பாக்கியவான்கள் என்றெழுது; அவர்களுடைய கிரியைகள் அவர்களோடே கூடப்போம்" (வெளி XIV. 13). "ஜீவபுஸ்தகம் என்னும் வேறொரு புத்தகமும் திறக்கப்பட்டது; அந்த புஸ்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே மரித்தோர் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாக நியாயத் தீர்ப்படைந்தார்கள்" (வெளி XX, 12, 13). "இதோ சீக்கிரமாய் வருகிறேன். அவனவனுடைய கிரியைகளின்படி அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடே கூட வருகிறது" (வெளி-XXII. 12). இதுவரையில் புதியஏற்பாட்டி (5) லிருந்து சொன்னோம்; பழையஏற்பாட்டில் இன்னும் அதிகமிருக்கின்றன; அதிலிருந்து இதைமாத்திரம் சொல்லுகிறேன். "நீ கர்த்தருடைய ஆலயத்தின்வாசலிலே நின்று, அங்கே கூறிச் சொல்லவேண்டிய வசனம் என்னவென்றால், இஸ்ரவேலின் தேவனாகிய சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்: உங்கள் வழியும் உங்கள் கிரியைகளையும் சீர்படுத்துங்கள், கர்த்தரின் ஆலயம், கர்த்தரின் ஆலயம், கர்த்தரின் ஆலயம் இதுவே என்று சொல்லி பொய் வார்த்தைகளை நம்பிக்கொள்ளாதிருங்கள். நீங்கள் திருடி, கொலைசெய்து, விபசாரம்பண்ணி பொய்யாணையிட்டு, பிற்பாடு வந்து, என் நாமம் தரிக்கப்பட்ட இந்த ஆலயத்திலே எனக்கு முன்பாக நின்று இந்த அருவருப்புகளையெல்லாம் செய்வதற்காக விடுதலைப் பெற்றிருக்கிறோமென்று சொல்வீர்களோ? இந்த ஆலயம் உங்கள் பார்வைக்கு கள்ளர் குகையாயிற்றோ? இதோ, நானும் இதைக் கண்டேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்" (எரோமி. VII: 2, 3, 4, 9, 10).

---

**புறம்பான சாதனங்களால் மனிதனானவன் சமய விஷயங்களை நினைக்கவும் இச்சிக்கவும், இவ்விதமாக அவைகளை நம்பவும், அன்பு பாராட்டவும், பலவந்தம் செய்யப்படப்படாதென்பதும், ஆனால் அவன் அதற்குத் தானே வரவேண்டுமென்பதும், சில சமயங்களில் தனக்குத் தானே பலவந்தம் செய்யவேண்டு மென்பதும், தெய்வ பரிபாலனத்தின் ஒரு கட்டளையா யிருக்கிறது.**

129. தெய்வபரிபாலனத்தின் இந்த கட்டளை, முன்வந்த இரண்டிலிருந்து ஏற்படுகின்றது, அவைகளாவன:—மனிதனானவன் சுதந்தரத்திலிருந்து விவேகத்தை அனுசரித்து செயல்பட வேண்டுமென்பதும் இதைக் குறித்து (பி. 71-99) வரையில் பார்க்கவும்; ஆண்டரிவடமிருந்து வந்தபோதிலும், தன்னிடமே யிருந்து, இவ்விதமாகத் தன்னிடமே இருந்து போல இதைச் செய்யவேண்டுமென்பதும், இதைப்பற்றி (பி. 100-128) வரையில் பார்க்கவும். பலவந்தம் செய்யப்படுதல், விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து அல்லாமலும், தன்னிடமே யிருந்து அல்லாமலும், சுதந்தரமல்லாததிலிருந்தும், மற்றொன்றிலிருந்தும் வருகிறபடியினால், தெய்வபரிபாலனத்தின் இந்த சட்டம், முன் கூறிய இரண்டிற்கும் பிந்தி, ஒழுங்கில் வருகிறது. எவனையும், நினைக்க இச்சிக்காததை நினைக்கவும், இச்சிக்க நினைக்காததை இச்சிக்கவும், பலவந்தம் செய்ய முடியாதென்று ஒவ்வொருவனுக்கும் கூடத் தெரியும்; அப்படியே, தான் நம்பாததை நம்பவும், நிச்சயமாய், நம்ப இச்சிக்காததை நம்பவும், தான் அன்பு பாராட்டாததை அன்பு பாராட்டவும், நிச்சயமாய், அன்பு பாராட்ட இச்சிக்காததை அன்பு பாராட்டவும், பலவந்தம் செய்யப்பட முடியாது. ஏனென்றால், மனிதனுடைய ஆன்மா, அல்லது அவனுடைய மனது நினைக்கவும், இச்சிக்கவும், நம்பவும், அன்பு பாராட்டவும், முழு சுவேச்சையிலிருக்கிறது; ஒன்றாக செயல்பட்டாலொழிய ஏற்றுக்கொள்ளப்படாத ஸ்தூல உலகத்திலிருந்து வரும் உட்பெருக்கினால் அல்லாமல்,

மனிதனுடைய ஆன்மா அல்லது மனது பரமார்த்த உலகத்தி லிருப்பதினால் பலவந்தம் செய்யாத அந்த உலகத்திலிருந்து (2) வரும் உட்பெருக்கினால், இந்த சுவேச்சையில் அது இருக்கி றது. ஒரு மனிதனானவன் இந்த பொருள்களை நினைத்து விரும்பு கிறானென்றும், இந்த பொருள்களை நம்பி அன்பு பாராட்டுகிறா னென்றும் சொல்ல துரத்தப்படக்கூடும்; ஆனால், அவைகள் அவனுடைய ஆசைகளுக்கும், அதிலிருந்து அவன் விவேகத்துக் கும் சேர்ந்தவைகளாயில்லாவிட்டாலும், அப்படி அவைகள் ஆகாவிட்டாலும், அவன் அவைகளை நினைத்து, இச்சித்து, நம்பி, அன்பு பாராட்டுகிறதில்லை. ஒரு மனிதனானவன் சமயத்துக்கு அநுகூலமாகப் பேசவும் அதை அநுசரித்து செயல்படவும் கூட, பலவந்தம் செய்யப்படலாம்; ஆனால், எந்த பக்தியிலிருந்தும் அதற்கு அநுகூலமாக நினைக்கவும், எந்த அன்பிலிருந்தும் அதை இச்சிக்கவும், பலவந்தம்செய்ய முடியாது. மேலும், நியாய மும், தெய்வ தீர்ப்பும் பாதுகாக்கப்படுகிற இராஜ்யங்களில் மதத் துக்கு விரோதமாய் பேசாமலிருக்கவும், அதற்கு விரோதமாய் எதையும் செய்யாமலிருக்கவும், ஒருவன் இருக்கவேண்டியிருக் கிறது; அப்படியிருந்தாலும், எவனையும், அதற்கு அநுகூல மாக நினைக்கவும், இச்சிக்கவும், பலவந்தம் செய்யமுடியாது, ஏனென்றால், ஒவ்வொருவனும், நரகத்தோடு அநுசரித்து நினைக் கவும், அதற்கு அநுகூலமாக இச்சிக்கவும், அதனுடன் கூட சுவர்க்கத்துக்கு அநுகூலமாக நினைக்கவும் இச்சிக்கவும் கூட சுவேச்சையி லிருக்கிறான்; ஆனால், விவேகமானது குணத்தில் ஒன்று எப்படி யிருக்கிறதென்றும், மற்றது எப்படி யிருக்கிற தென்றும், எவ்வித கதி ஒன்றுக்குக் காத்திருக்கிறதென்றும், எவ் வித கதி மற்றதற்குக் காத்திருக்கிறதென்றும், கற்பிக்கிறது. விவேகத்திலிருந்து சித்தமானது ஒரு சாய்மானத்தையும் அதின் பிரீதியையும் உடைத்தாயிருக்கிறது. இதிலிருந்து புறம் பானது உள்ளானதை பலவந்தம் செய்யாதென்று விசதமாகும். அப்படியிருந்தாலும், இது சில வேளைகளில் செய்யப்படுகிறது; ஆனால் அது கெடுதி செய்யக்கூடியதென்று, இந்த ஒழுங்கில்காட் டப்படும். I. பலவந்தம் செய்கிறபடியினால், அற்புதங்களாலும் அறி

குறிகளாலும் எவனும் சீர்திருத்தப்படுகிறதில்லை. II பலவந்தம் செய்கிறபடியினால், மனோதோற்றங்களினாலும் இறந்தவர்களுடன் சம்பாஷிக்கிறதாலும் எவனும்சீர்படுத்தப்படுகிறதில்லை. III பலவந்தம் செய்கிறபடியினால், பயமுறுத்துதலினாலும் தண்டனைகளினாலும், எவனும் சீர்படுத்தப்படுகிறதில்லை. IV பகுத்தறிவுடைமைக்கும் சுவேச்சைக்கும் சேராத நிலைமைகளில் எவனும் சீர்படுத்தப்படுகிறதில்லை. V தானே பலவந்தம் செய்துகொள்ளல், பகுத்தறிவுடைமைக்கும் சுவேச்சைக்கும் எதிரானதல்ல. VI புறம்பான மனிதன் உள்ளான மனிதனால் சீர்படுத்தப்படவேண்டும், எதிரிடையானதில் அப்படி முடியாது.

130 I **பலவந்தம் செய்கிறபடியினால் அற்புதங்களாலும், அறிகுறிகளாலும் எவனும் சீர்திருத்தப்படுகிறதில்லை.** மனிதனுக்கு சிந்தனையின் ஓர் உள்ளானதும் ஓர் புறம்பானதும் இருக்கிறதென்பதும், ஆண்டவர் மனிதனிடமிருக்கும் சிந்தனையின் உள்ளானதின் மூலமாய் அதன் புறம்பானதில் சென்று, அதனால் அவனுக்குக் கற்பித்து வழிகாட்டுகிறாரென்பதும், அதனுடன் ஆண்டவரின் தெய்வ பரிபாலனத்திலிருந்துதான் மனிதனானவன் விவேகத்துக்குத் தக்கபடி, சுதந்தரத்திலிருந்து செயல்படவேண்டுமென்பதும் மேலே காண்பிக்கப்பட்டது. அற்புதங்கள் செய்யப்பட்டு, அவைகளினால் மனிதன் நம்பும்படி செய்யப்பட்டால், மனிதனிலிருக்கும் இவைகளெல்லாம் அழிந்துபோகும். அது அப்படியிருக்கிறதென்பது, பின் வருகிறபடி விவேகமாய் அறிந்துகொள்ளலாம்:—அற்புதங்கள் ஒரு நம்பிக்கையை உண்டாக்குகிறதென்பதும், அற்புதங்களைச் செய்கிறவன் சொல்லுவதும் கற்பிப்பதும் உண்மையென்று வல்லமையுடன் போதித்து சம்மதிக்கச் செய்கிறதென்பதும், இவைகளெல்லாம் முதலில் மனிதனுடைய புறம்பான சிந்தனையை பந்தித்துப் பரவசப்படுத்தும் படியாய், அதை ஆக்கிரமிக்கிறதென்பதும் தவிர மறுக்கமுடியாது. ஆனால், மனிதனானவன் விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து செயல்படக் கூடாதபடி, பகுத்தறிவுடைமை என்றும் சுவேச்சையென்றும் சொல்லப்பட்ட தன்னுடைய இரண்டு மனோசக்திகளும்,

இவ்விதமாக இல்லாமல் போக செய்யப்படுகிறான்; அந்த காலத்தில், ஓர் அற்புதத்தினால், தன்னுடைய நம்பிக்கையினால் செய்யப்பட்டதைத் தன்னுடைய பகுத்தறிவுடைமையிலிருந்து, மனிதனானவன் உறுதிப்படுத்தமாத்திரம் விடப்படுதலைத் தவிர, ஆண்டவர் (2) புறம்பானதற்குள் உள்ளானதின்மூலமாய் செல்லமுடியாது. மனிதனுடைய சிந்தனையின் நிலைமையானது, சிந்தனையின் உள்ளானதிலிருந்து, ஒரு பொருளை ஒரு தர்ப்பணத்தில்போல், அவன் சிந்தனையின் புறம்பானதில் பார்க்கிறதாயிருக்கிறது. ஏனென்றால், ஒரு மனிதன் மேற்கூறியபடி, இன்னும் அதிக அந்தரங்கமான சிந்தனையிலிருந்து மாத்திரம் உண்டாகக்கூடிய, தன்னுடைய சிந்தனையைப் பார்க்கக்கூடும்; அவன் அந்தப்பொருளை ஒருதர்ப்பணத்தில் போல் பார்க்கும்போது, அவன் அதை பல மாதிரியாய், திருப்பி, தனக்கு அழகுள்ளதாகத் தோன்றுகிறவரையில்கூட உருவாக்கக்கூடும். உண்மையாயிருந்தால், அந்தப் பொருள், அழகுள்ளதும் உயிருள்ளதுமான ஒரு கன்னிகை அல்லது வாலிபனுக்கு ஒப்பிடலாம்; ஆனால், மனிதனானவன் பலவிதத்தில் திருப்பி, அதை உருவாக்கமுடியாமல், ஓர் அற்புதத்தினால் தூண்டப்பட்ட போதனையிலிருந்து மாத்திரம் அதை நம்பினால், அப்பொழுது, உண்மையாய் அது இருந்தால், உயிரில்லாத மரம் அல்லது கல்லிலிருந்து செதுக்கப்பட்ட ஒரு கன்னிகைக்கும் அல்லது வாலிபனுக்கும் ஒப்பிடப்படலாம். அது மாத்திரம் பார்க்கப்பட்டு, அதற்கு இரு பக்கத்திலும் அல்லது பின்புறத்தில் இருப்பதை பார்க்கப்படாமல் மறைத்து, பார்வைக்கு நேரிலிருக்கிற ஒரு பொருளுக்குக்கூட அது ஒப்பிடப்படலாம். மறுபடியும், அநேக சத்தங்களிலிருந்து, இன்னிசையின் உணர்ச்சியை நீக்குகிற, காதில் இடைவிடாமலிருக்கும் ஓர் சத்தத்துக்கு அது ஒப்பிடப்படலாம். அற்புதங்களால் அவ்வித மானிட மனதில் அவ்வித குருட்டுத்தனமும் செவிடும், உண்டாக்கப்படுகின்றன. ஸ்திரப்படுத்தப்படுவதற்கு முன் கொஞ்சம் பகுத்தறிவுடைமையிலிருந்து பார்க்கப்படாத ஸ்திரப்பட்ட ஒவ்வொரு பொருளோடும் ஒரேமாதிரி அது இருக்கிறது.

131. அற்புதங்களால் தூண்டப்பட்ட விசுவாசம், விசுவாசமாகாமல், நம்பச்செய்தலாயிருக்கிறதென்பது, இதிலிருந்து விசதமாகிறது; ஏனென்றால், அதில், பகுத்தறிவுள்ளது ஒன்றுமில்லை; பரமார்த்தமானது இன்னும் கொஞ்சம் தான். அது உள்ளானது ஒன்றுமில்லாமல் புறம்பானதாக மாத்திரம் இருக்கிறது. ஒருவன் கடவுளை ஒத்துக்கொண்டாலும், வீட்டிலாவது திருச்சபைகளிலாவது ஆராதனைசெய்தாலும், அல்லது நற்காரியங்களை செய்தாலும், அந்த நம்பும்படி செய்த விசுவாசத்தினால், அவன் செய்யும் ஒவ்வொன்றுக்கும் அதேமாதிரிதான். ஓர் அற்புதம் மாத்திரம் ஒத்துக்கொள்ளவும், ஆராதனை செய்யவும், தெய்வ பக்திகொள்ளவும் ஒரு மனிதனை செய்தால், பரமார்த்தமான மனிதனிலிருந்தல்லாமல், ஸ்தூலமான மனிதனிலிருந்து, அவன் செயல்படுகிறான். ஏனென்றால், அற்புதமானது, உள்ளானவழியில் அல்லாமல், புறம்பான வழியில் விசுவாசத்தை மனதில் பதியச் செய்கிறது; இவ்விதமாக சுவர்க்கத்திலிருந்து அல்லாமல், உலகத்திலிருந்து வருகிறது; வேதத்தினாலும், சமய கோட்பாடுகளினாலும், அதிலிருந்து பிரசங்கத்தினாலும் உண்டாகிற உள்ளான வழியிலல்லாமல் வேறு எந்த வழியிலும் மனிதனுக்குள் ஆண்டவர் பிரவேசிக்கிறதில்லை; அற்புதங்கள் இந்த வழியை மூடுகிறபடியினால், இந்த காலத்தில் எந்த அற்புதங்களும் செய்யப்படுகிறதில்லை.

132. அற்புதங்கள் அவ்வித சுபாவமுள்ளவை என்பது, யூதேயா, இஸ்ரவேல் தேசத்து ஜனங்கள் முன்பாக செய்தவைகளிலிருந்து தெளிவாயிருக்கிறது. எகிப்துதேசத்திலும், பின்னிட்டு செங்கடலிலும், மற்றவைகளை அரணியத்திலும், கட்டளையானது பிரசித்தம் பண்ணப்பட்டபோது, முக்கியமாய் சீனாய் மலையின் பேரிலும், அநேக அற்புதங்களை அவர்கள் பார்த்திருந்தாலும். அதற்குப்பின் ஒரு மாசத்திற்குள் மோசே அந்த மலையின் பேரில் தாமதித்து இருந்தபோதே, ஒரு பொன்னால் கன்றுக்குட்டியை தாங்களே செய்து, எகிப்து தேசத்திலிருந்து, அவர்களுக்கு வழிகாட்டிய ஏகோவாவுக்குப் பதிலாக அதை ஏற்றுக்கொண்டார்கள்

(யாத்தி. XXXII. 4,5,6). கானான் தேசத்தில் பின்னிட்டுச்செய்த அற்புதங்களுக்கு அப்புறமும் அப்படியே செய்தார்கள்; அதுவு மல்லாமல், தங்களுக்குக் கட்டளையிடப்பட்ட ஆராதனையிலிருந்து பலமுறை அகன்றார்கள். ஆண்டவர் உலகத்திலிருந்தபோது, அவர் கள் முன்பாக அவர் செய்த அற்புதங்களிலிருந்து அது சமமாய்
(2) வெளியாகிறது; என்றாலும், அவர்கள் அவரை சிலுவையில் அறைந்தார்கள். யூதேயா, இஸ்ரவேல் தேசங்களின் ஜனங்கள் முழுமையும் புறம்பானவர்களாயிருந்தபடியினாலும், ஆராதனையின் புறம்பானவைகளால் திருச்சபையையும், அதன் உள்ளானவை களையும், சாயல் காட்டமாத்திரம் கானான் தேசத்தில் பிரவேசிக்கச் செய்யப்பட்டார்க ளானபடியினாலும், நல்ல மனிதனைப்போல் கெட்டமனிதனும் சாயல் காட்டக்கூடுமாகையினாலும், அற்பு தங்கள் அவர்கள் மத்தியில் செய்யப்பட்டன. ஏனென்றால், புறம் பானவைகள் சடங்கு முறைகளாயிருக்கின்றன, அவைகள் எல் லாம் இந்த ஜனங்களுக்கு பரமார்த்தமானதும், சுவர்க்க சம்பந்த மானவைகளைக் கருதின; ஏரான் என்பவர் பொன்னால் செய்த கன்றுக்குட்டியைச் செய்து, அதை ஆராதனை செய்ய உத்திரவு செய்தபோதிலும், அவர்கூட ஆண்டவரையும் அவருடைய மோட்சகிரியைகளையும், பிரதிநிதியாக தொழில் நடத்தக்கூடும் (யாத்தி. XXXII. 2-5,35). அந்தப்பொருள்களை ஆராதனையின் உள்ளானவைகளால் சாயல்காட்ட அவர்கள் வழிகாட்டப்படக் கூடாதாகையால், அவர்கள் அதற்கு வழிகாட்டப்பட்டு, நிஜமா
(3) கவே அற்புதங்களால், துரத்தப்பட்டு பலாத்காரம் பண்ணப் பட்டார்கள். அவர்களிடத்திலிருந்த முழுவேதமும் அவரைப் பற்றி மாத்திரம் உணர்த்தினாலும், அவர்கள் ஆண்டவரை ஒத்துக் கொள்ளாதபடியினாலும், ஆண்டவரை ஒத்துக்கொள்ளாதவன், ஆராதனையின் எந்த உள்ளானதையும் பெற்றுக்கொள்ளமுடியாத படியினாலும், அவர்கள் ஆராதனையின் உள்ளானதினால், வழிகாட் டப்பட முடியாது என்பது ஏற்பட்டது. ஆனால், ஆண்டவர் தானே வெளிவந்து திருச்சபைகளில் நித்திய கடவுளென்று ஏற் றுக்கொள்ளப்பட்டு ஒத்துக்கொள்ளப்பட்ட பிறகு, அற்புதங்கள் நின்றுவிட்டன.

133. நல்லவர்கள் பேரில் அற்புதங்களின் பயன், துஷ்டர்களின் பேரில் அவைகளின் பலனுக்கு வித்தியாசமானதா யிருக்கிறது. நல்லவர்கள் அற்புதங்களைப் பார்க்க ஆசைப்படுகிறதில்லை; ஆனால் வேதத்தில் குறித்து வைத்திருக்கிற அற்புதங்களை அவர்கள் நம்புகிறார்கள்; ஓர் அற்புதத்தைக் குறித்து ஏதாவது ஒன்றை அவர்கள் கேழ்விப் பட்டால், தங்களுடைய விசுவாசத்தை ஸ்திரப்படுத்துகிற கொஞ்சம் ரூபகாரம் வரையில் மாத்திரம் கவனிக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் அற்புதத்திலிருந்து அல்லாமல் வேதத்திலிருந்தும், இம்மாதிரியாக ஆண்டவரிடமிருந்தும் நினைக்கிறார்கள்; துஷ்டர் விஷயத்தில் அது வேறு விதமாயிருக்கிறது; அவர்கள் நிஜமாக அற்புதங்களால் விசுவாசத்துக்கு துரத்தப்பட்டு பலாத்காரம் செய்யப்படலாம்; நிஜமாகவே ஆராதனைக்கும் தேவ பக்திக்கும் கூட அப்படிச் செய்யலாம். ஆனால் கொஞ்ச காலத்துக்கு தான் அது முடியும்; ஏனென்றால், அவர்களுடைய தீமைகள் உள்ளே மூடப்பட்டிருக்கின்றன, தீமைகளின் மோகங்களும், அதிலிருந்து வரும் இன்பங்களும், அவர்களின் ஆராதனையின் புறம்பானதற்கும் தேவபக்திக்கும் விரோதமாய் இடைவிடாமல் தொழில்படுகின்றன; ஆகையால், தங்கள் சிறையிலிருந்து தப்பித்துக்கொண்டு வெளியே வரும்பொருட்டு, அவர்கள் அற்புதத்தை நினைத்து, கடைசியில் அது ஒரு சூதென்றும் தந்திரமென்றும், அல்லது பிரகுருதியின் தொழிலென்றும் சொல்லி, இவ்விதமாக, தங்களுடைய தீமைகளுக்குத் திரும்புகிறார்கள்; ஆராதனைக்குப் பின் தன்னுடைய தீமைகளுக்குத் திரும்புகிறவன், ஆராதனையின் நன்மைகளையும் உண்மைகளையும் நிந்திக்கிறான்; இறந்த பிறகு, அப்படி அவமதிக்கிறவர்கள் கதி, எல்லாவற்றிலும் அறக்கேடுள்ளது. தங்கள் கடைசி நிலைமை முதல் நிலைமையை விட அதிகக் கெட்டதென்று ஆண்டவர் சொல்லியதினால் கருதப்பட்டவர்கள், இவர்கள் தான் (மத்தே. XII. 43-45). மேலும், வேதத்தில் இருக்கும் அற்புதங்களிலிருந்து நம்பாதவர்கள் முன்பாக அற்புதங்கள் செய்யப்பட்டால், இவ்விதமான ஜனங்கள் விஷயத்தில் அவர்கள் பார்வைக்கு முன்பாக இடைவிடாமல் செய்யப்பட வேண்டும். இத

ணல் தற்காலத்தில் ஏன் அற்புதங்கள் செய்யப்படுகிறதில்லையென் பது விசதமாகும்.

134 (a) II. **பலாத்காரம் செய்வதால், இறந்தவர்களுடன் சம் பாஷிப்பதாலும், அவர்களை சொர்ப்பனதரிசனம் செய்வதாலும், எவனும் சீர்திருத்தப் படுகிறதில்லை.** தரிசனங்கள் தெய்வீகமானதென்றும் பிசாசு சம்பந்தமானதென்றும் இருவிதமானது. தெய்வீக தோற் றங்கள் சுவர்க்கத்திலுள்ளபிரதிநிதிகளால் சம்பவிக்கின்றன; பிசாசு சம்பந்தமானதோற்றங்கள் நரகத்திலுள்ள இந்திர ஜாலங்களால் சம் பவிக்கின்றன. பிரித்தெடுத்த மனதின் ஜாலங்களா யிருக்கிற வீண் தோற்றங்கள் கூட இருக்கின்றன. முன் சொல்லியபடி சுவர்க் கத்திலிருக்கும் பிரதிநிதிகளால் உண்டாக்கப்படுகிற **தெய்வீகக் காட்சிகள்,** தாங்கள் அவைகளிலிருந்தபோது, சரீரத்திலல் லாமல், ஆன்மாவில் இருந்த தீர்க்கதரிசிகள் கண்டவைகளைப் போலிருக்கின்றன; ஏனென்றால், தோற்றங்கள் எவனுக்கும் சாக்கிராவஸ்தையி லிருக்கும்போது, தோன்றமாட்டாது. ஆகை யினல், தீர்க்கதரிசிகளுக்கு அவைகள் தோன்றியபோது, பின் வரும் வாக்கியங்களில் வெளிப்படுகிறபடி, அக்காலத்தில் அவர் கள் ஆன்மாவிலிருந்ததாககூட சொல்லப்படுகிறது: **எசேக்கி யேல்** சொல்லுகிறதாவது: "பின்பு ஆவியானவர் என்னை எடுத்து, என்னை தேவனுடைய ஆவிக்குள்ளான தரிசனத்திலே கல்தே யாவுக்குச் சிறைப்பட்டுப் போனவர்கள் இடத்திலே கொண்டு போய்விட்டார்; அப்பொழுது நான் கண்ட தரிசனம் என்னி லிருந்து எடுபட்டுப் போயிற்று" (எசேக். XI. 1, 24). மறுபடி யும் அவர் சொல்லுகிறார்: "ஆவியானவர் என்னைப் பூமிக்கும் வானத்துக்கும் நடுவே கொண்டுபோய், தேவதரிசனங்களிலே என்னை எருசலேமில் விட்டார்" (எசேக். VIII. 3 லும், பின்வரும் வாக்கியங்களிலும்). கேருபின்களா யிருந்த உயிருள்ள நான்கு பிராணிகளை அவர் பார்த்தபோதும், (அதிகா. Iம் Xம்), அத னுடன் புதிய கோவிலையும், புதிய பூமியையும், தேவதூதன் அவைகளை அளவிடுதலையும் (அதி. XI-XlVIII). அவர் பார்த்த போதும் கூட, அம்மாதிரியே தேவதரிசனத்திலாவது அல்லது

ஆவிக்குள்ளாவது அவர் இருந்தார். அப்பொழுது அவர் தேவ தரிசனத்துக்குள் இருந்ததாகவும் (XI. 2), ஆன்மாவிலிருந்ததாக வும் அவர் சொல்லுகிறார் (XI III. 5.). சகரியா மிருது செடிகளுக் குள்ளே அந்த புருஷன் ஏறிப்போவதைப் பார்த்தபோதும் (சகரியா, 1, 8, முதலியன), நான்கு கொம்புகளைப் பார்த்த போதும் (I, 18), தான் கையில் அளவு நூல் வைத்திருந்த மனித னைப் பார்த்தபோதும் (II. 1 முதலியன) குத்துவிளக்கையும் இரண்டு ஒலிவ மரங்களையும் அவர் பார்த்தபோதும் (IV. 1, முதலி யன), பரக்கிற ஒரு புத்தக சுருளையும் மரக்காலையும் அவர்பார்த்த போதும் (V. 1, 6), இரண்டு பருவதங்களின் நடுவாகப் புறப்பட்டு வருகிற நான்கு இரதங்களையும் குதிரைகளையும் அவர் பார்த்த போதும் (VI, 1. முதலியன), அந்த நிலைமையிலிருந்தார். சமுத் திரத்திலிருந்து நான்கு மிருகங்கள் புறப்பட்டு வருவதைப்பார்த்த போதும் (தானியே. VII. 1. முதலியன), செம்மறி ஆட்டுக்கடா வுக்கும் வெள்ளாட்டு கடாவுக்கும் சண்டை நடப்பதைப் பார்த்த போதும், (VIII. 1 முதலியன), தானியேல் அவ்வித நிலைமையி லிருந்தார். தன்னுடைய ஆவியின் தரிசனத்தில் இவைகளை அவர் பார்த்தாரென்பது சொல்லப்படுகிறது (VII. 1, 2, 7, 13; VIII. 2; X. 1,7,8); காப்பிரேல் என்கிற தேவதூதன் தரிசனத்தில் அவ (3) ரால் பார்க்கப்பட்டதென்பதும் சொல்லப்படுகிறது (IX. 21), யோவான் ஏழு குத்துவிளக்குகளையும், அவைகளின் மத்தியில் மனித குமாரனையும் பார்த்தபோதும் (வெளி. I. 12-16), அவர் சுவர்க்கத்தில் ஒரு சிங்காசனத்தையும், அந்த சிங்காசனத்தின் பேரில் ஒருவர் உட்கார்ந்து கொண்டிருப்பதையும், அதைச் சுற்றி கெருமீன்களான நான்கு பிராணிகளையும் அவர் பார்த்தபோதும் (அத்தி. IV), ஆட்டுக் குட்டியானவரால் ஜீவிய புத்தகம் எடுத்துக் கொண்டு போவதை அவர் பார்த்தபோதும் (அத்தி. V), அந்த புத்தகத்திலிருந்து குதிரைகள் வெளியே போவதைப் பார்த்த போதும் (அத்தி. VI), எக்காளங்களோடு ஏழு தூதர்களைப் பார்த்தபோதும் (அத்தி. VIII), பாதாளக்குழி திறக்கப்பட்டு, வெட்டுக் கிளிகள் அதிலிருந்து வருவதை அவர் பார்த்தபோதும் (அத்தி. IX), வலு சர்ப்பத்தையும், அது மிகாவேலுடன் யுத்தம்

செய்ததையும், அவர் பார்த்தபோதும் (அத்தி. XII), ஒன்று கடலி லிருந்தும், மற்றது பூமியிலிருந்தும் எழுந்த இரண்டு மிருகங்களை யும் அவர் பார்த்தபோதும் (அத்தி. XII), ஒரு ஸ்திரி சிவப்பு நிற முள்ள மிருகத்தின்பேரில் உட்கார்ந்து கொண்டிருப்பதையும் (அத்தி. XVII), பாபிலோன் அழிக்கப்பட்டதையும் அவர் பார்த்த போதும் (அத்தி. XVIII), வெள்ளைக் குதிரையையும், அதின் பேரில்உட்கார்ந்திருந்தவரையும், அவர் பார்த்தபோதும் (அத்தி. XIX), புதிய சுவர்க்கத்தையும், புதிய பூமியையும், சுவர்க்கத்தி லிருந்து பரிசுத்தமான எருசலேம் நகரம் இறங்குவதையும் அவர் பார்த்தபோதும் (அத்தி. XXI), ஜீவ தண்ணீர் உள்ள நதியைப் பார்த்தபோதும் (அத்தி. XXII), வெளிப்படுத்தின விசேஷத்தில் அவர் சொல்லிய இவைபோன்றவைகளை அவர் பார்த்தபோது, யோவான்கூட ஆவியின் தரிசனத்திலிருந்தார். இவைகளை ஆவி யின் தரிசனத்தில் பார்த்தார் என்பது சொல்லப்படுகிறது (I. 10; IV, 2, (4) V. 1; VI. 1; XXI. 1, 2). சரீரத்தின் முன் அல்லாமல், ஆவியின் பார்வைக்கு, சுவர்க்கத்திலிருந்து அவர்கள் முன்பாகத் தோன்றிய தரிசனங்கள் இவ்விதமாயிருந்தன. இவ்விதமானவை கள் தற்காலத்தில் சம்பவிக்கிறதில்லை; அப்படிச் சம்பவித்தால், அவைகள் அறிந்துகொள்ளப்படமாட்டாது; ஏனென்றால், திருச்சபையின் அந்தரங்கங்களையும், சுவர்க்கத்தின் இரகசியங்களை யும் ஒவ்வொன்றும் கருதுகிற பிரதிநிதிகளால் அவைகள் செய் யப்படுகின்றன. மேலும், ஆண்டவர் உலகத்திற்கு வரும்போது, அவைகள் நின்று விடுமென்று தானியேல் என்பவரால் முன் னிட்டே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், தாங்கள் இருக்கும் சித்தப்பிரமையிலிருந்து, தாங்களே பரிசுத்த ஆவி என்று சொல் லிக்கொண்ட வைராக்கிய முள்ளவைகளும் வீண் தோற்றமுள்ள வைகளுமான ஆவிகளால் தூண்டப்பட்டு, பிசாசு சம்பந்தமான தரிசனங்கள் சில சமயங்களில் காண்பிக்கப்பட்டன. ஆனால், இந்த ஆவிகள் இப்பொழுது ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டு, மற்றவர்கள் இருக் கப்பட்ட நரகத்திற்கு வேறான ஒரு நரகத்தில் தள்ளப்பட்டன. வேதத்தில் சொல்லப்பட்ட தரிசனங்களால் தவிர வேறு எந்த் தரிசனங்களாலும் சீர்படுத்தப்படமுடியாதென்று இவைகளி

லெல்லாமிருந்து தெளிவாகிறது. வீண் தோற்றமான காட்சிகள் கூட இருக்கின்றன, ஆனால் பிரிக்கப்பட்ட மனதின் ஜாலங்களாக மாத்திரம் இவைகளிருக்கின்றன.

134 (b). இறந்து போனவர்களுடன் சம்பாஷிப்பதால்கூட எவனும் சீர்படுத்தப்படுகிறதில்லை என்பது, நரகத்திலிருந்த தனவந்தனையும், ஆபிரகாம் மார்பில் சார்ந்திருந்த லாஜரஸ் என்பவரையும் குறித்து, ஆண்டவர் கூறியவைகளால் விசதமாகிறது; ஏனென்றால், தனவந்தன் சொன்னதாவது:—"அப்படியானால், தகப்பனே, எனக்கு ஐந்துபேர் சகோதரருண்டு, அவர்களும் வேதனையுள்ள இந்த இடத்துக்குவராதபடி லாஜரஸ்போய் அவர்களுக்குச் சாட்சியாக அறிவிக்கும் பொருட்டு, நீர் அவனை என் தகப்பன் வீட்டுக்கு அனுப்பும்படி உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்" என்றான். ஆபிரகாம் அவனை நோக்கி: "அவர்களுக்கு மோசேயும், தீர்க்கதரிசிகளும் உண்டு, அவர்களுக்கு அவர்கள் செவிகொடுக்கட்டும்" என்றான். அதற்கு அவன்: "அப்படியல்ல, தகப்பனாகிய ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களிடத்துக்குப்போனால் மனந்திரும்புவார்கள்" என்றான். அதற்கு அவன்: "அவர்கள் மோசேவுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் செவிகொடாவிட்டால், மரித்தோரிலிருந்து ஒருவன் எழுந்து போனாலும், நம்பமாட்டார்களென்று" சொன்னான் (லுக்கா. XVI. 27-31). மேல்கூறியபடி இறந்தவர்களோடு பேசுதல், அற்புதங்களைப்போல் பயனைத் தரும்; அதாவது, மனிதன் கொஞ்சகாலம் ஆராதனை செய்ய ஏவப்பட்டு, பலாத்காரம் செய்யப்படுவான்; ஆனால், இது மனிதனிலிருந்து பகுத்தறிவுடைமையை நீக்குகிறபடியினாலும், அதே காலத்தில், மேல்கூறியபடி அவனுடைய தீமைகளை உள்ளே மூடுகிறபடியினாலும், இந்த மயக்கு அல்லது உள்ளான பந்தம் தளரவிடப்பட்டு, உள்ளிட்ட தீமைகள் தேவதூஷணையோடும் பக்தி இன்மையோடும் வெளியேவருகிறது. ஆனால் இது, ஆவிகள் சமய கோட்பாட்டைப் போதிக்கும்போது மாத்திரம் சம்பவிக்கிறது; அது எந்த நல்ல ஆவியாலும், இன்னும் குறைவாய் எந்த

சுவர்க்கத்து தேவனாலும் எந்த சந்தர்ப்பத்திலும் செய்யப்படுகிறதில்லை.

135. அப்படி இருந்தாலும், ஆவிகளோடு பேசவிடப்படுகிறது; ஆனால் சுவர்க்கத்து தேவர்களோடு அறிதாய் அப்படி விடப்படுகிறது. அது அநேகருக்கு முன் காலங்களில் அருளப்பட்டது; ஆனால், அது சம்பவிக்கும்போது, அவைகள் ஒரு மனிதனோடு அவனுடையதாய், பாஷையில் சில வார்த்தைகள் மட்டும் பேசுகின்றன; ஆனால், ஆண்டவர் அனுமதியின்பேரில் பேசுகிறவர்கள், விவேகத்தை உபயோகிக்கும் சுதந்தரத்தை நீக்குகிறஎதையும், எப்பொழுதும் சொல்லுகிறதில்லை; அதுவுமல்லாமல் அவைகள் கற்பிக்கிறது மில்லை; ஏனென்றால், ஆண்டவர்மாத்திரம் மனிதனுக்குக் கற்பிக்கிறார். ஆனால் பின்னிட்டுசொல்லப்படும் ஞான விளக்கத்தில் வேதத்தின்மூலமாய் நடுப்போக்காய்க் கற்பிக்கிறார். இது அப்படி யிருக்கிறதென்று, சுவானுபவத்தில் தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. நான் ஆவிகளோடும் தேவர்களோடும் அநேக வருஷங்களாகச் சம்பாஷித்திருக்கிறேன். எனக்கு எதையும் சொல்லவும், இன்னும் குறைவாய், வேதத்திலுள்ள எதைப்பற்றியும் அல்லது வேதத்திலிருந்து எந்த சித்தாந்தத்தைப் பற்றியும் எனக்குக்கற்பிக்க எந்த ஆவியும் துணிந்ததில்லை; அதுவுமல்லாமல் எந்த தேவனும் விரும்பவுமில்லை; ஆனால் எனக்கு வெளிப்படுத்தப்பட்ட ஆண்டவர் மாத்திரம், எனக்குக் கற்பித்து, அதற்குப்பின் அடிக்கடி காட்சிகொடுத்து, தேவர்கள் முன்பாக தரிசனம் கொடுக்கிறதுபோல, அவர் இருக்கும் சிவசூரியனைப்போல என் கண்கள் முன்பாக இப்பொழுது தோன்றி எனக்கு ஞான திருஷ்டி கொடுத்தார்.

136 III. **பலவந்தம் செய்கிறபடியினால், அச்சமுறுத்துதலினாலும், தண்டனை செய்வதாலும், எவனும் சீர்திருத்தப்படுகிறதில்லை.** புறம்பானது உள்ளானதை பலவந்தம் செய்ய முடியாதென்றும், ஆனால் அந்தரங்கமானது புறம்பானதை பலவந்தம் செய்யக்

கூடுமென்றும், அதனுடன், அந்தரங்கமானது தானே ஓடிப் போகும்படி புறம்பானதால் பலவந்தம் செய்யப்படுதலை தள்ளு கிறது என்றும்கூட தெரிந்திருக்கிறது. புறம்பான சந்தோஷங் கள், அந்தரங்கமானதைச் சம்மதிக்கவும் அன்புபாராட்டவும் மயக் குகிறது; இயல்புக்கு விரோதமான ஒரு உள்ளானதும், தன்னிஷ்ட மான ஒரு உள்ளானதும் இருக்கின்றனவென்று தெரிந்தும்கூட இருக்கலாம். ஆனால், இவைகளெல்லாம் தெரிந்திருந்தாலும், தெளிவிக்கப்படவேண்டும்; ஏனென்றால், கேள்விப்பட்டபோது, உண்மையான படியினால், அப்படியிருக்கிறதாக உடனே அறிந்து கொள்ளப்படுகிற அநேக விஷயங்களிருக்கின்றன; ஆகையினால் அவைகள் உறுதிப்படுத்தப் படுகின்றன; ஆனால், காரணங்களால் அதேகாலத்தில் அவைகள் உறுதிப்படுத்தப்படாவிட்டால், போலி நியாயங்கள் நிறைந்த தர்க்கங்களால் அசைக்கப்பட்டு, கடைசியில் நிராகரிக்கப்படலாம். ஆகையினால் இப்பொழுது தெரிந்திருப்பதாக சொன்னவைகள் மறுபடியும் எடுத்துக்கொள்ளப்பட்டு, விவேகத் (2)தோடு இசைந்து ரூபகாரம் செய்யப்படவேண்டும். முதலாவது: **புறம்பானது அந்தரங்கமானதை பலவந்தம் செய்ய முடியாது, ஆனால் அந்தரங்கமானது புறம்பானதை பலவந்தம் செய்யக்கூடும்.** நம்பவும் அன்பு பாராட்டவும் யார் பலவந்தம் செய்யப் படலாம்? ஒருவன் ஒரு விஷயம் ஒரு மாதிரி இல்லையென்று நினைக்கும்போது, அம் மாதிரி அது இருக்கிறதாக நினைப்பதைவிட, நம்பும்படி அவனை இன்னமும் பலவந்தம் செய்யப்பட முடியாது; ஒருவன் இச்சிக் காததை இச்சிக்கும்படி பலவந்தம் செய்வதற்கு அதிகமாய் அன்பு பாராட்ட பலவந்தம் செய்யப்பட முடியாது: விசுவாசம் கூட சிந்தனையைச் சேர்ந்தது, அன்பு சித்தத்தைச் சேர்ந்தது; ஆனால் அந்தரங்கமானது புறம்பானதினால், இராஜ்யத்தின் சட் டங்களுக்கும், வாழ்வின் நீதி நெறிகளுக்கும், திருச்சபையின் தூய் மைக்கும், விரோதமாக தீங்காய்ப் பேசாதபடி பலவந்தம் செய் யப்படலாம்; இவ்வளவுதூரம் தான் அந்தரங்கமானது அச்சமுறுத் தலினாலும் தண்டனையினாலும் பலவந்தம் செய்யப்படலாம்; அது கூட பலவந்தம் செய்யப்படுகிறது, அது அப்படி பலவந்தம் செய்யப்படவேண்டியது தான். ஆயினும் இந்த உள்ளானது, தகு

தியாய் மனுஷத் தன்மையுடையதாயிருக்கிற உள்ளானதல்ல; ஆனால், அது மனிதன், பலவந்தம் கூட செய்யப்படக்கூடிய மிருகங்களுடன் பொதுவாய் உடைத்தாயிருக்கும் உள்ளானதாயிருக்கிறது; மானிட உள்ளானது, மிருக உள்ளானதைவிட உயரமான ஆசனத்தை உடைத்தாயிருக்கிறது. இவ்விடத்தில் கருதியது பல (3) வந்தம் செய்யப்பட முடியாத மானிட அந்தரங்கத்தை தான். இரண்டாவது: உள்ளானது தானே திரும்பிப் போகும்படி புறம்பானதினால் பலவந்தம் செய்யப்படுதலைத் தள்ளுகிறது. அந்தரங்கமானது சுதந்தரத்தில் இருக்க விரும்புகிறதினாலும், சுதந்தரத்தின் பேரில் அன்பு பாராட்டுகிறதினாலும், இம்மாதிரி இருக்கிறது; ஏனென்றால், சுதந்தரமானது, மேல் காண்பித்தபடி, மனிதனுடைய அன்பு அல்லது உயிருக்குச் சேர்ந்திருக்கிறது. ஆகையினால், சுதந்தரமானது பலவந்தம் செய்யப்படுவதாக உணரும்போது, தனக்குள்ளேயே போல தானே இழுத்துக்கொண்டு, தானே திரும்பிப்போய், பலாத்காரத்தை தன் விரோதியாகப் பார்க்கிறது; ஏனென்றால், மனிதனுடைய உயிரை, உண்டாக்குகிற அன்பானது, கோபம் மூட்டப்பட்டு, இந்த வழியில், தான் தன்னுடைய சொந்தமல்ல வென்றும், அதனால் தான் தனக்காக ஜீவிக்கவில்லை யென்றும் மனிதனை நினைக்கச் செய்கிறது. மனிதனுடைய அந்தரங்கமானது, அவ்விதமானதென்பது, மனிதனானவன் விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து செயல்பட வேண்டுமென்கிற
(4) ஆண்டவருடைய தெய்வபரிபாலன சட்டத்திலிருந்து ஏற்படுகிறது. இதனால், மனிதர்களை பயமுறுத்தலினாலும், தண்டனைகளாலும் தெய்வ ஆராதனை செய்ய பலவந்தம் செய்தல் தீங்கானதென்று வெளிப்படையா யிருக்கிறது. ஆனால் சமயத்தை அங்கீகரிக்கப் பலவந்தம் செய்யப்பட தாங்களே இடங்கொடுக்கிற சிலரும் இருக்கிறார்கள், அப்படி சகிக்காத சிலருமிருக்கிறார்கள். சமயத்துக்குச் சேர பலவந்தம் செய்யப்பட இடங்கொடுக்கிறவர்கள், பாப்புவின் அதிகாரத்துக்குள்ளிருக்கிற அநேகரா யிருக்கிறார்கள்; ஆனால், தங்கள் ஆராதனையில் அந்தரங்கமானது ஒன்றுமில்லாமல், எல்லாம் புறம்பானதா யிருக்கிறவர்களிடத்தில் இது சம்பவிக்கிறது. பலவந்தம் செய்யப்பட தாங்களே இடங்கொடுக்

காதவர்கள், ஆங்கிலேய வமிசத்தில் அநேகரா யிருக்கிறார்கள்; இதனால் அவர்கள் ஆராதனையில் ஒரு அந்தரங்கமானது இருக்கிறதென்று ஏற்படுகிறது; புறம்பானதிலிருப்பது, உள்ளானதிலிருந்து உண்டாகிறது. சூக்குமவெளிச்சத்தில், சமய விஷயத்தில், அவைகளின் உள்ளுக்குள்ளானவைகள், பிரகாசமான மேகங்களைப் போல் தோன்றுகின்றன; ஆனால் சுவர்க்கத்து வெளிச்சத்தில், முன் சொன்னதின் உள்ளுக்குள்ளானவைகள் சமய நோக்கத்தில் இருண்ட மேகங்களைப் போலிருக்கின்றன. இந்த இரண்டு தோற்றங்களும் சூக்கும உலகத்தில் பார்க்கும்படி காண்பிக்கப்படுகின்றன; இஷ்டப்படுகிற எவனும் இறந்த பிறகு அந்த உலகத்திற்கு வரும்போது அவைகளைப் பார்ப்பான். மேலும், பலவந்தம் செய்யப்பட்ட ஆராதனை தீமைகளை உள்ளேபோட்டு மூடுகின்றன; அப்பொழுது அவைகள், சுவாலைகளாக வெளிப்படுகிறவரையில், இடைவிடாமல் நெருப்பு மூட்டி பரவுகிற சாம்பலின் கீழ் இருக்கும், மரத்திலிருக்கும் நெருப்புபோல் மறைந்து கிடக்கின்றன; ஆனால் பலவந்தத்தினால் அல்லாமல், தானாயுண்டான ஆராதனை தீமைகளை உள்ளேபோட்டு மூடுகிறதில்லை; ஆகையினால், அவைகள் உடனே சுவாலித்து போய் விடுகிற நெருப்புகளைப்போல் இருக்கின்றன. இதனால், அந்தரங்கமானது, தானே திரும்பிப் போகும்படி பலவந்தத்தை அப்படித் தள்ளுகிறதென்று விசதமாகிறது. அந்தரங்கமானது புறம்பானதை பலவந்தம் செய்யலாம்; ஏனென்றால், அந்தரங்கமானது ஒரு எஜமானனைப்போலவும், (5) புறம்பானது ஒருஊழியனைப் போலவும் இருக்கின்றது. மூன்றாவது **புறம்பான சந்தோஷங்கள் உள்ளானதை சம்மதிக்கவும், அன்பு பாராட்டவும் கூட மயக்குகின்றன.** இன்பங்கள் புத்தியைச் சேர்ந்த இன்பங்களென்றும் சித்தத்தைச்சேர்ந்த இன்பங்களென்றும், இருவகைகளா யிருக்கின்றன; புத்தியைச் சேர்ந்த இன்பங்கள், ஞானத்தின் இன்பங்களாய் கூட யிருக்கின்றன, சித்தத்தைச் சேர்ந்த இன்பங்கள் அன்பின் இன்பங்களாய் கூட யிருக்கின்றன; ஏனென்றால், ஞானம் புத்தியைச்சேர்ந்தது, அன்பு சித்தத்தைச் சேர்ந்தது. இப்படி யிருக்கையில் புறம்பான இன்பங்களாயிருக்கிற சரீரத்தினுடையவும், அதன் பஞ்சேந்திரியங்க

ளுடையவும்.இன்பங்கள் புத்திக்கும் சித்தத்துக்கும் சேர்ந்த அந்தரங்கமான இன்பங்களோடு ஒன்ருக செயல்படுகிறபடியினுல், அந்தரங்கமானது தானே திரும்பிப் போகும்படி புறம்பானதால் பலவந்தம் செய்யப்படுதலே தள்ளுகிறதுபோல், அதனிடத்தில் தானே போகக்கூட புறம்பானதிலிருக்கும் இன்பத்தை, அது தயவுடன் பார்க்கிறது; இவ்விதமாக, புத்தி சம்பந்தப் பட்டவரையில் சம்மதிக்கவும், சித்தம் சம்பந்தப்பட்டவரையில் அன்பும் வருகின்
(6) றன. சூக்கும உலகத்திலிருக்கும் எல்லா குழந்தைகளும், ஆண்டவரால் தேவதா ஞானத்திலும், அதனுல், சுவர்க்க அன்பிலும், இன்பங்கள் மூலமாகவும், இதமான பொருள்களாலும் செலுத்தப்படுகிருர்கள்; முதலில், தங்கள் வீடுகளில் அழகுள்ளதாயுள்ள பொருள்களாலும், தோட்டங்களில் இதமானவைகளாலும், பிறகு, அவர்கள் மனங்களின் உள்ளுக்குள்ளானவைகளுக்கு சந்தோஷம் உண்டாக்குகிற சூக்கும பொருள்களின் அறிகுறிகளாலும், கடைசியில், ஞானத்தின் உண்மைகளாலும், அவ்விதமாக அன்பின் நன்மைகளாலும் செலுத்தப்படுகிருர்கள்; இன்பங்களால் அவைகளின் ஒழுங்கில் இடைவிடாமல் இவ்விதமாய் செலுத்தப்படுகிருர்கள்; முதலில் புத்தியினுடையவும் அதன் ஞானத்தினுடையவும், அன்பின் இன்பங்களாலும், கடைசியில், இன்பத்தினுல் பிரவேசித்த மற்ற எல்லா பொருள்களும் கீழே வைக்கப்படுகிற, தங்கள் உயிரின் அன்பாகிற, சித்தத்தைச் சேர்ந்த அன்பின்
(7) இன்பங்களாலும், செலுத்தப்படுகிருர்கள். புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் ஒவ்வொன்றும், உள்ளானதால் உருவாக்கப்படுவதற்கு முன், புறம்பானதால் உருவாக்கப்பட வேண்டுமாகையால், இது சம்பவிக்கிறது; ஏனென்ருல், புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் ஒவ்வொன்றும், சரீரத்தின் பஞ்சேந்திரியங்கள் மூலமாய், முக்கியமாய் பார்வை மூலமாயும் கேழ்வி மூலமாய் முதலில் உருவாக்கப்படுகின்றன; ஆனுல், முதல் புத்தியும், முதல் சித்தமும் உண்டாக்கப்படும்போது, அக்காலத்தில் சிந்தனையின் உள்ளானது, இவைகளை அதன் சிந்தனைகளின் புறம்பானவைகளைப் போல் மதித்து, அவைகளோடு தானே சேர்ந்து கொள்ளுகிறது அல்லது அவைகளிலிருந்து பிரிந்துகொள்ளு

கிறது; அவைகள் மனோரஞ்சிதமாயிருந்தால் அவைகளோடு தானே சேருகிறது, அப்படியில்லாவிட்டால், அவைகளிலிருந்து
(8) தானே பிரிந்துபோகிறது. ஆனால், புத்தியின் உள்ளானது சித்தத்தின் உள்ளானதுடன் தானே சேராமல், சித்தத்தின் உள்ளானது, புத்தியின் உள்ளானதுடன் தானே சேர்ந்துகொண்டு, அந்த ஐக்கியத்தை பாஸ்பரமாக யிருக்கச் செய்கிறதென்று, நன்றாய் தெரிந்திருக்கப்படவேண்டும்; ஆனால், இது சித்தத்தின் உள்ளானதால் செய்யப்படுகிறது, புத்தியின் உள்ளானதால் கொஞ்சம்கூட செய்யப்படுகிறதில்லை. இதனால் தான், மனிதன் விசுவாசத்தினால் மட்டும் சீர்திருத்தப்படாமல், தனக்கே ஒரு விசுவாசத்தை உண்டாக்கிக் கொள்ளுகிற சித்தத்தின் அன்பினால் சீர்படுத்தப்படக்
(9) கூடும். நான்காவது, **கட்டாயத்துக்கு உள்பட்ட ஒரு உள்ளானதும், தன்னிஷ்டமான ஒரு உள்ளானதும் இருக்கின்றன.** புறம்பான ஆராதனையில் மட்டும் இருக்கிறவர்களிடத்திலும், எந்த ஆராதனையிலும் யில்லாதவர்களிடத்திலும் பலவந்தம் செய்யப்பட்ட உள்ளானது இருக்கிறது; ஏனென்றால், புறம்பானது செய்ய பலவந்தம் செய்யப்பட்டதை அவர்களுடைய உள்ளானது நினைத்து இச்சிக்க வேண்டும். உயிரோடிருக்கிற மனிதர்களையும் இறந்தவர்களையும் ஆராதிக்கிறவர்களும், அதிலிருந்து விக்கிரகங்களைத்தொழுது, அற்புதங்களை நம்புகிறவர்களும் இவர்கள் தான்; அதேகாலத்தில் புறம்பானதாயிருக்கிறதைவிட அவர்களிடத்தில் உள்ளானது ஒன்றுமில்லை. ஆனால், ஆராதனையின் உள்ளானதில் இருக்கப் பட்டவர்களிடத்தில், பலவந்தம் செய்யப்பட்ட ஒரு உள்ளானது யிருக்கிறது; ஒன்று பயத்திலிருந்தும், மற்றது அன்பிலிருந்தும்வருகிறது. பயத்தினால் கட்டாயப்படுத்தப் பட்ட உள்ளானது, நரகம் அல்லது அதன் நெருப்பின் வேதனைக்குப் பயந்து ஆராதனையிலிருக்கப் பட்டவர்களிடத்தி லிருக்கிறது; ஆனால் இந்த உள்ளானது, முன்னே சொல்லிய சிந்தனையின் உள்ளானதல்ல; ஆனால், சிந்தனைக்குச் சேர்ந்திருப்பதால் இங்கே உள்ளானது என்று சொல்லப் படுகிற சிந்தனையின் புறம்பானதா யிருக்கிறது. முன்னே கூறிய சிந்தனையின் உள்ளானது, எந்த பயத்தினாலும் பலவந்தம் செய்யப்பட முடியாது; ஆனால் அது அன்பினாலும், அதை இழந்து

போவோம் என்கிற பயத்தினுலும் பலவந்தம் செய்யப்படலாம். உண்மையான அருந்தத்தில் கடவுளிடத்து பயம் என்பது வேறென்று மில்லை. அன்பினுலும், அதை இழந்து விடுவோம் என்கிற பயத்தினுலும் பலவந்தம் செய்யப்படுதல், தானே பலவந்தம் செய்தலா யிருக்கிறது; தானே பலவந்தம் செய்துக்கொள்ளல், சுதந்தரத்துக்கும் பகுத்தறிவுடைமைக்கும் எதிரிடையா யில்லை என்பது, கீழே வருவதலால் அறிந்து கொள்ளப்படும்.

137. இதிலிருந்து பலவந்தம் செய்யப்பட்ட ஆராதனையினுடையவும், பலவந்தம் செய்யப்படாத ஆராதனையினுடையவும் குணம் வெளிப்படையாகலாம். பலவந்தம் செய்யப்பட்ட ஆராதனை, சரீரமுள்ளதாயும், உயிரில்லாததாயும், தெளிவற்றதாயும், சஞ்சலமானதாயும் இருக்கிறது; மனதுக்கு அல்லாமல், அது சரீரத்துக்குச் சேர்ந்தபடியினுல், அது தேகமுள்ளதா யிருக்கிறது; அதில் உயிரில்லாத படியினுல், அது உயிரில்லாததா யிருக்கிறது; அதில் புத்தியில்லாத படியினுல், அது தெளிவற்றதாயிருக்கிறது; சுவர்க்கத்து ஆனந்தம் அதில் இல்லாதபடியினுல், சஞ்சலமானதா யிருக்கிறது. ஆனுல், பலவந்தம் செய்யப்படாத ஆராதனை உண்மையானதா யிருக்கும்போது, ஞானமுள்ளதாயும், உயிருள்ளதாயும், தெளிவானதாயும், சந்தோஷமுள்ளதாயு மிருக்கிறது; அதில் ஆண்டவரிடமிருந்து வரும் ஆவி யிருப்பதினுல், ஞானமுள்ளதாயும், அதில் ஆண்டவரிட மிருந்தும் உயிரிருப்பதினுல், உயிருள்ளதா யிருக்கிறது; அதில் ஆண்டவரிடமிருந்து வரும் ஞானமிருப்பதினுல், தெளிவானதா யிருக்கிறது; அதில் ஆண்டவரிடமிருந்து வரும் சுவர்க்கமிருப்பதினுல், ஆனந்தமானதா யிருக்கிறது.

138. IV. **பகுத்தறிவுடைமைக்கும் சுதந்தரத்துக்கும் சேராத நிலைமைகளில் எவனும் சீர்படுத்தப் படுகிறதில்லை.** விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செய்வதைவிட வேறு யாதொன்றும் மனிதனுக்குத் தனதாக்கப் படுகிறதில்லை யென்று மேலே காண்பிக்கப் பட்டது. சுதந்தரம் சித்தத்துக்குச் சேர்ந்தபடியினு

னும், விவேகம் புத்திக்குச் சேர்ந்தபடியினுலும், இப்படி ஏற்படு கிறது; விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து மனிதன் செயல்படும்போது, அப்பொழுது அவன் சித்தத்திலிருந்து தன்னுடைய புத்தியினுல் செயல்படுகிருன்; இரண்டின் ஐக்கியத்தில் செய்யப்பட்ட எதுவும், தனதாக்கப்படுகிறது. இப்படி யிருக்கையில், மனிதன் நித்தியகால வாழ்வும், அல்லது சுவர்க்கத்து வாழ்வும் உடைத்தாயிருக்க, சீர்படுத்தப்பட்டு குணப்படுத்தப்பட வேண்டுமென்று ஆண்டவர் இச்சிக்கிற படியினுலும், நன்மையானது ஒருவனுடைய சித்தத்திற்கு, அவனுடையதைப்போலிருக்கவும், உண்மையானது அவனுடைய புத்திக்கு அவனுடையது போலிருக்கவும் உரித்தாக்கப்பட்டாலும் தவிர, எவனும் சீர்திருத்தப்பட்டு குணப்படுத்தப்பட முடியாதாகையாலும், புத்தியின் விவேகத்துக்கு தக்கபடி, சித்தத்தின் சுதந்திரத்திலிருந்து செய்யப்பட்டதைத் தவிர, எதுவும் எவனுக்கும் உரித்தாக்கப்பட முடியாத படியினுலும், சுதந்தர மின்மையினுடையவும், பகுத்தறிவின்மையினுடையவும் நிலைமைகளில் எவனும் சீர்படுத்தப் படுகிறதில்லை என்பது ஏற்படுகிறது. இந்த நிலைமைகள் பலவா யிருக்கின்றன. ஆனல், அவைகளை பொதுவாக, பின் வருபவைகளுக்கு சுட்டிக் காட்டப்படலாம், அவையாவன: பயத்தையும், அதிர்ஷ்ட வீனத்தையும், புத்திமாராட்டத்தையும், சரீர ரோகத்தையும், மூடத்தனத்தையும், புத்தியின் அறிவீனத்தையும் சேர்ந்த நிலைமைகள். ஆனல் ஒவ்வொரு நிலைமையைக் குறித்தும் திட்டமாக சிலது சொல்லப்பட வேண்டும்.

139. பயமானது சுதந்தரத்தையும் விவேகத்தையும் அல்லது சுவேச்சையையும் பகுத்தறிவுடைமையையும் நீக்குகிறபடியினுல், பயந்த நிலைமையில் எவனும் சீர்படுத்தப்படுகிறதில்லை; ஏனென்றால், அன்பானது மனதின் உள்ளானவைகளை திறக்கிறது, ஆனல் பயம் அவைகளை மூடுகிறது; அவைகள் மூடப்பட்டபோது, மனிதன் கொஞ்சம்தான் நினைக்கிருன், அதுகூட ஆன்மா அல்லது பஞ்சேந்திரியங்களுக்குத்தானே அப்பொழுது

தோன்றுவதை மட்டும் நினைக்கிறுன், ஆன்மாவின்மேல் விழுகிற
(2) எல்லா பயங்கள் விஷயத்திலும் அப்படியேதானிருக்கிறது.
மனிதனுக்கு சிந்தனையின் ஓர் அந்தரங்கமானதும் புறம்பானது
மிருக்கிறதென்று மேலே காண்பிக்கப்பட்டது: பயமானது சிந்
தனையின் உள்ளானதின்மேல் எந்த விதத்திலும் விழாது; அதன்
உயிரின் அன்பிலிருப்பதினுல், இது எப்பொழுதும் சுதந்தரத்தி
லிருக்கிறது; ஆனுல், அது சிந்தனையின் புறம்பானதற்குள் பிர
வேசிக்கக்கூடும், அது அப்படி செய்யும்போது, சிந்தனையின்
உள்ளானது மூடப்படுகிறது; இது மூடப்பட்டபோது, மனித
னுனவன் சுதந்திரத்திலிருந்து தன் விவேகத்துக்குத் தக்கபடி
(3)செயல்படமுடியாது, ஆகையினுல் அவன் சீர்படுத்தப்படவும்
முடியாது. சிந்தனையின் புறம்பானதின்மேல் விழுந்து உள்ளா
னதை மூடுகிறபயமானது, முக்கியமாய் கீர்த்தி அல்லது செல்
வத்தை இழந்துவிடுவோம் என்கிற பயமாயிருக்கிறது. ஆனுல்
தேசாசாரத்தினுடையவும், புறம்பான திருச்சபையினுடையவும்
தண்டனைகளின்பயம், சிந்தனையின் உள்ளானதை மூடுகிறதில்லை;
ஏனென்ருல், விரோதமாய் நினைக்கிறவர்களுக்கல்லாமல், இராச்
சியத்தின் தேசாசார உரிமைகளுக்கு விரோதமாயும், திருச்சபை
யின் பரமார்த்தவிஷயங்களுக்கு விரோதமாயும் பேசி செயல்படு
கிறவர்களுக்கு, இந்த சட்டங்கள் தண்டங்களை மாத்திரம் ஏற்
படுத்துகின்றன. ஆனுல், அவைகளுக்கு விரோதமாய் நினைக்கிற
வர்களுக்கு அப்படி ஒன்றுமில்லை. நரகத்துக்குறிய தண்டனைகளின்
(4)பயம், நிஜமாகவே, சிந்தனையின் புறம்பானதிற்குள் பிரவேசிக்
கிறது. ஆனுல், சில சணங்கள், மணிகள் அல்லது நாட்கள் மட்டும்
நிற்கிறது; தன் ஆவிக்கும், உயிரின் அன்புக்கும் தகுதியாய்
சேர்ந்ததும், இருதயத்தின் சிந்தனை என்று சொல்லப்படுகிற
சிந்தனையின் உள்ளானதிலிருந்துவருகிற அதன் சுதந்தரத்
(5) துக்கு அது சீக்கிரம் திரும்ப அனுப்பப்படுகிறது. ஆனுல்,
கீர்த்தியையும் செல்வத்தையும் இழந்துவிடுவோம் என்கிறபயம்,
மனிதனுடைய சிந்தனையின் புறம்பானதற்குள் பிரவேசிக்கிறது;
அது அப்படிச் செய்யும்போது, சிந்தனையின் உள்ளானதை
மேலேயிருந்து சுவர்க்கத்திலிருந்துவரும் உட்பெருக்குக்கு விரோ

தமாய் மூடி, மனிதன் சீர்படுத்தப்படக்கூடுமென்பதை அசாத்திய மாக செய்துவிடுகிறது. ஒவ்வொரு மனிதனுடைய உயிரின் அன்பு பிறந்தது முதல், தன்னையும் உலகத்தையும் நேசித்தலாயிருக்கிற தென்பது, இதற்குக் காரணமாயிருக்கிறது; தன்னையே நேசித்தல் கீர்த்தியை நேசித்தலோடு ஒன்றுகிறது, உலகத்தை நேசித்தல், லாபத்தை நேசித்தலோடு ஒன்றுகிறது. ஆகையினால், மனிதனுக்கு கீர்த்தி அல்லது செல்வம் இருக்கும்போது, அவைகளை இழந்து விடுவோம் என்கிறபயத்தினால், கீர்த்திக்கும் லாபத்துக்கும் உப யோகப்படும்படியான சாதனங்களை தன்னுடனேயே பலப்படுத் துகிறான்; அவைகள் தேசாசாரமானதாயும் அல்லது திருச் சபைக்கு அடுத்ததாகவும் இருக்கலாம். எவ்விதமாயினும் அதிகா ரத்துக்கு சாதனங்களாகயிருக்கலாம். இன்னும் கீர்த்தியை யும் செல்வத்தையும் அடையாதவன் அவைகள் வேண்டுமென்று அவாகொண்டால், அம்மாதிரியே செய்கிறான்; ஆனால், அவை
(6)களின் பொருட்டு, பெயர் போய்விடுமென்கிற பயத்திலிருந்து அதை அவன் செய்கிறான். இந்தப்பயமானது சிந்தனையின் புறம் பானதற்குள் பிரவேசித்து, உள்ளானதை மேலேயிருந்து, சுவர்க் கத்திலிருந்துவரும் உட்பெருக்குக்கு விரோதமாய் மூடுகிற தென்று சொல்லப்படுகிறது; அது புறம்பானதுடன் முழுமையும் ஒன்றுகிறபோது, இது மூடப்படுகிறதாக சொல்லப்படுகிறது; ஏனென்றால், அது தன்னிலேயேயில்லாமல், புறம்பானதில் இருக்
(7)கிறது. ஆனால் தன்னையும் உலகத்தையும் நேசித்தல் நரகத் துக்கு அடுத்த அன்புகளாயும், எல்லா தீமைகளுக்கும் உற்பத்தி ஸ்தானங்களாயுமிருப்பதினால், அந்த அன்புகள் உயிரின் அன்பு களாக இருக்கிறவர்கள் அல்லது அவைகள் தங்களில் அரசாட்சி செய்கிறவர்களிடத்தில், சிந்தனையின் அந்தரங்கமானது தன்னில் தானே என்ன குணமுடையதென்று அதாவது எல்லாவித தீமை யின் மோகங்களால் அது நிறைந்திருக்கிறது என்று தெளிவா
(8)யிருக்கிறது. கண்ணியத்தையும் ஐசுவரியத்தையும் இழந்து விடுவோம் என்கிற பயத்திலிருந்து தாங்கள் இருக்கும் மதத்தைக் குறித்து பலத்த நம்பிக்கையிலிருக்கிறவர்களுக்கும், முக்கியமாய் தாங்கள் தெய்வங்கள் போலும், அதே காலத்தில் நரகத்தில் அர

சனுகிய புழுவைப்போலும் வணங்கப்பட வேண்டுமென்கிற கருத்தைக்கொள்ளுகிற மதத்திலும் பலத்த நம்பிக்கையிலிருப்பவர்களுக்கும், இது தெரிந்திருக்கவில்லை. ஆன்மாவின் இரட்சிப்பின் பொருட்டு வைராக்கிய சுவாலையில்போல், இவர்கள் இருக்கக்கூடும், அப்படியிருந்தாலும் நரகத்து நெருப்பிலிருந்து அப்படி நேரிடுகிறது. உற்பத்தியில் சுவர்க்கத்தை அடுத்ததாயிருக்கிற பகுத்தறிவுடைமையையும் சுவேச்சையையும் இந்த பயமானது முக்கியமாய் நீக்கிவிடுகிறபடியினால், அது, மனிதன் சீர்படுதலை தடுக்க வழியில் நிற்பதாகத் தெளிவாயிருக்கிறது.

140. பலாத்கார நிலைமையாயிருக்கிறபடியினால், அதிர்ஷ்டவீன நிலைமையிலிருக்கும்போது மாத்திரம் கடவுளை நினைத்து அவருடைய உதவியை கெஞ்சினால் எவனும் அந்நிலைமையில் சீர்படுத்தப்படுகிறதில்லை. ஆகையினால், சுதந்தர நிலைமைக்கு அவன் வரும்போது, கடவுளைக்குறித்து அவன் கொஞ்சம் அல்லது முழுமையும் நினைக்காத தன்னிட முந்திய நிலைமைக்கு திரும்புகிறான். சுதந்தரத்தின் முந்திய நிலைமையில் கடவுளுக்கு பயப்பட்டவர்கள் விஷயத்தில் அது வேறு விதமாயிருக்கிறது. கடவுளிடத்து பயம் என்பதால், அவருக்குக்கோபம் மூட்ட பயப்படுதலென்று கருதப்படுகிறது; அவருக்கு கோபமூட்டுதலென்பது பாவம் செய்தலாயிருக்கிறது; இது பயத்தினால் அல்லாமல், அன்பிலிருந்து உண்டாகிறது; ஏனென்றால், மற்றவனை நேசிக்கிற ஒருவன், அவனுக்குத் தீங்கு செய்யப் பயப்படுகிறதில்லையா? அவன் எவ்வளவு அதிகமாய் நேசிக்கிறானோ அவ்வளவு அதிகமாய் பயப்படுகிறதில்லையா? இந்த பயமில்லாமல், அன்பானது ருசியற்றதாயும், புறக்கோலமானதாயுமிருக்கிறது; சித்தத்தைச் சேராமல் சிந்தனையைமட்டும் சேர்ந்ததாயிருக்கிறது. அதிர்ஷ்டவீன நிலைமைகள் என்பதால், யுத்தங்களிலும், இருவர் போராட்டங்களிலும், கப்பற் சேதங்களிலும், வீழ்ச்சிகளிலும், நெருப்புகளிலும், நேரிடப்போகிற அல்லது எதிர்பாராத ஐசுவரிய நஷ்டத்திலும், உத்தியோகம் இழந்துவிடுவதிலும், இவ்விதமாக மானங்கள் போவதிலும், இதைப்போன்ற மற்றவைகளிலும் போல் அபாயங்களி

லிருந்து உண்டாகும் துணிவுகளின் நிலைமைகள் கருதப்படுகின்றன. இப்பேர்ப்பட்ட சமயங்களில் மட்டும் கடவுளை நினைத்தல், கடவுளிடமிருந்து வருவதல்லாமல், தன்னிடமேயிருந்தே வருவதாயிருக்கிறது; ஏனென்றால், அக்காலத்தில் மனதானது, சரீரத்தில் கைதிசெய்யப்பட்டதுபோலிருந்து, இவ்விதமாக சுவேச்சையிலும், ஆகையால், அது அல்லாமல் எவ்வித் சீர்படுதலும் உண்டாகாத பகுத்தறிவுடைமையிலும் இல்லாமல் இருக்கிறது.

141. **சோஸ்தமில்லாத மனிதன்** நிலைமையில், எவனும் சீர்படுத்தப்படுகிறதில்லை; ஏனென்றால், இது பகுத்தறிவுடைமையையும், அதனால் விவேகத்தை அனுசரித்து செயல்படுதலையும் சுதந்தரத்தையும் நீக்குகின்றது. ஏனென்றால், மனது ஆரோக்கியமாயல்லாமல், நோய்கொண்டதாயிருக்கிறது; ஆரோக்கியமான மனது பகுத்தறிவுள்ளது, ஆனால், நோய்கொண்டமனது அப்படியில்லை. வியாகூலமும், பொய்யான மனசாட்சிகளும், பலவித பிரமைகளும், அதிர்ஷ்ட வீனத்தினால் உண்டாகும் மனவருத்தங்களும், அவைகள் அப்படியில்லாவிட்டாலும், சோதனைகளாக சில வேளைகளில் மதிக்கப்படுகிற சரீர நோயினால் உண்டாகும் சஞ்சலங்களும் மனவருத்தங்களும், அவ்விதமானதாரு மாறான நிலைமைகளாயிருக்கின்றன; ஏனென்றால், உண்மையான சோதனைகள் பரமார்த்த விஷயங்களை தங்கள் நோக்கமாக கொள்ளுகின்றன, அவைகளில் மனது புத்தியுள்ளதாயிருக்கிறது; ஆனால் இவைகள் ஸ்தூல பொருள்களை தங்கள் நோக்கங்களாக கொள்ளுகின்றன, அவைகளில் மனது உன்மத்தம் பிடித்ததாயிருக்கிறது.

142. எவனும் **சரீர நோயுள்ள நிலைமையில்** சீர்படுத்தப்படுகிறதில்லை; ஏனென்றால், அப்பொழுது விவேகமானது தன்னிஷ்டமான நிலைமையில் இருக்கிறதில்லை; மனதின் நிலைமை சரீரத்தின் நிலைமையின் பேரில் சார்ந்திருக்கிறது. சரீரம் நோய்கொண்டபோது, வேறு விதமாய் இல்லாவிட்டாலும், உலகத்திலிருந்து நீக்கப்படுவதினால், மனதும்கூட நோயுள்ளதா யிருக்கிறது; ஏனென்றால், உலகத்திலிருந்து நீக்கப்பட்ட மனது, விவேகத்தின் சுதந்த

ரத்தில் இல்லாதபடியினால், கடவுளிடத்திலிருந்தல்லாமல், கடவுளைக் குறித்து நிஜமாகவே நினைக்கிறது. சுவர்க்கத்துக்கும் உலகத்துக்கும் மத்தியில் தானிருப்பதிலிருந்தும், சுவர்க்கத்திலிருந்தும் உலகத்திலிருந்தும், அதனுடன்கூட உலகத்தைக் குறித்து சுவர்க்கத்திலிருந்தும், சுவர்க்கத்தைக் குறித்து உலகத்திலிருந்தும், தான் நினைக்கக் கூடுமென்பதிலிருந்தும், மனிதனுக்கு விவேகத்தின் சுதந்தரமிருக்கிறது. ஆகையினால், மனிதன் நோயுள்ளவனாய், மரணத்தைப்பற்றியும், இறந்த பிறகு அவன் ஆன்மாவின் நிலைமையும் பற்றியும், நினைக்கும்போது, அவன் அப்பொழுது உலகத்தில் இல்லை; ஆனால் ஆன்மாவிலிருந்து பிரிந்து இருக்கிறான்; அந்த நிலைமையில் மாத்திரம் எவனும் சீர்படுத்தப்பட முடியாது; ஆனால், அவன் நோய் கொள்வதற்கு முன் சீர்படுத்தப்பட்டால், (2) அவன் ஸ்திரப்படுத்தப் படலாம். உலகத்தையும் அங்கிருக்கும் எல்லா தொழிலையும் துறந்து, கடவுளையும், சுவர்க்கத்தையும், மோக்ஷத்தையும் குறித்த சிந்தனைகளில் முழுமையும் இருப்பவர்கள் விஷயத்தில் அம்மாதிரியே யிருக்கிறது; ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி, அதிகம் வேறு யிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் இதே ஜனங்கள் தங்களுக்கு நோய் உண்டாவதற்கு முன்பு சீர்படுத்தப் படாவிட்டால், அவர்கள் இறந்துபோனால், அதன் பிறகு நோய் உண்டாவதற்கு முன்னிருந்தபடி ஆகிறார்கள். ஆகையினால், எவனுக்கும் நோயுள்ள காலத்தில் அனுதாபப் படும் காரியத்தைச் செய்யவும், எந்த விசுவாசத்தையும் அடையவும் கூடுமென்று நினைத்தல் விருதாவானதா யிருக்கிறது; ஏனென்றால், அந்த அனுதாபத்தில் எந்த சேட்டித்தலும், அந்த விசுவாசத்தில் எந்த தருமமுமில்லை; ஆகையினால், இரண்டிலும், எல்லாம் உதட்டு சங்கதிகளா யிருக்கிறது, எதுவும் இருதயத்தைச் சேர்ந்ததல்ல.

143. அஞ்ஞான நிலைமையில் எவனும் சீர்படுத்தப் படுகிறதில்லை; ஏனென்றால், எல்லா சீர்படுதலும் உண்மைகளாலும், அவைகளை அனுசரித்து வாழ்வதாலும் உண்டாக்கப்படுகிறது; ஆகையினால், உண்மைகள் தெரியாதவர்கள், சீர்படுத்தப்பட முடி

யாது; ஆனால், ஆசையினால் உண்மைகளை அவர்கள் விரும்பினால், இறந்த பிறகு சூக்கும உலகத்தில் அவர்கள் சீர்படுத்தப் படுகிறார்கள்.

144. **புத்தியின் குருட்டுத்தனத்தின் நிலைமையில்** எவனும் சீர்படுத்தப்படவும் கூட முடியாது. அவர்களுக்கும் கூட உண்மைகள் தெரியாது, அதனால் வாழ்க்கையும் தெரியாது; ஏனென்றால், புத்தியானது அவர்களுக்குக் கற்பிக்கவேண்டும்,சித்தம் அவைகளை செய்யவேண்டும்; புத்தி கற்பிப்பதை சித்தமானது செய்தால், அப்பொழுது அதன் வாழ்க்கை, உண்மைகளுக்குத் தக்கபடி உண்டாக்கப் படுகிறது. ஆனால் புத்தி குருடாக்கப்பட்டால், சித்தமும் கூட மூடப்படுகிறது; அதன் விவேகத்துக்குத் தக்கபடி சுதந்தரத்திலிருந்து, பொய்யாயிருக்கிற புத்தியில் ஸ்திரமான தீமைகளை மாத்திரம் அது செய்கிறது. அஞ்ஞானத்தை தவிர, குருட்டு விசுவாசத்தைக் கற்பிக்கிற மதமும்கூட, புத்தியை குருடாக்குகிறது; பொய்க் கோட்பாடுகூட அப்படியே செய்கிறது; ஏனென்றால், புத்தியை உண்மைகள் திறப்பது போல, பொய்கள் அப்படியே அதை மூடுகின்றன; அவைகள் மேலே மூடி, கீழே திறக்கின்றன; கீழே மாத்திரம் திறக்கப்பட்ட புத்தியானது, உண்மைகளைப் பார்க்க முடியாது, ஆனால், தான் இச்சிக்கும் எதையும், முக்கியமாய் பொய்யை மாத்திரம் ஸ்திரப்படுத்தக் கூடும். புத்தியானது, தீமையின் அவாக்களால்கூட குருடாக்கப் படுகிறது; சித்தமானது அவைகளிலிருக்கிற வரையில், அவைகள் ஸ்திரப்படும் பொருட்டு புத்தியின்பேரில் செயல்படுகிறது; தீமையின் அவாக்கள் ஸ்திரப்படுத்தப்படுகிற வரையில், சித்தமானது நன்மையின் ஆசைகளிலிருந்து, அவ்வைகள் மூலமாய் உண்மைகளைப் பார்த்து, அவ்விதமாய் சீர்படுத்தப்பட முடியாது. (2) உதாரணமாக: விபசாரத்தின் அவாவிலிருக்கிறவனுக்கு, அவனுடைய அன்பின் இன்பத்திலிருக்கிற சித்தம், அது ஸ்திரப்பட புத்தியின்பேரில் செயல்படுகிறது; ஏனென்றால், விபசாரம் என்னவென்றும், அதில் ஏதாவது துன்மார்க்கம் இருக்கிறதாவென்றும், புருஷனுக்கும், பெண்ஜாதிக்கும் மத்தியில் அவ்விதமானது இல்லை

யாவென்றும், விவாகத்திலிருந்து போல விபசாரத்திலும், சந்ததி உண்டாகாதாவென்றும், ஒரு ஸ்திரியானவள் தீங்கில்லாமல் ஒருவனுக்குமேல் அதிகமாய் ஏற்றுக்கொள்ளக் கூடாதாவென்றும், இதற்கும் பரமார்த்தமான விஷயங்களுக்கும் என்ன சம்பந்தமிருக்கிறதென்றும் அது சொல்லுகிறது, விவாக சம்பந்தமான அன்புதானும் கூட உற்பத்தியான ஆண்டவருடையவும், திருச்சபையினுடையவும் அன்பின் பிரதிமையா யிருக்கிற சூக்குமஅன்பாயும், சுவர்க்கத்து அன்பேயாகவும் இருக்கிறதென்றும், இவ்விதமாக அது தன்னில்தானே பரிசுத்தமானதென்றும், தன்னில்தானே கற்புடைமையென்றும், நின்மலமென்றும், தோஷமின்மை என்றும், புருஷன் பெண்ஜாதிகள் மிகவும் உள்ளுக் குள்ளானதிலிருந்து பரஸ்பரமாய் ஒருவரையொருவர் நேசித்து, இவ்விதமாக அன்புகளாக உருவாகுகிறார்களான படியால், அது மனிதர்களை வடிவத்தில் அன்புகளாக செய்கிறதென்றும், விபசாரமானது இந்த உருவத்தையும் அதனுடன் ஆண்டவருடைய பிரதிமையையும் அழிக்கிறதென்றும், மனிதனுடைய உயிர் விதையிலிருப்பதால், பயத்தை உண்டாக்குகிறதா யிருக்கும், ஒருவனுடைய பெண்ஜாதியினிடத்தில் இருக்கும் புருஷனுடைய உயிருடன் தன்னுடைய உயிரை விபசாரி கலக்கிறானென்றும், அது பார்க்க முடியாதபடி சித்தத்துடன் விபசாரம் செய்து அவ்வளவு மூடத்தனமானதும், சித்தத்தின் வேசியாயும் அப்பொழுது இருக்கிற புத்தி (3) யானது அம்மாதிரி நினைக்கிறது. இது தேவநிந்தனையா யிருப்பதால், நரகமானது விபசாரமென்றும், சுவர்க்கமானது வேறுவிதமாய் விவாகமென்றும் சொல்லப்படுகிறது. மேலும், விபசார ஆசை மிகவும் தாழ்ந்த நரகத்தோடு சம்பந்தமடைந்திருக்கிறது; ஆனால் உண்மையாய் விவாக சம்பந்தமான அன்பு, மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்துடன் சம்பந்தமடைந்திருக்கிறது. உற்பத்தி செய்யும் அவையவங்கள் கூட ஸ்திரிபுருஷ ஜாதிகளில், எந்த ஒருவரிலும் மிகவும் அந்தரங்கமான சுவர்க்கத்துக் கூட்டங்களோடு அன்னுவயப் படுகின்றன. சித்தமானது தீமையின் அவாவிலிருக்கும் போது, புத்தியானது எவ்வளவு குருடா யிருக்கிறதென்றும், புத்தியின் குருடான நிலைமையில் எவனும் சீர்படுத்தப்பட முடி

யாதென்றும், தெரிந்திருக்க இவைகளெல்லாம் எடுத்துக் காட்டப் பட்டன.

145. **தன்னைத்தானே பலாத்காரம் செய்துகொள்ளல் பகுத்தறிவுடைமைக்கும் சுதந்தரத்துக்கும் எதிரிடையாயில்லை.** மனிதனுக்கு சிந்தனையின் புறம்பானதும் உள்ளானது மிருக்கிறதென்றும், முந்தியது பிந்தியது போலவும், அல்லது உயர்ந்தது தாழ்ந்தது போலவும், இவைகள் வேறானதா யிருக்கின்றன வென்றும், அவைகள் அப்படி வேறானதா யிருப்பதால், பிரத்தியேகமாயும் ஒன்றுபட்டும் செயல்படக் கூடுமென்றும், முன்னமே காண்பிக் கப்பட்டிருக்கிறது. ஒரு மனிதனானவன் தன் சிந்தனையின் புறம் பானதிலிருந்து, தான் உள்ளுக்குள்ளாய் நினைப்பதையும் இச்சிப் பதையும் தவிர, வேறுவிதமாய் சொல்லுகிறதும் செய்கிறதுமா யிருந்தால், அவைகள் பிரத்தியேகமாய் செயல்படுகின்றன; தான் அந்தரங்கமாய் நினைப்பதையும் இச்சிப்பதையும் அவன் சொல்லி யும் செய்தும் வந்தால், அவைகள் ஒன்றுபட்டு செயல்படுகின்றன; பின் கூறியது உண்மையானவர்களுக்குள் வழக்கம், முன் கூறியது (2)உண்மையில்லாதவர்களுக்குள் வழக்கம். மனதின் உள்ளானதும் புறம்பானதும் இவ்விதமாக வேறானவைகளா யிருப்பதினால், அந் தரங்கமானது புறம்பானதுடன் சண்டைகூட செய்யும், அந்த சண்டையினால் அதை சம்மதிக்கும்படி கூட கட்டாயம் பண்ணும். மனிதன் தீமைகள் பாவங்களென்று நினைத்து, ஆகையினால் அவை களைவிட்டு நீங்க இச்சிக்கும்போது யுத்தம் உண்டாகிறது; ஏனென் றால், அவன் நீங்கும்போது, கதவு திறக்கப்படுகிறது; அது திறக் கப்பட்டபோது, சிந்தனையின் அந்தரங்கமானதைக் குடிகொண்ட தீமையின் மோகங்கள், ஆண்டவரால் வெளியே தள்ளப்பட்டு, நன் மையைச் சேர்ந்த ஆசைகள் அவைகளுக்குப் பதிலாக நடப் படுகின்றன; சிந்தனையின் உள்ளானதில் இது செய்யப்படுகிறது. ஆனால், சிந்தனையின் புறம்பானதைச் சுற்றிக்கொண்ட தீமையைச் சேர்ந்த மோகங்களின் இன்பங்கள், அதே காலத்தில் வெளியே தள்ளப்பட முடியாது; ஆகையினால், சிந்தனையின் உள்ளானதற் கும் புறம்பானதற்கும் சண்டை எற்படுகிறது. அந்த இன்பங்

கள் தீமையின் இன்பங்களாயிருப்பதினாலும், இப்பொழுது அந்தரங்கமானது இருக்கப்பட்ட நன்மையின் ஆசைகளோடு ஒத்திருக்காதபடியினாலும், அவைகளை வெளியே தள்ள அந்தரங்கமனாது விரும்புகிறது; தீமையின் இன்பங்களுக்குப் பதிலாக, தன்னுடன் இணங்குகிற நன்மையின் இன்பங்களை உட்செலுத்த அது விரும்புகிறது; நன்மையின் இன்பங்கள் என்பவை, தருமத்தின் நன்மைகள் என்று சொல்லப்பட்டவைகளாயிருக்கின்றன. இந்த வேறுபாட்டினால், யுத்தம் உதிக்கிறது; அது அதிகமானால் சோதனை (3) என்று சொல்லப்படும் சிந்தனையின் அந்தரங்கமானது மனிதனுடைய ஆன்மாவாகவே யிருப்பதின் பொருட்டு, அதிலிருந்து ஒரு மனிதன் மனிதனாகிற படியினால், தன் சிந்தனையில் புறம்பானதை சம்மதிக்கவும், அல்லது தருமத்தின் நன்மைகளாயிருக்கிற தன் ஆசைகளின் இன்பங்களைப் பெற்றுக்கொள்ளவும் கட்டாயம் செய்யும்போது ஒரு மனிதனையே கட்டாயம் செய்துக்கொள்ளுகிறானென்பது விசதமாகிறது. பகுத்தறிவுடைமை யுத்தத்தை உண்டுபண்ணுகிற படியினாலும், சுவேச்சை அதை நிலைப்படுத்துகிற படியினாலும் இது பகுத்தறிவுடைமைக்கும் சுவேச்சைக்கும் எதிரானதாயில்லாமல், ஆனால் அவைகளுக்குத் தக்கபடி இருப்பதாய், தெளிவாயிருக்கிறது. தானே சுவேச்சையானது கூட பகுத்(4) தறிவுடைமையுடன் சேர்ந்து, அந்தரங்கமான மனிதனில் வாசம் செய்கிறது, இதிலிருந்து புறம்பான மனிதனில் வாசம் செய்கிறது. ஆகையினால், அந்தரங்கமானது புறம்பானதை சம்மதிக்கவும் இணங்கவும் செய்கிறபோது ஏற்படுகிறபடி, அந்தரங்கமானது வெற்றியடையும்போது, அக்காலத்தில் ஆண்டவர் மனிதனுக்கு சுவேச்சையையும் பகுத்தறிவுடைமையையுமே கொடுக்கிறார். ஏனென்றால், அக்காலத்தில், தன்னில் தானே அடிமைத்தனமாயிருக்கிற நரகத்து சுதந்தரத்திலிருந்து மனிதன் ஆண்டவரால் பிரிக்கப்பட்டு, தன்னில் தானே உண்மையான சுதந்தரமாயிருக்கிற சுவர்க்கத்து சுதந்தரத்துக்குள் கொண்டுவரப்பட்டு, தேவர்களோடு சேர்மானம் கொடுக்கப்படுகிறான். பாவத்திலிருப்பவர்கள் அடிமைகளென்பதையும், வேதத்தின் மூலமாய் தன்னிடமிருந்து உண்மையை ஏற்றுக்கொள்ளுபவர்களை ஆண்டவர் தன்னிஷ்டமா

யிருக்க விடுகிறாரென்பதையும், யோவானில் அவர் கற்பிக்கிறார் (VIII. 31-36).

146. வஞ்சனையிலும் இரகசியமான களவிலும் இன்பத்தைக் கண்டு, இப்பொழுது அவைகள் பாவங்களென்று தெரிந்து அந்தரங்கமாய் ஒத்துக்கொண்டு, ஆகையினால் அவைகளை விட்டுவிட விரும்புகிற மனிதனுடைய நிதர்சனத்தால் இது தெரிவிக்கப்படலாம். அவன் அப்படி விட்டு விடும்போது புறம்பான மனிதனோடு உள்ளான மனிதன் யுத்தம் ஆரம்பிக்கிறது. அந்தரங்கமான மனிதன் உண்மையினிடத்து ஆசை கொள்ளுகிறான். ஆனால் புறம்பான மனிதன் வஞ்சிப்பதில் இன்னும் இன்பம் அடைகிறான்; அந்த இன்பமானது, உண்மையைச் சேர்ந்த இன்பத்துக்கு முழுமையும் எதிரிடையாயிருப்பதினால், கட்டாயம் செய்யப்பட்டால் ஒழிய பின்னடைகிறதில்லை; அதுவுமல்லாமல், யுத்தத்தினால் தவிர அதை கட்டாயப்படுத்த முடியாது; அப்பொழுது, வெற்றியடைந்த பிறகு, புறம்பான மனிதன், தருமமாயிருக்கிற உண்மையானதின் பேரில் கொள்ளும் அன்பின் இன்பத்திற்குள் வருகிறான்; பிறகு, வஞ்சனையினிடத்தில் கொள்ளும் இன்பம் நாளுக்கு நாள் அவனுக்குச் சந்தோஷமற்றதாய் விடுகிறது. விபசாரம் வேசித்தனம் விஷயத்தில் போலும், சலஞ்சாதித்தல் வன்மம் விஷயத்தில் போலும், தேவதூஷணை பொய் மொழிதல் விஷயத்தில் போலும், மற்ற பாவங்கள் விஷயத்திலும் அதே மாதிரிதான். ஆனால், எல்லாவற்றிலும் மிகவும் கஷ்டமான சண்டை தன்னையே நேசித்தலிலிருந்து உண்டாகும் அதிகாரம் செலுத்தும் ஆசையோடு நிற்கிறது; இதை வெல்லுகிறவன், இது அவைகளுக்கெல்லாம் தலைமையானதால், மற்ற தீமையான ஆசைகளை வெல்லுகிறான்.

147. ஒரு மனிதன் தன்னிடமிருந்தே போல தீமைகளை பாவங்களாக நீக்கும்போது, பிறந்தது முதல் உள்ளான மனிதனை பிடித்திருக்கும் தீமையின் மோகங்களை ஆண்டவர் எப்படி வெளியே தள்ளி, அவைகளுக்குப் பதிலாய் நன்மையினிடத்து

ஆசைகளை வைக்கிறாரென்பது, சுருக்கமாய்ச் சொல்லப்படக்கூட வேண்டும். மனிதனுக்கு ஒரு ஸ்தூல மனதும், ஒரு சூக்கும மனதும், ஒரு அதிசூக்குமமனதும் உண்டென்றும், அவன் தீமையின் மோகங்களிலும், அவைகளின் இன்பங்களிலும் இருக்கிற வரையில் ஸ்தூல மனதில் மாத்திரம் இருக்கிறானென்றும், அதுவுங்கூட சூக்கும மனது மூடப்பட்டிருக்கிற வரையிலென்றும், முன்னமே காண்பிக்கப் பட்டிருக்கிறது; ஆனால், தெய்வ சட்டங்களுக்கு விரோதமா யிருப்பதினால் மனிதனானவன், தற் சோதனையின் பிறகு தீமைகளை கடவுளுக்கு விரோதமான பாவங்களாக ஒத்துக்கொண்டு, அதனால் அவைகளை விட்டுவிட வேண்டுமென்று விரும்பின உடன், ஆண்டவர் சூக்கும மனதை திறந்து, நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஆசையினால் ஸ்தூல மனதில் பிரவேசிக்கிறார்; அவர் பகுத்தறிவுள்ள மனதில் பிரவேசித்து, அதிலிருந்து, கீழே ஸ்தூலமானதில் ஒழுங் (2) கீனமா யிருக்கிற பொருள்களை ஒழுங்கு படுத்துகிறார். மனிதனுக்கு சண்டையாக தோன்றுவதும், தீமையின் இன்பங்களில் தங்கள் இஷ்டப்பிரகாரம் நடந்து கொண்டவர்கள் விஷயத்தில் சோதனையாக தோன்றுவதும் இதுதான்; ஏனென்றால், அதன் சிந்தனைகளின் ஒழுங்கு கவிழும்போது, மனதுக்கு உபத்திரவம் உண்டாகின்றது. இப்பொழுது, மனிதனிடத்திலேயே யிருக்கிறதும், தன்னுடைய சொந்தமானதாக தான் உணருகிறதுமான விஷயங்களுக்கு விரோதமாய் சண்டை யிருக்கிறபடியினாலும், மிகவும் அந்தரங்கமான ஆன்மாவினிடமிருந்தும், அதனுடன் அங்கிருக்கும் சுதந்தரத்திலிருந்தும் தவிர, தனக்கே விரோதமாக எவனும் சண்டைபிடிக்க முடியாத படியினாலும், உள்ளான மனிதன் பிறகு புறம்பான மனிதனுக்கு விரோதமாய் சண்டை பிடிக்கிறானென்றும், அந்த சண்டையும் சுதந்தரத்திலிருந்து பிடிக்கிறானென்றும், அதனுடன் அது புறம்பானதை கீழ்பட கட்டாயம் செய்கிறதென்றும் ஏற்படுகிறது; பிறகு இதுதான் தன்னையே கட்டாயப்படுத்த லென்பது. இது சுவேச்சைக்கும் பகுத்தறிவுடைமைக்கும் எதிரிடையா யில்லாமல், அவைகளை ஒத்து யிருக்கிறது என்று தெளிவா யிருக்கிறது.

148. மேலும், ஒவ்வொரு மனிதனும் தன்னிஷ்டப்படி நடக்கவும், தன்னிஷ்டமானதை அல்லாமல், அடிமைத்தனமுள்ளதை தன்னிடமிருந்து நீக்கவும் விரும்புகிறான். ஒரு உபாத்தியாயர் கீழிருக்கும் ஒவ்வொரு பையனும், தன்னுடைய சொந்த எஜமானனாகவும், இவ்விதமாக தன்னிஷ்டமாக நடக்கவும் விரும்புகிறான்; அதைப்போன்றே, தன் எஜமானன் கீழிருக்கும் ஒவ்வொரு வேலைக்காரனும், தன் எஜமாட்டி கீழிருக்கும் ஒவ்வொரு வேலைக்காரியும், அப்படியே தான் விரும்புகிறார்கள்; தன் சொந்த வீட்டில் தான் தன்னிஷ்டமாய் செயல்பட, ஒவ்வொரு கன்னிகையும், தன் தகப்பனுடைய வீட்டைவிட்டு போய், விவாகம் செய்து கொள்ள விரும்புகிறாள்; வேலை செய்யவும், தொழில் ஆரம்பிக்கவும், அல்லது எந்த உத்தியோகத்தின் கடைமைகளை செய்யவும் விரும்புகிற ஒவ்வொரு வாலிபனும், மற்றவர்களின் அதிகாரத்துக்கு கீழ்பட்டிருக்கும் போது, தன் இஷ்டப்படி நடக்கும் பொருட்டு, விடுவிக்கப்பட விரும்புகிறான். சுவேச்சையின் பொருட்டு, தங்கள் இஷ்டப்படி வேலை செய்கிறவர்கள் எல்லாம் தங்களைத் தாங்களே கட்டாயம் செய்துக் கொள்ளுகிறார்கள்; அவர்கள் தங்களைத் தாங்களே கட்டாயம் செய்யும்போது, விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுகிறார்கள். ஆனால், வெளியிலிருக்கும் சுதந்தரம் ஓர் வேலைக்காரனைப்போல் பார்க்கப்படுகிற உள்ளிருக்கும் சுதந்தரத்திலிருந்து அப்படி செயல்படுகிறார்கள். தன்னைத் தானே கட்டாயம் செய்தல் பகுத்தறிவுடைமைக்கும் சுவேச்சைக்கும் விரோதமாக யில்லை என்பதை ரூபகாரமாக இது எடுத்து காட்டப்பட்டது.

149. அம்மாதிரியாக மனிதனானவன் பரமார்த்த அடிமைத்தனத்திலிருந்து, பரமார்த்த சுவேச்சைக்கு வர ஏன் விரும்புகிறதில்லை யென்பதற்கு ஒரு காரணம், பரமார்த்த அடிமைத்தனம் என்னவென்றும், பரமார்த்த சுவேச்சை என்னவென்றும் அவனுக்குத் தெரியாது என்பதா யிருக்கிறது; இதைக் கற்பிக்கிற உண்மைகள் அவனுக்கில்லை; உண்மைகள் இல்லாவிட்டால் பரமார்த்த அடிமைத்தனம் சுதந்தரமென்றும், பரமார்த்த சுதந்திரம் அடி-

மைத்தனமென்றும் நம்பப்படுகிறது. கிருஸ்துவ உலகத்து மதம் புத்தியை மூடி, விசுவாசம் மாத்திரம் அதற்கு முத்திரையிட்டது என்பது மற்ற ஒரு காரணமா யிருக்கிறது; ஏனென்றால், இவைகளில் ஒவ்வொன்றும், வேத சாஸ்திரத்துக்கு அடுத்த விஷயங்கள் மேம்பாடுள்ளதென்றும், ஆகையினால், எந்த பகுத்தறிவுடைமையைக் கொண்டும் சமீபிக்கப்படாதென்றும், அவைகள் பார்வையுள்ளவர்களுக்கல்லாமல், குருடருக்கு இருக்கின்றன வென்றும், ஒரு கோட்பாட்டை தன்னையே சுற்றி இரும்பு சுவரைப்போல வைத்துக்கொண்டது; இவ்விதமாக, பரமார்த்த சுதந்தரம் என்னவென்று கற்பிக்கிற உண்மைகள் மறைக்கப்பட்டன. சிலர்தான் தங்களையே சோதித்து, தங்கள் பாவங்களை பார்க்கிறார்களென்பது மூன்றாவது காரணமா யிருக்கிறது; அவைகளைப் பார்த்து விட்டு விடாதவன் தானே அடிமைத்தனமாயிருக்கிற நரகத்து சுதந்தரமான தங்கள் சுதந்தரத்திலிருக்கிறான். இதிலிருந்து, சுதந்தரமாகவே யிருக்கிற சுவர்க்கத்து சுதந்தரத்தைப் பார்த்தல், பகல் காலத்தை நல்லிருளில் பார்க்கிறதைப் போலவும், இருண்டமேகத்தின் கீழிருந்து, மேலிருக்கும் சூரியனிடமிருந்து வருவதைப்பார்க்கிறதைப் போலவுமிருக்கிறது. இதனால் தான் சுவர்க்கத்து சுதந்தரம் என்னவென்றும், அதற்கும் நரகத்து சுதந்தரத்துக்கும் உள்ள பேதம், உயிருள்ளதற்கும் உயிரில்லாததற்கும் உள்ள பேதம்போலிருக்கிறதென்றும் தெரியப்படாமலிருக்கிறது.

150. VI. **புறம்பான மனிதன் அந்தரங்கமானதின் மூலமாய் சீர்படுத்தப்படவேண்டும்; அதற்கு எதிரானது அப்படியில்லை.** மேலே அடிக்கடி கூறியபடி, உள்ளான மனிதன் புறம்பான மனிதன் என்பதால் சிந்தனையின் உள்ளானதும் புறம்பானதும் என்பதுபோலவே அதே அருத்தம் கொள்ளப்படுகிறது. புறம்பானது உள்ளானதினால் சீர்படுத்தப்படுகிறது என்பது உள்ளானது புறம்பானதில் பாய்கிறதென்றும், அதற்கு மாறானது அப்படியில்லை என்றும் அருத்தம் கொள்ளப்படுகிறது. சூக்குமமானது ஸ்தூலமானதில் பாய்கிறது என்பதும், அதற்கு மாறானது அப்படியில்லை என்பதும், கல்விமான்களுக்குத் தெரியும்; அந்தரங்கமான மனிதன் முத

லில் சுத்தப்படுத்தப்பட்டு புதுப்பிக்கப்பட வேண்டுமென்பதும், அந்த விதமாக புறம்பானவனும் அப்படிச் செய்யப்பட வேண்டுமென்பதும், திருச்சபையில் தெரிந்திருக்கிறது; ஆண்டவர் கற்பிக்கிறார் என்பதினாலும், விவேகமும் அதைச் சொல்லுகிறது என்பதினாலும் அது தெரிந்திருக்கிறது. ஆண்டவர் இந்த வார்த்தைகளால் அதைக் கற்பிக்கிறார்: "வேஷதாரிகளே! உங்களுக்கு ஐயோ போஜன பான பாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தமாக்குகிறீர்கள்; உட்புறத்திலோ அவைகள் கொள்ளையினாலும் அநீதத்தினாலும் நிறைந்திருக்கிறது. குருடனான பரிசேயனே! போஜனபான பாத்திரங்களின் வெளிப்புறம் சுத்தமாகும்படி அவைகளின் உட்(2)புறத்தை முதலாவது சுத்தமாக்கு (மத்தே. XXIII. 25-26)." விவேகம் அப்படி சொல்லுகிறது என்பது, **பதிபசுபாசவிளக்கம்** எனும் நூலில் திரளாய் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால் ஆண்டவர் சொல்லுவதை, விவேகத்தாலும் பார்க்க மனிதனுக்கு சக்தியைகூட கொடுக்கிறார், இதையும் இரண்டுவழியில் செய்கிறார்; ஒரு வழியில், ஒரு மனிதன் கேட்ட உடனே, ஒரு விஷயம் அப்படியிருக்கிறதென்று தனக்கு தானே தெரிந்துகொள்ளுகிறான்; மற்றதில், காரணங்களால் அதை அறிந்துகொள்ளுகிறான். தனக்குத் தானே அறிந்துகொள்ளல், தன்னுடைய அந்தரங்கமான மனிதனாலாகிறது; காரணங்களால் அறிந்து கொள்ளல், புறம்பான மனிதனாலாகிறது. அது சொல்லப்படுவதை கேட்டபோது, அந்தரங்கமான மனிதன் முதலிலும், அதன் மூலமாய் புறம்பான மனிதனும், சுத்தப்படுத்தப்பட வேண்டுமென்று தனக்கு தானே தெரிந்துக் கொள்ளாதவன் யார்? ஆனால் சுவர்க்கத்திலிருந்து வரும் பெருக்கினால் இந்த விஷயத்தைப்பற்றி பொது அபிப்பிராயம் கொள்ளாதவன், அவன் தன்னுடைய சித்தத்தின் புறம்பானதை யோசனை கேட்கும்போது திரியலாம்; இதிலிருந்துமாத்திரம் எவனும், அந்தரங்கமானதில்லாமல் தருமத்தினுடையவும் தேவபக்தியினுடையவும் புறம்பான செயல்கள், இரக்ஷிக்கிறது என்பது தவிர வேறுவிதமாய் பார்க்கிறதில்லை. பார்வையும் கேட்டலும் சிந்தனையிலும், மணமும் சுவையும், உணர்ச்சியிலும், இவ்விதமாக புறம்பானது உள்ளானதிலும் பாய்கிறது என்பது போல் மற்றவை

களிலும், அப்படியே; அப்படியிருந்தும் எதிரிடையானது சம்பவிக்கிறது. பார்த்ததும் கேட்டதுமாகிய பொருள்கள், சிந்தனையில் பாய்கிறதாகத் தோன்றுகிறதென்பது ஓர் போலி நியாயம்; ஏனென்றால், புத்தியானது கண்ணில் பார்க்கிறது, அது காதில் கேட்கிறது, எதிரிடையாய் அப்படி அல்ல. மற்றப் பொருள்களிலும் அது அப்படியே யிருக்கிறது.

151. ஆனால், உள்ளான மனிதன் சீர்படுத்தப்படும் வழியையும், அதனால் புறம்பான மனிதன் சீர்ப்படுத்தப்படும் வழியையும் பற்றி இங்கே சிலது சொல்லப்படவேண்டும். உள்ளான மனிதன் தெரிந்துக்கொள்ளுதலாலும், விவேகத்தோடு அறிந்துகொள்ளுதலாலும், ஞானமுடைமையாலும், மாத்திரம் சீர்படுத்தப்படுகிறதில்லை; அதனால், நினைப்பதினால் மாத்திரமல்லாமல், அறிவு, புத்தி, ஞானம் கற்பிக்கிறவைகளை இச்சிப்பதால் சீர்படுத்தப்படுகிறான். ஒரு மனிதனுக்கு சுவர்க்கமும் நரகமுமிருக்கிறதென்றும், எல்லா தீமைகளும் நரகத்திலிருந்து வருகிறதென்றும், எல்லா நன்மைகளும் சுவர்க்கத்திலிருந்து வருகிறதென்றும் தெரிந்துகொள்ள அறிவும், புத்தியும், ஞானமுமிருந்து, அக்காலத்தில், தீமையானது நரகத்திலிருந்து வருகிறபடியினால் அதை இச்சிக்காமல், நன்மையானது சுவர்க்கத்திலிருந்து வருகிறபடியினால், அதை இச்சித்தால், அக்காலத்தில் அவன் சீர்படுதல் என்பதின் முதல்படியிலிருக்கிறான். நரகத்துக்கு வெளியே சுவர்கத்துக்குப் போகும் எல்லையிலிருக்கிறான். இன்னும் கொஞ்சம் அதிகம்போய், தீமைகளைவிட்டுவிட இச்சித்தால், சீர்படுதலின் இரண்டாவது படியிலிருக்கிறான்; அக்காலத்தில் நரகத்திற்கு வெளியேயும், ஆனால் இன்னும் சுவர்க்கத்துக்குள் போகாமலுமிருக்கிறான்; இந்த சுவர்க்கத்தை தனக்குமேலே பார்க்கிறான். ஒரு மனிதன் சீர்படுத்தப்பட, இந்த விதமான உள்ளான நிலைமையிருக்கவேண்டும்; ஆனால் புறம்பானதும் உள்ளானதும் இரண்டும் சீர்படுத்தப்பட்டாலொழிய மனிதனனவன் சீர்படுத்தப்படுகிறதில்லை. தீமைகள் நரகத்துக்குச் சேர்ந்தவைகளானபடியினால் அந்தரங்கமானது இச்சிக்காத அந்த தீமைகளை புறம்பானது விட்டு

விடும்போதும் இன்னும் அதிகமாய், அவைகளை நீக்கி, அவைகளுக்கு விரோதமாய் சண்டை செய்யும்போதும், புறம்பானது அந்தரங்கமானதால் சீர்படுத்தப்படுகிறது. இவ்விதமாக, அந்தரங்கமானது இச்சிக்கவும், புறம்பானது செய்யவுமிருக்கிறது; ஏனென்றால், ஒருவன் இச்சிப்பதை செய்தாலொழிய, உள்ளே (2) ஒரு அசம்மதம் நிற்கிறது. தான் அதை இச்சிக்கவில்லையென்று கடைசியில் ஏற்படுகிறது. இந்த சில விவரணங்களால், புறம்பான மனிதன் உள்ளான மனிதனால் எப்படி சீர்படுத்தப்படுகிறனென்பது அறிந்துகொள்ளப்படும்; ஆண்டவர் பேதுருவுக்கு சொல்லியவார்த்தைகளின் அருத்தமும்கூட இதுதான்: "இயேசு அவனுக்குப்பிரதியுத்தரமாக, நான் உன்னைக்கழுவாவிட்டால், என்னிடத்தில் உனக்கு பங்கில்லை" என்றார். அதற்கு சீமோன் பேதுரு: "ஆண்டவரே, என் கால்களை மாத்திரமல்ல, என் கைகளையும் என் தலையையும்கூட கழுவவேண்டும்" என்றான், இயேசு அவனை நோக்கி: "முழுகினவன் தன் கால்களை மாத்திரம் கழுவவேண்டியதாயிருக்கும். மற்றபடி அவன் முழுவதும் சுத்தமாயிருக்கிறான் (யோவா. XIII, 8, 9, 10.)." கழுவுதல் என்பதால், தீமைகளிலிருந்து சுத்தப்படுத்தப்படுதலாயிருக்கிற பரமார்த்த கழுவுதல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது; தலையையும் கைகளையும் கழுவுதல் என்பதால், உள்ளான மனிதனை சுத்தப்படுத்துதலென்று அருத்தம் கொள்ளப்படுகிறது; கால்களை கழுவுதல் என்பதால், புறம்பான மனிதனை சுத்தப்படுத்துதல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. உள்ளான மனிதன் சுத்தப்படுத்தப்பட்டபோது, புறம்மான மனிதனும் சுத்தப்படுத்தப்படவேண்டுமென்பது, "முழுகினவன் தன் கால்களை மாத்திரம் கழுவவேண்டியதாயிருக்கும்" என்று சொல்லியதால் அருத்தம் கொள்ளப்படுகிகிது. "நான் உன்னைக் கழுவாவிட்டால் என்னிடத்தில் உனக்குப் பங்கில்லை" என்று சொல்லியதால், தீமைகளிலிருந்து சுத்தப்படுத்தப்படுதல் என்பதெல்லாம் ஆண்டவரிடமிருந்து வருகிறது என்பது அருத்தம் கொள்ளப்படுகிறது. யூதர்களுக்குள் கழுவுதலென்பது தீமைகளிலிருந்து பவித்திரமாக்குதலைக் குறிக்கிறதென்பதும், வேதத்தில் கழுவுதலென்ப

தால், இந்த அர்த்தம் கொள்ளப்படுகிறதென்பதும், கால்களைக் கழுவுதலென்பதினால், ஸ்தூலமான அல்லது புறம்பான மனிதனைப் பவித்திரமாக்குதல் என்பது, அர்த்தம் கொள்ளப்படுகிறதென்பதும், தெய்வலோக இரகசியம் எனும் நூலில் பல இடங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

152. மனிதனுக்கு ஒரு உள்ளானதும் ஒரு புறம்பானதுமிருக்கிறபடியினாலும், மனிதன் சீர்படுத்தப்பட இரண்டும் சீர்படுத்தப்பட வேண்டுமாகையினாலும், தானே பரிசோதித்து, அறிந்துகொண்டு, தன் தீமைகளை ஒருவன் ஒத்துக்கொண்டு பின்னிட்டு அவைகளை விட்டு விட்டாலொழிய, எவனொருவனும் சீர்படுத்தப்பட முடியாமையினாலும், புறம்பானது மாத்திரமல்லாமல், உள்ளானது கூட பரிசோதிக்கப்பட வேண்டுமென்று தொடருகிறது. புறம்பானது மாத்திரம் பரிசோதிக்கப்பட்டால், தான் கொலை செய்யவில்லையென்றும், விபசாரம் செய்யவில்லையென்றும், திருடவில்லையென்றும், பொய் சாட்சியம் சொல்லவில்லையென்றும், இவை முதலியவைகளைப் போல செய்யவில்லையென்றும் தான் நிஜமாக செய்ததை மட்டும் பார்க்கிறான். இவ்விதமாக, தன் ஆன்மாவின் தீமைகளையல்லாமல், தன் சரீரத்தின் தீமைகளைச் சோதிக்கிறான்; என்றாலும், எவனும் சீர்படுத்தப்பட ஆன்மாவின் தீமைகள் சோதிக்கப் படவேண்டும்; ஏனென்றால், இறந்த பிறகு, மனிதன் ஒரு ஆன்மாவாகயிருக்கிறான், ஆன்மாவிலிருக்கிற எல்லா தீமைகளும் நிற்கின்றன; மனிதனானவன் தன்னுடைய சிந்தனைகளையும், முக்கியமாய், சித்தத்திலிருந்து வரும் சிந்தனைகளாயிருப்பதினால், தன்னுடைய உள்ளகுறிப்புகளையும் கவனிப்பதை விட, ஆன்மாவானது வேறு விதத்தில் சோதிக்கப்படுகிறதில்லை; தீமைகள், தங்கள் உற்பத்தி ஸ்தானமாகவும், வேருகவும், அதாவது தங்கள் மோகங்களிலும் இன்பங்களிலும், அங்கேயிருக்கின்றன; இவைகள் அறிந்து கொள்ளப்பட்டு, ஒத்துக்கொள்ளப் பட்டாலொழிய, ஒரு மனிதன் புறம்பானவைகளில் அவைகளை செய்யாவிட்டாலும், அவன் இன்னும் தீமைகளிலிருக்கிறான். உள்ளக் குறிப்பிலிருந்து நினைத்தல், இச்சித்து செய்தலா

கிறதென்பது, ஆண்டவருடைய வார்த்தைகளால் தெளிவாகிறது: "ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரம் செய்தாயிற்று (மத்தே. V. 28)." புறம்பான மனிதன் பிரதானமாய் பரிசோதிக்கப் படுகிறதாகிய, உள்ளான மனிதனுடைய பரிசோதனை இவ்விதமா யிருக்கிறது.

153. முழு கிருஸ்துவ உலகமும் தீமைகள் பாவங்களாக நீக்கப்பட வேண்டுமென்றும், அப்படியில்லா விட்டால் அவைகள் தள்ளப்படுகிறதில்லை யென்றும், பாவங்கள் தள்ளப்படா விட்டால், இரட்சிப்புக் கிடையாதென்றும் ஒத்துக்கொண்டாலும், அநேக ஆயிரம் ஜனங்களில் ஒருவன்கூட அரிதாய் இவைகளை தெரிந்து கொள்ளுகிறதில்லை யென்று, நான் அடிக்கடி ஆச்சரியப்பட்டிருக்கிறேன். சூக்கும உலகத்தில் இந்த விஷயத்தைப்பற்றி விசாரணை செய்யப்பட்டது; அப்படியே யிருப்பதாக கண்டுபிடிக்கப்பட்டது. ஏனென்றால், கிருஸ்துவ உலகத்தில் ஒவ்வொருவனும், தேவசற்பிரசாதத்திற்கு வருகிறவர்கள் முன்பாக வாசிக்கப்பட்ட எச்சரிப்புகளிலிருந்து, ஒத்துக்கொள்ளுகிறான்; ஏனென்றால், அந்த எச்சரிப்புகளில் அது பகிரங்கமாய் சொல்லப்பட்டிருக்கிறது; என்றாலும், இது தெரியுமா வென்று கேட்கப்பட்டால், அவர்கள் தங்களுக்குத் தெரியாதென்றும், தங்களுக்கு அது எந்த காலத்திலும் தெரிந்திருக்கவில்லை யென்றும், மறுமொழி சொல்லுகிறார்கள். அவர்கள் அதைப்பற்றி நினைக்கவில்லை என்பதும், அநேகர் விசுவாசத்தை மட்டும், அதனால் இரட்சிப்பை மாத்திரம் நினைத்தார்களென்பதும் காரணமா யிருக்கிறது. விசுவாசத்தில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், வேதத்தை வாசிக்கும்போது அன்பைப் பற்றியும், தருமத்தைப் பற்றியும், நற்செய்கைகளைப் பற்றியும், ஒன்றும் சொல்லப்பட வில்லை என்று அவர்கள் நினைக்கும்படியாக, விசுவாசம் என்பது மாத்திரம் அவர்கள் கண்களை மூடிவிட்டதாகக் கூட நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். ஒருவன் எழுதினதின் பேரில் சிந்தூரத்தைப் போட்டபோது அதன் கீழிருப்பது ஒன்றும் தோன்றாமல் போகிறதுபோல, வேதத்தில் சொல்லப்பட்ட எல்லா விஷயங்கள்பேரிலும் பக்தி என்பதை

அவர்கள் பூசியதுபோல இருக்கிறது; ஆனால் ஏதாவது தோன்றினால், அவ்வித பக்தியினால் அது உரிஞ்சப்பட்டு, பக்தி என்று சொல்லப்படுகிறது.

---

**மனிதனானவன் ஆண்டவரால் சுவர்க்கத்திலிருந்து வேதத்தின் மூலமாயும், அதிலிருந்து கொள்கையின் மூலமாயும், பிரசங்கம் செய்வதாலும் வழி காட்டப்பட்டு கற்பிக்கப்பட வேண்டுமென்பதும், இதுவும் முழு தோற்றத்திற்கும் தன்னாலேயே போல செய்யப்பட வேண்டுமென்பதும், தெய்வ அரசியலின் ஓர் சட்டமா யிருக்கிறது.**

154. மனிதனானவன் தன்னாலேயே வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறானென்பது தோற்றத்தை அனுசரித்ததா யிருக்கிறது. ஆனால் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டுக் கற்பிக்கப்படுகிறானென்பது உண்மையை அனுசரித்ததா யிருக்கிறது. ஒரே காலத்தில் உண்மையை யல்லாமல், தங்களுக்குள்ளே தோற்றத்தை ஸ்திரப்படுத்துகிறவர்கள், தீமைகளைப் பாவங்களாக தங்களிடமே யிருந்து நீக்கமுடியாது; ஆனால் தங்களுக்குள்ளே தோற்றத்தையும் உண்மையையும் ஒரே காலத்தில் ஸ்திரப்படுத்துகிறவர்கள், அப்படிச் செய்யக்கூடும்; ஏனென்றால், பாவங்களாக தீமைகள் பார்வைக்கு மனிதனாலும், உண்மையில் ஆண்டவராலும், நீக்கப்படுகின்றன. பின் கூறியவர்கள் சீர்படுத்தப்படக்கூடும்: முன் (2) கூறியவர்கள் அப்படிச் செய்யப்பட முடியாது. ஒரே காலத்தில் உண்மையல்லாமல் தோற்றத்தை தங்களுக்குள்ளே ஸ்திரப்படுத்துகிறவர்கள் எல்லாம் உள்ளுக்குள் விக்கிராராதனை செய்கிறவர்களாயிருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் தங்களையும் உலகத்தையும் தொழுவோர்களாயிருக்கிறார்கள்; அவர்களுக்கு சமயம் ஒன்று இல்லாவிட்டால், பிரகுருதியை தொழுவோர்களாயும், இவ்விதமாக

நாஸ்திகர்களாகவு மிருக்கிறுர்கள். ஆனுல் அவர்களுக்கு ஓர் சமய மிருந்தால், மனிதர்களேயும் அதேகாலத்தில் விக்கிரகங்களேயும் தொழுவோராகிறுர்கள். இதர கடவுளர்களே தொழுவோர் என்பதால், பத்து கற்பனேயின் முதல் கட்டளேயில்இப்பொழுது கருதப்பட்டவர்கள் இவர்கள்தான். ஆனுல், தோற்றத்தையும், அதேகாலத்தில் உண்மையையும் தங்களுக் குள்ளே ஸ்திரப்படுத்துகிறவர்கள், ஆண்டவரை தொழுவோர்களாகிறுர்கள்; ஏனென்றுல், தோற்றத்தி லிருக்கிற தங்கள் சுய நன்மையிலிருந்து ஆண்டவர் அவர்களே தூக்கி, உண்மையிருக்கிறதும், உண்மையா யிருக்கிறதுமான வெளிச்சத்தில் கொண்டுவருகிறுர்; ஆண்டவரால்தவிர தங்களாலேயே வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறதில்லே என்று உள்ளுக்குள்ளாய் அறிந்துகொள்ள (3) அவர்களுக்கு சக்திகொடுக்கிறுர். ஒவ்வொருவர் விஷயத்திலும் விவேகம் அநேகருக்கு ஒரேமாதிரி இருப்பதாகத் தோன்றும்; ஆனுல் அது பேதமா யிருக்கிறது. தோற்றத்திலும் அதே காலத்தில் உண்மையிலும் இருப்பவர்களின் அறிவு, சூக்குமமான விவேகமானது. ஆனுல் தோற்றத்திலும் அதே காலத்தில் உண்மையிலும் இல்லாதவர்களின் அறிவு ஸ்தூலமான அறிவு; ஆனுல் இந்த பின் கூறிய அறிவு, மாரிகாலத்தின் வெளிச்சத்திலிருக்கிற ஒரு தோட்டத்திற்கு ஒப்பிடப்படலாம்; சூக்கும அறிவு, வசந்த காலத்து வெளிச்சத்திலிருக்கிற தோட்டத்திற்கு ஒப்பிடப்படலாம். பின்வரும் ஒழுங்கில் இந்த விஷயங்களேப் பற்றி அதிகம் வரும்: I. மனிதனுனவன் ஆண்டவரால் மட்டும், வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறுன். II. மனிதனுனவன் ஆண்டவரால் மட்டும் தேவர்கள் சுவர்க்கம் மூலமாயும் அதிலிருந்தும் வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறுன். III. மனிதன் உட்பெருக்கு மூலமாய் ஆண்டவரால் வழி காட்டப்பட்டு, உதாரணத்தால் கற்பிக்கப்படுகிறுன். IV. மனிதன் ஆண்டவரால் வேதத்தின் மூலமாயும், அதிலிருந்து கொள்கையிலிருந்தும் பிரசங்கம் செய்வதாலும் இவ்விதமாக அவரால் மட்டும் நேராய் கற்பிக்கப்படுகிறுன். V. மனிதனுனவன் புறம்பானதில் முழு பார்வைக்கும் தன்னுலே போல ஆண்டவரால் வழி காட்டப்பட்டுக் கற்பிக்கப்படுகிறுன்.

155. I. **மனிதனுனவன் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிருன். பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் காண்பிக்கப்பட்டவைகளி லெல்லாமிருந்து ஒரு சர்வவியாபக விளைவாக ஓடிவருகிறது; முதல் பாகத்தில் கூறிய ஆண்டவரின் பரம இச்சாசத்தியைப்பற்றியும், பரமஞானசத்தியைப்பற்றியும், அங்கே சொல்லப்பட்டவைகளிலிருந்தும், சூக்கும உலகத்து சூரியனைப் பற்றியும், ஸ்தூல உலகத்து சூரியனைப்பற்றியும் இரண்டாவது பாகத்தில் சொல்லியதிலிருந்தும், மூன்ருவது பாகத்திலிருக்கும் படிகள் விஷயத்தைப்பற்றியும், நான்காவது பாகத்தில் உலக சிருட்டியைப்பற்றியும், ஐந்தாவது பாகத்தில் மானிட சிருட்டியைப்பற்றியும் சொல்லியதிலிருந்தும்கூட இது ஏற்படுகிறது.

156. மனிதனுனவன் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டுக் கற்பிக்கப்படுகிருனென்பது, அவன் ஆண்டவரிடமிருந்து உயிரோடிருக்கிருனென்று அருத்தம் கொள்ளப்படுகிறது; ஏனென்ருல், அவனுடைய உயிரின் சித்தம் வழி காட்டப்படுகிறது, அவனுடைய உயிரில் புத்தி கற்பிக்கப்படுகிறது. ஆனால் இது தோற்றத்துக்கு விரோதமாயிருக்கிறது; ஏனென்ருல், மனிதனுக்கு தன்னிடமிருந்தேபோல் உயிரோடிருப்பதாகத் தோன்றுகிறது; அப்படியிருந்தாலும், அவன் தன்னிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து உயிரோடிருக்கிருனென்பது உண்மையாயிருக்கிறது. மனிதன் உலகத்திலிருக்கிறவரையில், அவனுக்கு, தான் ஆண்டவரிடமிருந்து மாத்திரம் உயிரோடிருக்கிருனென்று இந்திரிய ஞானத்தால் அறிந்துகொள்ள சக்தி கொடுக்கப்பட முடியாதாகையால், (தன்னிடமேயிருந்து உயிரோடிருக்கிருன் என்கிற தோற்றமானது அவனிடமிருந்து நீக்கப்படாதபடியினுல்; ஏனென்ருல், அந்த கருத்தில்லாமல் மனிதன் மனிதனுகமாட்டான்.) பின்னிட்டு அனுபவத்திலும், கடைசியாய் வேதத்திலும் ஸ்திரப்படுத்தப்படுகிற காரணங்களால் அது விசதமாக்கப்பட வேண்டும்.

157. மனிதனுனவன் தன்னிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் உயிரோடிருக்கிருனென்பது, பின்வரும்

காரணங்களால் ரூபகாரம் செய்யப்படுகிறது:—சிருட்டிக்கப்பட்ட எல்லாதத்துவங்களும், பொருள்களும், உருவங்களும் உற்பத்தியாகிற ஒற்றையான ஒரு சத்தும், ஒற்றையான ஒரு பொருளும், ஒற்றையான ஒரு உருவமும் இருக்கிறது. அந்த ஒற்றையான சத்தும், பொருளும், உருவமும், மனிதனிலிருக்கும் அன்புடனும் ஞானத்துடனும் சம்பந்தப்பட்டிருக்கும் எல்லா பொருள்களும் உண்டாகிற பரம இச்சாசக்தியாயும் பரம ஞானசக்தியுமாயிருக்கிறது. எல்லாபொருள்களும் சம்பந்தப்பட்டிருக்கிற நன்மையேயாயும் உண்மையேயாகவும்கூட அது இருக்கிறது: எல்லாபொருள்களின் உயிர் வருகிறதும், உயிரின் எல்லா பொருள்கள் வருகிறதுமான உயிர் இவைகள் தான். மேலும், இந்த ஒற்றையான ஒன்றேயாயிருப்பதும் தானேயாயிருப்பதுமானது; எங்கும் நிறைந்ததும், சர்வ ஞானமுள்ளதும், சர்வ வல்லமையுள்ளதுமாயிருக்கிறது. இந்த ஏகமானதும் தானேவாயிருப்பதுமான பொருள் நித்தியமான ஆண்டவர் அல்லது ஏகோவா. முதலாவது: சிருட்டிக்கப்பட்ட எல்லா சத்துகளும் பொருள்களும், உருவங்களும், வருகிற ஒற்றையான ஒரே சத்தும், ஒற்றையான ஒரே பொருளும், ஒற்றையான, ஒரே உருவமும் இருக்கிறது. இது பதிபசுபாச விளக்கம் எனும் நூலில் காண்பிக்கப்பட்டிருக்கிறது (பி. 44-46); ஆண்டவரிடமிருந்து வருகிறதும், ஆண்டவர் இருப்பதுமான தேவர்கள் சுவர்க்கத்து சூரியன், சிருட்டிக்கப்பட்ட எல்லா பொருள்களும் வருகிற அந்த ஒற்றையான ஒரு பொருளாயும், உருவமாயுமிருக்கிறதென்றும், அந்த சூரியனிடமிருந்து வராத எதுவும் இருக்கிறதில்லை என்றும், இருக்கக் கூடாதென்றும், அந்த நூலில் இரண்டாவது பாகத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. எல்லா பொருள்களும் காரண காரிய சித்தாந்தத்தின்படி உற்பவங்களினால் அதிலிருந்து வருகின்றன - என்பது, அங்கே (3) மூன்றாவது பாகத்தில் விவரப்படுத்தப்பட்டிருக்கிறது. எல்லா சத்துகளும் வரப்பட்ட ஒரு ஒற்றையான சத்து அல்லது எல்லா சொரூபங்களும் வரப்பட்ட ஒரு ஒற்றையான சொரூபம் இருக்கிறதென்று, யார் விவேகத்தினால் அறிந்துகொண்டு ஒத்துக்கொள்ளாமலிருக்கிறான்? சொரூபமில்லாமல் எது இருக்கக்கூடும்? எல்லா

சொரூபமும் வருகிற சோரூபம், சோரூபமே யல்லாமல் வேறு என்ன? தானே சோரூபமாகவே யிருக்கிறது, ஒறே ஒற்றையான சொரூபமாயும், தானே சோரூபமாயும் யிருக்கிறது. இது இப்படி யிருக்கிறதினாலும், இதை விவேகத்திலிருந்து ஒவ்வொருவனும் பார்த்து ஒத்துக்கொள்ளுகிறதினாலும், அல்லது அப்படியில்லா விட்டால், அதை அறிந்துகொண்டு ஒத்துக்கொள்ள சக்தியுள்ளவனா யிருப்பதினாலும், தெய்வமாகவே யிருக்கிறதும், ஏகோவாவாகவே யிருக்கிறதுமான இந்த சோரூபப் பொருள் இருக்கிறதும், நிலைத்திருக்கிறதுமான எல்லா பொருள்களுக்கும் எல்லாமாயிருக்
(4) கிறதென்பதை விட பிறகு என்ன ஏற்படுகிறது? எல்லா பொருள்களும் உண்டாகிற ஒரே ஒரு பொருள் இருப்பதாக சொல்லப்பட்டால், அதைப்போன்றதாகிறது; உருவமில்லாமல் பொருளானது ஒன்றுமாகாத படியினால், எல்லா பொருள்களும் உண்டாகிற ஒரே ஒரு உருவமிருக்கிறது என்று கூட ஏற்படுகிறது. தேவர்கள் சுவர்க்கத்து சூரியன் இந்த ஒரே ஒரு பொருளும் உருவமும் என்பதும், இன்னமும், இந்த சத்தானதும், பொருளும் உருவமும் சிருட்டிக்கப்பட்ட பொருளில் எவ்விதமாய் பேதம் காட்டப்படுகிற தென்பதும், மேல்சொன்ன நூலில்
(5) மெய்ப்பிக்கப் பட்டிருக்கிறது. இரண்டாவது: அந்த ஒரே ஒரு சத்தும், பொருளும், உருவமும், மனிதனிலிருக்கும் அன்புக்கும் ஞானத்துக்கும் சம்பந்தப்பட்ட எல்லா பொருள்களும் உண்டாகிற பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியுமா யிருக்கிறது. இது கூட பதிபசுபாச விளக்கமேனும் நூலில் முழுமையும் சொல்லப் பட்டிருக்கிறது. மனிதன் விஷயத்தில், உயிரோடிருப்பதாகத் தோன்றுகிற எந்தபொருளும், அவனிலிருக்கும் சித்தத்துக்கும் புத்திக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது; இந்தஇரண்டும் மனிதனுடைய உயிரை நிலைப்படுத்துகிற தென்பதை, ஒவ்வொருவனும், விவேகத்தினால் அறிந்துகொண்டு ஒத்துக்கொள்ளுகிறான். நான் இச்சிக்கிறேன், அல்லது நான் இதை அறிந்துகொள்ளுகிறேன் அல்லது நான் இதை நேசிக்கிறேன் அல்லது நான் இதை நினைக்கிறேன் என்பதைத்தவிர வேறு எதை நாம் கேட்கிறோம்? ஒரு மனிதன் தான் நேசிப்பதை இச்சிக்கிற

படியினாலும், தான் அறிந்துகொண்டதை நினைக்கிறபடியினாலும், சித்தத்தைச் சேர்ந்த எல்லாபொருள்களும் அன்புக்கும் புத்திக்கும் சேர்ந்த எல்லா பொருள்களும் ஞானத்துக்கு சம்பந்தப்பட்டுமிருக்கின்றன. இந்த இரண்டு பொருள்களும், அன்பேயாகவும், ஞானமேயாகவு மிருக்கிறவரிடமிருந்து தவிர, தன்னிடமேயிருந்து எவனிடத்திலும் நிலைத்திருக்கிறதாகையினால், நித்தியமான ஆண்டவர் அல்லது ஏகோவாவிடமிருந்து அது வருகின்றதென்று பின்தொடருகிறது. அந்த மூலத்திலிருந்து வாராவிட்டால், மனிதன் அன்பேயாகவும் ஞானமேயாகவும், ஆகையினால் நித்தியகால கடவுளாயிருப்பான்; அதை நினைத்தாலேயே மானிட அறிவு நடுங்குகிறது. தனக்கே முந்தியதிலிருந்து தவிர ஏதாவது இருக்கக்கூடுமா? இந்த முந்திய பொருள் கூட தனக்கு முந்தியதிலிருந்து தவிர நிலைக்கக்கூடுமா? இவ்விதமாகக் கடைசியில், தன்னில்தானே
(6) யாயிருக்கிற முதற் பொருளிலிருந்து தவிர நிலைக்கக்கூடுமா? மூன்றாவது: அம்மாதிரியே எல்லா பொருள்களும் சம்பந்தப்பட்டிருக்கிற நன்மையேயாகவும் உண்மையேயாகவும் அது இருக்கிறது. கடவுள் நன்மையே என்றும், உண்மையே என்றும், இன்னும் எல்லா நன்மையும் உண்மையும் அவரிடமிருந்து வருகின்றன வென்றும், ஆகையினால் நன்மையினிடமே யிருந்தும் உண்மையினிடமே யிருந்தும் தவிர, வேறு எந்த மூலத்திலும் எல்லா நன்மையும் உண்மையும்வராதென்றும் விவேகமுள்ள ஒவ்வொருவனாலும் பெற்றுக் கொள்ளப்பட்டு ஒத்துக்கொள்ளப்படுகிறது. இவைகளெல்லாம், கேட்கப்பட்டபோதே ஒவ்வொரு பகுத்தறிவுள்ள மனிதனாலும் ஒத்துக்கொள்ளப்படுகின்றன. ஆகையினால், ஆண்டவரால் வழி காட்டப்பட்ட மனிதன் விஷயத்தில், சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும், ஒவ்வொன்றும், அல்லது அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் ஒவ்வொன்றும், அல்லது ஆசையினுடையவும் சிந்தனையுடையவும் ஒவ்வொன்றும், நன்மைக்கும் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்று சொல்லப்படுகிறபோது, அந்த மனிதன் இச்சிக்கிறதும் அறிந்துகொள்ளுகிறதும் அல்லது தான் நேசிக்கிறதும், தான் புத்தியுள்ளவனா யிருக்கிறதும், அல்லது தான் மாறுதலுண்டாக்கப்படுகிறதும், தான் நினைக்கிறது

மான எல்லா பொருள்களும் ஆண்டவரிடமிருந்து வருகின்றன வென்று ஏற்படுகிறது. அதனால் தான் திருச்சபையிலுள்ள ஒவ்வொருவனும், மனிதனிடமிருந்து வரும் எல்லா நன்மையும், எல்லா உண்மையும், தங்களுக் குள்ளேயே உண்மையும் நன்மையு மல்லவென்றும், ஆண்டவரிடமிருந்து வருவது மாத்திரம் அப்படியிருக்கிறதென்றும் தெரிந்திருக்கிறான். இவைகளெல்லாம் உண்மையானபடியினால் அவ்வித மனிதன் இச்சிப்பதும் நினைப்பதுமாகிய எல்லாம், ஆண்டவரிடமிருந்து வருகிறதாக ஏற்படுகிறது. பின் வருவதினால், ஒவ்வொரு கெட்ட மனிதனும் கூட, வேறு எந்த மூலத்தினும் இச்சிக்கவும் நினைக்கவும் முடியாதென்று
(7) அறிந்துகொள்ளலாம். நான்காவது: எல்லா பொருள்களின் உயிரும், உயிரின் எல்லா பொருள்களும் வருகிற உயிராய் அவைகள் இருக்கின்றன. பதிபசுபாசமேனும் நூலில் அநேக இடங்களில் இது காண்பிக்கப்பட்டிருக்கிறது. புத்தியும் சித்தமும் நீக்கப்பட்டால் ஒருவன் உயிரில்லாதவனாகிறபடியினால், மனிதனுடைய உயிர் எல்லாம் அவனுடைய சித்தத்திற்கும் புத்திக்கும் சேர்ந்ததென்றும், அல்லது அதேவாகிறபடி, அன்பும் சிந்தனையும் நீக்கப்பட்டால் அவன் உயிரில்லாதவனாகிறபடியினால், மனிதனுடைய உயிரெல்லாம் அவனுடைய அன்புக்கும் சிந்தனைக்கும் சேர்ந்ததென்றும், மானிடவிவேகம் முதலில் கேட்கும்போதே கூட ஏற்றுக்கொண்டு ஒத்துக்கொள்ளுகிறது. முன்னமே கூறியபடி, சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் ஒவ்வொன்றும், அல்லது மனிதனிலிருக்கும் அன்பினுடையவும் சிந்தனையினுடையவும் ஒவ்வொன்றும், ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், உயிரைச் சேர்ந்த ஒவ்
(8) வொன்றும் அவரிடமிருந்து வருகிறதாக ஏற்படுகிறது. ஐந்தாவது: இந்த ஏகமானதும் தானேயாயிருப்பதுமான பொருள் சர்வ வியாபகமுள்ளதாயும், சர்வ ஞானமுள்ளதாயும், சர்வ வல்லமையுள்ளதாயு மிருக்கிறது. இதைக்கூட, ஒவ்வொரு கிருஸ்துவனும் தன்னுடைய சமய கோட்பாடிலிருந்தும், ஒவ்வொரு புறச்சமயத்தானும் தன்னுடைய சமயத்திலிருந்தும் ஒத்துக்கொள்ளுகிறான். அதனால் கூட, எங்கே இருந்தபோதினும் ஒவ்வொருவனும், தான் இருக்கும் இடத்தில் கடவுள் இருப்பதாக நினைத்து, நேரில்

இருப்பதாகப் பிரார்த்திக்கிறான். ஒவ்வொருவனும் அம்மாதிரி நினைத்து அம்மாதிரி பிரார்த்திக்கிறபடியினால், கடவுள் எங்குமிருக்கிறாரென்பதையும், ஆகையினால் எங்கும் நிறைந்தவரென்பதையும் தவிரவும், அம்மாதிரியே அவர் சர்வ ஞானமுள்ளவர் என்பதும் சர்வ வல்லமையுள்ளவர் என்பதும் தவிரவும் வேறு விதமாய் நினைக்கமுடியாதென்று ஏற்படுகின்றது. ஆகையினால், தன்னுடைய இருதயத்தில் கடவுளை பிரார்த்திக்கிற ஒவ்வொருவனும், அவரால் அப்படிச் செய்யக்கூடுமாகையால், தனக்கு வழிகாட்ட அவரை வேண்டிக்கொள்ளுகிறான்; இவ்விதமாக ஒவ்வொருவனும், தெய்வ சர்வவியாபகத்தையும், சர்வஞ்ஞத்துவத்தையும், சர்வ வல்லமையையும், பிறகு ஒத்துக்கொள்ளுகிறான். அப்பொழுது தன்னுடைய முகத்தை ஆண்டவர் பக்கம் திருப்புகிற படியினால், அவன் அவைகளை ஒத்துக்கொள்ளுகிறான்; அப்பொழுது இந்த உண்மையானது அவரிடமிருந்து பாய்கிறது. (9) ஆறாவது: இந்த ஏகமானதும் தானேயாயிருப்பதுமான பொருள் நித்தியமான ஆண்டவர் அல்லது ஏகோவாவாக இருக்கிறார். ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கையில், கடவுளானவர் பிரதானம்சத்திலும், உருவத்திலும் ஒருவரென்றும், இந்த கடவுள் ஆண்டவரென்றும், பிதாவாகிய ஏகோவா என்று சொல்லப்பட்ட தெய்வமே சதாகால ஆண்டவராயிருக்கிறாரென்றும், மனுஷத்தன்மையான தெய்வமானது, நித்தியகால தன் தெய்வீகத்திலிருந்து கருத்தரிக்கப்பட்டு, உலகத்தில் பிறந்த குமாரனென்றும், வெளிப்படும் தெய்வம் பரிசுத்த ஆவியென்றும் காண்பிக்கப்பட்டது. ஏகோவா அல்லது நித்தியகால ஆண்டவர் எல்லா பொருள்களும் வருகிற அன்பேயாயும் ஞானமேயாயும், அல்லது நன்மையேயாயும் உண்மையேயாகவுமிருப்பதினால், அவர் உயிராகத் தானேயிருக்கிறாரென்று முன்பு சொல்லப்பட்டபடியினால். தானேயிருப்பதென்றும் ஏகமானதென்றும் சொல்லப்பட்டது. ஆண்டவர் சூனியத்திலிருந்தல்லாமல், தன்னிடமேயிருந்து எல்லா பொருள்களையும், சிருட்டித்தாரென்பது, பதிபசுபாச விளக்கமெனும் நூலில் பார்க்கலாம் (பி. 282-284, 349-357). இவைகளிலெல்லாமிருந்து, மனிதனானவன் ஆண்டவரால் மாத்திரம் வழி

காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிருனென்கிற உண்மை, காரணங்களால் ஸ்திரப்படுத்தப் படுகின்றது.

158. அதே உண்மை, தேவர்கள் விஷயத்தில், காரணங்களினுல் மட்டுமல்லாமல், உயிருள்ள உணர்ச்சிகளால் கூட ஸ்திரப் படுத்தப் படுகிறது; மூன்ருவது சுவர்க்கத்து தேவர்கள் விஷயத்தில் முக்கியமாய் அப்படி செய்யப்படுகிறது; இந்த தேவர்கள், ஆண்டவரிடமிருந்து வரும் பரம இச்சாசத்தியினுடையுயும் பரம ஞான சத்தியினுடையவும் உட்பெருக்கைப் பார்க்கிருர்கள்; அவர்கள் அதை அறிந்துகொள்ளுகிற படியினுலும், தங்களுடைய ஞானத்திலிருந்து, இவைகள் உயிரென்று தெரிந்துகொள்ளுகிற படியினுலும், அவர்கள் தங்களிடமிருந்தல்லாமல் ஆண்டவரிடமிருந்து உயிரோடிருப்பதாகச் சொல்லுகிருர்கள்; இதை அவர்கள் சொல்லுவது மட்டுமல்லாமல், அது அப்படியிருக்க வேண்டுமென்று, அன்பு பாராட்டி ஆசைகொள்ளுகிருர்கள். அப்படியிருந்தாலும் எல்லா தோற்றத்துக்கும், தங்களிடமிருந்தே உயிரோடிருப்பது போல இருக்கிருர்கள். அதுவன்றி, மற்ற தேவர்களைவிட பலத்த தோற்றத்திலிருப்பதாக இருக்கிருர்கள்; ஏனென்றுல், மேல் காண்பித்தபடி, (42-45), ஆண்டவருடன் எவனுகிலும் எவ்வளவு அதிகமாய் நெருங்க சேர்க்கப்படுகிருனே, அவ்வளவு அதிகமாய் ஸ்பஷ்டமாக தான் தன்னுடைய சொந்தம் போல் தனக்கே தோன்றுகிருன்; மேலும், தான் ஆண்டவருடையவனென்று அவ்வளவு அதிகமாய்த் தெளிவாகப் பார்க்கிருன். அவ்வித உணர்ச்சியிலிருக்கவும், அதே காலத்தில் இதற்கு முன் அநேக வருஷகாலமாக தோற்றத்திலு மிருக்கவும், எனக்கு அருள்கூட செய்யப்பட்டது; அதிலிருந்து, நான் என்னிடமே யிருந்து, எதையும் இச்சித்து நினைக்காமல், என்னிடமே யிருந்து போல் அப்படி செய்வதாகத் தோன்றுகிறதென்று நான் முழுமையும் நம்பும்படி செய்யப்பட்டேன்; மேலும், இதை இச்சிக்கவும் நேசிக்கவும் கூட எனக்கு அருள் செய்யப்பட்டது. இதே உண்மை சூக்கும உலகத்திலிருந்து அநேக இதர விஷயங்களால் ஸ்திரப்படுத்தப் படக் கூடும்; ஆனுல் இந்த இரண்டும் தற்காலத்துக்குப் போதும்.

159. ஆண்டவருக்கு மாத்திரம் உயிருண்டென்பது வேதத்திலிருக்கும் இந்த வாக்கியங்களால் விசதமாகிறது: "நானே உயிர்த்தெழுதலும், ஜீவனுமாயிருக்கிறேன், என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான் (யோவா XI. 25)." "நானே வழியும் சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன் (யோவா. XIV. 6)". "அந்த வார்த்தை தேவனுயிருந்தது. அவருக்குள் ஜீவன் இருந்தது, அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது." (யோவா. 1, 4); அங்கே வார்த்தை தேவனுயிருக்கிறது. "பிதாவானவர் தம்மில் தாமே ஜீவனுடையவரா யிருக்கிறதுபோல, குமாரனும் தம்மில், தாமே ஜீவனுடையவரா யிருக்கும்படி அருள் செய்திருக்கிறுர்" (யோ. V. 26). மனிதனுனவன் ஆண்டவரால் மாத்திரம் வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறு னென்பதுபின்வரும் வாக்கியங்களால் விசதமாகிறது: "என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது" (யோவா. XV. 5). "பரலோகத்திலிருந்து ஒருவனுக்கு கொடுக்கப்பட்டாலொழிய, அவன் ஒன்றையும் பெற்றுக்கொள்ளமாட்டான் (யோவா. III-27)." "ஒருமனிதன் ஒரு மயிரையாவது வெண்மையாக்கவும், கறுப்பாக்கவும் முடியாது" (மத்தே V-36); வேதத்தில் மயிர் என்பதால் எல்லாவற்றிலும் குறைந்தது என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது.

160. துன்மார்க்கர்கள் உயிர்கூட அதே மூலத்திலிருந்துவருகிறதென்பது, பின்னிட்டு அதற்குச் சேர்ந்த பிரிவில் நிச்சயப்படுத்தப்படும். இங்கே இப்பொழுது உவமிக்கையினுல் மாத்திரம் தெளிவிக்கப்படும். உலகத்து சூரியனிடமிருந்து சூடும் ஒளியும் இரண்டும் பெருக்கெடுக்கின்றன; கெட்ட கனி கொடுக்கும் மரங்களிலும், நல்ல கனிகொடுக்கும் மரங்களிலும், அவை ஒரே விதமாய் பாய்கின்றன; அவைகள் உயிரடைந்து ஒரே மாதிரி வளருகின்றன. சூடேயல்லாமல், சூடு பாயும் உருவங்கள் இந்த விகற்பத்தை உண்டாக்குகின்றன. ஒளிவிஷயத்திலும் அம்மாதிரியே; அது ஓடும் உருவங்களுக்கு தக்கபடி ஒளியானது பல வர்ணங்களாக்கப்படுகிறது; அழகுள்ளதும் இதமுள்ளதுமான நிறங்களிருக்கின்றன; அவலக்ஷணமானதும் விசனத்தை உண்டாக்கும் நிறங்களுமிருக்

கின்றன; அப்படி யிருந்தும் ஒளியானது ஒன்றே. சூக்கும உலகத்து சூரியனிடமிருந்து வரும் அன்பாக தன்னில் தானே வாயிருக்கிற சூக்கும சூட்டின் பெருக்கோடும், ஞானமாகவே யிருக்கிற சூக்கும ஒளியுடனும் அதேமாதிரி யிருக்கிறது. அவைகள் பாயும் உருவங்கள் விகற்பத்தை உண்டாக்குகின்றன; ஆனால் அன்பாயிருக்கிற இந்த சூடும், ஞானமாயிருக்கிற இந்த ஒளியும் அப்படி செய்கிறதில்லை. அவைகள் பாயும் உருவங்கள், மானிடமனதுகளா யிருக்கின்றன. இதிலிருந்து மனிதனானவன் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டு கற்பிக்கப் படுகிறானென்று இப்பொழுது விசதமாகிறது.

161. ஆனால் பிராணிகள் உயிர் என்னவென்று மேலேகாண்பிக்கப்பட்டது: அதாவது அது ஸ்தூல ஆசையினுடையவும் அதைச் சேர்ந்த அறிவினுடையவும் உயிர் மட்டுமென்றும், அது சூக்கும உலகத்திலுள்ளவர்களின் உயிருக்கு ஒத்த நடுத்தரமான உயிரென்றும் காண்பிக்கப்பட்டது.

162. II. **மனிதனானவன் தேவர்கள் சுவர்க்கத்தின் மூலமாயும் அதிலிருந்தும் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டு கற்பிக்கப் படுகிறான்.** மனிதனானவன் தேவர்கள் சுவர்க்கத்தின் மூலமாயும், அதிலிருந்தும் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்படுகிறானென்று சொல்லப்பட்டது; ஆனால் தேவர்கள் சுவர்க்கத்தின் மூலமாய் அவன் வழி காட்டப்படுகிறானென்பது தோற்றத்தை அனுசரித்திருக்கிறது; ஆனால் அவன் அந்த சுவர்க்கத்திலிருந்து வழி காட்டப்படுகிறானென்பது உண்மையை அனுசரித்ததாயிருக்கிறது. ஆண்டவர் அந்த சுவர்க்கத்துக்கு மேல் ஒரு சூரியனாக தோன்றுகிற படியினால், அது தேவர்கள் சுவர்க்கத்தின் மூலமாயிருக்கிறது போல் தோன்றுகிறது; ஆண்டவர் அதில், ஆன்மா மனிதனிலிருப்பதுபோல், இருக்கிறபடியினால் அது அந்த சுவர்க்கத்திலிருந்து வருகிறதென்பது உண்மையாயிருக்கிறது. ஏனென்றால், மேல் காண்பித்தபடி, ஆண்டவர் சர்வவியாபகமுள்ளவர், இடவரைக்குட்பட்டவர் அல்ல; ஆகையினால், தூரம் என்பது அவருடன்

ஐக்கியப் படுதலுக்குத் தக்கபடி ஒரு தோற்றமாயிருக்கிறது; ஐக்கியமென்பது, அவரிடமிருந்து, அன்பையும் ஞானத்தையும் பெற்றுக் கொள்ளுதலுக்குத் தக்கபடி யிருக்கிறது. எவனும் ஆண்டவருடன் தன்னில் தானே அவர் இருப்பதுபோல் ஐக்கியப்பட செய்ய முடியாதபடியினுல், அவர் ஓர் சூரியனைப்போல் தூரத்திலுள்ள தேவர்களுக்குத் தோன்றுகிருர்; அப்படி யிருந்தாலும், தேவர்கள் முழு சுவர்க்கத்தில், அவர் ஆன்மா மனிதனிலிருப்பது போல் யிருக்கிருர்; அம்மாதிரியே, சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டத்திலும் அங்கிருக்கும் ஒவ்வொரு தேவனிலும்கூட அவர் இருக்கிருர்; ஏனென்ருல், ஒரு மனிதனுடைய ஆன்மா, முழுவதின் ஆன்மாவாக மாத்திரமல்லாமல், ஒவ்வொரு பாகத்துக்கும் கூட
(2) அவ்விதமாக யிருக்கிறது. ஆனுல், ஆண்டவர் சர்வ வியாபக சுவர்க்கத்தையும், அதன் மூலமாய் உலகத்தையும், தன்னிடமிருந்து தோன்றுகிறதும், அதில் தான் யிருப்பதுமான சூரியனிடமிருந்து அரசாளுகிருரென்பது தோற்றத்தின்படி யிருப்பதினுலும், (அந்த சூரியனைப் பற்றி பதிபசுபாச விளக்கம் எனும் நூலின் இரண்டாவது பாகத்தைப் பார்க்கவும்), வேறு விதமாய் முடியாதபடியினுல், எந்த மனிதனும் தோற்றத்திலிருந்து பேசவிடக்கூடுமாகையினுலும், ஞானமே இல்லாதவன் எவனும், எல்லாபொருள்களையும் ஒவ்வொன்றையும் தன்னுடைய சூரியனிடமிருந்து அரசாளுகிருரென்றும், அதனுடன் உலகத்தைத் தேவர்கள் சுவர்க்கத்தின் மூலமாய் அரசாளுகிருரென்றும் நினைக்க விடக்கூடும். தாழ்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள், அவ்வித தோற்றத்திலிருந்துகூட நினைக்கிருர்கள்; ஆனுல், உயர்ந்த சுவர்க்கங்களின் தேவர்கள் நிஜமாகவே தோற்றத்திலிருந்து பேசுகிருர்கள். ஆனுல், ஆண்டவர் தேவர்கள் சுவர்க்கத்திலிருந்து அதாவது தன்னிடமேயிருந்து பிரபஞ்சத்தை அரசாளுகிருரென்கிற உண்மையிலிருந்து நினைக்
(3) கிருர்கள். பேதமையானவர்களும் ஞானமுள்ளவர்களும் ஒரே மாதிரி பேசுகிருர்களென்பதும், ஆனுல் ஒரே மாதிரி நினைக்கிறதில்லை என்பதும், உலகத்து சூரியனுல் திருஷ்டாந்தப் படுத்தப்படக்கூடும். எல்லாரும் அதைப்பற்றி தோற்றத்தின்படி, அது உதயமாகிறதாகவும் அஸ்தமிக்கிறதாகவும் சொல்லுகிருர்

கள். ஆனால், புத்தியுள்ளவர்களோ, அதே வழியில் பேசினபோதிலும், உண்மையாய்கூட யிருக்கிறபடி, அது அசையாமல் நிற்கிறதென்றும், மற்றவிதம் தோற்றமென்றும் நினைக்கிறார்கள். அதேகூட சூக்கும உலகத்தின் தோற்றங்களால் திருஷ்டாந்தப் படுத்தப்படக்கூடும்; ஏனென்றால், இடங்களும், தூரங்களும், அங்கே ஸ்தூல உலகத்திலிருப்பதுபோலத் தோன்றுகின்றன; அப்படியிருந்தாலும், அவைகள் ஆசைகளுடையவும், அதிலிருந்து சிந்தனைகளுடையவும் ஒப்பின்மைக்குத் தக்கபடி தோற்றங்களாயிருக்கின்றன. ஆண்டவர் தன்னுடைய சூரியனில் தோன்றும் விஷயத்திலும் அம்மாதிரியே யிருக்கிறது.

163. ஆண்டவர், ஒவ்வொரு மனிதனையும் தேவர்கள் சுவர்க்கத்திலிருந்து எப்படி வழி காட்டி, கற்பிக்கிறாரென்பது, சில வார்த்தைகளில் சொல்லப்படவேண்டும். **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலிலும், தெய்வ **அரசியலைக் குறி**த்த இந்த நூலில்மேலேயும், 1758ம் வருஷத்தில் **லண்டன்** நகரத்தில் பிரசுரித்த **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலிலும் கூட, பார்த்ததிலும் கேட்டதிலுமிருந்து, சர்வ வியாபக தேவர்கள் சுவர்க்கம், ஆண்டவர் முன்பாக ஒரு மனிதனைப் போலவும், அம்மாதிரியே சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டமும் தோன்றுகிறதாகவும், இதிலிருந்து தான், ஒவ்வொரு தேவனும் ஆன்மாவும், பரிபூரணமான உருவத்தில் ஒரு மனிதனாய் இருப்பதாகவும் தெரியப் படுத்தப்பட்டது. மேலும், மேல்குறித்த நூல்களில், சுவர்க்கமானது தேவர்கள் சுயத்தன்மையிலிருந்து சுவர்க்கம் அல்லவென்றும், ஆனால் தேவர்களால் ஆண்டவரிடமிருந்து பரம இச்சாசத்தியையும் ஞானசத்தியையும் பெற்றுக் கொள்ளுதலால் உண்டாகிறதென்றும் கூட காண்பிக்கப்பட்டிருக்கிறது. அதிலிருந்து, ஆண்டவர் சர்வவியாபக தேவர்கள் சுவர்க்கத்தை ஒரு மனிதனைப் போல் அரசாளுகிறாரென்றும், அந்த சுவர்க்கமானது, தன்னில் தானே ஒருமனிதனா யிருப்பதினால், ஆண்டவரின் பிரதிமையாகவும் சாயலாகவுமே யிருக்கிறதென்றும், ஆண்டவரே அந்த சுவர்க்கத்தை, ஆன்மா தன் சரீரத்தை அரசாளுகிறது போல் அரசாளுகிறாரென்றும் வெளிப்

படையா யிருக்கிறது. மேலும், சர்வவியாபகமான மானிட ஜாதி ஆண்டவரால் அரசாளப்படுகிற படியினுல், அது சுவர்க்கத்தின் மூலமாய் அல்லாமல், சுவர்க்கத்திலிருந்து ஆண்டவரால் அரசாளப் படுகிறது; அதனுல், முன் சொல்லியபடி அவரே சுவர்க்கமான படியினுல், அவரிடமே யிருந்து அரசாளப் படுகிறது.

164. ஆனுல், இது தேவர்கள்ஞானத்தின் ஓர் இரகசியமான படியினுல், தன்னுடைய பரமார்த்த மனது திறக்கப்பட்டிருக்கிறவனுல் மட்டும், அது கிரகிக்கப்படக் கூடும்; ஏனென்ருல், அவன் ஆண்டவருடன் ஐக்கியப்பட் டிருப்பதினுல், ஓர் தேவனுயிருக்கிருன்; முகவுரையாக சொல்லப்பட்டதிலிருந்து, இந்த மனிதனுல், பின் தொடரும் விஷயங்கள் கிரகிக்கப்படக் கூடும்: 1. மனிதர்களும் தேவர்களுமாகிய எல்லாரும் ஆண்டவரிலும், அவர்களில் ஆண்டவரும், அவருடன் ஐக்கியத்துக்குத் தக்கபடி, அதே கருத்தான, அவரிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் பெற்றுக் (2) கொள்ளுகிறதற்குத் தக்கபடி இருக்கிருர்கள். 2. இவர்களில் ஒவ்வொருவனுக்கும் ஐக்கியத்தின் குணத்தை அனுசரித்தும், அல்லது அவரை ஏற்றுக்கொள்ளுதலை அனுசரித்தும், ஆண்டவ (3) ரில், ஆகையினுல் சுவர்க் கத்தில் ஒரு இடம் கொடுக்கப்படுகிறது. 3. தன்னுடைய இடத்தில், ஒவ்வொருவனுடைய நிலைமை மற்றவர்களின் நிலைமைகளிலிருந்து வேருனதா யிருக்கிறது; பொதுவான உபயோகத்திலிருந்து, மானிட சரீரத்தில் ஒவ்வொரு பொருளுடனும் இருக்கிறது போல, தான் இருக்கும் இடத்துக்கும், தொழிலுக்கும், ஆவசியகமானதுக்கும் தக்கபடி (4) அவனுக்கும் தொழில் ஏற்படுகிறது. 4. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய வாழ்க்கைக்குத் தக்கபடி ஆண்டவரால் அவன் இருக்கவேண்டிய இடத்தில் பிரவேசிக்கச் செய்யப்படுகிருன். (5) 5. ஒவ்வொருமனிதனும் பாலியத்திலிருந்து தன்னுடைய ஆன்மாவும் உயிரும் ஆண்டவரா யிருக்கிற அந்த **தெய்வமனிதனிடம்** கொண்டு வரப்படுகிருன்; அவருக்கு வெளியே யல்லாமல், **அவருக்குள்**, அவன் அவரிட **பரம இச்சாசத்திக்குத்** தக்கபடி அவருடைய **பரமஇச்சாசத்தியிலிருந்து** வழிகாட்டப்பட்டுக் கற்பிக்கப்படுகிருன்.

ஆனால், சுவேச்சையானது மனிதனிடமிருந்து நீக்கப்படாத படியி னால், தன்னாலேயே போல் ஏற்றுக்கொள்ளுதலுக்குத் தக்கபடி அல்லாமல் மற்ற விதமாய் ஒரு மனிதன் வழி காட்டப்பட்டு கற் (6) பிக்கப் பட முடியாது. 6. ஏற்றுக் கொள்ளுகிறவர்கள், அன்னரசம், மணிக்குழல் பாலுக்குரிய குழாய்கள் மூலமாய் அதன் ஆசயத்துக்கும், இதிலிருந்து மார்பிற்கு அடுத்த குழாய் மூலமாய் இரத்தத்திற்கும், அவ்விதமாய் அதன் நியமஸ்தானத் துக்கும் கொண்டு போகப்படுவது போல், வளைந்து வளைந்து (7) போகும் நீரோட்டங்களினால் போல் முடிவற்ற சுற்றுகளி னால் தங்கள் இடங்களுக்கு நடத்தப்படு கிறார்கள். 7. பெற்றுக் கொள்ளாதவர்கள், மலங்களும் சிறுநீர்களும் மனிதனிலிருந்து பிரிக்கப்படுவது போல், தெய்வமனிதனில் இருக்கிறவர்களிட மிருந்து பிரிக்கப்படுகிறார்கள். இவைகள் எல்லாம் மனிதன் கொஞ்சமாவது கிரகிக்ககூடிய தேவதா சம்பந்தமான ஞானத்தின் இரகசியங்களா யிருக்கின்றன; ஆனால் அவன் கிரகிக்கக் கூடாத வைகள் இன்னும் அநேக மிருக்கின்றன.

165. III. மனிதனானவன் ஆண்டவரால், உட்பெருக்கினால் வழி காட்டப்பட்டு, ஞானம் உண்டாக்கப்படுவதால் கற்பிக்கப்படுகி றான். அன்பிற்கும் சித்தத்திற்கும், வழி காட்டலும் உட்பாய்த லும் சம்பந்தப்பட்ட வார்த்தைகளான படியினால், மனிதனானவன் உட்பெருக்கினால் ஆண்டவரால் வழிகாட்டப் படுகிறான்; கற்பித் தலும், திருஷ்டாந்தமும், ஞானத்தையும் புத்தியையும் சரியாய் குறிக்கும் வார்த்தைகளா யிருப்பதினால், மனிதனானவன் ஆண்டவ ரால் திருஷ்டாந்தத்தினால் கற்பிக்கப் படுகிறான். ஒவ்வொரு மனித னும் தன்னுடைய சொந்த அன்பிலிருந்து தன்னாலேயே வழி காட்டப்படுகிறா னென்பதும், புத்தியிலிருந்தல்லாமல், அதன்படி மற்றவர்களால் வழிகாட்டப் படுகிறானென்பதும், தெரிந்திருக் கிறது. அன்பு அல்லது சித்தம் அதை உருவாக்கும்போது மாத்திரம் அவன் புத்தியிலிருந்தும், அதை அனுசரித்தும் வழி காட்டப் படுகிறான்; இப்படி நேரிடும் பட்சத்தில், புத்தியைப்பற்றி அது வழிகாட்டப் படுகிறதென்று கூட சொல்லப்படக் கூடும்;

அப்படி யிருந்தாலும் அப்பொழுது வழிகாட்டப் படுவது புத்தி யல்ல, ஆனால், அதிலிருந்து வரும் சித்தம் அப்படி செய்யப்படு கிறது. முன்னமே காண்பித்தபடி, ஆன்மா சரீரத்துக்குள் பாய் கிறதென்றும், உட்பெருக்கு ஸ்தூலமானதல்லாமல் சூக்குமமான தென்றும், ஒரு மனிதனுடைய ஆன்மா அல்லது உயிர் அவ னுடைய அன்பு அல்லது சித்தமென்றும் சொல்வது வழக்கமாய் விட்ட படியினாலும், மேலும் உட்பெருக்கு என்பது, ஒப்பீடாய் இரத்தம் இருதயத்திலும், இருதயத்திலிருந்து சுவாசாசயங்களி லும் பாய்வது போல இருப்பதினாலும், உட்பெருக்கு என்கிற வார்த்தை உபயோகப்படுத்தப் படுகிறது. சித்தத்துடன் இரு தயத்தினுடையவும், புத்தியுடன் சுவாசாசயங்களுடையவும் ஓர் அன்னுவய மிருக்கிறதென்பதும், புத்தியுடன் சித்தத்தின் ஐக்கி யம், இருதயத்திலிருந்து சுவாசாசயங்களில் இரத்த உட்பெருக்கு போல் இருக்கிறதென்பதும், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 371-432) காண்பிக்கப் பட்டிருக்கிறது.

166. ஆனால், கற்பித்தலும், திருஷ்டாந்தமும் புத்தியைக் குறிப்பிட உபயோகப்படுத்தப்படும் சொற்களாயிருப்பதினால் மனிதனானவன் ஒப்பனையால் கற்பிக்கப்படுகிறான்; ஏனென்றால், மனிதனுடைய உட்பார்வையாயிருக்கிற புத்தியானது, கண் அல் லது மனிதனுடைய புறம்பான பார்வை, ஸ்தூல வெளிச்சத்தினால் வெளிச்ச மாக்கப்படுவது போல் சூக்கும வெளிச்சத்தினால் வெளிச்சமாக்கப்படுகிறது. இரண்டும், அம்மாதிரியாக கூட கற்பிக் கப்படுகின்றன; ஆனால், புத்தியின் பார்வையா யிருக்கிற உட்பார் வை, சூக்குமப் பொருள்களிலிருந்து கற்பிக்கப்படுகின்றது; கண் ணின் வெளிச்சமாயிருக்கிற புறம்பான பார்வை ஸ்தூலபொருள் களிலிருந்து கற்பிக்கப்படுகின்றது. சூக்கும வெளிச்சமும், ஸ்தூல வெளிச்சமும் இருக்கின்றன; இரண்டும் புறம்பான பார்வையில் ஒரே மாதிரி யிருக்கின்றன; ஆனால், உட்பார்வை விஷயத்தில் வேறுபாடுள்ளதாயிருக்கின்றன; ஏனென்றால், ஸ்தூல வெளிச்சம் ஸ்தூலஉலகத்து சூரியனிடமிருந்துவந்து, அதினால் தன்னில்தானே

இறந்ததா யிருக்கிறது; ஆனால், சூக்கும வெளிச்சம், சூக்கும உலகத்து சூரியனிலிருந்து வந்து, அதனால் தன்னில்தானே உயிருடையதாயிருக்கிறது; பின் கூறிய வெளிச்சம்தான் மானிட புத்தியை வெளிச்சமாக்குகிறது, ஸ்தூல வெளிச்சம் அப்படிச் செய்கிற (2)தில்லை. ஸ்தூலமானதும் விவேகத்தோடிசைந்ததுமான வெளிச்சம், இந்த பின் கூறியதிலிருந்து அல்லாமல், முன்கூறியதிலிருந்து வருகிறது. அது சூக்கும ஸ்தூலமாயிருப்பதினால் அதற்கு ஸ்தூலமானதும் விவேகத்தோடு இசைந்ததுமான வெளிச்சமென்று சொல்லப்படுகிறது; ஏனென்றால், அதி சூக்கும வெளிச்சமென்றும், சூக்கும வெளிச்ச மென்றும், சூக்கும ஸ்தூல வெளிச்சமென்றும், சூக்கும உலகத்தில் வெளிச்சத்தில் மூன்று அந்தஸ்துகள் யிருக்கின்றன. அதி சூக்கும வெளிச்சம் சுவாசிக்கிற செம்மை கொண்ட வெளிச்சம்; மூன்றாவது சுவர்க்கத்தில் உள்ளவர்களுக்கு அது உண்டு. சூக்கும வெளிச்சம் வெண்மையான பிரகாசிக்கும் வெளிச்சம்; மத்திய சுவர்க்கத்தில் இருக்கப்பட்டவர்களுக்கு அது உண்டு. சூக்கும ஸ்தூல வெளிச்சம், நம் உலகத்தில் இருக்கும் பகல் வெளிச்சம் போன்றது; இறுதியான சுவர்க்கத்திலுள்ளவர்களுக்கு இந்த வெளிச்சம் உண்டு; அதனுடன், சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில்உள்ள ஆவிகள் உலகத்தி லிருக்கிறவர்களுக்கு இது உண்டு. ஆனால் ஆவிகள் உலகத்தில், நல்லவர்கள் விஷயத்தில் இந்த வெளிச்சம் பூமியின் பேரில் கோடைகால வெளிச்சம்போ லிருக்கும். துஷ்டர்கள் விஷயத்தில் மாரிகால வெளிச்சம்போ லிருக்கும். ஆயினும், சூக்கும உலகத்து எல்லா வெளிச்சமும், ஸ்தூல உலகத்து வெளிச்சத்துடன் யாதொரு பொதுவானதுமில் லையென்று தெரிந்திருக்க வேண்டும்; உயிருள்ளதற்கும் உயிரில் (3)லாததற்கும் போல் அவைகள் பேதப்படுகின்றன. நம் கண்கள் முன்பாக இருக்கிறதுபோன்ற ஸ்தூல வெளிச்சம் புத்தியை வெளிச்சமாக்காமல், ஆனால் சூக்கும வெளிச்சம் அப்படி செய்வதாக இதிலிருந்து விசதமாகிறது. மனிதனுக்கு இதுவரையில் சூக்கும வெளிச்சத்தைப்பற்றி யாதொன்றும் தெரியாதபடியினால், இது அவனுக்கு தெரியாது. சூக்கும வெளிச்சமானது அதன் உற்பத்தியில் **பரம ஞானசத்தி** அல்லது **பரம உண்மையா** யிருக்கிறதென்று,

**சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் காண்பிக்கப் பட்டது (பி. 126-140).

167. இப்பொழுது சுவர்க்கத்து வெளிச்சத்தைப் பற்றி பேசியபடியினால், நரகத்து வெளிச்சத்தைப் பற்றி சிலது கூட சொல்லப்பட வேண்டும். நரகத்தில் வெளிச்சம் கூட, மூன்று அந்தஸ்துகள் உள்ளதா யிருக்கிறது. மிகவும் தாழ்ந்த நரகத்து வெளிச்சம், எரியும் மரக்கரியிலிருந்து வரும் வெளிச்சம் போலிருக்கும்; மத்திய நரகத்து வெளிச்சம், அடுப்பின் பேரிலுள்ள நெருப்பின் சுவாலையிலிருந்து வரும் வெளிச்சம் போலிருக்கும்; உன்னதமான நரகத்து வெளிச்சம் மெழுகு திரிகளிலிருந்து வரும் வெளிச்சம் போலிருக்கும்; சிலருக்கு இரவில் சந்திரன் வெளிச்சம் போலிருக்கும். இந்த வெளிச்சங்கள்கூட ஸ்தூலமானவைகளல்ல, சூக்குமமானவைகள்; ஏனென்றால், எல்லா ஸ்தூலவெளிச்சமும் இறந்து போனவைகளா யிருக்கின்றன; அவைகள் புத்தியை அறிவிக்கின்றன; நரகத்திலுள்ளவர்களுக்கு முன்னமே காண்பித்தபடி பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட அறிந்து கொள்ளும் மனோசக்தி உண்டு. பகுத்தறிவுடைமை என்பதே ஸ்தூல வெளிச்சத்திலிருந்து கொஞ்சம்கூட அல்லாமல், சூக்கும வெளிச்சத்திலிருந்து வருகிறது; பகுத்தறிவுடைமையிலிருந்து அவர்களுக்கு இருக்கும் சூக்கும வெளிச்சம், பகல் வெளிச்சம் இரவு (2) இருட்டாக மாற்றப்படுவது போல், நரகத்து வெளிச்சமாக மாற்றப்படுகிறது. என்றாலும் சுவர்க்கத்திலுள்ளவர்களும் நரகத்திலுள்ளவர்களுமாகிய சூக்கும உலகத்திலுள்ள எல்லாரும், மனிதனானவன் பகலில் தன்னுடைய வெளிச்சத்தில் பார்க்கிறது போல், தங்கள் சொந்த வெளிச்சத்தில் அவ்வளவு தெளிவாய்ப் பார்க்கிறார்கள்; எல்லாருடைய கண் பார்வையும், அது இருக்கும் வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள உருவாக்கப் பட்டிருக்கிறது என்பது, காரணமா யிருக்கிறது. இம்மாதிரியாக, சுவர்க்கத்து தேவர்களின் கண் பார்வை, அது இருக்கும் வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள உருவாக்கப் பட்டிருக்கிறது; தங்கள் சொந்த வெளிச்சத்தை ஏற்றுக்கொள்ள நரகத்து ஆவிகளுக்குள்ள கண் பார்வை, இரவில்

பொருள்களைப் பார்க்கிறதும், அந்திப் பொழுதில், மற்றபட்சிகள் அவைகளை பகலில் அவ்வளவு தெளிவாய்ப் பார்க்கிறதுமான ஆந்தைகளையும் வெளவால்களையும் போல் ஒப்பீடா யிருக்கிறது; ஏனென்றால், அவர்களுடைய கண்கள் தங்கள் சொந்த வெளிச்(3)சத்தை ஏற்றுக்கொள்ள உருவாக்கப் பட்டிருக்கின்றன. ஆனால், இந்த வெளிச்சங்களுக்குள்ள வித்தியாசம், சுவர்க்கத்து ஓர் தேவன் நரகத்திற்குள் பார்க்கும்போது, கேவல தடித்த இருட்டையே தவிர வேறொன்றையும் அங்கே பார்க்காதது போலவும், நரகத்து ஓர் ஆவி சுவர்க்கத்தைப் பார்க்கும்போது அங்கே தடித்த இருட்டைத் தவிர வேறொன்றையும் பார்க்காதது போலவும், ஒரு வெளிச்சத்திலிருந்து மற்றொருவெளிச்சத்தைப் பார்க்கிறவர்களுக்குத் தெளிவாய்த் தோன்றுகிறது. சுவர்க்கத்து ஞானம், நரகத்திலுள்ளவர்களுக்கு தடித்த இருள்போலும், முறைப்பிரகாரம் நரகத்து பைத்தியம், சுவர்க்கத்திலுள்ளவர்களுக்கு தடித்த இருள்போலு மிருப்பதினால், இப்படி நேரிடுகிறது. ஒரு மனிதனுக்கு இருக்கும் வெளிச்சம், அவனுடைய புத்தி இருப்பது போல குணத்திலிருக்கிறதென்பதும், ஒவ்வொருவனும் வேறு எந்த வெளிச்சத்திலும் பார்க்காதபடியினால், இறந்த பிறகு அவனுடைய வெளிச்சத்துக்கு வருகிறானென்பதும் இதிலிருந்து வெளிப்படையாகிறது. மேலும், எல்லாரும் சரீரம் விஷயத்தில் கூட சூக்குமமா யிருக்கிற சூக்கும உலகத்தில், எல்லாருடைய கண்களும் தங்கள் சொந்த வெளிச்சத்திலிருந்து பார்க்க உருவாக்கப் பட்டிருக்கின்றன. ஒவ்வொருவனுடைய உயிரின் அன்பு, தனக்குத் தானே புத்தியை உண்டாக்குகிறது; அப்படியே கூட வெளிச்சமும் செய்கிறது; ஏனென்றால், அன்பானது, உயிரின் வெளிச்சம் வருகிற உயிரின் நெருப்பு போலிருக்கிறது.

168. ஆண்டவரால் கற்பிக்கப்படுகிற மனிதனுடைய புத்தியிருக்கப்பட்ட பிரகாசத்தைப்பற்றி, சிலருக்கு தான் எதுவும் தெரியுமாகையால், அதைப்பற்றிச் சிலது சொல்லப்பட வேண்டும். ஆண்டவரிடமிருந்து உள்ளானதும் புறம்பானதுமான சோதியிருக்கிறது; மேலும், மனிதனிடமிருந்து கூட உள்ளானதும் புறம்

பானதுமான சோதி யிருக்கிறது. ஆண்டவரிடமிருந்து வரும் உள்ளான சோதி முதலில் கேட்கப்படும்போதே, சொல்லப்பட்டது. உண்மையானது அல்லது உண்மை யல்லாதது என்பதை அறிந்து கொள்ளுதலில் அமைந்திருக்கிறது; புறம்பான சோதி இதிலிருந்து சிந்தனையி லிருக்கிறது. மனிதனிடமிருந்து வரும் உள்ளான சோதி, ஸ்திரப்படுத்தலினுல் மாத்திரம் உண்டாகிறது; மனிதனிடமிருந்து வரும் புறம்பான சோதி அறிவிலிருந்து மாத்திரம் வருகிறது. ஆனால் இவைகளைப்பற்றித் தனித்தனியாய் (2) சிலது சொல்லப்பட வேண்டும்; ஆண்டவரிடமிருந்துவரும் உள்ளான சோதியிலிருந்து பகுத்தறிவுள்ள மனிதன் முதலில் கேட்கும்போதே, அநேக விஷயங்கள் உண்மையானது அல்லது உண்மையல்லாதது என்பதை அறிந்துகொள்ளுகிருன்; உதாரணமாக, அன்பானது விசுவாசத்தின் உயிரென்றும், அல்லது விசுவாசம் அன்பிலிருந்து ஜீவிக்கிறது என்றும் தெரிந்துகொள்ளுகிருன். உள்ளான சோதியிலிருந்துகூட, ஒரு மனிதன் தான் நேசிப்பதை இச்சிப்பதாகவும், தான் இச்சிப்பதை செய்வதாகவும், அதனுல் அன்பு பாராட்டல் என்பது செய்தலாகவும், இன்னும் மனிதனுனவன் அன்பிலிருந்து நம்புவது யாதெனிலும் இதைக்கூட அவன் இச்சித்து செய்வதாகவும், அதனுல், விசுவாசம் உடைத்தாயிருத்தலென்பது செய்தலும்கூட என்பதாகவும், அதனுடன், அவபக்தியுள்ளவன் கடவுளிடத்து அன்புள்ளவனுயிருக்கமாட்டானென்பதாகவும், ஆகையினுல் கடவுளிடத்து பக்தியுள்ளவனுயிருக்க மாட்டானென்பதாகவும், அறிந்துகொள்ளுகிருன். பகுத்தறிவுள்ள மனிதன் தான்கேட்டவுடன் உள்ளான சோதியிலிருந்து கடவுள் ஒருவரென்றும், அவர் எங்கும் நிறைந்தவரென்றும், எல்லா நன்மையும் அவரிடமிருந்து வருகிறதென்றும், அதனுடன் எல்லாவிஷயங்களும் நன்மைக்கும் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்றும், எல்லா நன்மையும் நன்மையிடமே இருந்து வருவதாகவும், எல்லா உண்மையும் உண்மையிடமே யிருந்து வருவதாகவும், இவைகளை எல்லாம் அறிந்துகொள்ளுகிருன். மனிதனுனவன் இவைகளையும் இவைகளைப்போன்ற மற்றவைகளையும், அவைகளைக் கேட்கும்போது தன்னிலேயே உள்ளுக்குள்ளாய்

அறிந்துகொள்ளுகிருன்; அவனுக்கு பகுத்தறிவுடைமையிருப்பதினுலும், ஞானம் உண்டாக்குகிற சுவர்க்கத்து வெளிச்சத்தில் (3) இது இருப்பதினுலும் அவனுக்கு இந்த உணர்ச்சி இருக்கிறது. புறம்பான போதனை அந்த உள்ளான சோதியிலிருந்து வரும் சிந்தனையின் சோதியாயிருக்கிறது; சிந்தனையானது, உள்ளான பிரகாசத்திலிருந்து அதற்கு உண்டாகும் உணர்ச்சியில் அது இருக்கிற அளவும், அதே காலத்தில் அது உண்மையையும் நன்மையையும் அறிந்துகொள்ளுகிற அளவும், இந்த ஞான வெளிச்சத்திலிருக்கிறது; ஏனென்ருல், இவைகளிலிருந்து, அவைகளினுல் அது ஸ்திரப்படுத்துகிற காரணங்களை அது எடுத்துக்கொள்ளுகிறது. இந்த புறம்பான போதனையிலிருந்துவரும் சிந்தனை ஒரு விஷயத்தை இருபக்கமும் பார்க்கிறது; ஒரு பக்கத்தில், ஸ்திரப்படுத்துகிற காரணங்களைப் பார்க்கிறது, மற்ற பக்கத்தில் மெலிவிக்கிற தோற்றங்களைப்பார்க்கிறது; பின் கூறியவைகளை அது சிதறடிக்கிறது, முன் கூறியவைகளை அதுகூட (4) சேர்க்கிறது. ஆனுல் மனிதனிலிருந்துவரும் உள்ளான சோதி முழுமையும் வேருனதாயிருக்கிறது; அதனுல் ஒரு மனிதன் ஒரு விஷயத்தை ஒரு பக்கம் பார்க்கிருன், மற்ற பக்கத்தில் பார்க்கிறதில்லை; அவன் அதை ஸ்திரப்படுத்தியபோது, மேலே பேசிய வெளிச்சத்தைப்போல தோற்றத்தின்படியிருக்கிற ஒரு வெளிச்சத்தில் அதைப் பார்க்கிருன், ஆனுல் அது மாரிகாலத்து வெளிச்சமாயிருக்கிறது. உதாரணமாக:—ஈகைகளுக்காகவும், லாபத்திற்காகவும் அன்னியாயமாய் தீர்மானம் செய்கிற நியாயாதிபதி, சட்டங்களாலும் காரணங்களாலும் அந்தத் தீர்ப்பை ஸ்திரப்படுத்தின பிறகு, தன்னுடைய தீர்ப்பில் நியாயமானதைத் தவிர வேருென்றையும் பார்க்கிறதில்லை. சிலர் அநியாயத்தைப்பார்க்கிருர்கள்; ஆனுல் அதைப்பார்க்க விரும்பாதபடியினுல், தாங்களே (5) இருட்டாக்கிக்கொண்டும் கண் தெரியாதவர்களாக்கிக்கொண்டும், அதனுல் பார்க்கிறதில்லை. சினேகிதத்திற்காகவும், தயையையடையவும், உறவு பாசங்களுக்காகவும், தன்னுடைய தீர்மானங்களைச் செய்கிற நியாயாதிபதி விஷயத்திலும் அது அதே மாதிரியிருக்கிறது. அவ்விதமான ஜனங்களுக்கு, அதிகாரத்திலுள்ள

வன் அல்லது கீர்த்தி பெற்றவன் ஒருவன்வாயிலிருந்து தாங்கள் பிடிக்கிறதும், அல்லது தங்கள் சொந்த விவேகத்திலிருந்து கொண்டு வந்ததுமான ஒவ்வொன்றோடும் அதேமாதிரியிருக்கிறது. அவர்கள் விவேக சூனியமான தார்க்கீகர்கள்; ஏனென்றால், தாங்கள் ஸ்திரப்படுத்துகிற பொய்களிலிருந்து தங்கள் பார்வையை யடைகிறார்கள்; பொய்யானது பார்வையை மூடுகிறது, உண்மை அதைதிறக்கிறது. அவ்விதமான ஜனங்கள் உண்மையின் வெளிச்சத்திலிருந்து எந்த உண்மையையும் பார்க்கிறதில்லை; அதுவுமல்லாமல், நியாயமானதின் பேரில் கொள்ளும் ஆசையிலிருந்து நியாயமான எதையும் அல்லாமல், பிராந்தியை உண்டாக்கும் வெளிச்சமாயிருக்கிற ஸ்திரப்படுத்தும் வெளிச்சத்திலிருந்து மாத்திரம் பார்க்கிறார்கள். சூக்கும உலகத்தில் தலையில்லாத முகங்களைப்போலவும், அல்லது முகங்களுக்குப் பின் மரத்தால் செய்த தலைகளோடு மானிட முகங்களை ஒத்த முகங்களைப் போன்றும், அவர்கள் தோன்றுகிறார்கள்; அவர்களுக்குசத்தியுள்ள பகுத்தறிவுடைமையிருப்பதினால் அவர்களை பகுத்தறிவுள்ள ஆடுமாடுகளென்று சொல்லுகிறார்கள். ஆனால் மனிதனிடமிருந்துவரும் புறம்பான சோதி ஞாபகத்தின் பேரில் பதியச்செய்த அறிவிலிருந்து மாத்திரம் நினைத்து பேசுகிறவர்களுடன் இருக்கிறது; அவர்கள் அறிதாய் தங்களிடமிருந்தே எதையும் ஸ்திரப்படுத்துக்கூடும்.

169. இவைகள் தான் ஞானவெளிச்சத்தினுடையவும், அதிலிருந்து உணர்ச்சியினுடையவும் சிந்தனையினுடையவும் வித்தியாசங்கள். சூக்கும வெளிச்சத்தினால் ஒரு நிஜமான சோதியிருக்கிறது; ஆனால் அந்த வெளிச்சத்திலிருந்து வரும் சோதி, ஸ்தூல வெளிச்சத்துக்கும் சூக்கும வெளிச்சத்துக்கும் பொதுவானது ஒன்றுமில்லாத படியினால், தானே ஸ்தூல உலகத்திலுள்ள எவனுக்கும் தோன்றுகிறதில்லை; ஆனால் இந்த ஞான வெளிச்சம் சில வேளைகளில் சூக்கும உலகத்தில் எனக்கு தோன்றியது; அது ஆண்டவரிடமிருந்து ஞான வெளிச்சத்திலிருந்தவர்களுடன், மானிட முகத்தின் நிறத்துடன் மின்னி, தலையைச்

சுற்றி ஒரு பிரகாசமுள்ள தோற்றமாக பார்க்கப்பட்டது. ஆயி னும், தங்களிடமிருந்தே வெளிச்சமாக்கப் பட்டவர்களுக்கு, இந்த பிரகாசமுள்ள தோற்றம் தலைப் பக்கத்தில் அல்லாமல்; ஆனால் வாயை அடுத்தும் மோவாய்க்கு மேலுமிருந்தது.

170. இந்த ஞான வெளிச்சங்களல்லாமல், ஒரு மனித னுக்கு தான் எந்த விசுவாசத்திலும், எந்த விவேகத்திலும் ஞானத்திலும் இருக்கிறானென்பதை தெரியப்படுத்துகிற வேறு ஒன்றுகூட இருக்கிறது; இந்த வெளிப்பாடு, தானே தனக் குள்ளேயே யிருக்கும் நிலைமையை பார்க்கும்படியானதா யிருக்கி றது. அவன் உண்மையான விசுவாசமிருக்கிறதும், உண்மையான விவேகமும் ஞானமுமிருக்கிறதுமான ஓர் கூட்டத்திற்கு அனுப் பப் படுகிறான்; அங்கே அவனுடைய உள்ளான பகுத்தறிவுடைமை திறக்கப்படுகிறது; அதிலிருந்து அவன் தன்னுடைய விசுவாசத்தி னுடையவும் விவேகத்தி னுடையவும், ஞானத்தி னுடையவும் குணத்தை, ஒத்துக்கொள்ளும்படியாகக் கூட பார்க்கிறார். அங்கி ருந்து சிலர் திரும்பி வருவதை நான் பார்த்திருக்கிறேன்; தாங் கள் உலகத்திலிருக்கும்போது தங்களுக்கு அதிக பக்தி யிருந்த தாகவும், மற்றவர்களை விட அது சிறப்பாய் இருந்ததாகவும், தாங் கள் நம்பினவர்களா யிருந்தபோதிலும், தங்களுக்கு விசுவாசமில்லை யென்று ஒத்துக் கொள்வதைக் கேட்டிருக்கிறேன்; அம்மாதிரியே கூட அவர்கள் விவேகத்தையும் ஞானத்தையும் பற்றி கேட்டிருக் கிறேன். எந்த தருமத்திலுமல்லாமல், விசுவாசத்தில் மாத்திர மும் இருந்தவர்களும், தங்கள் சொந்த அறிவிலும் நம்பி இருந்த வர்களுமான ஜனங்களாக அவர்கள் இருந்தார்கள்.

171. IV. **மனிதன் ஆண்டவரால் வேதத்தின் மூலமாயும், கோட்பாட்டின் மூலமாயும், அதிலிருந்து போதிப்பதிலிருந்தும், இம் மாதிரியாக, அவரிடமே யிருந்து மாத்திரம் நேராய் கற்பிக்கப்படுகிறான்.** மனிதனானவன் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்பட்டு கற்பிக் கப் படுகிறானென்றும், இதுவும் சுவர்க்கத்தின் மூலமாய் அல்லாம லும், அங்கே யிருக்கும் எந்த தேவன் மூலமாய் அல்லாமலும்

சுவர்க்கத்திலிருந்தே செய்யப்படுகிற தென்றும், மேலேசொல்லப் பட்டு காண்பிக்கப் பட்டிருக்கிறது; அவன் ஆண்டவரால் மட்டும் வழி காட்டப்படுகிற படியினால், நடுப்போக்கா யல்லாமல் நேராய் வழி காட்டப்படுகிறானென்று ஏற்படுகிறது. ஆனால் இது எப்படி செய்யப்படுகிறதென்று இப்பொழுது விளக்கவேண்டும்.

172. பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாட்டில், ஆண்டவர் வேதமென்றும், திருச்சபையின் கோட்பாடுகள் எல்லாம், அந்த வேதத்திலிருந்து ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், காண்பிக்கப்பட்டது. ஆண்டவர் வேதமான படியினால், வேதத்திலிருந்து கற்பிக்கப்படுகிற மனிதன், ஆண்டவரால் மாத்திரம் கற்பிக்கப் படுகிறானென்று ஏற்படுகிறது. ஆனால் இது பிரயாசத்துடன் கிரகிக்கப்படுகிற படியினால், அது பின் வரும் ஒழுங்கில் தெளிவிக்கப்பட வேண்டும்: I. வேதமானது அவரிடமிருந்து அவரைக் குறித்துப் பேசுவதால், ஆண்டவரே வேதமா யிருக்கிறார். II. மேலும் அது பரம நன்மையின் பரம உண்மையாயிருப்பதினால். III. ஆகையினால் வேதத்திலிருந்து கற்பிக்கப் படுதல் அவரிடமிருந்து கற்பிக்கப்படுதலா யிருக்கிறது. IV. இது நடுப்போக்காய் போதனை செய்வதால் செய்யப் படுகிறதென்பது தக்ஷணமே என்பதை நீக்கி விடுகிறதில்லை. முதலாவது: வேத (2)மானது அவரிடமிருந்தும் அவரைக் குறித்து மிருப்பதினால், ஆண்டவர் வேதமா யிருக்கிறார். வேதமானது ஆண்டவரிடமிருந்து வந்ததென்பது திருச்சபையில் எவனாலும் மறுக்கப்படுகிறதில்லை; ஆனால், வேதமானது ஆண்டவரைக் குறித்து மாத்திரமிருக்கிற தென்பது நிஜமாகவே மறுக்கப்படுகிறதில்லை, ஆனால், அது யாருக்கும் தெரியாததா யிருக்கிறது; ஆனால் அது ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாட்டிலும் (பி. 1-7, பி. 37-44), அதனுடன், பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாட்டிலும் (பி. 62-69; பி. 80-90; பி. 98-100) காண்பிக்கப் பட்டிருக்கிறது. வேதமானது ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வந்தபடியினாலும், ஆண்டவரைக் குறித்து மாத்திரம் இருப்பதினாலும், மனிதனானவன் வேதத்திலிருந்து கற்பிக்கப்படுகிற

போது, வேதமானது தெய்வீகமான படியினால், அவன் ஆண்டவரிடமிருந்து கற்பிக்கப்படுகிறான். அது அவரிடமிருந்து வருவதும், அவரைக் குறித்து பேசுவதுமான தெய்வமே தவிர, தெய்வத்தை யார் அறிவித்து, அதை இருதயத்தில் நடக்கூடும்? ஆகையினால், தன்னுடைய சீடர்களுடன் தான் ஐக்கியப்படுதலைப் பற்றிப் பேசுங் காலத்தில், ஆண்டவர் அவர்கள் தன்னிலும், தன் வார்த்தைகள் அவர்களிலும், நிலைத்திருக்க வேண்டுமென்றும், (யோவா. XV. 7. ), தன்னுடைய வசனங்கள் ஆவியும் ஜீவனுமிருக்கிறதென்றும் (யோ. IV. 63), தன் வசனங்களைக் கைக்கொள்ளுகிறவர்களிடத்தில் தான் வாசம் பண்ணுவேன் என்றும் (யோவா. XIV. 20-24) சொல்லுகிறார். ஆகையினால், ஆண்டவரிடமிருந்து நினைத்தலென்பது, வேதத்தின் மூலமாய் போல், வேதத்திலிருந்து நினைத்தலா யிருக்கிறது. வேதத்தின் எல்லா விஷயங்களும், சுவர்க்கத்துடன் சம்பந்தமடைந் திருக்கிறதென்பது, பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாட்டில் ஆதிமுதல் அந்தம் வரையில் காண்பிக்கப் பட்டிருக்கிறது. ஆண்டவர் சுவர்க்கமா யிருப்பதினால், வேதத்தைச் சேர்ந்தவைகளெல்லாம் ஆண்டவருடனேயே சம்பந்தப் பட்டிருக்கிறதென்று இது அருத்தம் கொள்ளுகிறது. நிஜமாகவே சுவர்க்கத்து தேவர்களுக்கு சம்பந்தமுண்டு; ஆனால் இதுகூட ஆண்டவரிடமிருந்து வருகிறது. இரண்டாவது:—வேதமானது தெய்வ நன்மை (3)யின் தெய்வ உண்மை யிருப்பதினால், ஆண்டவர் அந்த வேதமாயிருக்கிறார். ஆண்டவர் வேதமென்று பின் வரும் வார்த்தைகளால் யோவானில் அவர் கற்பிக்கிறார்:—"ஆதியில் வார்த்தை யிருந்தது, அந்த வார்த்தை கடவுளுடன் இருந்தது, கடவுள் அந்தவார்த்தையா யிருந்தார், அந்த வார்த்தை மாம்சமாகி நமக்கு மத்தியிலிருந்தது" (யோவா. I. 1, 14,). இது, கடவுள் வேதத்தின் மூலமாய் மனிதனுக்கு கற்பித்தார் என்று அருத்தம் கொள்ளுகிறதைத் தவிர, வேறு விதமாய் அல்லாமல் இதுவரையில் அறிந்துகொள்ளப்பட்ட படியினால், ஆண்டவர் வார்த்தையே அல்லவென்கிற சிக்கில் அகப்படுத்துகிற உள்ளதற்குமேல் அதிகமாய் சொல்லப்பட்ட சொல்லென்று அது விவரிக்கப்பட்டிருக்கிறது. வார்த்தை

என்பதினால் தெய்வ நன்மையின் தெய்வ உண்மை அல்லது அதே அருத்தம் கொள்ளுகிற பரம இச்சாசத்தியின் பரம ஞானசத்தி என்று கொள்ளப்படுகிறதென்று அவர்களுக்குத்தெரியாதென்பது, அதற்கு காரணமா யிருக்கிறது. இவைகளே ஆண்டவரே என்று **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் முதல் பாகத்தில் காண்பிக்கப் பட்டிருக்கிறது; அவைகளே வார்த்தை என்று **பரிசுத்த (4) வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாட்டில்** காண்பிக்கப் பட்டிருக்கிறது (பி. 1-86). ஆண்டவர் எப்படி தெய்வ நன்மையின் தெய்வ உண்மையாக யிருக்கிறாரென்று கூட இங்கே சுருக்கமாய் விவரிக்கப்பட வேண்டும். எந்த மனிதனும் தன் அன்பின் நன்மையிலிருந்தும், தன் ஞானத்தின் உண்மைகளிலிருந்தும் தவிர, முகத்திலிருந்தும் சரீரத்திலிருந்தும் மனிதனாகிறதில்லை; இவைகளிலிருந்து மனிதன் மனிதனாகிற படியினால், ஒவ்வொரு மனிதனும் கூட அவனுடைய சொந்த உண்மையாகவும், அவனுடைய நன்மையாகவும் அல்லது அவன் சொந்த அன்பாகவும் சொந்த ஞானமாகவும் இருக்கிறான்; அவைகள் இல்லாமல் அவன் மனிதனாகமாட்டான். ஆனால், ஆண்டவர் நன்மையேயாகவும், உண்மையேயாகவும் அல்லது அருத்தங்கொள்ளுகிற அன்பேயாகவும் ஞானமேயாகவுமிருக்கிறார். இவைகள் தான் ஆரம்பத்தில் கடவுளிடத்திலிருந்ததும், கடவுளா (5)யிருந்ததும், மாம்ச மாக்கப்பட்டதுமான **வார்த்தையாயிருந்தன**. மூன்றாவது:— **ஆகையினால் வேதத்திலிருந்து கற்பிக்கப்படுதல் என்பது ஆண்டவராலேயே கற்பிக்கப்படுதலாயிருக்கிறது;** ஏனென்றால், முன் சொல்லியபடி வார்த்தையாயிருக்கிற நன்மையினிடமேயிருந்தும், உண்மையினிடமேயிருந்தும், அல்லது அன்பினிடமேயிருந்தும், ஞானத்தினிடமேயிருந்தும் வருகிறது; ஆனால், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த அன்பின் புத்திக்குத் தக்கபடி கற்பிக்கப்படுகிறான்; இதற்கு மேல்பட்டது ஸ்திரமானதல்ல. ஆண்டவரால் வேதத்தில் கற்பிக்கப்படுகிற எல்லாரும், உலகத்திலிருக்கும்போது சில உண்மைகள் கற்பிக்கப்படுகிறார்கள். ஆனால், தாங்கள் தேவர்களாகும்போது அநேக உண்மைகள் கற்பிக்கப்

படுகிறுர்கள்; ஏனென்றுல், தெய்வீக சூக்குமமானதும் தெய்வீக அதிசூக்குமமானதுமான வேதத்தின் உள்ளானவைகள் அதே காலத்தில் நடப்படுகின்றன. ஆனுல், மானிட ஞானம் விஷயத்தில், இவ்விதமாக அவனுடைய முந்திய ஞானம் விஷயத்தில் வாக்கு எட்டாததாயிருக்கிற தேவதாஞானத்தில் இருக்கப்பட்ட சுவர்க்கத்திற்கு, மனிதன் இறந்த பிறகு அவன் வருகிறவரையில் அவனில் அவைகள் திறக்கப்படுகிறதில்லை. தேவதாஞானமாகிற தெய்வீக சூக்குமபொருள்களும் தெய்வீக அதிசூக்கும பொருள்களும், வேதத்தின் எல்லாவற்றிலும் ஒவ்வொன்றிலும் இருக்கின்றனவென்பது **பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோட்பாடு** எனும் நூலில் பார்க்கப்பட(6)லாம் (பி. 5-26). நான்காவது: **பிரசங்கம் செய்வதால் நடுப்போக்காய் இது செய்யப்படுகிறதென்பது, தக்ஷணமே என்பதைநீக்கி விடுகிறதில்லை.** வேதமானது பெற்றோர்கள், ஆசிரியர்கள் பிரசங்கிகள் புத்தகங்கள் மூலமாயும் முக்கியமாய் அவைகளைப்படிப்பதின் மூலமாயும் நடுப்போக்காய் தவிர, வேறு விதத்தில் கற்பிக்கப்படமுடியாது, என்றுலும், அது அவர்களால் கற்பிக்கப்படுகிறதில்லை, ஆனுல், அவர்கள் மூலமாய் ஆண்டவரால் கற்பிக்கப்படுகிறது. தங்களிடமேயிருந்தல்லாமல், ஆனுல் கடவுளுடைய ஆவியிடமிருந்து பேசுகிறதாகவும், எல்லா உண்மையும், எல்லா நன்மையைப்போல, கடவுளிடமிருந்து வருகிறதாகவும் சொல்லுகிற பிரசங்கிகளுக்குக் கூட இது தெரிந்திருக்கிறது; நிஜமாகவே அவர்கள் அதைப்பேசி, எவனுடைய இருதயத்துக்கும் அல்லாமல் அநேகருடைய புத்திக்கு எட்டவைக்கலாம்; இருதயத்தில் இல்லாதது புத்தியில் இறந்துபோய் விடுகிறது; இருதய மென்பதினுல் மனிதனுடைய அன்பு என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. இவைகளிலெல்லாமிருந்து, மனிதனுனவன் ஆண்டவரால் மாத்திரம் வழி காட்டப்பட்டுக் கற்பிக்கப்படுகிறுனென்றும், வேதத்திலிருந்து வரும்போது அவரால் நேராய் கற்பிக்கப்படுகிறுனென்றும் அறிந்து கொள்ளலாம். இது தேவதா ஞானத்தின் இரகசயங்களுக்கு இரகசியமாயிருக்கிறது.

173. திருச்சபைக்கு வெளியேயிருப்பவர்களும், வேதமில்லாதவர்களும், வேதத்தின் மூலமாய் வெளிச்சத்தை உடைத்தாயிருக்கிறார்களென்பது, பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கை எனும் நூலில் காண்பிக்கப்பட்டிருக்கிறது (பி. 104-113). மனிதனுக்கு வேதத்தின் மூலமாய் வெளிச்சம் உண்டாகிறபடியினாலும், அந்த வெளிச்சத்திலிருந்து அவனுக்கு புத்தி உண்டாகிறபடினாலும், கெட்டவர்களுக்கும் நல்லவர்களுக்கும் புத்தி இருக்கிறபடியினாலும், தன் தொடக்கத்திலிருந்துவரும் வெளிச்சத்திலிருந்து; எந்த விஷயத்தைப்பற்றியும் உணர்ச்சிகளாகவும் சிந்தனைகளாகவுமிருக்கிற அதன் உற்பவங்களில் வெளிச்சமிருக்கிறது. ஆண்டவர் சொல்லுகிறார்:— "என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது" (யோவா. XV. 5,); "பரலோகத்திலிருந்து ஒருவனுக்கு கொடுக்கப்பட்டாலொழிய அவன் ஒன்றையும் பெற்றுக்கொள்ளமாட்டான்" (யோவா. III. 27); "பரலோகத்திலுள்ள பிதாவானவர் தீயோர்மேலும் நல்லோர்மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள் மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார்" (மத்தே. V. 45). வேதத்தில் வேறு இடங்கள்போல, இங்கே சூரியன் என்பது அதன் தத்துவார்த்தத்தில்; பரம இச்சாசத்தியின் பரம நன்மை அருத்தம் கொள்ளப்படுகிறது; மழை என்பதால், பரம ஞானசத்தியின் பரம உண்மை அருத்தம் கொள்ளப்படுகிறது; இவைகள் தீயோர்களுக்கும் நல்லோர்களுக்கும் நீதியுள்ளவர்களுக்கும் அநீதியுள்ளவர்களுக்கும் கொடுக்கப்படுகின்றன; ஏனென்றால், அவைகள் கொடுக்கப்படாவிட்டால், எந்த மனிதனுக்கும் உணர்ச்சியும் சிந்தனையுமிருக்காது. எல்லாவற்றிற்கும் உயிர்வருகிற ஒரே ஒரு உயிர் இருக்கிறதென்று, மேலே காண்பிக்கப்பட்டது; உணர்ச்சியும் சிந்தனையும் உயிரைச் சேர்ந்தவை; ஆகையினால், உணர்ச்சியும் சிந்தனையும் உயிர் உண்டாகிற அதே ஊற்றுக்கண்ணிலிருந்து வருகின்றன. புத்தியை உண்டாக்குகிற எல்லா வெளிச்சமும், ஆண்டவராயிருக்கிற சூக்கும லோகத்து சூரியனிடமிருந்து வருகிறதென்பது, அநேக விஷயங்களால் முன்னமே மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

174. V. மனிதனானவன் ஆண்டவரால் புறம்பானவைகளில் எல்லாவித தோற்றத்திற்கும் தன்னாலேயே போல வழி காட்டப்பட்டு கற்பிக்கப்படுகிறான். இது உள்ளானவைகளில் அல்லாமல் மனிதனுடைய புறம்பானவைகளில் செய்யப்படுகிறது. கண்பார்க்கவும், காதுகேட்கவும், நாவும் வாயும் பேசவும், இருதயமானது இரத்தத்திற்கு சலனம் உண்டாக்கவும், சுவாசாசயங்கள் சுவாசிக்கவும், இரைப்பை சீரணிப்பிக்கவும், பித்தாசயமும் வ்ரிக்வகமும் வியாபிக்கவும், மூத்திர பிண்டங்களை கசியவும், இன்னும் கணக்கற்ற அநேக விஷயங்களைச்செய்யவும், ஆன்மா எப்படி தொழில் படுகிறதென்று யாருக்கும் தெரியாததுபோல், ஆண்டவரானவர் அவனுடைய உள்ளானவைகளில் மனிதனுக்கு எப்படி வழி காட்டி கற்பிக்கிறாரென்று யாருக்கும் தெரியாது. இந்த விஷயங்களெல்லாம் மனிதனுடைய உணர்ச்சிக்கும், இந்திரிய போதத்துக்கும் எட்டுகிறதில்லை. மனதின் உள்ளான பொருள்களிலும் உருவங்களிலும் ஆண்டவரால் செய்யப்படுவதும், அளவற்று ஏராளமாயிருக்கிறதுமான பொருள்கள் விஷயத்தில் அம்மாதிரியேயிருக்கிறது. அவைகளில் ஆண்டவருடைய தொழிற்பாடுகள் மனிதனுக்குத்தோன்றுகிறதில்லை; ஆனால், ஏராளமாயிருக்கிற காரியங்களே தோன்றுகின்றன; அதனுடன் அந்த காரியங்களின் சில காரணங்களும்கூட தோன்றுகின்றன. மனிதனானவன் ஆண்டவருடனிருக்கப்பட்ட புறம்பானவைகள் இவைகள் தான். ஒரு கோவையில் கூடியிருக்கிறபடியினால், புறம்பானவைகளும் உள்ளானவைகளும் ஒன்றாகிற காரணத்தினால், ஆண்டவர் உள்ளானவைகளில் ஒழுங்கு படுத்துவதில்லை. மனிதன் மூலமாய் புறம்பானவைகளை ஒழுங்குபடுத்தி வைத்திருப்பதற்குத் தக்கபடியல்லாமல், வேறுவிதமாய் செய்யமுடியாது. ஒவ்வொருவனுக்கும், மனிதனானவன் முழுபார்வைக்கும் தன்னிடமிருந்தேபோல் நினைத்து, இச்சித்து, பேசி, செயல்படுகிறானென்று தெரியும்; இந்த தோற்றமில்லாவிட்டால், மனிதனுக்கு எந்த சித்தமும் புத்தியும், இவ்விதமாக எந்த ஆசையும் சிந்தனையும், அதனுடன் ஆண்டவரிடமிருந்து எந்த நன்மையும் உண்மையும் ஏற்றுக்கொள்ளுதலும் கிடையாதென்று ஒவ்வொருவனும் அறிந்துகொள்ளலாம். விஷயம் இப்

படியிருப்பதினால், இந்த தோற்றமில்லாமல் கடவுளைக்குறித்த எந்த அறிவும், எந்த தருமமும் விசுவாசமும், அதனால் எந்த சீர்படுதலும் குணப்படுதலும், ஆகையினால் எந்த இரட்சிப்பும் உண்டாகாதென்றும் ஏற்படுகிறது. இந்த எல்லா உபயோகங்களின் பொருட்டு மனிதனுக்கு ஆண்டவரால் இந்த தோற்றம் கொடுக்கப்படுகிறதென்றும், முக்கியமாய் ஆண்டவர் மனிதனோடும், மனிதன் ஆண்டவரோடும் ஐக்கியப்படவும், இந்த ஐக்கியத்தினால், மனிதனானவன் சதாகாலம் உயிரோடிருக்கவும், அவனுக்கு ஏற்றுக்கொள்ளவும், பரஸ்பரம் மாறவும் சக்தி உடைத்தாயிருக்க வேண்டுமென்றும், இதனால் வெளிப்படையாயிருக்கிறது. இங்கே அறிந்து கொள்ளவேண்டிய தோற்றம் இதுதான்.

---

**மனிதனானவன் தெய்வபராமரிப்பின் கிருத்தியங்கள் எதையாவது பார்த்து உணரக்கூடா தென்பதும், அப்படி யிருந்தாலும், அதை தெரிந்து ஒத்துக்கொள்ள வேண்டுமென்பதும், தெய்வ பராமரிப்பின் ஓர் சட்டமாயிருக்கிறது.**

175. தெய்வ அரசியலை நம்பாத ஸ்தூல மனிதன், "துஷ்டர்கள் நல்லவர்களை விட அதிகமாய் கண்ணியப்படுத்தப் பட்டு செல்வத்தை அடைகிறதினாலும், தெய்வ பராமரிப்பை நம்புகிறவர்களை விட அதை நம்பாதவர்கள் விஷயத்தில் இவ்விதமான அநேக விஷயங்கள் நன்றாக சித்தியாகிறதினாலும், பின்னும் நம்பாதவர்களும் தெய்வபக்தி யில்லாதவர்களும், நம்புகிறவர்களுக்கும் தெய்வபக்தி யுள்ளவர்களுக்கும் கெடுதியையும், நஷ்டத்தையும், துர்பாக்கியத்தையும், சில சமயங்களில் மரணத்தையும் கொண்டு வரக்கூடியதையும், இதுவும் சூழ்ச்சியினாலும் துவேஷத்தினாலும் செய்யக் கூடியதையும் நான் பார்க்கிறதினாலும், தெய்வ பராமரிப்பு என்பது என்னவென்று" தானே நினைத்துக்கொள்ளு

கிறான். ஆகையினால் "ஒரு மனிதன் சாமர்த்தியமான கிருத்திரிமத்துடன் வஞ்சகமான சூழ்ச்சிகளை நம்பப்படத் தக்கதாகவும் நியாயமானதாகவும் தோன்ற செய்யக்கூடும் பட்சத்தில், அந்த வஞ்சகமுள்ள சூழ்ச்சிகள் நேர்மையையும் நீதியையும் மேற்கொள்ளுதலை மப்பில்லாத நாளில் போல் அனுபோகத்திலிருந்தே நான் பார்க்கிறதில்லையா என்றும், மற்றவைகளெல்லாம் தெய்வ பராமரிப்பிலிருந்து யாதொன்றும் தோன்றாத குறைபாடுகளும், பலன்களும், அகஸ்மாத்தான விஷயங்களும், தவிர வேறு என்னவென்றும், பிரகுருதிக்கு குறைபாடுகள் சேர்ந்ததல்லவா வென்றும், பலன்கள் இயற்கையான அல்லது தேசாசார ஒழுங்கிலிருந்து வரப்பட்ட காரணங்களல்லவா என்றும், அகஸ்மாத்தான விஷயங்கள் தெரியாத காரணங்களிலிருந்தும் அல்லது எந்த காரணத்திலிருந்தும் வராதவைகளல்லவா" என்றும் அவன் நினைக்கிறான். கடவுளுக்கு யாதொன்றையும் ஆரோபிக்காமல், எல்லாம் இயற்கைக்கு ஆரோபிக்கிற ஸ்தூல மனிதன், அம்மாதிரி தனக்குள்ளே நினைத்துக் கொள்ளுகிறான்; ஏனென்றால், கடவுளுக்கு யாதொன்றையும், சாட்டாதவன், தெய்வபராமரிப்புக்கு யாதொன்றையும் சாட்டுகிறதில்லை; ஏனென்றால், கடவுளும்தெய்வ (2) பராமரிப்பும் ஒன்றாகிறது. ஆனால் பரமார்த்தமான மனிதன் தனக்குள்ளே வேறு விதமாய் சொல்லுகிறான் அல்லது நினைக்கிறான். அவன் சிந்தனையில் தெய்வ பராமரிப்பை அதன் போக்கில் பார்க்காவிட்டாலும், அதுவுமன்றி கண் பார்வையில் அதை அறிந்துகொள்ளாவிட்டாலும், அதைத் தெரிந்துகொண்டு ஒத்துக் கொள்ளுகிறான். மேலே கூறிய தோற்றங்களும் அதனால் உண்டாகும் ஆபாசங்களும் புத்தியை கண் தெரியாமல் செய்துவிட்டதாலும், அந்த குருடை உண்டாக்கிய ஆபாசங்களும், கடும் இருளை உண்டாக்கிய பொய்களும் நீக்கப்பட்டாலொழிய, அது பார்வையையடையக்கூடாத படியினாலும், பொய்களை நீக்கும் சக்தியுள்ள உண்மைகளால் மட்டும் இது செய்யக் கூடுமாகையாலும், இந்த உண்மைகள் வெளிப்படுத்தப் படவேண்டும்; ஆனால் வேத மயக்கின்மையின் பொருட்டு, பின்வரும் ஒழுங்கில் அது செய்யப்படும்:—I. தெய்வ அரசியலின் கிருத்தியத்தை ஒரு மனிதன்

பார்த்து உணர்ந்தால், பகுத்தறிவுடைமையை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்பட மாட்டான்; அதுவுமன்றி யாதொன்றும் தன்னிடமிருந்து நடக்கிறதுபோல், அவனுக்குத் தோன்றுது. அவனுக்கு விஷயங்கள் முன்னிட்டு தெரிந்திருந்தால், அதே மாதிரி தான் யிருக்கும். II. ஒரு மனிதன் தெய்வ பரிபாலனத்தைத் தெளிவாய் அறிந்து கொண்டால், அதன் போக்கின் ஒழுங்குக்கும் நோக்கத்திற்கும் தானே எதிராய் நின்று, அதைப் புறட்டி அழித்து விடுவான். III. ஒரு மனிதன் தெய்வ பரிபாலனத்தைத் தெளிவாய் பார்த்தால், அவன் கடவுள் இல்லையென்பான் அல்லது தானே கடவுளாக்கிக் கொள்வான். IV. தெய்வ பரிபாலனத்தை மனிதன் முகத்தில் அல்லாமல் பின்பக்கத்தில் பார்க்கவும், மேலும் ஸ்தூல நிலைமையில் அல்லாமல் சூக்கும நிலைமையில் பார்க்கவும், மனிதனுக்கு உத்திரவு கொடுக்கப்பட்டிருக்கிறது.

176. **தெய்வ அரசியலின் கிருத்தியத்தை ஒரு மனிதன் பார்த்து அனுபவித்தால், பகுத்தறி வுடைமையை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து செயல்படமாட்டான்; அதுவுமல்லாமல் யாதொன்றும் அவனுக்குச் சொந்தமாகத் தோன்றுது. அவன் சங்கதிகளை முன்னிட்டு தெரிந்திருந்தாலும் அதேமாதிரிதான்.** பகுத்தறிவுடைமையை அனுசரித்து மனிதனானவன் சுதந்திரத்திலிருந்து செயல்பட வேண்டுமென்பது தெய்வ அரசியலின் ஓர் சட்டமென்றும், மேலும், ஒரு மனிதன் இச்சிக்கிறதும், நினைக்கிறதும், பேசுகிறதும், செய்கிறதுமாகிய ஒவ்வொன்றும் தன்னிடமே யிருந்து உண்டாகிறதுபோல அவனுக்குத் தோன்றவேண்டுமென்பதும், இந்த தோற்றமில்லாவிட்டால், எந்த மனிதனும் எதையும் தன்னிட சொந்தமாக உடைத்தாயிருக்க மாட்டானென்பதும், அதுவுமல்லாமல், அவன் அவனிட சொந்த மனிதனாக இருக்கமாட்டானென்பதும், இவ்விதமாக அவனுக்கு தன்னிட சொந்ததன்மை என்பதே யில்லாமல் போய்விடுமென்பதும், அதனால், அவன் தீங்குசெய்தாலும், நன்மைசெய்தாலும், கடவுளிடத்து பக்தியிருந்தாலும், அல்லது நரகத்து கொள்கை கொண்டாலும், கவலை இல்லாமல் செய்கிற அபவாதம் அவனுக்கு இருக்காது என்பதும், சுருங்கச்சொல்லில்

அவன் ஒரு மனிதனாக யிருக்கமாட்டானென்பதும், மேலேதகுந்த (2)பிரிவுகளில் புத்திக்குத்தெளிவாக செய்யப்பட்டிருக்கிறது. மனிதனானவன் தெய்வ அரசியலின் தொழிற்பாட்டைப் பார்த்து அநுபவித்தால், பகுத்தறிவுடைமையை அநுசரித்து செயல்பட அவனுக்குச் சுதந்தரமிருக்காதென்றும், தன்னிடமேயிருந்து செயல்படும் தோற்றம் அவனுக்கு இருக்காதென்றும், இப்பொழுது காண்பிக்கப்படவேண்டும்; ஆதலால், அவன் அதைப்பார்த்து அநுபவித்தால், அவன் அதனால் கூட வழி காட்டப்படுவான்; ஏனென்றால், ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தால் எல்லாரையும் நடத்துகிறார்; மேலே காண்பித்தபடி கூட, மனிதனானவன் தோற்றத்தில் மாத்திரம் தனக்குத்தானே வழி காட்டிக் கொள்ளுகிறான். ஆகையினால், பிறரால் வழி காட்டப்படுகிறதாக கூர்மையான புலப்பாட்டுடனும் உணர்ச்சியுடனும் அவன் நடத்தப்பட்டால், அவனுக்கு உயிர் என்பது தெரியாது; அப்பொழுது, ஓர் பிரதிமைக்கு கொஞ்சமும் வித்தியாசமில்லாமல், சத்தங்களைச் செய்யவும், செயல்படவும், அவன் தூண்டப்படுவான். அப்படியிருந்தும் உயிர் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தால், கைவிலங்குகளினாலும், கால் விலங்குகளினாலும் கட்டப்பட்டவனைப் போலும், அல்லது வண்டிக்கு முன் கட்டி யிருக்கும் மூட்டை சுமக்கும் மிருகம் போலவும், அவன் வழி காட்டப்படுவான். அப்பொழுது, ஒரு மனிதனுக்கு எந்த சுதந்தரமும் இருக்காதென்று யாருக்குத் தெரியாது; அவனுக்கு சுதந்தரமில்லாவிட்டால், அவனுக்கு அறிவு இருக்காது. ஏனென்றால், ஒவ்வொருவனும், சுதந்தரத்திலிருந்தும், சுதந்தரத்திலும், நினைக்கிறான்; சுதந்தரத்திலிருந்தும்' சுதந்தரத்திலும் அவன் நினைக்காத எதுவும், தன்னிடமேயிருந்து அல்லாமல் மற்றவர்களிடத்திலிருந்து வந்ததாக அவனுக்குத் தோன்றுகிறது; நிஜமாகவே இதைப்பற்றி நீர் உள்ளுக்குள்ளாய் யோசித்தால், அவனுக்கு சிந்தனையும், இன்னும் குறைவாய் பகுத்தறிவுடைமையும் இருக்காதென்றும், ஆகையால் அவன் மனிதனாகமாட்டானென்றும் அறிந்து கொள்வீர்.

177. ஆண்டவரின் தெய்வ அரசியலின் தொடர்ச்சியான கிருத்தியம் மனிதனை தீங்குகளிலிருந்து நீக்கும் பொருட்டு நடக்

கிறது. எவனாவது ஒருவன் இந்த தொடர்ச்சியான கிருத்தியத்தை அறிந்துகொண்டு அனுபவித்து, கட்டுப்பட்டவன் போல் வழி காட்டப்படாவிட்டால், அவன் அதை தொடர்ச்சியாய் எதிர்க்க மாட்டானா? பிறகு கடவுளுடன் போராடமாட்டானா அல்லது தெய்வபரிபாலனத்துடன் கலந்து கொள்ளமாட்டானா? பின் கூறியதாயின், அவன் தானே கடவுளாகக்கூட செய்துகொள்வான்; முன் கூறியதாயின், கட்டுப்பாட்டிலிருந்து தானே விடுவித்துக்கொண்டு, கடவுள் இல்லை என்பான். மனிதனிடத்திலிருந்து வரும் தீங்கின் வலிமையும், ஆண்டவரிடமிருந்து வரும் நன்மையின் வலிமையுமாகிய இரண்டு சக்திகள் ஒன்றுக்கொன்று விரோதமாகத் தொடர்ச்சியாக சேட்டிக்குமென்பது, தீர்க்கமாய் வெளிப்படையா யிருக்கிறது; இரண்டு எதிரிடையானவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாய் சேட்டிக்கும்போது, அக்காலத்தில், ஒன்று ஜெயிக்கிறது, அல்லது இரண்டும் அழிந்துபோகின்றன. ஆனால் இந்த விஷயத்தில் ஒன்று ஜெயித்தால், அவைகள் இரண்டும் அழிந்துபோகின்றன; ஏனென்றால், மனிதனைச்சேர்ந்த தீங்கு, ஒருநொடி நேரத்தில் ஆண்டவரிடமிருந்து நன்மையை அடைகிறதில்லை; அன்றியும், ஆண்டவரிடமிருந்துவரும் நன்மை ஒருநொடி நேரத்தில் மனிதனைவிட்டு தீங்கைத்தள்ளுகிறதில்லை; ஏதாவது ஒன்று ஒரு நொடிநேரத்தில் செய்யப்பட்டால், மனிதனுக்கு உயிர் இருக்காது. மனிதனானவன் தெய்வ அரசியலின் தொழிற்பாட்டை வெளிப்படையாய் அறிந்துகொண்டால் அல்லது அனுபவித்தால், இவைகளும் இதர அநேக தீங்குள்ள பலன்களும் சம்பவிக்கும்; ஆனால் இது பின் வருவதில் உதாரணங்களால் தீர்க்கமாய் மெய்ப்பிக்கப்படும்.

178. மனிதனானவன் விவேகத்தை அனுசரித்து சுதந்தரமாக செயல்பட சக்தியுள்ளவனா யிருக்கும் பொருட்டுதான் அவனுக்கு வர்த்தமானங்களை முன்னிட்டே அறிந்துகொள்ள அனுமதி கொடுக்கப்படவில்லை; ஏனென்றால், ஒரு மனிதன் நேசிப்பது ஏதாகிலும், அதை செய்ய விரும்புகிறனென்றும், விவேகத்தினால் பலனுக்குத் தானே வழிகாட்டிக்கொள்ளுகிறனென்றும், மேலும்

சிந்தனையின் மூலமாக பலனுக்கு வரும்பொருட்டு, அன்பிலிருந்து வராத, மனிதன் விவேகத்தோடு சிந்திப்பது, ஒன்றுமில்லை யென்றும் தெரிந்திருக்கிறது. ஆகையினால், தெய்வ தீர்க்கதரிசனத்தால், பலன் அல்லது சங்கதி நமக்குத் தெரிந்திருந்தால், அவனுடைய விவேகம் சலனமற்று, அவன் விவேகத்தோடு அவன் அன்பும் அம்மாதிரியாகும்; ஏனென்றால், விவேகத்தோடு அன்பு காரியத்தில் முடிகிறது; அதிலிருந்து பிறகு அது புதிதாக ஆரம்பிக்கிறது. காரியத்திலல்லாமல் அதற்கு முன்பாக, அல்லது தற்காலத்திலல்லாமல் வருங்காலத்தில், காரியத்தை சிந்தனையில் அன்பிலிருந்து பார்ப்பதே விவேகத்தின் சந்தோஷம். அதனால் தான் அந்த பலனைப் பார்க்கும்போது அல்லது முன்னிட்டு நினைக்கும்போது, விவேகத்தில் அதிகமாகிறதும் குறைகிறதுமான நம்பிக்கையுடன் காத்திருத்தலென்பது மனிதனுக்கிருக்கிறது. இந்த சந்தோஷம் பலனில் முற்றுவிக்கப் படுகிறது; ஆனால், அது பிறகு அந்த பலனைக்குறித்த சிந்தனையுடன் சேர்த்து அழிக்கப் படுகிறது. முன்னிட்டு தெரிந்த பலனுடனும் அம்மாதிரியே (2)யிருக்கும். மனிதனுடைய மனது, முடிவென்றும், காரணமென்றும், காரியமென்றும் சொல்லப்பட்ட இந்த மூன்று விஷயங்களில் தொடர்ச்சியா யிருக்கிறது. இவைகளில் ஒன்று குறைவுபட்டால், மானிட மனது அதன் உயிரிலில்லை. சித்தத்தின் ஆசை அது உண்டாகும் முடிவாயிருக்கிறது; புத்தியின் சிந்தனை அது உண்டாகும் காரணமா யிருக்கிறது; சரீரத்தின் செய்கையும், அல்லது வாயின் பேச்சும், புறம்பான இந்திரிய ஞானமும், சிந்தனையின் மூலமாய் முடிவின் காரியங்களா யிருக்கின்றன. மானிடமனது, வேறொன்றினுமில்லாமல் சித்தத்தின் ஆசையில் மாத்திரம் இருக்கும்போதும், அதேமாதிரி காரியத்தில் மாத்திரம் இருக்கும்போதும், அது அதன் உயிரிலில்லை என்பது எவனுக்கும் வெளிப்படையா யிருக்கிறது. ஆகையினால், இவைகளில் தனித்தனியாய் ஒன்றிலிருந்து மனது உயிரை உடைத்தா யிராமல் மூன்றும் ஒருமிக்க சேருவதிலிருந்து உடைத்தா யிருக்கிறது. மனதின் இந்த உயிர், முன்னறிந்து சொல்லிய விஷயத்தில் குறைக்கப்பட்டு உள்வாங்கும்.

179. இனிவரும் வர்த்தமானங்களின் முன் உணர்ச்சி, விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல்படுதலா யிருக்கிற மானிடத் தன்மையையே நீக்கிவிடுகிற படியினால், எவனுக்கும் இனிவரும் சங்கதிகளைக் குறித்த அறிவு கொடுக்கப்படுகிற தில்லை; ஆனால், வருங்கால சங்கதிகளைக் குறித்து, விவேகத்திலிருந்து தீர்மானங்கள்செய்ய ஒவ்வொருவனுக்கும் இடம் கொடுக்கப் பட்டிருக்கிறது; ஆகையினால், விவேகமும் அதைச்சேர்ந்த எல்லா விஷயங்களும், அதன் உயிரிலிருக்கிறது; இதனால் தான், ஒரு மனிதனுக்கு இறந்த பிறகு தனக்கு வருகிற கதியாவது, தனக்கே நேரிடுகிற வரையில் எந்த விஷயமுமாவது தெரிகிற தில்லை; ஏனென்றால், அவனுக்கு முன் தெரிந்தால், அவன் தனக்கு உள்ளிருக்கும் ஆன்மாவிலிருந்து அது தனக்கு நேரிட, எப்படி செயல்பட வேண்டும் அல்லது வாழவேண்டுமென்பதை இனி நினைக்காமல், அது வருகிறதென்று புறம்பான ஆன்மாவிலிருந்து மாத்திரம் நினைப்பான்; இந்த நிலைமையானது, சுதந்தரமென்றும், பகுத்தறிவுடைமை என்றும், அவன் உயிரின் இரண்டு மனோசக்திகள் முக்கியமாய் வாசம் செய்கிற அவன் மனதின் உட்பாகங்களை மூடுகிறது. வருங்கால விஷயங்களை முன் உணரும் ஆசை, அநேக ஜனங்களுடன் கூடவே பிறந்திருக்கிறது. ஆனால், இந்த ஆசையான தீமையை நேசித்தலிலிருந்து உற்பத்தியை அடைகிறது; தெய்வ அரசியலை நம்புகிறவர்களிடமிருந்து அது நீக்கப்பட்டு, ஆண்டவர் அவர்களிட கதியை ஒழுங்கு படுத்துகிறாரென்கிற ஓர் நம்பிக்கை அவர்களுக்குக் கொடுக்கப் படுகிறது; அதனால், தெய்வபரிபாலனத்துடன் தாங்கள் எந்த வழியிலும் பிரவேசிக்காதிருக்கும் பொருட்டு அதை அவர்கள் முன்னிட்டு தெரிந்துகொள்ள ஆசைப் படுகிறதில்லை. இதை ஆண்டவர் (லூக். XII. 14-18)ல் பல விஷயங்களால் கற்பிக்கிறார். இது தெய்வ அரசியலின் ஓர் சட்டமென்பது சூக்கும உலகத்திலிருந்து அநேக விஷயங்களால் உறுதிப்படுத்தப் படலாம். பெருந்தொகையான ஜனங்கள் இறந்த பிறகு அந்த உலகத்துக்கு வருகிறபோது தங்கள் கதியைப்பற்றி தெரிந்துக்கொள்ள விரும்புகிறார்கள்; ஆனால், தாங்கள் நன்றாய் வாழ்ந்திருந்தால், தங்கள் பாக்கியம் சுவர்க்கத்தி

னும், கெட்ட வழியில் வாழ்ந்திருந்தால் நரகத்திலுமிருக்கிற தென்று, அவர்களுக்குச் சொல்லப்படுகிறது. கெட்டவர்களும் கூட எல்லாரும் நரகம் என்பதைப்பற்றி பயப்படுகிற படியினால்; சுவர்க்கத்துக்கு வரும்பொருட்டு தாங்கள் என்ன செய்யவேண்டு மென்றும், எதை நம்பவேண்டுமென்றும் கேட்கிறார்கள். ஆனால், அதற்கு, தங்கள் இஷ்டப்படி எதையும் செய்யவேண்டுமென்றும், நம்பவேண்டு மென்றும், ஆனால் சுவர்க்கத்தைத் தவிர நரகத்தில் அவர்கள் நன்மையையும் செய்கிறதில்லை, உண்மையையும் நம்பு கிறதில்லை என்று தெரிந்திருக்க வேண்டுமென்று பதில் உத்தரஞ் சொல்லப்படுகிறார்கள். உமக்கு சக்தியிருந்தால் நன்மையானதை யும் உண்மையானதையும் தேடு, உண்மையானதை நினை, நன்மை யானதை செய். ஆகையினால், ஸ்தூல உலகத்தில்போல், சூக்கும உலகத்திலும் ஒவ்வொருவனும் விவேகத்தை அனுசரித்து சுதந்த ரத்திலிருந்து செயல்பட விடப்படுகிறான்; ஆனால், அவர்கள் இந்த உலகத்தில் செய்தது போல், அந்த உலகத்திலும் செய்கிறார்கள்; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய வாழ்வும் அவனுக்காக காத் திருக்கிறது; இதிலிருந்து தான் அவன் கதி ஏற்படுகிறது; ஏனென்றால், கதியானது வாழ்க்கையை அனுசரித்திருக்கிறது.

180. II. **ஒரு மனிதன் தெய்வ அரசியலை தெளிவாய் அறிந்து கொண்டால், அதன் போக்கின் ஒழுங்குக்கும் நோக்கத்திற்கும் தானே எதிராய் நின்று அதைப் புரட்டி அழித்துவிடுவான்.** பகுத்தறிவுள்ள மனிதனுக்கும், ஸ்தூல மனிதனுக்கும் கூட இவைகள் எல்லாம் தனித்தனியாய் தெரியும் பொருட்டு, பின்வரும் ஒழுங்கில் உதார ணங்களால் அவைகள் திருஷ்டாந்தப் படுத்தப்படவேண்டும்: I. ஒவ்வொரு கிருத்தியத்திலும், ஒரு ஏகமாகும் பொருட்டு, புறம் பானவைகள் உள்ளானவைகளோடு அவ்வித சம்பந்தத்தை உடைத்தாயிருக்கின்றன. II மனிதனானவன் ஆண்டவரோடு சில புறம்பானவைகளில் மாத்திரம் இருக்கிறான். உள்ளானவைகளி லும், அதேகாலத்தில் அவன் இருந்தால், அவன் தெய்வ அரசிய லின் போக்கின் எல்லா ஒழுங்கையும் நோக்கத்தையும் புரட்டி அழித்து விடுவான். ஆனால் முன்சொல்லியபடி, இவைகள் எல்

(2) லாம் உதாரணங்களால் திருஷ்டாந்தப் படுத்தப்படவேண்டும். முதலாவது: புறம்பானவைகள் உள்ளானவைகளுடன், ஒவ்வொரு கிருத்தியத்திலும், ஒரு ஏகமாக அவ்வித சம்பந்தத்தை உடைத்தாயிருக்கின்றன. இது மானிட சரீரத்தின் சில பாகங்களிலிருந்து எடுத்த உதாரணங்களால் திருஷ்டாந்தப்படுத்தப்படலாம். முழு சரீரத்திலும், ஒவ்வொரு பாகத்திலும் புறம்பானவைகளும் உள்ளானவைகளு மிருக்கின்றன; புறம்பானவைகள் சருமமென்றும், ஜவ்வென்றும், உறைகளென்றும் சொல்லப்படுகின்றன; உள்ளானவைகள், நரம்பு நார்களாலும், இரத்த நரம்புகளாலும் பலவிதமாய் அமைக்கப்பட்டு இசைந்து செய்யப்பட்ட வடிவங்களாயிருக்கின்றன. அவைகளைச்சுற்றியிருக்கும் உறை, தன்னிடமேயிருந்துவரும் தொடர்ச்சியானவைகளால், எல்லா உள்ளானவைகளுக்குள்ளும் மிகவும் உள்ளுக்குள்ளானதற்குள்ளும்கூட பிரவேசிக்கிறது; இவ்விதமாக உறையாயிருக்கிற புறம்பானது சேர்க்கப்பட்ட நார்களிலும் நரம்புகளிலுமிருந்து உருவாக்கப்பட்ட வடிவங்களாயிருக்கிற எல்லா உள்ளானவைகளுடனும் தானே சேர்ந்துகொள்ளுகிறது. புறம்பானது செயல்படுகிறதுபோல அல்லது செயல்படச் செய்யப்படுகிறதுபோல, உள்ளானவைகளும் செயல்படுகின்றன அல்லது செயல்பட செய்யப்படுகின்றன என்று இதிலிருந்து ஏற்
(3) படுகிறது. ஏனென்றால், கடைசிவரைக்கும் எல்லாவற்றின் தொடர்ச்சியான கட்டியிருக்கிறது. சரீரத்தில் பொதுவான ஏதோ ஒருபொதுவான உறையை, உதாரணமாக, மார்புகூட்டின் அல்லது இருதயங்களுடையவும் சுவாசாசயங்களுடையவும் சாதாரண உறையாயிருக்கிற நுரைஈரலை மூடிக்கொண்டிருக்கும் நிணநீர் ஜவ்வை மாத்திரம் எடுத்துக்கொண்டு, அங்காதி பாத சாஸ்திரத்தை அனுசரித்து அதை ஆராய்ந்துபாரும்; அல்லது அங்காதி பாதசாஸ்திரத்தை நீர் வாசித்திராவிட்டால், அந்த சாஸ்திரம் தெரிந்தவர்களை யோசித்துப்பாரும்; இந்த சாதாரண உறை பலவிதமாய் சுற்றுதலினாலும், பிறகு தன்னிடமேயிருந்து மிகவும் நுண்மையான நீட்டுகைகளினாலும், நாவின்பக்கம் சுவாசக்குழல் மூலமாய் குரல்வளைக்குப்பின் செல்லுவதை நீக்கி, சுவாசயங்களின் உள்ளுக்குள்ளான பாகங்களிலும், மிகவும் சிறிய சுவாசக்குழலின்

கிளேகளிலும், சுவாசாசயங்களின் ஆரம்பங்களா யிருக்கிற சிறுபை களிலேயே கூட பிரவேசிக்கிறதை அறிந்துகொள்வாய். இவைகளி னல், மிகவும் வெளியிலுள்ளவைகளுக்கும் மிகவும் உள்ளிருப்பவை களுக்கும் தொடர்ச்சியான சம்பந்தமிருக்கிறதென்று விசதமாகி றது; ஆகையினல், மிகவும் வெளியிலிருப்பது செயல்படுகிறது அல்லது செயல்படச் செய்யப்படுகிறதுபோல், அப்படியே மிகவும் உள்ளிருப்பதிலிருந்துவரும் உள்ளானவைகள் செயல்படுகின்றன அல்லது செயல்படச்செய்யப்படுகின்றன. இதனல் தான், நுறை ஈரலேச்சுற்றியிருக்கும் ஜவ்வாகிய மிகவும் வெளியேயிருக்கும் இந்த உறையானது, இரத்தம் அதிகமாய் கூடினபோதும், எரிச் சல் உண்டானபோதும் அல்லது புண்ணுக்கப்பட்டபோதும், தங்கள் உள்ளானவைகளிலிருந்து சுவாசாசயங்கள் வருத்தமடை கின்றன; அந்த வியாதி அதிகமாய் விட்டால், சுவாசாசயங்க ளின் எல்லா செயல்களும் நின்று, மனிதன் இறந்துபோவான். அடிவயிற்றைச்சேர்ந்த எல்லா ஆந்திரிகங்களின் சாதாரண உறை (4) யாயிருக்கிற வயிற்றகத்தை மூடியஜவ்வு விஷயத்தில்போலவும், மேலும் இரைப்பை, பித்தாசயம், மண்ணீரல், குடல், மணிக் குடல், மூத்திரபிண்டங்கள், ஸ்திரி புருஷஜாதிகளில் ஜனிக்கிற அவயவங்கள் இவைகள்போலவும், பல அவயவங்களேச் சுற்றி யிருக்கும் உறைகள் விஷயத்தில் போலவும், முழுசரீரத்திலும் வேறு எல்லாவிடங்களிலும் அது அப்படியேயிருக்கிறது. இந்த வயிற்றைச்சேர்ந்த ஆந்திரிகங்களில் ஒன்றை எடுத்துக்கொண்டு, நீரே சோதித்துப்பாரும், அதைஅறிந்துகொள்வீர் அல்லது அந்த சாஸ்திரத்தில் சாமார்த்தியமுள்ளவர்களேக்கேளும், நீர் கேழ்விப் படுவீர். உதாரணமாக, பித்தாசயத்தை எடுத்துக்கொள்வோம், வயிற்றகத்தை மூடிய ஜவ்வுக்கும், அந்த அவயவத்தின் உறைக் கும், அந்த உறை மூலமாய் அதன் மிகவும் உள்ளானவைகளுக்கும் ஒரு சம்பந்த மிருப்பதை நீர் பார்ப்பீர்; ஏனென்றுல், உறையிலிரு ந்து இடைவிடாத நீட்டுதலும் உள்ளானபாகங்களுக்குச் சொருகு தலும் இருக்கின்றன, இவ்விதமாக, மிகவும் உள்ளானவைகளுக்கு தொடர்ச்சிகளுமிருக்கின்றன; இந்த வழி வகைகளால், உறை செயல்படும்போது அல்லது செயல்படச்செய்யப்பட்டபோது,

முழுவடிவமும் அம்மாதிரி செயல்படவும் செயல்படச்செய்யப்படவும், அவ்விதமாய் கட்டப்பட்டிருக்கிறது. மற்ற அவயவங்கள், விஷயத்திலும் அம்மாதிரியே; ஏனென்றால், ஒவ்வொரு வடிவத்திலும் பொதுவானவைகளும், சிறப்பானவைகளும், அல்லது சர்வவியாபக மானவைகளும், ஒருமையானவைகளும் பிரமிப்பிக்கிற சேர்க்
(5) கையினால் ஒன்றாக செயல்படுகின்றன. சித்தத்தினுடையவும் புத்தியினுடையவும் கிருத்தியங்களுக்குச் சம்பந்தப்பட்டிருக்கிற சூக்கும வடிவங்களிலிருக்கும் நிலைமையின் திரிபுகளும் விகற்பங்களும், சலனத்துக்கும் சேட்டைக்கும் சம்பந்தப்பட்ட ஸ்தூல உருவங்களிலும், அவைகளின் கிருத்தியங்களிலும் சம்பவிக்கிறவைகளோடு ஒப்பானதாயிருக்கின்றனவென்று கீழே வருவதில் அறிந்துகொள்ளலாம். இப்படியிருக்கையில், மனிதனானவன் சில புறம்பான கிருத்தியங்களில் ஆண்டவருடன் சேர்ந்திருப்பதினாலும், விவேகத்தை அனுசரித்து செயல்படும் சுதந்தரம் எவனிடமிருந்தும் நீக்கப்படாதபடியினாலும், புறம்பானவைகளில் ஆண்டவரும் மனிதனோடு சேர்ந்து செயல்படுதல் போலல்லாமல், உள்ளானவைகளிலும் வேறு விதமாய் செயல்பட முடியாதென்று ஏற்படுகிறது. ஆகையினால், மனிதனானவன் பாவங்களாக தீமைகளிலிருந்து ஒழிந்து நீங்காவிட்டால், சிந்தனையினுடையவும் சித்தத்தினுடையவும் புறம்பானதும், அதே காலத்தில் அவைகளின் உள்ளானவைகளும் சீர்குலைந்து அழிந்து போகின்றன; ஒத்துப்பார்க்கில் அது நுரைஈரலை மூடிக்கொண்டிருக்கும் நிண நீர் ஜவ்வு, சரீரத்துக்கு மரணத்தை உண்டாக்குகிற சுவாதக்குத்து என்று
(6) சொல்லப்பட்ட அதன் நோயால் மாறுதலுண்டாக்கப்படுவது போலிருக்கிறது. இரண்டாவது: மனிதனானவன் அதே காலத்தில் உள்ளானவைகளிலிருந்தால், அவன் தெய்வ அரசியலின் ஒழுங்கையும் நோக்கத்தையும் புரட்டி அழித்து விடுவான். இதுகூட மானிட சரீரத்திலிருந்து எடுத்த உதாரணங்களால் திருஷ்டாந்தப்படுத்தப்படலாம். இரண்டு மூளைகளும் நார்களிலும், நார்கள் தசை நரம்புகளிலும், தசை நரம்புகள் செய்கைகளிலும், செயல்படுவது எல்லாம் மனிதன் தெரிந்து கொண்டாலும், அவைகளைக்குறித்து அவனடைந்த அறிவிலிருந்து அவனுடைய எல்லா செய்கைகளையும்

அவன் கிரமப்படுத்துவதுபோல், எல்லாவற்றையும் ஒழுங்கு படுத் (7) தினாலும், அவன் எல்லாவற்றையும் புறட்டி அழித்துவிடமாட்டானா? மனிதனுக்கு இரைப்பை எப்படி ஜீரணமாக்குகிறதென்றும், சுற்றியிருக்கும் ஆந்திரிகம் தங்கள் அனுவலை எடுத்துகொண்டு இரத்தத்தை உண்டாக்கி, உயிரின் ஒவ்வொரு கிருத்தியத்துக்கும் அதை எப்படி விபாகிக்கிறதென்றும் தெரிந்திருந்தாலும், உண்பதும் பானம் பண்ணுவதும் போல புறம்பானவைகளை கிரமப்படுத்த சக்தி யிருக்கிறது போல், இவைகளையும் ஒழுங்குபடுத்த அவனுக்கு சக்தி யிருந்தாலும், அவன் எல்லாவற்றையும் புரட்டி அழித்து விடமாட்டானா? தனிப்பொருளாய்த் தோன்றுகிற புறம்பானதை பெரு வாழ்வினாலும் அதிபானத்தாலும், அதை அழிக்காமல் அவன் ஒழுங்கு படுத்தமுடியாத போது, கணக்கற்றிருக்கும் உள்ளானவைகளை ஒழுங்குபடுத்த விடப்பட்டால் அவன் என்ன செய்வான்? ஆகையினால், உள்ளானவைகளில் எந்தசித்தத்துடனும் பிரவேசித்து, அவைகளை தன்னுடைய அதிகாரத்துக்கு அவன் உட்படுத்தாதபடி, உடுப்பாகிற தசை நரம்புகளைத் தவிர, மற்ற உள்ளானவைகள் முழுவதும் மனிதனுடைய சித்தத்தி (8) லிருந்து நீங்கலா யிருக்கின்றன; மேலும், இவைகள் எப்படி செயல்படுகின்றன என்று தெரியாது; அவைகள் செயல்படுகின்றன என்று மாத்திரம் தெரிந்திருக்கிறது. மற்ற அவயவங்களுடனும் அம்மாதிரியே; பார்ப்பதற்குக் கண்ணின் உள்ளானவைகளையும், கேட்பதற்குக் காதின் உள்ளானவைகளையும், உருசி பார்க்க நாவின் உள்ளானவைகளையும், உணர சருமத்தின் உள்ளானவைகளையும், இரத்தாசயம் சுருங்கும்பொருட்டு, அதன் உள்ளானவைகளையும், சுவாசிக்க சுவாசாசயகங்களின் உள்ளானவைகளையும், அன்ன சாரத்தை பகிர்ந்து கொடுக்க மணிக்குடலின் உள்ளானவைகளையும், மூத்திரம் வடிதலுக்கு மூத்திர பிண்டங்களின் உள்ளானவைகளையும், பிள்ளைகள் பெறுதல்பொருட்டு, பிள்ளைபெறும் அவயவங்களின் உள்ளானவைகளையும், கருவை பூரணப்படுத்த கர்ப்பாசயத்தின் உள்ளானவைகளையும், இதைப்போன்றவைகளையும், மனிதனவன் ஒழுங்கு படுத்துகிறதா யிருந்தால், அவன் முடிவற்ற வழிகளில் தெய்வபரிபாலனத்தின் வளர்ச்சியின்

ஒழுங்கை, அவைகளில் புரட்டி அழித்துவிட மாட்டானா? கண்களால் பார்க்கிறது போலவும், காதினால் கேட்கிறது போலவும், நாக்கினால் உருசி பார்க்கிறது போலவும், சருமத்தினால் உணருகிறது போலவும், சுவாசாசயங்களால் சுவாசிக்கிறது போலவும், பெண்சாதிக்கு கருப்ப முண்டாக்குகிறது போலவும், இதைப்போன்றவைகளைப் போலவும், மனிதன் புறம்பானவைகளில் இருக்கிறானென்று தெரிந்திருக்கிறது. அவனுக்கு புறம்பானவைகளை தெரிந்துகொண்டு சரீரத்தினுடையவும் மனதினுடையவும் ஆரோக்கியத்தை ஒழுங்கு படுத்துதல் போதுமானதல்லவா? இதை அவன் செய்யமுடியாதபோது, உள்ளானவைகளைக்கூட அவன் ஒழுங்கு படுத்த விடப்பட்டால், முடிவு என்னமாகும்? இந்த ஆலோசனைகளிலெல்லா மிருந்து, ஒருமனிதன் தெய்வபரிபாலனத்தைத் தெளிவாய்ப் பார்த்தால், அதன் போக்கின் ஒழுங்குடனும் நோக்கத்துடனும் தலையிட்டுகொண்டு, அதை புரட்டி அழித்துவிடுவானென்று இப்பொழுது ஸ்தாபிக்கப்படலாம்.

181. மனதின் எல்லா பொருள்களும், சரீரத்தின் எல்லா பொருள்களோடும் ஒத்திருக்கிறபடியினால், சரீரத்தின் ஸ்தூலப் பொருள்களிலிருப்பது போல, மனதின் சூக்குமப் பொருள்களிலும் அதேமாதிரி யிருக்கிறது; ஆகையினால் கூட, மனது சரீரத்தை புறம்பானவைகளில் நடத்துகிறது, பொதுவானவைகளில் தன் முழு இஷ்டப்பிரகாரம் நடத்துகிறது. கண்ணைப் பார்க்கவும், காதை கேட்கவும், வாயையும் நாக்கையும் சாப்பிடவும் குடிக்கவும், அதனுடன் பேசவும், கைகளை வேலைசெய்யவும், கால்களை நடக்கவும், ஜனிப்பிக்கிற அவயவங்களை பிள்ளைகள் பெறவும் அது ஏவுகிறது. இந்த அசைவுகளை உண்டாக்க மனது புறம்பானவைகளை ஏவுகிறது மாத்திரமல்லாமல், உள்ளானவைகளைக்கூட மிகவும் உள்ளுக்குள்ளானவைகளிலிருந்து, இறுதியானவைகளையும் இறுதியானவைகளிலிருந்து மிகவும் உள்ளுக்குள்ளானவைகளையும், அவைகளின் தொடர்ச்சிகளிலும் அப்படிச் செய்கிறது. ஆகையினால், அது வாயை பேசும்படி ஏவும்போது, அதேகாலத்தில் சுவாசாசயங்களையும் குரல்வளையையும், தொண்டைக்குழியையும்,

நாக்கையும் உதடுகளையும், ஒவ்வொன்றையும் தனித்தனியாய் தன் (2) சொந்த தொழில் செய்யவும் முகமும்கூட ஒத்துப்போகவும், ஏவுகிறது. ஆகையினால், சரீரத்தின் ஸ்தூல உருவங்களைப்பற்றி சொல்லியவைகள், மனதின் சூக்கும உருவங்களைப்பற்றிக் கூட அம்மாதிரியே சொல்லப்பட வேண்டுமென்றும், சரீரத்தின் ஸ்தூல கிருத்தியங்களைப் பற்றி கூறியவைகள், மனதின் சூக்கும கிருத்தியங்களுக்கும் கூட சொல்லப் படவேண்டுமென்றும், அதனால் மனிதனானவன் புறம்பானவைகளை ஒழுங்குபடுத்துகிறது போல், ஆண்டவர் உள்ளானவைகளை ஒழுங்குபடுத்துகிறாரென்றும், இவ்விதமாக, மனிதனானவன் புறம்பானவைகளைத் தன்னிடமே யிருந்து கிரமப்படுத்தினால், ஒரு வழியிலும் அவன் ஆண்டவரிடமிருந்து புறம்பானவைகளை கிரமப்படுத்தி, அப்படிச் செய்தலும் தன்னிடமிருந்தே போல் செய்தால், மற்றவழியிலும் செய்யப்படுகிறதென்று விசதமா யிருக்கிறது. மேலும், மனிதனுடைய மனது, அதன் எல்லா உருவத்திலும் ஒருமனிதனா யிருக்கிறது; ஏனென்றால், அது இறந்த பிறகு உலகத்திலிருந்தது போல முழுவதும் மனிதனாகத் தோன்றுகிற, அவனுடைய ஆவியாக இருக்கிறது; ஆகையினால் சரீரத்திலும் மனதிலும் இரண்டிலும் ஒரே மாதிரியானவை களிருக்கின்றன. ஆகையினால், சரீரத்தில் உள்ளானவைகளோடு, புறம்பானவைகளின் சேர்க்கையைப் பற்றி கூறப்பட்டிருக்கிறவைகள், ஒன்று ஸ்தூலமானது, மற்றது சூக்குமமானது, என்கிற வித்தியாசத்துடன் மாத்திரம், மனதில் உள்ளானவைகளோடு புறம்பானவைகளின் சேர்க்கைக்குக்கூட அறிந்துகொள்ளவேண்டும்,

182. III. **ஒரு மனிதன் தெய்வ அரசியலை, தெளிவாய்ப் பார்த்தால், அவன் கடவுள் இல்லை என்பான் அல்லது தானே கடவுளாக்கிக்கொள்வான்.** சுத்தமாய் ஸ்தூல மனிதன் நினைக்கிறதாவது:— தெய்வபராமரிப்பு என்பது என்ன? தங்கள் குருவிடமிருந்து சாதாரண ஜனங்கள் தெரிந்துகொண்டு உபயோகிக்கும் ஒரு வார்த்தையை விட வேறொன்றா அல்லது அதிகமா? அதைப்பற்றி எதையாவது யார் அறிந்துகொண்டிருக்கிறார்கள்? உலகத்தில் எல்லா

காரியங்களும், சூழ்ச்சியினுலும், ஞானத்திஞுலும், தந்திரத்தி ஞுலும், வன்மத்திஞுலும் செய்யப்படுகிறதில்லையா? அவைகளி லிருந்துவரும் இதர எல்லாப் பொருள்களும் குறைபாடுகளும் பலன்களும் அல்லவா? மேலும், இதைத்தவிர, அநேக நிச்சயமில் லாத சங்கதிகளல்லவா? தெய்வ அரசியல் இவைகளில் மறைந்து கிடக்கிறதா? வஞ்சகத்திலும் தந்திரத்திலும் எப்படி மறைந்து கிடக்கும்? என்றுலும், தெய்வ அரசியல் எல்லாவற்றையும் செய் கிறதென்கிருர்கள். அப்படி இருக்கும் பட்சத்தில் என்னை அதைப்பார்க்கச் செய், நான் அதை நம்புகிறேன். தான் பார்க் (2)காததற்கு முன் எவனுவது அதை நம்புவானு? அம்மாதிரியாக சுத்தமாய் ஸ்தூலமான மனிதன் பேசுகிருன்; ஆனுல் பரமார்த்த மான மனிதன் வேறு விதமாய்ப் பேசுகிருன். அவன் கடவுளை ஒத் துக்கொள்ளுகிற படியினுல், அவன் தெய்வ அரசியலைக் கூட ஒத் துக்கொள்ளுகிருன். அவன் கூட அதைப் பார்க்கிருன், ஆனுல் பிரகுருதியிலிருந்து பிரகுருதியில் மாத்திரம் நினைக்கிற எவனுக் கும் அதைத் தெளிவாக்க மாட்டான்; ஏனென்றுல், அப்பேர்ப்பட் டவன், தன்னுடைய மனதை, பிரகுருதிக்கு மேலே உயர்த்தி, அதன் தோற்றத்தில், தெய்வ அரசியலின் கொஞ்சமும் பார்க்க மாட்டான், அல்லது, பரம ஞானசத்தியின் சட்டங்களாகக் கூட இருக்கிற அதன் சட்டங்களிலிருந்து, அதைக்குறித்து கடைசி யான அபிப்பிராயங்களுக்கு வரமாட்டான். ஆகையினுல், அவன் அதை, தெளிவாய்ப் பார்த்தால், அதை பிரகுருதியாக நினைத்து பிரமித்து, இவ்விதமாக போலி நியாயங்களால் அதை மூடுவது மாத்திரமல்லாமல், அதை அசுத்தப்படுத்துவான்; அதை ஒத்துக் கொள்ளுவதற்குப் பதிலாக, அது இல்லை என்பான்; இருதயத்தில் தெய்வ அரசியலை இல்லை என்பவன், கடவுளைக் கூட இல்லை என் பான். கடவுள் எல்லாவற்றையும் அரசாளுகிருரென்றுவது அல் (3)லது பிரகுருதி அப்படி செய்கிறதென்றுவது நினைக்கப்பட வேண்டும். எல்லாவற்றையும் கடவுள் அரசாளுகிருரென்று நினைக் கிறவன், அவைகள் இச்சாசக்தியினுலேயும் ஞானசக்தியினு லேயும், இவ்விதமாக உயிரினுலேயே அரசாளப் படுகின்றன என்று நினைக்கிருன்; ஆனுல் எல்லாவற்றையும் பிரகுருதி அர

சாளுகிறதாக நினைக்கிறவன், இறந்துபோன சூரியனிடமிருந்து வருகிறபடியினால், தாமே இறந்தவைகளா யிருக்கிற ஸ்தூல சூட்டினாலும் ஸ்தூல வெளிச்சத்தினாலும், அவைகள் அரசாளப் படுகின்றனவென்று நினைக்கிறான். தானே உயிருள்ளது இறந்து போனதை அரசாளுகிறதில்லையா? இறந்து போனது எதையாவது அரசாளுமா? இறந்து போனது தனக்கே உயிர் கொடுத்துக் கொள்ளுமென்று நீர் நினைத்தால், நீர் பைத்தியம் பிடித்தவர்; உயிரானது உயிரிலிருந்தே வரவேண்டும்.

183. மனிதனானவன் தெய்வ பரிபாலனத்தையும் அதன் கிருத்தியங்களையும் வெளிப்படையாய்ப் பார்த்தால், அவன் கட வுள் இல்லை என்பான் என்பது வெகுவாய் நடக்காது; ஏனென்றால், அதைத் தெளிவாய் பார்த்த எவனும், அதை ஒத்துக்கொள்ளவே வேண்டுமென்றும், இவ்விதமாக கடவுளை ஒத்துக்கொள்ளவேண்டு மென்றும் தோன்றுகிறது; ஆனால் அது முற்றும் எதிரிடையா யிருக்கிறது. தெய்வ பரிபாலனம் ஒரு மனிதனுடைய சித்தத்தின் அன்போடு எப்பொழுதும் இசைந்து நடக்காமல், எப்பொழுதும் அதற்கு எதிரிடையாய் செயல்படுகிறது; ஏனென்றால், மனித னானவன் தன்னுடைய பரம்பரையான தீங்கிலிருந்து மிகவும் தாழ்ந்த நரகத்துக்கே எப்பொழுதும் பெருமூச்சு விடுகிறான். ஆனால், ஆண்டவர் தன்னுடைய பராமரிப்பினால், தொடர்ச்சியாய் அதிலிருந்து நீக்கி, அதற்குப் போகாமல்அவனைப்பிரித்து,முதலில் ஒரு மெதுவான நரகத்துக்கும், பிறகு நரகத்துக்குத் தூரமாகவும், கடைசியில் சுவர்க்கத்தில் தன்னிடமே கொண்டு வருகிறார். இந்த தெய்வ அரசியலின் தொழிற்பாடு நித்தியமாயிருக்கிறது. ஆகையி னால், மனிதனானவன் இந்த பிரித்தலையும் நீக்குதலையும் பகிரங்க மாய் பார்த்தால் அல்லது உணர்ந்தால், அவன் கோபம் கொண்டு, கடவுளைத் தன்னுடைய விரோதியாக நினைத்து, தன்னுடைய தானா கும் தன்மையின் தீமையிலிருந்து அவர் இல்லை என்பான். ஆகையி னால், மனிதனுக்கு இது தெரியாதிருக்கும் பொருட்டு, தானே நடத்திக்கொள்ளுகிறானென்பது தவிர, அவன் வேறு ஒன்றும் (2) அறியாத சுதந்தரத்தில் வைக்கப்படுகிறான். ஆனால்

திருஷ்டாந்தப் படுத்த உதாரணங்கள் உதவட்டும்:—பரம்பரையான சுபாவத்திலிருந்து மனிதனானவன் பெரியவனாக விரும்புகிறான்; மேலும், அவன் தனவானாகக் கூட விரும்புகிறான்; இந்த ஆசைகள் அடக்கப்படாமல் விடப்படுகிற அளவு, அவன் இன்னும் அதிக பெரிய மனிதனாகவும் செல்வமுள்ளவனாகவும், கடைசியில் எல்லாரைக்காட்டிலும் பெரிய மனிதனாகவும் செல்வமுள்ளவனாகவுமிருக்க விரும்புகிறான்; அவன் இத்துடன் அமைதியடையமாட்டான்; ஆனால், கடவுளையேவிட பெரியவனா யிருக்கவும், சுவர்க்கத்தையே தனதாக உடைத்தாயிருக்கவும் விரும்புவான். இந்த பேராசை, பரம்பரையான தீமையிலும், அதனால், மனிதனுடைய உயிரிலும், அவனுடைய உயிரின் சுபாவத்திலும், மிகவும் அதிக ஆழமாய் மறைந்து கிடக்கிறது. தெய்வபரிபாலனம் இந்த தீங்கை ஒரு நொடிநேரத்தில் நீக்கிவிடுகிறதில்லை, ஏனென்றால், அது அப்படிச் செய்தால் மனிதன் உயிரோடிருக்க மாட்டான்; ஆனால் அது, அதைப்பற்றி மனிதனுக்கு ஒன்றும் தெரியாதபடிக்கு அவ்வளவு சலனமில்லாமலும், படிப்படியாகவும் நீக்கிவிடுகிறது. மனிதன் விவேகத்தை ஒத்ததாயிருக்கச் செய்கிற சிந்தனைக்குத் தக்கபடி செயல்பட அவனை விடுதலினால் இது செய்யப்படுகிறது; பிறகு, தேசாசாரமானதும் சன்மார்க்கமானதும் போல பகுத்தறிவுடைய பல வழிவகைகளால், தெய்வபராமரிப்பு சுதந்திரத்தில் நீக்கப்படக்கூடிய அளவு அவனை நீக்குகிறது. அதுவுமன்றி, தீமையானது தோன்றி, பார்க்கப்பட்டு, ஒத்துக் கொள்ளப்பட்டால் ஒழிய எவனிடமிருந்தும் அது நீக்கப்பட (3) முடியாது; அது திறக்கப்பட்டாலொழிய குணப்படுத்தப் படாத ஒரு காயத்தைப் போலிருக்கிறது. ஆகையினால், ஆண்டவர் தன்னுடைய தெய்வ பரிபாலனத்தின் மூலமாய் தனக்கு மிகவும் உயர்ந்த சந்தோஷத்தைக் கொடுக்கிற தன்னுடைய உயிரின் ஆசைக்கு விரோதமாய் வேலைசெய்கிறாரென்று மனிதனுக்குத் தெரிந்து அதை அவன் பார்த்தால், முக்கியமாய் தான் ஜயமடைவதற்கு குந்தகமா யிருப்பதாகவும், கௌரவத்திலிருந்து தள்ளப்பட்டு செல்வம் பறிக்கப்படுகிறதாகவும் பார்த்தால், எதிரிடையாய் போய், கோபம் மூட்டப்பட்டு, சாட்சிகளை கூப்பிட்டு எதிர் வியாஜ

ஜியம் செய்து கடினமான வார்த்தைகளைச் சொல்லி, கடைசியில் தன்னுடைய தீமையின் பொருட்டு, தெய்வ அரசியலை இல்லை யென்று சொல்லி, தெய்வபரிபாலனத்தின் கிருத்தியத்தை நீக்கு வதைத்தவிர அவன் வேறு விதமாய் ஒன்றும் செய்யமுடியாது. ஆனால், ஆண்டவர் மனிதனை கௌரவங்கள் தேடுவதிலிருந்தும் செல்வம் சேர்ப்பதிலிருந்தும் எப்பொழுதும் தடுக்காமல், மேன் மையின் பொருட்டு மாத்திரமும் அல்லது தனக்கேயாகவும் கௌரவங்களைத் தேடும் பேராசையிலிருந்தும், அம்மாதிரியேகூட, ஐசுவரியத்தின் பொருட்டு மாத்திரமும் அல்லது அதிகாரத்தின் பொருட்டும், செல்வத்தை சேர்ப்பதிலிருந்தும் தடுக்கிறாரென்று தெரிந்திருக்கவேண்டும். ஆனால் அவர் இவைகளிலிருந்து வேறு வழி அவனுக்குக் காண்பிக்கும்போது, அவன் மேன்மை என்பதை தன் பொருட்டல்லாமல், உபயோகங்கள் செய்வதின் பொரு ட்டும், இவ்விதமாக தனக்கேயும், தன்னிடமிருந்து வரும் உபயோ கங்களுக்குச் சேர்ந்ததாக அல்லாமல், உபயோகங்களுக்குச் சேர்ந்த தாகவும், தன்னுடையது அவைகளிலிருந்து வந்ததாக மதிக்க வும், அவர் அவனை உபயோகங்களை நேசிக்கும்பொருட்டு வழி காட்டுகிறார். ஐசுவரியத்துடனும் அப்படியே. ஆண்டவர் இறு மாப்புடையவர்களை இடைவிடாமல் தாழ்த்தி, மனத்தாழ்மை யுள்ளவர்களை உயர்த்துகிறார் என்று வேதத்தில் பல இடங்க ளில் அவர் கற்பிக்கிறார்; அங்கே அவர் கற்பிக்கிறவைக ளெல் லாம், அவருடைய தெய்வ பரிபாலனத்தைச் சேர்ந்ததாகக் கூட யிருக்கிறது.

184. விபசாரங்களோடும், வஞ்சனைகளோடும் சலம்சாதித்த லோடும் தெய்வ நிந்தனையோடும், இவைகள் போன்ற மற்ற வைகளோடும், போன்றமனிதன் பரம்பரையாயிருக்கும் மற்ற தீங் குகளோடும், அதேசெய்யப்படுகின்றது; தான் அவைகளை தன் னிடமே யிருந்து போல நீக்கும்பொருட்டு, மனிதனுக்கு அவைகளை, நினைக்கவும் இச்சிக்கவும் சுதந்தரம் விடப்பட்டாலொழிய, அவை களில் எதுவும் நீக்கமுடியாது; அப்படியிருந்தும் தெய்வ அரசி யலை அவன் ஒத்துக்கொண்டு, வேலையானது அதினால் செய்யப்பட

வேண்டுமென்று, பிரார்த்தித்தாலொழிய அவன் அதைச் செய்ய மாட்டான். அந்த சுதந்தரமும் அதேகாலத்தில் தெய்வபரிபாலனமும் சேர்ந்தல்லாமல், கொஞ்சகாலத்தில் பரவி, முழுசரீரத்துக்கும் மரணத்தை கொண்டுவரக்கூடிய, வெளியே போடப்படாமல் உள்ளேயே வைக்கப்பட்டிருக்கும், விஷத்தைப்போல் அந்த தீமைகளிலிருக்கும்; முழு சரீரமும் சீக்கிரம் இறந்துபோகச் செய்கிற இருதயத்தினுடைய ரோகம்போலவே அவைகளிருக்கும்.

185. இது அப்படியிருக்கிறதென்பது, சூக்கும உலகத்திலிருக்கும் இறந்துபோன பிறகு மனிதர்கள் விஷயத்திலிருந்து தவிர, அதிக நன்றாய்த் தெரிந்துகொள்ள முடியாது. ஸ்தூல உலகத்தில் பெரிய மனிதர்களாகவும் தனவந்தர்களாகவும் ஆனவர்களிலும், கௌரவத்திலும் செல்வத்திலும் தங்களையே மதித்தவர்களிலும் அநேகர், முதலில் கடவுளைப்பற்றியும் தெய்வ அரசியலைப் பற்றியும், அவைகளை அவர்கள் இருதயத்தில் ஒத்துக்கொண்டது போல் பேசுவார்கள். ஆனால், அவர்கள் அப்பொழுது தெய்வ பரிபாலனத்தையும், அதிலிருந்து, தாங்கள் நரகத்துக்கு வரவேண்டுமென்கிற தங்கள் முடிவான கதியை வெளிப்படையாய்ப் பார்க்கிற படியினால், அவர்கள் அங்கிருக்கும் பிசாசுகளுடன் சேர்ந்து கொண்டு, பிறகு கடவுள் இல்லை என்று சொல்வதுடன் அவரைக்கூட நிந்திக்கிறார்கள்; கடைசியில், பிசாசுகளில் அதிக வல்லமையுள்ளதை, தங்கள் கடவுளர்களாக ஒத்துக்கொள்ளும்படியான அவ்வித சித்தப் பிரமைக்கு வருகிறார்கள். தாங்களே கூட கடவுளாவதை விட எதையும் அவ்வளவு அதிக வைராக்கியத்துடன் நேசிக்கிறதில்லை.

186. மனிதனானவன் கடவுளுடைய அரசியலின் கிருத்தியங்களைத் தெளிவாய்ப் பார்த்தால், அவன் அவருக்கு எதிரிடையாய் சென்று அவர் கூட இல்லை என்று மறுப்பான் என்பது, அவன் தன்னுடைய ஆசையின் சந்தோஷத்திலிருக்கிறதினாலும், இந்த சந்தோஷம் அவனுடைய உயிரையே உண்டாக்குகிறதினாலும் ஏற்படுகிறது. ஆகையினால், மனிதனானவன் தன்னுடைய உயிரின்

சந்தோஷத்தில் வைக்கப்படுகிறபோது, அவன் தன்னுடைய சுதந்தரத்திலிருக்கிறான்; ஏனென்றால், சுதந்தரமும் அந்த சந்தோஷமும் ஒன்றாகிறது. ஆகையினால், அவன் தன்னுடைய சந்தோஷத்திலிருந்து தொடர்ச்சியாய்ப் பிரிக்கப் படுகிறானென்று அவன் அறிந்து கொண்டால், தனக்கு விரோதியாய் மதிக்கக் கூடிய தன்னுடைய உயிரை அழிக்க விரும்பினவனுக்கு விரோதமாய் போல், அவன் கோபம் மூட்டப்படுவான். இது நடக்காதபடி, ஆண்டவர் தன்னுடைய தெய்வ பரிபாலனத்தில் வெளிப்படையாய்த் தோன்றாமல், ஆனால் அதன் மூலமாய் ஓர் புலப்படாத நதி அல்லது ஒரு அனுகூலமான நீரோட்டம் ஒரு கப்பலைக் கொண்டு போவது போல, மனிதனுக்கு அமைதியாய் வழி காட்டுகிறார். இதன் பயனாக, சுதந்தரமானது தானாகும் தன்மையுடன் ஒன்றாகிறபடியினால், மனிதனுக்கு தான் தன்னுடைய தானாகும்தன்மையில் நிலையாயிருப்பதாகத் தவிர வேறொன்றும் தெரியாது. ஆகவே சுதந்தரமானது, தெய்வ அரசியல் உட்செலுத்துகிறதை மனிதனுக்கு உரித்தாக்குகிறதென்று விசதமாகிறது; தெய்வ அரசியல் தானே வெளிப்படுத்திக் கொண்டால் அது அப்படி யிருக்காது. உரித்தாக்கப் படுவது என்பது உயிராய் போய்விடுகிறதா யிருக்கிறது.

187. IV. **தெய்வ அரசியலை முகத்திலல்லாமல் பின் புறத்திலும், மேலும், ஸ்தூல நிலைமையிலல்லாமல், சூக்கும நிலைமையிலும் பார்க்க அனுமதி கோடுக்கப்பட்டிருக்கிறது.** தெய்வ அரசியலை முகத்திலல்லாமல் பின் புறத்தில் பார்த்தல் என்பது, முன்னிட்டு அல்லாமல் பின்னிட்டு பார்த்தலா யிருக்கிறது; ஸ்தூல நிலைமையிலல்லாமல், சூக்கும நிலைமையில் பார்த்தல், உலகத்திலிருந்தல்லாமல், சுவர்க்கத்திலிருந்து பார்த்தலா யிருக்கிறது. சுவர்க்கத்திலிருந்து உட்பெருக்கை அடைந்து, தெய்வ அரசியலை ஒத்துக் கொள்ளுகிறவர்கள் எல்லாரும், முக்கியமாய் சீர்படுத்தப் படுவதினால் பரமார்த்த மாகிறவர்களும், சங்கதிகளை எதோ ஒரு அற்புதமான வரிசையில் பார்க்கும்போது, அவர்கள் தெய்வ அரசியலைப்பார்த்து உள்ளுக்குள்ளாக இருந்து ஒத்துக் கொள்ளுகிறார்கள். அவர்கள்

அதை முகத்தில் அதாவது அது உண்டாவதற்கு முன், பார்க்க விரும்புகிறதில்லை; ஏனென்ருல், தங்களுடைய சொந்த சித்தமானது அதன் ஒழுங்கினுடையவும் நோக்கத்தினுடையவும் எதிலும், உத்திரவின்றி பிரவேசிக்குமென்று அவர்கள் பயப்படுகிருர்கள். (2) சுவர்க்கத்தி லிருந்தல்லாமல், உலகத்திலிருந்து மாத்திரம் வரும் எந்த பெருக்கையும் ஒத்துக்கொள்ளுகிறவர்கள் விஷயத்திலும், முக்கியமாய் தங்களோடு தோற்றங்கள் ஸ்திரப்படுவதினுல் ஸ்தூலமானவர்கள் விஷயத்திலும், அது வேறுவிதமாயிருக்கிறது. இவர்கள், தெய்வ அரசியலின் எதையும், பின்புறத்திலாவது அல்லது அதற்குப் பின்னிட்டாவது பார்க்கிறதில்லை. ஆனுல், அவர்கள் அதை முகத்தில், அல்லது அது உண்டாகுவதற்கு முன் பார்க்க விரும்புகிருர்கள்; தெய்வஅரசியல் உபகரணங்களால் தொழில்படுவதாலும் அந்த உபகரணங்கள் மனிதன் மூலமாய் அல்லது உலகத்தின் மூலமாய் செய்யப்படுகிற படியினுலும், அவர்கள் அதை முகத்தில் பார்த்தாலும் பின்புறத்தில் பார்த்தாலும், அதை மனிதனுக்கு அல்லது பிரகுருதிக்குச் சாட்டி, இவ்விதமாக (3) அதை மறுத்தலில் தாங்களே ஸ்திரப்படுகிருர்கள். அவர்கள் அதை ஏன் அப்படி சாட்டுகிருர்கள் என்பதற்குக்காரணம், அவர்கள் புத்தி மேலிருந்து மூடப்பட்டு, கீழிருந்துமாத்திரம் திறக்கப்படுவதினுலும், இவ்விதமாக சுவர்க்கம் பக்கம் மூடப்பட்டு உலகம் பக்கம் திறக்கப்பட்டிருப்பதினுலும், அமைந்திருக்கிறது. தெய்வ அரசியலை உலகத்திலிருந்தல்லாமல், சுவர்க்கத்திலிருந்து பார்க்க அருள் செய்யப்பட்டிருக்கிறது. தங்களுடைய புத்தியானது மேலிருந்து திறக்கப்பட்டு,பிரகுருதி தன்னில்தானே இறந்து போனதென்றும், மானிட விவேகமானது தன்னில்தானே சூனியமென்றும், ஆனுல் அவைகள் இரண்டும் இருக்கிறதாகத் தோன்றுதல் உட்பெருக்கினுல் என்றும், மப்பில்லாத நாளில் போல் அவர்கள் பார்த்தால், தெய்வ அரசியலை ஒத்துக்கொள்ளுவார்களா என்று, நான் சில வேளைகளில் எனக்குள்ளவே நினைத்தேன். மேலும் கீழிருந்துவரும் ஸ்தூல வெளிச்சமானது மேலிருந்து வரும் சூக்கும வெளிச்சத்தை உடனே அணைத்து விடுமாகையால் பிரகுருதிக்கும் மானிட விவேகத்துக்கும் அனுகூலமாகத் தாங்

களே ஸ்திரப்பட்டவர்கள், அதை ஒத்துக்கொள்ள மாட்டார்களென்று நான் அறிந்துகொண்டேன்.

189. கடவுளை ஒத்துக் கொள்ளுதலால் பரமார்த்தமாகியும், தன்னுடைய சொந்த தன்மையை தள்ளுவதால் ஞானமுள்ளவனுகியும் உள்ள மனிதன் முழு உலகத்திலும் அதைச்சேர்ந்த பொருள்களில் எல்லாவற்றிலும் ஒவ்வொன்றிலும் தெய்வ அரசியலைப் பார்க்கிறுன். அவன் ஸ்தூல பொருள்களைப்பார்த்தால், அதை அறிந்து கொள்ளுகிறுன்; தேசாசாரமான விஷயங்களைப் பார்த்தால், அவன் அதை அறிந்துகொள்ளுகிறுன்; பரமார்த்தமானவைகளைப்பார்த்தால், அவன் அதை அறிந்துகொள்ளுகிறுன்; பொருள்களின் பின்தொடருகிற சம்பந்தங்களில்போல் ஒருமிக்க சம்பவிக்கும்பொருள்களிலும், முடிவுகளிலும், காரணங்களிலும், காரியங்களிலும், உபயோகங்களிலும்,உருவங்களிலும் பெரியதும் சிறியதுமாகிய பொருள்களிலும், ஏகோவா வேதத்தைக்கொடுத்தார் என்கிறதும், முக்கியமாய் அதன் மூலமாய் கடவுளைக்குறித்தும், சுவர்க்கத்தையும் நரகத்தையும் குறித்தும், சதாகால வாழ்வைக்குறித்தும் கற்பித்தார் என்கிறதும், அவரே மனிதர்களை ஈடேற்றி இரக்ஷிக்க உலகத்திற்கு வந்தாரென்கிறதும் போன்றவைகளால், மனிதர்கள் முக்தியடைவதிலும்கூட அவன் அறிந்துகொள்ளுகிறுன். சூக்கும வெளிச்சத்திலிருந்து ஸ்தூல வெளிச்சத்தில், மனிதன் இவைகளை (2)யும், இதைத் தவிர அதிகமாயும், அவைகளில் தெய்வ அரசியலையும் பார்க்கிறுன். ஆனுல் சுத்தமாய் ஸ்தூலமான மனிதன் இவைகளில் எதையும் பார்க்கிறதில்லை. அவன், ஒரு திவ்வியமான கோவிலைப்பார்த்தும், ஈசுவர விஷயங்களில் ஞானமுள்ளபோதகன் பிரசங்கத்தைக் கேட்டும், வீட்டிற்கு வந்து கல்லால் கட்டிய வீட்டைத்தவிர வேறென்றையும் பார்க்கவில்லை என்றும், தெளிய வொலித்த சத்தங்களைத்தவிர வேறென்றையும் கேட்கவில்லை என்றும், சொல்லுகிறவன் போலவும், எல்லாவித பழங்களுக்கும் பெயர்போன ஒரு தோட்டத்திற்குள் பிரவேசித்து, பிறகு வீட்டிற்குப்போய் ஒரு சிறுகாட்டையும் மரங்களையும் மாத்திரம் பார்த்ததாகச் சொல்லுகிற சமீபபார்வையுள்ள மனிதனைப்போலவும், இருக்கிறுன். அவ்விதமானவர்கள்கூட இறந்த பிறகு ஆவிகளாய்,

எல்லா பொருள்களும் அன்பிற்கும், ஞானத்துக்கும் அறிகுறியான உருவங்களில் இருக்கப்பட்ட தேவர்கள் உலகத்திற்கு உயர்த்தப்பட்டபோது, ஆண்டவரின் தெய்வ அரசியலை மறுத்தவர்கள் விஷயத்தில் ஆராய்ந்து பார்த்ததுபோல, எதையும் பார்க்கிறதில்லை; தாங்கள் நிலைத்திருப்பதாகவும்கூட அறிந்துகொள்ளுகிறதில்லை.

190. மாறும் பொருள்கள் நிலைத்திருக்க சக்தியுடையவைகளாயிருக்க, சிருஷ்டிக்கப்பட்ட அநேக மாறாதபொருள்கள் இருக்கின்றன. மாறாதவைகள், சூரியனுடையவும் சந்திரனுடையவும் அதனுடன் நட்சத்திரங்களுடையவும் உதயத்திலும் அஸ்தமனத்திலும் உண்டாகும் குறிக்கப்பட்ட மாறுதல்களும், கிரணங்களென்று சொல்லப்பட்ட இடையீடுகளால் உண்டாகும் அவைகளின் மறைப்புகளும், அவைகளிலிருந்து வரும் சூடும் வெளிச்சமும், வசந்த காலமென்றும், வேனிற்காலமென்றும், இலையுதிர்காலமென்றும், மாரிகாலமென்றும் கூறப்பட்ட வருஷத்தின் பருவங்களும், காலையாகவும், மத்தியானமாகவும், சாயங்காலமாகவும், இரவாகவும் இருக்கிற நாளின் கூறுகளும், அவைகளுடன் அவைகளையே பார்த்தால், காற்றுகளும், நீர்களும்நிலங்களும், கந்த மூலவர்க்கத்தில் யிருக்கும் அவைகளுக்கு சேர்ந்த சக்தியும், அதனுடன் சேர்ந்து பிராணிவர்க்கத்தில் ஈனுகிறசக்தியும், இன்னும், ஒழுங்கு சட்டங்களை அனுசரித்து அவைகள் செயல்படும்படி செய்யப்பட்டபோது, இவைகளினுல் ஸ்திரமாய் உண்டாக்கப்படுவதுமானவைகளா யிருக்கின்றன. பொருள்களின் முடிவற்ற விகற்பமிருக்க, இவைகளும், இன்னும் இதைத் தவிர அநேக பொருள்களும் சிருட்டி முதல் சித்தப்படுத்தப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், மாறுகிறபொருள்கள், மாறாததும், ஸ்திரமானதும், நிர்ணயமானதுமான பொருள்களில் தவிர (2) இருக்கமுடியாது. ஆனல், உதாரணங்கள் இதைத் தெளிவிக்கட்டும். சூரியனுடைய உதயமும் அஸ்தமனமும், அதிலிருந்துவரும் சூடும் வெளிச்சமும் மாறாததாயிருந்தாலொழிய கந்த மூலங்களின் வேற்றுமைகள் இருக்கமாட்டாது. இனிய ஓசைகள் முடி

வற்ற வேற்றுமைகளையுடையவை; ஆனால், காற்றுகள் தங்கள் சட்டங்களிலும், காது அதன் உருவத்திலும், மாறாதவைகளா யிருந்தாலொழிய, அவைகள் இருக்கமாட்டாது. முடிவற்றதாய் கூடயிருக்கிற பார்வையின் வேற்றுமைகள், ஆகாய நுண்ணணு அதன் சட்டத்திலும், கண் அதன் உருவத்திலும் மாறாததா யிருந்தாலொழிய நிலைத்திருக்கமுடியாது; அதேமாதிரி நிறங்கள், வெளிச்சம் மாறாததாயிருந்தாலொழிய நிலைக்கமாட்டாது. முடிவற்ற பேதங்களாயிருக்கிற சிந்தனைகள் விஷயத்திலும், வார்த்தைகள் விஷயத்திலும், செய்கைகள் விஷயத்திலும்கூட அதே மாதிரியிருக்கிறது; சரீரத்தின் அங்க சம்பந்தமான உருவங்கள் மாறாதவைகளாயிருந்தால் ஒழிய, இவைகள் நிலைத்திருக்கமுடியாது. பலகாரியங்கள் அதன்பேரில் மனிதனால் செய்யப்பட்ட, ஒரு வீடானது ஸ்திரமாயிருக்கவேண்டியதில்லையா? பலவித பூஜையும், மதநீதி உபந்நியாசங்களும், உபதேசங்களும், பக்தியுள்ள மனனங்களும் அதில் நடக்ககோவில் விஷயத்திலும்கூட அதேமாதிரி (3) தான். மற்றவைகளிலும் அப்படியே. மாறாததும், ஸ்திரமானதும்,நிசமானதுமான பொருள்களில் நிலைக்கிற தினுசுகளே சம்பந்தப்பட்டவரையில், முடிவற்று அவைகள் உண்டாயிக்கொண்டிருக்கின்றன; அப்படியிருந்தாலும், பிரபஞ்சத்திலிருக்கும் எல்லா பொருள்களிலும் அவைகளில் எந்த ஒன்றிலாவது ஒன்று மற்றதைப்போல முழுமையும் ஒரேமாதிரியிருக்கிற ஒரு பொருள் எப்பொழுது மிருக்கிறதில்லை; சதாகாலம் வரையில் பின்னிட்டு தொடருகிறவைகளிலும் ஒன்றுமிருக்கமுடியாது. மாறாதபொருள்களை அவைகளில், பல தினுசுகள் உற்பத்தியாகவேண்டுமென்கிற எண்ணத்தோடு சிருட்டித்த கடவுளைத் தவிர அவைகள் ஓர் ஒழுங்கிலிருக்க முடிவின்மைக்கும் நித்தியத்துக்கும் விர்த்தியாகிற இந்த பேதங்களை யார் ஒழுங்காக்குகிறார்? உயிராகவே அதாவது இச்சாசக்தியாகவும் ஞானசக்தியாகவுமே யிருக்கிறவர்தவிர மனிதர்களுக்குள்ளிருக்கும் உயிரின் முடிவற்ற பேதங்களை யார் ஒழுங்காக்கக்கூடும்? இடைவிடாத சிருட்டியைப் போலிருக்கிற அவருடைய தெய்வ பரிபாலனமில்லாமல், மனிதர்களுடைய கணக்கற்ற ஆசைகளும், அவைகளிலிருந்து உண்டாகும் சிந்தனைகளும்

இவ்விதமாக மனிதர்களே, ஒன்ருகும்பொருட்டு ஒழுங்குபடுத்தக் கூடுமா? தீங்கான ஆசைகளும் அவைகளிலிருந்து வரும் சிந்தனைகளும், நரகமாயிருக்கிற ஒரு பிசாசாகவும் சுவர்க்கத்தில் நல்ல ஆசைகளும் அதிலிருந்து வரும் சிந்தனைகளும், சுவர்க்கத்திலிருக்கும் ஒரு ஆண்டவராகவும் செய்யக்கூடுமா? சர்வவியாபகமான தேவர்கள் சுவர்க்கம், ஆண்டவருடைய பார்வையில், அவருடைய பிரதிமையாகவும் சாயலாகவு மிருக்கிற ஒரு மனிதனைப்போல யிருக்கிறதென்றும், சர்வவியாபகமான நரகம், ஒரு மானிட விரூபம் போல் அதற்கு எதிரிடையாயிருக்கிற தென்றும், முன்பு அநேக தடவைகளில் சொல்லப்பட்டு, தெளிவாக்கப்பட்டிருக்கிறது. மாறுகிற பொருள்கள் அவைகளிலிருந்து உண்டாகும் பொருட்டு, தேவையானதாயிருக்கிற மாருததும், ஸ்திரமானதுமானவைகளிலிருந்துகூட, சில ஸ்தூல மனிதர்கள், பிரகுருதிக்கும், தங்கள் சொந்த புத்திக்கும் அனுகூலமாக, தங்கள் பைத்தியத்துக்கு ஒத்த தர்க்கங்களை பிடித்துக்கொள்ளுகிறபடியினுல், இவைகள் சொல்லப்பட்டன.

---

**மனிதனுடைய சொந்த விவேகம் என்கிற அவ்வித மான பொருள் ஒன்றுமில்லை; அது இருக்கிறதாகமட்டும் தோன்றுகிறது; மேலும், அது இருந்ததுபோல தோன்றவும் கூடவேண்டும்; ஆனுல் தெய்வபராமரிப்பு ஒவ்வொரு மிகவும் தனித்தபொருளிலும் இருப்பதினுல் சர்வவியாபகமான தாயிருக்கிறது.**

191. மனிதனுடைய சொந்த விவேகம் என்கிற ஒன்று இல்லை என்பது, தோற்றத்துக்கு முழுமையும் விரோதமாயிருக்கிறது. ஆகையினுல் அநேகருடைய நம்பிக்கைக்கு எதிரிடையாயிருக்கிறது; அது அப்படியிருப்பதினுல், மானிடவிவேகம் எல்லாவற்றையும் செய்கிறதென்று தோற்றத்திலிருந்து நம்புகிற

எவனும், காரணங்களிலிருந்து சேர்க்கப்படவேண்டிய ஆழ்ந்த விசாரணையிலிருந்து ஏற்படும் காரணங்களினால் அல்லாமல், நம்பும்படி செய்யப்படமாட்டான். இந்த தோற்றம் ஒரு காரியம், காரணங்களானவைகள் எதினால் அது அப்படித் தோன்றுகிறதென்பதைத் வெளிப்படுத்துகின்றன. பீடிகையாய் சொல்லப்பட்ட இந்த குறிப்புகளில், இந்த விஷயங்தைப்பற்றி கொள்ளப்பட்ட சாதாரண நம்பிக்கையைப்பற்றி, சிலது சொல்லப்படவேண்டும். அன்பும் விசுவாசமும், அதனுடன் ஞானமும், அறிவும், அதனால் விவேகமும்கூட, பொதுவாக, நல்லதும் உண்மையானதுமான ஒவ்வொன்றும், மனிதனிடமிருந்தல்லாமல் கடவுளிடமிருந்து வருகின்றன என்கிற திருச்சபையின் இந்த உபதேசம், தோற்றத்துக்கு விரோதமாயிருக்கிறது. இந்த உபதேசங்கள் ஒத்துக்கொள்ளப்படுகிறபோது, மனிதனுடைய சொந்த விவேகமென்கிற அவ்வித பொருள் இல்லையென்றும், ஆனால் அது அப்படியிருக்கிறதாக மாத்திரம் தோன்றுகிற தென்றும்கூட ஒத்துக்கொள்ளப்படவேண்டும். புத்தியும் ஞானமும் தவிர வேறு எந்த உற்பத்தி ஸ்தானத்திலிருந்தும் விவேகம் உண்டாகிறதில்லை. இந்த இரண்டும், புத்தியிலிருந்தும், அதனால் உண்மை நன்மைகளின் சிந்தனையிலிருந்தும் வருகின்றன. இப்பொழுது சொல்லப்பட்டது மானிட விவேகத்தை மாத்திரம் ஒத்துக்கொள்ளப்பட்டவர்களாலல்லாமல், தெய்வ அரசியலை ஒத்துக்கொள்ளுகிறவர்களால், ஒத்(2)துக்கொள்ளப்பட்டு நம்பப்படுகின்றன. இப்பொழுது, எல்லா ஞானமும் விவேகமும் கடவுளிடமிருந்து வருகின்றன என்று திருச்சபை கற்பிக்கிறது உண்மையாயிருக்கவேண்டும், அல்லது எல்லா ஞானமும் விவேகமும் மனிதனிடமிருந்து வருகின்றன என்று உலகம் கற்பிப்பது உண்மையாயிருக்கவேண்டும். திருச்சபை கற்பிப்பது உண்மை என்றும், உலகம் கற்பிப்பது தோற்றமென்றும், ஏற்படுத்துவதைத் தவிர, வேறு எந்த வழியிலாவது அவைகளை சரிப்படுத்தக்கூடுமா? ஏனென்றால், திருச்சபை வேதத்திலிருந்து அதன் ரூபகாரத்தை ஸ்திரப்படுத்துகிறது. ஆனால் உலகமானது, அதன் சொந்த தானாகும் தன்மையிலிருந்து ஏற்படுத்துகிறது; வேதம் கடவுளிடமிருந்து வந்தது, சொந்த

தன்மை மனிதனிடமிருந்து வருகிறது. விவேகமானது மனிதனிடமிருந்தல்லாமல் கடவுளிடமிருந்து வருகிறபடியினால், ஒரு கிருஸ்துவன், உபாசனையிலிருக்கும்போது கடவுளானவர் தன்னுடைய சிந்தனைகளையும், ஆலோசனைகளையும், செய்கைகளையும் நடத்தவும் பிரார்த்திக்கிறான்; மேலும், அவன் அப்பொழுது தன்னிடமேயிருந்து அது செய்யமுடியாதபடியினால் என்று சேர்த்துச் சொல்லுகிறான். எவனாவது ஒருவன் நன்மைசெய்வதை அவன் பார்த்தால், அதை செய்யும்படி கடவுளால் வழிகாட்டப்பட்டானென்றும், இவைகளைப்போன்ற அநேக இதர விஷயங்களைச் சொல்லுகிறான். அந்த காலத்தில் அவன் உள்ளுக்குள்ளாய் நம்பினால் ஒழிய, யார் அப்படி பேசக்கூடும்? அதை உள்ளுக்குள்ளாய் நம்புதல் சுவர்க்கத்திலிருந்து வருகிறது. ஆனால், அவன் தனக்குள்ளாக யோசித்து, மானிட விவேகத்துக்கு அனுகூலமாக வாதங்களைச் சேர்க்கும்போது, அதற்கு எதிரிடையானதை நம்பக்கூடும்; இது உலகத்திலிருந்து வருகிறது. ஆனால், கடவுளை இருதயத்தில் ஒத்துக்கொள்ளுகிறவர்கள் விஷயத்தில், உள்ளான பக்தி ஜெயிக்கிறது; கடவுளை இருதயத்தில் ஒத்துக்கொள்ளாதவர்கள் விஷயத்தில், வாயில் எவ்வளவு பேசினபோதிலும் புறம்பான பக்தி ஜெயிக்கிறது.

192. தோற்றத்திலிருந்து மானிட விவேகம் எல்லாவற்றையும் செய்கிறதென்று நம்புகிறவன், காரணங்களிலிருந்து ஊகிக்கப்படவேண்டிய ஆழ்ந்த விசாரணையிலிருந்து ஏற்படும் ஏதுக்களால் தவிர, நம்பும்படி செய்யப்படமாட்டானென்று சொல்லப்பட்டது. ஆகையினால், காரணங்களிலிருந்து ஊகிக்கப்பட்ட ஏதுக்கள், புத்திக்கு வெளிப்படும்பொருட்டு, அவைகள் தங்களிட ஒழுங்கில் வைக்கப்படவேண்டும். அது இதுவாகும்:—
I. மனிதனுடைய எல்லா சிந்தனைகளும், அவனுடைய உயிரின் அன்பினுடைய ஆசைகளிலிருந்து வருகின்றன; அவைகளிலிருந்து தவிர, சிந்தனைகள் எதுவாகிலும் கிடையாது, இருக்கவும் முடியாது. II. ஒரு மனிதனுடைய உயிரின் அன்பின் ஆசைகள் ஆண்டவருக்கு மாத்திரம் தெரியும். III. ஆண்டவர் தன்னு

டைய தெய்வபரிபாலனத்தால், ஒரு மனிதனுடைய உயிரின் அன்பினுடைய ஆசைகளையும், அதேகாலத்தில், மானிட விவேகம் உண்டாகிற சிந்தனைகளையும்கூட நடத்துகிறார். IV. ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தால் முழுமானிட வமிசத்தின் ஆசைகளை, மனுஷத்தன்மையான ஒரு உருவமாகச் சேர்க்கிறார். V. ஆகையினால், மானிட வமிசத்தாரால் ஏற்படுகிற சுவர்க்கமும் நரகமும், அவ்வித உருவத்திலிருக்கின்றன. VI. பிரகுருதியையும் மானிட விவேகத்தையும் மாத்திரம் ஒத்துக்கொண்டவர்கள், நரகத்தை உருவாக்குகிறார்கள்; கடவுளையும் அவருடைய தெய்வபரிபாலனத்தையும் ஒத்துக்கொண்டவர்கள், சுவர்க்கத்தை உண்டாக்குகிறார்கள். VII. தன்னிடமிருந்தே நினைக்கிறதாகவும், தன்னிடமிருந்தே கிரமப்படுத்துகிறதாகவும் மனிதனுக்குத் தோன்றாவிட்டால், இவைகளெல்லாம் செய்யப்படமுடியாது.

193. மனிதனுடைய எல்லா சிந்தனைகளும், அவனுடைய உயிரின் அன்பின் ஆசைகளிலிருந்து வருகின்றன; அவைகளிலிருந்து தவிர சிந்தனைகள் எதுவாகிலும் கிடையாது, இருக்கவும் முடியாது. உயிரின் அன்பும், ஆசைகளும் அதன் சிந்தனைகளும், சரீரத்திலிருக்கிற அவைகளிலிருந்து உண்டாகும் இந்திரிய ஞானங்களும், சேட்டைகளும் தங்கள் சாரத்தில் என்னவென்று, இந்த நூலில் மேலேயும், பதிபசுபாச விளக்கம் எனும் நூலினும், முக்கியமாய் அதன் முதலாவது ஐந்தாவது பாகங்களினும் காண்பிக்கப்பட்டது. மானிட விவேகம் ஒரு பலனைக பெருக்கெடுக்கிற காரணங்கள் இவைகளிலிருந்து வருகிறபடியினால், அவைகளைக் குறித்து சிலது இங்கே எடுத்துக்காட்டக்கூட தேவையாயிருக்கும்; ஏனென்றால், முன் பக்கங்களில் குறித்துவைத்த விஷயங்கள், திரும்பச்சொல்லி ஒருமிக்க பார்வைக்கு எதிரில் வைக்கப்பட்டபோதுபோல பின்னிட்டு எழுதப்பட்ட விஷயங்களோடு அவ்(2)வளவு தொடர்ச்சியாய் இணைக்கப்படமுடியாது. இந்த நூலின் ஒரு முன்பாகத்தினும், பரம இச்சாசத்தியையும் ஞானசத்தியையும் குறித்து மேலே சொல்லிய நூலினும், பராபரனிடத்தில் பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியுமிருக்கின்றன வென்

றும், இந்த இரண்டும் உயிரே என்றும், இந்த இரண்டிலிருந்தும் மனிதனுடைய சித்தமும் புத்தியும் வருகின்றனவென்றும், பரம இச்சாசக்தியிலிருந்து சித்தமும், பரம ஞானசக்தியிலிருந்து புத்தியும் வருகின்றனவென்றும், சரீரத்தில் இருதயமும் சுவாசாசயங்களும், அந்த இரண்டுடன் அன்னுவயப்படுகின்றன வென்றும், ஆகையினால் சுவாசாசயங்களின் சுவாசத்துடன்கூட இருதயத்தின் தாதோட்டம், முழுமனிதனை அவன் சரீரம் சம்பந்தப்பட்ட வரையில் நடத்துகிறதுபோல, புத்தியுடன்கூட சித்தமானது, முழுமனிதனை அவன் மனது சம்பந்தப்பட்டவரையில் நடத்துகிறதென்று வெளிப்படையாக வேண்டுமென்றும், இவ்விதமாக ஒன்று ஸ்தூலமானதும், மற்றது சூக்குமமானதுமான உயிரின் இரண்டு மூல காரணங்கள், மனிதனில் இருக்கின்றனவென்றும், உயிரின் ஸ்தூல மூலகாரணம் இருதயதுடிப்பென்றும், உயிரின் சூக்கும மூலகாரணம் மனதின் சித்தமென்றும், அதனுடன் தான் சேருகிறதும், உயிரின் தொழில்களை செய்கிறதுமான தன் சகவாசியை ஒவ்வொன்றும் ஒட்டியிருக்கிறதென்றும், அதனால் (3)இருதயம், சுவாசாசயங்களை தன்னுடனேயும், சித்தம் புத்தியை தன்னுடனேயும் சேர்க்கிறதென்றும், நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது. இப்படி யிருக்கையில் சித்தத்தின் ஆன்மா அன்பாகவும், புத்தியின் ஆன்மா ஞானமாகவும் இருக்கிறபடியினாலும், இரண்டும் கடவுளிடமிருந்து வருகிறபடியினாலும், அன்பானது ஒவ்வொருவனுடைய உயிராயிருக்கிறதென்றும், ஞானத்துடன் அதன் சேர்க்கையின் பேரில் நம்பியிருக்கும் குணத்தையுடைய உயிரென்றும், அல்லது அதே அருத்தம் கொள்ளுகிறதான, சித்தம் ஒவ்வொருவனுடைய உயிரென்றும், ஞானத்துடன் அதன் சேர்க்கையின் பேரில் நம்பியிருக்கும் குணமுடைய உயிரென்றும் தொடருகிறது. ஆனால், இந்த விஷயங்களைப்பற்றி அதிகமாக இந்த நூலில் மேலேயும், முக்கியமாய் பதிபசுபாச விளக்கம் எனும் நூலின் முதலாவது ஐந்தாவது பாகங்களிலும் பார்க்கலாம்.

194. உயிரின் அன்பு, ஆசைகள் என்று சொல்லப் பட்ட கீழ்த்தரமான அன்புகளைத் தன்னிடமே யிருந்து நிர்மாணிக்கின்

றதென்றும், அவைகள் புறம்பானதும் உள்ளானதுமா யிருக்கின்றனவென்றும், மேலும், சேர்த்து எடுத்துக்கொண்டால், உயிரின் அன்பு பிரபுவாய் அல்லது அரசனு யிருக்கிற ஒரு இராச்சியம் அல்லது அரசுபோல அவைகள் உருவாகுகின்றனவென்றும், மேல் சொல்லிய நூற்களில் நிச்சயப்படுத்தப்பட்டு மிருக்கின்றன. இந்த கீழ்த்தரமான அன்புகள் அல்லது ஆசைகள் ஒவ்வொன்றும் தனக்குச் சொந்தமான சகவாசிகளைத் தங்களுடனேயே சேர்த்துக் கொள்ளுகின்றன வென்றும், உள்ளான ஆசைகள் உணர்ச்சிகள் என்று சொல்லப்பட்ட சகவாசிகளையும், புறம்பான ஆசைகள் சிந்தனைகள் என்று சொல்லப்பட்ட சகவாசிகளையும் சேர்த்துக் கொள்ளுகின்றன வென்றும், ஒவ்வொன்றும் தன்னுடையசொந்தமான சகவாசியுடன் சேர்ந்து, தன்னுடைய சொந்த உயிரின் தொழிலை நிறைவேற்றுகின்றன வென்றும், ஓர் ஜதையின் புணரிடையானது, ஒன்று மற்றதுடன் சேர்ந்திருந்தா லொழிய சூனியமாகும்படியாக யிருக்கிற உயிரின் சொரூபம் அதன் தடத்தத்துடன் சேர்தல் போலிருக்கிறதென்றும், (ஏனென்றால், உயிரின் சொரூபம் என்பது இருந்தாலொழிய அது என்ன? உயிரின் தடத்தமானது உயிரின் சொரூபத்திலிருந்து வந்தாலொழிய அது என்ன?) ரூபகாரம் செய்யப்பட்டும் கூட யிருக்கின்றன. மேலும், உயிரில் புணரிடையானது, சத்தத்திற்கும் இன்னிசைக்கும், அல்லது சத்தத்திற்கும் பேச்சுக்கும் உள்ள இணைவுபோலவும், பொதுவாக, இருதய துடிப்புக்கும் சுவாசாசயங்களின் சுவாசத்துக்கும் உள்ள இணைவுபோலவும், இருக்கின்றனவென்றும் ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த சேர்க்கையானது, ஒன்று மற்றொன்றில்லாமல் அபாவ மாகும்படியானதாகவும், மற்றதுடன் சேருவதால் எதோ ஒன்றாகும்படியானதாகவும் யிருக்கிறது. (2) அவைகளுக்குள்ளே சேர்க்கைகள் யிருக்கவேண்டும் அல்லது அவைகளின் மூலமாய் அவைகள் சம்பவிக்க வேண்டும். உதாரணமாக சத்தத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அதில் அதை வேற்றுமைப் படுத்தி காட்டுகிறது இருந்தால் ஒழிய, சத்தமானது எதோ ஒன்று என்று நினைக்கிறவன் அபார்த்தம் செய்துக் கொண்டவனுகிறான்; மனிதனிடம் இருக்கும் சத்தம் கூட ஆசை

யுடன் அன்னுவயப்படுகிறது; அதில் எப்பொழுதும் வேற்றுமையைக் காட்டுகிற ஏதோ ஒன்று யிருக்கிறதினால், பேசிக்கொண்டிருக்கிறவன் ஒருவனுடைய சத்தத்திலிருந்து, அவன் அன்பின் ஆசை தெரிந்துகொள்ளப் படுகிறது; பேச்சாக யிருக்கிற அதன் மாறுதலிலிருந்து, அவனுடைய சிந்தனை தெரிந்து கொள்ளப்படுகிறது. அதனால் தான், ஞானமுள்ள தேவர்கள், பேசுகிற ஒருவனுடைய சத்தத்திலிருந்து மாத்திரம், உற்பவங்களா யிருக்கிற சில ஆசைகளுடன் கூட, அவன் உயிரின் ஆசைகளை அறிந்து கொள்ளுகிறார்கள். தன் சிந்தனையில்லாமல் ஒரு ஆசையும், தன் ஆசை யில்லாமல் ஓர் சிந்தனையும் நிலைக்கிறதில்லை என்று தெரிந்திருக்கும்படி, இவைகளெல்லாம் சொல்லப்பட்டது. ஆனால் இவ் விஷயங்களைக் குறித்து அதிகமாக இந்நூலில் மேலேயும், **பதிபசு பாசம்** எனும் நூலிலும் காணலாம்.

195. இப்படி யிருக்கையில், உயிரின் அன்புக்கு அதன் சந்தோஷமிருக்கிற படியினாலும், அதன் ஞானத்துக்கு மனோகரமிருக்கிற படியினாலும், தன் ஊற்றிலிருந்து ஓர் நீரோட்டமும், தன் மரத்திலிருந்து ஒரு கிளையும், தன் இருதயத்திலிருந்து ஓர் சுத்தரத்த நாடியும் வருகிறதுபோல, உயிரின் அன்பிலிருந்து உண்டாகிற, தன் சாரத்தில் தாழ்ந்த அன்பாயிருக்கிற ஒவ்வொரு ஆசையோடும் அப்படியே யிருக்கிறது; ஆகையினால், ஒவ்வொரு விசேஷித்த ஆசைக்கும் அதன் சந்தோஷமிருக்கிறது, அதிலிருந்து ஒவ்வொரு உணர்ச்சிக்கும் சிந்தனைக்கும் அதன் மனோகரமிருக்கிறது. அதனால், அந்த சந்தோஷங்களும் மனோகரங்களும் மனிதனுடைய உயிரை உண்டாக்குகிறதென்று ஏற்படுகிறது. சந்தோஷமும் மனோகரமும் இல்லாவிட்டால் உயிரென்பது என்ன? ஜீவனுள்ள எந்தபொருளாகவும் அது அல்லாமல், உயிரில்லாததாயிருக்கிறது. இவைகளை நீர் குறைத்தால், நீர் குளிர்ச்சியானவராய் அல்லது அசைவற்றவராவீர்; அவைகள் நீக்கப்படவிடப் (2) பட்டால், நீர் உயிர்விட்டு இறந்து போவீர். உயிரான சூடு ஆசைகளின் சந்தோஷங்களிலிருந்தும், உணர்ச்சிகளினுடையவும் சிந்தனைகளினுடையவும் மனோகரங்களிலிருந்தும் வருகின்றது.

ஒவ்வொரு ஆசைக்கும் அதன் சந்தோஷமும், அதிலிருந்து வரும் சிந்தனைக்கு அதன் மனோகரமும் இருக்கிறபடியினால், நன்மையும் உண்மையும் எங்கிருந்து வருகின்றனவென்றும், அதனுடன் நன்மையும் உண்மையும் தங்கள் சத்தில் என்னவென்றும் விசதமாகலாம். ஒவ்வொருவனுக்கும் நன்மை என்பது, தன்னுடைய ஆசையின் சந்தோஷமா யிருக்கிற பொருளாயும், உண்மையானது, ஆசையிலிருந்து வரும் தன் சிந்தனையின் மனோகரமாயிருக்கப்பட்ட பொருளா யிருக்கிறது; ஏனென்றால், ஒவ்வொருவனும், தன் சித்தத்திலிருக்கும் அன்பிலிருந்து சந்தோஷமுள்ளதாக உணருகிறதை நன்மை என்று சொல்லுகிறான்; தன்னுடைய புத்தியின் ஞானத்திலிருந்து, அதிலிருந்து வரும் மனோகரமென்று தான் உணருகிறதை உண்மையென்று சொல்லுகிறான். இரண்டும், ஒரு ஊற்றிலிருந்து ஜலமும், இருதயத்திலிருந்து இரத்தமும் பெருக்கெடுக்கிறது போல, உயிரின் அன்பிலிருந்துபெருக்கெடுக்கின்றன; இரண்டும் சேர்த்துப் பார்த்தால், முழுமானிட மனதுயிருக்கப்பட்ட தண்ணீர் போலவும் அல்லது ஆகாயம் போலவு (3) மிருக்கின்றன. சந்தோஷமும் மனோகரமுமாகிய இரண்டும், மனதில் சூக்குமமா யிருக்கின்றன. ஆனால் சரீரத்தில் ஸ்தூலமாயிருக்கின்றன; இருவகையிலும், அவைகள் மனிதனுடைய உயிரை உண்டாக்குகின்றன. மனிதனில், நன்மை என்று சொல்லப்பட்டது எதுவென்றும், உண்மை என்று சொல்லப்பட்டது எதுவென்றும், மேலும், மனிதனில், தீமை என்று சொல்லப்பட்டது எதுவென்றும், பொய்யென்று சொல்லப்பட்டது எதுவென்றும் இதிலிருந்து விசதமாகிறது. உண்மையாய், அவனுடைய ஆசையின் சந்தோஷத்தை அழிக்கிறது அவனுக்கு தீமையா யிருக்கிறது. அவனுடைய சிந்தனையின் மனோகரத்தை அழிக்கிறது பொய்யா யிருக்கிறது; அதிலிருந்து கூட தன் சந்தோஷத்திலிருந்து வரும் தீமையும், அதன் மனோகரத்திலிருந்து வரும் பொய்யும், நன்மை என்றும் உண்மையென்றும் சொல்லப்பட்டு நம்பப்படலாம். நன்மைகளும் உண்மைகளும் நிஜமாகவே, மனதின் உருவங்களின் நிலைமைகளில் பேதங்களும் மாறுபாடுகளுமாயிருக்கின்றன; ஆனால், இவைகள் அறிந்து கொள்ளப்பட்டு

நன்மையினுடையவும் உண்மையினுடையவும் சந்தோஷங்களாலும் மனோகரங்களாலும் ஜீவிக்கின்றன. அவர்களுடைய உயிரில் ஆசையும் சிந்தனையும் என்னவென்று தெரிந்திருக்கும்படி இவைகள் சொல்லப்பட்டன.

196. இப்படி யிருக்கையில், நினைப்பது சரீரமல்லாமல், மனிதனுடைய மனதா யிருப்பதினாலும், தன் ஆசையின் சந்தோஷத்திலிருந்து அது நினைப்பதினாலும், மனிதனுடைய மனது இறந்த பின் உயிரோடு இருக்கும் அவனுடைய சூக்கும சரீர ஆவியான படியினாலும், மனிதனுடைய சூக்கும சரீர ஆவி ஆசையும், அதிலிருந்து வந்த சிந்தனையும் தவிர வேறொன்றுமில்லை என்று ஏற்படுகிறது. ஆசையில்லாமல் எந்த சிந்தனையும் இருக்க முடியாதென்பது, சூக்கும லோகத்திலுள்ள ஆவிகளாலும் தேவர்களாலும் தெளிவாய் வெளிப்படையாகிறது; ஏனென்றால் அங்கே எல்லாரும், தங்களுடைய உயிரின் அன்பினுடைய ஆசைகளிலிருந்து நினைக்கிறார்கள்; இந்த ஆசைகளின் சந்தோஷம், ஒவ்வொருவனையும் அவனுடைய ஆகாயம் போல் சுற்றிக்கொள்ளுகிறது; மேலும் அங்கே எல்லாரும், தங்கள் சிந்தனைகள் மூலமாய் ஆசைகளிலிருந்து வெளிவிட்ட இந்தக் கோளங்களுக்குத் தக்கபடி சேர்க்கப்படுகிறார்கள்; ஒவ்வொருவனுடைய குணமும் கூட, அவனுடைய உயிரின் கோளத்திலிருந்து அறிந்துகொள்ளப் படுகிறது. அதனால், ஒவ்வொரு சிந்தனையும் ஆசையிலிருந்து வருகிறதாகவும், அது அதன் ஆசையின் உருவமென்றும் தோன்றலாம் சித்தத்துடனும் புத்தியுடனும், அதனுடன் நன்மையுடனும் உண்மையுடனும், தருமத்துடனும் விசுவாசத்துடனும் அதே மாதிரிதான்.

197. II. ஒரு மனிதனுடைய உயிரின் அன்பினுடைய ஆசைகள் ஆண்டவருக்கு மாத்திரம் தெரியும். மனிதனுக்கு அவனுடைய சொந்த சிந்தனைகளும், அதிலிருந்து, அவனுடைய உத்தேசங்களும் தெரியும்; ஏனென்றால், அவன் அவைகளை தன்னிலேயே பார்க்கிறான்; மேலும், எல்லா விவேகமும் அவைகளிலிருந்து

வருகிறபடியினால், இதைக்கூட தன்னிலேயே அவன் பார்க்கிறான். ஆகவே, அவனுடைய உயிரின் அன்பு தன்னையே நேசித்தலாயிருந்தால், தானே விவேகி என்கிற கர்வத்தை அடைந்து, விவேகம் என்பது தன்னுடையதே என்று ஆரோபிக்கிறான்; அதற்கு அநுகூலமாக வாதங்களைக் கூட சேர்த்து, அவ்விதமாக தெய்வபரிபாலனத்தை ஒத்துக்கொள்ளுதலிலிருந்து பின்னிடுகிறான். அவனுடைய உயிரின் அன்பு, உலகத்தினிடத்து பாராட்டும் அன்பாயிருந்தால், அதே மாதிரி யிருக்கிறது; ஆனால், இது அதே அளவு அவனை பின் வாங்கச் செய்கிறதில்லை. இந்த இரண்டு அன்புகளும் எல்லாவற்றையும் மனிதனுக்கும் அவன் விவேகத்துக்கும் ஆரோபித்து, உள்ளுக்குள்ளாய் சோதித்தால், கடவுளுக்கும் அவருடைய தெய்வபரிபாலனத்துக்கும் யாதொன்றையும் ஆரோபிக்கிறதில்லை யென்றும், இதிலிருந்து வெளிப்படையா யிருக்கிறது. ஆகையினால், மானிட விவேகம் ஒரு உபயோகமுமில்லை என்பதும், எல்லாவற்றையும் ஆளுகிறது தெய்வபராமரிப்பு ஒன்றே என்பதும், உண்மையென்று அவ்விதமான மனிதர்கள் கேழ்விப்பட நேரிடும்போது, அவர்கள் நாஸ்திகர்களா யிருக்கும் பட்சத்தில், அதைப் பார்த்து சிரிக்கிறார்கள்; ஆனால் சமயத்திலிருந்து ஞாபகத்தில் சிலவற்றை வைத்திருக்கும் பட்சத்தில், எல்லா ஞானமும் கடவுளிடமிருந்து வருகிறதென்று அவர்களுக்கு சொல்லப்பட்டால், முதலில் கேட்கும்போது, அவர்கள் நிஜமாகவே ஒத்துக் கொள்ளுகிறார்கள்; அப்படி யிருந்தாலும், உள்ளுக்குள்ளாய் தங்கள் ஆன்மாவில் அதை இல்லை என்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்கள் முக்கியமாய், கடவுளைவிட தங்களையே அதிகமாயும், சுவர்க்கத்தை விட உலகத்தை அதிகமாயும் நேசிக்கிற குருக்களாயும், அல்லது அதேவாகிறபடி, கௌரவங்களுக்காகவும் லாபத்திற்காகவும் கடவுளை ஆராதித்து, அப்படியிருந்தும், தருமமும் விசுவாசமும், எல்லா நன்மையும் உண்மையும், எல்லா ஞானமும், விவேகமும் கூட கடவுளிடமிருந்து வருகிறதென்றும், மனிதனிடமிருந்து எதுவும் வருகிறதில்லை யென்றும், போதித்த (2) வர்களாகிய குருக்களாயும் இருக்கிறார்கள். சூக்கும உலகத்தில் இரண்டு குருமார் ஒரு இராஜ சம்பந்தமான தூதனோடு

மானிட விவேகத்தைப் பற்றி, அது கடவுளிடமிருந்தா அல்லது மனிதனிடமிருந்தா வருகிறதென்று தர்க்கித்துக் கொண்டிருந்ததை, நான் ஒரு தடவை கேட்டிருக்கிறேன். அந்த தர்க்கமானது உற்சாகமுள்ளதா யிருந்தது. இருதயத்தில் மூவரும், மானிட விவேகம் எல்லாம் செய்கிற தென்றும், தெய்வ பராமரிப்பு ஒன்றையும் செய்கிறதில்லை யென்றும், ஒரேமாதிரி நம்பினவர்களா யிருந்தார்கள்; ஆனால், அக்காலத்தில் சாஸ்திர வைராக்கியத்திலிருந்த குருமார், மனிதனிடமிருந்து ஞானத்துக்கும் விகேத்துக்கும் சேர்ந்த யாதொன்றும் வருகிறதில்லை யென்ருர்கள்; அப்படியிருக்கும் பட்சத்தில் சிந்தனைக்குச் சேர்ந்த யாதொன்றும் அவனிடமிருந்துவருகிறதில்லை யென்று தூதன் தடுத்துச் சொல்லியபோது, அப்படி யாதொன்றும் வருகிறதில்லை என்று அவர்கள் சொன்னார்கள். மூவரும் ஒரேமாதிரி நம்பியிருக்கிருர்களென்று தேவர்களால் தெரிந்த கொள்ளப்பட்டபடியினால், இராஜ சம்பந்தமான தூதனுக்கு, ஓர் குருவினுடைய ஆடைகளைப்போட்டுக் கொண்டு, நீர் ஒரு குருவென்று நம்பி, பிறகு பேசு என்று சொல்லப்பட்டது. அவன் அப்படியே போட்டுக்கொண்டு, நம்பினான்; அதன் பிறகு அவன், கடவுளிடமிருந்து தவிர, மனிதனிடத்தில் ஞானத்துக்கும் விவேகத்துக்கும் சம்பந்தப் பட்ட யாதொன்றும் சாத்தியமாய் இருக்க முடியாதென்று, பலத்தசத்தமாய் சொன்னான்; அவன், பகுத்தறிவுள்ள விதர்க்கங்களால் நிறைந்த தன்னுடைய பழகிய சொல்வன்மையோடு இதைச் சாதித்தான். பின்னிட்டு, இரண்டு குருமார்களுக்கும் கூட, உங்களுடைய ஆடைகளை எடுத்துப் போட்டுவிட்டு, இராச்சிய பரிபாலன சம்பந்தமான மந்திரிகளின் ஆடைகளைப் போட்டுக் கொண்டு, நீங்களே அவ்விதமானவர்களென்று நம்புங்களென்று சொல்லப் பட்டது; அவர்களும் அப்படிச்செய்தார்கள்; அப்பொழுது, உடனே தனக்கு உள்ளான ஆன்மாவிலிருந்து நினைத்து, தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் மானிட விவேகத்துக்கு அனுகூலமாக, அவர்கள் முன்னமே உள்ளுக்குள்ளாய் வளர்த்த விதர்க்கங்களிலிருந்து பேசினார்கள். இதன் பிறகு மூவரும், ஒரே நம்பிக்கையில் யிருந்தபடியினால், மனப்பூர்வமான சினேகிதர்களாய், நரகத்துக்கு வழி காட்டு

கிற தானே விவேகி எனும் மார்க்கத்தில் சேர்ந்து பிரவேசித்தார்கள்.

198. மனிதனுக்கு, தன்னுடைய உயிரின் அன்பைச்சேர்ந்த கொஞ்சம் ஆசையிலிருந்து தவிர, யாதொரு சிந்தனையும் கிடையாது என்றும், சிந்தனையானது, ஆசையின் உருவம் தவிர வேறொன்றுமில்லை என்றும், மேலே ரூபகாரம் செய்யப்பட்டது. ஆகையினால், மனிதன் தன்னுடைய சிந்தனையைப் பார்க்கிறபடியினாலும், ஆசையை உணருகிறதினால், அதைப் பார்க்கமுடியாதபடியினாலும், பார்வைக்கு வராமல் உணர்ச்சிக்குத் தெரிகிற ஆசையிலிருந்தல்லாமல், தோற்றத்திலிருக்கிற பார்வையிலிருந்து, சுயபுத்தியானது எல்லாவற்றையும் செய்கிறதென்று, அவன் தீர்மானிக்கிறானென்று ஏற்படுகிறது. ஏனென்றால், ஆசையானது அதைப்பற்றி தர்க்கித்தலினால், சிந்தனையினுடையவும் சந்தோஷத்தினுடையவும் ஒரு இன்பத்தால் மாத்திரம் தானே வெளிப்படையாகிறது; அப்பொழுது, இந்த சந்தோஷமும் இன்பமும், தன்னையே நேசித்தலிலிருந்தாவது, அல்லது உலகத்தை நேசித்தலிலிருந்தாவது, தங்களுடைய சொந்த விவேகத்தை நம்புகிறவர்களிடத்தில், சிந்தனையுடன் ஒன்றுகிறது; சிந்தனையானது, கப்பலுக்கு எஜமானன் தான் பரப்பும் கப்பற்பாய்களை மாத்திரம் கவனித்து, அவன் கவனிக்காத ஒரு ஆற்றின் ஓட்டத்திலிருக்கும் கப்பலைப்போல், தன்னுடைய இன்பத்தில் ஓடுகிறது.

199. புறம்பான ஆசையானது இந்திரிய ஞானத்தின் இன்பத்தோடு ஒன்றாக "செயல்படும்போது, அதன் இன்பத்தை, நிஜமாகவே மனிதன் நினைக்க சக்தியுள்ளவனாகிறான்; அப்படியிருந்தாலும், அந்த இன்பமானது, சிந்தனையிலிருக்கும் தன்னுடைய ஆசையின் இன்பத்திலிருந்து வருகிற விஷயத்தைபற்றி யோசிக்கிறதில்லை. உதாரணமாக: ஒரு வேசிக்கள்ளன், ஒரு வேசியைப் பார்க்கும்போது, அவனுடைய கண், விரகதாபத்தின் தீயிலிருந்து எரிகிறது, அதிலிருந்து சரீரத்தில் சந்தோஷத்தை உணருகிறான்; ஆனால், அப்படியிருந்தாலும், சரீரத்துடன் சம்பந்தப்

பட்ட கொஞ்சம் ஆசையைத் தவிர, சிந்தனையில், அவனுடைய ஆசையின் அல்லது மோகத்தின் இன்பத்தை அவன் உணருகிற தில்லை. காட்டிலிருக்கும் ஒரு கொள்ளைக்காரன், வழிப்போக்கர் களைப்பார்க்கும்போதும், சமுத்திரத்தைச்சேர்ந்த கடற்கள்ளன், கப்பல்களைப்பார்க்கும்போதும், மற்றவைகளிலும் அம்மாதிரியே நடக்கிறது. அந்த இன்பங்கள் மனிதனுடைய சிந்தனைகளை ஆளு கின்றனவென்றும், சிந்தனைகள் அவைகள் இல்லாமல் யாதொன்று மாகாதென்றும் விசதமாகிறது; ஆனால், சிந்தனைகளானது வெளிச்சத்தில் தோன்றும் பொருட்டு, அவன் உயிரின் அன்பி னால், உருவங்களாகச் சேர்க்கப்பட்ட ஆசைகளைத்தவிர வேறொன் றுமில்லாமலிருக்கையில், அவைகள் சிந்தனைகளே என்று அவன் நினைக்கிறான்; ஏனென்றால், எல்லா ஆசையும் சூட்டிலிருக்கிறது, (2) எல்லா சிந்தனையும் வெளிச்சத்திலிருக்கிறது. மனிதனுடைய சிந்தனையில் அரிதாய், சரீர இந்திரிய ஞானத்தில் நிஜமாகவே தாங்களே வெளிப்படுகிற சிந்தனையின் புறம்பான ஆசைகளாய் இவைகள் இருக்கின்றன. ஆனால் புறம்பானது உண்டாகிற சிந் தனையின் உள்ளான ஆசைகள், மனிதனுக்கு முன்பாகத் தாங்களே எப்பொழுதும் வெளிப்படையாகிறதில்லை; அவைகளைப்பற்றி, அவனுக்கு, ஒரு வண்டியில் தூங்கிக்கொண்டிருப்பவன் பாதை யைப்பற்றி தெரிந்திருப்பதைவிடவும், அல்லது ஒருவன் பூமியின் சுழற்சியை உணர்வதைவிடவும் அதிகம் தெரியாது. இப்படியிருக் கையில், மனிதனுக்கு எண்களால் வரையறுக்கப்பட முடியாத படி அவ்வளவு முடிவற்றதாயிருக்கிற, அவனுடைய மனதின் உள்ளான பாகங்களில் நடக்கிற விஷயங்களைப்பற்றி யாதொன் றும் தெரியாதபடியினாலும், அப்படியிருந்தும் சிந்தனையின் பார் வைக்குள் வருகிற சில புறம்பானவைகள் உள்ளானவைகளி லிருந்து உண்டாக்கப்படுகிறபடியினாலும், உள்ளானவைகள் ஆண் டவரால் மட்டும் அவருடைய தெய்வபரிபாலனத்தாலும், அந்த சில புறம்பானவைகள் மனிதனுடன் சேர்ந்து ஆண்டவராலும் ஆளப்படுகிறபடியினாலும், எவனாவது ஒருவன் தன்னுடைய சொந்த விவேகம் எல்லாவற்றையும் செய்கிறதென்று எப்படிச் சொல்லக்கூடும்? திறந்து வைக்கப்பட்ட சிந்தனையின் ஒரு அபிப்

பிராயம் மட்டும் நீர் பார்த்தால், நாவானது அறிவிக்கக்கூடியதை (3)விட அதிகமான பிரமிக்கத்தக்க பொருள்களை நீர் பார்ப்பீர். மனிதனுடைய மனதின் அந்தரங்கத்தில் எண்களால் வரையறுக்கப் படாத முடிவற்ற பொருள்களிருக்கின்றன வென்பது, செய் கையை மாத்திரம் தவிர, பார்வைக்கும் இந்திரிய போதத்துக்கும் தெளிவாக எட்டாத சரீரத்திலுள்ள முடிவற்ற பொருள்களி லிருந்து, வெளிப்படையாகிறது; ஆயினும், அதனுடன், அசைக் கும் சக்தியுள்ள நார்கள் அல்லது தசை நரம்புக்கு சேர்ந்த ஆயி ரங்கள் கணக்கான நார்களும், நரம்புக்குரிய ஆயிரங்கள் கணக் கான நார்களும், ஆயிரங்கள் கணக்கான இரத்த நரம்புகளும், ஒவ்வொரு செயலிலும் ஒத்து உழைக்கவேண்டிய சுவாசாசயங்க ளின் ஆயிரங்கள் கணக்கான இரத்த நரம்புகளும், மூளைகளிலும் முள்ளந்தண்டுக்கொடியிலும், ஆயிரங்கள் கணக்கான இரத்த நரம் புகளும், எல்லா பொருள்களும் ஆசைகளுடையவும், அதிலிருந்து உணர்ச்சிகளுடையவும், சிந்தனைகளுடையவும் உருவங்களாயிருக் கிற மானிடமனதாயிருக்கிற பரமார்த்தமான மனிதனில் இன் னும் அதிகமான பொருள்களும் பொருந்துகின்றன. அந்தரங்கங் களை ஒழுங்குபடுத்துகிற ஆன்மா, அவைகளிலிருந்துவரும் செயல் களைக்கூட ஒழுங்குபடுத்துகிறதில்லையா? மனிதனுடைய ஆன்மா, அவனுடைய சித்தத்தின் அன்பையும், அதனால் அவன் புத்திக் குச்சேர்ந்த அன்பையும்விட வேறொன்றுமில்லை. இந்த அன்பு இருக்கிறதுபோல, முழுமனிதனும் அப்படியேயிருக்கிறான்; மனி தன் ஆண்டவருடன் சேர்ந்து இருக்கப்பட்ட புறம்பானவைகளில் இருக்கும் ஒழுங்குக்குத் தக்கபடி குணமானது தீர்மானிக்கப்படு கிறது. ஆகையினால், அவன் எல்லாவற்றையும் தனக்கும் பிரகுரு திக்குமே ஆரோபித்தால், தன்னையே நேசித்தல் ஆன்மாவாகிறது; ஆனால், அவன் எல்லாவற்றையும் ஆண்டவருக்கு ஆரோபித்தால், ஆண்டவரிடத்து அன்பு ஆன்மாவாகிறது; பின் கூறிய அன்பு சுவர்க்கத்தை அடுத்தது, முன் கூறியது நரகத்தை அடுத்தது.

200. இப்படியிருக்கையில், மிகவும் அந்தரங்கமானவைகளி லிருந்து, உள்ளானவைகள் மூலமாய் புறம்பானவைகளுக்கும்,

கடைசியில், சரீரத்திலுள்ள மிகவும் வெளியாயுள்ளவைகளுக்கும் வருகிற மனிதனுடைய ஆசைகளின் இன்பங்கள், தண்ணீரும் காற்றும் ஒரு கப்பலைக் கொண்டுபோவது போல், ஒருமனிதனைக் கொண்டு போகிறபடியினாலும், மனதினுடையவும், சரீரத்தினுடையவும், மிகவும் வெளியாகஉள்ளவைகளில் நடக்கிறதுதவிர, அவைகளில் யாதொன்றும் மனிதனுக்குத் தோன்றாதபடியினாலும், இந்த சில மிகவும் வெளியாயுள்ளவைகள், அவனுக்கு தன்னுடையதாகத் தோன்றுகிறதென்கிற காரணத்தால் மாத்திரம், இதிலிருந்து தெய்வீகமானதை தனதாக எப்படி மனிதன் பாத்தியதை கொண்டாடக்கூடும்? சுவர்க்கத்திலிருந்து கொடுக்கப்பட்டால் ஒழிய ஒரு மனிதன் தானே எதையும் எடுத்துக்கொள்ள முடியாதென்று வேதத்திலிருந்தும், அவன் ஒரு மனிதனாக வாழவும், நல்லது எது, தீமையானது எது என்று அறிந்துகொள்ளவும், எதோ ஒன்றை தெரிந்தெடுக்கவும் அவன் ஆண்டவருடன் பரஸ்பரமாய் சேர்க்கப்பட்டு, சீர்திருத்தப்பட்டு, குணப்படுத்தப்பட்டு, இரக்ஷிக்கப்பட்டு, சதாகாலம் வாழ, தான் தெரிந்து எடுத்ததை தனதாக்கிக்கொள்ளவும், இந்த தோற்றம் அவனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று, விவேகத்திலிருந்தும் அவனுக்குத் தெரிந்திருக்கும்போது, தெய்வீகமானதை தனதென்று பாத்தியம் பாராட்ட அவனால் முடியாது. மனிதன் கையை விட்டுவிட்டு உட்பெருக்குக்கு எதிர்பாராமல், விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்தும், இவ்விதமாகத் தன்னிடமே யிருந்துபோல், அவன் செயல்பட, அவனுக்கு இந்த தோற்றம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று, மேலே கூறப்பட்டு ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது. உறுதிப்படுத்தப் பட்டபடி, இதிலிருந்து, அடுத்து மெய்ப்பிக்கவேண்டியதாகிய மூன்றாவது விஷயமான ஆண்டவர் தன்னுடைய தெய்வீக பரிபாலனத்தினால், மனிதனுடைய உயிரின் அன்புக்குச் சேர்ந்த ஆசைகளையும், அதே காலத்தில் மானிட விவேகம் உண்டான சிந்தனைகளையும் நடத்துகிறார் என்பது ஏற்படுகிறது.

201. IV. தன்னுடைய பரிபாலத்தினால், பராபரன் முழு மானிட வமிசத்தின் ஆசைகளை நரரூபமுள்ள ஒரு உருவமாகச் சேர்க்கி

ளூர். தெய்வபரிபாலனத்தில் இது ஒரு சர்வத்தையும் குறித்தது என்பது, பின்வரும் ஒரு பிரிவில் பார்க்கலாம். எல்லாவற்றையும் பிரகுருதிக்கு ஆரோபிக்கிறவர்கள், எல்லாவற்றையும் மானிட விவேகத்துக்குக் கூட ஆரோபிக்கிறார்கள்; ஏனென்றால், எல்லாவற்றையும் பிரகுருதிக்கு ஆரோபிக்கிறவர்கள், இருதயத்தில் கடவுள் இல்லை என்கிறார்கள்; எல்லாவற்றையும் மானிட விவேகத்துக்கு ஆரோபிக்கிறவர்கள், இருதயத்தில் தெய்வபரிபாலனத்தை மறுக்கிறார்கள்; ஒன்று மற்றொன்றிலிருந்து பிரிக்கக்கூடாததா யிருக்கிறது. அப்படி யிருந்தாலும், இருவகுப்பினரும், தங்களுடைய நல்ல பெயருக்காகவும், அதை இழந்து விடுவோமென்கிற பயத்தினாலும், தெய்வபரிபாலனம் சர்வத்தையும் குறித்ததென்றும்' ஆனால், அதன் தனித்த பொருள்கள் மனிதனிட மிருக்கிறதென்றும், மானிட விவேகமென்பதால், அநேகம் சேர்ந்ததில் இந்த தனித்த பொருள்கள் குறிக்கப்பட்டதென்று சொல்லுகிறார்கள். (2) ஆனால், தனி பொருள்கள் நீக்கப்பட்டபோது ஒரு சர்வத்தை குறிக்கும் தெய்வபரிபாலனம் என்பது என்னவென்று நீரே நினைத்துப் பாரும். அது ஒரு வார்த்தையை மாத்திரம் விட ஏதாவது அதிகமா? ஏனென்றால், தனிமையானவைகளிலிருந்து உண்டாகிறது பொதுவானதாகிறது போல, எல்லா பிரத்தியேகமானவைகளாலும் சேர்ந்து உண்டாக்கப்பட்டது, சர்வ வியாபகமுள்ளதென்று சொல்லப்படும். ஆகையினால், தனிப்பொருள்களை நீர் நீக்கிவிட்டால், பின்பு சர்வ வியாபகம் என்பது, உள்ளே சூனியமான ஒன்று போலவும், இவ்விதமாக, உள்ளே யாதொன்றுமில்லாமலிருக்கிற மேற்பாகம் போலவும், அல்லது ஒன்றுமில்லாத கலப்பானது போலவும் அன்றி, வேறு என்ன? தெய்வபரிபாலனம் என்பது சர்வவியாபகமான அரசியல் என்றும், அப்படியிருந்தும், அதனால் யாதொன்றும் ஆளப்படுகிறதில்லை என்றும் அதன் சம்பந்தத்தில் மாத்திரம் வைக்கப்படுகிறதென்றும், அரசியலுக்குச் சேர்ந்தவைகள் மற்றவர்களால் கிரமப்படுத்தப் படுகிறதென்றும் சொல்லப்பட்டால், இது சர்வவியாபகமான ஆளுகை என்று சொல்லப்படலாமா? எந்த அரசனுக்கும் அவ்விதமான துரைத்தனம் கிடையாது; ஏனென்றால், எந்த அரசனாவது தன்

இராச்சியத்தின் எல்லா விஷயங்களையும் தன் குடிகளை ஆளவிட்டு விட்டால், அவன் அப்புறம் அரசனாகமாட்டான். அம்மாதிரியாக அரசனென்று மாத்திரம் சொல்லப்படுவான்; இவ்விதமாக உண்மையில் இல்லாமல், பேருக்கு மாத்திரம் அரசன் என்கிற கௌரவத்தை உடையவனா யிருப்பான். அவ்விதமான அரசனுக்கு ஆளுகை என்பது சொல்லப்பட முடியாது, சர்வவியாபகமான (3) அரசாட்சி என்பது கிடையவே கிடையாது. கடவுள் விஷயத்தில் பரிபாலனம் என்பது மனிதன் விஷயத்தில் விவேகமாயிருக்கிறது. ஓர்இராச்சியம் ஒரு இராச்சியமென்று சொல்லப்படும் பொருட்டும்,இவ்விதமாக சேர்த்துவைக்கப்படும் பொருட்டும், ஒரு பெயரைத் தவிர யாதொன்றும் தனக்காக அதிகமாகப்பிடித்து வைக்காத அரசனுக்கு சர்வத்தையும் குறித்த விவேகம் இருப்பதாகச் சொல்லமுடியாதது போல, மனிதர்கள் தங்கள் சொந்த விவேகத்தைக் கொண்டு எல்லா பொருள்களையும் முன்னறிந்து சேகரித்துக் கொண்டால், ஒரு சர்வ வியாபகமான பரிபாலனம் இருப்பதாகச் சொல்லப்பட முடியாது. கடவுள் பிரபஞ்சத்தை சிருஷ்டித்து, பிரகுருதிக்குத் தன்னிடமே யிருந்து எல்லாபொருள்களையும் உற்பத்தி செய்யும் சக்தியை அனுக்கிரகம் செய்தாரென்று தெரிந்து கொள்ளப்பட்டபோது, பிரகுருதிக்கு பிரயோகிக்கும் கால், சர்வவியாபக பரிபாலனத்தின் பெயருக்கும், சர்வ வியாபக ஆளுகையின் பெயருக்கும் அதே மாதிரிதான். இப்படி இருக்கும் பட்சத்தில், சர்வவியாபக பரிபாலனம் என்பது ஓர் வார்த்தையாக நீக்கி, சூனியமாயிருக்கிற தத்துவ விசார சம்பந்தமான மொழியைத் தவிர வேறென்ன? அன்றியும், உண்டாக்கப்படுவதை எல்லாம் பிரகுருதிக்கும், செய்யப்படுவதை எல்லாம் மானிட விவேகத்துக்கும் ஆரோபித்து, அப்படியிருந்தும் கடவுள் பிருகுருதியை சிருட்டித்தார் என்று சொல்லுகிறவர்களுக்குள், தெய்வபரிபாலனத்தை அர்த்தமில்லாத மொழியென்று நினைப்பவர்கள் அநேகர் இருக்கிறார்கள். தெய்வபரிபாலனம் பிரகுருதியின் மிகவும் தனிமையான பொருள்களிலும் மானிட விவேகத்தின் மிகவும் தனிமையானவைகளிலும், இருக்கிறதென்பதும்

அவைகளிலிருந்து அது சர்வவியாபகமானது என்பது உண்மை யான விஷயம்.

202. பராபரனுடைய தெய்வபரிபாலனம் இந்த காரணத் துக்காக, மிகவும் தனிமையான பொருள்களிலிருந்து சர்வ வியா பகமா யிருக்கிறது; பிரபஞ்சத்தில் தன்னிடமே யிருந்து முடிவற் றதும் நித்தியமானது மாகிய சிருட்டி நிலைக்கும்படி அவர் அதை சிருட்டித்தார். அவர் முன்பாக தன்னுடையவே பிரதிமையிலும் சாயலிலும் ஒரு மனிதனை யிருக்கும்படியாக, ஆண்டவர் மனிதர் களைக் கொண்டு ஒரு சுவர்க்கலோகத்தை உண்டாக்கினதால் இந்த சிருட்டியானது நிலைத்திருக்கிறது. மனிதர்களைக் கொண்டு செய்த சுவர்க்கம் ஆண்டவர் பார்வையில் அவ்விதமாக இருக்கிறதென்ப தும், அது சிருட்டியின் நோக்கமென்பதும் மேலேயும் (பி.27-45), மேலும், தான் செய்வதிலெல்லாம் தெய்வமானது, முடிவற்றதை யும் நித்தியமானதையும் நோக்குகிறதென்பதும் (பி. 46-முதல் 69-வரையிலும்) ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது. மனிதர்களைக் கொண்டு தன்னுடைய சுவர்க்கத்தை உண்டாக்குவதில், ஆண்ட வர் நோக்கத்தில் வைத்திருக்கும் முடிவற்றதும் நித்தியமானதும், முடிவின்மைக்கும் நித்தியத்துக்கும் அதிகப் படுத்தப்படவேண்டு மென்பதாயும், இவ்விதமாக தன் சிருட்டியின் முடிவில் தான் நிலையாயிருக்க வேண்டுமென்பதாயு மிருக்கிறது. பிரபஞ்சத்தை சிருட்டித்ததினால், ஆண்டவர் சித்தப்படுத்திய முடிவற்றதும் நித் தியமானதுமாகிய சிருட்டி இதுதான்; அவர் அந்த சிருட்டியில் (2) தன்னுடைய தெய்வபரிபாலனத்தின் மூலமாய் நிலையாயிருக் கிறார். கடவுள் முடிவற்றவராயும் நித்தியமானவராயு மிருக்கிறா ரென்று திருச்சபையின் கொள்கையிலிருந்து தெரிந்துகொண்டு நம்புகிற எந்த மனிதன் (கடவுளாகிய பிதாவும், கடவுளாகிய குமாரனும், கடவுளாகிய பரிசுத்த ஆவியும், முடிவற்றவராயும், நித்தியமானவராயும், சிருட்டிக்கப்படாதவராயும், சர்வ வல்லமை யுள்ளவராயு மிருக்கிறாரென்று, கிருஸ்துவ உலகத்தில் எல்லா சபைகளின் கொள்கையிலும் இருக்கிறபடியினால், அதனேசியஸ் என்பவரின் சமய கோட்பாட்டைப்பார்), தான் கேட்ட உடனே,

கடவுள் தன்னுடைய சிருட்டியின் பெரிய வேலையில் முடிவற்ற தையும் நித்தியமானதையும் மதிப்பதைத் தவிரவும், தன்னுடைய சொந்தமான அந்த சுவர்க்கத்தை அவர் உருவாக்குகிற மானிட வமிசத்தில் அதையே அவர் மதிக்கிறார் என்பதைத் தவிரவும், வேறுவிதமாய் செய்யமுடியாதென்று ஒத்துக்கொள்ளாத படி, அவ்வளவு பகுத்தறிவில்லாமலிருக்கக்கூடும்? அவர் தன்னிடமேயிருந்து பார்க்கும்போது வேறு எதை பார்க்கக்கூடும்? இப்படியிருக்கையில், மானிடவமிசத்தை சீர்படுத்தலையும், அதன் இரட்சிப்பையும் தவிர வேறு எதை தெய்வபரிபாலனம் நோக்கமாகக் கொள்ளும்? ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தின் மூலமாய் அவரால் தவிர எவனும் தன்னாலேயேயும், தன்னுடைய சொந்த விவேகத்தினாலேயும், சீர்படுத்தப்படமுடியாது. ஆதலால், ஆண்டவர் ஒவ்வொரு மனிதனையும், மிகவும் அற்பமானவனையும் ஒவ்வொரு நொடி நேரமும் நடத்தினாலொழிய, அந்த மனிதன் சீர்ப்படும் வழியிலிருந்து திரும்பி அழிந்து போகிறான் (3) னென்று பின் தொடருகிறது. மானிட மனதின் நிலைமையின் ஒவ்வொரு விகாரமும் மாறுதலும், எதிரிலிருக்கும் பொருள்களின் வரிசையில் ஏதாகிலும் சிலவற்றையும், அதனால் பின் தொடரும் பொருளையும் பேதப்பட்டு, மாறுதலடையச் செய்கிறது; அப்படியிருக்கும் பட்சத்தில், சதாகாலம் வரையில் படிப்படியாய் அப்படியிருக்காதா? வில்லை விடும்போது எவ்வளவு கொஞ்சமாவது, ஓர் அஸ்திரம் ஆயிரம் காலடி அல்லது அதற்கு அதிக தூரத்திலிருந்து குறிதப்பினால், மிகுதியாய் பிசகுகிற அஸ்திரப்பிரயோகம் போலிருக்கிறது. மானிட மனதுகளின் நிலைமைகளை ஒவ்வொரு நொடி நேரத்தின் மிக குறைந்த பாககாலத்திலும் ஆண்டவர் வழிகாட்டாவிட்டால், அப்படித் தானிருக்கும். ஆண்டவர், இதைத் தன்னுடைய தெய்வபரிபாலன சட்டங்களை அனுசரித்துச் செய்கிறார்; இந்த சட்டங்களை அனுசரித்து தான் மனிதனுக்கு தானே நடத்திக்கொள்வதாகத் தோன்றுகிறது; ஆனால் ஆண்டவர் அவன் தானே எப்படி நடத்திக்கொள்ளுகிறானென்பதை முன்னறிந்து, இடைவிடாமல் சந்தர்ப்பங்களை பொருந்தப்பண்ணுகிறார். அனுமதி கொடுக்கும் சட்டங்கள் கூட

தெய்வபரிபாலனத்தின் சட்டங்களென்பதும், ஒவ்வொரு மனிதனும் சீர்ப்படுத்தப்பட்டு குணப்படுத்தப்படக்கூடு மென்பதும், வேறு எந்த முன்தீர்ப்பும் கிடையாது என்பதும் பின்வருவதில் பார்க்கலாம்.

203. ஒவ்வொரு மனிதனும் இறந்தபிறகு சதாகாலம் இருக்கிறபடியினாலும், தன் வாழ்விற்கு தக்கபடி சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது ஓரிடம் கொடுக்கப்படுகிறபடியினாலும், இவைகளில் ஒவ்வொன்றும், நரகத்தைப்போல் சுவர்க்கமும் முன் கூறியபடி ஒன்றாக செயல்படக்கூடிய ஒரு உருவத்தில் இருக்கவேண்டியதா யிருப்பதினாலும், அந்த உருவத்தில் எவனுக்கும், தனக்கு சொந்தமானது தவிர வேறு எந்த இடமும் கொடுக்கப்பட முடியாதபடியினாலும், எல்லா உலகங்களிலும், மானிட வமிசம் ஆண்டவருடைய ஆதரவிலிருக்கிறதென்றும், ஒவ்வொருவனும் பாலியம் முதல் தான் இறந்துபோகும் வரையில் மிகவும் தனித்த ஒவ்வொன்றிலும் அவரால் வழிகாட்டப்பட்டு, அவனுடைய இடம் முன்னறிந்து, அதேகாலத்தில் ஏற்படுத்தப்படுகிறதென்றும், பின் தொடருகிறது. ஆண்டவரின் தெய்வபரிபாலனம் மிகவும் தனித்த பொ
(2) ருள்களிலும் இருப்பதால், அது சர்வவியாபாகமான தென்றும், பிரபஞ்சத்தை சிருட்டித்ததினால் ஆண்டவர் தமக்காகச் சேகரித்துவைத்த முடிவற்றதும் நித்தியமானதுமாகிய பிரபஞ்சம் இதுதானென்றும் இதிலிருந்து விசதமாகிறது. இந்த சர்வ வியாபக பரிபாலனத்தின், எதையும் மனிதன் பார்க்கிறதில்லை; அவன் பார்த்தாலும், வீடுகட்ட வீசப்பட்டிருக்கும் குவியலும் சாமான்கள் கூட்டங்களும் வழிப்போக்கர்களுக்கு தோன்றுகிறதுபோல, அவன் கண்களுக்கு தோன்றமட்டும் கூடும்; ஆனால் கட்டுகிறதும் விருத்திசெய்கிறதும், ஓயாதிருக்கிற ஒரு மகத்துவமான அரண்மனையைப் போல அது ஆண்டவரால் பார்க்கப்படுகிறது.

204. **V. சுவர்க்கமும் நரகமும் அவ்வித உருவத்தில் இருக்கின்றன.** சுவர்க்கமானது மானிட உருவத்திலிருப்பதாக, 1758வருஷத்தில் **லண்டன்** நகரத்தில் பிரசுரம் செய்யப்பட்ட **சுவர்க்கமும்**

**நரகமும்** எனும் நூலினும் (பி. 59-102), **பதிபசுபாச விளக்கமெனும்** நூலினும், அவைகளுடன் இந்த நூலில் அநேக வாக்கியங்களினும் தெரியப்படுத்தப் பட்டிருக்கிறது. ஆகையினால், அதை இன்னும் உறுதிப்படுத்துதல் அனுவசியமாயிருக்கிறது. நரகம் கூட மானிட உருவத்திலிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது; ஆனால் முழுமையும் சேர்த்து எடுத்துக்கொண்டால், நரகம் என்று அருத்தம் கொள்ளப்படுகிற பிசாசு இருக்கிறது போல், அது ஒரு பயங்கரமான மானிட உருவத்திலிருக்கிறது. அங்கேயிருப்பவர்கள்கூட பிறந்த மனிதர்களான படியினாலும், தீமையை இச்சித்து செய்வதினால் சுதந்தரத்தையும், அதை நினைத்து உறுதிப்படுத்துவதினால் பகுத்தறிவுடைமையும், அவர்கள் கெடுத்துவிட்டபோதிலும் சுதந்தரமென்றும் பகுத்தறிவுடைமையென்றும் இரண்டு மானிட மனோசக்திகளை உடைத்தாயிருக்கிற படியினாலும், அது மானிட உருவத்திலிருக்கிறது.

205. VI. **பிரகுருதியை மாத்திரமும், மானிட விவேகத்தை மாத்திரமும் ஒத்துக்கொண்டவர்கள், நரகத்தை உண்டாக்குகிறார்கள்; கடவுளையும் அவருடைய தெய்வ அரசியலையும் ஒத்துக்கொண்டவர்கள் சுவர்க்கத்தை உண்டாக்குகிறார்கள்.** தீமையான வாழ்க்கையிலிருக்கிறவர்கள் எல்லாம், பிரகுருதியையும் மானிட விவேகத்தையும் மாத்திரம் உள்ளுக்குள்ளாய் ஒத்துக்கொள்ளுகிறார்கள். இவைகளை ஏற்றுக்கொள்ளுதல் எல்லா தீமையிலும், அதை நன்மைகளாலும் உண்மைகளாலும் எவ்விதத்தில் மூடிவைத்தாலும், உள்ளே மறைந்து கிடக்கிறது; இவைகள் இரவல்வாங்கிய ஆடைகளாயும் மாத்திரமும் அல்லது தீமையானது தன் கேவல ஸ்திதியில் தோன்றாதபடி சுற்றிலும் போட்டிருக்கிற அழிந்துபோகக்கூடிய சிறு புஷ்ப மாலைகளைப்போலவும் இருக்கின்றன. இந்த சாதாரண போர்வையினால், தீமையான வாழ்விலிருக்கிறவர்கள் எல்லாம், பிரகுருதியை மட்டும், மானிட விவேகத்தை மட்டும் உள்ளுக்குள்ளாய் ஒத்துக்கொள்ளுகிறார்களென்று தெரிந்திருக்கப் படவில்லை; ஏனென்றால், இது அந்த போர்வையினால் பார்க்கக் கூடாமல் மறைந்து இருக்கிறது; ஆனால், அப்படியிருந்தும் அவர்

கள் அவைகளை ஒத்துக் கொள்ளுகிறார்களென்பது, அதை அவர்கள் ஒத்துக்கொள்ளுதலின் உற்பத்தி ஸ்தானத்திலும், காரணத்திலுமிருந்து வெளிப்படையாகலாம். இதை வெளிப்படுத்த, மனிதனுடைய சொந்த விவேகம் எதிலிருந்து வருகிறதென்றும், அது என்னவென்றும், பிறகு தெய்வபரிபாலனம் எதிலிருந்து வருகிறதென்றும், அது என்னவென்றும், பின்னிட்டு, ஒவ்வொரு வகுப்பைச் சேர்ந்தவைகள் யார் என்றும், என்ன குணமுள்ளவர்களென்றும், கடைசியாய், தெய்வபரிபாலனத்தை ஒத்துக்கொள்ளுகிறவர்கள் சுவர்க்கத்தி லிருக்கிறார்களென்றும், தங்கள் சொந்த விவேகத்தை ஒத்துக்கொள்ளுகிறவர்கள் நரகத்திலிருக்கிறார்களென்றும், சொல்லப்பட வேண்டும்.

206. **மனிதனுடைய சொந்த விவேகம் எதிலிருந்து வருகிறது, அது யாதா யிருக்கிறது.** தன்னுடைய சுபாவமா யிருக்கிற மனிதனுடைய சொந்த தன்மையிலிருந்து அது வருகிறது; தன்னுடைய பெற்றோரிடமிருந்து வந்த தன் ஆன்மா என்று சொல்லப்படுகிறது. இந்த சொந்த தன்மை தன்னையே நேசித்தலாயும், அதிலிருந்து உலகத்தை நேசித்தலாயும், அல்லது உலகத்தை நேசித்தலாயும்,அதிலிருந்து தன்னையே நேசித்தலாயுமிருக்கிறது. தன்னையே நேசித்தலென்பது, தன்னை மாத்திரம் மதித்து, மற்றவர்களை அற்பமாகவும் அல்லது கணக்கில் இல்லாதவர்களாகவும் நினைக்கும்படியானதாக யிருக்கிறது; அது யாரையாவது ஏதோ கொஞ்சம் முக்கியமானவர்களென்று நினைத்தால், அவர்கள் அதை கனம் பண்ணுகிறவரையில் அல்லது உபசாரம்பண்ணுகிறவரையில் மாத்திரம் அப்படி நினைக்கிறது. விதையினிடத்தில் கனி கொடுக்கவும், பலிக்கவும் இருக்கும் முயற்சிபோல், அந்த அன்பில் உள்ளுக்குள்ளாய் பெரியவனாகவும், கூடுமானால் அரசனாகவும், அதன்மேல் கூடுமானால் ஒரு கடவுளாகவும் ஓர் விருப்பம் மறைந்து கிடக்கிறது. பிசாசு அவ்விதமானது; ஏனென்றால், அது சுய ஆசையாகத்தானே யிருக்கிறது; அது தன்னையே தொழுது கொள்ளுகிறதாயும், தன்னைத் தொழாதவர்களைக் கடாட்சிக்காததாயும் கூட இருக்கிறது; தான் தனியாக வணங்கப்

பட விரும்புகிற படியினல், தன்னையே போன்ற இன்னம் ஒரு பிசாசை அது வெறுக்கிறது. தன்னுடைய துணைவியின்றி ஓரன்புயிருக்க முடியாதாகையாலும், மனிதனில் அன்பு அல்லது சித்தத்தின் துணைவி புத்தி என்று சொல்லப்படுகிறபடியினுலும், சுய அன்பு, புத்தியாகிய தன்னுடைய துணைவிக்குத் தன்னுடைய சொந்த ஆசையை புகட்டும்போது, துணைவியிடத்தில் இது, மனிதனுடைய சொந்த அறிவின் அகங்காரமாயிருக்கிற கர்வமாகிறது;
(2) மனிதனுடைய சொந்த விவேகம் இதிலிருந்து வருகிறது. இப்படி யிருக்கையில் தன்னையே நேசித்தலின் விருப்பமானது, உலகத்துக்கு ஒரே எஜமாஞகவும், இவ்விதமாக ஒரே கடவுளாகவும் இருக்கக் கோறுகிறபடியினல், அதன் உற்பத்திகளான தீமையின் இச்சைகள், தங்களிலிருக்கும் உயிரை அதிலிருந்து அடைகின்றன. கபடமாயிருக்கிற, இச்சைகளின் உணர்ச்சிகளும், அதே மாதிரி தீமைகளா யிருக்கிற இச்சைகளின் இன்பங்களும், பொய்களா யிருக்கிற இந்த இன்பங்களின் சிந்தனைகளும் கூட அதே மாதிரி உயிரை அடைகின்றன. அவைகளெல்லாம், தங்களுடைய எஜமானரின் வேலைக்காரர் போலவும், துணைவர்கள் போலவும் இருந்துகொண்டு தாங்கள் செயல்படாமல், செயல்படும்படி செய்யப்படுகிறோமென்பது தெரியாமல், அவருடைய ஒவ்வொரு தலை அசைப்புக்கும் செயல்படுகின்றன; அவைகள் சுய ஆசையினல், மனிதனுடைய சொந்த விவேகத்தின் மூலமாய் செயல்படப்படுகின்றன. அதனல்தான், ஒவ்வொரு தீமையிலும், அதன் உற்பத்தியிலிருந்து, மனிதனுடைய சொந்த விவேகம் மறைந்து கிடக்
(3) கிறது. பிரகுருதியை மாத்திரம் ஒத்துக் கொள்ளுதல் கூட அதில் மறைந்து கிடக்கிறது; ஏனென்றல், சுய அன்பு, ஆண்டவர் மாத்திரம் எல்லாவற்றையும் ஆளுகிறரென்றும், பிரகுருதி தன்னில்தானே இறந்துபோனதென்றும், மனிதனுடைய சொந்த தன்மை நரகமென்றும், அதனல், சொந்த தன்மையை நேசித்தல் பிசாசென்றும், தான் பார்த்துக் கேட்காதபடி, சுவர்க்கம் தோன்றுகிற தன்னுடைய கூரையின் ஜன்னலையும், அதனுடன் பக்க ஜன்னல்களையும் மூடிவிட்டது; பிறகு, மூடப்பட்ட ஜன்னல்களோடு, அது இருட்டிலிருந்துகொண்டு, தன்னுடைய துணைவியுடன் உட்

கார்ந்து கொள்ளுகிற ஓர் அடுப்பைத் தானே செய்துகொண்டு, சிநேகித முறையாய், கடவுளுக்கு விரோதமாய் பிரகுருதிக்கு அநுகூலமாயும், தெய்வபரிபாலனத்திற்கு விரோதமாய் மனிதனுடைய சொந்த விவேகத்துக்கு அனுகூலமாயும், அவைகள் தர்க்கிக்கின்றன.

207. **தெய்வபரிபாலனம் எங்கிருந்து வருகிறது, அது யாதாயிருக்கிறது.** முன் சொல்லியபடி தன்னையே நேசித்தல் பிசாசானபடியினுலும், மோகங்களும் அதன் இன்பங்களும் நரகமாயிருக்கிற அதன் இராச்சியத்தின் தீமைகளானபடியினுலும், தன் க்ஷேமத்தையே கோரும் அன்பை நீக்கிவிட்ட மனிதனில் அது தெய்வீக கிருத்தியம். இது நீக்கப்பட்டபோது, பராபரன் அயலானிடத்து கொள்ளும் அன்பின் ஆசைகளோடு பிரவேசித்து, தன்னுடைய கூறையின் சாளரத்தையும், பிறகு பக்கத்து சாளரங்களையும் திறந்து, ஒரு சுவர்க்கமும், இறந்தபின் ஓர் உயிரும் சதாகால சுகமுமிருப்பதாகப் பார்க்கசெய்கிறார்; அப்பொழுது பரமார்த்த வெளிச்சத்தினுலும், அதேகாலத்தில் ஓடிவருகிற பரமார்த்த அன்பினுலும், கடவுளானவர் எல்லாவற்றையும் தன்னுடைய தெய்வபரிபாலனத்தினுல் ஆளுகிறாரென்று ஒத்துக் கொள்ளச் செய்கிறார்.

208. **ஒவ்வொரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் யார் என்ன குணமுடையவைகளா யிருக்கிறார்கள்.** கடவுளையும் அவருடைய தெய்வ பரிபாலனத்தையும் ஒத்துக்கொள்ளுகிறவர்கள், தங்களாலேயே நடத்தப்படுவதில் பிரீதியற்றவராய், ஆண்டவரால் வழி காட்டப் பட விரும்புகிற சுவர்க்கத்து தேவர்கள் போலிருக்கிறார்கள். அவர்கள் ஆண்டவரால் நடத்தப் படுகிறார்களென்பதற்கு அடையாளம், அவர்கள் அயலானை நேசிக்கிறார்களென்பதா யிருக்கிறது. ஆனால், பிரகுருதியையும், மனிதனுடைய சொந்த விவேகத்தையும் ஒத்துக்கொள்ளுகிறவர்கள், ஆண்டவரால் நடத்தப்பட பிரீதியில்லாதவராய், தங்களாலேயே வழி காட்டப்பட விரும்புகிற நரகத்து பிசாசுகளைப் போலிருக்கிறார்கள். அவர்கள் இராச்சியத்

தில் பெரிய மனிதர்களா யிருந்திருந்தால், எல்லாவற்றையும் ஆள விரும்புகிறார்கள், திருச்சபையில் சிரேஷ்ட அத்தியக்ஷ குருக்களா யிருந்திருந்தால், அப்படியே விரும்புகிறார்கள். அவர்கள் நியாயாதிபதிகளா யிருந்தால், தீர்ப்பை புரட்டி, சட்டங்களுக்குமேலே தங்களிஷ்டமான அதிகாரத்தைச் செலுத்துகிறார்கள்; அவர்கள் கல்விமான்களா யிருந்தால், மனிதனுடைய சொந்ததன்மையையும் பிரகுருதியையும் உறுதிப்படுத்த அறிவை பிரயோகிக்கிறார்கள்; வர்த்தகர்களா யிருந்திருந்தால், கொள்ளைக்காரர்களைப் போல் நடக்கிறார்கள்; உழவர்களா யிருந்தால், திருடர்களைப் போல் நடக்கிறார்கள்; அவர்கள் எல்லாம் கடவுளின் விரோதிகளாயும், தெய்வ பரிபாலனத்தைக் கேலி செய்பவர்களாகவு மிருக்கிறார்கள்.

209. அவ்விதமான ஜனங்களுக்கு சுவர்க்கம் திறக்கப்பட்டும் அவர்கள் பைத்தியம் பிடித்தவர்கள் என்று சொல்லப்பட்டும், உட்பெருக்கினாலும் ஞான விளக்கத்தினாலும் உண்டாக்கப்படுகிற தங்களுடைய உணர்ச்சிக்கே வெளிப்படையாகச் செய்யப்பட்ட போதும் கூட கோபத்தினால், சுவர்க்கத்தை தங்களுக்கு வேண்டாமென்று மூடிவிட்டு, அதன்கீழ் நரகமிருக்கப்பட்ட பூமியைப் பார்க்கிறார்கள். இன்னும் நரகத்திற்கு வெளியேயும், அம்மாதிரியான நடத்தையுள்ளவர்களாயு மிருக்கிற சூக்கும உகைத்தி லுள்ளவர்கள் விஷயத்தில் இது சம்பவிக்கிறது. "நான் சுவர்க்கத்தைப் பார்த்து, தேவர்கள் என்னோடு பேசுவதைக் கேட்டால், நான் ஒத்துக்கொள்ளுவேன்" என்று நினைக்கிறவர்கள் பிழை இதிலிருந்து வெளிப்படையாகிறது. அவர்களுடைய புத்தி ஒத்துக் கொள்ளுகிறது; ஆனால், அதே காலத்தில் சித்தம் ஒத்துக் கொள்ளாவிட்டால், அவர்கள் இன்னும் ஒத்துக்கொள்ளுகிறதில்லை. ஏனென்றால், சித்தத்தின் அன்பு, தான் விரும்புவது ஏதாயினும், அதை புத்திக்குப் புகட்டுகிறது; முன் பின்னாக்கினால் அப்படியில்லை, இதுவுமல்லாமல், தன்னிடமே யிருந்து வராத ஒவ்வொன்றையும் புத்தியில் இல்லாமல் அது அழிக்கிறது.

210. **மனிதனுக்கு தன்னிடமே யிருந்து நினைப்பதாகவும், தன்னிடமே இருந்து ஒழுங்கு படுத்துவதாகவும் தோன்றாமல்போனால்**

இவைகள் எல்லாம் செய்யப்பட முடியாது. தன்னிடமே இருந்து உயிரோடிருப்பது போலவும், இவ்விதமாக தான் தன்னிடமே யிருந்து போல நினைத்து இச்சிக்கிறனென்றும், பேசி செயல் படுகிற னென்றும், தோன்றினலொழிய மனிதன் மனிதனுக மாட்டானென்று முன்பக்கங்களில் முழுமையும் நிச்சயப்படுத்தப் பட்டிருக்கிறது. மனிதனனவன் தன்னுடைய தொழிலுக்கும் வாழ்விற்கும் சேர்ந்த எல்லாவற்றையும் தன்னுடைய சொந்த விவேகத்திலிருந்து போல் ஒழுங்குபடுத்தினலொழிய, தெய்வபரி பாலனத்திலிருந்து நடத்தப்பட்டு ஒழுங்கு படுத்ததப்படமாட்டா னென்று, இதிலிருந்து ஏற்படுகிறது; ஏனென்றல், உட்பெருக்கை எதிர்பார்த்து, கைகளை கீழே தொங்கவிட்டு, வாய் திறக்கப்பட்டு, கண்கள் மூடப்பட்டு, மூச்சுபிடித்துக்கொண்டு நின்றுக்கொண் டிருக்கிற ஒருவனைப் போல அவன் இருப்பான்; தான் தன் னிடமே யிருந்து ஜீவித்து, நினைத்து, இச்சித்து, செயல்படுகிறே னென்கிற உணர்ச்சியிலிருந்தும், இந்திரிய ஞானத்திலிருந்தும் தனக்கு உண்டாகிற மானிடத் தன்மையிலிருந்து, இவ்விதமாக அவன் தானே நீக்கிக்கொள்வான்; அவன் அதே காலத்தில், மிருகங்களிலிருந்து பேதங்காட்டப்படுகிற சுதந்தரமாகவும், பகுத் தறிவுடைமையாகவு மிருக்கிற தன்னுடைய இரண்டு மனேசக்தி களைத் தானே நீக்கிக் கொள்வான். இந்த தோற்றமில்லாவிட்டால், ஒரு மனிதனுக்கு அங்கீகரிப்பும் அன்னியோன்னியமாய் நடக்கவும் சக்தியில்லாமலும், இவ்விதமாக மாரணமின்மை இல்லாமல் போய் விடுமென்பது, இந்த நூலில் மேலேயும் பதிபசுபாச விளக்க மெனும் (2) நூலிலும் கூடமெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகையினல், தெய் வபரிபாலனத்தால் வழிகாட்டப்பட நீங்கள் விரும்பினல், தன்னு டைய எஜமானனுடைய சாமான்களை உண்மையாய் கையாளுகிற வேலைக்காரர்களையும் கையாளையும்போல, விவேகத்தை உபயோகப் படுத்துங்கள். இந்த விவேகமானது வேலைக்காரர்களுக்கு, கணக்கு ஒப்புவிக்கவேண்டியவியாபாரம் செய்யக்கொடுத்த தாலந்தாகயிருக் கிறது(லூக்கா XIX. 13-28; மத்தே.XXV.14-31).விவேகம் தானே மனிதனுக்குஅவனுடைய சொந்தமாகத் தோன்றுகிறது; மனிதன னவன் தனக்குள்ளே, தன்னையே நேசித்தாலாயிருக்கிற கடவுளு

டையவும் தெய்வபரிபாலனத்தினுடையவும், மிகவும் பிராணுபாயமான விரோதியை தனக்குள்ளே மூடிவைக்கிறவரையில் அது அவனுடையதென்று நம்பப்படுகிறது. இது ஒவ்வொரு மனிதனுடைய அந்தரங்கத்தில் பிறந்தது முதல் வசிக்கிறது; நீர் அதை ஒத்துக்கொள்ளாவிட்டால்—ஏனென்ருல், அது ஒத்துக்கொள்ளப்பட விரும்புகிறதில்லை—அது பத்திரமாய் வாசம் பண்ணி, மனிதன் அதை திறக்காதபடிக்கும், தானே ஆண்டவரால் பின்னிட்டு வெளியே தள்ளப்படாதபடிக்கும் கதவை பாதுகாக்கிறது. ஆண்டவரிடமிருந்து அப்படி செய்வதாக ஒத்துக்கொண்டு, மனிதனைவன், தீமைகளை பாவங்களாக தன்னிடமேயிருந்து தள்ளுவதினுல், அவனுல் இந்த கதவு திறக்கப்படுகிறது. தெய்வபரிபாலனம் ஏகோபித்து செயல்படுகிற விவேகம் இது தான்.

211. தெய்வபரிபாலனம், மனிதன் அழிந்துபோகாதபடி, அது இருப்பது யாருக்கும் தெரியாதபடி அவ்வளவு இரகசியமாய் தொழில்படுகிறது. ஏனென்ருல், அவன் சித்தமாயிருக்கிற மனிதன் சொந்ததன்மை, தெய்வபரிபாலனத்துடன் எவ்விதத்திலும் ஏகோபித்து செயல்படுகிறதில்லை. மனிதன் சுயதன்மை அதற்கு விரோதமாய் உடன்பிறந்த ஓர் பகையை உடைத்தாயிருக்கிறது; ஏனென்ருல், முதல் ஏற்பட்ட பெற்றோர்களை தீமைக்கு உட்படுத்திய சர்ப்பம் இதுதான்; அதைப்பற்றி சொல்லியதாவது: "உனக்கும் ஸ்திரிக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன்; அவர் உன் தலையை நசுக்குவார்" என்ருர் (ஆதியாகமம் III. 15). சர்ப்பம் என்பது எல்லாவித தீமை; அதன் சிரசு சுயதன்மை, அந்த ஸ்திரியின் வித்து என்பது ஆண்டவர்; உண்டாக்கப்பட்ட விரோதம், என்பது மனிதனுடைய சொந்த விவேகத்துக்கும் ஆண்டவருக்கும், இவ்விதமாககூட மனிதனுடைய சொந்த விவேகத்துக்கும் ஆண்டவரின் தெய்வ பரிபாலனத்துக்கும், மத்தியிலிருக்கிறது; ஏனென்ருல், மனிதனுடைய சொந்த விவேகம் இடைவிடாமல் அதன் தலையை (2) தூக்கிக்கொண்டிருக்கிறது, தெய்வபரிபாலனம் அதை இடைவிடாமல் அடக்குகிறது. மனிதன் இதை உணர்ந்தால், அவனுக்கு

கோபம் வந்து, கடவுள்பேரில் எரிச்சல் உண்டாகி, அழிந்து போவான். ஆனால் அதை அவன் உணராதபோது, அவனுக்கு கோபம் வந்து, மனிதர்களுக்கும் தனக்குமே விரோதமாகவும், அதிர்ஷ்டத்துக்கும் விரோதமாகவும், தனக்கும் எரிச்சல் உண்டாகும்; அதனால் அவன் அழிந்துபோகமாட்டான். இந்த காரணத்துக்காக, ஆண்டவர், தம்முடைய தெய்வபரிபாலனத்தால் மனிதனை இடைவிடாமல் சுதந்தரத்தில் நடத்துகிறார்; அந்த சுதந்தரமானது மனிதனுக்கு தன்னுடைய சொந்தத்தைப் போலில்லாமல் வேறு விதமாய் தோன்றுகிறதில்லை. மேலும், தனக்கே விரோதமாய் மனிதனை சுதந்தரத்தில் நடத்தலானது, ஒரு பாரமானதும் எதிர்க்கிறதுமாகிய எடையை, அவைகளின் வலிமையினால் அந்த எடையும் எதிரித்தலும் உணரப்படாத மறையாணிகளால் பூமியிலிருந்து தூக்குதல் போலிருக்கிறது; மேலும், அது அக்காலத்தில் அவனுக்குத் தெரியாமலிருக்கிற, தன்னைக்கொல்ல எண்ணங்கொண்ட ஓர் விரோதியுடன் ஒரு மனிதன் சகவாசம் செய்தல் போலவும், ஒரு சினேகிதன் முன்பின் தெரியாத வழிகளில் அவனை தூரமாய் நடத்திக்கொண்டுபோய், பின்னிட்டு அவனுடைய விரோதியின் எண்ணத்தை வெளிப்படுத்துகிறவன் போலவுமிருக்கிறது.

212. அதிர்ஷ்டத்தைப் பற்றிப் பேசாதவன் யார்? தான் அதைப்பற்றிப் பேசுகிறதினாலும், அனுபவத்தில் அதைப்பற்றி ஏதோ சிலது தனக்கு தெரிகிறபடியினாலும், யார் அதை ஒத்துக்கொள்ளுகிறதில்லை? ஆனால், அது என்னவென்று யாருக்கு தெரியும்? அது இருக்கிறதினாலும், நிலைத்திருப்பதினாலும், அது ஏதோ ஒன்று என்று மறுக்க முடியாது; ஒரு பொருள் ஒரு காரணமின்றி இருக்கவும் நிலைத்திருக்கவும் முடியாது; ஆனால் இந்த ஏதோ ஒரு பொருளின் அல்லது அதிர்ஷ்டத்தின் காரணம் தெரியாமலிருக்கிறது. ஆனால், அதன் காரணம் மாத்திரம் தெரியாமல் அது இல்லை என்று சொல்லப்படாதபடி, சொக்கட்டான் அல்லது சூதாடும் சீட்டை எடுத்துக்கொண்டு விளையாடு அல்லது விளையாடுகிறவர்களுடன் பேசு. அவர்களில் எவனாவது ஒருவன் அதிர்ஷ்டத்தை இல்லை என்கிறானா? ஏனென்றால், அவர்

கள் ஒரு ஆச்சரியகரமான வழியில் அதனுடன் விளையாடுகிறார்கள், அது அவர்களுடன் விளையாடுகிறது. அதிர்ஷ்டம் அவனுக்கு விரோதமாக வைக்கப்பட்டால், அதற்கு விரோதமாய் யார் ஜெயிக்கக்கூடும்? அப்பொழுது அது விவேகத்தையும் ஞானத்தையும் பார்த்து சிரிக்கிறதில்லையா? நீர் சொக்கட்டானை ஆட்டும் போதும், சீட்டுகளை கலைக்கும்போதும், எதோ ஒரு காரணத்தினால், ஒன்றுக்கு மற்றொன்றை விட அதிகமாக அனுகூலஞ் செய்ய, அது கையின் தசைநார்களுடைய சுழற்சிகளையும் சலனங்களையும் தெரிந்து அடக்கினது போல் தோன்றுகிறதில்லையா? அங்கே மாறுமையாலும் மாறுதலினாலும் மானிட விவேகத்துடன் அது ஆச்சர்யகரமாய் நிர்வகித்து, அதேகாலத்தில் தானே மறைந்து கொள்ளுகிற இறுதிப் பொருள்களில் தெய்வபரிபாலனத்தை விட வேறு எந்த மூலத்திலிருந்தாவது ஒரு காரணம் இருக்கக்கூடுமா? (2) கிருஸ்துவர் அல்லாத சமயிகள் முன்காலத்தில் அதிர்ஷ்ட தேவதையை ஒத்துக்கொண்டார்களென்றும், இடாலியர்கள் ரோம் நகரத்தில் ஒருகோயிலை அவளுக்காக கட்டினதாகவும் தெரிந்திருக்கிறது. முன் சொல்லியபடி இறுதிப்பொருள்களில் தெய்வ பரிபாலனமாயிருக்கிற, இந்த அதிர்ஷ்ட தேவதையைப்பற்றி தெரியப்படுத்த, எனக்கு சுதந்தரமில்லாத அநேக விஷயங்களை கற்றுக்கொள்ள, அனுமதி கொடுக்கப்பட்டது; அதிலிருந்து சூனியமானதினால், அது ஒரு மனதின் மயக்கமல்லவென்றும், பிரகுருதியின் விளையாட்டு அல்லவென்றும் காரணமில்லாத, எதோ ஒன்று அல்லவென்றும் தெய்வபரிபாலனம் மனிதனுடைய சிந்தனைகளுடையவும் செயல்களுடையவும் மிகவும் தனித்த பொருள்களிலும் இருக்கிறது என்பதற்கு அது கண்ணாரக்கண்ட சாட்சியம் என்றும், எனக்குதெளிவானது. தெய்வபரிபாலனமானது அவ்வளவு உதவாததும் அற்பமானதுமாகிய பொருள்களின் ஒவ்வொன்றிலும் இருக்கிறபடியினால், உலகத்தில் சமாதானம் விஷயங்களிலும் யுத்தவிஷயங்களிலும் போலவும், சுவர்க்கத்தில் இரட்சிப்பு வாழ்வு இவைகள்போலவும், உதவாததும் அற்பமானதுமல்லாத பொருள்களின் ஒவ்வொன்றிலும்கூட அது இருக்கவேண்டியதில்லையா?

213. ஆனால் மானிட விவேகம், பகுத்தறிவுடைமையை, தெய்வபரிபாலனம் செய்வதைவிட, அதிகமாக தன் பக்கம் கொண்டுவருகிறதென்று எனக்குத்தெரியும்; ஏனென்றால், தெய்வபரிபாலனம் தானே தோன்றுகிறதில்லை, ஆனால் மானிடவிவேகம் அப்படி செய்கிறது. கடவுளாயிருக்கிற ஒரே ஒரு உயிர் இருக்கிறதென்றும், எல்லா மனுஷஜாதியும், முன்னமே திரளாய் காண்பித்தபடி, அவரிடமிருந்து, உயிரைப்பெற்றுக்கொள்ளுகின்றனவென்றும் ஒத்துக்கொள்ளுதல் சுலபமாயிருக்கிறது; என்றாலும் விவேகம் உயிருக்கு சேர்ந்ததானபடியினால், இது அதேவாகிறது. ஸ்தூலமானது அல்லது புறம்பான மனிதனிலிருந்து பேசுங்காலத்தில், தன்னுடைய வாதத்தில் மனிதனுடைய சொந்த விவேகத்துக்கும், பிரகுருதிக்கும் அனுகூலமாக பேசாதவன் யார்? பரமார்த்தமான அல்லது உள்ளான மனிதனிலிருந்து பேசுங்காலத்தில், தெய்வபரிபாலனத்துக்கும் கடவுளுக்கும் அனுகூலமாகக்கூட தர்க்கம் செய்யும் காலத்தில் பேசாதவன் யார்? ஆனால், ஸ்தூல மனிதனைப்பார்த்து, தயவு செய்து ஒன்று மனிதனுடைய சொந்த விவேகத்துக்கு அனுகூலமாகவும், மற்றொன்று பிரகுருதிக்கு அனுகூலமாகவும் புஸ்தகங்கள் எழுதி, அவைகளை பார்வைக்கு நியாயமானதும், வெகுவாய் நம்பக்கூடியதும், உன்னுடைய அபிப்பிராயத்தில் சாரமுள்ள வாதங்களால் நிரப்பு; பிறகு எந்த தேவனுடைய கையிலாவது கொடு; அப்பொழுது அந்ததேவன் அவைகள் எல்லாம் தோற்றங்களென்றும் போலி நியாயங்களென்றும், அதன் கீழே இந்த சில வார்த்தைகளை எழுதுவார்.

---

**தெய்வ பரிபாலனம் நித்தியமானவைகளை மதிக்கிறது; நித்தியமான பொருள்களோடு இணங்குகிறவரையில் மாத்திரம் அநித்தியமான பொருள்களை மதிக்கிறது.**

214. தெய்வபரிபாலனம் நித்தியமான பொருள்களை மதிக்கிறதென்றும், நித்தியமான பொருள்களோடு அநித்தியமான

பொருள்கள் ஒன்ருகிற வரையில் மட்டும் அவைகளை ஆதரிக்கிற தென்றும், பின் வரும் ஒழுங்கில் நிச்சயப்படுத்தப்பட வேண்டும். I. அநித்தியமான பொருள்கள் கௌரவத்துக்கும் ஐசுவரியத்துக் கும், இவ்விதமாக உலகத்தில் மரியாதைகளுக்கும் லாபத்துக்கும், சம்பந்தம் காட்டுகின்றன. II. நித்தியமான பொருள்கள், சுவர்க்கத் தில் அன்பிற்கும் ஞானத்துக்கும், சேர்ந்த பரமார்த்த கௌரவங் களுக்கும் செல்வத்துக்கும், சம்பந்தம் காட்டுகின்றன. III. அநித் தியமான பொருள்களும் நித்தியமான பொருள்களும், மனிதனுல் பிரிக்கப்படுகின்றன; ஆனுல் ஆண்டவரால் அவைகள் சேர்க்கப் படுகின்றன. IV. அநித்தியமான பொருள்களும் நித்தியமான பொருள்களும் ஒன்றுபடுதல் ஆண்டவருடைய தெய்வபரிபாலன மாயிருக்கிறது.

215. I. **அநித்தியமான பொருள்கள், கௌரவங்களுக்கும் ஐசு வரியத்துக்கும், இவ்விதமாக உலகத்தில் மரியாதைகளுக்கும் லாபத்துக்கும், சம்பந்தம் காட்டுகின்றன.** அநித்தியமான பொருள் கள் அநேகமிருக்கின்றன; என்ருலும் அவைகளெல்லாம் கௌர வங்களுக்கும் ஐசுவரியத்துக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. அநித்தியமான பொருள்கள் என்பதால், காலக் கிரமத்தில் அழிந்து போவதும் அல்லது உலகத்தில் மனிதனுடைய உயி ரோடு மாத்திரம் நிற்பதுமான பொருள்கள் அருத்தம் கொள்ளப் படுகின்றன; ஆனுல், நித்தியமான பொருள்கள் என்பதால், அழிந்து போய், காலக்கிரமத்தில் நின்று விடாமல், இவ்விதமாக உலகத்தில் உயிரோடிருக்கிற வரையில் மட்டுமல்லாமலிருக்கிற பொருள்கள் அருத்தம் கொள்ளப்படுகின்றன. முன் சொல்லிய படி, எல்லா அநித்தியமான பொருள்களும், கௌரவங்களுக்கும் ஐசுவரியத்துக்கும் சம்பந்தப் பட்டிருப்பதால், பின் வருவதைத் தெரிந்துகொள்ளுதல் முக்கியமானது, அதாவது:—கௌரவங்க ளும் ஐசுவரியமும் என்னவென்பதும், அவைகள் எங்கே யிருந்து வருகின்றன வென்பதும்; அவைகளின் பொருட்டே அவைகளை நேசித்தலின் குணம் என்ன வென்பதும்; உபயோகங்களின் பொருட்டு அவைகளை நேசித்தலின் குணம் என்னவென்பதும்;

இந்த இரண்டு ஆசைகளும், நரகமும் சுவர்க்கமும் போல ஒன்றுக்கொன்று வேறு வேறானதென்பதும்; இந்த ஆசைகளுக்குள்ளிருக்கும் வித்தியாசம் மனிதனால் கஷ்டத்துடன் அறிந்துகொள்ளப்படுகிறதென்பதும், ஆனால் இவைகளில் ஒவ்வொன்றைப் பற்றியும் (2) தனித்தனியாய் பேசுவோம். முதலாவது. **கௌரவங்களும் ஐசுவரியமும் என்ன, அவைகள் எங்கிருந்து வருகின்றன.** கௌரவங்களும் ஐசுவரியமும் மிக்வும் பூர்வகாலத்தில், அவைகள் பின்னிட்டு படிப்படியானதற்கு முழுமையும் வேறாயிருந்தன. கௌரவங்கள் மிகவும் முந்திய காலங்களில், பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இருப்பதைப் போன்றதைத் தவிர வேறொன்றுமில்லாமலிருந்தது; அவைகள் மரியாதையும் வணக்கமும் நிறைந்த அன்பின் கௌரவங்களாயிருந்தன; அவர்களிடமிருந்து அவர்கள் பிறந்ததற்கல்லாமல், அது அவர்கள் ஆன்மாவின் பிறப்பாக இருந்தபடியினால், தானே பரமார்த்தமான இரண்டாவது பிறப்பாயிருக்கிற, அவர்களிடமிருந்து அடைந்த படிப்புக்காகவும் ஞானத்துக்காகவும், அது அப்படியிருந்தது. மிகவும் பூர்வகாலத்தில் ஒரே கௌரவமாக இது இருந்தது; ஏனென்றால், அக்காலத்தில் தேசத்தார்களும் குடும்பங்களும், வீட்டாரும், இக்காலத்தைப் போல, துரைத்தனத்துக் குட்படாமல், புறம்பாய் வசித்தார்கள். குடும்பத்து தகப்பனாரிடம்தான் அந்த கௌரவமிருந்தது. அந்த (3) காலங்கள் பூர்வீகர்களால் **பொன்காலங்கள்** என்று சொல்லப்பட்டன. ஆனால், அந்த காலங்களுக்குப் பின்பு, அந்த ஆசையின் தனிமையான சந்தோஷத்திலிருந்து அதிகாரம் செய்யவேண்டுமென்கிற ஆசைபடிப்படியாய் பிடித்துக்கொண்டது. அப்பொழுது அதேகாலத்தில், கீழ்ப்படியாதவர்களுக்கு விரோதமாய் விரோதமும் பகையும் வந்தபடியினால், தேசத்தார்களும் குடும்பங்களும், வீட்டார்களும், ஆவசியகத்தினால், கூட்டம் கூட்டங்களாகச்சேர்ந்துகொண்டு, முதலில் நியாயாதிபதி என்றும், பின்னிட்டு இராஜகுமாரன் என்றும், கடைசியில் அரசனென்றும் சக்கிரவர்த்தியென்று, தாங்கள் பெயரிட்ட ஒருவரை தங்களுக்கு மேல் ஏற்படுத்திக் கொண்டார்கள்; அப்பொழுதுகூட கோபுரங்களாலும், மேடுகளாலும், சுவர்களாலும் தாங்களே காப்பாற்றிக்கொள்ள

ஆரம்பித்தார்கள். சிரசிலிருந்து சரீரத்துக்குள் போல, நியாயாதிபதி, இராஜகுமாரன், அரசன், சக்கிரவர்த்தி இவர்களிலிருந்து, ஆதிபத்தியம் செய்யும் ஆசை அநேகருக்குள் தொத்துவியாதி போல் பரவியது; அதிலிருந்து கௌரவ அந்தஸ்துகளும், அவைகளை அனுசரித்து மரியாதைகளும், தோன்றின; இவைகளோடு, தன்னையே நேசித்தலும், தானே விவேகி எனும் அகங்காரமும் (4) தோன்றின. பண ஆசை விஷயத்திலும் அதே சம்பவித்தது. அதிக பூர்வீக காலத்தில், தேசத்தவர்களும் குடும்பங்களும், ஒருவரை விட்டு ஒருவர் வேறு வேறாக வசித்த காலத்தில், ஆடுமாடு மந்தைகளாலும், தங்களுக்கு ஆகாரம் கொடுத்த தங்களுடைய நிலங்களாலும், வயல்களாலும், தோட்டங்களாலும் தாங்களே சம்பாதித்துக் கொண்ட, உயிரோடிருக்க ஆவசியகமானவைகளைப் பெற்றிருக்கும் ஆசையைத் தவிர, செல்வத்தின் வேறு எந்த ஆசையுமில்லை. அவர்கள் வாழ்க்கைக்கு வேண்டியவைகளில், எல்லாவித உபயோகமான பொருள்களால் அலங்கரிக்கப்பட்ட அழகுள்ள வீடுகளும், உடுப்புகளும் அடங்கி யிருந்தன; பெற்றோர்களும், குழந்தைகளும், வீட்டிலுள்ள வேலைக்காரர்களும், வேலைக்காரிகளும், இவைகளை பார்த்துக்கொண்டும், அவசியமான (5) வேலையை செய்துகொண்டு மிருந்தார்கள். ஆனால், ஆதிபத்தியம் அடையும் ஆசைதோன்றி, இந்த பிரஜாதிபத்தியத்தை அழித்த பிறகு, தங்களுக்கு வேண்டியதற்கு மேல் செல்வத்தை வைத்திருக்கும் ஆசைகூட பிரவேசித்து, மற்ற எல்லாருடைய செல்வத்தையும் அனுபவிக்க அது விரும்பும்படியாக அவ்வளவு உயரம் வளர்ந்தது. இந்த இரண்டு ஆசைகளும், இரத்த சம்பந்தமுள்ள பந்துக்களைப் போலிருக்கின்றன; ஏனென்றால், எல்லா பொருள்களின் பேரிலும் அதிகாரம் செலுத்த விரும்புகிறவன், எல்லா பொருள்களையும் அனுபவிக்கவும் கூட விரும்புகிறான்; ஏனென்றால், இவ்விதமாக மற்றவர்கள் எல்லாம் வேலைக்காரர்களாகிறார்கள், அவர்கள் மட்டும் எஜமானர்களாகிறார்கள். தாங்களே ஏறிக்கொண்ட ஆண்டவரின் சிங்காசனத்துக்கு, சுவர்க்கத்தில் கூட தங்கள் அதிகாரத்தை உயர்த்திய பாப்பதிகாரத்திற்குள்ளிருக்கும் ஜனங்கள் விஷயத்தில், இது தெளிவாய்த் தோன்றுகிறது.

ஏனென்றால், முழுபூமியின் செல்வத்தை அடையக்கூட அவர்கள் நாடுகிறார்கள், தங்களுடைய பொக்கிஷ சாலையை முடிவின்றி (6) பெரிதாக்குகிறார்கள். இரண்டாவது: கௌரவத்தினுடைய வும் ஐசுவரியத்தினுடையவும் அவைகளின் பொருட்டே கொள்ளும் ஆசை என்ன குணமுடையதா யிருக்கிறது; கௌரவத்தினுடையவும் ஐசுவரியத்தினுடையவும், உபயோகங்கள் செய்யும்பொருட்டு கொள் ளும் ஆசை என்ன குணமுடையதா யிருக்கிறது. கௌரவங்களுக் காகவும் மரியாதைகளுக்காகவும், கௌரவங்களிடத்திலும் மரி யாதைகளிடத்தும் கொள்ளும் ஆசை, தன்னையே நேசித்தலா யிருக்கிறது,—சரியாய் பார்த்தால், தன்னையே நேசித்தலிலிருந்து அதிகாரம் செலுத்த கொள்ளும் ஆசையாய் அது இருக்கிறது; ஐசுவரியத்தின் பொருட்டும் செல்வத்தின் பொருட்டும் ஐசுவரி யத்தினிடத்தும் செல்வத்தினிடத்தும் கொள்ளும் ஆசை உல கத்தை நேசித்தலாயிருக்கிறது,—சரியாய்ப்பார்த்தால், எந்த உபா யத்திலாவது மற்றவர்களின் பொருள்களை அனுபவிக்கும் ஆசை யாயிருக்கிறது. ஆனால், உபயோகங்கள் செய்யும் பொருட்டு கௌரவங்களையும் ஐசுவரியங்களையும் நாடுதல், அயலானை நேசித் தலாயிருக்கிற, உபயோகங்களை நேசித்தலா யிருக்கிறது; ஏனென் றால், மனிதன் எதற்காக செயல்படுகிறானோ அது அவன் செயல்படு கிற நோக்கமா யிருக்கிறது, அது முதன்மையானது அல்லது மூல மானது; மற்றவைகள் எல்லாம் வழிவகைகளாகவும், இரண்டா (7)வதானதுமாக யிருக்கின்றன. தன்னையே நேசித்தலாயிருக்கிற (சரியாய்ப் பார்த்தால், தன்னையே நேசித்தலிலிருந்து அதிகா ரத்தை நேசிக்கிற) கௌரவங்களையும் மரியாதைகளையும் அவை கள் பொருட்டே நேசித்தல், தனது சொந்த தன்மையை நேசித்த லாயிருக்கிறது, மனிதனுடைய சொந்த தனது தன்மை எல்லாம் தீமையா யிருக்கிறது. ஆகையினால், மனிதனானவன் எல்லா தீமை களிலும் பிறந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது, அவன் பரம்பரை யாய் உடைத்தாயிருப்பது, தீமையைத் தவிர வேறொன்று மில்லை என்று சொல்லப்படுகிறது. மனிதனுடன் பரம்பரையா யிருப்பது அவன் இருப்பதும், தன்னையே நேசித்தலினாலும், தன்னையே நேசித்தலிலிருந்து அதிகாரம் செய்யவேண்டுமென்கிற ஆசையின்

மூலமாயும் அவன் பிரவேசிக்கிற அவனுடைய சொந்த தன்மையா யிருக்கிறது; ஏனென்றால் அந்த ஆசையைக் கொண்ட மனிதன், தன்னையே தவிர வேறொன்றையும் மதிக்கிறதில்லை; ஆனபடியி னால் தன்னுடைய சிந்தனைகளையும் ஆசைகளையும் தனது தன் மையிலேயே அமிழ்த்துகிறான். அதனால் தான் தன்னையே நேசித் தலென்பதில் தீமை செய்ய வேண்டுமென்கிற ஆசையிருக்கிறது. அந்த மனிதன் அயலானை நேசிக்காமல் தன்னையே மாத்திரம் நேசிக்கிறானென்பது காரணமா யிருக்கிறது; தன்னையே மட்டும் நேசிக்கிறவன், மற்றவர்கள் தனக்கு வெளியே யிருப்பவர்களாக வும், இழிவானவர்களாகவும், அற்பர்களாகவும் நினைத்து, அவர்க ளுக்கு தீங்கு செய்வதில் யாதொரு குற்றமும் இல்லை என்று எடுத் (8)துக்கொண்டு, தன்னோடு ஒப்பிட்டு அவர்களை அலக்ஷியம் செய் கிறான். இதனால் தான் தன்னையே நேசித்தலி லிருந்து, ஆதிபத்தி யம் செய்ய ஆசையுள்ளவன், தன்னுடைய அயலானை வஞ்சித்த லும், அவனுடைய மனைவியுடன் விபசாரம் செய்தலும், அவனை நிந்தித்தலும், சாகிறவரையில்கூட அவன்பேரில் சலஞ் சாதித்த லும், அவன் பேரில் அதிக கோபம் கொள்ளலும், இவை போன் றவைகளைச் செய்தல் குற்றமில்லை என்று நினைக்கிறான். தான் சேர்க்கப்பட்டிருப்பதும், அதனால் வழி காட்டப்படுவதுமான பேயே, தன்னையே நேசித்தலிலிருந்து அதிகாரத்தில் ஆசை கொள்ளுவதை விட வேறொன்றுமில்லை என்கிற சங்கதியினால், மனிதனுக்கு இந்த குணம் உண்டாகிறது; பேயினால் அதாவது நரகத்தினால் வழி காட்டப் படுகிறவன், அந்த தீமைகளிலெல் லாம் நடத்தப்படுகிறான்; மேலும், அந்த தீமைகளின் சந்தோஷங் கள் மூலமாய் அவன் தொடர்ச்சியாய் நடத்தப் படுகிறான். அத னால்தான் நரகத்தி லிருப்பவர்கள் எல்லாரும், எல்லாருக்கும் தீங்கு செய்ய விரும்புகிறார்கள்; ஆனால், சுவர்க்கத்தி லிருக்கிறவர் கள் எல்லாரும், எல்லாருக்கும் நன்மை செய்ய விரும்புகிறார்கள். அந்த எதிரிடையினால், மனிதனிருக்கப்பட்ட நடுநிலைமை ஏற் பட்டு யிருக்கிறது; அதில், அவன் நரகத்துக்காவது சுவர்க்கத்துக் காவது திரும்ப சக்தியுள்ளவனா யிருக்க, சமநிலையில் போல் இருக்கிறான்; தன்னையே நேசித்தலின் தீமைகளுக்கு அனுகூலமா

யிருக்கிறவரையில், நரகம் பக்கம் திரும்புகிறுன்; ஆனுல், அந்த தீமைகளைத் தன்னிடமே யிருந்து அவன் நீக்குகிற அளவு, சுவர்க் (9)கம் பக்கம் திரும்புகிறுன். தன்னையே நேசித்தலிலிருந்து அதிகாரத்தினிடத்து கொள்ளும் ஆசையின் இன்பம் என்ன குண முடையது, எவ்வளவு பெரியதென்று உணர, எனக்கு அருள் செய்யப்பட்டது. அதை தெரிந்துகொள்ளும் பொருட்டு அதற் குள் நான் விடப்பட்டேன்; அது, உலகத்திலுள்ள எல்லா இன் பங்களையும் மிஞ்சும்படியானதாக யிருந்தது; அதின் உள்ளுக் குள்ளானவைகளிலிருந்து அதன் இறுதியானவைகள் வரையில் முழு மனதின் ஒரு சந்தோஷமா யிருந்தது; ஆனுல், அது சரீரத் தில், மார்பில் எதோ ஒரு இதமானதும் இன்பமுள்ளதுமாகிய வீக்கம் போல் மாத்திரம் உணரப்பட்டது; அந்த சந்தோஷத்தி லிருந்து தலையூற்றிலிருந்து போல, விபசாரம், சலஞ்சாதித்தல், மோசம், தெய்வ சிந்தனை, பொதுவாக தீங்கு செய்தல் இவை போன்ற எல்லா தீமைகளின் இன்பங்களும் பெருகுகிறதென்று உணரக்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது. எந்த உபாயத்தி லாவது, மற்றவர்களுடைய சொத்தை அனுபவிக்கும் ஆசையிலும், அதிலிருந்து வரும் மோகங்களிலுமிருந்தும் அதைப்போன்ற இன்பம் கூட இருக்கிறது; என்றுலும், இந்த ஆசை தன்னையே நேசிக்கும் ஆசையோடு சேர்க்கப்பட்டால் ஒழிய அந்த அளவு இல்லை. ஆனுல், அவைகள் பொருட்டல்லாமல், உபயோகங்க ளின் நிமித்தம் வைக்கப்பட்டிருக்கும் கௌரவங்கள் விஷயத் திலும் ஐசுவரியம் விஷயத்திலும், கௌரவத்தினிடத்தும் ஐசு வரியத்தினிடத்தும் ஆசையல்லாமல், கௌரவங்களும் ஐசுவரி யமும் வழிவகைகளாக உபயோகப்படுகிற உபயோகங்களிடத்து கொள்ளும் ஆசையாயிருக்கிறது. இந்த ஆசை சுவர்க்கத்தைச் சேர்ந்தது; பின்வருவதில் இந்த விஷயத்தைப்பற்றி அதிகம்பேச (10)லாம். மூன்றுவது: **இந்த இரண்டு ஆசைகளும் நரகமும் சுவர்க்கமும்போல ஒன்றுக்கொன்று வேறுவேறுனதா யிருக்கிறது என் பது** சற்றுமுன் சொன்னதிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது. தன்னையே நேசித்தலிலிருந்து ஆதிபத்தியம் செய்யும் ஆசையி லிருப்பவர்கள், அவர்கள் யாராயிருந்தாலும், பெரியவர்களா

னும் சிறியவர்களானலும், ஆன்மா சம்பந்தப்பட்டவரை யில் நரகத்திலிருக்கிறர்க ளென்பதையும், அந்த ஆசையைக் கொண்டவர்கள் தீமைகளை செய்யாவிட்டாலும், தங்கள் ஆன்மா வில் ஒப்புக் கொள்ளக் கூடியதென்று அவைகளை நம்பி, அதனல் கௌரவமும் மரியாதையும், சட்டத்திற்கு பயப்படுதலும் தடுக் காதபோது, சரீரத்தில் செய்கிற எல்லா தீமைகளிடத்தும் ஆசை கொள்ளுகிருர்கள் என்பதையும், இன்னும் அதிகமாய், தன்னையே நேசித்தலிலிருந்து அதிகாரம் செலுத்த கொள்ளும் ஆசையானது உள்ளுக்குள்ளாய் தனக்குள்ளேயே கடவுளுக்கு விரோதமாயும், அதனல், திருச்சபைக்குச் சேர்ந்த தெய்வீக விஷயங்களுக்கும், முக்கியமாய் ஆண்டவருக்கு விரோதமாயும், அருவருப்பை மறைக் கிறதையும், அதனுடன் சேர்க்கிறேன். கடவுள் ஒத்துக்கொள்ளப் பட்டால், வாயினல் மட்டும் அப்படிச் செய்யப்படுகிறது; திருச் சபையின் தெய்வீக விஷயங்கள் ஒத்துக்கொள்ளப் பட்டால், மரி யாதையை இழந்து விடுவோமென்கிற பயத்தில் செய்யப்படுகிறது. இந்த ஆசையானது உள்ளுக்குள்ளாய் ஆண்டவருக்கு விரோத மாய் அருவருப்பை ஏன் மறைக்கிறது என்பதற்குக் காரணம், அது தன்னையே மாத்திரம் தொழுது வணங்குகிற படியினல், அதற்குள் உள்ளுக்குள்ளாய் கடவுளாயிருக்க விருப்பம் இருக்கி றது என்பதாயிருக்கிறது. இதனல்தான் எவனுவது ஒருவன் அதை அதற்கு தெய்வீக ஞானம் இருப்பதாகவும், உலகத்துக்கு (11) கடவுளென்றும் சொல்லுகிற அளவு கௌரவப்படுத்தினல், அது அவனை மனப்பூர்வமாய் நேசிக்கிறது. உபயோகங்களின் பொருட்டு கௌரவங்களையும் ஐசுவரியத்தையும் நேசித்தல் விஷ யத்தில் அது வேறுவிதமா யிருக்கிறது; முன் சொல்லியபடி, அது அயலானை நேசித்தலோடு ஒன்ருயிருப்பதால், இந்த அன்பு சுவர்க்கத்தைச் சேர்ந்ததா யிருக்கிறது. உபயோகங்கள் என்ப தால் நன்மைகள் என்று அருத்தம் கொள்ளப்படுகின்றன. ஆகையினல் உபயோகமானவைகளைச்செய்தல் என்பதால், நன் மைகளைச் செய்தல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது; உபயோ கங்களைச் செய்தல் அல்லது நல்லவைகளைச் செய்தல் என்பதால் மற்றவர்களுக்கு ஊழியம் செய்தலும், அவர்களுக்கு உபசாரம்

செய்தலும், என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. இதைச் செய்கிறவர்களுக்குக் கௌரவமும் செல்வமும் இருந்தபோதிலும், இவைகளை உபயோகமானவைகளைசெய்யவும், இவ்விதமாக ஊழியஞ்செய்யவும், உபசாரம் செய்யவும் வழி வகைகளென்றும், அவர்கள் எண்ணுகிறார்கள். ஆண்டவரின் இந்த வார்த்தைகளால் அவ்விதமானவர்கள் கருதப்படுகின்றன. "உங்களில் எவனாகிலும் பெரியவனாயிருக்க விரும்பினால், அவன் உங்களுக்குப் பணிவிடைக்காரனாயிருக்கக்கடவன்; உங்களில் எவனாகிலும் முதன்மையானவனாயிருக்க விரும்பினால், அவன் உங்களுக்கு ஊழியக்காரனா யிருக்கக்கடவன்" (மத்தே. XX. 26-27). சுவர்க்கத்தில் ஆதிபத்தியம் கடவுளால் நம்பிக்கொடுக்கப்பட்டவர்கள்,இவர்களாகக் கூடயிருக்கிறார்கள். ஏனென்றால், அவர்களுக்கு ஆதிபத்தியம் என்பது உபயோகமானவைகளை அல்லது நன்மையானவைகளைச் செய்யவும் இவ்விதமாக, ஊழியம் செய்யவும் வழிவகையா யிருக்கிறது; உபயோகங்கள் அல்லது நன்மைகள் நோக்கங்களாகவும் அல்லது, ஆசைகளாகவும் இருக்கும்போது, எல்லா நன்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், அவர்கள் அதிகாரம் செலுத்தாமல் (12)ஆண்டவர்தான் அப்படிச்செய்கிறார். நான்காவது: **இந்த ஆசைகளுக்குள்ளுள்ள வித்தியாசம், மனிதனால் கஷ்டத்துடன் தெரிந்து கொள்ளப்படுகிறது.** கௌரவமும் செல்வமும் உள்ளவர்களில் அநேகர் கூட உபயோகமானவைகளைச் செய்கிறபடியினால் இது இப்படியிருக்கிறது; ஆனால், அதை அவர்கள் தங்களுக்கே ஆகவா அல்லது உபயோகங்கள் பொருட்டா, செய்கிறோமென்று அவர்களுக்குத் தெரியாது. தன்னை நேசித்தலிலும் உலகத்தை நேசித்தலிலும் இல்லாதவர்கள் விஷயத்தில் விட, தன்னை நேசித்தலிலும் உலகத்தை நேசித்தலிலும், உபயோகமானவைகளைச்செய்வதில் அதிக ஆசையும் உற்சாகமுமிருப்பதினால், அவர்களுக்கு இன்னும் குறைவாய்த்தான் தெரியும்; ஆனால், பின் கூறியவர்கள் உபயோகங்களை கீர்த்திக்கும் அல்லது லாபத்திற்கும், இவ்விதமாக தங்களுக்கே ஆகச் செய்கிறார்கள்; ஆனால், உபயோகங்கள் பொருட்டு உபயோகங்களை செய்கிறவர்களும், அல்லது நன்மைகளின் பொருட்டு நன்மைகளை செய்கிறவர்களும் தங்களிடமிருந்தே அவைகளைச் செய்கிறதில்லை,

(13) ஆண்டவரிடமிருந்து செய்கிறார்கள். மனிதனுக்கு தான் பேயினால் நடத்தப்படுவதும் அல்லது ஆண்டவரால் நடத்தப்படுவதும் தெரியாதபடியினால், அவனுக்கு அவைகளுக்குள்ள வித்தியாசம் கஷ்டத்துடன் தெரியும். பேயினால் நடத்தப்படுகிறவன், உபயோகங்களைத் தனக்கேயாகவும் உலகத்துக்கேயாகவும் செய்கிறான்; ஆனால், ஆண்டவரால் நடத்தப்படுகிறவன், உபயோகங்களை ஆண்டவருக்காகவும் சுவர்க்கத்துக்காகவும் செய்கிறான்; தீமைகளைப் பாவங்களாகத் தள்ளுகிற எல்லாரும், ஆண்டவரிடமிருந்து உபயோகங்களைச் செய்கிறார்கள். ஆனால், தீமைகளை பாவங்களாகத் தள்ளாதவர்கள் எல்லாரும் உபயோகங்களை பேயினிடமிருந்து செய்கிறார்கள்; ஏனென்றால், தீமை என்பது பேய், உபயோகம் அல்லது நன்மை என்பது ஆண்டவர். வேறு வழியில் இல்லாமல் இந்த வழியில் தான் அந்த வித்தியாசம் தெரிந்துகொள்ளப்படுகிறது. புறம்பான உருவத்தில், அந்த இரண்டும் ஒரே மாதிரி காணப்படுகின்றன; ஆனால், அந்தரங்க உருவத்தில் அவைகள் முழுமையும் வேறு பாடுள்ளவைகளா யிருக்கின்றன; ஒன்று உள்ளே களிம்புள்ள பொன் போலிருக்கிறது, மற்றொன்று உள்ளே சுத்தமான பொன்னிருக்கும் பொன் போலிருக்கிறது. தூசி அல்லது மண் தைலத்தை தனக்குள் அடக்கம் செய்துக் கொண்டிருக்கும் வர்ணம் பூசிய மெழுகாயிருக்கையில், புறம்பான உருவத்தில் மரத்திலிருந்து அடுத்த பழத்தைப் போல் தோன்றுகிற செயற்கையான பழத்தைப்போல் ஒன்று இருக்கிறது; மற்றொன்று தனக்குள் விதைகளிருக்கிற சுவையிலும் வாசனையிலும் இன்பத்தை தரும் கம்பீரமான பழத்தைப் போலிருக்கிறது.

216. II. **நித்தியமானவைகள் சுவர்க்கத்தில் அன்புக்கும் ஞானத்துக்கும் சேர்ந்த பரமார்த்த கௌரவத்துக்கும் செல்வத்துக்கும் சம்பந்தப் பட்டிருக்கின்றன.** தீமையின் மோகங்களின் இன்பங்களாய் கூட இருக்கிற, தன்னையே நேசித்தலின் இன்பங்கள், ஸ்தூல மனிதனால் நன்மை என்று சொல்லப்படுகிற படியினாலும், அவன் அவைகளை நன்மையானதாகக் கூட உறுதிப்படுத்துகிற படியினாலும், கௌரவத்தையும் செல்வத்தையும் தெய்வீக ஆசீர்வாதங்க

ளென்று, அவன் சொல்லுகிறான். ஆனால், இந்த ஸ்தூல மனிதன் நல்லவர்களைப் போல கெட்டவர்களும், கௌரவங்களுக்கு உயர்த் தப்பட்டு செல்வத்துக்குத் தள்ளப் படுகிறதைப் பார்க்கும்போதும், இன்னும் அதிகமாய், நல்லவர்கள் அலட்சியம் செய்யப்பட்டு வறுமை யிலிருப்பதையும், கெட்டவர்கள் பிரதாபத்திலும் செல்வத்திலும் இருப்பதையும் அவன் பார்க்கும்போதும், இது ஏன் இப்படி யிருக்கிறது? அது 'தெய்வபரிபாலனத்தினால் உண்டாயிருக்கமுடியாது, ஏனென்றால், அது எல்லாவற்றையும் ஆளும் பட்சத்தில், நல்லவர்கள் மேல் கௌரவத்தையும் ஐசுவரியத்தையும் குவித்து, கெட்டவர்களை தரித்திரத்தினாலும் இகழ்ச்சியினாலும் துன்பப்படுத்தி, இவ்விதமாக கெட்டவர்களை ஒரு கடவுளும் ஒரு தெய்வபரிபாலனமும் இருப்பதாக ஒத்துக்கொள்ள செலுத்தும் (2) என்று அவன் தனக்குள்ளே நினைத்துக் கொள்ளுகிறான். ஆனால், பரமார்த்த மனிதனால் தெளிவிக்கப் பட்டாலொழிய அதாவது அதே காலத்தில் அவன் பரமார்த்தமா யிருந்தாலொழிய, ஸ்தூல மனிதன், கௌரவங்களும் ஐசுவரியமும் ஆசீர்வாதங்களாகவும், மேலும் சாபங்களாகவும் இருக்கக் கூடுமென்றும், அவைகள் வரங்களா யிருக்கும்போது, அவைகள் கடவுளிடமிருந்து வருகின்றனவென்றும், சாபங்களா யிருக்கும்போது, பேயினிடமிருந்து வருகின்றனவென்றும் அறிந்துகொள்ளுகிறதில்லை. கௌரவங்களும் ஐசுவரியமும் பேயினால்கூட கொடுக்கப் படுகின்றனவென்று தெரிந்திருக்கிறது; ஏனென்றால், இதனால் தான் அதற்கு உலக இராஜகுமாரன் என்று சொல்லப்படுகிறது. கௌரவங்களும் ஐசுவரியமும் எப்பொழுது வரங்களென்றும், எப்பொழுது அவைகள் சாபங்களென்றும் தெரியாதபடியினால், பின்வரும் ஒழுங்கில் அது சொல்லப்பட வேண்டும்:—I. கௌரவங்களும் ஐசுவரியமும் வரங்களா யிருக்கின்றன, மேலும், அவைகள் சாபங்களாயு மிருக்கின்றன. II. கௌரவங்களும் ஐசுவரியமும், வரங்களா யிருக்கும்போது, பரமார்த்தமாயும் நித்தியமாயு மிருக்கின்றன; ஆனால் அவைகள் சாபங்களா யிருக்கும்போது, அநித்தியமானதாயும் நிலையற்றதாயு மிருக்கின்றன. III. ஆசீர்வாதங்களாக இருப்பவைகளை நோக்குமிடத்து, சாபங்களா யிருக்

கிற கௌரவங்களும் ஐசுவரியமும், எல்லாவற்றிற்கும் சூனியம் போலவும், தன்னில்தானே ஒன்றுயிருப்பதற்கு தன்னில் தானே ஒன்றுமாய் இல்லாதது போலவுமிருக்கின்றன.

217. இந்த மூன்று விஷயங்கள் இப்பொழுது பிரத்தியேகமாய்த் தெளிவாக்கப்படவேண்டும். முதலாவது: **கௌரவங்களும் ஐசுவரியமும் ஆசீர்வாதங்களாயுமிருக்கின்றன, மேலும், அவைகள் சாபங்களாயுமிருக்கின்றன.** தெய்வபக்தியுள்ளவர்களும், அப்படி யில்லாதவர்களுமாகிய இருவகையாரும், நீதிமான்களும் அப்படி யில்லாதவர்களுமாகிய இருவகையாரும், அதாவது நல்லவர்களும் கெட்டவர்களுமாகிய இருவகையாரும், கௌரவங்களிலும் ஐசுவரியத்திலு மிருக்கிறார்களென்று சாதாரண அனுபவம் சாட்சியிடுகிறது; அப்படி யிருந்தாலும், தெய்வ பக்தியில்லாதவர்களும் அநியாயம் செய்பவர்களும் அதாவது துஷ்டர்கள் நரகத்துக்கும், தெய்வபக்தி யுள்ளவர்களும் நீதிமான்களும் அதாவது நல்லவர்கள் சுவர்க்கத்துக்கும், வருகிறார்களென்பதை யாராலும் மறுக்க முடியாது. இது உண்மையா யிருப்பதினால், கௌரவங்களும் ஐசுவரியங்களும் அல்லது மரியாதைகளும் செல்வமும், வரங்களாயும் அல்லது சாபங்களாயும் இருக்கின்றனவென்றும், அவைகள் நல்லவர்களுக்கு வரங்களாகவும் கெட்டவர்களுக்குச் சாபங்களாயு மிருக்கின்றனவென்றும் ஏற்படுகிறது. 1758ஹூதில் **லண்டன்** நகரத்தில் பிரசுரித்த **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் (பி. 357-365), பணக்காரர்களும் ஏழைகளுமாகிய இருவகையாரும், பெரியவர்களும் சிறியவர்களுமாகிய இருவகையாரும் சுவர்க்கத்திலும் நரகத்திலும் கூட இருக்கிறார்களென்று ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது; கௌரவங்களும் ஐசுவரியமும் இப்பொழுது சுவர்க்கத்தி லிருப்பவர்களுக்கு உலகத்தில் வரங்களா யிருந்ததாகவும், இப்பொழுது நரகத்திலிருப்பவர்களுக்கு உலகத்(2)தில் அவைகள் சாபங்களா யிருந்தனவென்றும் இதிலிருந்து வெளிப்படையாகிறது. ஆனால் எக்காரணத்தினால் அவைகள் வரங்களென்பதும், எக்காரணத்தினால் அவைகள் சாபங்கள் என்பதும், அந்த விஷயத்தைப்பற்றி விவேகமாக எவனாவது ஒருவன்

கொஞ்சம்மட்டும் நினைத்தால், அவன் அறிந்து கொள்ளுவான்; அதாவது, 'அவைகளில் மனதை வைக்காமலிருக்கிறவர்களுக்கு அவைகள் வரங்களென்றும், அவைகளில் மனதை வைப்பவர்களுக்கு சாபங்களென்றும் அவன் தெரிந்துகொள்ளலாம். அவைகளில் மனதை வைப்பது என்பது அவைகளில் தன்னையே நேசித்தலா யிருக்கிறது; அவைகளில் மனதை வைக்காதிருத்தல் என்பது, அவைகளில் தன்னை யில்லாமல், உபயோகங்களை நேசித்தலா யிருக்கிறது. இந்த இரண்டு ஆசைகளுக்குள்ளும் உள்ள வித்தியாசத்தின் சுபாவமும் குணமும் மேலே (பி. 215) சொல்லப்பட்டிருக்கிறது; அதனுடன், கௌரவங்களும் செல்வமும் சிலரை துன்மார்க்கத்திற்கு திருப்புகிற தென்பதையும், மற்றவர்களை அப்படித் திருப்புகிறதில்லை என்பதையும் சேர்க்கப்படலாம். தன்னையே நேசித்தலா யிருக்கிற மனிதனுடைய சுயதன்மையின் ஆசைகளை அவைகள் தூண்டும்போது, அவைகள் அவர்களை துன்மார்க்கத்திற்குத் திருப்புகின்றன; பேயென்று சொல்லப்படுகிற நரகத்தின் ஆசை இதுதானென்றுகூட மேலே சொல்லப்பட்டது; ஆனால், அவைகள் இந்த ஆசையைத் தூண்டாவிட்டால், துன்மார்க்கத்திற்குத் திரும்புகிறதில்லை. (3) நல்லவர்களைப்போல், கெட்டவர்களும் ஏன் கௌரவங்களுக்கு உயர்த்தப்பட்டு, ஐசுவரியத்துக்குக் கொண்டுவரப் படுகிறார்களென்பதற்குக் காரணம், கெட்டவர்கள் நல்லவர்களோடு சமமாய் உபயோகங்களைச் செய்கிறார்கள் என்பதாயிருக்கிறது; ஆனால் கெட்டவர்கள் தங்கள் சரீரத்துக்கே மரியாதைகளும் லாபமும் உண்டாகுவதற்காகவும், நல்லவர்கள் தாங்கள் கஷ்டப்படுகிற பொருளின் மரியாதைக்கும் லாபத்துக்கும் அவைகளைச் செய்கிறார்கள். நல்லவர்கள் அந்த பொருளின் மரியாதைகளையும் லாபத்தையும் முதற்காரணங்களாகவும், தங்கள் சரீரத்துக்கு அவைகள் துணை காரணங்களாகவும் மதிக்கிறார்கள். ஆனால், கெட்டவர்கள் தங்கள் சரீரத்துக்கு வரும் மரியாதைகளும் லாபங்களும் முதற்காரணங்களாகவும், அந்த பொருளுக்கே அவைகள் துணைக்காரணங்களாவும் மதிக்கிறார்கள்; ஆனால், அந்த மனிதனும், அவன் தொழிலும், மரியாதையும், தான் உபசாரம்செய்கிற பொருளின் பொருட்டென்றும், அதற்கு

எதிரிடையாக அப்படியில்லையென்றும் யார் அறிந்துகொள்ளுகிறதில்லை? நியாயம் செய்வதன் பொருட்டு நியாயாதிபதியும், பொது நன்மைக்காக அதிகாரியும், இராச்சியத்திற்காக அரசனும் இருக்கிறதாகவும், அதற்கு எதிரிடையாய் அப்படி இல்லை யென்றும் யார் அறிந்து கொள்ளுகிறதில்லை? ஆகையினால், ஒவ்வொருவனும் ஒரு இராச்சியத்தின் சட்டங்களை அனுசரித்து, தான் செய்யவேண்டிய வேலையின் கௌரவத்திற்குத் தக்கபடி கௌரவத்திலும் மரியாதையிலுமிருக்கிறானென்றும், வித்தியாசமானது முதற்காரணத்துக்கும் துணைக்காரணத்துக்கும் உள்ள வித்தியாசம்போலிருக்கிறதென்றும் யார் அறிந்துகொள்ளுகிறதில்லை? அந்த பொருளுக்குச் சேர்ந்த மரியாதையை தனக்கே அல்லது தன் சரீரத்துக்கே ஆரோபித்துக்கொள்ளுகிறவன் சூக்கும உலகத்தில் சரீரம் (4) தலைகீழாயும், கால்கள் மேலாயும், தலை கீழேயும் காண்பிக்கப்படுகிறான். இரண்டாவது: **கௌரவங்களும் செல்வமும் ஆசீர்வாதங்களாயிருக்கும்போது பரமார்த்தமானதாயும் நித்தியமானதாயுமிருக்கின்றன; சாபங்களாயிருக்கும்போது, அநித்தியமானதாயும் நிலையற்றதாயுமிருக்கின்றன.** சுவர்க்கத்தில் ராஜரீகமும் அதனால் அரசாட்சிகளும் உத்தியோகங்களுமிருக்கிறபடியினால் உலகத்தைப்போல் சுவர்க்கத்திலும் கௌரவங்களும் செல்வமுமிருக்கின்றன; அங்கே கூட்டங்களும் இனங்களுமிருப்பதினால் வர்த்தகமும், அதனால் செல்வமும் இருக்கின்றன. சர்வவியாபகமான சுவர்க்கம், ஒன்று அதிசூக்கும சுவர்க்க இராச்சியம் என்று சொல்லப்படுவதும், மற்றொன்று சூக்கும சுவர்க்க இராச்சியம் என்று சொல்லப்படுவதுமான, இரண்டு இராச்சியங்களாகவும், ஒவ்வொரு இராஜ்யமும் பெரியதும் சிரியதுமான கணக்கற்ற கூட்டங்களாகவும், வகையறுக்கப்பட்டிருக்கின்றன; அவைகள் எல்லாம், அவைகளிருக்கும் எல்லாரோடும் அன்பின் வித்தியாசங்களுக்கு தக்கபடியும், அதிலிருந்து ஞானத்தின் வித்தியாசங்களுக்கு தக்கபடியும்,ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கின்றன; அதிசூக்குமசுவர்க்கத்து இராஜ்யத்தின் கூட்டங்கள் ஆண்டவரிடத்து அன்பாயிருக்கிற அதி சூக்கும அன்பின் வித்தியாசங்களுக்கு தக்கபடியும் சூக்கும சுவர்க்கத்து கூட்டங்கள் அயலானிடத்து அன்பாயிருக்கிற சூக்கும அன்பின் வித்தியாசங்

களுக்கு தக்கபடியும், ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்றன. அவ்வித கூட்டங்களிலிருக்கிறபடியினாலும், அவைகளில் இருக்கப்பட்டவர்கள் உலகத்தில் மனிதர்களாயிருந்து, அதனால் உலகத்தில் தங்களுக்கு இருந்த ஆசைகளை தங்களுக்குள்ளேயே வைத்திருக்கிறபடியினாலும், (இப்பொழுது அவைகள் சூக்குமமாயிருக்கின்றனவென்பதும், சூக்கும சுவர்க்க இராச்சியத்தில் கௌரவங்களும் செல்வமும் சூக்குமமான தென்றும், அதிசூக்கும சுவர்க்க இராச்சியத்தில் அதிசூக்கும மென்பதுமாகிய வித்தியாசத்துடன்) மற்றவர்களைவிட அதிக பெரிய அன்பும் ஞானமும் உடையவர்கள், அதிக பெரிய கௌரவங்களும் செல்வமும் உடைத்தா யிருக்கிறார்களென்று ஏற்படுகிறது; கௌரவங்களும் செல்வமும் உலகத்தில் ஆசீர்வாதங்
(5)களா யிருந்தவர்கள் அவர்கள்தான்; இதிலிருந்து பரமார்த்த கௌரவங்களுடையவும் செல்வத்தினுடையவும் சுபாவம் அதாவது அவைகள் சரீரத்துக்கு அல்லாமல் நிலைமைக்கு சேர்ந்ததென்பது தெரிந்து கொள்ளப்படலாம். அங்கே கௌரவமாய் இருக்கப்பட்டவர்கள், பூமியின்பேரில் அரசர்களுக்கு இருப்பதுபோல், மகத்துவத்திலும் மாட்சிமையிலும் நிஜமாக இருக்கிறார்கள்; என்றாலும் அந்த கௌரவத்தையே ஒரு பொருளாக மதிக்காமல், தாங்கள் நடத்தவும் நிறைவேற்றவும் உடன்பட்ட உபயோகங்களை அப்படி மதிக்கிறார்கள். நிஜமாகவே தாங்கள் கௌரவத்துக்கு சேர்ந்த மரியாதைகளை அவர்கள் அடைகிறார்கள்; ஆனால் அவர்கள் அவைகளைத் தங்களுக்கே ஆரோபிக்காமல் உபயோகங்களுக்கு ஆரோபிக்கிறார்கள்; எல்லா உபயோகங்களும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், அவைகள் உற்பத்தியான ஆண்டவருக்கு அவைகளை ஆரோபிக்கிறார்கள். ஆகையினால் நித்தியமாயிருக்கிற பரமார்த்த
(6)கௌரவங்களும் செல்வமும் இவ்விதமா யிருக்கின்றன. ஆனால், உலகத்தில் கௌரவங்களும் செல்வமும் சாபங்களாயிருந்தவர்கள் விஷயத்தில் விஷயம் வேறுமாதிரி. இவர்கள் அவைகளை உபயோகங்களுக் கல்லாமல் தங்களுக்கே ஆரோபித்தபடியினாலும், தங்களுடைய கௌரவத்துக்கும் மகிமைக்கும் உபயோகப்படும் மட்டும் உபயோகங்களை உபயோகங்களாக மதித்து, அவைகள் தங்களை ஆளவிரும்பாமல், அவைகளைத் தாங்கள் ஆள விரும்பினபடி

யினுலும், அவர்கள் அதனுல் நரகத்தில் இருந்துகொண்டு அலட்சியம் செய்யப்பட்டு துக்கத்துக்குள்ளாய் அங்கே இழிவான அடிமைகளா யிருக்கிருர்கள். ஆகையினுல் இந்த கௌரவங்களும் செல்வமும் அழிந்துபோகிற படியினுல், அவைகள் அநித்திய மானதென்றும் நிலையற்றதென்றும் சொல்லப்படுகின்றன. இந்த இரண்டு வகுப்பினரையும் பற்றி ஆண்டவர் பின்வருமாறு கற்பிக்கிருர்: “பூமியிலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்க வேண்டாம்; இங்கே பூச்சியும் துருவும் அவைகளைக் கெடுக்கும்; இங்கே திருடரும் கன்னமிட்டுத் திருடுவார்கள்; பரலோகத்திலே உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்துவையுங்கள்; அங்கே பூச்சியாவது துருவாவது கெடுக்கிறதும் இல்லை; அங்கே திருடர் கன்னமிட்டுத் திருடுகிறதுமில்லை; உங்கள் பொக்கிஷம் எங்கேயிருக்கிறதோ அங்கே உங்கள் இருதயமும் இருக்கும்” (மத்தேVI. 19-21). (7) மூன்ருவது: ஆசீர் வாதங்களா யிருக்கிறவைகளை நோக்குமிடத்து சாபங்களா யிருக்கிற கௌரவங்களும் செல்வமும் சூனியம் ஒவ்வொன்றுக்கும் இருப்பதுபோ லிருக்கிறது; அல்லது தானே இல்லாதது, தானே இருப்பதற்கு இருப்பதுபோ லிருக்கிறது. ஒன்றுமாகாமல் அழிந்து போகப்பட்டது ஒவ்வொன்றும் உள்ளுக்குள்ளாய் தன்னில் தானே சூனியமாயிருக்கிறது; நிஜமாகவே, பார்வைக்கு அது ஏதோ ஒன்ருகிறது, நிஜமாகவே அது அதிகமாகத் தோன்றுகிறது, சிலருக்கு அது இருக்கும் வரையில் எல்லாமாகத் தோன்றுகிறது. ஆனுல் உள்ளுக்குள்ளாய் தன்னில் தானே அது இல்லாமலிருக்கிறது. தனக்குள்ளே ஒன்றுமில்லாத சமதளம் போலவும், ஆட்டம் முடிந்த பிறகு ராஜரீக உடுப்புகளை போட்டுக்கொண்டிருக்கிற வேஷக்காரன் போலவும் அது இருக்கிறது. ஆனுல், எப்பொழுது மிருக்கப்பட்டது, தன்னில் தானே எப்பொழுதும் ஏதோ ஒன்ருகவும் இவ்விதமாக எல்லாமாகவு மிருக்கிறது; அது இல்லாமல் போகாதபடியினுல், அதுகூட நிலைத்திருக்கிறது.

218. III. அநித்தியமான பொருள்களும் நித்தியமான பொருள்களும் மனிதனுல் பிரிக்கப்படுகின்றன, ஆனுல் அவைகள் ஆண்டவரால் சேர்க்கப்படுகின்றன. மனிதனுக்குச் சேர்ந்தவைகளெல்லாம்

அநித்தியமானவைகளா யிருக்கிறபடியினுலும், அவைகளிலிருந்து மனிதனை அநித்தியமானவனென்று சொல்லக் கூடுமாகையாலும், ஆண்டவருக்குச் சேர்ந்தவைகளெல்லாம் நித்தியமானவைகளான படியினுலும், இவைகளிலிருந்து ஆண்டவர் நித்தியமானவரென்று சொல்லப்படுவதாலும், அது அப்படி யிருக்கிறது என்பது ஏற் படுகிறது. அநித்தியமான பொருள்கள் கூட, ஒரு முடிவையுள்ள தாயும் அழிந்துபோகக் கூடியவைகளாயு மிருக்கின்றன; ஆனால், சதாகால மிருக்கும் பொருள்கள் முடிவு இல்லாததாயும் அழியாத தாயு மிருப்பவைகள். ஆண்டவருடைய முடிவற்ற ஞானத்தினுல் ஒழிய அந்த இரண்டும் சேர்க்கப்பட முடியாதென்றும், இவ்வித மாக அவைகள் மனிதனுலல்லாமல், ஆண்டவரால் சேர்க்கப்படக் கூடுமென்றும் எவனும் அறிந்து கொள்ளலாம். ஆனுல் அந்த இர்ண்டும் மனிதனுல் பிரிக்கப்படுகிறதென்றும், ஆண்டவரால் சேர்க்கப்படுகிற தென்றும் தெரிந்திருக்கப்பட, பின்வரும் ஒழுங் கில் அது ரூபகாரம் செய்யப்பட வேண்டும். I. அநித்தியப் பொருள்கள் எவை, நித்தியப் பொருள்கள் எவை? II. மனிதனுன வன் தன்னில் தானே அநித்தியமானவன், ஆண்டவர் தன்னில் தானே நித்தியமானவர். ஆகையினுல், மனிதனிடமிருந்து அநித் தியமானதைத் தவிர வேறு ஒன்றும் புறப்படாது. ஆண்டவரிட மிருந்து நித்தியமானது மாத்திரம் புறப்படும். III. அநித்தியப் பொருள்கள் நித்தியப் பொருள்களை தங்களிடமிருந்தே பிரிக்கின் றன, நித்தியப் பொருள்கள் அநித்தியப் பொருள்களை தங்களுட னேயே சேர்க்கின்றன. IV. ஆண்டவர் மனிதனை தன்னேடு தோற் றங்களினுல் சேர்க்கிறுர். V. அதனுடன்கூட அன்னுவயங்களால் கூட சேர்க்கிறுர்.'

219. ஆனுல் இந்த விஷயங்கள் ஒன்றன்பின் ஒன்றுய் தெளி விக்கப்பட்டு உறுதிப்படுத்தப்படவேண்டும். முதலாவது: **அநித்தியப் பொருள்கள் எவை, நித்தியப்பொருள்கள் எவை.** அநித்தியப்பொருள் கள் பிரகுருதிக்கும், அதனுல் மனிதனுக்கும் சேர்ந்தவைகள் எல் லாமாயிருக்கின்றன. பிரகுருதிக்கு சேர்ந்தவைகள், முக்கியமாய் எல்லையும் முடிவும் உடைத்தாயிருக்கிற இடங்களும் காலங்களுமா

யிருக்கின்றன; அதிலிருந்து மனிதனுக்குச் சேர்ந்தவைகள், அவனுடைய சொந்த சித்தத்திற்கும் புத்திக்கும், அதனால் அவனுடைய ஆசைக்கும் சிந்தனைக்கும், முக்கியமாய் அவன் விவேகத்திற்கும் சேர்ந்தவைகளாயிருக்கின்றன; இவைகள் எல்லாம் முடிவுள்ளதும் அத்து ஏற்படுத்தப்பட்டதாயுமிருக்கின்றன வென்று தெரிந்திருக்கிறது. ஆனால் நித்தியப்பொருள்கள் ஆண்டவருக்குச் சேர்ந்த எல்லாமாயும், அவரிடமிருந்து மனிதனுக்குச் சேர்ந்தது போல இருக்கப்பட்டவைகளாயுமிருக்கின்றன. ஆண்டவருக்குச் சேர்ந்தவைகள் எல்லாம் முடிவற்றதாயும் நித்தியமானதாயும், இவ்விதமாக காலவரையில்லாததாயும், அதனால் எல்லையற்றதாயும் முடிவற்றதாயுமிருக்கின்றன. அதிலிருந்து மனிதனுக்குச் சேர்ந்ததுபோல இருக்கப்பட்டவைகள், அம்மாதிரியே முடிவற்றதாயும் நித்தியமானதாயுமிருக்கின்றன; என்றாலும், அவைகளில் எந்த பாகமும் மனிதனுடையதல்ல, ஆனால் அவைகள் ஆண்டவருடையதாக மாத்திரம் மனிதனில் இருக்கின்றன. இரண்டாவது: (2)

**மனிதனானவன் தன்னில் தானே அநித்தியமாயிருக்கிறான், ஆண்டவர் தம்மில்தாமே நித்தியமாயிருக்கிறார்; ஆகையினால், மனிதனிடமிருந்து அநித்தியமானது தவிர வேறொன்றும் புறப்படாது, ஆண்டவரிடமிருந்து நித்தியமானது தவிர வேறு ஒன்றும் புறப்படாது.** மனிதனானவன் தன்னில்தானே அநித்தியமானவனென்றும், ஆண்டவர் தம்மில் தாமே நித்தியமானவரென்றும் மேலே சொல்லப்பட்டது. தன்னிடமிருப்பது தவிர எவனிடமிருந்தும் எதுவும் புறப்படாதாகையினால், மனிதனிடமிருந்து அநித்தியமானது தவிர வேறு ஒன்றும் புறப்பாடாதென்றும், ஆண்டவரிடமிருந்து நித்தியமானது தவிர வேறொன்றும் புறப்படாதென்றும் ஏற்படுகிறது. ஏனென்றால், முடிவற்றது முடிவுள்ளதிலிருந்து உண்டாகமுடியாது; அது கூடும் என்று சொல்வது எதிர்பேச்சாயிருக்கிறது. அப்படியிருந்தாலும், முடிவற்றது முடிவுள்ளதிலிருந்து வரக்கூடும், என்றாலும் முடிவு உள்ளதிலிருந்தல்லாமல், அதன் மூலமாய் முடிவற்றதிலிருந்து வருகிறது. அப்படியல்லாமல், முடிவுள்ளது முடிவற்றதிலிருந்து உண்டாக முடியாது; அது கூடுமென்று சொல்வதுகூட எதிர்பேச்சாயிருக்கிறது; என்றாலும், முடிவுள்ளது முடி

வற்றதினுல் உற்பத்தி செய்யப்படக்கூடும்; ஆனுல், இது புறப் படுதல் அல்ல; சிருட்டிக்கப்படுவதாயிருக்கிறது. இந்த விஷயத் தைப்பற்றி **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலே ஆரம்பத்திலிருந்து முடிவுவரையில் பார்க்கவும். ஆகையினுல், மனிதனிலிருக்கும் அநே கப் பொருள்கள் விஷயத்தில் போல் ஆண்டவரிடமிருந்து முடி வுள்ளது புறப்படும் பட்சத்தில், அது ஆண்டவரிட மிருந்தல்லா மல், மனிதனிடமிருந்து புறப்படுகிறது. அப்படித் தோன்றுகிறபடி யினுல், ஆண்டவரிடமிருந்து மனிதன் மூலமாய் வருகிறதென்று (3) அது சொல்லப்படக் கூடும். இது பின்வரும் ஆண்டவருடைய வார்த்தைகளால் தெளிவிக்கப் படலாம்: "உள்ளதை உள்ளதென் றும் இல்லதை இல்லதென்றும் சொல்லுங்கள்; இதற்கு மிஞ்சினது தீமையினுல் உண்டாயிருக்கும்"(மத்தே. V.37). மூன்ருவது: சுவர்க் கத்தில், எல்லாருடைய சம்பாஷணையும் இவ்விதமா யிருக்கிறது; ஏனென்ருல், தெய்வீகப் பொருள்களைப் பற்றி, இது இப்படி யிருக்கிறதா இல்லையா என்று எப்பொழுதும் அவர்கள் தர்க்கிக் கிறதில்லை; ஆனுல் ஆண்டவரிட மிருந்து, அது அப்படி யிருக்கி றது அப்படி இல்லை என்று தாங்களே அறிந்துகொள்ளுகிருர்கள். ஆகையினுல், தெய்வீக விஷயங்களைப்பற்றி இப்படியிருக்கிறதா இல்லையா என்று தர்க்கித்தலானது, வாதிப்பவன் ஆண்டவரிட மிருந்து அவைக அறிந்துகொள்ளளாமல் தன்னிடமிருந்தே தெரிந்துகொள்ள விரும்புவதினுல் உண்டாகிறது; தன்னிடமே யிருந்து மனிதன் பார்க்கிறது தீமையாயிருக்கிறது. ஆனுல், ஒரு மனிதனுனவன் தெய்வீக விஷயங்களைப்பற்றி நினைத்துப் பேசு வது மட்டுமல்லாமல், ஒரு பொருளானது அப்படியிருக்கிறது அப் படியில்லையென்று அறிந்துகொள்ளும் பொருட்டு, அவைகளைப் பற்றித் தர்க்கிக்கவேண்டுமென்பதைக்கூட ஆண்டவர் இடைவிடா மல் இச்சிக்கிருர்; நோக்கமானது உண்மையை அறிந்துகொள்ள வேண்டு மென்றிருந்தால், இந்த: சிந்தனையும் சம்பாஷணையும், தர்க்கமும் ஆண்டவரிடமிருந்து மனிதனுடன் இருப்பதாகச்சொல் லப்படலாம்; ஆனுல், அவன் உண்மையைத் தெரிந்துகொண்டு அதை ஒத்துக்கொள்ளுகிறவரையில் அது மனிதனிடமிருந்து வருகிறது. அப்படியிருந்தும் ஆண்டவரிடமிருந்து தான் அவன்

நினைக்கவும், பேசவும், தர்க்கிக்கவும் சக்தியுள்ளவனாகயிருக்கிறான்; ஏனென்றால், சுதந்தரமென்றும் பகுத்தறிவுடைமை என்றும் சொல்லப்பட்ட மனோசக்திகளிலிருந்து, இந்த சக்தி அவனுக்கு வருகிறது. மனிதனுக்கு இந்த சக்திகள் ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வருகிறது, (4) மூன்றாவது: அநித்தியமான பொருள்கள் நித்தியமானபொருளை தங்களிடமிருந்தே பிரிக்கின்றன, நித்தியமான பொருள்கள் அநித்திய பொருள்களைத் தங்களுக்கே சேர்த்துக்கொள்ளுகின்றன. அநித்தியமான பொருள்கள் நித்தியமான பொருள்களைத் தங்களிடமிருந்தே பிரிக்கின்றனவென்பது, தன்னிடமேயிருக்கும் அநித்தியபொருள்களிலிருந்து அநித்தியமாயிருக்கிற மனிதன் அப்படி செய்கிறானென்று அருத்தம் கொள்ளுகிறது; நித்திய மான பொருள்கள் அநித்தியமான பொருள்களைத் தங்களுக்கே சேர்த்துக்கொள்ளுகின்றனவென்பது, மேல் கூறியபடி, (பி. 218) தன்னிடமேயிருக்கும் நித்தியமான பொருள்களிலிருந்து நித்தியமாயிருக்கிற ஆண்டவர், அப்படிச் செய்கிறாரென்று அருத்தம் கொள்ளுகிறது. முன் சென்ற பக்கங்களில் மனிதனுடன் ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும் இருக்கிறதென்றும், ஆனால், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியம் மனிதனிடமிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், மேலும், மனிதனுடைய சித்தம் ஆண்டவர் சித்தத்துக்கு விரோதமாய்ப் போகிறதென்றும் அல்லது அதேவாகிறபடி, மனிதனுடைய சொந்த விவேகம் ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தை எதிர்க்கிறதென்றும் காண்பிக்கப் பட்டிருக்கிறது. மனிதனானவன் தன்னுடைய சொந்த அநித்தியமான பொருள்களிலிருந்து, ஆண்டவருடைய நித்தியபொருள்களைத் தன்னிடமேயிருந்து பிரிக்கிறானென்றும், ஆனால் ஆண்டவர் தன்னுடைய நித்தியபொருள்களை மனிதனுடைய அநித்திய பொருள்களோடு அதாவது, தானே மனிதனோடும், மனிதனைத் தன்னுடனேயும் சேர்க்கிறாரென்றும் இவைகளிலிருந்து ஏற்படுகிறது. இந்த விஷயங்கள் எல்லாம் முன் சொல்லியதில் முழுமையும் சொல்லப்பட்டிருப்பதினால், இன்னும் அதிக ஸ்திரப்படுத்துதல் அவசியமில்லை. நான்காவது: ஆண்டவர் மனிதனைத்தன்னோடேயே தோற்

(5)றங்களைக்கொண்டு சேர்க்கிறார். ஏனென்றால், தோற்றமானது, மனிதனானவன் தன்னிடமிருந்தே அயலானை நேசிக்கிறதுபோலவும், நன்மை செய்கிறதுபோலவும், உண்மைபேசுகிறதுபோலவும், இருக்கிறது. இவைகள் மனிதனுக்கு தன்னிடமிருந்தேபோல் தோன்றினால் ஒழிய, அவன் அயலானை நேசிக்கமாட்டான், நன்மைசெய்யமாட்டான், உண்மையைப் பேசவுமாட்டான். அப்படியிருக்கும் பட்சத்தில் ஆண்டவ்ருடன் அவன் சேர்க்கப்படமாட்டான். ஆனால் அன்பும், நன்மையும், உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினால், ஆண்டவர் மனிதனை தன்னோடே தோற்றங்களால் சேர்க்கிறாரென்று வெளிப்படையாயிருக்கிறது. ஆனால், இந்த தோற்றத்தைப்பற்றியும், மனிதனுடன் ஆண்டவருடைய சேர்கையைப்பற்றியும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியத்தைப்பற்றியும், போதுமான அளவு மேலே சொல்லப் (6)பட்டிருக்கிறது. ஐந்தாவது: ஆண்டவர் மனிதனைத் தன்னுடனேயே அன்னுவயங்களால் சேர்க்கிறார். தன் மூலார்த்தம்கேவலம் அன்னுவயங்களால் அமைந்திருக்கிற வேதத்தை இடையிலுள்ளதாக வைத்துக்கொண்டு இது செய்யப்படுகிறது. இந்த அர்த்தத்தால், மனிதனுடன் ஆண்டவருடைய ஐக்கியமும், ஆண்டவருடன் மனிதனுடைய பரஸ்பர ஐக்கியமும் இருக்கிறதென்று பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை எனும்நூலில் ஆரம்பத்திலிருந்து நிச்சயப்படுத்தப் பட்டிருக்கிறது.

220. IV. மனிதனில் அநித்தியமான போருள்களும் நித்தியமான போருள்களும் ஐக்கியப்படுதல் ஆண்டவருடைய தேய்வ பரிபாலனமா யிருக்கிறது. ஆனால், முதலில் ஒழுங்கு படுத்தப்பட்டு, அதன்படி விரிக்கப்பட்டு மெய்ப்பிக்கப்பட்டா லொழிய, இவைகள் புத்தியின் முதல் உணர்ச்சிக்கு எட்டாதாகையால், பின்வரும் வரிசையில் சொல்லலாம். I தெய்வபரிபாலனத்திலிருந்துதான் மனிதனானவன் இறந்த பிறகு, ஸ்தூலமானதும் அநித்தியமுமாகிய பொருள்களை நீக்கி, சூக்குமமானதும் நித்தியமானதுமாகிய பொருள்களைப் போட்டுக்கொள்ளுகிறான். II ஆண்டவர் உப

யோகங்களுக்குத் தக்கபடி, தன்னுடைய தெய்வ பரிபாலனத்தினால் ஸ்தூல பொருள்களோடு சூக்கும பொருள்களினாலும், அநித்தியபொருள்களோடு நித்திய பொருள்களாலும், தானே சேர்ந்து கொள்ளுகிறார். III. ஆண்டவர், உபயோகங்களோடு அன்னுவயங்களாலும், இவ்விதமாக மனிதனால் ஸ்திரப்படுத்தப்படுதலுக்குத் தக்கபடி தோற்றங்களாலும், தானே சேர்ந்து கொள்ளுகிறார். IV. அநித்திய பொருள்களுடையவும் நித்தியப் பொருள்களுடையவும், இவ்வித சேர்க்கை தெய்வபரிபாலனமா யிருக்கிறது. ஆனால் இவைகள் வியாக்கியானங்களால் அதிக தெளிவான வெளிச்சத்(2)தில் வைக்கப்படும். முதலாவது; **மனிதனானவன் தெய்வபரிபாலனத்திலிருந்து தான் மரணத்தினால் ஸ்தூலமானதும் அநித்தியமானதுமாகிய பொருள்களை நீக்கிவிட்டு சூக்குமமானதும் நித்தியமானதுமாகிய பொருள்களைப் போட்டுக்கொள்ளுகிறான்.** ஸ்தூலமானதும் அநித்தியமான பொருள்கள் மனிதனானவன் உள்ளே யிருப்பதும், அதிக உயர்ந்ததுமாகிய பொருள்களில் பின்னிட்டு பிரவேசிக்கச் செய்யப்பட சக்தியுள்ளவனா யிருக்கும்பொருட்டு, பிறந்தபோது மனிதன் முதலில் பிரவேசிக்கிற மிகவும் வெளியே யுள்ளதும், அநித்திய மாகிய பொருள்களா யிருக்கின்றன; ஏனென்றால், மிகவும் வெளியே யுள்ளதும் இறுதியானதுமாகிய பொருள்கள், அடக்கிக்கொண்டிருக்கும் பொருள்கள்; இவைகள் ஸ்தூல உலகத்திலிருக்கின்றன. அதனால் தான் எந்த தேவனும், ஆவியும் இடையில் ஒன்றுமில்லாமல் சிருட்டிக்கப்படவில்லை; ஆனால், அவர்களில் எல்லாரும் மனிதர்களாக முதலில் பிறந்து அவ்விதமாக பிரவேசிக்கச் செய்யப்பட்டார்கள். அதனால் தான் அவைகளுக்குள்ளேயும் அவைகளாலேயும் உள்ளான பொருள்கள் சம்பந்தத்தில் வைக்கப்பட்டிருக்க, தாங்களே ஸ்திரமானதும் நிலைப்படுத்தப்பட்டவைகளுமாகிய மிகவும் வெளியே யுள்ளவைகளையும் இறு(3)திப் பொருள்களையும் அவர்கள் உடைத்தாயிருக்கிறார்கள். ஆனால் மனிதன் முதலில் பிரகுருதியின் தடித்த பொருள்களை போட்டுக்கொள்ளுகிறான்; அவன் சரீரம் அதிலிருந்து வருகிறது; ஆனால் இறக்கும்போது இவைகளைப் போட்டுவிட்டு சூக்கும பொருள்களுக்கு அதிக சமீபமாயிருக்கிற பிரகுருதியின் சுத்த

மான பொருள்களை வைத்துக் கொள்ளுகிறான்; இவைகள் தான் பிறகு அவனை அடக்கிக்கொண்டிருப்பவை களாயிருக்கின்றன. இன்னமும் எல்லா உள்ளிருக்கிற அல்லது அதிக உயர்ந்த பொருள்களும் தகுந்த இடங்களில் காண்பிக்கப்பட்டபடி, மிகவும் வெளியே யுள்ளதிலும் அல்லது இருதிப் பொருள்களிலும் சேர்ந்து இருக்கின்றன. ஆகையினால், ஆண்டவருடைய எல்லா கிரியைகளும், ஒருமிக்க முதலிலிருந்தும் கடைசியிலிருந்தும், இவ்விதமாக சம்பூர்ணத்தில் இருக்கின்றன. ஆனால், பிரகுருதியின் மிகவும் வெளியேயுள்ளவைகளும் இருதிப் பொருள்களும், அவைகள் இருக்கிறபடியே, மானிட மனது உருவாக்கப்பட்ட சூக்கும பொருள்களையும் நித்திய பொருள்களையும் ஏற்றுக்கொள்ள முடியாதபடியினாலும், அப்படி யிருந்தும், மனிதனானவன் பரமார்த்தமாகி சதாகாலமிருக்க பிறந்தபடியினாலும், மனிதன் அவைகளைப் போட்டுவிட்டு, சூக்கும பொருள்களுக்கும் அதிசூக்கும பொருள்களுக்கும், தகுதியானதும் சரிப்படுகிறதும், அவைகளுக்குச் சேர்ந்தவைகளாக உபயோகப்படுகிறதுமாகிய உள்ளிருக்கிற ஸ்தூல பொருள்களை மாத்திரம் பிடித்து வைக்கிறது; சரீரத்தின் மரணமாயிருக்கிற அநித்தியமானதும் ஸ்தூலமானதுமா(4)கிய இறுதிப் பொருள்களைத் தள்ளுவதினால் இது நிறைவேற்றப்படுகிறது. இரண்டாவது: ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தினால் உபயோகங்களுக்குத் தக்கபடி ஸ்தூல பொருள்களோடு சூக்குமப் பொருள்களாலும், அநித்திய பொருள்களோடு நித்தியபொருள்களாலும் தானே சேர்ந்துகொள்ளுகிறார். ஸ்தூல பொருள்களும், அநித்திய பொருள்களும், பிரகுருதிக்குசொந்தமானவைகள் மாத்திரம் அல்லாமல், ஸ்தூல உலகத்திலுள்ள மனிதர்களுக்குச் சொந்தமானவைகளாயும் கூட யிருக்கின்றன. மனிதனானவன் இரண்டையும் இறக்கும்போது போட்டுவிட்டு, அவைகளுக்கு ஒத்த சூக்கும பொருள்களையும் நித்திய பொருள்களையும் உடுத்திக் கொள்ளுகிறான். உபயோகங்களுக்குத் தக்கபடி இவைகளை தரித்துக்கொள்ளுகிறதாக முன்பக்கங்களில் திரளாய் மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. பிரகுருதிக்குச் சொந்தமான ஸ்தூல பொருள்கள், பொதுவாக காலங்களுக்கும் இடங்களுக்கும், முக்கிய

மாய், பூமியின்பேரில் பார்க்கப்பட்ட பொருள்களுக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. மனிதன் மரணத்தினுல், இவைகளை விட்டுவிட்டு, அவைகளுக்குப் பதிலாக, வெளி பார்வைக்கு அல்லது தோற்றத்துக்கு ஒத்து உட்பார்வைக்கும் சத்துக்குமே ஒத்திராத சூக்குமப் பொருள்களை அவன் பெற்றுக்கொள்ளுகிறுன்; அவை
(5)களைப்பற்றி கூட முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்தூல உலகத்தில் மனிதர்களுக்குச் சொந்தமான அநித்திய பொருள்கள், பொதுவாக கௌரவங்களுக்கும் செல்வத்துக்கும் முக்கியமாய் ஆகாரங்களாகவும், உடுப்புகளாகவும், இருப்பிடமாகவும் இருக்கிற ஒவ்வொரு மனிதனுக்கும் தேவையானவைகளுக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இவைகள்கூட மரணத்தினுல் நீக்கப்பட்டு பின்னுல் விடப்படுகின்றன; புறம்பான உருவத்துக்கும் அல்லது தோற்றத்துக்கும் ஒத்துப்போகிறதும், உள்ளுருவத்துக்கும் சத்துக்கும், அப்படியிராத பொருள்கள் போட்டுக் கொள்ளப்பட்டு, ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இவைகள் எல்லாம் தங்களுடைய உள்ளான முகத்தையும் சத்தையும் உலகத்தில் அநித்திய பொருள்களின் உபயோகங்களிலிருந்து அடைகின்றன. தருமத்தின் நன்மைகள் என்று சொல்லப்படுகிற நன்மைகளாக உபயோகங்கள் இருக்கின்றன. இவைகளிலிருந்து ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தினுல் சூக்கும பொருள்களையும், நித்திய பொருள்களையும், ஸ்தூல பொருள்களோடும் அநித்திய பொருள்களோடும் உபயோகங்களுக்குத் தக்கபடிச் சேர்க்கிறு
(6)ரென்று விசதமாகும் மூன்றுவது: **ஆண்டவர் உபயோகங்களோடு அன்னுவயங்களாலும், இவ்விதமாக தோற்றங்களாலும், மனிதனுல் அவைகள் ஸ்திரப்படுத்தப் படுதலுக்குத் தக்கபடி தானே சேர்க்கிறுர்.** ஆனுல் அன்னுவயம் என்னவென்றும் தோற்றம் என்னவென்றும் தெளிவான கருத்து இன்னும் பெறுதவர்களுக்கு இவைகள் மங்கலாகத் தோன்றவேண்டுமாகையால், அவைகள் உதாரணங்களால் தெளிவிக்கப்பட்டு, இவ்விதமாக விஸ்தரிக்கப்படவேண்டும். வேதத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும் சூக்குமபொருள்களுடையவும் அதிசூக்குமபொருள்களுடையவும் கேவல அன்னுவயங்களாயிருக்கின்றன; அவைகள் அன்னுவயங்களா

யிருப்பதினுல், தோற்றங்களாகக்கூட இருக்கின்றன. அதாவது, வேதத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், தாங்களே மூடப் படாததா யிருக்கிறதும், வேதத்தின் சப்தார்த்தத்தில் உடுப்பு போட்டுக்கொண்டதுமா யிருக்கிற பரம இச்சாசத்தியின் தெய்வ நன்மைகளாகவும், பரம ஞானசக்தியின் தெய்வ உண்மைகளாகவு மிருக்கின்றன. ஆகையினுல், அவைகள் தன்னுடைய அன்பினு டையவும் ஞானத்தினுடையவும் நிலைமைக்கு ஒத்துப் போகிற ஆடையை போட்டுக்கொண்டிருக்கிற மனிதனைப்போலத்தோன்று கின்றன. ஒரு மனிதன் தோற்றங்களை ஸ்திரப்படுத்தினுல், ஆடை கள் மனிதர்களென்று ரூபகாரம் செய்வது போலிருக்கிறதென்று, அதிலிருந்து வெளிப்படையாகிறது. இவ்விதமாகத் தோற்றங்கள் போலிகளாகின்றன. மனிதனுனவன் உண்மைகளைத் தேடி தோற் றங்களில் அவைகளைப்பார்த்தால், அது வேறு மாதிரியா யிருக் (7)கிறது. இப்படியிருக்கையில், எல்லா உபயோகங்களும் அல்லது மனிதன் அயலானுக்குச் செய்கிற தருமத்தின் உண்மைகளும், நன்மைகளும் தோற்றங்களை அனுசரித்தும் அல்லது வேதத்தி லுள்ள உண்மைகளையே அனுசரித்தும், செய்யப்படலா மாகை யால், அவன் அவைகளைத் தன்னிடத்தில் ஸ்திரப்பட்ட தோற்றங் களை அனுசரித்துச் செய்தால் பிழைகளி லிருக்கிறுன். அவன் உண்மைகளை அனுசரித்துச் செய்தால், அவன் செய்யவேண்டிய படி செய்கிறுன். இவைகளிலிருந்து, ஆண்டவர், அன்னுவயங்க ளால், இவ்விதமாக மனிதனுல் அவைகளை ஸ்திரப்படுத்தப் படுத லுக்குத்தக்கபடி தோற்றங்களால்,உபயோகங்களோடு தானே சேர் தல் என்பதால் என்ன அருத்தம் என்று விசதமாகலாம். நான்கா (8)வது: **அநித்திய பொருள்களுடையவும் நித்திய பொருள்களுடைய வும் இவ்வித சேர்க்கை தெய்வபரிபாலனமா யிருக்கிறது.** இதைப் புத் திக்கு முன் கொஞ்சம் வெளிச்சத்தில் வைக்க, கௌரவத்தையும் மரியாதையையும் சேர்ந்த ஒரு உதாரணத்தினுலும், ஐசுவரியத் தையும் செல்வத்தையும் சேர்ந்த மற்றொரு உதாரணத்தினுலும், இந்த இரண்டு உதாரணங்களால் அது தெளிவிக்கப்படலாம். இரண்டும் வெளி உருவத்தில் ஸ்தூலமாகவும் அநித்தியமாகவு மிருக்கின்றன; ஆனுல் உள்ளான உருவத்தில் அவைகள் சூக்கும

மானதும் நித்தியமானதுமாக இருக்கின்றன. தங்களுடைய மரியாதைகளுடன் கௌரவங்கள், மனிதனுனவன் பிரஜாதிபத்தியத்தையும் உபயோகங்களையும் மதிக்காமல், அதில் தன்னையே தானுக மதிக்குங்கால், ஸ்தூலமானதும் அநித்தியமானதுமா யிருக்கின்றன; ஏனென்ருல், அப்பொழுது மனிதனுனவன், பிரஜாதிபத்தியத்துக்குத் தான் அல்லாமல், தனக்காக பிரஜாதிபத்திய மிருக்கிறதாக தனக்குத்தானே தனக்குள்ளேயே நினைக்கவேண்டியிருக்கும். தான் இராச்சியத்திற்கும் அதன்ஜனங்களுக்கும் ஜீவிக்காமல், இராச்சியமும் அதில் உள்ள எல்லா ஜனங்களும் தனக்காக இருக்
(9)கிறதாக நினைக்கிற அரசனைப் போல அவன் இருக்கிருன். ஆனுல், இதே கௌரவங்களும் அதன் மரியாதைகளும் பிரஜாதிபத்தியமும் உபயோகங்களும் தனக்காக அல்லாமல், தானே சுயமாய் அவைகளுக்காக இருப்பதாக மனிதன் மதிக்கும்போது சூக்குமமானதாகவும் நித்தியமானதாகவு மிருக்கின்றன. மனிதன் இதை செய்தால், அப்பொழுது தன்னுடைய கௌரவத்தினுடையவும் மரியாதையுடையவும் உண்மையிலும் சாரத்திலுமிருக்கிருன். ஆனுல், முன் கூறியதை செய்தால், அப்பொழுது அவன் அன்னுவயத்திலும் தோற்றத்திலு மிருக்கிருன்; இவைகளை தன்னிலேயே அவன் உறுதிப்படுத்தினுல், அவன் பொய்களிலிருக்கிருன்; அவைகளிலிருந்து பொய்களிலும் தீமைகளிலும் இருக்கப்பட்டவர்கள் இருக்கிறது போல் மாத்திரம் ஆண்டவருடன் சேர்ந்திருக்கிருன். ஏனென்ருல், போலிகள் தீமைகள் தாங்களே சேர்ந்துகொள்ளுகிற பொய்களா யிருக்கின்றன; அவர்கள் நிஜமாகவே உண்மைகளையும் நன்மைகளையும் ஆதரித்தார்கள். ஆனுல் ஆண்டவரிடமிருந்தல்லாமல் தங்களிடமிருந்தே அப்படிச் செய்தார்கள்; ஆகையினுல் அவர்கள் ஆண்டவர் இருக்கப்பட்ட இடத்தில் தாங்களே போய்விட்டார்கள். ஸ்தூலமாகவும் அநித்தியமாகவும் அல்லது சூக்குமமாகவும் நித்தியமாகவும்கூட யிருக்கிற செல்வங்கள் விஷ
(10)யத்திலும் அதிகாரங்கள் விஷயத்திலும் அதேமாதிரிதான். ஐசுவரியத்திலும் அதிகாரத்திலும் தங்களுடைய எல்லா சந்தோஷங்களையும் இன்பங்களையும் கண்டு, அவைகளைமட்டும், அவைகளில் தங்களையும் மதிக்கிறவர்களோடு அந்த ஐசுவரியமும்

செல்வமும் ஸ்தூலமானதாயும் அநித்தியமானதாயு மிருக்கின்றன; ஆனால் அதே பொருள்கள் அவைகளில் நல்ல உபயோகங்களை மதித்து. அவைகளில் அந்தரங்கமான சந்தோஷத்தையும் இன்பத்தையும் காண்கிறவர்கள் விஷயத்தில், பரமார்த்தமாகவும் நித்தியமாகவு மிருக்கின்றன. இவர்களோடு, புறம்பான சந்தோஷமும் இன்பமும் பரமார்த்தமானதாகிறது, அநித்தியமானது நித்தியமானதாகிறது. ஆகையினால் இறந்தபிறகு அவர்கள் சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; அங்கே உபயோகத்துக்குச் சேர்ந்த பொருள்களின் உருவங்கள், பொன்னாலும் விலை உயர்ந்த கற்களாலும் மகாஜோதியுள்ளதா யிருக்கிற ராஜகிரகங்களில் அவர்கள் வசிக்கிறார்கள்; ஆயினும் இவைகளை அவர்கள், சுவர்க்கத்தின் அநுகூலமான நிலைமைகளும் இன்பங்களுமாய் தாங்களே யிருக்கிற, நிஜமான சந்தோஷத்தையும் இன்பத்தையும் அடைகிற உபயோகங்களா யிருக்கிற உள்ளிருக்கிறவைகளி லிருந்து, மகா ஜோதியுள்ளதாகவும் ஒளி வீசுகிறதாகவுமுள்ள புறம்பானவைகளாக மாத்திரம் மதிக்கிறார்கள். செல்வத்தையும் அதிகாரத்தையும் தங்களுக்கேயாகவும், அவைகளுக்கேயாகவும் மாத்திரமும், அதேகாலத்தில் உள்ளிருப்பவைகளுக்கல்லாமல் புறம்பானதற்காகவும், இவ்விதமாக அவைகளின் சத்துகளை அநுசரித்தல்லாமல் தோற்றங்களை அநுசரித்தும், மதித்தவர்களுக்கு எதிரிடையான ஒரு கதி இருக்கிறது. இறக்கும்போது அவர்கள் செய்கிறபடி, இவைகளை அவர்கள் நீக்கும்போது, தங்களுக்குச் சேர்ந்த உள்ளானவைகளை அதே காலத்தில் போட்டுக் கொள்ளுகிறார்கள்; அவைகள் பரமார்த்தமானதாயில்லாதபடியினால், நரகத்துக்கு அடுத்ததா யிருக்கவேண்டும்: ஏனென்றால், அவைகளில் இரண்டில் ஒன்று இருக்கவேண்டும்;
(11) இரண்டும் சேர்ந்திருக்க முடியாது. ஆகையினால் செல்வத்திற்குப் பதிலாக வறுமையும், ஆஸ்திகளுக்குப் பதிலாகத் துன்பமும் அவர்களுக்குண்டு. உபயோகங்கள் என்பதினால், ஒரு மனிதனுக்கும் அவனை நம்பி யிருக்கிறவர்களுக்கும், வேண்டிய ஆகாரத்துக்கும் உடுப்புக்கும் இருப்பிடத்துக்கும், சம்பந்தப்பட்ட உயிருக்கு ஆவசியகமானவைகள் மட்டும் கருதப்படுகிறதில்லை; ஆனால், ஒருவனுடைய தேசத்தின் நன்மையும், கூட்டத்தின் நன்மையும், சக

நகரவாசியின் நன்மையும் கூட கருதப்படுகிறது. முடிவான அன்பாயிருக்கும்போது வர்த்தகமானது அவ்வித நன்மையா யிருக்கிறது. வர்த்தகன் மோசங்களையும் தீமையான வித்தைகளையும் பாவங்களாக நீக்கி வெறுப்புடன் பார்க்கும்பட்சத்தில், பணமானது நடுத்தரமான உதவுகிற அன்பாயிருக்கிறது. பணமானது முடிவான அன்பாகவும், வர்த்தகம் நடுவிலுள்ள உதவுகிற அன்பாகவு மிருக்கும் பட்சத்தில், அந்த வேறுமாதிரி; ஏனென்றால், இது தீமைகளுக்கு வேருக இருக்கிற பொருளாசையா யிருக்கிறது; இதைப்பற்றி (லூக். XII. 15) யையும் அதைச்சேர்ந்த உவமையையும், (வாக்கியங்கள் 16-21)ம் பார்க்கவும்.

---

**மனிதனுனவன் விசுவாசத்தின் உண்மைகளிலும், தருமத்தின் நன்மைகளிலும், வாழ்நாள் முடிவுவரையிலும்கூட, அவைகளில் வைக்கப்படக்கூடிய அளவு தவிர, உள்ளுக்குள்ளாய் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை.**

221. ஆண்டவர் எல்லாருடைய மோக்ஷத்தையும் கோருகிருரென்றும், அதனுடன் அவர் சர்வ வல்லமையுள்ளவரென்றும், கிருஸ்து உலகத்தில் தெரிந்திருக்கிறது; ஆகையினுல், இதிலிருந்து அநேகர், அவர் ஒவ்வொருவனையும் இரட்சிக்க சக்தியுள்ளவராயிருக்கிருரென்றும், அவருடைய இரக்கம் வேண்டுமென்று பிரார்த்திக்கிறவர்களை முக்கியமாய், பிதாவாகிய கடவுள், குமாரன் பொருட்டு இரக்க முள்ளவராயிருப்பார் என்கிற ஏற்றுக்கொண்ட சமயத்தின் விதிப்படி அதை வேண்டிக்கொள்ளுகிறவர்களை, அதிலும் முக்கியமாய் அதே காலத்தில் அந்த சமயத்தை ஏற்றுக்கொள்ள பிரார்த்தித்தால், அவர்களை அவர் இரட்சிக்கிருரென்றும் தீர்மானிக்கிருர்கள். ஆனுல், அது முழுமையும் வேறுவிதமாயிருக்கிறதென்பது, தன்னுடைய தெய்வீக பரிபாலனத்துக்கு விரோதமாய் நடத்தல், தன்னுடைய இச்சாசத்திக்கும் ஞானசத்திக்கும், இவ்விதமாக தனக்கே விரோதமாகவும் நடத்தலாயிருக்குமா

கையால் ஆண்டவர் தன்னுடைய தெய்வீக பரிபாலனத்தின் சட்டங்களுக்கு விரோதமாக நடக்கமுடியாதென்று விவரிக்கப்போகிறதும், மனிதனுடைய மோக்ஷம், சாதனங்களால் நிறைவேற்றப்படுகிறதினாலும், எல்லாரும் முக்தியடைய விரும்புகிறவரும், அதே காலத்தில் சர்வ வல்லமையுள்ளவரும், இவ்விதமாக, ஆண்டவரால் தவிர, வேறுயாரும் இவைகளின்படி மனிதனுக்கு வழிகாட்ட சக்தியுள்ளவர்களாய் இல்லாதபடியினாலும், நேரான இவ்வித இரக்கம் உண்டாகாதென்று பார்க்கக்கூடியதுமாகிய இந்த நூலின் கடைசிபிரிவில் அறிந்துகொள்ளப்படும். மனிதனானவன் ஆண்டவரால் நடத்தப்படும் வழிவகைகள், தெய்வபரிபாலனத்தின் சட்டங்களென்று சொல்லப்பட்டவைகள்; அதற்குள், மனிதன் சாகும்வரையில் அவைகளில் வைக்கப்படக்கூடிய அளவு தவிர, ஞானத்தின் உண்மைகளிலும், அன்பின் நன்மைகளிலும், உள்ளுக்குள்ளாய் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை என்பதும், சேர்ந்திருக்கிறது. ஆனால், இது விவேகத்துக்குத் தெளிவாக, பின்வரும் ஒழுங்கில் அது விவரிக்கப்படவேண்டும்: I. ஒருமனிதன் பரமார்த்த பொருள்களின் ஞானத்திலும், அவைகளிடத்து ஆசையிலும், ஏற்றுக்கொள்ளப்படக்கூடும், அப்படியிருந்து சீர்ப்படுத்தப்படாமலிருக்கலாம். II. ஒருமனிதன் பின்னிட்டு அவைகளிலிருந்து விலகிக்கொண்டு, எதிரிடையானதற்குள் பிரவேசித்தால், அவன் பரிசுத்தமான பொருள்களை அசுத்தப்படுத்துகிறான். III. அசுத்தப் படுத்துதல் பலவிதங்களாயிருக்கின்றன, ஆனால் இந்த விதமானது எல்லாவற்றிலும் மிகவும் கெட்டது. IV. ஆகையினால் ஆண்டவர், மனிதனானவன் சாகும்வரையில் அவைகளில் வைக்கப் படக்கூடிய அளவு தவிர, ஞானத்தின் உண்மையிலும் அதே காலத்தில் அன்பின் நன்மையிலும் அவனை உள்ளுக்குள்ளாய் ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

222. I. ஒரு மனிதனானவன் பரமார்த்தபொருள்களின் ஞானத்திலும், அவைகளின் அன்பிலும்கூட ஏற்றுக்கொள்ளப்படலாம், அப்படியிருந்தும் சீர்படுத்தப்படாமலிருக்கலாம். மனிதனுக்கு பகுத்தறிவுடைமையும் சுதந்தரமும் இருக்கிறதென்பது இதற்கு கார

ணம்; பகுத்தறிவுடைமையால், ஏறக்குறைய தேவர்களுக்கிருக்கிற ஞானத்துக்கு அவன் உயர்த்தப்படலாம்; சுதந்தரத்தால், தேவர்களுக்கு இருக்கும் அன்புக்கு ஒத்த அன்பிற்குயர்த்தப்படலாம். அப்படியிருந்தாலும், அன்பு இருக்கிறதுபோல ஞானமுமிருக்கிறது; அன்பானது அதி சூக்குமமாகவும் சூக்குமமாகவுமிருந்தால், ஞானம்கூட அதி சூக்குமமும் சூக்குமமுமாகிறது; ஆனால் அன்பானது பேயாட்டமானதாயும் நரகத்துக்கு அடுத்ததாயு மிருக்கும் பட்சத்தில், ஞானம் கூட பேயாட்டமானதாயும் நரகத்துக்கடுத்ததாயு மிருக்கிறது. நிஜமாகவே, பின்கூறியது, புறம்பான உருவத்தில், இவ்விதமாக மற்றவர் முன்னிலையில், அதி சூக்குமமானதாயும் சூக்குமமானதாயும் போன்று தோன்றலாம்; ஆனால், அதன் சாரமாகவே யிருக்கிற உள்ளான உருவத்தில், மனிதனுக்கு வெளியிலில்லாமல், அவனுக்குள் பேயாட்டமானதாயும் நரகத்துக்கு அடுத்ததாயு மிருக்கிறது. மனிதர்கள் ஸ்தூலமானவர்களான படியினாலும், அவர்கள் ஸ்தூலமாய் பார்க்கிறதினாலும், கேட்கிறதினாலும், புறம்பான உருவம் ஸ்தூலமானபடியினாலும், அது அவ்விதமா யிருக்கிறதென்று அவர்களுக்குத்தோன்றுகிறதில்லை. ஆனால், தேவர்கள் சூக்குமமானவர்களான படியினாலும், அவர்கள் சூக்குமமாய் பார்க்கிறதினாலும், கேட்கிறதினாலும், உள்ளான உருவம் சூக்குமமான படியினாலும், அவர்களுக்கு (2)அவ்விதமாய்த் தோன்றுகிறது. இதிலிருந்து, ஒரு மனிதனானவன், சூக்கும பொருள்களின் ஞானத்திலும், அவைகளிடத்து ஆசையிலுங்கூட ஏற்றுக்கொள்ளப்படக் கூடுமென்றும், அப்படியிருந்தும் சீர்படுத்தப் படாமலிருக்கலா மென்றும் விசதமாகிறது; ஆனால், அப்பொழுது அவன் அவைகளின் பேரில் கொள்ளும் சூக்கும அன்பிற்குள் கூட அல்லாமல், அவைகளிடத்து கொள்ளும் ஸ்தூல அன்பிற்குள் மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்படுகிறான். ஒரு மனிதன் ஸ்தூல அன்பிற்குள் தானே போகக்கூடுமாகையாலும், ஆனால் சூக்கும அன்பில் அவனை ஆண்டவர் மாத்திரம் ஏற்றுக்கொள்ளக் கூடுமாகையினாலும், இதில் ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள் சீர்திருத்தப் படுகிறதினாலும், ஆனால், ஸ்தூல அன்பில் மாத்திரம் விடப்பட்டவர்கள் சீர்திருத்தப்படாத படியினாலும்,

இது அப்படி இருக்கிறது. ஏனென்றால், பின் கூறியவர்கள் அநேகமாய் வேஷதாரிகள், அவர்களில் அநேகர் ஏசு சங்கத்தைச் சேர்ந்தவர்கள், அந்தரங்கமாய் தெய்வீகம் என்பதை எதையும் நம்பாமல் குறி சொல்பவர்களைப் போல் தெய்வீகப் பொருள்களோடு புறம்பே விளையாடுகிறார்கள்.

223. மனிதனானவன் தேவர்களைப் போலவே ஞான இரகசியத்தை அறிந்துகொள்ளும் மனோசக்தியைத் தனக்குள்ளேயே வைத்திருக்கிறானென்று, சூக்கும உலகத்தில் அதிக அனுபவத்தினால் எனக்குத் தெரியப்படுத்தப் பட்டிருக்கிறது. ஏனென்றால், ஞான இரகசியத்தைக் கேட்டபோது, அவைகளை அறிந்துகொண்டது மட்டுமல்லாமல், தங்களுடைய சொந்த பகுத்தறிவுடைமையிலிருந்து பேசின உக்கிரமான பேய்களை நான் பார்த்திருக்கிறேன்; ஆனால், அவைகள் தங்களுடைய பேயாட்டமான ஆசைக்குத் திரும்பிய உடனே, அவைகள் அவைகளை தெரிந்துகொள்ளாமல், அவைகளுக்குப்பதிலாக, பைத்தியங்களாயிருக்கிற எதிரிடையானவைகளை அறிந்து கொண்டார்கள்; இவைகளை அப்பொழுது ஞானமென்று கூறினர். ஞான நிலையில் இருக்கும்போது, தங்களுடைய சொந்த பைத்தியத்தைப் பார்த்து சிரித்ததாகவும் பைத்திய நிலைமையிலிருக்கும்போது, ஞானத்தைப்பார்த்து சிரித்ததாகவும் (2) கேட்கக்கூட எனக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. உலகத்தில் அவ்விதமாயிருந்த ஒரு மனிதன், இறந்த பிறகு சூக்கும சரீர ஆவியாகும்போது, ஒன்றை மற்றதிலிருந்து பார்க்கும்பொருட்டு, ஞானத்தினுடையவும், பைத்தியத்தினுடையவும் மாறிமாறி வரும் நிலைமைகளில் சாதாரணமாய் விடப்படுகிறான். ஆனால், ஞானத்திலிருந்து தாங்கள் பைத்தியம் பிடித்தவர்களென்று தெரிந்து கொண்ட போதிலும், ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்படுகிறபடி தங்களுக்குப் பிரியமானதை எடுத்துக்கொள்ள விடப்படபட்டால், பைத்தியம் பிடித்த நிலைமைக்குத் தாங்களே போய், அதை நேசித்து அப்பொழுது, ஞானநிலைமையை வெறுப்பில்வைக்கிறார்கள். அவர்களுடைய உள்ளானது பேயாட்டமானதாயும், புறம்பானது தெய்வீகமாயும் இருந்ததென்பது காரணமாயிருக்

கிறது. ஒளியுள்ள தேவர்களாகத் தாங்களே செய்துக்கொண்ட பேய்கள் என்பதானும், மேனும், விவாக வீட்டில் விவாக உடுப்பு போடாமல், புறம்பான இருட்டில் தள்ளப்பட்டவன் என்பதினு னும் கருதப்பட்டவர்கள் இவர்கள் தான் (மத்தே. XXII. 11-13).

224. புறம்பானது உண்டாகிறது உள்ளானதிலிருந்து என்றும், அதனுல், புறம்பானது உள்ளானதிலிருந்து தன்னுடைய சத்தை அடைகிறதென்றும் யார் அறிந்துகொள்ள மாட்டார்கள், புறம்பானது, உள்ளானதிலிருந்து தானடையும் சத்தை அனுசரித்து அல்லாமல், வேறு விதமாய்த் தோன்றக் கூடுமென்று, அனுபவத்தில் யாருக்குத் தெரியாது? வேஷதாரிகளிடத்திலும் முகஸ்துதிகாரர்களிடத்திலும், பாசாங்கர்களிடத்திலும், அவ்வித தோற்றம் தெளிவாய் இருக்கிறது. தன்னுடைய சொந்தமில்லாத சுபாவங்களை ஒரு மனிதன் தனதாகப் புறம்பே பிரவர்த்திக்கக்கூடுமென்பது, நாடகக்காரர்களானும் பரியாசக்காரர்களானும் வெளிப்படையாயிருக்கிறது. ஏனென்ருல் அரசர்களையும், சக்கரவர்த்திகளையும், நிஜமாகவே, தேவர்களையும், தொனியிலும், பாஷையிலும், முகத்திலும், அபிநயத்திலும், தாங்கள் அவ்விதமானவர்களென்று காட்டும் விதம் அவர்களுக்குத் தெரியும்; அப்படி யிருந்தானும் அவர்கள் கூத்தர்களாய் மாத்திரம் யிருக்கிருர்கள். ஒரு மனிதனுனவன் அம்மாதிரியே, பரமார்த்த விஷயங்களில் போல் தேசாசாரமானதும் சன்மார்க்கமாகிய விஷயங்களினும் இச்சகனுக நடிக்கக்கூடுமாகையானும், அநேகர் அப்படிச் செய்கிருர்களென்று (2) தெரிந்துங்கூட, இருக்கிறபடியினுனும் இதுகூட சொல்லப்பட்டது. ஆகையினுல், முன் கூறியபடி உள்ளானது அதன் சத்தில் நரகத்துக்கு அடுத்ததா யிருந்தும், புறம்பானது அதன் உருவத்தில் பரமார்த்தமாகத் தோன்றியும், அப்படியிருந்தும் புறம்பானது உள்ளானதிலிருந்து தன்னுடைய சத்தை இழுக்கிறபடியினுல், அந்த சத்தானது புறம்பானதில் எங்கே மறைந்திருக்கிறதென்கிற கேழ்வி உண்டாகிறது. அது அபிநயத்திலும், தொனியினும், பாஷையினும் அல்லது முகச்சாயலினும் தோன்றுகிறதில்லை; என்ருனும், அவைகளின் நான்கினும் உள்ளுக்குள்ளாய் மறைந்து

கிடக்கிறது. அவைகளில் அது உள்ளுக்குள்ளாய் மறைந்து இருக்கிறதென்பது, சூக்குமஉலகத்தில் அதிலிருந்தே தெளிவாய் வெளிப்படையா யிருக்கிறது; ஏனென்றால், ஒரு மனிதனானவன் ஸ்தூல உலகத்திலிருந்து சூக்கும உலகத்திற்கு இறந்த பிறகு வரும்போது, அவன் சரீரத்துடன் தன்னுடைய புறம்பானவை களை விட்டு விட்டு, தன்னுடைய ஆன்மாவில் சேகரித்து வைத்த உள்ளானவைகளை பத்திரமாய் வைக்கிறான்; அப்பொழுது அவனுடைய உள்ளானவை, நரகத்துக்கு அடுத்ததாயிருந்தால், தன் ஆன்மா சம்பந்தப்பட்ட வரையில் உலகத்திலிருந்தபோது அவன் இருந்தது போல கூட ஒருபேய் போல அவன் தோன்றுகிறான். ஒவ்வொரு மனிதனும் சூக்கும சரீர ஆன்மாவாகும்போது சரீரத்துடன் புறம்பானவைகளை விட்டுவிட்டு, உள்ளானவைகளில் பிரவேசிக்கிறானென்று யார் ஒத்துக் கொள்ளுகிறதில்லை? சூக்கும உலகத்தில் ஆசைகளுடையவும், அதிலிருந்து சிந்தனைகளுடைய (3) வும் ஓர் போக்குவரவு இருக்கிறதாக இதனுடன் கூட நான் சேர்க்கிறேன்; இதனால் தான் அங்கே யாரும் தான் நினைப்பதை விட வேறு விதமாய் பேசமுடியாது. மேலும் அங்கே ஒவ்வொருவனும், அவனுடைய குணம் முகச்சாயலிலிருந்து தோன்றும்படியாக, முகத்தை மாற்றி, தன்னுடைய சொந்த ஆசையைப்போலாகிறான். வேஷதாரிகள் தாங்கள் நினைப்பதை விட வேறு விதமாய் பேச சில வேலைகளில் விடப்படுகிறார்கள்; ஆனால் அவர்கள் பேச்சின் சப்தம், அவர்களுடைய உள்ளான சிந்தனைகளுக்கு முழுமையும் இணக்கமில்லாதது போல் கேட்கப்படுகிறது; அப்படிப் பொருந்தாமையால் மற்றவர்களிலிருந்து அவர்கள் பேதங்காட்டப் படுகிறார்கள். ஆகையால், உள்ளானது, புறம்பானதின் தொனியிலும், பாஷையிலும், முகத்திலும், அபிநயத்திலும் உள்ளுக்குள்ளாய் மறைந்திருக்கிற தென்றும், ஸ்தூல உலகத்தில் உள்ள மனிதர்களால் இது அறிந்து கொள்ளப்படாமல், சூகும உலகத்து தேவர்களால் வெளிப்படையாய் அறிந்து கொள்ளப்படுகிறதென்றும் விசதமாகும்.

225. இந்த ஆலோசனைகளால், மனிதனானவன், ஸ்தூல உலகத்தில் இருக்கிறவரையில், சூக்கும பொருள்களின் ஞானத்

திலும், அவைகளிடத்து கொள்ளும் ஆசையிலும் ஏற்றுக்கொள்ளப்படக் கூடுமென்றும், பரமார்த்தமானவர்கள் அதனால் சீர்ப்படுகிறார்களென்கிறதும், ஆனால் கேவலம் ஸ்தூலமானவர்கள் அதே வழி வகைகளால் சீர்படுகிறதில்லை யென்கிறதுமாகிய வித்தியாசத்துடன், முன் கூறியவர்கள் விஷயத்தில் போல் பின் கூறியவர்கள் விஷயத்திலும் இது சம்பவிக்கலாமென்றும், சம்பவிக்கிறதென்றும் இப்பொழுது விசதமாகிறது. ஸ்தூலமாய் மட்டும் இருக்கப்பட்டவர்கள் விஷயத்தில், அவர்கள் ஞானத்தை நேசிக்கிறதாக தோற்றமும் கூட இருக்கக் கூடும்; ஆனால், அவர்கள் அதை, ஒரு விபசாரி, ஒரு கம்பீரமான ஸ்திரியை வேசியைப் போல் நினைத்து, அவளுடன் மரியாதையாய்ப் பேசி, அழகுள்ள ஆடைகளை அவளுக்குக் கொடுத்து, அப்படியிருந்தும் அவளைப் பற்றி வீட்டிலிருக்கும்போது, அவள் ஒரு இழிவான வேசியாய் மட்டுமிருக்கிறாளென்றும், என்னுடைய மோகத்தைத் தீர்க்கிறபடியினால், நான் அவளை நேசிக்கிறதாக நம்பச்செய்வேன் என்றும், ஆனால் அவள் அப்படி அனுகூலமாய் இல்லாவிட்டால், நான் அவளை நீக்கிப் போடுவேன் என்றும் நினைத்து, அவளை நேசிக்கிறது போல் தவிர வேறு விதமாய் அதை நேசிக்கிறதில்லை. அவனுடைய உள்ளான மனிதன் இந்த விபசாரி; அவனுடைய புறம்பான மனிதன் இந்த ஸ்திரி.

226. II. **ஒரு மனிதனானவன் பின்னிட்டு அவைகளிலிருந்து திரும்பி, எதிரிடையானவைகளுக்குள் சென்றால், அவன் பரிசுத்தமான பொருள்களை அசுத்தப்படுத்துகிறான்.** பின் வரும் பிரிவில் கூறிய பரிசுத்தமானதை அசுத்தம் செய்தல் இதர பலவிதங்களிருக்கின்றன; ஆனால் இந்த ரகம் எல்லாவற்றிலும் அதிக துக்ககரமானது; ஏனென்றால், இந்த விதமான அபசாரிகள் இறந்தபிறகு இனி மனிதராகிறதில்லை; நிஜமாகவே, அவர்கள் உயிரோடிருக்கிறார்கள், ஆனால், விபரீதமானநினைவு தடுமாட்டத்தில் இடைவிடாமலிருக்கிறார்கள்; உயரத்தில் பறப்பதாக அவர்களுக்கே தோன்றுகிறது, அங்கே அவர்களிருக்கும்போது, அவர்கள் நிஜமான பொருள்கள் என்று நினைக்கிற வீணெண்ணங்களோடு விளையாடுகி

றூர்கள்; அவர்கள் இன்னும் மனிதர்களா யில்லாதபடியினால், அவன் அவள் என்று சொல்லப்படாமல் அது என்று சொல்லப் படுகிறூர்கள். நிஜமாகவே, சுவர்க்கத்து வெளிச்சத்தில் பார் வைக்குக் காண்பிக்கப் பட்டால், அவர்கள் எலும்புகூடுகள் போல் தோன்றுகிறூர்கள். சிலர், எலும்பின் நிறமுடைய எலும்புகூடுகள் போலும், சிலர் தீபோன்ற எலும்பு கூடுகள் போன்றும், மற்றவர் கள் தகிக்கப்பட்ட எலும்பு 'கூடுகள் போன்றும் தோன்றுகிறூர் கள். இவ்விதமான அபசாரக்காரர்கள் இறந்த பிறகு, அவ்வித மானவர்களாகிறூர்களென்று உலகத்தில் தெரியாது; காரணம் தெரியாதபடியினால், அது தெரியாமலிருக்கிறது. ஒரு மனிதன் முதலில் தெய்வீக விஷயங்களை ஒத்துக்கொண்டு அவைகளை நம்பி, பின்னிட்டு பின்னடைந்து அவைகளைமறுத்தால், அவன் அப்பொ ழுது அசுத்தமானவைகளோடு பரிசுத்தமானவைகளைச் சேர்த் துக் கலக்குகிறுனென்பதும், இவைகள் அப்படி சேர்க்கப் பட்டபோது, முழுமை நாசப்படுத்துவதினால் தவிர வேறு வித மாய் அவைகள் பிரிக்கப்பட முடியாதென்பதும் காரணமாகவே இருக்கிறது. ஆனால் இவைகள் அதிகத் தெளிவாய் அறியப்பட, பின் வருகிறபடி அவைகளின் ஒழுங்கில், அவைகள் விவரிக்கப் பட வேண்டும்:—I. மனிதனானவன் சித்தத்திலிருந்து நினைக்கிற தும், பேசுகிறதும், செய்கிறதுமாகிய எதுவும் நல்லதானாலும் தீங்கானதானாலும் அவனுக்கு உரித்தாக்கப்பட்டு அவனிடமே நிற்கிறது. II. ஆனால், ஆண்டவர் தன்னுடைய தெய்வீக பரி பாலனத்தினால், தீமையானது தானே தனிமையா யிருக்கவும், நன்மையானது தானே தனிமையா யிருக்கவும், இவ்விதமாக அவைகள் பிரிக்கக்கூடியதா யிருக்கவும் இடைவிடாமல் முன் னறிந்து ஒழுங்குபடுத்தி வைக்கிறூர் III ஆனால், மனிதனானவன் விசுவாசத்தின் உண்மைகளை முதலில் ஒத்துக்கொண்டு, அவைக ளின்படி வாழ்ந்து, பின்னிட்டு பின்னடைந்து அவைகளை மறுத் தால் இது செய்யப்பட முடியாது. IV. அவன் பிறகு பிரிக்க முடி யாத அளவு நன்மையையும் தீமையையும் ஒருமிக்கக் கலக்குகி றுன். V. ஒவ்வொரு மானிட பிராணியிலிருக்கும் நன்மை யும் தீமையும் பிரிக்கப்பட வேண்டுமாகையாலும், இவ்விதமானவ

னிடத்தில் பிரிக்க முடியாதாகையாலும், உண்மையாய் மானிட சம்பந்தமுள்ள எல்லாவற்றின் விஷயத்திலும் அவன் அழிக்கப் படுகிறான்.

227. இவ்வித துன்மார்க்கம் ஏன் இருக்கிறது என்பதற்கு இவைகள்தான் காரணங்கள்; ஆனால், அவைகளைப்பற்றித் தெரியாமல் அவைகள் பிரசித்தமில்லாமலிருக்கிறதினால், புத்திக்கு வெளிப்படையாக அவைகள் அப்படி விவரிக்கப்பட வேண்டும். முதலாவது: **சித்தத்திலிருந்து மனிதனானவன் நினைக்கிறதும், பேசுகிறதும் செய்கிறதுமாகிய எதுவும் நல்லதாகிலும் கெட்டதாகிலும், அவனுக்கு உரித்தாக்கப்பட்டு அங்கே நிற்கிறது.** இது மேலே காண்பிக்கப்பட்டது (பி. 76-81). ஏனென்றால், மனிதனுக்கு புறம்பான அல்லது ஸ்தூல ஞாபகமும், உள்ளான அல்லது சூக்கும ஞாபகமுமிருக்கிறது. இந்த பின் கூறிய ஞாபகத்தில், சித்தத்திலிருந்து உலகத்தில் தான் நினைத்ததும், பேசியதும், செய்ததுமாகிய பொதுவாகவும் சிறப்பாகவும் எல்லா பொருள்களும், ஒன்று குறைவில்லாதபடி பொதுவாகவும் சிறப்பாகவும் எல்லா பொருள்களும் அவ்வளவு பூர்த்தியாய் எழுதப்பட்டிருக்கின்றன. இந்த ஞாபகமானது, அவன் இறந்த பின் திறக்கப்படுவதும், அதன்படி அவன் தீர்ப்பு செய்யப்படுவதுமாகிய அவனுடைய ஜீவ புஸ்தகமாயிருக்கிறது. **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் (பி. 461-465) இதர அநேக விஷயங்கள், இந்த ஞாபகத்தைப்பற்றி (2) நிஜமான அனுபவத்திலிருந்து சொல்லப் படுகின்றன. இரண்டாவது: **ஆனால் ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தால் தீமையானது தானே தனித்திருக்கவும், நன்மையானது தானே தனித்திருக்கவும் இவ்விதமாக அவைகள் பிரிக்கக்கூடியதாயிருக்கவும், இடைவிடாமல் முன்னறிந்து ஒழுங்குபடுத்தி வைக்கிறார்.** ஒவ்வொரு மனிதனும் தீமையிலும் நன்மையிலும் இரண்டிலும் இருக்கிறான்; ஏனென்றால், அவன் தன்னிடமேயிருந்து தீமையிலிருக்கிறான், ஆண்டவரிடமிருந்து நன்மையிலிருக்கிறான்; இரண்டிலும் இருந்தாலொழிய மனிதன் உயிரோடிருக்க முடியாது. ஏனென்றால், அவன் தன்னிலேயே மாத்திரம் இருந்தால், இவ்விதமாக

தீமையில் மாத்திரமிருந்தால், அவனுக்கு உயிரென்பது கிடை யாது; அதுவன்றி அவன் ஆண்டவரில் மாத்திரம், இவ்விதமாக நன் மையில் மாத்திரமிருந்தாலும், உயிரென்பது எதுவும் அவனுக்கு இருக்கமாட்டாது; ஏனென்றால், பின் சொல்லிய உயிரின் நிலைமை யில், இடைவிடாமல், வருந்தி மூச்செறிந்து கொண்டு, மூச்சுவிடா தபடி செய்யப்பட்டவன் போலவும், மரண வேதனையில் இருப்ப வன் போலவும் ,அவன் இருப்பான்; முன் சொல்லிய ஜீவ நிலைமை யில், அவன் நாசமடைந்து போவான்; ஏனென்றால், யாதொரு நன்மையுமில்லாத தீமை தன்னில் தானே இறந்து போனதா யிருக்கிறது. ஆகையினால், ஒவ்வொரு மனிதனும் இரண்டிலு மிருக்கிறான்; ஆனால், ஒருவன் ஆண்டவரில் உள்ளுக்குள்ளாயும், புறம்பாய் தன்னிலேயே போலவும், மற்றவன் உள்ளுக்குள்ளாய் தன்னிலேயும், புறம்பாய் ஆண்டவரிலே போலவும் இருக்கிறார்க ளென்பது தான் வித்தியாசம்; பின் கூறியவன் தீமையிலிருக்கி றான், முன் கூறியவன் நன்மையிலிருக்கிறான்; அப்படி யிருந்தும் ஒவ்வொருவனும் இரண்டிலுமிருக்கிறான். கெட்டவன் கூட இரண் டிலுமிருக்கிற னென்பதற்குக் காரணம், அவன் தேசாசாரமான தும் சன்மார்க்கமானதுமாகிய வாழ்வின் நன்மையிலும், அத னுடன் புறம்பாய், பரமார்த்த வாழ்வின் ஏதோ ஒரு நன்மையிலும் யிருக்கிறனென்பதா யிருக்கிறது; அதுவுமன்றி, தான் நன்மையி லிருக்கச் சக்தியுள்ளவனு யிருக்கும்பொருட்டு, அவன் பகுத்தறி வுடைமையிலும் சுவேச்சையிலும் ஆண்டவரால் வைக்கப்படுகி றான்; இந்த நன்மையினால் தான் ஒவ்வொருவனும், கெட்ட மனித னும் கூட ஆண்டவரால் நடத்தப்படுகிறான். இந்த ஆலோசனைக ளால், ஆண்டவர், ஒன்று உள்ளே யிருக்கவும் மற்றதுவெளியே யிருக்கவும், தீமையையும் நன்மையையும் பிரிக்கிறாரென்றும், இவ்விதமாக அவைகள் கலக்காதபடி அவர் சித்தப்படுத்தி (3) வைக்கிறாரென்றும் அறிந்து கொள்ளலாம். மூன்றாவது ஆனால் ஒரு மனிதன் பக்தியின் உண்மைகளை முதலில் ஒத் துக் கொண்டு அதன்படி வாழ்ந்து பின்னிட்டு பின்னடைந்து அவைகளை மறுத்தால் இது செய்யப்பட முடியாது. முதல் கூறியதி லிருந்து மனிதன் சித்தத்திலிருந்து நினைத்து, சொல்லி, செய்கிற

வைகமெல்லாம் அவனுக்கு உரித்தாக்கப்பட்டு அவனில் நிலைக்கிறதென்றும், இரண்டாவது சொல்லியதிலிருந்து ஆண்டவர் தன்னுடைய தெய்வீக பரிபாலனத்தினால், நன்மை தனித்து தானே இருக்கவும், தீமை தனித்து தானே யிருக்கவும், அவைகள் பிரிக்கக்கூடியதா யிருக்கவும் முன்னறிந்து இடைவிடாமல் ஒழுங்குபடுத்தி வைக்கிறாரென்று, இவ்விதமாக இப்பொழுது சொல்லியதிலிருந்து வெளிப்படையா யிருக்கிறது. மேலும், இறந்த பிறகு அவைகள் ஆண்டவரால் பிரிக்கப்படுகின்றன; உள்ளுக்குள்ளாய் கெட்டவர்களாயும் புறம்பே நல்லவர்களாயு மிருக்கிறவர்கள் விஷயத்தில் நன்மையானது நீக்கப்பட்டு, இவ்விதமாக தங்கள் தீமைக்கு விடப்படுகிறார்கள்; உள்ளுக்குள்ளாய் நல்லவர்களாயிருந்து, புறம்பே மற்ற மனிதர்களைப்போல், சொத்தை அடைய உழைத்தும், கௌரவங்களை நாடியும், பலவித உலகப் பொருள்களில் இன்பமடைந்தும், சில மோகங்களுக்கு இடம் கொடுத்தும் இருக்கப்பட்டவர்கள் விஷயத்தில் எதிரிடையானது சம்பவிக்கிறது. ஆயினும், இவர்களிடத்தில் நன்மையும் தீமையும் ஒருமிக்க சேர்க்கப்படுகிறதில்லை. ஆனால் உள்ளானது வெளியானதுபோல வெவ்வேறாயிருக்கின்றது; இவ்விதமாக புறம்பான உருவத்தில் தீமையைப் போன்ற அநேக பொருள்களில் அவர்களிருந்திருக்கிறார்கள். ஆனால் உள்ளானதில் அப்படி இல்லை. புறம்பான உருவத்தில் நல்லவர்களைப்போல், தெய்வபக்தியிலும், ஆராதனையிலும், வார்த்தைகளிலும், செய்கைகளிலும் தோன்றி, உள்ளிருக்கிற உருவத்தில் கெட்டவர்களா யிருந்தவர்களாகிய துஷ்டர்கள் விஷயத்தில் எதிரிடையா யிருக்கிறது; அவர்கள் விஷயத்திலும் கூட, நன்மையிலிருந்து தீமையானது பிரிக்கப்படுகிறது. ஆனால், பக்தியின் உண்மைகளை முதலில் ஒத்துக்கொண்டு அவைகளின்படி வாழ்ந்து, பின்னிட்டு எதிரிடையானதில் பிரவேசித்து அவைகளை தள்ளினவர்கள் விஷயத்தில், முக்கியமாய் அவர்கள் அவைகளை மறுத்திருந்தால், நன்மைகளும் தீமைகளும் கொஞ்சமேனும் பிரிந்திராமல், ஒருமிக்க கலந்திருக்கின்றன. ஏனென்றால், அவ்விதமான மனிதன் நன்மையை தனதேயாக்கிக் கொண்டான், மேலும், தீமையையும் தனதேயாக்கிக்கொண்டான்; இவ்விதமாக அவைகளை சேர்த்து கலந்து

(4) விட்டான். நான்காவது: நன்மையையும் தீமையையும்அவைகள் பிரிக்கப்படாத அளவு அவன் அப்பொழுது கலக்கிறுன். இது கொஞ்சம் முன் சொல்லியதிலிருந்து பின்தொடருகிறது; தீமையானது நன்மையி லிருந்தும் நன்மையானது தீமையிலிருந்தும் பிரிக்கப்படாவிட்டால், சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது இருக்க முடியாது. ஒவ்வொரு மானிட பிராணியும், இவைகளில் ஏதோ ஒன்றில் இருக்கவேண்டும், அவன் 'இரண்டிலுமிருக்க முடியாது; அப்படி யிருந்தால், அவன் சுவர்க்கத்தில் ஒருகாலத்திலும், நரகத்தில் ஒரு காலத்திலு மிருக்கக்கூடும். சுவர்க்கத்தி லிருக்கும் போது நரகத்துக்கு அனுகூலமாக அவன் நடப்பான், நரகத்திலிருக்கும் போது:சுவர்க்கத்துக்கு அனுகூலமாய் நடப்பான்; இவ்விதமாகத் தன்னைச்சுற்றியிருக்கும் எல்லாருடைய உயிர்களையும் தேவர்களுக்குள்ளிருக்கும் தெய்வ உயிரையும், பேய்களுக்குள்ளிருக்கும் நரகத்து உயிரையும் அவன் அழிப்பான்; இவ்விதமாக ஒவ்வொருவனுடைய உயிரும் அழிந்துபோகும்; ஏனென்றுல், ஒவ்வொருவனுக்கும் அவன் சொந்த உயிர்வேண்டும்; எவனும் மற்றவன் உயிரில் வாழ்கிறதில்லை; இன்னும் குறைவாய் எதிரிடையான உயிரில் வாழ்கிறதில்லை; அதனுல்தான், இறந்தபிறகு, அவன் சூக்குமசரீர ஆன்மாவாக அல்லது சூக்கும மனிதனுக ஆகிறபோது, ஒவ்வொரு மனிதனிலும், ஆண்டவர் தீமையிலிருந்து நன்மையையும், நன்மையிலிருந்து தீமையையும், உள்ளுக்குள்ளாய் தீமையிலிருக்கப் பட்டவர்களிடத்தில் தீமையிலிருந்து நன்மையையும், உள்ளுக்குள்ளாய் நன்மையி லிருக்கப்பட்டவர்களில் நன்மையிலிருந்து தீமையையும் பிரிக்கிறுர்; அது அவர் சொன்னபடி யிருக்கிறது: "உள்ளவன் எவனே அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; இல்லாதவன் எவனே அவனிடத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்" (மத்தே. XIII. 12, XXV. 29; மார்க் IV. (5) 25; லூக்கா. VIII. 18, XIX. 26.). ஒவ்வொருமானிட பிராணியிலிருந்தும் நன்மையும்தீமையும் பிரிக்கப்படவேண்டுமாகையாலும், அப்பேர்ப்பட்டவனில் பிரிக்கப்பட முடியாதாகையாலும், உண்மையாய் மானிடத் தன்மையுள்ளவைகள் எல்லாம் சம்பந்தபட்டவரையில் அவன் அழிக்கப்படுகிறுன். தான் இஷ்டப்பட்டால், எது உண்மையா

னது, எது நன்மையானதென்று பார்த்து தெரிந்துகொள்ளும் சக்தியிலும், சுதந்தரத்திலிருந்து இச்சிக்கவும், நினைக்கவும், பேசவும், அதைச் செய்யவும் சக்தியுடைமையிலும், உண்மையான மானிடத்தன்மை ஒவ்வொருவனுக்கும் பகுத்தறி வுடைமையிலிருந்து முன் காண்பித்தபடி வருகிறது. ஆனால், இந்த சுவேச்சையானது அதன் பகுத்தறி வுடைமையுடன், தங்களுக்குள்ளேயே நன்மையையும் தீமையையும் கலந்து விட்டவர்களிடத்தில் அழிக்கப்பட்டிருக்கின்றன; அவர்கள் நன்மையிலிருந்து தீமையைப் பார்க்க மாட்டார்கள், இதுவுமல்லாமல் தீமையிலிருந்து நன்மையையும் அறிந்துகொள்ள மாட்டார்கள்; ஏனென்றால், அவைகள் ஒரு ஏக பொருளாகின்றன; ஆகையினால், சக்தியிலும் சாமர்த்தியத்திலும் இன்னும் பகுத்தறிவுடைமை அவர்களுக்கு கிடையாது; ஆகையினால் சுவேச்சையும் கிடையாது. இந்த காரணத்துக்காக, மேல் கூறியபடி அவர்கள் கேவலம் விபரீதமான பிரமைகளா யிருக்கிறார்கள்; தங்கள் மேல் போடப்பட்ட கொஞ்சம் தோலோடு எலும்புகளைப் போல் தவிர, இன்னும் அதிகமாக மனிதர்களாகத் தோன்றுகிறதில்லை; ஆகையினால், அவர்கள் சொல்லப்பட்டபோது அவன், அவள் என்று அல்லாமல், அது என்று சொல்லப்படுகிறார்கள். பரிசுத்தமானவைகளை அசுத்தமானவைகளோடு இம்மாதிரி கலக்கிறவர்கள் கதி அவ்விதமாக யிருக்கிறது. ஆனால், இன்னும் இதைப்போன்றவைகளா யில்லாத அசுத்தத்தில் பலவிதங்கள் இருக்கின்றன; அவைகளைப் பற்றி அடுத்த பிரிவில் சொல்லப்படும்.

228. அவைகளைப்பற்றி அறிந்திராத எந்த மனிதனும் பரிசுத்தமான பொருள்களை இவ்விதமாக அசுத்தப்படுத்துகிறதில்லை; ஏனென்றால், அவைகளைக் குறித்து தெரியாதவன் அவைகளை ஒத்துக்கொள்ளவும் மாட்டான், பின்னிட்டு மறுக்கவும் மாட்டான். ஆகையினால், கிருஸ்துவ உலகத்துக்கு வெளியே யிருக்கப்பட்டவர்களும், ஆண்டவரைப் பற்றியும், அவரால் வரும் மீட்சியைப் பற்றியும், ஈடேற்றத்தைப் பற்றியும் யாதொன்றும் தெரியாதவர்களும், அதை அவர்கள் பெற்றுக்கொள்ளாத போதும், அவர்கள்

அதற்கு விரோதமாய் பேசும்போதும் கூட, இந்த பரிசுத்தமான பொருளை அசூசிப்படுத்துகிறதில்லை. இதுவுமல்லாமல், யூதர்களே கூட இதை அசுத்தப்படுத்துகிறதில்லை; ஏனென்றால், பாலியத்தி லிருந்து அதைப் பெற்றுக்கொண்டு ஒத்துக்கொள்ள அவர்களுக்கு இஷ்டமில்லை. அவர்கள் அதைப்பெற்றுக்கொண்டு ஒத்துகொண்டு, அரிதாய் நேரிடுகிறபடி பின்னிட்டு அதை மறுத்தால், விஷயம் வேறுமாதிரி இருக்கும்; ஆயினும் அவர்களில் அநேகர் அதை புறம்பே ஒத்துக்கொண்டு, உள்ளுக்குள்ளே மறுத்து, வேஷதாரிக ளைப் போலிருக்கிறார்கள். ஆனால், முதலில் ஏற்றுக்கொண்டும் ஒத் துக்கொண்டும், பின்னிட்டு ஓடிப்போய் மறுக்கிறவர்கள், பரிசுத்த மான பொருள்களை அசுத்தமான பொருள்களோடு ஒருமிக்க கலப் (2) பதினல் அசுத்தப் படுத்துகிறார்கள். இளம்பிராயத்திலும் பிள்ளைபிராயத்திலும் அவர்கள் அதைப்பெற்றுக்கொண்டு ஒத்துக் கொள்ளுதல், ஒன்றுக்கும் உதவுகிறதில்லை; ஏனென்றால், இது எல்லா கிருஸ்துவர்களாலும் செய்யப்படுகிறது; ஏனென்றால், அவர்கள் அப்பொழுது பக்திக்கும் தருமத்துக்கும் சேர்ந்த பொருள்களை, எந்த பகுத்தறிவுடைமையிலிருந்தும் சுவேச்சையி லிருந்தும், அதாவது சித்தத்திலிருந்து புத்தியில் அல்லாமல், ஞாபகத்திலிருந்தும் உபாத்தியாயரிடத்துள்ள நம்பிக்கையிலிருந் தும் பெற்றுக்கொண்டு ஒத்துக் கொள்ளுகிறார்கள்; அவைகளை அனுசரித்து அவர்கள் வாழ்ந்தால், அது குருட்டுத்தனமாய் கீழ்ப் படிதலாயிருக்கிறது. ஆனால், யௌவனத்துக்கும் புருடத்துவத் துக்கும் வளரும்போது அவன் படிப்படியாய் செய்கிறபடி, ஒரு மனிதனானவன் தன்னுடைய பகுத்தறிவுடைமையையும் சுவேச்சை யையும் உபயோகிக்குங்கால், அப்பொழுது உண்மைகளை ஒத்துக் கொண்டு, அவைகளின்படி வாழ்ந்து, பின்னிட்டு அவைகளை மறுத் தால், அவன் பரிசுத்தப் பொருள்களை அசுத்தப் பொருள்களோடு கலந்து, மனிதனா யிருப்பதிலிருந்து, மேல் கூறியபடி அவ்வித குரூ பாங்கியா யிருக்கிறான். ஆனால், ஒரு மனிதனானவன், தன்னுடைய சொந்த பகுத்தறிவுடைமையையும் சுவேச்சையையும் தான் உண் டான காலமுதல் தீமையிலிருந்தால், அதாவது சிறுவயதிலேயே கூட எஜமானனாகி, பின்னிட்டு பக்தியின் உண்மைகளை ஒத்துக்

கொண்டு அவைகளை அனுசரித்து வாழ்ந்தால், தான் சாகும்வரை யில் பிறகு அவைகளிலிருக்கும் பட்சத்தில், அவன் அவைகளைக் கலக்கிறதில்லை; ஏனென்றால், ஆண்டவர், அப்பொழுது முன் ஜீவியத்தின் தீங்குகளை பின் ஜீவியத்தின் நன்மைகளிலிருந்து பிரிக்கிறார். மனம் திரும்புகிறவர்கள் எல்லாருடைய விஷயத்திலும், அப்படியே செய்யப்படுகிறது. ஆனால் இவைகளைப்பற்றி, பின் வருவதில் அதிகம் சொல்லப்படும்.

229. III. **பரிசுத்தமானதை அசுத்தப்படுத்தலில் பல விதங்கள் இருக்கின்றன; ஆனால் இந்த விதமானது எல்லாவற்றிலும் மிகவும் கெட்டது.** மிகவும் சாதாரண அருத்தத்தில், அசூசிசெய்தல் என்பதினால் எல்லா தெய்வ நிந்தனையும் கருதப்படுகிறது; ஆகையினால் அவபக்திக்காரர்கள் என்பதினால், இருதயத்தில் கடவுளையும், வேதத்தின் பரிசுத்தத்தையும், அதனால், பரிசுத்தமாகவேயிருக்கிறதும், அதைப்பற்றி அவர்கள் அவபக்தியாய்ப் பேசுகிறதுமான திருச்சபையின் பரமார்த்த விஷயங்களையும், மறுக்கிறவர்களாகிய எல்லா தெய்வ நிந்தனைக்காரர்களையும் கருதப்படுகின்றன. ஆனால், நாம் இப்பொழுது, அவர்களைப்பற்றிப் பேசாமல், கடவுளை நம்புவதாக சொல்லி, வேதத்தின் பரிசுத்தத்தை ஆதரித்து, திருச்சபையின் பரமார்த்த விஷயங்களை ஒத்துக் கொள்ளுகிறவர்களைப் பற்றி பேசுவோம்; ஆயினும் அவர்களில் அநேகர் வாயினால் பேசுகிறவர்களா யிருக்கிறார்கள். இவர்கள் ஏன் தெய்வ நிந்தை செய்கிறார்களென்பதற்குக் காரணம், வேதத்தில் பரிசுத்தமாயிருப்பவை அவர்களிலும் அவர்களோடும் இருக்கிறதென்பதும், அவர்களிலிருக்கிறதும், அவர்களுடைய புத்தியினுடையவும் சித்தத்தினுடையவும் ஏதோ ஒரு பாகமாகிறதுமாகிய இதை அசுத்தப்படுத்துகிறார்களென்பதுமா யிருக்கிறது; ஆனால், தெய்வத்தையும் தெய்வீக பொருள்களையும் மறுக்கிற அவபக்திக்காரர்களிடத்தில், தாங்கள் அசுத்தப்படுத்தக் கூடிய பரிசுத்தமானது ஒன்றுமில்லை. நிஜமாகவே, அவர்கள் அசுத்தம் செய்யப்பட்டவர்கள், அப்படியிருந்தும் அசுத்தமானவர்கள் அல்ல.

230. பத்து கற்பனையில் இரண்டாவதில், **உன்னுடைய கடவுளின் நாமத்தை நீ அசுத்தப் படுத்தாதிருப்பாயாக** என்பதினால் பரிசுத்தமானதை அசுத்தப்படுத்தலென்று அருத்தம் கொள்ளப்படுகிறது; ஆண்டவர் கற்பித்த பிரார்த்தனையில் **உம்முடைய நாமம் பரிசுத்தமாயிருக்கட்டும்** என்பதினால் அசுத்தம்செய்யப்படக் கூடாதென்று கருதப்படுகிறது. கடவுளின் நாமம் என்பதினால், என்ன அருத்தம் என்று கிருஸ்துவ உலகத்தில் யாருக்கும் தெரியாது. விண்ணுலகத்தில் மண்ணுலகத்தில் போல் நாமங்களில்லாமல், ஒவ்வொருவனும் தன்னுடைய அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் குணத்தை அனுசரித்துப் பெயரிடப்படுகிறானென்று, தெரிந்திருக்கப் படவில்லை என்பது காரணமா யிருக்கிறது; ஏனென்றால், எவனாவது ஒருவன் மற்றவர்களுடன் கூடினாலும், சகவாசம் செய்தாலும், அப்பொழுதே அங்கே அவனுடைய குணத்தை அனுசரித்து உடனே பெயரிடப்படுகிறான். அங்கே நெடுங்கணக்கில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு பொருளைக் கருதுகிற படியினாலும், ஒருவனுடைய பெயராகிற ஒரு வார்த்தையாக சேர்க்கப்பட்ட அநேக எழுத்துகள், அந்த பொருளின் முழு நிலைமையையும் அகப்படுத்துகிற படியினாலும், நாமகரணம் என்பது ஒவ்வொன்றுக்கும் பெயர் கொடுக்கக்கூடியதா யிருக்கிற சூக்கும பாஷையில் செய்யப்படுகிறது. இது விண்ணுலகத்தின் ஆச்சரியங்களில் ஒன்று. இந்த ஆலோசனைகளால், வேதத்தில் கடவுளின் பெயர் கடவுளையும், அவரிலிருக்கிறதும் அவரிடமிருந்து புறப்படுகிறதுமான, தெய்வத்தன்மையையும் அருத்தம் கொள்ளப்படுகிறதென்று விசதமாகிறது; வேதமானது வெளிவரும் பிராண யிருப்பதினால், அது கடவுளுடைய பெயரா யிருக்கிறது; திருச்சபையின் பரமார்த்த பொருள்கள் என்று சொல்லப்பட்ட எல்லா தெய்வீக பொருள்களும் வேதத்திலிருந்து வருகிறபடியினால், அவைகள் கூட கடவுளுடைய நாமமா யிருக்கின்றன. அந்த ஆலோசனைகளால், பத்து கற்பனையில் இரண்டாவதில், **கடவுளுடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக** என்பதினாலும், ஆண்டவர் கற்பித்த பிரார்த்தனையில், **உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக** என்பதினாலேயும் என்ன கருதப்படுகிறதென்று அறிந்து

கொள்ளலாம். கடவுளின் பெயரும் ஆண்டவரின் பெயரும் இரண்டு ஏற்பாட்டிலும் அநேக இடங்களில் அதைப்போன்ற அருத்தம் கொள்ளுகிறது (மத்தே. VII. 22; X. 22; XVIII. 5,20; XIX. 29; XXI. 9; XXIV. 9, 10; யோவான் I. 12; II. 23; III, 17, 18; XII. 13, 28; XIV. 14, 16; XVI. 23, 24, 26, 27; XVII. 6; XX. 31; இவைகளிலும், இவைகளைத் தவிர வேறு இடங்களி (3) லும், பழைய ஏற்பாட்டில் அநேக இடங்களிலும்). பெயர் என்பதின் இந்த அருத்தம் தெரிந்தவனுக்கு ஆண்டவரின் பின் வரும் வார்த்தைகளால் என்ன அருத்தம் கொள்ளப் படுகிற தென்று தெரியலாம்: "தீர்க்கதரிசி என்னும் நாமத்தினிமித்தம் தீர்க்க தரிசியை ஏற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்க தரிசிக்கேற்ற பலனை அடைவான்; நீதிமான் என்னும் நாமத்தினிமித்தம் நீதி மானை ஏற்றுக் கொள்ளுகிறவன் நீதிமானுக்கேற்ற பலனை அடை வான். சீஷன் என்னும் நாமத்தினிமித்தம் இந்த சிறியரில் ஒருவ னுக்கு ஒரு கலசம் தண்ணீர் மாத்திரம் குடிக்கக் கொடுக்கிறவனும் தன் பலனை அடையாமல் போகான் என்று, மெய்யாகவே உங்க ளுக்கு சொல்லுகிறேன்" (மத்தே. X. 41, 42). தீர்க்கதரிசி, நீதி மான், சீஷன் எனும் நாமங்களால், ஒரு தீர்க்கதரிசியையும், நீதி மானையும் சீஷனையும் மாத்திரம் அறிந்து கொள்ளுகிறவனுக்கு, சப்தார்த்தத்தைத்தவிர வேறு அருத்தம் தெரியாது; அதுவுமல்லா மல், அவனுக்கு ஒரு தீர்க்கதரிசியின் பலன் என்னவென்றும், நீதி மான் பலன் என்னவென்றும், ஒரு சீஷனுக்கு குடிக்கக்கொடுத்த ஒரு கலசம் தண்ணீரின் பலன் என்னவென்றும் தெரியாது; அப் படி யிருந்தாலும், ஒரு தீர்க்கதரிசியின் பெயர் என்பதினாலும் பலன் என்பதினாலும், தெய்வீக உண்மைகளில் இருக்கப்பட்ட வர்களின் நிலைமையும் சுகத்தையும் கருதப்படுகிறது. நீதிமானின் பெயரினாலும் பலனினாலும், தெய்வீக நன்மைகளில் இருக்கப்பட்ட வர்களின் நிலைமையும் சுகத்தையும் கருதப்படுகிறது; சீஷன் என் பதால், திருச்சபையின் பரமார்த்த பொருள்களில் சிலவற்றில் இருக்கப்பட்டவர்களின் நிலைமை கருதப்படுகிறது; ஒரு கலசம் குளிர்ந்த ஜலம் என்று உண்மையின் ஏதோ ஒன்று என்று அருத் தம் கொள்ளுகிறது. பெயர் என்பதால், அன்பினுடையவும்

ஞானத்தினுடையவும் அல்லது நன்மையினுடையவும் உண்மையினுடையவும் நிலைமையின் சுபாவம் கருதப்படுகிறதென்பது, ஆண்டவரின் பின்வரும் வார்த்தைகளால் கூட விசதமாகிறது: "வாசல் வழியாய்பிரவேசிக்கிறவனே ஆடுகளை மேய்ப்பவனுயிருக்கிறுன்' வாசலைக் காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறுன்; ஆடுகளும் அவன் சத்தத்துக்கு செவி கொடுக்கின்றது, அவன் தன்னுடைய ஆடுகளை பேர் சொல்லி கூப்பிட்டு அவைகளை வெளியே நடத்திக் கொண்டு போகிறுன்" (யோவா. X. 2, 3). ஆடுகளை பேர் சொல்லி கூப்பிடுதல் என்பது •தருமத்தின் நன்மையிலிருக்கிற ஒவ்வொருவனையும், அவனுடைய அன்பினுடையவும் ஞானத்தினுடையவும் நிலைமைக்குத்தக்கபடி கற்பித்தலும் வழிகாட்டலுமாயிருக்கிறது; ஒன்பதாவது வாக்கியத்தில் விசதமாகிறபடி, கதவு என்பதினுல் ஆண்டவர் என்பது அருத்தம் கொள்ளப்படுகிறது: "நானே வாசல்; என் வழியாய் ஒருவன் உட்பிரவேசித்தால், அவன் ரட்சிக்கப்படுவான்". இதனுல், எவனுவது ஒருவன் இரட்சிக்கப்பட வேண்டுமானுல் ஆண்டவரையே சமீபிக்க வேண்டுமென்பது வெளிப்படையாயிருக்கிறது; அவரை அணுகுகிறவன் ஆட்டின் மேய்ப்பவனுயிருக்கிறுன்; அவரை அணுகாதவன், அதே அத்தியாயத்தின் முதல் வாக்கியத்தில் சொல்லப்பட்டபடி கள்ளனும் கொள்ளைக் காரனுமாயிருக்கிறுன்.

231. பரிசுத்தமானதை அசுத்தப்படுத்தல் என்பதினுல், வேதத்திலிருந்து பக்தியின் உண்மைகளையும் தருமத்தின் நன்மைகளையும் தெரியாதவர்களாலும், அவபக்தியினுல் அவைகளை முழுமையும் தள்ளுகிறவர்களாலு மல்லாமல், அவைகளை அப்படித் தெரிந்து, கொஞ்சமட்டும் கூட ஒத்துக் கொள்ளுகிறவர்களால் செய்யப்படும் அசுத்தம் என்று அருத்தம் கொள்ளப்படுகிறபடியினுல், இப்பொழுது பின் வருவது முன் கூறியவர்களைப்பற்றி யல்லாமல் பின் கூறியவர்களைப்பற்றி சொல்லப்படுகிறது. அவர்களுடைய அசுத்தம் பலவிதங்களா யிருக்கின்றன, சிலது சுலபமானதாகவும், சிலது அதிக கொடியதாகவுமிருக்கிறது; ஆனுல் அவைகள் பின்வரும் ஏழுக்கும் சம்பந்தப்படுத்தலாம்: முதல்வித அசுத்

தம், வேதத்திலிருந்தும் அதைப்பற்றியும் அல்லது திருச்சபையின் தேய்வீக பொருள்களிலிருந்தும், அவைகளைப் பற்றியும் பரிகாசம் செய்கிறவர்களால் செய்யப்படுகிறது. இது சிலரால், கெட்ட வழக்கத்திலிருந்து, வேதத்திலிருந்து பெயர்களை அல்லது வசனங்களை எடுத்து, உசிதமில்லாததும் சில சமயங்களில் அசுத்தமாகிய குறிப்புகளில் கொண்டுவந்து செய்யப்படுகிறது; இது வேதத்தினிடத்து இருக்கும் கொஞ்சம் இகழ்ச்சியுடன் சேர்க்கப்பட வேண்டும்; என்றாலும், பொதுவும் சிறப்பான எல்லா விஷயங்களிலும் வேதமானது தெய்வீகமாகவும் பரிசுத்தமாகவுமிருக்கிறது; ஏனென்றால், அதிலுள்ள ஒவ்வொரு வசனமும், தன்னுடைய இருதயத்தில், சுவர்க்கத்துடன் அது சம்பந்தப்படுகிற தெய்வீகமான எதோ சிலதை மறைக்கிறது. ஆனால், இந்த வித அசூசி, வேதத்தின் பரிசுத்தத்தை ஒத்துக் கொள்ளுதலுக்கும், அதைப் பரிகாசம் செய்கிறவர்களால் கொண்டு வரப்பட்ட சம்பாஷணையின் அவமரி(2)யாதைக்கும் தக்கபடி சுலபமானதாகவும் அல்லது அதிக கொடியதாகவு மிருக்கிறது. இரண்டாவது விதமான அசுத்தம், தெய்வீக உண்மைகளை அறிந்துகொண்டும் ஒத்துக்கொண்டும், அப்படியிருந்தும் அவைகளுக்கு எதிரிடையாய் வாழ்கிறவர்களால் செய்யப்படுகிறது. ஆனால், தெரிந்து கொள்கிறவர்கள் மாத்திரம், அதிக லேசாய் அசுத்தப்படுத்துகிறார்கள், அதனுடன் ஒத்துக்கொள்ளுகிறவர்கள் அதிக கொடுமையாய் அசுத்தப் படுத்துகிறார்கள்; ஏனென்றால், தெரிந்து கொள்ளுதலானது ஒருபிரசங்கி கற்பிக்கிறதற்கு வேறுவிதமாய் அல்லாமல் மாத்திரம் கற்பித்து, தன்னிடமேயிருந்து சித்தத்துடன் தானே சேருகிறதில்லை; ஆனால் ஒத்துக் கொள்ளுதலானது, தானே சேருகிறது; ஏனென்றால், சித்தத்தின் சம்மதமில்லாமல் எதுவும் ஒத்துக்கொள்ளப்பட முடியாது. அப்படி யிருந்தாலும், சேர்க்கை பலவிதங்களா யிருக்கின்றன. ஒத்துக் கொள்ளப்பட்ட உண்மைகளுக்கு எதிரிடையாய் வாழ்க்கை இருந்தால், அசுத்தமானது சேர்க்கைக்குத் தகுந்தபடி யிருக்கிறது. இவ்விதமாக, பழிவாங்குதலும், வன்மங்களும், விபசாரங்களும், வேசித்தனங்களும், மோசங்களும், வஞ்சகங்களும், தெய்வ நிந்தனைகளும், பொய்களும், கடவுளுக்கு விரோதமான பாவங்களென்று ஒருவன்

ஒத்துக்கொண்டு, அப்படியிருந்தும் அவைகளைச் செய்தால், அவன் இந்த அதிக கொடிய அசுத்தத்திலிருக்கிறான்; ஏனென்றால், ஆண்டவர் சொல்லுகிறதாவது: "தன்னுடைய ஆண்டவருடைய சித்தத்தை அறிந்துகொண்டும், அவருடைய சித்தத்தின்படி செய்யாமலிருக்கிற ஊழியக்காரன் அநேக அடிகள் அடிக்கப்படுவான்" (லூக். XII. 47). வேறு இடத்தில்: "நீங்கள் குருடரா யிருந்தால், உங்களுக்கு பாவமிராது, நீங்கள் காண்கிறேனென்று சொல்லுகிற படியினால் உங்கள் பாவம் நிலை நிற்கின்றது" (யோவா. IX. 41). ஆனால் உண்மையின் தோற்றங்களை ஒத்துக்கொள்ளுதல் ஒன்று, உத்தமமான உண்மைகளை ஒத்துக்கொள்ளுதல் வேறு; உத்தமமான உண்மைகளை ஒத்துக்கொண்டு அப்படி யிருந்தும் அவைகளின்படி வாழாதவர்கள் கேவல சலனமற்ற பொருள்களைப்போல், விண்ணுலகத்தில் தங்களுடைய குரலினுடையவும் பேச்சினுடையவும் தொனியில், உயிரின் வெளிச்சமும் சூடுமில்லாமல் தோன்றுகி றார்கள். (3) மூன்றாவது வித அசுத்தம், வேதத்தின் சப்தார்த்தத்தை கெட்ட ஆசைகளையும் பொய்யான கொள்கைகளையும் ஸ்திரப்படுத்த பிரயோகிக்கிறவர்களால் செய்யப்படுகிறது. பொய்யை ஸ்திரப்படுத்தல் உண்மையை மறுத்தலா யிருப்பதினாலும், தீமையை ஸ்திரப்படுத்தல் நன்மையை தள்ளுதலா யிருப்பதினாலும், இது இப்படி செய்யப்படுகிறது; வேதமானது அதன் உள்ளுக்குள்ளான அருத்தத்தில், தெய்வீக உண்மையையும் தெய்வீக நன்மையையும் தவிர வேறு ஒன்றுமில்லை; சப்தார்த்தமா யிருக்கிற இறுதியான அருத்தத்தில், இது ஆண்டவரைப் பற்றியும், மோக்ஷத்தின் வழியையே பற்றியும் கற்பிக்கும்போது தவிர, சுத்தமான உண்மைகளில் அல்லாமல், உண்மையின் தோற்றங்களாக சொல்லப்படுகிற துணி கட்டப்பட்ட உண்மைகளில் தோன்றுகிறது; ஆகையினால், அந்த அருத்தமானது பலவித வேதப்புரட்டுகளை ஸ்திரப்படுத்த புரட்டப்படக் கூடும். ஆனால், தீமையான ஆசைகளை ஸ்திரப்படுத்துகிறவன், தெய்வீக நன்மைகளுக்கு கொடுமை செய்கிறான்; பொய்யான கொள்கைகளை ஸ்திரப்படுத்துகிறவன் தெய்வீக உண்மைகளுக்கு கொடுமை செய்கிறான். இந்த பின் கூறிய கொடுமை, உண்மையை பொய்ப்படுத்தலென்று சொல்லப்படுகிறது;

முன் கூறியது, நன்மையை கலந்து கெடுத்தல் என்று சொல்லப் படுகிறது; வேதத்தில் இரண்டும் இரத்தங்கள் என்பதால் அருத்தம் கொள்ளப்படுகின்றன. ஏனென்றால், ஆண்டவரிட மிருந்து புறப்படும் உண்மையின் ஆவி என்று கூட சொல்லப்பட்ட பரமார்த்த பரிசுத்தம் வேதத்தின் சப்தார்த்தத்தின் ஒவ்வொரு தனித்த நுண்ணியதிலு மிருக்கிறது. இந்த பரிசுத்தமானது வேதமானது பொய்யாக்கப்பட்டு கலந்து கொடுக்கப்பட்ட போது நோவப் பண்ணப்படுகிறது. இதுதான் அசுத்தமென்பது, (4)வெளிப்படையாயிருக்கிறது. நான்காவதுவித அசுத்தம், வாயினாலே பயபக்தியுள்ளவைகளையும் பரிசுத்தமானவைகளையும் பேசி, தோனியிலும் சைகையிலும் அவைகளிடத்து கொள்ளும் அன்பின் ஆசைகள் இல்லாதபோது இருக்கிறதாக நடித்து, அப்படியிருந்தும் இருதயத்தில் அவைகளை நம்பாமலும் அவைகளிடத்து ஆசை கொள்ளாமலும் இருக்கப்பட்டவர்களால் செய்யப்படுகிறது. இவர்களில் அநேகர், இறந்தபிறகு எல்லா உண்மையும் நன்மையும் நீக்கப்பட்டு, பிறகு வெளியேயுள்ள இருளில் அனுப்பப்படுகிற வேஷதாரிகளாகவும் பாரிசேயர்களாகவு மிருக்கிறார்கள். இவ்வித அசுத்தத்தினால் தெய்வத்துக்கும், வேதத்துக்கும் விரோதமாயும், அதனால் வேதத்தின் பரமார்த்த பொருள்களுக்கு விரோதமாயும்கூட தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், உலகத்தில் செய்தது போல தேவபக்தியுள்ளவைகளையும் பரிசுத்த மானவைகளையும் உளற விரும்பி, ஆனால் அப்படி செய்ய சக்தியில்லாமல் ஊமைமைகளைப்போல் பேசமுடியாமல் அந்த இருட்டில் உட்காருகிறார்கள்; ஏனென்றால், பரமார்த்த உலகத்தில் ஒவ்வொருவனும் தான் நினைக்கிறபடி பேச பலவந்தம் செய்யப்படுகிறான்; ஆனால் ஒரு வேஷதாரியானவன் தான் நினைக்கிறதைவிட வேறுவிதமாய் பேசவிரும்புகிறான்; ஆகையினால், வாயில் ஒரு இடறு உண்டாகிறது; அதனால் அவர்கள் வாய் பிதற்றமாத்திரம் கூடும். ஆனால், வஞ்சகர்கள், கடவுளுக்கு விரோதமாய் ஸ்திரப்படுத்தலுக்கும், அவருக்கு அனுகூலமாக புறம்பே தர்க்கித்தலுக்கும் தக்கபடி அதிக சுலபமாக அல்லது கொடுமையாக யிருக்கிறார்கள். (5)ஐந்தாவதுவித அசுத்தம் தெய்வீகமானதை தங்களுக்கே ஆரோபிக்

கிறவர்களால்செய்யப்படுகிறது. ஐசாயாவில் பதினாங்காவது அத்தியாயத்தில் லூசிபர் என்பதால் இவர்கள் கருதப்படுகிறார்கள். அங்கே கூட அவர்கள் கதி சொல்லப்படுகிற அதேஅத்தியாயத்தின் நான்காவது இருவத்திஇரண்டாவது வாக்கியங்களிலிருந்து விசதமாகிறபடி லூசிபர் என்பதால் பேபல் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. வெளிப்படுத்தின விசேஷத்தில் பதினேழாவது அத்தியாயத்தில் வேசி மிகவும் சிவப்புள்ள மிருகத்தின்பேரில் உட்கார்ந்துகொண்டிருந்தலென்பதினால், அதேகூட கருதப்பட்டு விவரிக்கப்படுகின்றது. பேபல் என்பதும் சால்டியா என்பதும் வேதத்தில் அநேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன; அங்கே பேபல் என்பதால், நன்மையை அசுத்தப்படுத்தலென்றும், சால்டியா என்பதால் உண்மையை அசுத்தப் படுத்தலென்றும், தெய்வீகமானதை தங்களுக்கே ஆரோபிக்கிறவர்கள் விஷயத்தில் அவை (6)கள் இரண்டும் அருத்தம் கொள்ளப்படுகின்றன. ஆறுவதுவித அசுத்தம் வேதத்தை ஒத்துக்கொண்டு,அப்படியிருந்தும் ஆண்டவரின் தெய்வீக தன்மையை மறுக்கிறவர்களால் செய்யப்படுகின்றன. இவர்கள் உலகத்தில் சோசினியர்கள் என்றும், அவர்களில் சிலர் ஏரியர்கள் என்றும் சொல்லப்படுகிறார்கள். இருவகையார் கதியும், சுவர்க்கத்தில் சேர்த்துக்கொள்ளப்படவும், மோக்ஷம் அடையும் நம்பிக்கை இல்லாமல் போகிறவகையில், வீணில் ஆண்டவரை அல்லாமல், பிதாவை வேண்டிக்கொண்டும், பிதாவை இடைவிடாமல் பிரார்த்தித்தும், சிலர் குமாரன் பொருட்டு கூட பிரார்த்தித்தும், பிறகு கடவுளை மறுக்கிறவர்களுக்குள் நரகத்தில் விடப்படுகிறார்கள் என்பதாயிருக்கிறது. பரிசுத்த ஆவியை நிந்தனை செய்கிறவர்கள் என்பதால் இவர்கள் கருதப்படுகிறார்கள்; இவர்களுக்கு இந்த உலகத்திலாவது பின்வரும் உலகத்திலாவது விமோசனம் கிடையாது (மத்தே. XII. 32). கடவுளானவர், தன்னில் திரியேகத்துவமுடையவரும் தன் தன்மையினும் முக்கியாம்சத்திலும் ஏகமானவரானவர் என்பதும் இந்த கடவுள் ஆண்டவர் என்பதும் காரணமாயிருக்கிறது; ஆண்டவர் சுவர்க்கமாகக்கூட இருப்பதினாலும், அதனால், சுவர்க்கத்திலிருப்பவர்கள் ஆண்டவரில் இருப்பதினாலும், ஆண்டவரின் தெய்வீகத்தை மறுக்கிறவர்கள் சுவர்க்கத்தில் சேர்க்

கப்படவும், ஆண்டவரில் இருக்கவும்முடியாது. ஆண்டவர் சுவர்க்க மென்றும், அதனால் சுவர்க்கத்தி லிருப்பவர்கள் ஆண்டவரில்
(7) இருப்பதாகவும் மேலே காண்பிக்கப்பட்டது. ஏழாவது வித அசுத்தம் தெய்வீக உண்மைகளை முதலில் ஒத்துக்கொண்டு, அவை களின்படி வாழ்ந்து பின்னிட்டு பின்னடைந்து அவைகளை மறுக்கிற வர்களால் செய்யப்படுகிறது. அவர்கள் பரிசுத்தமான பொருள்களை அசுத்தமானவைகளோடு பிரிக்கமுடியாதபடி அவ்வளவுதூரம் சேர்த்து கலக்கிறபடியினால் அசுத்தத்தில் இது அறக்கேடுள்ளது; என்றாலும், அவர்கள் சுவர்க்கத்திலாவது நரகத்திலாவது இருக் கும் பொருட்டு பிரிக்கப்படவேண்டும்; அவர்கள் விஷயத்தில் இது செய்யப்பட முடியாதபடியினால், அறிவுக்கு அடுத்ததும் சுவேச்சா பூர்வமானதுமாகிய மானிடத் தன்மையுள்ள எல்லாம் வேரோடு பிடுங்கிப் போடப்படுகின்றன; முன்கூறியபடி, அவர்கள் அப்புறம் மனிதர்களாகிறதில்லை; இருதயத்தில் வேதத்தினுடைய வும் திருச்சபையினுடையவும் தெய்வீக பொருள்களை ஒத்துக் கொண்டு, எல்லாவற்றையும் அரசாளவேண்டுமென்கிற ஆசையா யிருக்கிற தங்கள் சொந்த தன்மையில் அவைகளை முழுமையும் அமிழ்த்துகிறவர்கள் விஷயத்தில் ஏறக்குறைய அதே சம்பவிக்கி றது; அதைப்பற்றி அதிகம் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது; ஏனென்றால், இறந்தபிறகு அவர்கள் ஆவிகளானபோது அவர்கள் முழுமையும் ஆண்டவரால் நடத்தப்பட இஷ்டமில்லாதவர்களா யிருக்கிறார்கள். ஆனால் தங்களாலேயே நடத்தப்பட விரும்புகிறார் கள்; அவர்களுடைய ஆசையானது அடக்கப்படாவிட்டால் சுவர்க் கத்தின் பேரில் மாத்திரம் அதிகாரம் செலுத்துவதற்கல்லாமல், ஆண்டவர்பேரில் அப்படிசெய்ய விரும்புகிறார்கள்; இதைச்செய்ய முடியாதபடியினால், அவர்கள் ஆண்டவரை மறுத்து, பேய்களாகி றார்கள். அரசாளும் ஆசையாய்க்கூட இருக்கிற உயிரின் ஆசை ஒவ்
(8)வொருவனிலும் இறந்த பிறகு நிற்கிறது. அது நீக்கப்பட முடியாது. இவ்வித அசுத்தம் வெதுவெதுப்பு என்பதால் கருதப் படுகிறது; வெளிப்படுத்தின சுவிசேஷத்தில் அவர்களைப்பற்றி இவ் விதமாக எழுதப்பட்டிருக்கிறது: "உன் கிரியைகளை அறிந்திருக் கிறேன்; நீ குளிருமல்ல அனலுமல்ல; நீ குளிராயாவது அனலா

யாவது இருந்தால் நலமாயிருக்கும். இப்படி நீ குளிருமன்றி அனலுமன்றி வெதுவெதுப்பா யிருக்கிறபடியினால், உன்னை என் வாயினின்று வாந்திபண்ணிப் போடுவேன்" (III 15, 16). இந்த வித அசுத்தம், மத்தேயுவில் ஆண்டவரால் இவ்விதமாக விவரிக்கப் பட்டிருக்கிறது: "அசுத்த ஆவி ஒரு மனுஷனை விட்டு புறப்படும் போது வறண்ட இடங்களில் அலைந்து, இளைப்பாறுதல் தேடியும், கண்டடையாமல் நான் விட்டுவந்த என் வீட்டிற்குத் திரும்பிப் போவேன் என்று சொல்லி, அங்கேவந்து, அந்தவீடு வெறுமை யாகவும், பெருக்கி, ஜோடிக்கப்பட்டதாகவும் இருக்கக்கண்டு, திரும்பிப்போய் தன்னிலும் பொல்லாத வேறு ஏழு ஆவிகளைத் தன்னோடே கூட்டிக் கொண்டுவந்து, உட்புகுந்து, அங்கே குடி யிருக்கும்; அப்பொழுது, அந்த மனுஷனுடைய முன்னிலைமையி லும் அவன் பின்னிலைமை அதிகக் கேடுள்ளதா யிருக்கும்" (XII. 43-45). மனிதனுடைய மாறுதல் அவனிடமிருந்து அசுத்த ஆவி கள் போகிறதென்பதினால் அங்கே விவரிக்கப்பட்டிருக்கிறது; நன்மைகளும் உண்மைகளும் எறிந்து விடப்பட்டபோது முந்திய தீமைகளுக்கு அவன் மறுபடியும் திரும்புதல் என்பது, அசுத்த மான ஆவி தன்னிலும் பொல்லாத ஏழு ஆவிகளோடு, தனக்கு ஜோடிக்கப்பட்ட வீட்டிற்குள் திரும்புதல் என்பதினால் விவரிக் கப்பட்டிருக்கிறது; லௌகீகமனிதனால் பரிசுத்தமானதை அசுத் தப்படுத்தல் என்பது, அந்த மனிதனுடைய கடைசியான நிலைமை கள் முதலைவிட கேடுள்ளதாகுதல் என்பதால் விவரிக்கப்பட் டிருக்கிறது. யோவானில் பின்வருவதால் அதையே கருதப்படுகி றது:—"பெதஸ்தா என்னப்பட்ட குளத்தில் சொஸ்தமாக்கப்பட் டவனிடத்தில் இயேசு சொன்னதாவது; "அதிக கேடானது ஒன் றும் உனக்குவாராதபடி இனிப்பாவம் செய்யாதே" (V. 14). மனித னவன் உண்மைகளை உள்ளுக்குள்ளாய் ஒத்துக்கொள்ளாத படிக் கும் பின்னிட்டு பின்னடைந்து லௌகீக மாகாதபடிக்கும் ஆண்ட வர் முன்னிட்டு ஏற்பாடு செய்து வைத்திருக்கிறாரென்பது இந்த வார்த்தைகளால் கருதப்படுகிறது: "அவர்கள் கண்களினால் காணா மலும், இருதயத்தினால் உணராமலும், குணப்படாமலும் இருக் கும்படிக்கும், நான் அவர்களை ஆரோக்கியமாக்காமல் இருக்கும்

படிக்கும், அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்கள் இருதயத்தைக் கடினமாக்கினார்" (யோவா. XII. 40). அவர்கள் குணப்படாமலிருக்கும் படிக்கும் நான் அவர்களை ஆரோக்கியமாக்காமலிருக்கும்படிக்கும் என்பது, அவர்கள் உண்மைகளை ஒத்துக்கொண்டு, பின்னிட்டு பின்னடைந்து, இவ்விதமாக லௌகீகமாகாதபடிக்கு என்பது அருத்தம் கொள்ளுகிறது. அதே காரணத்துக்காக ஆண்டவர், தானே சொல்லுகிறபடி உவமைகளாகப்பேசினார் (மத்தே. XIII. 13). யூதர்கள் கொழுப்பையாவது இரத்தத்தையாவது புசிக்கலாகாது என்பது (லேவி. III. 17: VII. 23, 25), பரிசுத்தமானதை அவர்கள் அசுத்தப்படுத்தக் கூடாதென்று அருத்தம் கொண்டது; ஏனென்றால், கொழுப்பு, தெய்வீக நன்மையையும், இரத்தம் தெய்வீக உண்மையையும் அருத்தம் கொண்டது. ஒரு முறை குணப்படுத்தப் பட்டவன் சாகிறவரையில் நன்மையிலும் உண்மையிலும் இருக்கவேண்டுமென்பதை, மத்தேயுவில் ஆண்டவர் கற்பிக்கிறார்: இயேசு சொன்னதாவது: "முடிவு பரியந்தம் நிலைத்திருப்பவனே ரட்சிக்கப் படுவான்." (X. 22; மார்க், XIII. 13 லும் கூட).

232. IV. ஆகையினால் ஆண்டவர் ஒருமனிதனை ஞானத்தின் உண்மைகளிலும் அதேகாலத்தில் அன்பின் நன்மைகளிலும் முடிவு பரியந்தம் கூட அந்தமனிதன் அவைகளில் வைக்கப்படக்கூடிய அளவு தவிர, உள்ளுக்குள்ளாய் சேர்க்கிறதில்லை. இதை நிச்சயப்படுத்த, இரண்டு காரணங்களுக்காக நாம் இரண்டு பிரத்தியேகமான படிகளால் போகவேண்டும்; ஒன்று அது மானிட இரட்சிப்பு பிரதானமானதாயிருப்பதினால்; மற்றது இந்த சட்டஞானத்தின்பேரில் அடுத்த அத்தியாயம் கூறும் அனுமதி சட்டங்கள் ஞானம் சார்ந்திருப்பதினால். மானிட இரட்சிப்புக்கு அது பிரதானமானது; ஏனென்றால், மேலே கூறியபடி, வேதத்தினுடையவும் ஆதலால் திருச்சபையின் தெய்வீகப் பொருள்களை முதலில் ஒத்துக்கொண்டு, பின்னிட்டு அவைகளிலிருந்து பின்னடைகிறவன், பரிசுத்தமானவைகளை மிகவும் கொடுமையாய் அசுத்தப்படுத்துகிறான். ஆகையினால், தெய்வபரிபாலனத்தின் இந்த இரகசியம்,

பகுத்தறிவுள்ள மனிதன் தன் சொந்த அறிவில் அதைப் பார்க்கட்டும் என்கிற அபிப்பிராயத்துடன் திறந்து வைக்கப்பட பின்தொடரும் வரிசையில் விவரிக்கப்படவேண்டும்: I தீமையும் நன்மையும் மனிதனுடைய உள்ளானவைகளில் சேர்ந்து இருக்க முடியாது; ஆகையினுல், அதுவுமல்லாமல், தீமையின் பொய்யும் நன்மையின் உண்மையும் சேர்ந்திருக்க முடியாது. II. நன்மையும், நன்மையின் உண்மையும், ஒரு மனிதனுடைய உள்ளானவைகளில் ஆண்டவரால், அங்கிருக்கும் தீமையும் தீமையின் பொய்யும் நீக்கப்பட்ட அளவுதவிர, உட்செலுத்த முடியாது. III. தீமையும் அதன் பொய்யும் நீக்கப்படுவதைவிட அதிகமாய் அல்லது அதிக சீக்கிரமாய் நன்மையும் அதன் உண்மையும் அங்கே செலுத்தப்பட்டால், அந்த மனிதன் நன்மையிலிருந்து பின்னடைந்து தன்னுடைய தீமைக்குத் திரும்புவான். IV. ஒரு மனிதன் தீமையிலிருக்கும்போது அவனுடைய புத்தியில் அநேக உண்மைகள் உட்செலுத்தப்படலாம். இவைகள் அவனுடைய ஞாபகத்தில் குவிக்கப்படலாம், அப்படியிருந்தாலும் அசுத்தமாகாதிருக்கப்படலாம். V. ஆனல், மனிதனைவன் தன்னிடமிருந்தே போல புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளை நீக்குகிறதை விட அதிகமாய் அல்லது அதிக சீக்கிரமாய், அதிலிருந்து சித்தத்தினுல் ஏற்கையில்லாதபடி ஆண்டவர் தன்னுடைய தெய்வீக பரிபாலனத்தால், முன்னறிந்து முக்கியமாய் ஏற்பாடு செய்து வைக்கிறுர். VI. பரிமாணத்தில் அவைகள் அதிக சீக்கிரமாயும் அதிகமாயும் ஏற்றுக்கொள்ளப் பட்டால், அப்பொழுது, சித்தமானது நன்மையை கலந்து கெடுக்கும், புத்தியானது அவைகளை தீமைகளுடனும் பொய்களுடனும் கலப்பதினுல் உண்மையை பொய்ப்படுத்தும். VII. ஆகையினுல், ஆண்டவர், ஒரு மனிதனை, முடிவுபரியந்தம் அவைகளில் வைக்கப்படக்கூடும் அளவு தவிர, ஞானத்தின் உண்மைகளிலும் அன்பின் நன்மைகளிலும் அவனை உள்ளுக்குள்ளாய் சேர்க்கிறதில்லை.

233. ஆகையினுல் தெய்வபரிபாலனத்தின் இந்த இரகசியம், பகுத்தறிவுள்ள மனிதன் அதை தன்னுடைய சொந்த அறிவினுல் பார்க்க, வெளிப்படுத்தப்படும் பொருட்டு, இப்பொழுது எடுத்துக்

காட்டிய விஷயங்கள் ஒன்றன் பின் ஒன்ருய் விவரிக்கப்பட வேண்டும். முதலாவது: தீமையும் நன்மையும் ஒரு மனிதனுடைய உள்ளானவைகளில் சேர்ந்திருக்க முடியாது, ஆகையினுல், தீமையின் பொய்யும் நன்மையின் உண்மையும் சேர்ந்திருக்க முடியாது. மனிதனுடைய உள்ளானவைகள் என்பதால், இறந்த பிறகு வருகிற சூக்கும உலகத்திலும் அதன் வெளிச்சத்திலும் அவன் வருகிறதற்கு முன் அதைப்பற்றி ஒன்றும் தெரியாத அவன் சிந்தனையின் உள்ளானது அருத்தம் கொள்ளப்படுகிறது. ஸ்தூல உலகத்தில், இது, அவனுடைய சிந்தனையின் புறம்பானதிலிருக்கும் அவன் ஆசையின் சந்தோஷத்திலிருந்தும், தானே அவைகளைப் பரிசோதனை செய்யும்போது தீமைகளிலேயே யிருந்தும் மாத்திரம் ஸ்தூல உலகத்தில் தெரிந்ததென்று அறிந்து கொள்ளப்படும்; ஏனென்ருல், மேல் காண்பித்தபடி, மனிதனில் சிந்தனையின் உள்ளானது, பிரிக்கப்படாதபடி அவ்வித சம்பந்தத்தில் சிந்தனையின் புறம்பானதுடன் ஒட்டிக்கொள்ளுகிறது. ஆனுல், இதைக்குறித்து, மேலே அதிகம் பார்க்கலாம். நன்மையும், நன்மையின் உண்மையும், அதனுடன் கூட தீமையும் தீமையின் பொய்யும் என்று சொல்லப்படுகிறது; ஏனென்ருல், நன்மையானது அதன் உண்மையல்லாமலும், அதுவுமன்றி, தீமை அதன் பொய்யல்லாமலும் கொடுக்கப் படமாட்டாது; அவைகள் படுக்கை தோழர்கள் அல்லது விவாகமான கணவனும் மனைவியுமா யிருக்கிருர்கள். ஏனென்ருல், நன்மையான வாழ்வு அதன் உண்மையிலிருந்து வருகிறது, (2)உண்மையான வாழ்வு அதன்நன்மையிலிருந்து வருகிறது; தீமையுடனும் அதன் பொய்யுடனும் அதேமாதிரி தான். தீமையும் அதன் பொய்யும், நன்மையும் அதன் உண்மையும், மனிதனுடைய உள்ளானவைகளில் சேர்ந்திருக்க முடியாது என்பது, பகுத்தறிவுள்ள மனிதனுல் விவரமில்லாமல் அறிந்து கொள்ளப்படலாம்; ஏனென்ருல், தீமை நன்மைக்கு எதிரிடையானது, நன்மை தீமைக்கு எதிரிடையானது; இரண்டு எதிரிடையானவைகள் சேர்ந்திருக்க முடியாது. மேலும், எல்லா தீமையிலும், இயல்பாய் நன்மையைப் பகைத்தலிருக்கிறது, எல்லா நன்மையிலும், தீமையிலிருந்து தானே காப்பாற்றிக் கொள்ளவும், தன்னிடமே யிருந்து

அதை நீக்கவும் ஒரு இயல்பான ஆசையிருக்கிறது; ஒன்று மற்றொன்றுடன் சேர்ந்து இருக்க முடியாதென்று அதிலிருந்து ஏற்படுகிறது; அவைகள் சேர்ந்திருந்தால், முதலில் மோதுகையும் சண்டையும் பிறகு, நாசமும் எழும்; பின்வரும் வார்த்தைகளால் ஆண்டவர் கூட அப்படியே கற்பிக்கிறார்: "தனக்குத் தானே பிரிந்திருக்கிற எந்த ராஜ்யமும் பாழாய்ப்போம்;தனக்குத் தானே விரோதமாய் பிரிந்திருக்கிற எந்தப் பட்டணமும் எந்த வீடும் நிலை நிற்கமாட்டாது. என்னோடு இராதவன் எனக்கு விரோதியாயிருக்கிறான்; என்னோடே சேர்க்காதவன் சிதறடிக்கிறான்" (மத்தே. XII. 25-30). வேறு ஓரிடத்தில்: "இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ் செய்ய ஒருவனாலும் கூடாது; ஒருவனை பகைத்து மற்றவனை சிநேகிப்பான்; (அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு, மற்றவனை அசட்டை பண்ணுவான்)" (மத்தே. VI. 24). இரண்டு எதிரிடையானவைகள் ஒரு பொருளில் அல்லது உருவத்தில் வேறு வேறாய் பிளக்கப்படாமலும் அழியாமலும் சேர்ந்து இருக்கமுடியாது. ஒன்று மற்றொன்றை அடைந்து சமீபத்தில் சென்றால், ஒருவன் தன்னுடைய முகாமிலும் அல்லது கோட்டையிலும் இருந்துகொண்டும், மற்றவன் வெளியே போய் விடுகிறவனுமாகிய இரண்டு விரோதிகளைப் போல், அவைகள் நிஜமாய் பிரிந்துபோகும். ஒரு வேஷதாரியிடத்தில் தீமைகளும் நன்மைகளும் அப்படி யிருக்கிறது; அவன் இரண்டிலும் இருக்கிறான், ஆனால் தீமை உள்ளே யிருக்கிறது, நன்மை வெளியே யிருக்கிறது, ஆகையினால் அந்த இரண்டும் கலந்திராமல் வேறு வேறானதா யிருக்கிறது. இதிலிருந்து, தீமையும் பொய்யும், நன்மையும் அதின் உண்மையும் சேர்ந்திருக்கமுடியாதென்று (3) இப்பொழுது வெளிப்படையாகிறது. இரண்டாவது: நன்மையும், நன்மையின் உண்மையும், ஒரு மனிதனுடைய உள்ளான பாகங்களில், அங்கிருக்கும் தீமையும் தீமையின்பொய்யும் நீக்கப்பட்ட அளவு தவிர, ஆண்டவரால் உட்செலுத்த முடியாது. இது முன் சொன்னதிலிருந்து தப்பாமல் விளைவதா யிருக்கிறது; ஏனென்றால், தீமையும் நன்மையும் சேர்ந்து இருக்க முடியாதபோது, தீமை நீக்கப்படுவதற்கு முன் நன்மையை உட்செலுத்தப்பட

முடியாது. மனிதனுடைய உள்ளானவைகளென்று சொல்லப்பட்டது, அதனால், சிந்தனையின் உள்ளானவை கருதப்பட்டது. இப்பொழுது சொல்லப்படுகிற இவைகளில், ஆண்டவராவது பேயாவது இருக்கவேண்டும்; சீர்படுத்தப்பட்ட பிறகு அங்கே ஆண்டவரிருக்கிறார், அதற்கு முன் அங்கே பேயிருக்கிறது; ஆகையினால் மனிதனானவன் சீர்படுத்தப்பட தானே இடம் கொடுக்கிற அளவு, பேயானது வெளியே தள்ளப்படுகிறது; ஆனால், சீர்படுத்தப்பட தானே இடங்கொடுக்காத அளவு பேய் நிற்கிறது. அங்கே பேய் இருக்கிறவரையில் ஆண்டவர் பிரவேசிக்க மாட்டாரென்று யார் அறிந்துகொள்ள முடியாது? மனிதனும் கடவுளும் சேர்ந்திருக்கிற கதவை மனிதனானவன் மூடி வைக்கிற வரையில் அது அங்கேயிருக்கிறது. அந்த கதவானது மனிதன் மூலமாய் திறக்கப்பட்டபோது ஆண்டவர் பிரவேசிக்கிறாரென்று, வெளிப்படுத்தின விசேஷத்தில் அவர் கற்பிக்கிறார்: "இதோ வாசற்படியிலே நின்று தட்டுகிறேன், ஒருவன் என் சத்தத்தைக் கேட்டு கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போஜனம் பண்ணுவேன், அவனும் என்னோடே போஜனம் பண்ணுவான்" (III. 20). மனிதன் தீமையை நீக்குவதினாலும், அதை ஒழிப்பதினாலும், நரகத்துக்கு அடுத்ததென்றும் பேய்த்தனமுள்ளதென்றும், அதை வெறுப்பில் வைப்பதினாலும், கதவு திறக்கப்படுகிறது; ஏனென்றால், தீமை என்றாவது பேயென்றாவது சொன்னால், ஒன்றேயாகிறது; வேறுமுறையில், நன்மை என்றாவது ஆண்டவர் என்றாவது சொன்னால் ஒன்றேயாகிறது; ஏனென்றால், ஆண்டவர் எல்லா நன்மையினுமிருக்கிறார். பேயானது (4) எல்லா தீமையினுமிருக்கிறது. இந்த ஆலோசனைகளால் அந்த சங்கதியின் உண்மை வெளிப்படையாகிறது. மூன்றாவது: தீமையானது அதன் பொய்யுடன் நீக்கப்படுகிற அளவுக்கு அதிகமாய் அல்லது அதிகசீக்கிரமாய் நன்மையானது அதன் உண்மையுடன் உட்செலுத்தப்பட்டால் மனிதனானவன் நன்மையிலிருந்து பின்னடைந்து தன்னுடைய தீமைக்குத்திரும்புவான். அக்காலத்தில் அல்லாவிட்டாலும், பின்னிட்டாவது தீமையானது மேற்கொள்ளுமென்பதும், அப்படி மேற்கொள்ளுகிறது ஜெயிக்கிறதென்பதும் காரணமா

யிருக்கிறது. இன்னும் அதிகமாய் தீமையானது மேற்கொள்ளும் போது, நன்மையானது அந்தரங்கமான அறைகளில் அல்லாமல் பிரவேச கூடங்களில்மட்டும் செலுத்தப்படலாம்; ஏனென்றால், முன்சொல்லியபடி தீமையும் நன்மையும் சேர்ந்திருக்க முடியாது, பிரவேசசாலைகளில் மாத்திரம் இருப்பது உள்அறைகளிலிருக்கும் விரோதியினால் நீக்கப்படுகிறது; அதிலிருந்து நன்மையின் பின்னடைதலும், அசுத்தத்தின் மிகவும் கெட்டவிதமாகிய தீமைக்கு திரும்புதலும் ஏற்படுகிறது. மேலும், மனிதனுடைய உயிரின் சந்தோஷமே தன்னையேயும் உலகத்தையும் எல்லாவற்றிற்கும்மேலே நேசித்தலாயிருக்கிறது. இந்த சந்தோஷமானது ஒரு நொடிநேரத்தில் அல்லாமல் படிப்படியாய் நீக்கப்படும்; ஆனால் மனிதனில்
(5) இந்த சந்தோஷத்திலிருந்து ஏதாவது எவ்வளவு நிற்கிறதோ அங்கே தீமையானது அவ்வளவு பலமுள்ளதா யிருக்கிறது. இந்த தீமையானது, தன்னையே நேசித்தல் என்பது உபயோகங்களை நேசித்தலாகிறதினாலும் அரசாளவேணு மென்கிற ஆசை தனக்காக அல்லாமல் உபயோகத்தின் பொருட்டு இருத்தலினாலும் தவிர வேறுவழியில் நீக்கப்படமுடியாது; ஏனென்றால், இவ்விதமாக உபயோகங்கள் சிரசாகவும், தன்னையே நேசித்தல் அல்லது அரசாளும் ஆசை சிரசின்கீழிருக்கும் சரீரமாகவும், பின்னிட்டு நடக்க பாதமாகவும் ஆகிறது. நன்மையானது சிரசாக வேண்டுமென்றும் அப்படி யாகும்போது ஆண்டவர் அங்கு இருக்கிறாரென்றும் யார் அறிந்துகொள்ளுகிறதில்லை? நன்மையும் உபயோகமும் ஒன்றாயிருக்கின்றன. தீமையானது சிரசாகும்போது பேய் அங்கே யிருக்கிறதென்று யாருக்குத்தெரியாது? தேசாசார நன்மையும், சன்மார்க்க நன்மையும், புறம்பான உருவத்தில் பரமார்த்தநன்மையும்கூட ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமாகையால், அப்பொழுது இது பாதங்களாகவும், பாதங்களின் உள்ளங்கால்களாகவும், ஏற்படுத்தப்பட்டு மிதிக்கப்படுகின்றனவென்று யாருக்
(6) குத்தெரியாது? ஆகையினால், மேலே யிருப்பது கீழாகும் பொருட்டு மனிதனுடைய உயிரின் நிலைமை கவிழ்க்கப்பட வேண்டுமாகையால்,(இந்த கவிழ்தல் ஒருநொடிநேரத்தில் செய்யப்பட முடியாது; ஏனென்றால், தன்னையே நேசித்தலிலிருந்தும், அதனால் உண்

டாகும் அரசாளும் அன்பிலிருந்தும் உண்டாகிற உயிரின் மிகவும் பெரிய சந்தோஷம், உபயோகங்களை நேசித்தலாக, படிப்படியாய் மாத்திரம் குறைக்கப்பட்டு திருப்பப்படவேண்டும்) நன்மையானது இந்த தீமையானது நீக்கப்படுகிற அளவு தவிர அதிகமாய் அல்லது அதிக சீக்கிரமாய் ஆண்டவரால் உட்செலுத்த முடியாது; அப்படி செய்யப்பட்டால், மனிதன் நன்மையிலிருந்து பின்னடைந்து தன்
(7) னுடைய தீமைக்கு திரும்புவான். நான்காவது: மனிதன் தீமை யிலிருக்கும் போது, அவனுடைய புத்தியில் அநேக உண்மைகள் செலுத்தப்படலாம்,இவைகளெல்லாம் ஞாபகத்தில் குவிக்கப்படலாம், அப்படியிருந்தாலும் அசுத்தமாகாம லிருக்கப்படலாம். புத்தியானது சித்தத்தில் பாயாமல், சித்தமானது புத்தியில்பாய்வது இதற்கு காரணமாயிருக்கிறது; அது சித்தத்தில் பாயாதபடியினால் புத்தி யினால் அநேக உண்மைகள் பெற்றுக்கொள்ளப்பட்டு, ஞாபகத்தில் குவிக்கப்படலாம், அப்படியிருந்தும், சித்தத்தின் தீமையோடுகலக் கப்படாமலிருக்கலாம்; அதனால் பரிசுத்தமானவைகள் அசுத்தப் படுத்தப்படாது. வேதத்திலிருந்தும் அல்லது பிரசங்கத்திலிருந் தும் உண்மைகளைக் கற்றுக்கொள்வதும், ஞாபகத்தில் அவைகளை வைப்பதும் அவைகளைப் பற்றி நினைப்பதும், ஒவ்வொருவனுடைய கடமையாகக்கூட இருக்கிறது. ஏனென்றால், ஞாபகத்திலிருக்கிற தும், அதிலிருந்து சிந்தனைக்குள் வருகிறதுமான உண்மைகளிலிரு ந்து, புத்தியானதுசித்தத்தைக் கற்பிக்கவேண்டும், அதாவது, மனி தனுக்கு எதைசெய்யவேண்டுமென்பதை கற்பிக்கவேண்டும். ஆகை யினால் இதுதான் சீர்படுத்துதலின் முக்கியமான சாதனமா யிருக் கிறது. உண்மைகள் புத்தியில்மாத்திரம்இருந்து அதிலிருந்து ஞாப
(8) கத்திலிருக்கும்போது, அவைகள் மனிதனுக்குள் இல்லாமல் அவ னுக்கு வெளியே யிருக்கின்றன. மனிதனுடைய ஞாபகத்தை, தங் கள் ஆகாரத்தை முதலில் ஏற்றுக்கொள்ளுகிற சிலபிராணிகளின் அசைபோடும் இறைப்பையுடன் ஒப்பிடப்படலாம்; அது அங்கே யிருக்கும்போது அவைகளின் சரீரத்தில் அல்லாமல் அதற்கு வெளியேயிருக்கிறது; ஆயினும், இந்த இறைப்பையிலிருந்து ஆகா ரத்தை இழுத்து சாப்பிடும்போது, அவைகளின் உயிருக்குசேர்ந்த தாய் சரீரமானது போஷிக்கப்படுகிறது. ஆனால், மனிதனுடைய

ஞாபகத்தில் உருவுள்ளதல்லாமல் உண்மைகள் என்பதால் கருதப் படுகிறதும், தங்களுக்குள்ளேயே அறிவுகளாயிருக்கிறதுமான சூக்ஷும ஆகாரங்கள் இருக்கின்றன. நினைப்பதினாலும், அல்லது அசைபோடுவதுபோல்வதினாலும் இவைகளை மனிதன் தெரிந்து எடுக்கிற அளவு, அவனுடைய பரமார்த்தமனது போஷிக்கப்படுகிறது. சித்தத்தின் ஆசையானது, அவைகளை விரும்புகிறதும் அவைகளை மிகவும் ஆசிக்கிறதும்போல்வதும், அவைகளை தின்னப்பட செய்கிறதும், போஷிக்கிறதாயிருக்கிறது மாயிருக்கிறது. அந்த அன்பானது தீமையாயிருந்தால், அது அசுத்தமான பொருள்களை விரும்பி அவைகளின் பேரில் அவா கொள்வதுபோலிருக்கின்றது; நன்மையாயிருந்தால், சுத்தமான பொருள்களை விரும்பி அவைகளின்பேரில் அவாகொள்ளுகின்றது; மேலும், அதற்கு சரிப்படாதவைகளை தனிப்படுத்தி, விடை கொடுத்து துரத்திவிடுகின்றது; (9) அது பலவழிகளில் செய்யப்படுகின்றது. ஐந்தாவது: ஆனால் ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தினால், மனிதனானவன் தன்னிடமிருந்தேபோல் புறம்பானமனிதனிலிருக்கும் தீமையை நீக்குகிறதைவிட பரிமாணத்தில் அதிகமாய் அல்லது முந்தியே சித்தத்தினால் அதிலிருந்து பெற்றுக்கொள்ளுதல் இல்லாதபடி மிகவும் முக்கியமாய் சித்தப்படுத்திவைக்கிறார். ஏனென்றால், சித்தத்திலிருந்து வருவது, மனிதனுக்குள் வந்து, அவனுக்கு உரித்தாக்கப்பட்டு, அவன் உயிரைச்சேர்ந்ததாகிறது; சித்தத்திலிருந்து மனிதனுக்கு வருகிற உயிரிலேயே, தீமையும் நன்மையும் சேர்ந்திருக்க முடியாது; ஏனென்றால், அவ்விதமானால் அவன் இறந்துபோவான்; ஆனால் இரண்டும் புத்தியிலிருக்கலாம், அங்கே அவைகள் தீமையின் பொய்களென்றும், அல்லது நன்மையின் உண்மைகளென்றும் சொல்லப்படுகின்றன, அப்படியிருந்தாலும் சேர்ந்திருக்கிறதில்லை; அப்படியில்லாவிட்டால், மனிதனானவன் நன்மையிலிருந்து தீமையைப்பார்க்கவும், தீமையிலிருந்து நன்மையை தெரிந்துகொள்ளவும் சக்தியுள்ளவனாயிருக்கமாட்டான்; ஆனால், அவைகள் அங்கே, ஒரு வீடானது உள்ளானவைகளென்றும் புறம்பானவைகளென்றும் பிரத்தியேகப்படுத்தி பிரிக்கப்படுவதுபோல், பிரத்தியேகப்படுத்தி பிரிக்கப்படுகின்றன. ஒரு கெட்ட மனி

தன் நல்லவைகளை நினைத்துப்பேசினால், அப்பொழுது அவன் புறம்பாய் நினைத்துப் பேசுகிறான்; கெட்டவைகளை அப்படி நினைத்துப் பேசும்போது, அவன் உள்ளுக்குள்ளாய் நினைத்துப் பேசுகிறான். ஆகையினால், அவன் நல்லவைகளைப் பேசும்போது, அவனுடைய பேச்சானது ஒரு வீட்டின்சுவற்றிலிருந்து போல வருகிறது; புறம்பே சீராய்த் தோன்றி உள்ளே சொத்தையாகவும் அழுகலாகவும் இருக்கிற பழத்துடனும் அதனுடன்கூட ஒரு (10) அழகான ஓடுள்ள பறவை நாகத்துக்கும் அதை ஒப்பிடலாம். ஆறாவது: அவைகள் பரிமாணத்தில் சீக்கிரமாயும் அதிகமாயும் ஏற்றுக்கொள்ளப்பட்டால், அப்பொழுது அவைகளை தீமைகளோடு அதிலிருந்து பொய்களோடும் கலப்பதினால், சித்தமானது நன்மையை கலந்து கெடுக்கும்; புத்தியானது உண்மையைப்பொய்ப்படுத்தும். சித்தமானது தீமையிலிருக்கும் போது, அப்பொழுது அது புத்தியிலுள்ள நன்மையைகலந்து கெடுக்கிறது; புத்தியில்கலந்து கெட்டுப்போன நன்மையானது, சித்தத்தில் தீமையா யிருக்கிறது; ஏனென்றால், அது தீமை நன்மையென்றும், நன்மை தீமையென்றும் ருஜுபடுத்துகிறது; தீமையானது, தனக்கே எதிரிடையான எல்லா நன்மை விஷயத்திலும் இதைச் செய்கிறது. நன்மையின் உண்மை, தீமையின் பொய்யிக்கு எதிரிடையா யிருப்பதினால் தீமையானது உண்மையைக்கூட பொய்படுத்துகிறது; புத்தியானது தன்னிடமே யிருந்து அல்லாமல், சித்தமானது புத்தியில் இதைக்கூட செய்கிறது. நன்மையை கலந்து கெடுத்தல் என்பது விபசாரமென்பதால் வேதத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது; உண்மைகளைப் பொய்படுத்தல் என்பது வேசித்தனம் என்பதால் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்த கெடுத்தலும் பொய்படுத்தலும் தீமையிலிருக்கப்பட்ட ஸ்தூல மனிதனிலிருந்து யூகித்தறிதலினாலும், வேதத்தின் சப்தார்த்தத்தின்தோற்றங்களிலிருந்து ஸ்திரப் (11) படுதலினாலும்கூட செய்யப்படுகின்றன. எல்லா தீமைகளுக்கும் தலைமையான தன்னையே நேசித்தலென்பது நன்மைகளை கலந்து கெடுத்தலிலும் உண்மைகளை பொய்படுத்தலிலும் தன்னுடைய விவேகத்தில் மற்ற ஆசைகளை மிஞ்சுகிறது; ஆண்டவரிடமிருந்து நல்லவனும் கெட்டவனுமாகிய ஒவ்வொருவனும்,

அடைகிற பகுத்தறிவுடைமையை துர்வினியோகம் செய்வதால் அது இதைச் செய்கிறது. நிஜமாகவே, ஸ்திரப்படுத்தலினால் அது தீமையை நன்மைபோலவும், பொய்யை உண்மைபோலவும் முழுமையும் தோன்ற செய்யக்கூடும். பிரகுருதி தன்னைத்தானே சிருட்டித்ததென்றும், பிறகு அது மனிதர்களையும், மிருகங்களையும் கந்தமூலவர்க்கத்தில் எல்லாவிதப் பொருள்களையும் சிருட்டித்ததென்றும், மேலும் தன்னுடைய உள்ளான ஆத்துமாவிலிருந்து உட்பெருக்கினால் பிரகுருதியானது மனிதர்களை உயிரோடிருக்கவும், கூறுகூறாய் நினைக்கவும் விவேகமாய் அறிந்துகொள்ளவும் செய்கிறதென்றும், ஆயிரம் நியாயங்களால் அது ஸதிரப்படுத்தக்கூடுமாகையால், அது என்னசெய்யமுடியாது? பலவர்ணமாக்கப்பட்டவெளிச்சத்தின்பிரகாசம் அதன்புறம்பான மேற்புறமா யிருப்பதினால், தன்னையே நேசித்தலென்பது தான் இஷ்டப்பட்டதை எதையாகிலும் ஸ்திரப்படுத்துவதில் தன்விவேகத்திில்மிஞ்சுகிறது. இந்த பிரகாசமானது அந்த அன்புக்கு சேர்ந்த ஞானமுள்ளவனாயிருத்தலினுடையவும், அன்றியும், இவ்விதமாக மேன்மையாகவும் (12)ஆளுகிறதாகவும் இருத்தலின் மகிமையாகயிருக்கிறது; ஆனால், இவ்விதமானவைகளை அந்த அன்பானது ஸ்திரப்படுத்தியபோது மனிதன் மிருகமாய் இருக்கிறானென்பதையும், அவைகள் ஒரே மாதிரி நினைக்கிறதென்பதையும் நிஜமாகவே, மிருகம் பேசக்கூடுமானால் அது வேறு உருவத்தில் மனிதனாயிருக்கும் என்பதையும், தவிரவேறுவிதமாய் அறிந்துகொள்ளக்கூடாதபடி அவ்வளவு குருடானதாக அது ஆய்விடுகிறது; அது கொஞ்சம் போதனையால் மனிதனில் எதோ சிலது இறந்தபிறகு உயிரோடிருக்கிறதென்று நம்ப தூண்டப்பட்டால், தன்னில்தானே இறந்ததாயிருக்கிற பிரகுருதியே அதன்மனோபாவத்தை ஏவுகிற இதரபைத்தியம்பிடித்த அபிப்பிராயங்களைத்தவிர இறந்தபிறகு மிருகங்கள் கூட உயிரோடிருக்கிற தென்றும், இறந்தபிறகு உயிரோடிருக்கும் இந்த பொருள், அதன் பிணத்தில் இடைவிடாமல் இரங்குகிற ஆவியைப் போல உயிரின் நுண்ணிய சுவாசம்விடுதல் மாத்திரமென்றும், அல்லது பார்வையும், கேட்டலும், அல்லது பேச்சுமில்லாமல், இவ்விதமாக குருடாகவும், செவிடாகவும், ஊமையாகவும்,

சிறகடித்துக்கொண்டும், நினைத்துக்கொண்டுமிருக்கும் ஜீவசம்பந்தமான எதோ ஒன்று என்றும் நம்பும்படியாக அவ்வளவு குருடாய் அது அப்பொழுது யிருக்கிறது. தன்னைத்தானே நேசித்தல் இதை செய்கிறது; அதையே பார்த்தால் தன் சொந்த தன்மையை நேசித்தலாயிருக்கிறது; மனிதனுடைய சொந்ததன்மை, ஸ்தூலமா யிருக்கிற ஆசைகள் விஷயத்தில், மிருகத்தின் உயிருக்கு வேறுவிதமானதா யில்லை; உணர்ச்சிகள் இந்த ஆசைகளிலிருந்து உண்டாகிறபடியினால் அவைகள் விஷயத்தில் இரவு ஆந்தைபோலிருக்கிறது. ஆகையினால், தன்னுடைய சொந்த தன்மையில் சிந்தனைகளை இடைவிடாமல் அமிழ்த்துகிறவன் ஸ்தூல வெளிச்சத்திலிருந்து சூக்கும வெளிச்சத்துக்கு தூக்கப்பட்டு, கடவுளைப்பற்றியும், சுவர்க்கத்தைப் பற்றியும், நித்திய வாழ்வைப்பற்றியும் எதையும் பார்க்கமுடியாது. இந்த அன்பு அவ்விதமானதா யிருப்பதாலும், அப்படியிருந்தும் அதன் விவேகத்தில் அது இஷ்டப்படும் எதையாகிலும் ஸ்திரப்படுத்துவதில் மிஞ்சுகிறபடியினாலும், எதோ ஒரு அக்கறையினால் அவைகளை ஒத்துக்கொள்ளுதலில் பிடிக்கப்பட்டபோது அது அவ்வித விவேகத்துடன், வேதத்தின் நன்மை (13)களைக் கலந்து கொடுத்து, அதன் உண்மைகளைபொய்ப்படுத்தக் கூடும். ஏழாவது, ஆகையால் மனிதனானவன் முடிவுபரியந்தம் அவைகளில் வைக்கப்படக்கூடிய அளவு தவிர ஆண்டவர் அவனை ஞானத்தின் உண்மைகளிலும், அன்பின் நன்மைகளிலும் உள்ளுக்குள்ளாய் சேர்க்கிறதில்லை. மனிதனானவன், இந்தபிரிவில் சொல்லிய பரிசுத்தமானதை அசுத்தப்படுத்தலின் மிகவும் கொடுமையான விதத்தில் விழாதபடி ஆண்டவர் இதை செய்கிறார். இந்த அபாயத்தின் பொருட்டு, ஆண்டவர் உயிரின் தீமைகளுக்கும் ஆராதனையின் அநேக வேதப்புரட்டுகளுக்கும் இடங்கொடுக்கிறார். அப்படி அவைகளுக்கு இடங்கொடுப்பதைப் பற்றி பின்வரும் பகுதிகளில் சிலது பார்க்கலாம்.

---

**அனுமதியின் சட்டங்கள் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களாகக்கூட யிருக்கின்றன.**

234. தாங்களே அனுமதி சட்டங்களென்றும், தெய்வபரிபாலன சட்டங்களிலிருந்து வேறானதென்றும் ஒன்றுமில்லை. ஆகையினால், கடவுள் ஒருபொருளுக்கு இடங்கொடுக்கிறாரென்று சொல்லப்படுகிறது; அதனால் மோக்ஷமாயிருக்கிற முடிவின்பொருட்டு அதைஅவர் நீக்கமுடியாதென்பது தவிர, அதை அவர் இச்சிக்கிறார் என்பது அறிந்துகொள்ளப்படாது. மோக்ஷமாயிருக்கிற முடிவின்பொருட்டு எது செய்யப்பட்டபோதிலும், தெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அனுசரித்திருக்கிறது. ஏனென்றால், முன்கூறியபடி, தெய்வபரிபால்னம் இந்த முடிவை இடைவிடாமல் உத்தேசத்தில்வைத்துக்கொண்டு, மனிதனுடையசித்தத்துக்கு வெவ்வேறாயும் அதற்கு எதிரிடையாயும் விடாப்பூட்டாய் நடக்கிறது; ஆகையினால் அது தொழில்படும் ஒவ்வொரு சணத்திலும், அதன் அபிவிர்த்தியின் ஒவ்வொரு படியிலும் அந்தநோக்கத்திலிருந்து மனிதனானவன் வழி தப்புவதைப் பார்க்கிறபோது, அவனை தீமையிலிருந்து நீக்கி நன்மைக்குக் கொண்டுவருவதால், அவனுக்கு வழிகாட்டி, அவனை வளைத்து, அதன் சட்டங்களுக்குத் தக்கபடி கிரமப்படுத்துகிறது. தீமையின் அனுமதியின்றி இது செய்யப்பட முடியாதென்று, பின்வருவதில் பார்க்கலாம். மேலும், ஒரு காரணமின்றி எதுவும் செய்யப்பட அனுமதி கொடுக்கப்படாது, அந்த காரணமானது தெய்வபரிபாலனத்தில் சில சட்டத்தில் இருக்கிறது; அந்த சட்டமானது அது ஏன் அனுமதி கொடுக்கப் படுகிறது என்பதை கற்பிக்கிறது.

235. தெய்வபரிபாலனத்தையே ஒத்துக்கொள்ளாதவன் தன்னுடைய இருதயத்தில் கடவுளை ஒத்துக்கொள்ளுகிறதில்லை; ஆனால் கடவுளுக்குப் பதிலாக பிரகுருதியையும், தெய்வபரிபாலனத்துக்குப் பதிலாக மானிடவிவேகத்தையும், அவன் ஒத்துக்கொள்ளுகிறான்; இது அப்படி இருக்கிறதென்று, தெளிவாயில்லை; ஏனென்றால், ஒரு மனிதன் இரண்டு வேறானவழிகளில் நினைக்கக்

கூடும்; மேலும் இரண்டு வேறான வழிகளில் பேசவும் கூடும்; அவனுடைய அந்தரங்கமான ஆன்மாவிலிருந்து ஒரு வழியிலும், அவனுடைய புறம்பான ஆன்மாவிலிருந்து வேறு வழியிலும், அவன் நினைத்துப் பேசக்கூடும்; ஒருவன் உள்ளே வரும்போது ஒருவழியிலும், அவன் வெளியே போகும்போது மற்றவழியிலும் இரண்டு வழியிலும் கதவை திரும்ப விடுகிற கீல்போலவும், அல்லது ஒரு கப்பலானது அதன் எஜமானன் அதை விரிக்கிறபடி, தன் மார்க்கத்திலிருந்து திரும்பக்கூடிய ஒரு கப்பல் பாய்போலவும், அவன் இருக்கிறான். தெய்வபரிபாலனத்தை இல்லை என்று சொல்லும்மட்டும் மானிடவிவேகத்திற்கு அனுகூலமாக தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், அவர்களுடைய அந்த சிந்தனையிலிருக்கும்போது, தாங்கள் பார்ப்பதிலும்,கேழ்ப்பதிலும் வாசிப்பதிலும் வேறு யாதொன்றுக்கும் மனதை செலுத்துகிறதில்லை; அதுவுமன்றி தங்களிடமேயன்றி சுவர்க்கத்திலிருந்து அவர்கள் எதையும் அடையாதபடியினால், அவர்கள் அப்படி செலுத்தவும் முடியாது; மேலும் அவர்கள் தோற்றங்களிலிருந்தும் போலி நியாயங்களிலிருந்தும் மாத்திரம் தீர்மானங்களை செய்கிறபடியினாலும், வேறு எதையும் பார்க்காதபடியினாலும், அது அப்படி யிருக்கிறதென்று அவர்கள் பிரமாணம் செய்யக்கூடும். அவர்க்ள் பிரகுருதியை மாத்திரம் கூட ஒத்துக்கொண்டால், தங்களுடைய கொள்கைக்கு அல்லது உத்தியோகத்துக்கு சேர்ந்த விஷயமென்று நினைக்கிற குருக்களாய் அவர்கள் இல்லாவிட்டால், தெய்வபரிபாலனத்தை ஆதரிப்பவர்களிடத்தில் அவர்கள் கோபமாயிருக்கலாம்.

236. கேவலம் ஸ்தூல மனிதன் கடவுளுக்கு விரோதமாய் பிரகுருதிக்கு அனுகூலமாயும், தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் மானிட விவேகத்துக்கு அனுகூலமாயும், தானே ஸ்திரப்படுகிற அனுமதிக்குச் சேர்ந்ததும், எப்பொழுதும் தெய்வபரிபாலன சட்டங்களுக்கு அனுசரித்து இருப்பதுமான சில விஷயங்கள், இப்பொழுது வரிசைக்கிரமாய் சொல்லப்படவேண்டும். வேதத்தில் அவன் வாசிக்கிறதுபோல், மானிட ஜாதியில் மிகவும் புத்திசாலிகளான ஆதாமும் அவரிட மனைவியும் ஒரு சர்ப்பத்தினால்

துன்மார்க்கத்திற்கு திருப்பப்பட தாங்களே விட்டார்களென்பதும், கடவுளானவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தினுல் இதைத் தடுக்கவில்லை என்பதும், அவர்களுடைய முதல் குமாரன் **கேயின்** என்பவன் அவனுடைய சகோதரன் **ஏபேல்** என்பவனை கொன்றுன் என்பதும், கடவுளானவர் அவனுடன் பேசி அப்பொழுது பிடித்துவைக்காமல் காரியம் நடந்த பிறகு அவனை சபிப்பதினுல் அப்படி செய்தாரென்பதும், இஸ்ரவேல் தேசத்தார் சமீபத்தில் சீனுய் மலையின்பேரிலிருந்து **ஏகோவா** பார்த்திருந்தபோதிலும் அது நடக்காதபடி ஒன்றும் செய்யாதபோது, அரணியத்தில் ஒரு பொன்னுல் செய்த கன்றுக்குட்டியை அர்ச்சித்து எகிப்து தேசத்திலிருந்து வழிகாட்டிய கடவுளாக அதை ஒத்துக்கொண்டார்கள் என்பதும், மறுபடியும், **தாவீது** ஜனங்களை எண்ணினுரென்பதும், ஆகையினுல் அதனுல் அநேக ஆயிரங்கள் கணக்கான மனிதர்கள் இறந்துபோன ஒரு பெருவாரி நோய் அவர்கள்பேரில் அனுப்பப்பட்டதென்பதும்,கடவுளானவர் காரியத்துக்கு முன்னிட்டல்லாமல் பின்னிட்டு, **காட்** என்கிற தீர்க்கதரிசையை அவரிடம் அனுப்பி, தண்டனையை இடித்துரைத்தாரென்பதும், **சாலோமான்** என்பவர் விக்கிரகாராதனையை ஏற்படுத்த விடப்பட்டார் என்பதும், அவருக்கு பின்னிட்டு அநேக அரசர்கள் கோவிலையும், திருச்சபையின் பரிசுத்தப்பொருள்களையும் அசுத்தப்படுத்த விடப்பட்டார்களென்பதும், முடிவாய் அந்த தேசத்தாரே ஆண்டவரை சிலுவையில் அறைய விடப்பட்டார்களென்பதும் போன்றவைகள் சொல்லப்படவேண்டும். இவைகளிலும், வேதத்திலுள்ள அநேக இதரவிஷயங்களிலும் பிரகுருதியையும் மானிடவிவேகத்தையும் ஒத்துக்கொள்ளுகிறவன், தெய்வபரிபாலனத்துக்கு எதிரிடையானது தவிர வேறொன்றையும் பார்க்கிறதில்லை; ஆகையினுல், பேச்சுக்கு மிகவும் சமீபத்திலுள்ள தன்னுடைய புறம்பான சிந்தனையில் இல்லாவிட்டாலும், அதற்கு தூரத்திலுள்ள தன்னுடைய உள்ளான சிந்தனையிலாவது, அதை மறுக்க அவைகளைக் காரணங்களாக அவன் உபயோகப்படுத்தக்கூடும்.

237. தன்னையேயும் பிரகுருதியையும் தொழப்பட்ட ஒவ்வொருவனும் உலகத்தில் அவ்வளவு அநேக பக்தியில்லாத ஜனங்

களேயும், அவர்களுடைய அவபக்திகள் அநேகத்தையும், அதே காலத்தில் அவர்களில் சிலரின் தற்பெருமை சொல்லிக்கொள்வதையும், அப்படியிருந்தும் இதன் பொருட்டு கடவுளிடமிருந்து அவர்கள் தண்டனையடையாததையும் பார்க்கும்போது, தெய்வ பரிபாலனத்திற்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுத்திக்கொள்ளுகிறான். தந்திரங்களும், சூழ்ச்சிகளும், மோசமும் பக்தியுள்ளவர்களுக்கும், நியாயமானவர்களுக்கும், உண்மையானவர்களுக்கும் விரோதமாய்க்கூட வெற்றியடைவதையும், அந்நியாயம் நியாய ஸ்தலங்களிலும் வர்த்தகத்திலும் நியாயத்தை ஜெயிப்பதையும், பார்க்கும்போது அவன்கூட தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் இன்னும் அதிகமாய் தானே ஸ்திரப்படுத்திக்கொள்ளுகிறான். முக்கியமாய் தெய்வபக்தியில்லாதவர்கள் மரியாதைகளுக்கு உயர்த்தப்பட்டு, பிரபுக்களாகவும் பிரதான குருக்களாகவுமாய், அதனுடன் செல்வத்தில் செழித்து, சௌந்திரியத்திலும் மகத்துவத்திலும் வாழ்கிறதையும், இதற்கு மாறுபாடாய் கடவுளை தொழுபவர்கள் இகழ்ச்சியிலும், தரித்திரத்திலும் இருப்பதையும், அவன் பார்க்கும்போது தனக்குத்தானே ஸ்திரப்படுத்திக் கொள்ளுகிறான். போர்களுக்கு இடம் கொடுக்கப்படுவதையும், அவைகளில் அவ்வளவு அநேக மனிதர்கள் கொல்லப்படுவதையும், அவ்வளவு அநேக நகரங்களும், தேசத்தார்களும், குடும்பங்களும், கொள்ளை அடிக்கப்படுவதையும் விவேகமுள்ளவர்கள் பக்கம் வெற்றி உண்டாவதையும், சில வேளைகளில் நியாயம் பக்கம் அது இல்லாததையும், தளகர்த்தன் குணசீலனாயிருந்தாலும் துன்மார்க்கனாயிருந்தாலும் வித்தியாசமில்லாதிருப்பதையும், தெய்வபரிபாலனத்தின் சட்டங்களின்படி அனுமதிகளாயிருக்கிற இவைகளைப்போன்ற அநேக விஷயங்களைச் சிந்திக்கும்போது, தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாக தனக்குத்தானே ஸ்திரப்படுத்திக்கொள்ளுகிறான்.

238. அதே ஸ்தூல மனிதன், கடவுளைப்பற்றி முழுமையும் தெரியாதவர்களும், சூரிய சந்திரர்களை ஆராதனை செய்கிறவர்களும், விக்கிரகங்களேயும், குரூபமான சித்திரவேலை செய்த பிரதிமைகளேயும்கூட ஆராதனை செய்கிறவர்களும், இறந்தவர்களை

ஆராதனை செய்கிறவர்களும்கூட சிலர் இருக்கிறார்கள் என்பது போன்ற பல தேசத்தாரின் சமய அபிப்பிராயங்களைப் பார்க்கும் போது, தெய்வ அரசியலுக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படு கிறான். மேலும், மகமத்திய மதசம்பந்தமான ஒழுங்கு அவ்வளவு அநேக சக்கரவர்த்தித்துவங்களிலும் இராச்சியங்களிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு,ஐரோப்பா என்று சொல்லப்பட்ட வாசம்பண்ணக் கூடிய பூமியின் மிகவும் சிறிய பாகத்தில் மாத்திரம் கிருஸ்து மதம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதையும், அது அங்கே பலவிதமாய் பிரிந்திருப்பதையும், அங்கே சிலர் ஈசுவரசக்தி, தங்களுக்கே இருப்பதாக பாத்தியம்பாராட்டி, கடவுளர்களாக போல் ஆராதனை செய்யப்பட விரும்புகிறதையும், அவர்கள் இறந்தவர்களை பிரார்த்தனை செய்வதையும், மேலும், தாங்கள் நினைத்துப்பேசுகிற சிலவார்த்தைகளில் இரட்சிப்பைவைக்கிற சிலர் இருக்கிறதையும், தாங்கள் செய்யும் நன்மைகளில் அதை வைக்கிற யாரும் இல்லாததையும், அநேகமாயிருப்பதும் அவைகளில் சிலது தற்காலத்திலிருப்பது மாகிய குவேக்கர்கள், மோரேவியர்கள், அநபாப்டிஸ்ட்கள் இன்னும் மற்றவர்களின் மதபேதங்களையும் தவிர தங்கள் சொந்த சமயத்தை அனுசரித்து வாழ்பவர்கள் வெகு சிலர் இருப்பதையும், அதனுடன், யுதேயா சமயம் இன்னும் நீடித்திருப்பதையும் பார்க்கும் போது அவன் அதற்கு விரோதமாய் ஸ்திரப்படுகிறான். இவைகளிலெல்லாமிருந்து தெய்வ அரசியலை மறுக்கிறவன், சமய மென்பதே ஒன்றுமில்லை என்றும், அப்படியிருந்தாலும் ஒரு தடையாக உதவுகிறபடியினால்,அது அவசியமானதென்றும் தீர்மானிக்கிறான்.

239. கிருஸ்துவ உலகம் முழுமையும், கடவுள் உருவத்திலும் முக்கியாம்சத்திலும் ஒருவரென்று தெரியாமல் மூன்று கடவுளர்களை ஒத்துக்கொண்டதையும், அவர்தான் ஆண்டவரென்பதையும், , அதனுடன் வேதத்தின் ஒவ்வொரு விவரத்திலும் ஒரு ஞானார்த்தம் இருப்பதையும், இதிலிருந்து தான் அதன் பரிசுத்தம் உண்டாகுகிறதென்றும் இதுவரையில் தெரிந்துகொள்ளப்படாமலிருக்கிறதென்பதையும், தீமைகளைப் பாவங்களாக நீக்குதலே கிரிஸ்து மதமே என்றும், ஒருமனிதன் இறந்த பிறகு மனிதனாகவாழ்

கிறுனென்றும் தெரிந்துகொள்ளப் படாமலிருப்பதையும்,போன்ற அநேகம் உள்ளுக்குள்ளாய் பிரகுருதிக்கும் மானிடவிவேகத்துக் கும் மாத்திரம் அனுகூலமாக நினைக்கிறவர்கள் இன்னும் அதிக மாய் தாங்களே ஸ்திரப்பட இக்காலத்தில் இந்த வாதங்களுடன் சேர்க்கப்படலாம். ஏனென்றால், மனிதர்கள் தங்களுடனேயும் தங்களுக்குள்ளேயும், தெய்வ அரசியல் ஏதாவது இருந்தால் அது இவ்விதமான விஷயங்களை முதல்முதல் இப்பொழுது ஏன்வெளிப் படுத்த வேண்டுமென்று சொல்லிக்கொள்ளக்கூடும்.

240. நல்லவர்களைப்போல் கெட்டவர்களுடனும் உலகத்தில் சம்பவிக்கும் எல்லா பொருள்களும் ஒவ்வொன்றும் தெய்வ அரசி யலைச்சேர்ந்த தென்றும், அதனால் தெய்வஅரசியல் மனிதனுடைய சிந்தனைகளுடையவும் செய்கைகளுடையவும், ஒவ்வொரு தனித்த பொருள்களும் இருக்கிறதென்றும், அதிலிருந்து அது சர்வ வியா பகமுள்ள தென்றும் பார்க்கப்படும் நோக்கத்தோடு 236, 237, 238, 239வது நெம்பர்களில் வரிசைக்கிரமமாய் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களும் உதாரணமாய் சொல்லப்பட்டன. ஆனால் ஒவ்வொன்றும் தானே விவரிக்கப்பட்டாலொழிய இவைகளி லிருந்து இது அறிந்துகொள்ளப்பட முடியாதபடியினால் 236வது நெம்பரில் ஆரம்பித்து, அவைகள் சொல்லப்பட்ட ஒழுங்கில்சுருக்க மாய்ச் சொல்லப்படவேண்டும்.

241. I. மானிடஜாதியில் மிகவும் அறிவுள்ள ஆதாமும் அவர் மனைவியும் ஒரு சர்ப்பத்தினால் துன்மார்க்கத்துக்கு திருப்பப்பட தாங் களே விட்டார்கள், கடவுளும் தம்முடைய தெய்வபரிபாலனத்தினால் அதைத் தடுக்கவில்லை. ஆதாமும் அவர் மனைவியும் என்பதால் உலகத்தில் சிருட்டிக்கப்பட்ட மானிட ஜாதியில் முதலானவர் என்று அருத்தம் கொள்ளாமல், தங்களுடைய புதிய சிருட்டி அல்லது குணப்படுத்தல் இவ்விதமாய் விவரிக்கப்பட்ட மிகவும் பூர்வீக திருச்சபையின் ஜனங்களென்று கருதப்படுகிறபடியினாலும், சுவர்க்கத்தையும் பூமியையும் சிருட்டித்தல் என்பதால் ஆதியாக மத்தில் முதல் அத்தியாயத்தில் கூறப்படும் அவர்களுடைய புதிய

சிருட்டியே அல்லது குணப்படுதலைக்கருதுகிறபடியினாலும், ஏடன் தோட்டம் என்பதால் அவர்களுடைய ஞானத்தையும் புத்தியையும், அறிவு மரத்தை தின்பதால், அந்த திருச்சபையின் முடிவையும், கருதுகிறபடியினாலும் இது அப்படிநேரிட்டது. ஏனென்றால், வேதமானது அதன் உள்ளுக்குள்ளாய் தெய்வீக ஞான சத்தியின் இரகசியங்களை அடக்கிக்கொண்டு பரமார்த்தமாயிருக்கிறது; இவைகள் அப்படி அடக்கிவைக்கப்பட அது முழுமையும் அன்னுவயங்களாலும் அறிகுறிகளாலும் மாத்திரம் எழுதப்பட்டிருக்கிறது: ஆரம்பத்தில் மனிதர்களில் அதிக புத்தியுள்ளவர்களாயும், முடிவில் தங்கள் சொந்த விவேகத்தின் பொருட்டு கொண்ட இறுமாப்பினால், அதிக கெட்டவர்களாயுமிருந்த அந்த சபையின் மனிதர்கள் எந்த சர்ப்பத்தினாலும் அல்லாமல், அந்த ஸ்திரியின் விதை, அதாவது ஆண்டவர் நசுக்கவேண்டிய சர்ப்பத்தின் தலையாக அங்கேயிருக்கிற தன்னையே நேசித்தலினால் துன்மார்க்கத்தில் திருப்பப் (2) பட்டார்களென்று அதிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது; சரித்திரரூபமாக சப்தார்த்தத்தில் அங்கே சொல்லப்பட்டிருக்கிறவர்களைப் பார்க்கிலும் இதர விஷயங்கள் கருதப்படுகின்றனவென்று விவேகத்திலிருந்து யார் அறியமாட்டார்கள்; ஏனென்றால், அங்கே விவரிக்கப்பட்டிருக்கிறபடி உலகத்தின் சிருட்டி அவ்விதமாயிருக்குமென்று யார் கிரகிக்கக்கூடும்? ஆகையினால், அந்த முதல் அத்தியாயத்தில் அடங்கியவைகளை விரித்துரைப்பதில் கல்விமான்கள் உழைக்கிறார்கள்; கடைசியில், தாங்கள் அறிந்துகொள்ளவில்லை என்று ஒத்துக்கொள்ளுகிறார்கள். அவர்கள் தோட்டத்தில் அல்லது உத்யானவனத்தில் உயிரைச்சேர்ந்த ஒன்றும் அறிவைச்சேர்ந்த ஒன்றும், பின்கூறியது பிழைக்கு காரணமாகவும் இரண்டு மரங்கள் வைக்கப்பட்டதென்றும், இந்தகடைசிசொன்ன மரத்தைத்தின்பதினாலேயே, அவர்கள்மட்டுமல்லாமல், முழு மானிடவமிசமும்கூட அவர்கள் சந்ததியாரும் தண்டனைக்கு உள்ளாகும் பொருட்டு அவ்வளவுதூரம் விதிமாறி நடந்தார்களென்பதும், இன்னும் எந்த ஒரு சர்ப்பமும் அவர்களை கெட்டவழியில் திருப்ப சக்தியுள்ளதாயிருந்ததென்பதும், புருஷனுடைய விலாவெலும்பிலிருந்து பெண்சாதி சிருட்டிக்கப்பட்டாளென்பதும், கெட்டபிறகு

தங்களுடைய நிருவாணத்தை ஒத்துக்கொண்டு, அதை அத்தி இலைகளினால் மூடினார்களென்பதும், சரீரத்தை மூடிக்கொள்ள தோல் மேல் சட்டைகள் அவர்களுக்கு கொடுக்கப்பட்ட தென்பதும், உயிர் மரத்துக்குப் போகும் வழியை காக்க செருபீன்கள் சுவாலிக்கிற சத்தியுடன் வைக்கப்பட்டன என்பதும் போன்ற (3) மற்ற விஷயங்களும் அதில் கண்டவைகள். இவைகளெல்லாம். அறிகுறிகளாயிருக்கின்றன; அவைகளினால் மிகவும் பூர்வீக திருச்சபையை ஏற்படுத்தலையும், அதன் நிலைமையையும், அதன் மாறுதலையும், கடைசியில் அதன் நாசத்தையும் விவரிக்கப்பட்டிருக்கிறது. அங்கே மிகவும் நுண்ணிய ஒவ்வொன்றிலுமிருக்கும் ஞானார்த்தத்தில் அடக்கப்பட்டிருக்கும் இவைகளிலெல்லா மிருக்கும் இரகசியங்கள், லண்டன் நகரத்தில் பிரசுரம் செய்யப்பட்ட ஆதியாகமத்தைப்பற்றியும் யாத்திராகமத்தைப் பற்றியும் சொல்லிய தெய்வலோக இரகசியங்களெனும் நூலில் விவரிக்கப்பட்டிருப்பதைபார்க்கலாம்; அதிலிருந்து, ஜீவமரம் என்பதினால் அங்கே தன்னுடைய தெய்வபரிபாலன சம்பந்தமாக ஆண்டவர் என்று கருதப்படுவதாகவும், ஞானமரம் என்பதினால், தன்னுடைய சொந்த விவேக சம்பந்தமாக மனிதன் என்று கருதப்படுவதாகவும் கூட விசதமாகும்.

242. II. அவர்களுடைய முதல் குமாரன் கேயின் என்பவன் தன்னுடைய சகோதரன் ஏபெல் என்கிறவனை கொன்றான்; கடவுளானவர் அவனுடன், பேசி, தடுக்காமல், காரியம் நடந்த பிறகு அவனை சபித்தார். ஆதாம், அவன் மனைவி என்பதால், மேல் கொஞ்சம் முன்கூறியபடி மிகவும் பூர்வீக திருச்சபையை கருதப்படுகிறபடியால், அவர்களுடைய முதற்குமாரர்களாகிய கேயின், ஏபெல் என்பவர்களால், அன்பும் ஞானமும், அல்லது தருமமும்பக்தியுமாயிருக்கிற திருச்சபையின் இரண்டு பிரதானம்சங்கள் கருதப்படுகின்றன; ஏபெல் என்பதால் அன்பும், தருமமும் கேயின் என்பதால் ஞானமும், அல்லது பக்தியும், முக்கியமாய் அன்பிலிருந்து பிரிக்கப்பட்ட ஞானமும், அல்லது தருமத்திலிருந்து பிரிக்கப்பட்ட பக்தியும் கருதப்படுகின்றன; பிரிக்கப்

பட்ட ஞானமும் அல்லது பக்தியும், அன்பையும் தருமத்தையும் தள்ளுவது மட்டுமல்லாமல், அவைகளை நிர்மூலமாக்கவும் கூட அவ்விதமானதாயிருக்கிறது; இவ்விதமாக அது அதன் சகோதரனைக் கொல்லுகிறது. தருமத்திலிருந்து பிரிந்த பக்தி, அப்படி செய்கிறதென்பது, கிருஸ்துவ உலகத்தில் முழுமையும் நன்றாய்த் தெரிந்திருக்கிறது; பக்தியைக் குறித்த புதிய எருசலேம் (2) நகரத்துகோள்கை எனும் நூலைப்பார்க்கவும். தருமத்திலிருந்து பக்தியையும், அல்லது அன்பிலிருந்து ஞானத்தையும், பிரிக்கிறவர்கள் இறந்து பிறகு வருகிற சூக்கும நிலைமையை, கேயின் என்பவனை சபித்தல் என்பது மூடுகிறது. ஆனால், ஞானம் அல்லது பக்தி அழியாத நோக்கத்துடன், அவன் கொல்லப்படாதபடி கேயின் என்பவன்பேரில் ஒரு அடையாளம் போடப்பட்டது; ஏனென்றால், அன்பானது ஞானமில்லாமலும், அதுவுமன்றி பக்தியில்லாமல் தருமமும், நிலைக்கிறதில்லை. ஞான விருக்ஷத்தை தின்பதினால்போல இவைகளாலும் ஏறக்குறைய அதே காண்பிக்கப்படுகிறபடியினால், ஆதாமையும் அவர் மனைவியையும் விவரித்த பிறகு இது ஒழுங்கில் வருகிறது. மேலும், தருமத்திலிருந்து பிரித்த பக்தியிலிருக்கப்பட்டவர்கள் தங்களுடைய சொந்த விவேகத்திலிருக்கிறார்கள்; தருமத்திலும் அதிலிருந்து பக்தியிலும் யிருக்கப்பட்டவர்கள் ஆண்டவரிடமிருந்துவரும் விவேகத்திலும் இவ்விதமாக தெய்வபரிபாலனத்திலுமிருக்கிறார்கள்.

243. III. இஸ்ரவேல் தேசத்தார் அரணியத்தில் ஒரு பொன்னினால் செய்த கன்றுக்குட்டியை ஆராதித்து, எகிப்து தேசத்திலிருந்து வெளியே வழிகாட்டிய கடவுளாக அதை ஒத்துக்கொண்டார்கள்; ஏகோவா சமீபமாய் சீனாய்மலையின்பேரிலிருந்து இதைப்பார்த்திருந்தாலும், அதற்கு முன்னிட்டே அதற்கு விரோதமாய் ஏற்பாடு செய்து வைக்கவில்லை. இது மலையின் பக்கத்தில் சீனாய்வனத்தில் சம்பவித்தது; ஏகோவா என்பவர் அந்த அருவருப்பான ஆராதனைக்கு அவர்களைப்போகாமல் பிடித்துவைக்கவில்லை என்பது, இதுவரையில் சொல்லிய தெய்வபரிபாலனத்தின் எல்லா சட்டங்களுடனும், அதனுடன் பின்வருவதுடனும் ஒத்திருக்கிறது. அவர்கள் எல்

லாரும் அழிந்துபோகாதபடி இந்த தீமைக்கு இடம் கொடுக்கப் பட்டது; ஏனென்முல், இஸ்ரவேல் புத்திரர்கள், ஆண்டவருடைய திருச்சபையை சாயல்காட்ட எகிப்துக்கு வெளியே வழிகாட்டப் பட்டார்கள்; எகிப்து தேசத்துவிக்கிரக ஆராதனை அவர்களுடைய இருதயங்களிலிருந்து முதலில் வேருேடழிக்கப்பட்டாலொழிய, இதை அவர்கள் சாயல்காட்டமுடியாது; தங்கள் இருதயங்களி லிருந்தபடி செயல்பட்டு அந்த விதமாய் கடினமான தண்டனையால் அது நீக்கப்பட விடப்பட்டால் ஒழிய இது செய்யப்படமுடியாது. அந்த ஆராதனையினுலும், அவர்கள் முழுமையும் தள்ளப்பட்டு, மோசேவிலிருந்து புது தேசத்தார் உண்டாக்கப்படுவார்கள் என் கிற பயத்தினுலும் இன்னும் என்ன கருதப்படுகிறது என்பது, இவைகளெல்லாம் சொல்லப்படுகிற யாத்திராகமம் முப்பத்தி ரண்டாவது அத்தியாயத்தின் பேரில் சுவர்க்கலோக ரகசியங்கள் எனும் நூலில் எழுதியிருப்பதில் பார்க்கலாம்.

244. தாவிது ஜனங்களை கணக்கிட்டார், ஆகையினுல் ஒரு தொத்துவியாதி அவர்களுக்கு விரோதமாய் அனுப்பப்பட்டது; அதனுல் அநேகம் ஆயிரங்கள் கணக்கான மனிதர்கள் நசிக்கப்பட்டார்கள்; கடவுளானவர் காரியம் முடிகிறதற்கு முன்னிட்டல்லாமல் பின் னிட்டு, அவரிடம் காட் என்கிற தீர்க்கதரிசியை அனுப்பி தண்டனை தீர்ப்பு சொன்னுர். தெய்வ அரசியலுக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறவன் இதைப்பற்றியும், முக்கியமாய் தாவிது ஏன் முன்னிட்டே எச்சரிக்கை செய்யப்படவில்லை என்பதைப் பற்றி யும், அரசன் மீறுகைக்கு ஜனங்கள் ஏன் அவ்வளவு கடினமாய் தண்டிக்கப்பட்டார்க ளென்பதைப் பற்றியும், பலவிதமான சிந் தனைகளையும் ஆலோசனைகளையும் உடைத்தாயிருக்கலாம். அவர் முன்னிட்டே எச்சரிக்கை செய்யப்படாதது முன்னிட்டே நிச்ச யப்படுத்தப்பட்ட தெய்வ அரசியலின் சட்டங்களையும், முக்கிய மாய் 129வது பிரிவுமுதல் 153வது பிரிவுவரையிலும், 154வது பிரிவுமுதல் 174வது பிரிவுவரையிலும், விவரித்த இரண்டு சட்டங் களையும் அனுசரித்து இருக்கிறது. அரசன் மீறி நடந்ததின் பொருட்டு ஜனங்களை அவ்வளவு கடினமாய் தண்டித்ததும்,

தொத்துவியாதியினால் எழுபதினாயிரம் மனிதர்களைக் கொன்றதும், அரசன் பொருட்டல்லாமல், ஜனங்கள் பொருட்டு நேரிட்டது; ஏனென்றால், வேதத்தில் சொல்லுவது: "மறுபடியும் ஏகோவாவின் கோபம் திரும்ப இஸ்ரவேலின் மேல் மூண்டது; இஸ்ரவேல் யூதா என்பவர்களை இலக்கம் பார் என்று அவர்களுக்கு விரோதமாய்ச்சொல்லுகிறதற்கு தாவீது ஏவப்பட்டான்" (II. சாமு, 24-1).

245. V. சாலோமான் என்பவர் விக்கிரகபூசை ஏற்படுத்தவிடப் பட்டார். ஆண்டவருடைய இராச்சியத்தையும் அல்லது திருச்சபையும், முழு உலகத்தில்உள்ள எல்லா சமயங்களின் ஒழுங்குகளையும் சாயல்காட்ட இது விடப்பட்டது; ஏனென்றால், இஸ்ரவேல் யூதாதேசத்தாருக்கு ஏற்படுத்தப்பட்ட திருச்சபை அறிகுறி சபையாயிருந்தது; ஆகையினால், அந்த சபையின் தீர்ப்புகளும் சட்டங்களும் அதன் அந்தரங்கமானவைகளா யிருக்கிற திருச்சபையின் பரமார்த்த விஷயங்களை சாயல்காட்டினது; அந்த ஜனங்களே திருச்சபையை சாயல்காட்டினார்கள்; அரசன் ஆண்டவரை சாயல்காட்டினார்; தாவீது உலகத்துக்குவர இருக்கிற ஆண்டவரையும், சாலோமான் அவர் வந்தபிறகு ஆண்டவரையும் சாயல் காட்டினார்கள். தன்னுடைய மானிடத்தன்மை மகிமையடைந்த பிறகு ஆண்டவர் தானே சொல்லுகிறபடி (மத்தே. XXVIII, 18) சுவர்க்கத்தின்பேரிலும் பூமியின்பேரிலும் அதிகாரம் பெற்றிருந்தபடியினால், அவருடைய பிரதிநிதியாகிய சாலோமான் மகிமையிலும் சிறப்பிலும் தோன்றி, பூமியின்பேரில்உள்ள எல்லா அரசர்களையும் பார்க்கிலும் ஞானத்தில் மேலாக இருந்தார்; மேலும் அவர் கோவிலைக்கட்டினார். இதுவுமன்றி, உலகத்திலுள்ள நானாவித சமய ஒழுங்குகளை சாயல்காட்டிய, அநேக இதரதேசத்தாரில் ஆராதனைகளை ஏற்படுத்தி, அவைகளுக்கு அனுமதிகொடுத்தார். இலக்கத்தில் எழுநூறாயிருந்த அவருடையமனைவிகளுக்கும், இலக்கத்தில் முன்னூறாயிருந்த அவருடைய வைப்பாட்டிகளுக்கும் அதேமாதிரி அருத்தம்தான் (1. இராஜாXI.3); ஏனென்றால் வேதத்தில் மனைவி என்பது ஒரு திருச்சபையையும், வைப்பாட்டி என்பது சமய ஒழுங்கையும் கருதுகின்றது. ஆண்டவ

ருடைய தெய்வீக மானிடத்தன்மையையும் (யோவா. II; 19, 21) திருச்சபையையும்கூட கருதப்பட்ட கோவிலைக்கட்டி **சாலோமானுக்கு** ஏன் அருள் செய்யப்பட்ட தென்பதும், அவர் ஏன் விக்கிரக பூசையை ஏற்படுத்தவும், அவ்வளவு அநேக மனைவிகளை விவாகம் செய்துகொள்ளவும் விடப்பட்டார் என்பதும், இதிலிருந்து விசதமாகும். வேதத்தில் அநேக இடங்களில் **தாவீது** என்பதால், உலகத்துக்கு வர இருந்த ஆண்டவரை கருதப்படுகிறதென்பது **ஆண்டவரைக்குறித்த புதிய எருசலேம் நகரத்துகோள்கை** எனும் நூலில் பார்க்கப்படலாம் (பி-43, 44).

246. VI. **சாலோமானுக்குப் பின்னிட்டு அநேக அரசர்கள் கோயிலையும் திருச்சபையின் பரிசுத்த பொருள்களையும் அசுத்தப்படுத்த விடப்பட்டார்கள்.** ஜனங்கள் திருச்சபையை சாயல்காட்டின படியினாலும், அரசன் அவர்களுக்கு தலையானபடியினாலும் இப்படிநேர்ந்தது. இஸ்ரவேல் யூதா தேசத்தார்கள் இருதயத்தில் விக்கிரக பூசகர்களா யிருந்ததின் பொருட்டு திருச்சபையை சாயல்காட்டக்கூடாதபடி அவ்விதமானவர்களா யிருந்ததினால் கடைசியில் திருச்சபையை பாழாக்கும்படி அவ்வளவுதூரம் அதன் எல்லா விஷயங்களையும் தாறுமாறுக்கியதினால், அறிகுறி ஆராதனையிலிருந்து படிப்படியாய் திரும்பிவிட்டார்கள். அரசர்களால்கோவில்கள் அசுத்தப்படுதல் என்பதினாலும், அவர்களுடைய விக்கிரக பூசையாலும், இது சாயல் காட்டப்பட்டது; திருச்சபையையே பாழாக்குதல் என்பது, கொவிலையே அழித்தலென்பதினாலும், இஸ்ரவேல் தேசத்து ஜனங்களை கொண்டுபோவதினாலும், பாபிலோனியாவில் யூதாதேசத்து ஜனங்களின் சிறை இருப்பினாலும் சாயல்காட்டப்பட்டது; இதுதான் காரணம்; எதோ ஒரு காரணத்திலிருந்து சம்பவிக்கிற ஏதாகிலும், தெய்வபரிபாலனத்திலிருந்து அதன் எதோ ஒரு சட்டத்தை அனுசரித்து சம்பவிக்கிறது.

247. VII. **அந்ததேசத்தார் ஆண்டவரை சிலுவையில் அறைய இடங்கொடுக்கப்பட்டார்கள்.** அந்த தேசத்தாரின் திருச்சபை முழுமையும் பாழாக்கப்பட்டு, அவர்கள் ஆண்டவரை அறிந்துகொண்டு

ஒத்துக்கொள்ளாதது மட்டுமல்லாமல், அவரை அருவருப்பில்கூட வைக்கும்படியாக அவ்விதமானவர்களானபடியினாலும் இது நேர்ந்தது. ஆனால் அவர்கள் அவருக்கு செய்த எல்லாபொருள்களும் அவரிடதெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அனுசரித்திருந்தது. சிலுவையின் உபாதியானது, ஆண்டவர் நரகங்களை முழுமையும் ஜெயித்து, தன்னுடைய மானிடத்தன்மையை முழுமையும் மகிமைபடுத்திய கடைசி சோதனையாக அல்லது கடைசி சண்டையாக இருந்ததென்பது, ஆண்டவரைக்குறித்த புதிய எருசலேம் நகரத்துகோள்கை எனும் நூலிலும் (பி 12-14), பக்திவிஷயத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கையிலும் (பி. 34, 35) பார்க்கலாம்.

248. மேலே பிரிவு 236ல் வரிசைக் கிரமமாக சொல்லியவைகள் இவ்வளவுதூரம் விவரிக்கப்பட்டன. அவைகள் ஒரு வாதிப்போனாகிய ஒரு ஸ்தூல மனிதன் தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாக தானே ஸ்திரப்படக்கூடிய வேதத்திலிருக்கும் சில விஷயங்களாயிருக்கின்றன. ஏனென்றால், முன் சொல்லியபடி, அவ்விதமான மனிதன் பார்க்கிறதும், கேட்கிறதும் வாசிக்கிறதுமான ஏதாகிலும் அதை அதற்கு விரோதமாய் ஒரு காரணமாக அவன் எடுத்துக்கொள்ளலாம். ஆயினும் வேதத்திலுள்ள விஷயங்களிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் சிலர்தான் தாங்களே ஸ்திரப்படுகிறார்கள்; ஆனால், இன்னும் அநேகர் 237வது பிரிவில் சொல்லப்பட்டதும், இப்பொழுது அம்மாதிரியே விவரிக்கப்பட வேண்டியதுமான, தங்கள் கண்கள் முன்பாகத் தோன்றுகிற பொருள்களிலிருந்து அம்மாதிரி செய்கிறார்கள்.

249. I. தன்னையேயும், பிரகுருதியையும் ஆராதிக்கும் ஒவ்வோருவனும், உலகத்தில் அவ்வளவு அநேக பக்தியில்லாத ஜனங்களையும் அவர்களுடைய அவ்வளவு அநேக அவபக்திகளையும், அதே காலத்தில், இவைகளில் அவர்களில் சிலர் தற்பெருமை பாராட்டுவதையும் அப்படியிருந்தும் அவர்கள் கடவுளிடமிருந்து தண்டனை அடையாதிருப்பதையும் பார்க்கும்போது தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாக ஸ்திரப்படுகிறான். எல்லா அவபக்திகளும் அதனுடன்

கூட அவைகளைப்பற்றி தற்பெருமை பாராட்டுதலும் அனுமதி களா யிருக்கின்றன; அதற்கு காரணங்கள் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களா யிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனும் தான் இச்சிப் பதை சுவேச்சையாய், நிஜமாக மிகவும் சுவேச்சையாய் கடவு ளுக்கு விரோதமாகவாவது அவருக்கு அனுகூலமாகவாவது நினைக் கக்கூடும்; கடவுளுக்கு விரோதமாய் நினைக்கிறவன் ஸ்தூல உலகத்
(2) தில் அரிதாய் தண்டிக்கப்படுகிறான்; ஏனென்றால், அங்கே அவன் சீர்படுத்தப்படக்கூடிய நிலைமையில் எப்பொழுது மிருக்கி றான். ஆனால், இறந்தபிறகு சூக்குமலோகத்தில் தண்டிக்கப்படு கிறான். ஏனென்றால், அவன் அப்பொழுது இனி சீர்திருத்தப்பட முடியாது. தெய்வபரிபாலனத்தின் சட்டங்கள் அனுமதிகளுக்குக் காரணங்கள் என்பது, மேலேசொல்லிய சட்டங்களிலிருந்து, அவைகள் நினைத்து பரிசோதனை செய்யப்பட்டால் வெளிப்படை யாகிறது; அவைகள் இவைகளா யிருக்கின்றன: மனிதன் விவே கத்தை அனுசரித்து சுவேச்சையிலிருந்து செயல்படவேண்டும்; இந்த சட்டத்தைப்பற்றி மேலே (71-79) பார்க்கவும்; மனிதனான வன் புறம்பான வழி வகைகளால் நினைக்கவும் இச்சிக்கவும் இம் மாதிரியாக, சமயத்தைச் சேர்ந்தவைகளை நம்பி அன்புபாராட்ட வும் பலவந்தப்படுத்தப்படக்கூடாது; மனிதனானவன் தானே அந்தவழிக்கு வரவேண்டும், சில சமயங்களில் தானே பலவந்தம் செய்துக்கொள்ளவேண்டும்; இந்த சட்டத்தைப்பற்றி(பி. 129-153) பார்க்கவும்; மனிதனுடைய சொந்தவிவேகம் என்று ஒன்று இல்லை; அப்படி இருப்பதாக மாத்திரம் தோன்றுகிறது; இருந்த தாக தோன்றக்கூட வேண்டும்; ஆனால் தெய்வபரிபாலனம் மிக வும் நுண்ணிய தனிப்பொருள்களினு மிருப்பதினால் சர்வவியாபக முள்ளதா யிருக்கிறது, (பி. 191-213). தெய்வபரிபலனம் நித்திய பொருள்களையும் அநித்தியமானவைகள் அநித்தியமானவைக ளோடு ஒன்று படுகிறவரையில் அவைகளையும் கவனிக்கிறது (பி-214-220). மனிதனானவன் முடிவுபரியந்தம் அவைகளில் வைக் கப்படக்கூடிய அளவுதவிர அவன் பக்தியின் உண்மைகளிலும் தருமத்தின் நன்மைகளிலும் உள்ளுக்குள்ளாய் சேர்க்கப்படு
(3) கிறதில்லை. அந்த சட்டத்தைப்பற்றி (பி. 221-233) வரையில்

பார்க்கவும். அநுமதிகளின் காரணங்கள் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களென்பது இதிலிருந்து போல பின்வருவதில் கூட வெளிப்படையாகும்: தீமைகள், இரட்சிப்பா யிருக்கிற முடிவின் பொருட்டு விடப்படுகின்றன. இதிலிருந்துகூட தெய்வபரிபாலனம் நல்லவர்களுடன் போல கெட்டவர்களுடனும் சமமாய் தொடர்ச்சியா யிருக்கிறது. முடிவில் இதிலிருந்து ஆண்டவர் தன் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு எதிரிடையாய் நடக்க முடியாது; ஏனென்றால், அவைகளுக்கு விரோதமாய் நடத்தல் அவருடைய இச்சாசத்திக்கும் ஞானசத்திக்கும், இவ்விதமாக அவருக்கே விரோதமாகவும் நடத்தலா யிருக்கும். சேர்த்துப் பார்த்தால், இந்த சட்டங்கள் ஆண்டவரால் அவபக்திகளுக்கு ஏன் இடங்கொடுக்கப்பட்டு அவைகள் சிந்தனையி லிருக்கும்போதும், செய்கையிலில்லாதபோது அரிதாய் எண்ணத்திலிருக்கும்போதும், இவ்விதம் சித்தத்தி லிருக்கும்போதும் கூட, ஏன் தண்டிக்கப்படுகிறதில்லை என்பதற்கு காரணங்களை வெளிப்படையாக்கும். அப்படி யிருந்தாலும், அதன் சொந்த தண்டனை ஒவ்வொரு தீமையையும் பின்பற்றுகிறது; பக்தியில்லாதவன் இறந்தபிறகு அநுபவிக்கிற அதன் சொந்த தண்டனை தீமையின்பேரில் எழுதிவைத்தது போல் அது இருக்கிறது. இப்பொழுது சொல்லப்பட்டதால், பின்வருபவைகளா யிருக்கிற மேலே 237வது பிரிவில் காண்பித்த விஷயங்கள் கூட விவரிக்கப்படுகின்றன: தன்னையேயும் பிரகுருதியையும் தொழுபவன், சூழ்ச்சிகளும், தந்திரங்களும், மோசமும் பக்தியுள்ளவர்களுக்கும் நியாயமானவர்களுக்கும் உண்மையானவர்களுக்கும் கூட விரோதமாய் ஜெயமடைவதையும் அநியாயம் நியாயஸ்தலங்களிலும் வியாபாரங்களிலும் நியாயத்தின் பேரில் வெற்றி கொள்வதைப் பார்க்கும்போது, தெய்வ அரசியலுக்கு விரோதமாய் இன்னும் அதிகமாய் ஸ்திரப்படுகிறான். தெய்வபரிபாலனத்தின் எல்லா சட்டங்களும் தேவையானவைகள்; இப்பேர்பட்ட விஷயங்களுக்கு ஏன் இடங்கொடுக்கப்படுகிறது என்பதற்கு அவைகள் காரணங்களானபடியினால், மனிதனானவன் ஒரு மனிதனைப்போல் வாழ சக்தியுள்ளவனுயிருக்கவும், சீர்படுத்தப்பட்டு இரட்சிக்கப்படவும், எல்லாவித கொலைகளையும், விபசாரங்களையும், திருடுகளை

யும் பொய்சாட்சியங்களையும் பாவங்களாக ஒத்துக்கொள்ளுகிறவர்கள் விஷயத்தில் இவ்வித விஷயங்கள் ஆண்டவரால் அவனிடமிருந்து நடுப்போக்காய் வேதத்தினுலும், சிறப்பாய் பத்துகற்பனையின் கட்டளைகளாலும் தவிர நீக்கப்பட முடியாதென்றும், ஆனல் அவ்வித விஷயங்களைப் பாவங்களாக ஒத்துக்கொள்ளாதவர்கள் விஷயத்தில் நடுப்போக்காய் தேசத்துக்குறிய சட்டங்களாலும், அவைகளின் தண்டனைகளின் பயத்தினுலும், அதனுடன் சன்மார்க்க சட்டங்களாலும், அதன் பொருட்டு, பெயரும், கௌரவமும், லாபமும் போய்விடும் என்கிற பயத்தினுலும் தவிர, நீக்கப்பட முடியாதென்றும் வெளிப்படையா யிருக்கிறது. இந்த கருவிகளால், ஆண்டவர் கெட்டவர்களை நடத்துகிறர்; ஆனல், அவைகளை நினைத்து இச்சிப்பதிலிருந்தல்லாமல் இவைகளை செய்வதிலிருந்து மாத்திரம் நடத்துகிறர்; ஆனல், முதலில் கூறிய வழிவகையால் ஆண்டவர்நல்லவர்களை, அவைகளை செய்வதிலிருந்து மாத்திரமல்லாமல், அவைகளை நினைத்து இச்சிப்பதிலிருந்தும்கூட நடத்துகிறர்.

250. II. தன்னையேயும் பிரகுருதியையும் ஆராதிக்கிறவன், அவ பக்தியுள்ளவர்கள் மரியாதைகளுக்கு உயர்த்தப்பட்டு, பிரபுக்களும் பிரதான குருக்களுமாய், அதனுடன் செல்வம்நிறைந்து சிறப்பிலும் மகத்துவத்திலும் வாழ்வதையும், கடவுளை ஆராதிக்கிறவர்கள் அலட்சியம் செய்யப்பட்டு வறுமையிலிருப்பதையும் பார்க்கும்போது, தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறன். தன்னையேயும் பிரகுருதியையும் ஆராதிக்கிறவன், கண்ணியங்களும், செல்வமும், அதிக உயர்ந்ததென்றும், கொடுக்கப்படக்கூடிய ஒரே ஒரு சுகமென்றும், ஆகையினல் சுகமே என்றும் நம்புகிறன்; பாலியத்தில் உபதேசிக்கப்பட்ட ஆராதனையின் பொருட்டு கடவுளைக்குறித்து ஏதாவது சிந்தனையிருந்தால், அவன் அவைகளை தெய்வ ஆசீர்வாதங்களென்கிறன்; அவைகளினல், அவன் கர்வம் அடையாதவரையில், ஒரு கடவுள் இருக்கிறரென்றும் நினைத்து, அவரை ஆராதிக்கிறன்; ஆனல் அந்த ஆராதனையில், கடவுளால் இன்னும் உயர்ந்த கௌரவங்களுக்கும், இன்னும் அதிக பெரிய செல்வத்துக்கும் தான் உயர்த்தப்படவேண்டுமென்

கிற, அக்காலத்தில் அவனுக்கே தெரியாத உத்தேசம் மறைந்து கிடக்கிறது; "அவன் இவைகளை அடைந்தால், கடைசியில் கடவுளைப்பற்றி நினைக்காமல் அவரை மறுக்கும்படியாக, அவனுடைய ஆராதனை, அது விழுந்து விடுகிறவரையில், அதிகமதிகமாய், புறம்பானவைகளுக்குப் போகிறது; தன்னுடைய மனதை வைத்திருக்கிற கௌரவத்திலிருந்தும் சம்பத்திலிருந்தும் தள்ளப்பட்டால், அதேமாதிரி செய்கிறான். அப்படியானால், கௌரவங்களும் ஐசுவரியமும் கெட்டவர்களுக்கு தப்பி விழுவதற்குக் காரணமாயிருப்(2)பதைத் தவிர வேறு என்ன? ஆயினும், நல்லவர்கள் விஷயத்தில் அப்படியல்ல; ஏனென்றால், அவர்கள் அவைகளின்பேரில் அல்லாமல், உபயோகங்கள் அல்லது நன்மைகள் பேரில் மனதை வைக்கிறார்கள்; அதை செய்வதில் கௌரவங்களும் செல்வமும் வழிவகைகளாக உபயோகப்படுகின்றன. ஆகையினால், பக்தியில்லாதவர்கள் கௌரவங்களுக்கும் ஐசுவரியத்துக்கும் உயர்த்தப்பட்டு, பிரபுக்களாகவும், பிரதான குருக்களாகவுமாகிறதிலிருந்து, தன்னையேயும் பிரகுருதியையுமே ஆராதிக்கிறவன் தவிர எவனும் தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாய் ஸ்திரப்படமாட்டான். மேலும், அதிக பெரியதாயினும் அல்லது அதிக சிறியதாயினும் கண்ணியம் என்பது என்ன? மிகபெரியதும், மிக சிறியதுமாகிய செல்வமென்பதென்ன? அது தன்னில்தானே மனக்கற்பனையான ஏதோ ஒன்றைத்தவிர வேறென்று? ஒருவன் மற்றவனைவிட அதிகமாய் கடாட்சிக்கப்பட்டு மிகவும் சுகமாயிருக்கிறானா? பெரிய மனிதன் விஷயத்தில், நிஜமாகவே, அரசன் விஷயத்திலும் சக்கிரவர்த்தி விஷயத்திலும், ஒரு தனித்த வருஷமான பிறகு, அந்த கௌரவமானது, தன்னுடைய மனதை சந்தோஷத்துடன் உயர்த்தாது, தன்னுடைய பார்வையில் உபயோகமில்லாததாகவும்கூட ஆகக்கூடிய ஏதோ ஒரு சாதாரணமானதைத்தவிர வேறுவிதமாய் மதிக்கப்படுகிறதா? தங்களுடைய கௌரவங்களினால், குறைந்த கௌரவமுடையவர்களைவிடவும், விவசாயக்காரர்களைப்போலும் அவர்கள் வேலைக்காரர்களைப்போலும், மிகவும் குறைந்த கௌரவத்திலுள்ளவர்களை விடவும் அதிகமாய் சுகமாய் அவர்கள் இருக்கிறார்களா? பின் கூறியவர்கள், தாங்கள் நன்றாயிருக்கும்போதும், தங்

களுக்கு வந்த அதிர்ஷ்டத்தில் திருப்தியாயிருக்கும்போதும் அதிக சுகத்தை உடைத்தாயிருக்கலாம். தன்னையே நேசித்தலைவிட மனதில் அதிக ஓய்வில்லாததும், அதிக சுலபமாய் கோபமூட்டப்படுவதும், அதிக உக்கிரமமாய் கோபப்படுவதும், இதுகூட, தன்னுடைய மனது தூக்கப்படுவதற்குத் தக்கபடி அது கௌரவப்படுத்தப்படாதவரையிலும், அதன் சந்தோஷத்திற்கும் விருப்பத்துக்கும் தக்கபடி ஏதாவது தனக்கு அனுகூலமாய் இல்லாதவரையிலும் அப்படி இருக்கிறது வேறு எது? கண்ணியமானது. எதோ ஒரு வேலைக்கு அல்லது உபயோகத்துக்கு சேர்ந்தாலொழிய, அது ஒரு அபிப்பிராயத்தைத் தவிர வேறுஎன்ன? தன்னையே பற்றியும் உலகத்தைப்பற்றியும் சிந்தனையைத் தவிர வேறு எந்த சிந்தனையிலாவது அவ்விதமான அபிப்பிராயம் இருக்கக்கூடுமா? இது தன்னில் தானே, உலகம் எல்லாமென்றும், நித்தியம் சூனிய (3) மென்றும், இருக்கிறது. தெய்வபரிபாலனமானது, இருதயத்தில் பக்தியில்லாதவர்களை கௌரவங்களுக்கு உயர்த்தப்படவும், செல்வத்தினால் செழிப்பிக்கப்படவும் ஏன் விடுகிறதென்று, தெய்வபரிபாலனத்தைப்பற்றி சிலது இப்பொழுது சொல்லப்பட வேண்டும். பக்தியில்லாதவர்கள் அல்லது கெட்டவர்கள் பக்தியுள்ளவர்களைப்போலவும், நல்லவர்களைப்போலவும் சமமாய் உபயோகமானவைகளை செய்யக்கூடும்; நிஜமாகவே, உபயோகமானவைகளை செய்வதில் தங்களையே மதிக்கிறபடியினாலும், மரியாதைகளை உபயோகங்களாக மதிக்கிறபடினாலும், அவர்கள் இன்னும் அதிக உற்சாகத்துடன் செய்கிறார்கள்; ஆகையினால், தன்னையே மதித்தல் எவ்வளவு உயரத்துக்கு ஏறுகிறதோ அவ்வளவு தூரம் தங்கள் சுயபிரதாபத்தின் பொருட்டு உபயோகமானவைகளை செய்யும் ஆசை தீமூட்டப்படுகிறது. தெய்வபக்தியுள்ளவர்கள் அல்லது நல்லவர்களிடத்தில், கீழிருந்து கௌரவத்தினால் சூடு காட்டப்பட்டால் ஒழிய, அவ்வித தீயானது கிடையாது. ஆகையினால், ஆண்டவர், கௌரவங்களிலுள்ள இருதயத்தில் பக்தியில்லாதவர்களை, அவர்கள் பெயரின் கீர்த்தியினால் ஆண்டு, தாங்கள் வசிக்கும் ஜாதியார் அல்லது தேசத்துக்கும், கூட்டத்துக்கும், நகரத்துக்கும், அதனுடன் தாங்கள் கூடியிருக்கும் உள்ளூரானுக்கும் அல்லது

அயலானுக்கும் உபயோகமானவைகளைச் செய்ய அவர்களை ஏவுகிறார். அவ்விதமானவர்கள் விஷயத்தில், தெய்வபரிபாலனம் என்று சொல்லப்பட்ட ஆண்டவர் ஆளுகை இதுதான். ஏனென்றால், ஆண்டவருடைய இராச்சியம் உபயோகங்களால் நிறைந்த இராஜ்யம்; உபயோகங்களின் பொருட்டு உபயோகங்களைச் செய்கிறவர்கள் சிலர் மட்டும் இருக்கும் இடங்களில், அவர், தன்னையேநேசிக்கிறவர்களை, ஒவ்வொருவனும் தன்னுடைய ஆசையின் மூலமாய் நன்மை செய்ய தூண்டப்படுகிற மிகவும் உயர்ந்த உத்தியோகங்களுக்கு (4)உயர்த்தப்படச் செய்கிறார். தன்னையே நேசித்தலே பேயாயிருக்கிறதினால் தன்னையே நேசித்தல் மாத்திரம் ஆளுகிற உலகத்தில் நரகத்துக்கு அடுத்த இராஜ்யம் யாதொன்றும் இல்லாவிட்டாலும் இருப்பதாக வைத்துக்கொண்டால், ஒவ்வொருவனும் தன்னையே நேசித்தலின் உற்சாகத்திலிருந்தும், தன் மகிமையின் பிரகாசத்திற்காகவும் வேறு எந்த இராஜ்யத்தைவிட அதிகமாய் உபயோகமானவைகளைச் செய்யமாட்டானா? ஆனால், இவர்கள் எல்லாரிடத்திலும், தங்கள் வாய்களில் பொது நன்மையும், தங்கள் இருதயங்களில் சுய நன்மையுமிருக்கிறது; ஒவ்வொருவனும், தான் மிகவும் பெரியவனாக செய்யப்பட தன்னுடைய சொந்த அரசனை எதிர்பார்க்கிறபடியினால் (அவன் எல்லாரிலும் அதிக பெரியவனாக விரும்புகிறபடியினால்) அப்பேர்ப்பட்டவன், எந்த பரமார்த்த உண்மையையும் தன் சொந்த ஒளியில் செல்லாதபடி அவனைச்சுற்றி ஒரு பெரும் தீபோன்று புகை இருக்கும்போது, ஒரு கடவுள் இருக்கிறாரென்று பார்க்கக்கூடுமா? அவ்விதமானவர்களின் நரகங்களைச் சுற்றி அந்தப்புகையை நான் பார்த்திருக்கிறேன். உன் விளக்கை கொளுத்து, கௌரவங்கள் பேரில் ஆசைப்படுகிறவர்களும் தன்னையேயும் உலகத்தையும் நேசிக்காதவர்களும் தற்கால இராஜ்யங்களில் எத்தனைபேர் இருக்கிறார்களென்று விசாரித்துப்பார். கடவுளை நேசிக்கிறவர் ஆயிரத்தில் ஐம்பது பெயரையாவதும், இவர்களில் கௌரவங்களுக்கு ஆசைப்படுகிறவர் சிலரைமட்டும் நீர் பார்ப்பீரா? கடவுளிடத்து ஆசைகளாயிருக்கிறவர்கள் அவ்வளவு கொஞ்சமாக இருக்கிறபடியினாலும் தன்னையும் உலகத்தையும்நேசிப்பவர்கள் அநேகமாக இருப்பதினாலும், பின் கூறிய ஆசையுடையவர்

கள் தங்கள் வைராக்கியத்திலிருந்து, தங்களுடைய வைராக்கியத்திலிருந்து கடவுளை நேசிப்பவர்கள் செய்வதைவிட அதிகமாய் உபயோகங்களைச் செய்கிறபடியினாலும்,கெட்டவர்கள் நல்லவர்களைவிட உன்னதஸ்தலத்திலும் செல்வத்திலும் இருக்கிறார்களென்கிற விஷயத்தால், தெய்வ அரசியலுக்கு விரோதமாய் எவனாவது ஒருவன் (5)எப்படிதானே ஸ்திரப்படக்கூடும்? இதுகூட ஆண்டவரின் பின்வரும் வார்த்தைகளால் ஸ்திரப்படுத்தப்படுகிறது: "அநீதியுள்ள உக்கிராணக்காரன் புத்தியாய் செய்தானென்று, எஜமான் கண்டு, அவனை மெச்சிக்கொண்டான். இவ்விதமாய் ஒளியின் பிள்ளைகளைப் பார்க்கிலும், இந்த பிரபஞ்சத்தின் பிள்ளைகள் அதிக புத்திமான்களா யிருக்கிறார்கள். நான் உங்களுக்கு சொல்லுகிறேன், நீங்கள் மாளும்போது, உங்களை நித்தியமான வீடுகளிலே ஏற்றுக்கொள்வார் உண்டாகும்படி, அநீதியான உலகப்பொருளால் உங்களுக்கு சிநேகிதரைச் சம்பாதியுங்கள்" (லூக் XVI. 8, 9,). இவைகளினால் ஸ்தூல அருத்தத்தில் என்ன கருதப்படுகின்றதென்று வெளிப்படையா யிருக்கிறது; ஆனால், "அநீதியான உலகப் பொருள்களால்" என்பதினால் சூக்கும அருத்தத்தில் கெட்டவர்களுக்கு இருக்கிறதும், தங்களுக்கே கௌரவங்களையும், ஐசுவரியத்தையும் சம்பாதிக்க அவர்கள்உபயோகிக்கிறதுமான நன்மையினுடையவும் உண்மையினுடையவும் ஞானங்கள் கருதப்படுகின்றன;இந்தஅறிவுகளிலிருந்து நல்லவர்கள் அல்லது ஒளியின் பிள்ளைகள் சிநேகிதரை சம்பாதிக்கவேண்டும்; அவைகள்தான் அவர்களை நித்தியமான வீடுகளில் ஏற்றுக்கொள்ளுகிறவைகள். தன்னையும் உலகத்தையும் நேசிக்கிறவர்கள் அநேகர் என்றும், கடவுளை நேசிக்கிறவர்கள் சிலர் என்றும், ஆண்டவர்கூட பின்வருவதினால் கற்பிக்கிறார்: "கேட்டுக்குப் போகிற வாசல் விரியும், வழி விசாலமுமா யிருக்கிறது; அதின் வழியாய் பிரவேசிக்கிறவர்கள் அநேகர். ஜீவனுக்கு போகிற வாசல் இடுக்கமும், வழி நெருக்கமுமா யிருக்கிறது; அதைக் கண்டுபிடிக்கிறவர் சிலர்" (மத்தே-VII, 13, 14). கௌரவங்களும் ஐசுவரியமும் சாபங்களாக அல்லது ஆசீர்வாதங்களாக யிருக்கலாம்; அவைகள் யார்யாரிடத்தில் அம்மாதிரி யிருக்கின்றன வென்பதை மேலே பார்க்கலாம் (பி. 217).

251. III. **தன்னையேயும் பிரகுருதியையும் ஆராதிக்கிறவன் யுத்தங்கள் நடக்கவிடப்படுகிறதையும், அவைகளில் அநேக மனிதர் கொல்லப்படுவதையும், அவர்களுடைய செல்வம் கொள்ளையிடப்படுவதையும் யோசிக்கும்போது, தெய்வ அரசியலுக்கு விரோதமாய் ஸ்திரப்படுகிறான்.** யுத்தங்கள் நடப்பது தெய்வபரிபாலனத்திலிருந்து அல்ல; ஏனென்றால், அவைகள் கிருஸ்துவ தருமத்துக்கு நேராய் எதிரிடையாயிருக்கிற கொலைகளோடும், கொள்ளைகளோடும், கொடுமைகளோடும், குரூரங்களோடும் இதர அபரிமிதமான தீமைகளோடும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அப்படியிருந்தாலும் அவைகளுக்கு இடங்கொடுக்கவேண்டியிருக்கிறது. ஏனென்றால், ஆதாமும் அவனுடைய மனைவியாளும் (அவர்களைப்பற்றி பி.241) கருதப்படுகிற மிக பூர்வ ஜனங்கள் காலமுதல் மனிதனுடைய உயிரின் அன்பு, மற்றவர்களையும், கடைசியில் எல்லாரையும் ஆளவும், உலகத்தின் ஐசுவரியத்தையும், கடைசியில் எல்லா ஐசுவரியத்தையும் அனுபவிக்கவும் விரும்பும்படியானதாய் விட்டது. இந்த இரண்டு ஆசைகளும், ஒவ்வொருவனும் விவேகத்தை அனுசரித்து சுதந்திரத்திலிருந்து செயல்பட விடப்படுவது (இதைக் குறித்து மேலே பி. 71-99) தெய்வபரிபாலனத்தை அனுசரித்ததாயிருப்பதினால், கட்டுப்படுத்திவைக்க முடியாது; அனுமதிகள் இல்லாவிட்டால், மனிதன் தீமையிலிருந்து ஆண்டவரால் வழிகாட்டப்பட முடியாது; இவ்விதமாக சீர்படுத்தப்பட்டு இரட்சிக்கப்படவும் முடியாது; ஏனென்றால், தீமைகள் வெளியே வரவிடப்பட்டாலொழிய, மனிதன் அவைகளைப் பார்க்கமாட்டான், இவ்விதமாக அவைகளை ஒத்துக்கொள்ள மாட்டான்; ஆகையினால், அவைகளை எதிர்க்க நடத்தப்படமாட்டான். அதனால்தான், தீமைகள் எந்த அரசியலினாலும் அடக்கப்படமுடியாது; ஏனென்றால், அவைகள் அப்படி உள்ளே மூடப்பட்டிருந்து, விப்புருதி என்னும் மாம்சத்தைத் தின்னும் புண் என்றும் சொல்லப்படுகிற வியாதிகளைப்போல் மனிதனில் உயிருக்கு ஆதாரமானதாயிருக்கிறவைகள் எல்லாவற்றையும் பரவித்தின்றுவிடும். ஏனென்றால் மனிதனானவன் பிறந்தது முதல் சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இடைவிடாத சாசுவத ஒவ்வாமையிருக்கிற ஒரு சிறிய நரகத்

தைப்போல் இருக்கிருன். எந்த மனிதனும் தான் அங்கிருப்பதாக அவன் அறிந்துகொண்டாலும் தவிர, வெளியே வழிகாட்டப்பட அவன் விரும்பினுலும் தவிர, தன்னுடைய நரகத்திலிருந்து நீக்கப்படமுடியாது. இதுவும், அவைகளின் காரணங்கள் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களாயிருக்கிற அனுமதிகளன்றி செய்யப்பட முடியாது. பூஸ்திதியுள்ளவர்களுக்கும் அவர்களுடைய அயலார்களுக்கும் மிக சிறியதும், இராஜ்யங்களின் அரசர்களுக்கும் அவர்கள் அயலார்களுக்கும் மிகப் பெரியதுமாகிய,மிகச்சிறியதும் மிகப் பெரியதுமாகிய யுத்தங்கள் இந்த காரணத்திலிருந்து உண்டாகின்றன; மிக சிறியது அந்த தேசத்தாரின் சட்டங்களாலும், மிகப் பெரியது பலதேசத்தாரின் சட்டங்களாலும், எல்லை காட்டப்பட்டிருக்கிறது என்பது தவிரவும், சிறியதும் பெரியதும் இரண்டும் தங்கள்சட்டங்களை மீறி நடக்க விரும்புகையில், முடியக்கூடிய எல்லைக்கு மேல் அல்லாவிட்டாலும், சிறியது அப்படி செய்ய முடியாதென்கிறதும் பெரியது அப்படி செய்ய முடியுமென்கிறதும் தவிர (3)வும், சிறியது அல்லது பெரியது என்பதில் வித்தியாசமில்லை. பெரிய யுத்தங்களானது கொலைகளோடும், கொள்ளைகளோடும், கொடுமைகளோடும், குரூரங்களோடும் சேர்க்கப்பட்டிருந்தபோதிலும், ராஜாக்கள் விஷயத்திலும் சேனைத்தலைவர்கள் விஷயத்திலும், ஆரம்பத்திலும், அது நடக்கும்போதுமல்லாமல், யாரோ ஒருவருடைய சக்தியானது அழிந்துபோகும்படியான அபாயத்துக்குள்பட அவ்வளவு பலயீனப்பட்டபோது முடிவில்மாத்திரம் ஆண்டவரால் ஏன் அடக்கப்படுகிறதென்கிறதற்கு, இதர அநேக காரணங்கள் பரம ஞானசத்தியின் பொக்கிஷசாலையில் சேர்த்துவைக்கப்பட்டிருக்கின்றன. இந்த காரணங்களில் சிலது எனக்கு வெளிப்படுத்தப்பட்டன; எல்லாயுத்தங்களும் தேசத்துக்குறிய விஷயங்களுக்கு எவ்வளவு அதிகமாய் சேர்ந்திருந்தபோதிலும் திருச்சபையின் நிலைமைகளை சுவர்க்கத்தில் சாயல் காட்டுகிறதென்பதும், அவைகள் அன்னுவயங்கள் என்பதும் அவைகளில் ஒன்று. வேதத்தில் சொல்லிய எல்லா யுத்தங்களும் அவ்விதமானவை, இக்காலத்திலும் எல்லா யுத்தங்களும் அம்மாதிரியே கூட இருக்கின்றன. வேதத்தில்சொல்லிய சண்டைகள் ஆமோரதேசத்தாரும்,

அம்மோனியர்களும், மோயொப்தேசத்தாரும், பிலிஸ்தியர்களும், சிரியர்களும், எகிப்தியரும், சால்டியர்களும், அசிரியர்களும் போன்ற நானுவித தேசத்தாருடன், இஸ்ரவேல் பிள்ளைகள் துணிக்கது செய்தவைகளா யிருக்கின்றன; திருச்சபையை சாயல் காட்டிய இஸ்ரவேல் பிள்ளைகள், தங்களுடைய தரும நியமங்களி லிருந்தும் தரும விதிகளிலிருந்தும் நீங்கிவந்து, அந்த தேசத்தா ரால் அடையாளத்தினுல் தெரிவிக்கப்பட்ட தீமைகளில் விழுந்த போது, (ஏனென்றுல் இஸ்ரவேல் தேசத்து குமாரர்கள் சண்டை செய்த ஒவ்வொரு தேசத்தாரும், தீமையில் ஒரு பிரத்தியேக மான விதத்தை குறித்தது) அந்த தேசத்தாரால் அவர்கள் தண்டிக் கப்பட்டார்கள். உதாரணமாக, அருவருப்பான விக்கிரகாராதனை களால் அவர்கள் திருச்சபையின் பரிசுத்தமான பொருள்களை அசுத்தப்படுத்தியபோது, அசிரியா என்பதினுலும் சால்டியா என்பதினுலும் பரிசுத்தமானதை அசுத்தப்படுத்தல் என்று கரு தப்படுகிறதினுல், அவர்கள் அசிரியா தேசத்தாராலும் சால்டே யர்களாலும் தண்டிக்கப்பட்டார்கள். பிலிஸ்தியர்களோடு அவர் கள் செய்த யுத்தங்களால் என்ன கருதப்படுகிறதென்பது விசுவா சத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கையில் (பி, 50-54) (4) பார்க்கலாம். இக்காலத்து சண்டைகளினுலும், அவைகள் எங்கே நடந்தபோதிலும் அவ்விதமான விஷயங்கள் சாயல்காட் டப்படுகின்றன; ஏனென்றுல், ஸ்தூலஉலகத்தில் சம்பவிக்கும் எல்லா விஷயங்களும் சூக்கும உலகத்திலிருக்கும் சூக்குமபொருள் களோடு அன்னுவயப்படுகின்றன; எல்லா சூக்குமபொருள்களும் திருச்சபைக்கு சம்பந்தமடைந்திருக்கின்றன. கிருஸ்துவ உலகத் தில் மோயப் தேசத்தாருக்கும் அம்மோன் தேசத்தாருக்கும், சிரி யர்களுக்கும், பிலிஸ்தியர்களுக்கும், சால்டியர்களுக்கும் அசிரியர்க ளுக்கும், இஸ்ரவேல்தேசத்து குமாரர்கள் சண்டைகள் செய்த மற் றவர்களுக்கும், இவர்களில் ஒவ்வொருவர்களுக்கும் எந்த இராஜ்யங் கள் அன்னு வயப்படுகின்றன வென்று இந்த உலகத்தில் தெரிந் திருக்கப்படவில்லை; அப்படியிருந்தும், அவைகளை சாயல்காட்டு கிறவைகள் இருக்கின்றன. ஆனுல், பூமியின் பேரில் திருச்சபையின் குணமும், அதுவிழுகிறதும், அதற்காக சண்டைகளால் தண்டிக்

கப்படுகிறதுமாகிய தீமைகள் என்னவென்றும்,ஸ்தூல உலகத்தில் பார்க்கப்படவேமுடியாது; ஏனென்றால், இந்த உலகத்தில், திருச் சபையை உண்டாக்காத புறம்பானவைகள் மாத்திரம், வெளிப்ப டையாயிருக்கின்றன; ஆனால் சபையே இருக்கிற உள்ளானவைகள் தோன்றுகிற சூக்கும உலகத்தில் அது பார்க்கப்படுகிறது; அங்கே எல்லாரும் தங்களுடைய பலவித நிலைமைகளுக்குத்தக்கபடி சேர்க் கப்படுகிறார்கள். சூக்கும உலகத்தில் இந்த நிலைமைகளின் விரோ தங்கள், சண்டைகளுடன் அன்னுவயப்படுகின்றன; அன்னுவ யத்தை அனுசரித்து, இருபக்கங்களிலும் ஆண்டவரால், அவரு டைய தெய்வபரிபாலனத்தை அனுசரித்து இவைகள் ஆளப்படு

(5) கின்றன. உலகத்தில் நடக்கும் சண்டைகள் ஆண்டவரின் தெய்வபரிபாலனத்தினால் ஆளப்படுகின்றனவென்பது, பரமார்த் தமான மனிதன் ஒத்துக்கொள்ளுகிறான்; ஆனால், ஸ்தூல மனிதன், ஒரு வெற்றியின் பொருட்டு ஒரு திருவிழா ஏற்படுத்தப்பட்ட போது, கடவுள் வெற்றியைக்கொடுத்தார் என்று அவருக்கு முழங்காலில் நின்று வந்தனங்கள் செலுத்தும் பொருட்டு தவிர வும், யுத்தத்திற்கு போவதற்கு முன் சொல்லும் சில வார்த்தை களையும் தவிரவும், வேறு சமயங்களில் ஒத்துக்கொள்ளுகிறதில்லை; ஆனால்,அவன் சுயபுத்திக்குவரும்போது,வெற்றியடைந்தது சேனா திபதியின் விவேகத்துக்காவது, அவர்கள் நினைக்காததும், அப் படியிருந்தும் அதனால் தீர்மானிக்கப்பட்டதுமான, யுத்தத்தின் மத்தியில் நேரிட்ட சில உபாயத்துக்கும் அல்லது காரியத்துக்

(6) காவது ஆரோபிக்கிறான். அதிர்ஷ்டம் என்று சொல்லப்பட்ட தெய்வபரிபாலனம், அல்பமான பொருள்களின் மிகவும் தனித்த பொருள்களிலும்கூட இருக்கிறதென்பது மேலே பார்க்கலாம் (பி. 212); அந்த பொருள்களில் தெய்வபரிபாலனத்தை நீர் ஒத் துக்கொண்டால், சண்டை விஷயங்களிலும் அதை நிஜமாய் ஒத்துக் கொள்ளவேண்டும். ஜெயங்களும், சண்டையின் அதிர்ஷ்டமுள்ள செய்கைகளும், சண்டையின் அதிர்ஷ்டம் என்று சொல்லப்பட்ட சாதாரண வசனத்தால் சொல்லப்படுகின்றன; சேனாதிபதி அப் பொழுதும் பின்னிட்டும் தன்னுடைய சொந்த விவேகத்துக்கு முழுமையையும் ஆரோபித்தபோதிலும், முக்கியமாய் அவனு

டைய யோசனைகளிலும், பிரயத்தனங்களிலும், தெய்வபரிபாலனம் இது தான். ஆனால், அவன் தெய்வபரிபாலனத்துக்கு அனுகூலமாகவும், அல்லது அதற்கு விரோதமாகவும், நிஜமாகவே, கடவுளுக்கு அனுகூலமாகவும் அவருக்கு விரோதமாகவும், நினைக்க முழு சுதந்தரத்திலிருக்கிறபடியினால், தான் இஷ்டப்பட்டால் இதை அவன் செய்யலாம்; என்றாலும், அந்த யோசனைகளுடையவும், பிரயத்தனங்களுடையவும் எந்தபாகமும் தன்னிடமேயிருந்து வரவில்லை என்று அவனுக்குத்தெரிந்திருக்கட்டும்; அது எல்லாம், நரகத்திலிருந்து அனுமதியாலும், சுவர்க்கத்திலிருந்து பரிபாலனத்தினாலும், சுவர்க்கத்திலிருந்தாவது நரகத்திலிருந்தாவது பெருக்கெடுக்கின்றன.

252. IV. **தன்னையேயும் பிரகுருதியையும் ஆராதிக்கிறவன், அவன் உணர்ச்சியின் பிரகாரம் வெற்றிகள், சில சமயங்களில் நியாயத்தின் பக்கமில்லாமல், விவேகத்தின் பக்கம் இருப்பதையும், சேனாதிபதி குணசீலனும் அல்லது பொல்லாதவனுமிருப்பதினால் வித்தியாச மில்லாதிருப்பதையும், பார்க்கும்போது தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறான்.** வெற்றிகள் சில சமயங்களில் நடுவு நிலைமை அனுசரித்து அல்லாமல், விவேகத்தை அனுசரித்து இருப்பதாக தோன்றுவது, மனிதனானவன், தோற்றத்திலிருந்து தீர்மானிப்பதினாலும், ஒன்றைவிட மற்றதை அதிகமாய் கடைக்கணிக்கிறதினாலும், அப்படி கடைக்கணிக்கிறதைத் தர்க்கித்து அறிதலினால் ஸ்திரப்படுத்தக்கூடுமானதினாலும், ஏற்படுகிறது; அதுவுமல்லாமல், சற்றுமுன்னே சொல்லியபடி, ஒரு விஷயத்தின் நியாயம், சுவர்க்கத்தில் சூக்குமமாயும் உலகத்தில் ஸ்தூலமாயும் இருக்கிறதென்றும், ஆண்டவருக்கு மாத்திரம் தெரிந்திருக்கிற சென்றவைகளுக்கும் இனிவருபவைகளுக்கும் இருக்கும் சம்பந்தத்தினால் (2) அவைகள் சேர்க்கப்பட்டிருக்கிறதென்றும், அவனுக்குத்தெரியாது. சேனாதிபதி குணசீலனும் பொல்லாதவனும் இருப்பதில் வித்தியாசமில்லை என்பது, மேலே ஸ்திரப்படுத்தப்பட்ட காரணத்திலேயே (பி. 250) அதாவது, நல்லவர்களைப்போல் கெட்டவர்களும் உபயோகமானவைகளை சமமாய் செய்கிறார்களென்பதி

னும், கெட்ட மனிதர்கள் சூதுகளை கல்பிப்பதில் மிக கிருத்திரமமானவர்களாகவும் தந்திரமுள்ளவர்களாகவுமிருப்பதினால், அவர்கள் தங்களுக்கு இருக்கும் உக்கிரகத்தில் நல்லவர்களைவிட தீவிரமாய், முக்கியமாய் சண்டைகளில் அவைகளை செய்கிறார்களென்பதிலிருந்தும், ஒரு நல்லவனைவிட, தனக்குத்தெரிந்து, தனக்கு விரோதிகளென்று அவன் சொல்லுவதிலும் கொள்ளை அடிப்பதிலும் சந்தோஷத்தில் அவன் இருக்கும் பிரதாபத்தின் பேரில் அவன் கொள்ளும் ஆசையிலிருந்தும் ஏற்படுகிறது. ஏனென்றால், ஒரு நல்ல மனிதன் தன்னை பாதுகாப்பதில் முன் யோசனையுள்ளவனாகவும் வைராக்கியமுள்ளவனாகவுமிருக்கிறான், ஆனால், மற்றவர்களை தாக்குவதில், எவ்வளவு பரிமாணமும் அரிதாய் முன் யோசனையுள்ளவனாயும், வைராக்கியமுள்ளவனாயுமிருக்கிறான். நரகத்து பேய்களுக்கும் சுவர்க்கத்து தேவர்களுக்கும் இது அதேமாதிரிதான்; நரகத்துபேய்கள் தாக்குகின்றன, சுவர்க்கத்து தேவர்கள் தங்களையே பாதுகாக்கிறார்கள். இவைகளிலெல்லாமிருந்து, எவனானும் படை எடுத்துவரும் விரோதிகளுக்கு எதிரிடையாய் தன்னுடைய தேசத்தையும் சகவாசிகளையும், கெட்ட சேனாதிபதிகளைக்கொண்டுகூட காத்துக்கொள்ள அனுமதி கொடுக்கப்படலாமென்றும், காரணமில்லாமல் மற்றவர்களுக்கு விரோதியாக தானே செய்துக்கொள்வது விடப்படாதென்றும், தீர்மானம் ஏற்படுகிறது. பிரதாபத்தின் பொருட்டு மாத்திரம் இருக்கும் காரணம் தன்னில்தானே பேயாட்டமானதாயிருக்கிறது; ஏனென்றால், அது தன்னையே நேசித்தலுக்குச் சேர்ந்திருக்கிறது.

253. கேவலம் ஸ்தூல மனிதன் தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிற மேலே (பி. 237ல்) சொல்லிய விஷயங்கள் இவ்வளவு தூரம் விவரிக்கப்பட்டன. இப்பொழுது, அநேக தேசத்தாரின் சமய கோட்பாடுகளுடன் சம்பந்த மடைந்திருக்கிறதும், சுத்தமாய் ஸ்தூலமான மனிதனுக்கு தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய்காரணங்களாகக்கூட உபயோகப்படக்கூடியதுமான 238-வது பிரிவில் வருவதை இப்பொழுது விளக்

கப்படவேண்டும்; ஏனென்றால், மேலே காண்பித்தபடி (பி. 27-45) தெய்வபரிபாலனமானது, மானிட ஜாதிக்கு ஒரு சுவர்க்கத்தை கொடுக்கவேண்டுமென்று நோக்கமிருக்கும்போது, உலக முழுமையும் ஒரு உண்மையான மதத்திற்குப்பதிலாக எப்படி அவ்வளவு அநேக ஒவ்வாத மதங்கள் இருக்கக்கூடுமென்று, அவன் தன்னுடைய இருதயத்திலே சொல்லுகிறான், ஆனால், சொல்வ (2)தைக்கேள் என்று வேண்டிக்கொள்ளுகிறேன்: பிறந்திருக்கிற எல்லாமானிடரும், எல்வளவு அநேகராயினும், எந்த சமயத்திலிருந்தாலும், ஒரு கடவுளை ஒத்துக்கொண்டு, கொலை செய்யக்கூடாதென்றும், விபசாரம் செய்யக்கூடாதென்றும், திருடக்கூடாதென்றும், பொய் சாட்சியம் சொல்லக்கூடாதென்றும், இருக்கிற பத்துகற்பனைகளில் இருக்கிற தருமநியமங்களுக்குத் தக்கபடி அவர்கள் வாழ்ந்தால், இரட்சிக்கப்படுவார்கள்; ஏனென்றால், அவ்விதமானவைகளைச் செய்தல் சமயத்துக்கும், ஆகையினால் கடவுளுக்கும் எதிரிடையாயிருக்கிறது. அப்பேர்ப்பட்டவர்களிடத்தில் கடவுளிடத்து பயமும் அயலானிடத்து அன்புமிருக்கிறது. அவைகளைச்செய்தல் கடவுளுக்கு விரோதமாயிருப்பதாக அவர்கள் நினைப்பதினால் கடவுளிடத்து பயமும், கொல்லுதலும், விபசாரம் செய்தலும், திருடுதலும், பொய்சாட்சியம் சொல்லுதலும், அயலான் வீட்டையும் அவன் மனைவியையும் இச்சித்தலும், அயலானுக்கு விரோதமாய் செயல்படுதலா யிருப்பதினால், அயலானிடத்து அன்பும், அவர்களிடத்தில் இருக்கிறது. தங்களுடைய வாழ்வில், கடவுளை மதித்து இவர்கள் அயலானுக்கு யாதொரு தீமையும் செய்யாதபடியினால், ஆண்டவரால் வழி காட்டப்படுகிறார்கள்; அப்படி வழி காட்டப்படுகிறவர்கள், தங்கள் சமயத்துக்குத் தக்கபடி, கடவுளைப்பற்றியும் அயலானைப்பற்றியும்கூட கற்பிக்கப்படுகிறார்கள்; ஏனென்றால், அம்மாதிரி வாழ்கிறவர்கள், கற்பிக்கப்பட விரும்புகிறார்கள்; வேறுவிதமாய் வாழ்கிறவர்கள் கற்பிக்கப்பட விரும்புகிறதில்லை; கற்பிக்கப்பட விரும்புகிறபடியினால், இறந்தபிறகு, அவர்கள் ஆவிகளாகும்போது, தேவர்களால்கூட கற்பிக்கப்படுகிறார்கள்; வேதத்திலிருக்கப்பட்டவைகளைப் போன்ற உண்மைகளை அவர்கள் மனப்பூர்வமாய் பெற்றுக்கொள்ளுகிறார்

கள். பரிசுத்த வேதத்தைக்குறித்த (பி. 91-97; பி. 104-113) புதிய எருசலேம் நகரத்து கொள்கையில் அவர்களைப்பற்றி சிலது பார்க்கலாம்.

254. I. சுத்தமாய் ஸ்தூலமான மனிதன், முழுமையும் கடவுளைப்பற்றி தெரியாத ஜனங்கள் இருக்கிறார்கள் என்பதுபோலவும், சிலர் சூரியனையும் சந்திரனையும் ஆராதிக்கிறார்கள் என்பதுபோலவும், சிலர் விக்கிரகங்களையும் செதுக்கின பிரதிமைகளையும் ஆராதிக்கிறார்களென்பதுபோலவும், பல தேசத்தாரின் சமய கோட்பாடுகளை பார்க்கும்போது தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறான். இந்த சந்தர்ப்பங்களிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் காரணங்களை ஊகிக்கிறவர்களுக்கு கணக்கற்றவைகளாயிருக்கின்றதும், அதைப்பற்றி மனிதர்களுக்கு ஒன்றும் தெரியாதிருக்கிறதுமான சுவர்க்கத்து இரகசியங்கள் தெரியாது; மனிதனானவன் சுவர்க்கத்திலிருந்து நேராயல்லாமல், நடுப்போக்காய் கற்பிக்கப்படுகிறானென்பதுகூட இவைகளில் ஒன்று; அதைப்பற்றி, மேலே (பி. 154-174) பார்க்கவும்; மனிதன் நடுப்போக்காய் கற்பிக்கப்படுகிறதினாலும், சுவிசேஷமானது தூதர்கள் மூலமாய் முழுபூமியிலும் யிருப்பவர்கள் எல்லாருக்கும் தெரியப்படுத்த முடியாதபடியினாலும், அப்படியிருந்தும், சமயமானது பலவிதங்களில், உலகத்தின் மூலைகளிலிருக்கப்பட்ட தேசத்தாருக்குக்கூட கொண்டுவரப்படக்கூடுமாகையினாலும், தெய்வபரிபாலனத்தினால் இது செய்யப்பட்டிருக்கிறது. ஏனென்றால், எந்த மனிதனுக்கும் தன்னிடமேயிருந்து சமயம் உண்டாகாமல், வேதத்திலிருந்து நேராயாவது, ஒரு சுவர்க்கமும் நரகமுமிருக்கிறதென்றும், இறந்தபின் ஒரு வாழ்வு உண்டென்றும், சுகமுள்ளவர்களாகும் பொருட்டு கடவுள் ஆராதிக்கப்படவேண்டுமென்றும், வேதத்திலிருந்து கற்றுக்கொண்ட மற்றவர்களிடமிருந்து வந்த உற்பவங்களினாலு (2) மாவது தெரிந்திருக்கிற மற்றவன் மூலமாய் வருகிறது. மதமானது சர்வவியாபகமான உலகம் முழுமையும், பூர்வீக வேதத்திலிருந்தும், பின்னிட்டு இஸ்ரவேல் தேசத்து வேதத்திலிருந்தும், பெயர்த்து நடப்பட்டதென்பது; சத்திய வேதத்தைக்குறித்த புதிய

**எருசலேம் நகரத்து கோள்கையில்** பார்க்கலாம் (பி. 101-103); வேதமானது இருந்திருந்தாலொழிய, எவனும், கடவுளைப்பற்றியும், சுவர்க்கத்தையும் நரகத்தைப்பற்றியும், இறந்தபின் வாழ்வைப் பற்றியும், இன்னும் குறைவாய் கடவுளைப்பற்றியும் தெரிந்திருக்க மாட்டான் (அதே நூல் பி. 114-118 பார்க்கவும்). ஒரு சமயமானது ஒருகால் ஒரு தேசத்தாரில் பெயர்ந்து நடப்பட்டிருந்தால், அந்த தேசத்தார், அதன் சொந்த சமயத்தின் தர்ம நியமங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் தக்கபடி, ஆண்டவரால் வழி காட்டப் படுகிறார்கள்; ஆண்டவர் ஒவ்வொரு சமயத்திலும், கடவுள் ஆராதிக்கப்படவேண்டு மென்பதும், அவருடைய நாமம் நிந்திக்கப் படக்கூடாதென்பதும், திருவிழாக்கள் நடத்தப்படவேண்டு மென்பதும், பெற்றோர்கள் கௌரவப்படுத்தப்படவேண்டு மென்பதும், கொலையும், விபசாரமும், திருடும் செய்யப்படாதென்பதும், பொய் சாட்சியம் சொல்லப்படாதென்பதும், இவைபோன்ற பத்து கற்பனைகளிலிருப்பவைகளை இருக்கும்படியாக முன்னமே ஏற்பாடு செய்துவைத்திருக்கிறார். இந்த தர்ம நியமங்களை தெய்வீகமாக்கி, சமயத்திலிருந்து அவைகளின்படி வாழ்கிற தேசத்தார், மேலே சற்று முன் கூறியபடி (பி. 253) இரட்சிக்கப்படுகிறார்கள்: மேலும், கிருஸ்து சமயாசாரதேசங்களுக்கு தூரத்திலுள்ள அதிக தேசத்தார்கள் அந்த சட்டங்களை தேசத்துக்குறிய தென்றல்லாமல் தெய்வீகமானதாக மதித்து அவைகளை பரிசுத்தமானதாக நம்புகிறார்கள். இந்த தர்ம நியமங்களை அனுசரித்து வாழ்வதினால் மனிதனானவன் இரட்சிக்கப்படுகிறானென்பது **தசாக்ஞையின் கற்பனைகளிலிருந்து ஏற்பட்ட புதிய எருசலேம் நகரத்துகோள்கை** எனும் (3)நூலில் ஆரம்பத்திலிருந்து முடிவுவரையில் பார்க்கலாம், சுவர்க்கத்து இரகசியங்களில், ஆண்டவர்முன்பாக, தேவர்கள் சுவர்க்கம், தன்னுடைய ஆன்மாவும் உயிரும் ஆண்டவராயிருக்கிற **ஒரு மனிதனைப்**போல் இருக்கிறதென்பது கூட ஒன்று; இந்த **தெய்வமனிதன்,** புறம்பான அங்கங்கள் அவயங்கள் விஷயத்தில் மட்டுமல்லாமல், அநேக கணக்கற்ற உள்ளான அங்கங்கள் அவயவங்கள் விஷயத்திலும்கூடவும், அதனுடன், சருமங்கள் ஜவ்வுகள் குருத்தெலும்புகள், எலும்புகள் விஷயங்களிலும் கூடவும் ஒவ்வொரு உருவத்திலும்

மனிதனுயிருக்கிறுன்; ஆனுல் அந்த மனிதனில் இவைகளெல்லாம் ஸ்தூலமாயல்லாமல், சூக்குமமா யிருக்கின்றன. ஒரு சமயம் மட்டும் தவிர, சுவிசேஷமானது எட்டக்கூடாமல் போய்விட்ட ஜனங்கள் அந்த தெய்வ மனிதனில் அதாவது சுவர்க்கத்தில் சருமங்களென்றும் ஜவ்வுகளென்றும், குருத்தெலும்புகளென்றும், எலும்புகளென்றும் சொல்லப்பட்ட பாகங்களை ஏற்படுத்துவதினுல், ஒரு இடங்கூட உடைத்தாயிருக்க சக்தியுள்ளவர்களா யிருக்க வேண்டுமென்றும், அவர்கள் மற்றவர்களைப் போல் சுவர்க்கத்து ஆனந்தத்திலிருக்க வேண்டுமென்றும் கூட ஆண்டவரால் முன்னிட்டேஏற்படுத்தப்பட்டிருக்கிறது; ஏனென்ருல், மிகவும்உயர்ந்த சுவர்க்கத்து தேவர்களுக்கு இருக்கிற ஆனந்தத்திலாவது இறுதியான சுவர்க்கத்து தேவர்களுக்கிருக்கிற ஆனந்தத்திலாவது எதிலிருக்கிறுர்களென்பது பிரதானமல்ல; ஏனென்ருல் சுவர்க்கத்துக்கு வருகிற ஒவ்வொருவனும் அவன் இருதயத்தின் மிகவும் உயர்ந்த ஆனந்தத்திற்கு வருகிறுன்; அவன் மூச்சு விடப்படாது செய்யப்படுவானுன படியினுல், அதற்கும் பெரியதை அவன் தாங்க (4) மாட்டான். அந்த விஷயமானது, ஒப்பீடாய், அரசனையும் உழவனையும் போன்றதா யிருக்கிறது: ஓர் உழவன் முரடான ரோமத்தினுல்செய்த புதிய உடுப்பை போட்டுக்கொண்டு வெளியே போயும், பன்றி இறைச்சிகோமாமிசம், பீர் சாராயம், திராட்சரச சாராயமும் வைக்கப்பட்ட ஒரு மேஜையின் பேரில் உட்காரும் போதும்,மிகவும் உயர்ந்த ஆனந்த நிலைமையிலிருக்கலாம். ஓர் அரசனைப் போல் ராஜசம்மந்தமான துணியிலும், பட்டிலும், பொன்னிலும், வெள்ளியிலும் உடுத்திக்கொள்ள செய்யப்பட்டு, அவன் மூலமாக மேன்மையான திராட்சரச சாராயத்துடன் பலவித விலையுயர்ந்த போஜனபதார்த்தங்களும், ருசியுள்ள வஸ்துக்களும் வைக்கப்பட்ட ஒரு மேஜை வைக்கப்பட்டால், அவன் பாதை படுவான். இதிலிருந்து, முன்சொன்னவனைப்போல் பின்சொன்னவனுக்கும், அவனவன் அந்தஸ்துக்குத் தக்கபடியும்,ஆதலால்கூட, கிருஸ்துவ உலகத்திற்கு வெளியே யிருப்பவர்களுக்கும் கூட சமயத்துக்கு விரோதமா யிருப்பதினுல், தீமைகளை கடவுளுக்கு விரோதமான பாவங்களாக அவர்கள் தள்ளும்பட்சத்தில் சுவர்க்கத்து ஆனந்தம்

இருக்கிறதென்று வெளிப்படையாயிருக்கிறது. முழுமையும் கடவு
(5) ளைப்பற்றி தெரியாத சிலர் இருக்கிறார்கள்; இவர்கள் சன்மார்க்க வாழ்க்கை நடத்தி யிருக்கும்பட்சத்தில் இறந்தபிறகு தேவர்களால் கற்பிக்கப்பட்டு, பரமார்த்தமான சிலதை தங்கள் சன்மார்க்க வாழ்வில் பெற்றுக்கொள்வார்களென்பது **பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கையில்** பார்க்கலாம் (பி.116). சூரியனையும் சந்திரனையும், கடவுள் அங்கே யிருப்பதாக நம்பி ஆராதிக்கிறவர்கள் விஷயத்திலும் அதேமாதிரி தான்; அவர்களுக்கு வேறுவிதமாய் ஒன்றும் தெரியாது, ஆகையினால் இது பாவத்தைப்போல் அவர்கள் பேரில் சாட்டப்படுகிறதில்லை; ஏனென்றால், ஆண்டவர் சொல்லுகிறதாவது: "**நீங்கள் குருடராயிருந்தால்,** அதாவது உங்களுக்கு தெரியாதிருந்தால் **உங்களுக்கு பாவமிராது**" (யோவா-IX. 41). ஆனால் கிருஸ்துவ உலகத்திலும் கூட விக்கிரகங்களையும், செதுக்கிய பிரதிமைகளையும் ஆராதிக்கிற அநேகர் இருக்கிறார்கள். நிஜமாகவே, இது விக்கிரக ஆராதனைக்குச் சேர்ந்ததா யிருக்கிறது, ஆனால் எல்லாருடைய விஷயத்திலும் அப்படியல்ல; ஏனென்றால், செதுக்கிய பிரதிமைகள் கடவுளைக் குறித்த சிந்தனையை எழுப்ப வழிவகையாக உபயோகப்படுகிற சிலர் இருக்கிறார்கள். ஏனென்றால், சுவர்க்கத்திலிருந்து வரும் உட்பெருக்கிலிருந்து தான், கடவுளை ஒத்துக் கொள்ளுகிறவன், அவரைக்காண விரும்பவேண்டி யிருக்கிறது; இவர்கள் உள்ளுக்குள்ளாய் பரமார்த்தமா யிருப்பவர்களைப் போல், இந்திரிய சம்பந்தமான பொருள்களுக்கு மேலே மனதை உயர்த்த முடியாதபடியினால், அந்த ஆசையை செதுக்கியபொருள் அல்லது பிரதிமையிலிருந்து அவர்கள் எழுப்புகிறார்கள். இதைச்செய்து, செதுக்கிய பிரதிமையையே கடவுளைப்போல பூஜிக்காதவர்கள், சமயத்திலிருந்து கூட தசாக்ஞை தர்ம நியமங்களை அனுசரித்து வாழ்ந்
(6) தால் இரட்சிக்கப்படுகிறார்கள். இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து ஆண்டவர் எல்லாரும் இரட்சிப்பு அடைய இச்சிக்கிறபடியினால், ஒவ்வொருவனும் நன்றாய் வாழ்ந்தால், சுவர்க்கத்தில் ஏதோ ஒரு இடம் அடையக்கூட அவர் முன்னறிந்து ஏற்பாடு செய்து வைத்திருக்கிறாரென்று வெளிப்படையா யிருக்கிறது.

ஆண்டவர் முன்பாக சுவர்க்கம் ஒருமனிதனைப்போ லிருக்கிறதென்பதும், ஆகையினால், சுவர்க்கமானது பொதுவாகவும் சிறப்பாகவும், மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களுக்கும் அன்னுவயப்படுகிற தென்பதும், அதனுடன்கூட சருமங்களுக்கும் ஜவ்வுகளுக்கும், குருத்தெலும்புகளுக்கும் எலும்புகளுக்கும், சம்பந்தப் அடைந்திருக்கிறவர்களும் இருக்கிறார்களென்பதும், 1758-வருஷத்தில் **லண்டன்** நகரத்தில் பிரசுரம் செய்யப்பட்ட **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலிலும் (பி. 59-102), **தெய்வலோக இரகசியம்** எனும் நூலிலும் (பி. 5552-5569), மேலேயும் கூட (பி. 201-204) பார்க்கலாம்.

255. II. **சுத்தமாய் ஸ்தூலமானமனிதன், மகமத்திய சமய பத்ததி அவ்வளவு அநேக சக்கிரவர்த்தித்துவங்களிலும் இராஜ்யங்களிலும் ஏற்றுக்கொள்ளப்படுவதைப் பார்க்கும்போது தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் ஸ்திரப்படுகிறான்.** இந்த சமய பத்ததி கிருஸ்துமதத்தைவிட அதிக இராஜ்யங்களில் ஏற்றுக்கொள்ளப்படுகிறதென்கிற உண்மை, தெய்வபரிபாலனத்தைக் குறித்து நினைத்தும், அதேகாலத்தில் கிருஸ்துவர்களாக பிறந்தவர்கள் தவிர அதனால் வேதம் இருக்கப்பட்ட இடமும், அதனால் ஆண்டவர் அறிந்துகொள்ளப்பட்ட இடமும் தவிர, வேறு யாரும் இரட்சிக்கப்படமாட்டார்களென்று நம்புகிறவர்களுக்கு இடறு கட்டையாயிருக்கலாம். ஆனால் மகமத்திய சமய பத்ததி எல்லா பொருள்களும் தெய்வபரிபாலனத்துக்கு சேர்ந்ததென்றும் நம்புகிறவர்களுக்கு ஓர் இடறு கட்டையாயில்லை; இவர்கள் இந்த சமயம் எதிலிருந்து அப்படியிருக்கிறதென்று, விசாரித்து, கண்டும்கூட பிடிக்கிறார்கள். மகமத்திய சமயம் ஆண்டவரை **கடவுளின் குமாரன்** என்றும், மனிதர்களில் எல்லாரிலும் மிகுந்த ஞானமுள்ளவரென்றும், மனிதர்களுக்கு கற்பிக்க உலகத்திற்கு வந்த ஒரு மிக பெரிய தீர்க்கதரிசி என்றும் சொல்லுவதில் அது அப்படி இருக்கிறது. மகமத்தியர்களில் மிகவும் பெரிய பாகம் **அவரை, மகமத்** என்பவரை விட (2) அதிக பெரியவராக செய்கிறார்கள். அந்தசமயபத்ததி ஆண்டவரின் தெய்வபரிபாலனத்திலிருந்து அநேக தேசத்தாரின் விக்கி

ரக ஆராதனைகளை அழிக்க. உயர்த்தப்பட்டதென்று முழுமையும் தெரிந்திருக்கும்பொருட்டு, ஓர் ஒழுங்கில் அது காண்பிக்கப்பட வேண்டும். பிறகு, முதலில் விக்கிரக ஆராதனையின் உற்பத்தி சொல்லப்படவேண்டும். அந்த சமயபத்ததி ஏற்படுவதற்கு முன், விக்கிரகங்களை ஆராதனை செய்தல் உலகம் முழுவதும் சாதாரணமாயிருந்தது. ஆண்டவர் வருவதற்கு முன் திருச்சபைகள் எல்லாம் அறிகுறியான சபைகளாயிருந்தன என்பது காரணமாயிருந்தது. இஸ்ரவேல் சபையும் அவ்விதமானதாக கூட யிருந்தது; அதில் கூடாரமும், ஏஅரான் என்பவருடைய ஆடைகளும், பலிகளும், எருசலேம் நகரத்திலிருக்கும் கோவிலுக்கு சேர்ந்த எல்லா பொருள்களும், நியாயசட்டங்களும் கூட அறிகுறிகளாயிருந்தன. பூர்வீகர்களில், எகிப்துதேசத்தில் முக்கியமாய் அபிவிருத்திசெய்யப்பட்ட ஞானிகளின் சாஸ்திரமாகிய, அறிகுறி சாஸ்திரமாகவும் கூட யிருக்கிற அன்னுவய சாஸ்திரம் இருந்தது; அதிலிருந்து தான் அவர்களுடைய மறைப்பொருளான எழுத்துகளிருந்தன. அந்த சாஸ்திரத்திலிருந்து, எல்லாவிதபிராணிகளுடையவும், அதனுடன் எல்லாவிதமரங்களுடையவும், மலைகள், குன்றுகள், நதிகள், ஊற்றுகள், அதனுடன் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் இவைகளுடையவும் அருத்தமும் அவர்களுக்குத் தெரியும்; அவர்களுடைய எல்லா ஆராதனையும் அன்னுவயங்களால் முழுமையும் அமைந்த அறிகுறியாயிருந்தபடியினால், அவர்கள் மலைகள் பேரிலும், குன்றுகள்பேரிலும், அதனுடன் தோப்புகளிலும், தோட்டங்களிலும் ஆராதனை செய்தார்கள்; ஆகையினால் அவர்கள் ஊற்றுகளை பரிசுத்தம் செய்து, கடவுளை ஆராதனை செய்யும்போது, எழும் சூரியன் பக்கம் முகத்தை திருப்பினார்கள்; மேலும், செதுக்கிய பிரதிமைகளையும், குதிரைகளையும், எருதுகளையும், கன்றுகுட்டிகளையும், ஆட்டுக்குட்டிகளையும், பட்சிகளையும், மீன்களையும், சர்ப்பங்களையும்கூட அவர்கள் செய்தார்கள்; வீட்டிலும் வேறு இடங்களிலும், இவைகளை அவர்கள், அவைகள் அன்னுவயப்பட்ட அல்லது அறிகுறியான திருச்சபையின் பரமார்த்தப்பொருள்களை அனுசரித்து, ஓர் ஒழுங்கில் வைத்தார்கள். அவர்கள்கூட தங்களுடைய கோயில்களில் அவ்விதமான

பொருள்களை, அவைகள் கருதிய பரிசுத்தமான விஷயங்களை ஞாப
(3) கத்துக்கு கொண்டுவர, வைத்தார்கள். கொஞ்சகாலம் பொரு
த்து, அன்னுவயசாஸ்திரம் அழிக்கப்பட்டபிறகு, அவர்களுடைய
சந்ததியார், தங்களுடைய முன்னோர்கள், அவைகளில் எந்த பரி
சுத்தத்தையும் பார்க்காமல், ஆனால் அன்னுவயங்களை அநுசரித்து
அவைகள் பரிசுத்தப் பொருள்களை குறிகாட்டி, அதனால் அவை
கள் கருதப்பட்டனவென்று மாத்திரம் அறிந்துகொண்டதாக
தெரிந்துகொள்ளாமல் செதுக்கிய பிரதிமைகளையே, அவைகளே
பரிசுத்தமானவைகளென்று ஆராதனை செய்தார்கள். அதிலிருந்து
தான் முழுஉலகத்தையும், ஆசியாவையும், அதைச் சுற்றியிருக்
கும் தீவுகளையும் ஆபிரிக்காவையும், ஐரோப்பாவையும் நிறப்பி
யிருந்த விக்கிரக ஆராதனைகள் எழுந்தன. ஆண்டவரின் தெய்வ
பரிபாலனத்திலிருந்து, இந்த விக்கிரகாராதனைகளெல்லாம் நிர்
மூலப்படுத்தப்பட, கிழக்கு தேசங்களின் ஜனங்களுடைய சிறந்த
விவேகத்துக்கு இடங்கொடுத்ததும், இரண்டு ஏற்பாடுகளின்
வேதத்திலிருந்து சிலது இருக்கவேண்டியதும், ஆண்டவர் உலகத்
திற்கு வந்தாரென்றும், அவர் எல்லாரையும் விட ஞானியாகிய
ஓர் பெரிய தீர்க்கதரிசியென்றும், கடவுளின் குமாரனென்றும், கற்
பிக்கவேண்டியதுமான ஒரு புதிய சமயம் அநுகூலமாய் ஏற்படுத்
தப்பட வேண்டுமென்று சம்பவிக்க செய்யப்பட்டது. இது மக
மத் என்பவர் மூலமாய் செய்யப்பட்டது; அவரிடமிருந்து அந்த
(4) சமயமானது மகமத்திய சமயமென்று சொல்லப்பட்டது.
ஆண்டவரின் தெய்வபரிபாலனத்தி லிருந்து, இந்த சமயமானது,
அநேக தேசத்தாரின் விக்கிரகாராதனைகளை அழித்து, அவர்கள்
சூக்கும உலகத்துக்கு வருவதற்கு முன் ஆண்டவரைப்பற்றி
கொஞ்சம் அறிவைக்கொடுக்கும் நோக்கத்துடன் உண்டாக்கப்
பட்டு, முன்னமே சொல்லியபடி, கிழக்குதேசங்களின் ஜனங்களின்
சிறந்த விவேகத்துக்கு தக்கபடி செய்யப்பட்டது; இந்த சமய
மானது, அவர்கள் எல்லாருடைய வாழ்க்கைக்கும் சிந்தனையின்
அபிப்பிராயங்களுக்கும் இடங்கொடுத்து, பொருந்தப்பண்ணின
தாக இல்லாதிருந்தால், அவ்வளவு அநேக இராஜ்யங்களில் ஏற்
றுக் கொள்ளப்பட்டு விக்கிரகாராதனைகளை அழிக்கசக்தியுள்ளதா

யிருந்திருக்கமாட்டாது. ஆண்டவரை சுவர்க்கத்துக்கும் பூமிக்கும் கடவுளாக அது ஏன் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதற்கு காரணமானது, கிழக்குதேசத்தார்கள் கடவுளை பிரபஞ்சத்தின் சிருட்டிகர்த்தாவாக ஒத்துக்கொண்டார்களென்பதும், தங்கள் சிந்தனையில் அவருடைய தெய்வத்தன்மையை அவருடைய மானிடத்தன்மையிலிருந்து பிரித்து, தெய்வீகத் தன்மையை சுவர்க்கத்திலிருக்கும் பிதாவின் சமீபத்தில்வைத்து, அவரிட மானிடத்தன்மையை வைக்கிற இடம் தெரியாத, கிருஸ்துவர்கள் கூட இதைக் கிரகிக்காதது போல, அவர் உலகத்துக்கு வந்து மானிடத் தன்மையை எடுத்துக் கொண்டாரென்று கிரகிக்க அவர்கள் சக்தியுள்ளவர்களா (5) யில்லை என்பதுமாயிருக்கிறது. இந்த ஆலோசனைகளால் மகமத்திய சமயமானது கூட ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்திலிருந்து எழுந்ததாகவும், ஆண்டவரை கடவுளின் குமாரனாக ஒத்துக்கொண்டு, தீமைகளைப் பாவங்களாகத் தள்ளுவதினால், தங்களுக்குக் கூடயிருக்கிற, தசாக்ஞையின் தர்ம நியமங்களுக்கு தக்கபடி அதேகாலத்தில் வாழ்கிற, அந்த சமயத்தைச்சேர்ந்த எல்லாரும் மகமத்திய சுவர்க்கம் என்று சொல்லப்பட்ட ஒரு சுவர்க்கத்துக்கு வருகிறதாகவும் அறிந்துகொள்ளலாம். இந்த சுவர்க்கம்கூட மிகவும் உயர்ந்ததென்றும், மத்தியிலுள்ளதென்றும், மிகவும் தாழ்ந்ததென்றும் மூன்று சுவர்க்கங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆண்டவரை பிதாவுடன் ஒன்றாகவும், இவ்விதமாக ஒரே ஒரு கடவுளாகவும் ஒத்துக்கொள்ளுகிறவர்கள், மிகவும் உயர்ந்த சுவர்க்கத்திலிருக்கிறார்கள்; இரண்டாவது சுவர்க்கத்தில், தங்களுடைய அநேக பெண்சாதிகளை விட்டுவிட்டு ஒரு பெண்சாதியுடன் வாழ்கிறவர்களிருக்கிறார்கள்; கடைசி சுவர்க்கத்தில் உபதேசம்பெற்றுக்கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள்; மகமத்தியர்களையும், மகமதையும் குறித்து சொல்லப்பட்ட கடைசி தீர்ப்பை குறித்தும் சூக்கும உலகத்தைக் குறித்தும் தொடர்ச்சி எனும் நூலில் (68-72), இந்த சமயத்தைப்பற்றி அதிகம் பார்க்கலாம்.

256. III. சுத்தமாய் ஸ்தூலமான மனிதன் கிருஸ்துமதமானது ஐரோப்பா என்று சொல்லப்பட்ட குடியிருக்கத்தக்க பூகோளத்தின்

அதிக சிறிய பாகத்தில் மாத்திரம் இருப்பதையும், அது அங்கே பிரிக்கப்பட்டிருப்பதையும் பார்க்கும்போது தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய்த் தானே ஸ்திரப்படுகிறுன். சற்று முன் மேலே காண்பித்தபடி, கலப்பாயிருக்கிற மகமத்தியசமயத்தைப்போல கிழக்கு தேசங்களின் சிறந்த விவேகத்துக்கு கிருஸ்துமதமானது பொருந்தப்பண்ணப்படாதபடியினுல், ஐரோப்பா என்று சொல்லப்பட்ட குடியிருக்கத்தக்க பூகோளத்தின் மிக சிறிய பாகத்தில் மாத்திரமிருக்கிறது; பொருந்தப்பண்ணுதசமயம் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை. உதாரணமாக, ஒரு பெண்சாதியைவிட அதிகமாய் விவாகம் செய்துக்கொள்ளுதல் சட்டத்துக்கு விரோதமானதென்று கட்டளையிடுகிற சமயமானது ஏற்றுக்கொள்ளப்படாமல், அநேக சந்ததிகளாக் பல மனைவிகளைக்கட்டிக்கொள்ளுபவர்களாக இருந்தவர்களால் தள்ளப்படுகிறது; கிருஸ்துமதத்து சில இதர கட்டளைகள் விஷ (2) யத்திலும் அம்மாதிரியே. அன்றியும், வேதத்தை வைத்திருக்கும் ஜனங்களிருக்கும் பட்சத்தில் அந்தசமயத்தை உலகத்தில் மிக கொஞ்சம் அல்லது மிகப்பெரிய பாகம் ஏற்றுக்கொண்டது என்பதைப்பற்றி அக்கரையில்லை, ஏனென்றுல் பரிசுத்தவேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கை எனும் நூலில் காண்பிக்கப்பட்டபடி (பி, 104-113), இதிலிருந்து, திருச்சபைக்கு வெளியேயிருக்கிறவர்களுக்கும் வேதமில்லாதவர்களுக்கும் அப்படியிருந்தும் வெளிச்சமிருக்கிறது; அதிசய மென்ன வென்றுல், வேதமானது பக்தியாய் வாசிக்கப்பட்டு, வேதத்திலிருந்து ஆண்டவர் ஆராதனை செய்யப்படுகிற இடத்தில், சுவர்க்கத்துடன் ஆண்டவருமங்கேயிருக்கிறுர். காரணமானது, ஆண்டவர் வேதமென்பதாயும், சுவர்க்கத்தை வேதம் உண்டாக்குகிற தெய்வ உண்மை என்பதாயுமிருப்பதே; ஆகையினுல் ஆண்டவர் சொல்லுகிறதாவது: "இரண்டு பேராவது மூன்றுபேராவது என் நாமத்தினுலே எங்கே கூடியிருக்கிருர்களோ, அங்கே அவர் நடுவிலே நான் இருக்கிறேன்" (மத்தே. XVIII. 20). குடியிருக்கத்தகுந்த உலகத்தின் அநேக பாகங்களிலிருக்கும் ஐரோப்பியர்களுடைய வியாபாரம் பூமிமுழுமையும் வியாபித்திருப்பதினுலும், எவ்விடத்திலும் வேதமானது அவர்களால் வாசிக்கப்படுவதினுலும், அல்லது வேதத்திலிருந்து கற்

பிக்கப்படுகிறபடியினாலும், அவர்களால் வேதம் விஷயத்தில் இது செய்யப்படலாம். இது புதிதாய் கண்டு பிடிக்கப்பட்டதுபோல் தோன்றுகிறது, ஆனால், அப்படியிருந்தும் அது உண்மையானது. (3) கிருஸ்துவ மதமானது வேதத்திலிருந்து வந்தபடியினாலும், அந்த வேதமானது முழுமையும் சுத்தமான அன்னுவயங்களால் எழுதப்பட்டிருப்பதினாலும், அப்படியிருந்தும் அன்னுவயங்கள் உத்தமமான உண்மைகள் அதற்குள் அடக்கம் செய்யப்பட்டு மறைந்து கிடக்கிற உண்மையின் தோற்றங்களாக பெரும்பாகங்கள் இருக்கிறபடியினாலும், எல்லா இடங்களிலும் வேதம் பரிசுத்தமானதென்றும், தெய்வத்தன்மை ஆண்டவருக்குச் சேர்ந்ததென்றும், இந்த இரண்டும் திருச்சபையின் பிரதானாம்சங்கள் என்றும் ஒத்துக்கொள்ளப்படுகிறபடியினால், வேதத்தையே குறித்து அல்லாமலும் ஆண்டவரின் தெய்வத்தன்மையையே குறித்தல்லாமலும், முக்கியமாய் வேதத்தை அறிந்துகொள்ளும் விஷயத்தில், திருச்சபையில் விவகாரங்களும், வாக்குவாதங்களும், சண்டைகளும் இருக்கவேண்டிய விதமாயிருக்கிற வேதத்தின் சொற்பொருளிலிருந்து திருச்சபையின் கொள்கை ஏற்படுத்தப் படவேண்டுமாகையினாலும், அது பலவாறாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையினால் கூட, சோசினியர்கள் என்று சொல்லப் பட்டவர்களாயிருக்கிற ஆண்டவரின் தெய்வத்தன்மையை மறுக்கிறவர்கள் திருச்சபையினின்று தள்ளப்பட்டிருக்கிறார்கள். வேதத்தின் பரிசுத்தத்தை மறுக்கிறவர்கள் கிருஸ்துவர்களாக நினைக்கப் (4)படுகிறதில்லை. வேதமானது உள்ளாய்தெய்வீக உண்மையே என்றும், அந்தரங்கமாய் ஆண்டவரென்றும், அதிலிருந்து தீர்மானம் செய்யக்கூடிய வேதத்தைக்குறித்து, இதனுடன் ஞாபகம் வைத்துக்கொள்ளத்தக்க சிலவற்றை நான் சேர்க்கிறேன். எந்த ஆவியாவது, வேதத்தை திறந்து, அதனால் தன்னுடைய முகத்தையாவது, துணியையாவது துடைத்தால், அப்பொழுது, அதன் முகம் அல்லது துணி துடைப்பதினாலே மட்டும், சந்திரனைப்போலவும், அல்லது நட்சத்திரத்தைப்போலவும் பிரகாசமாய் பிரகாசிக்கிறது. இதுவும் அது சந்திக்கிற எல்லாருடைய பார்வையிலும் நடக்கிறது. இது உலகத்தில் வேதத்தைவிட அதிக பரிசுத்தமானது

ஒன்றுமில்லை யென்பதற்கு சாட்சியமாயிருக்கிறது. பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கை எனும் நூலில் (பி.5-26), வேதமானது சுத்த அன்னுவயங்களால் முழுமையும் எழுதப்பட்டிருக்கிற தென்பதுபார்க்கப்படலாம். திருச்சபையின் கொள்கை,வேதத்தின் சொற்பொருளிலிருந்து ஏற்படுத்தப்பட்டு, அதனுல் ஸ்திரப்படுத்தப்படவேண்டு மென்பது அதே நூலில் (பி.50-61)பார்க்கப்படலாம். வேதப்புரட்டுகள், வேதத்தின் சொற்பொருளிலிருந்து எடுத்துக்கொள்ளப்படலாம், ஆனுல் அவைகளை ஸ்திரப்படுத்துதல் கெடுதியானதென்பது (பி. 91-97) ல் பார்க்கப்படலாம். திருச்சபையானது வேதத்திலிருந்து உண்டானதென்பதும், வேதத்தை அது அறிந்து கொள்ளுவதற்கு தக்கபடி இருக்கிறதென்பதும் (பி. 76-79) ல் பார்க்கப்படலாம்.

257. IV. சுத்தமாய் ஸ்தூலமாயிருக்கும் மனிதன் கிருஸ்துமதம் ஏற்றுக்கோள்ளப்பட்ட இராஜ்யங்களில் அநேகத்தில், தங்களுக்கே தெய்வசக்தியிருப்பதாக பாராட்டி, கடவுளர்களைப்போல ஆராதிக்கப்பட விரும்புகிற சிலர் இருக்கிருர்களென்கிற உண்மையிலிருந்தும், அவர்கள் இறந்தவர்களை பிரார்த்திக்கிருர்களென்பதிலிருந்தும் தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிருன். தாங்கள், நிஜமாகவே, தெய்வ சக்தியுள்ளவர்களாக இறுமாப்புக் கொள்ளவில்லை யென்றும், கடவுளர்களைப்போல ஆராதிக்கப்பட ஆசை கொள்ளவில்லை என்றும், அவர்கள் சொல்லுகிருர்கள்; அப்படியிருந்தும், அவர்கள் சுவர்க்கத்தைத்திறக்கவும் மூடவும் கூடுமென்றும், பாவங்களை மன்னிக்கவும் நிருத்தவும் கூடுமென்றும், ஆகையினுல், மனிதர்களை இரட்சிக்கவும் தண்டிக்கவும் கூடுமென்றும் சொல்லுகிருர்கள்;இது தெய்வத்தின் சுதந்தரமாயிருக்கிறது; ஏனென்ருல், தெய்வபரிபாலனமானது சீர்படுத்தலையும், இதிலிருந்து இரட்சிப்பையும் தவிர வேறு எதையும் நோக்கமாக வைத்திருக்கவில்லை; இது ஒவ்வொருவனேடும் அதன் தொடர்ச்சியான கிருத்தியமாயிருக்கிறது; ஆண்டவரின் தெய்வத்தன்மையை ஒத்துக்கொள்வதினுலும், மனிதன் அவருடைய தரும நியமங்களை அனுசரித்து வாழ்ந்தால் அவர் அதைச்செய்கிருரென்கிற நம்பிக்

கையினாலும் தவிர, இரட்சிப்பு சித்திக்கமுடியாது. வெளிப்படுத்திய (2)சுவிசேஷத்தில் விரித்து வைத்த பாபிலோன் என்பது இதுதானென்றும், தீர்க்க தரிசிகளில் எவ்விடத்திலும் பேசிய பாபிலோன் என்பது இதுதானென்றும் யார் அறிந்துகொள்ள முடியாது? ஏசாயா (அத்தியாயம் XIV.) வில் பேசப்பட்ட லூசிபர் என்பதும் கூட இது தான் என்பது, இந்த வார்த்தைகள் வரப்பட்ட அந்த அத்தியாயத்தின் வாக்கியங்களிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது: "பாபிலோன் ராஜாவின்மேல், இந்த பழமொழியைச் சொல்லு(வாக்கியம் 4);பாபிலோனுடைய பேரையும் அதில் மீந்திருக்கிறதையும் வெட்டிப்போடுவேன்(வாக்கியம் 22);அதிலிருந்து அங்கே பாபிலோன் என்பது லூசிபர்என்று ஏற்படுகிறது"; அதைப் பற்றி சொல்லியதாவது: "அதிகாலையில் மகனாகிய விடிவெள்ளியே, நீ வானத்திலிருந்து விழுந்தாயே! நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்; வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன்," என்றும், "நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன், உன்னதமானவருக்கு ஒப்பாவேன்" என்றும் "நீ உன் இருதயத்தில் சொன்னாயே" (வாக்கியங்கள் 12-14). அவர்கள் இறந்துபோனவர்களை வேண்டிக்கொண்டு, சகாயம் செய்வார்களென்று பிரார்த்திக்கிறார்களென்பது தெரிந்திருக்கிறது. அவர்கள் அவர்களுக்கு பிரார்த்தனை செய்கிறார்களென்று சொல்லப்பட்டது; ஏனென்றால், அவர்களுடைய பிரார்த்தனையானது இறந்தவர்கள் பிரார்த்திக்கப்படவேண்டுமென்று பகிரங்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிற டிரேன்ட் நகரத்தில் கூடிய சபையின் தீர்மானத்தை ஸ்திரப்படுத்திய ரோமன்காதொலிக் மதாசாரியரின் ஓர் ஆக்கினையினால் ஏற்படுத்தப்பட்டது. என்றாலும், எந்த இறந்துபோன மனிதனுமல்லாமல், கடவுள் மாத்திரம் வேண்(3)டிக் கொள்ளப்படவேண்டுமென்று யாருக்குத்தெரியாது? ஆனால் இப்பொழுது, ஆண்டவர் இப்பேர்ப்பட்ட விஷயங்களுக்கு ஏன் இடங்கொடுத்தாரென்று சொல்லப்படவேண்டும்? இரட்சிப்பாயிருக்கிற ஒரு நோக்கத்தின் பொருட்டு அவைகளுக்கு அவர் இடங்கொடுத்தாரென்பது மறுக்கமுடியாது. ஏனென்றால், ஆண்

டவரன்றி, இரட்சிப்பு இல்லையென்று தெரிந்திருக்கிறது; இந்த காரணத்துக்காக, வேதத்திலிருந்து ஆண்டவர் போதிக்கப்பட வேண்டுமென்றும், கிருஸ்துவ சபை அதனால் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் அவசியமாயிருக்கிறது. ஆனால், இது, வைராக் கியத்திலிருந்து இதை செய்பவர்களாகிய தலைவர்களால் தவிர செய்யப்படமுடியாது; அதுவுமல்லாமல் தன்னையே நேசித்தலின் உக்கிரகத்திலிருந்து வந்த வைராக்கிய காந்தியில் இருந்தவர்களைத் தவிர மற்றவர்கள் யாரும் காணப்படவுமில்லை. இந்த காந்தியானது ஆண்டவரைப்பற்றி பிரசங்கம் செய்யவும் வேதத்தைக் கற்பிக்கவும் முதலில் ஏவியது; அவர்கள் முதல் நிலைமையாக இதிலிருந்து தான், லுசிபர் காலையின் குமாரனென்று சொல்லப்பட்டது (வாக்கியம் 12). ஆனால், திருச்சபையின் பரிசுத்தப்பொருள்களின் மூலமாய் தாங்கள் அதிகாரம் உடைத்தாயிருக்கலாமென்று அவர்கள் தெரிந்து கொண்டபடியினால், ஆண்டவரைப்பற்றி போதிக்க அவர்கள் முதலில் ஏவப்பட்ட தன்னையே நேசித்தலென்பது, உள்ளிருந்து புறப்பட்டு, கடைசியில் ஒன்றையும் விடாமல், ஆண்டவரின் எல்லா தெய்வசக்திகளையும் தங்களுக்கே மாற்றிக் (4)கொள்ளும்படியாக அவ்வளவு உயரத்துக்குதானே உயர்த்தி கொண்டது. இது ஆண்டவரின் தெய்வபரிபாலனத்தினால் தடுக்கப்படமுடியாது; ஏனென்றால், அப்படி தடுக்கப்பட்டால், ஆண்டவர் கடவுள் அல்லவென்றும், வேதம் பரிசுத்தமானதல்லவென்றும் அறிவித்து, சோசினியார்களாகவும் ஆரியஸ் என்பவரைச் சேர்ந்தவர்களாகவும், தாங்களே செய்துகொண்டு, இவ்விதமாக முழுசபையையும் அழித்து விட்டிருப்பார்கள்; தலைவர்கள் நடத்தை எப்படியிருந்தபோதிலும், அது கீழ்ப்பட்ட தேசத்தாரில் இன்னுமிருக்கிறது; ஏனென்றால், ஆண்டவரை நெருங்கி தீமைகளைப் பாவங்களாகத் தள்ளுகிற இந்த சமயத்தைச்சேர்ந்த எல்லாரும் கூட இரட்சிக்கப்படுகிறார்கள்; ஆகையினால், கூட சூக்கும உலகத்தில் அவர்களிலிருந்து ஏற்பட்ட அநேக சுவர்க்கத்துக்கடுத்த கூட்டங்களிருக்கின்றன. மேலும், அவ்வித அதிகாரத்தின் பந்தத்துக்குட்படாதவர்களும், வேதத்தை பரிசுத்தமாக நினைக்கிறவர்களுமாகிய அவர்களுக்குள் ஒரு தேசத்தார் இருக்கவேண்டுமென்று முன்

னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது; இந்த கம்பீரமான (5)தேசத்தார், பிரான்சு தேசத்தார்தான். ஆனால் என்ன செய்யப் பட்டது? தன்னையே நேசித்தல் தன் அதிகாரத்தை ஆண்டவருடைய சிங்காசனம் வரையில் கூட உயர்த்தி அவரை நீக்கி, அதன் பேரில் தானே உட்கார்ந்து கொண்டபோது, லுசிபர் என்கிற அந்த ஆசையானது வேதத்தினுடையவும் திருச்சபையினுடையவும் எல்லா பொருள்களையும் அசுத்தப்படுத்துவதைவிட வேறு விதமாய் ஒன்றும் செய்யமுடியாது; அதைத்தடுக்க, ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தால் தன்னை ஆராதிப்பதிலிருந்து அவர்கள் பின்னிடவும், இறந்தவர்களை பிரார்த்திக்கவும், செதுக்கிய பிரதிமைகளை பிரார்த்திக்கவும், அவர்களுடைய எலும்புகளுக்கு முத்தமிடவும், அவர்களுடைய சமாதிகளில் வணங்கவும், வேண்டுமென்றும், வேதத்தை வாசித்தலை தடுக்கவும், பரிசுத்த ஆராதனையை சாதாரண ஜனங்களால் அறிந்துகொள்ளப்படாத ஓர்வித ஆராதனைகளில் வைக்கவும், முக்தியை பணத்திற்காக விற்கவும் வேண்டுமென்றும், தகுந்தபடி ஏற்பாடு செய்தார்; ஏனென்றால், இவைகளை அவர்கள் செய்யாதிருந்தால், வேதத்தினுடையவும் திருச்சபையினுடையவும் பரிசுத்தமான பொருள்களை அவர்கள் நிந்தித்திருப்பார்கள்; முன் பிரிவில் காண்பித்தபடி பரிசுத்தப்பொருள்களை அவைகளைத்தெரிந்தவர்கள் தவிர (6)வேறு யாரும் நிந்திக்கிறதில்லை. ஆகையால் மிகவும் பரிசுத்த போஜனத்தை அவர்கள் நிந்திக்காதபடி, ஆண்டவருடைய தெய்வ பரிபாலனத்திலிருந்து தான், அவர்கள் அதை பகுத்து, ரொட்டியை ஜனங்களுக்கு கொடுத்து, திராட்சரசத்தை தாங்களே பானம் பண்ண நேரிட்டது. ஏனென்றால்,பரிசுத்தபோஜனத்தில் திராட்சரசமானது பரிசுத்த உண்மையையும், ரொட்டி, பரிசுத்த நன்மையையும், கருதுகிறது; ஆனால், அவைகள் பாகிக்கப்பட்டபோது, திராட்சரசம் அசுத்தமான உண்மையையும், ரொட்டி, தாழ்ந்ததை கலந்து கெடுத்த நன்மையையும் கருதுகிறது; இன்னமும், பரிசுத்த போஜனத்தை சரீரமுள்ளதாகவும் ஸ்தூலமானதாகவும் செய்து, இதை சமயத்தின் முதன்மையான கொள்கையாக எடுத்துக்கொள்ளாதபடிக்கும் நேர்ந்தது. இந்த விவரங்களுக்கு தன்

மனதை திருப்பி, அவைகளை மனதின் கொஞ்சம் வெளிச்சத்தில் யோசிக்கிற எவனும் திருச்சபையின் பரிசுத்தப்பொருள்களை பாதுகாக்கவும், விடுவிக்கப்பட விரும்புகிறவர்களை தீயிலிருந்து பிடுங்குவதுபோல், எவ்வளவு அநேகராயிருந்தாலும் இரட்சிக்கப் படக்கூடிய எல்லாரையும் இரட்சிக்கவும் தெய்வபரிபாலனம் செய்யும் அற்புதங்களை பார்க்கலாம்.

258. V. **சுத்தமாய் ஸ்தூலமான மனிதன் கிருஸ்துவ சமயத்தை வெளிப்படையாய் ஒத்துக்கொள்ளுகிறவர்களில், அவர்கள் செய்ய வேண்டிய நன்மைகளில்லாமல் தாங்கள் நினைத்தும் பேசுகிற சில வார்த்தைகளில் மோட்சம் என்பதை அடைகிற சிலர் இருக்கிறார்களென்கிற உண்மையிலிருந்து தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறான்.** அப்பேர்ப்பட்டவர்கள் தான் தருமவாழ்வல்லாமல் விசுவாசம் மாத்திரம் இரட்சிப்பதாக செய்கிறவர்களும் ஆகையினால் தருமத்திலிருந்து விசுவாசத்தை பிரிக்கிறவர்களுமாயிருக்கிறார்களென்பது **விசுவாசம் என்பதைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கை** எனும் நூலில் காண்பிக்கப்பட்டிருக்கிறது; அங்கேகூட, பிலிஸ்தியர்கள் என்பதாலும் பறவைநாக மென்பதாலும், வெள்ளாடுகள் என்பதினாலும் வேதத்(2)தில் அவர்கள் கருதப்படுகிறார்களென்று காண்பிக்கப்பட்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட கொள்கைக்குகூட அனுமதி கொடுக்கப் பட்டதென்பது, ஆண்டவரின் தெய்வத்தன்மையும், வேதத்தின் பரிசுத்தமும் நிந்திக்கப்படாதபடி தெய்வபரிபாலனத்தினால் செய்யப்பட்டதாயிருக்கிறது. ஆண்டவரின் தெய்வத்தன்மையானது, **பிதாவாகிய கடவுள்** சிலுவையில் துன்பமடைந்த தன் **குமாரன்** பொருட்டு இரக்கமுள்ளவராயிருந்து நமக்கு நஷ்டம் கட்டிக் கொடுத்தார் என்கிற வார்த்தைகளில் இரட்சிப்பை வைக்கப்படும் போது, நிந்திக்கப்படுகிறதில்லை. ஏனென்றால், அவர்கள் இந்த விதமாக ஆண்டவரின் தெய்வத்தன்மையை நெருங்காமல் தெய்வத்தன்மையுள்ளதாக அவர்கள் ஒத்துக்கொள்ளாத மானிடத் தன்மையை அணுகுகிறார்கள், அதுவுமல்லாமல், வேதமும் நிந்திக் கப்படுகிறதில்லை; ஏனென்றால், அன்பும் தருமமும், செய்தலும்

செய்கைகளும் சொல்லப்பட்ட வாக்கியங்களை அவர்கள் கவனிக்கிறதில்லை. கூற்று முன் எடுத்துக்காட்டிய வார்த்தைகளில் நம்பிக்கை வைப்பதில் இவைகளெல்லாம் சேர்க்கப்பட்டு இருக்கிறதென்று அவர்கள் சொல்லுகிறார்கள்; இதை ஸ்திரப்படுத்துகிறவர்கள் சட்டம் என்பேரில் குற்றம் சாட்டவில்லை, அப்படியே, தீமையும் செய்யவில்லை; என்னிடமேயிருந்துவரும் நன்மையானது, நன்மையில்லாதபடியினால், நன்மையும்இரட்சிக்கிறதில்லை என்று தாங்களே சொல்லிக்கொள்ளுகிறார்கள்; ஆகையினால் வேதத்திலிருக்கும் எந்த உண்மையையும் தெரிந்து கொள்ளாதவர்கள் போலிருக்கிறார்கள், அந்த காரணத்தினால் அதை அவர்கள் நிந்திக்கமுடியாது. ஆனால், தன்னையே நேசித்ததிலிருந்து, தங்கள் சொந்தபுத்தியின் அகங்காரத்திலிருப்பவர்கள் தவிர, அந்த வார்த்தைகளின் விசுவாசத்தை வேறு யாரும் ஸ்திரப்படுத்துகிறதில்லை; அதுவுமல்லாமல், அவர்கள் இருதயத்தில் கிருஸ்துவர்களுமல்ல, அப்படியிருப்பதாக தோன்ற மாத்திரம் விரும்புகிறார்கள். (3) அக்காலத்தில் எல்லாம், ஆண்டவருடைய தெய்வபரிபாலனம் தருமத்திலிருந்து வேறான விசுவாசம் சமய விஷயமாக செய்தவர்களுடைய இரட்சிப்புக்காக இடைவிடாமல் வேலை செய்கிறதென்று இப்பொழுது சொல்லப்படவேண்டும். அந்த விசுவாசமானது சமயத்தைச் சேர்ந்ததாக செய்யப்பட்டபோதிலும், அந்த விசுவாசம் இரட்சிக்கிறதில்லை என்றும், ஆனால் விசுவாசமானது ஒன்றாக செயல்படுகிற தரும வாழ்வு அப்படி செய்கிறதென்றும், தெய்வபரிபாலனத்தினால் ஒவ்வொருவனும் தெரிந்து கொள்ளுகிறான். ஏனென்றால், அந்த சமயமானது ஏற்றுக்கொள்ளப்பட்ட எல்லா திருச்சபைகளிலும் ஒரு மனிதன் தன்னைத்தானே பரிசோதனை செய்துகொண்டு, தன் பாவங்களைப் பார்த்து, அவைகளை ஒத்துக்கொண்டு, மனம் திரும்பி, அவைகளை விட்டுவிட்டு, புதிய வாழ்வில் பிரவேசித்தாலொழிய முக்தி கிடையாதென்று கற்பிக்கப்படுகிறது. கர்த்தரின் போஜனத்தை அணுகுகிறவர்கள் முன்னிலையில் அதிக வைராக்கியத்துடன் இது வாசிக்கப்படுகிறது; அவர்கள் இதை செய்தாலொழிய, பரிசுத்தமானதை அசுத்தமானதுடன் கலக்கி தாங்களே சதாகால நரகத்தில் விழுகிறார்களென்

பது அதனுடன் சேர்க்கப்படுகிறது; இதைச் செய்தாலொழிய, யூதா என்பவனுக்குள் பிரவேசித்தது போல் பேயரனது அவர்களுக்குள் பிரவேசித்து, சரீரத்தையும் ஆன்மாவையும் அழிக்குமென்பது ஆங்கிலேய நாட்டில் சேர்க்கப்படுகிறது, விசுவாசம் மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருச்சபைகளில் கூட, ஒவ்வொருவனும் தீமைகளானது பாவங்களாக நீக்கப்பட வேண்டுமென்று இன்னும், கற்பிக்கப்படுகிறுனென்று, இதிலிருந்து (4)வெளிப்படையாயிருக்கிறது. இன்னமும், தசாக்ஞை ஒவ்வொரு பய்யனுடையவும் ஒவ்வொரு பெண்ணுடையவும் கைகளில் வைக்கப்பட்டு, பெற்றோர்களாலும் ஆசான்களாலும் கற்பிக்கப்படுகிறபடியினுலும், மேலும்,இராச்சியத்தின் எல்லா நகரவாசிகளும் முக்கியமாய் சாதாரண ஜனங்களும் கிருஸ்து சமயத்தைப்பற்றி அவர்களுக்கு என்ன தெரியுமென்று ஞாபகத்திலிருந்து திரும்பசொல்லப்பட்ட தசாக்ஞையிலிருந்து மாத்திரம் குருவினுல் பரீக்ஷிக்கம்பட்டு, அங்கே கட்டளை யிடப்பட்டவைகளை செய்யப்படகூட எச்சரிக்கப்படுகிறதினுலும், கிருஸ்துவனுக பிறந்த ஒவ்வொருவனும் தீமைகள் பாவங்களாக நீக்கப்பட வேண்டுமென்று கூட அறிந்துகொண்டிருக்கிறுன். அப்பேர்ப்பட்ட காலங்களில் அந்த சட்டத்தின் பந்தத்தில் அவர்கள் இல்லையென்றும், அல்லது தங்களிடமேஇருந்து எந்த நன்மையையும் செய்ய முடியாதபடியினுல், கட்டளை யிடப்பட்டவைகளை அவர்கள் செய்ய முடியாதென்றும் எந்த குருவினுலும், அவர்கள் எப்பொழுதும் சொல்லப்படுகிறதில்லை: மறுபடியும், அதேனேசியஸ் என்பவர் ஏற்படுத்திய சமய கோட்பாடு முழு கிருஸ்து உலகத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு கூட இருக்கிறது; அதன் கடைசிபாகத்தில் சொல்லியது, அதாவது, ஆண்டவர் உயிரோடிருப்பவர் பேரிலும் மரித்தோர் பேரிலும் நீதிதீர்ப்பு சொல்லவருவார் என்பதும், அக்காலத்தில், நன்மையை செய்தவர்கள் எக்காலமுமிருக்கும் வாழ்விற்குள் பிரவேசிப்பார்களென்பதும், தீமையை செய்தவர்கள் என்றுமுள்ள தீயில் விழுவார்களென்பதும் கூட ஒத்துக்கொள்ளப்படுகிறது. (5) பக்திமார்க்கம் மாத்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்ட சுவீடன் தேசத்தில், தருமத்திலிருந்து வேருனதும், நற்கிரியைகள் இல்லா

தது மான பக்தி நிலைத்திருக்கிறதில்லை என்று கூட தெளிவாய் கற்பிக்கப்படுகிறது; "அனுதாபமில்லாதவர்களின் விகாதங்கள் அல்லது இடறு கட்டைகள்" என்று சொல்லப்பட்ட அவர்களுடைய எல்லா சங்கீதபுஸ்தகங்களில் *சேர்க்கப்பட்ட ஞாபகம் வைக்கவேண்டிய விஷயங்களின் ஓர் அனுபந்தத்தில் இது காணப்படுகிறது; அங்கே இந்தவார்த்தைகளிருக்கின்றன: "பக்தியானது இரட்சிக்கும் காலத்தில், அது தருமத்தின் மூலமாய் வேலைசெய்கிறபடியினால், நற்கிரியைகளில் பாக்கியமுள்ளவர்கள், அதனால், பக்தியிலும் பாக்கியவான்களா யிருக்கிறார்களென்று காண்பிக்கிறார்கள்; ஏனென்றால், ஒரு நல்ல மரமானது பழமில்லாமலும், சூரியன் சூடும் ஒளியுமில்லாமலும், ஜலமானது ஈரமில்லாமலும் இல்லாதது போல், நியாயமென்று நிரூபிக்கிற பக்தி தனிமையாகவும், நற்கிரியைகளிலிருந்து பிரிந்தும் இருக்கிறதில்லை. பக்தியின் (6) ஒரு சமயபத்ததிமாத்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டபோதிலும், நற்கிரியைகளா யிருக்கிற தருமத்தின் நன்மைகள் எங்கும் கற்பிக்கப்படுகின்றனவென்றும், சாதாரண ஜனங்கள் அதனால் கெட்டுப்போகாதபடிக்கு, இது ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்திலிருந்து வருகிறதென்றும் தெரிந்திருக்க, இந்த சில விஷயங்கள் உதாரணமாய் சொல்லப்பட்டன. சில சமயங்களில் சூக்கும உலகத்தில் நான் பேசிய லூதர் என்பவர் பக்தியை மாத்திரம் சபிப்பதையும், அதை தான் ஸ்தாபித்தபோது ஆண்டவரின் தேவதூதனால் அப்படி செய்யாதபடி எச்சரிக்கை செய்யப்பட்டதாக சொல்லுவதையும், ஆனால் கிரியைகளை தள்ளாமல் விட்டிருந்தால், காதோலிக் சமயபத்ததியிலிருந்து பிரிவினை ஏற்பட்டிருக்காதென்றும் தனக்குள்ளே நினைத்ததாயும், ஆகையினால், அந்த எச்சரிக்கைக்கு எதிரிடையாய் அந்த பக்தியை ஸதிரப்படுத்தியதாகவும் செய்வதையும் நான் கேட்டிருக்கிறேன்.

259. VI. சுத்தமாய் ஸ்தூல மனிதன் குவேக்கர்மதமென்றும் மோரோவியன் மதமென்றும், அனபாப்டிஸ்ட் மதமென்றும், இவை

---

* இந்த அனுபந்தம் 1819வருஷத்தில் செய்த சங்கீதபுஸ்தக சோதனையில் விடப்பட்டது.

போன்ற இன்னும் அநேகம் கிருஸ்துவ உலகத்திலிருப்பதால், அவ்வளவு அநேக சமயபுரட்டுகள் இருந்திருக்கிற தேன்கிறதும், இன்னும் இருக்கிறதேன்கிறதுமான உண்மையிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிருன். ஏனென்ருல் தெய்வபரிபாலனம் மிகவும் தனித்தபொருள்களில் எங்கும் நிறைந்திருந்து எல்லாருடைய இரட்சிப்பையும் அதன் நோக்கமாகக்கொண்டிருந்தால், முழு உலகத்திலும் ஒரு உண்மையான மதம் நிலைத்திருக்கவும், அதுவும் பிரிக்கப்படாமலும், சமயபுரட்டுகளாக கிழிக்கப்படாமலும் இருக்கவும், செய்திருக்குமென்று தனக்குள்ளேயே அவன் நினைத்துக்கொள்ளக்கூடும். ஆனுல், அறிவை உபயோகப்படுத்தி, உன்னுல் கூடுமானுல் அதிக ஆழமாய் நினைத்துப்பார். ஒரு மனிதன் முதலில் சீர்படுத்தப்பட்டாலொழிய, அவன் இரட்சிக்கப்படுவானு? ஏனென்ருல், அவன் தன்னையும் உலகத்தையும் நேசித்தலில் பிறந்திருக்கிருன்; இந்த ஆசைகள் தனக்காகத்தவிர, கடவுளிடத்து அன்பைக்குறித்தும், அயலானிடத்து அன்பைக் குறித்தும், எதையும் தங்களுக்குள்ளே தாங்காதபடியினுல், அவன் எல்லாவித தீமைகளிலும்கூட பிறந்திருக்கிருன். அந்த ஆசைகளில் என்ன அன்பு அல்லது இரக்கமிருக்கிறது? எல்லாரைவிடமிகவும் உயர்ந்தவனுயிருக்கவும், மற்றவர்கள் எல்லாருடைய நன்மைகளை அடையவும் ஆசையை மனதில் கொண்டு இவ்விதமாக மற்றவர்களை தன்னுடன் ஒப்பீடாய் உபயோகமில்லாதவர்களென்றும், அற்பமானவர்களென்றும், மதிக்கும் காலத்தில் மற்றவனை மோசம் செய்தலும், அவனை சபித்தலும், இறந்து போகும்படிகூட வெறுத்தலும், அவனுடைய மனைவியுடன் விபசாரம் செய்தலும், அவன்பேரில் சலஞ்சாதித்தலில் இரக்கமில்லாதிருத்தலும், ஏதாவது ஒரு பொருளாக நினைக்கிருனு? இப்பேர்ப்பட்ட மனிதன் இரட்சிக்கப்பட அவன் முதலில் இந்த தீமைகளிலிருந்து தூரமாய் கொண்டுபோகப்பட்டு சீர்படுத்தப்பட வேண்டியதில்லையா? தெய்வபரிபாலனத்தின் சட்டங்களாயிருக்கிற அநேக சட்டங்களை அனுசரித்து தவிர, இது செய்யப்பட முடியாதென்பது, மேலே அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த சட்டங்கள் அநேகமாய் மற்றவர்களுக்குத் தெரியாதவைகளா

யிருக்கின்றன; அப்படியிருந்தும் அவைகள் பரம ஞானசத்திக்கும் அதேகாலத்தில் பரம இச்சா சத்திக்கும் சேர்ந்தவைகளா யிருக்கின்றன; ஆண்டவர் அவைகளுக்கு விரோதமாய் நடக்கமுடியாது; ஏனென்றால், அப்படிச் செய்தலானது மனிதனை இரட்சிக்க அல்லாமல், அவனை அழித்தல்பொருட்டாகும். கொண்டுவரப்பட்ட சட்டங்கள் புனர் விமரிசை செய்யப்பட்டு ஒத்துப் பார்க்கப்பட்டால், நீ அறிந்துகொள்வாய். ஆகையினால் தான் சுவர்க்கத்திலிருந்து எந்த நேரானபெருக்கும் அந்த சட்டங்களை அனுசரித்து இல்லாமல், வேதத்தின் மூலமாயும் கொள்கைகள் மூலமாயும்,பிரசங்கத்தின் மூலமாயும் நடுவானபெருக்கு இருப்பதினாலும், வேதமானது தெய்வீகமாயிருக்க சுத்தமான அன்னுவயங்களால் தவிர எழுதப்பட்டிருக்க முடியாதாகையினாலும், அபிப்பிராய வித்தியாசங்களும் வேதப்புரட்டுகளும் தவிர்க்கக்கூடாததாகவும், அவைகளுக்கு இடங்கொடுத்தலும் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு அனுசரித்தும் கூட இருக்கிறதாகவும் ஏற்படுகிறது; இன்னமும், திருச்சபையே சித்தத்தைச் சேர்ந்தவைகள் அல்லாமல், இவ்விதமாக வாழ்க்கையை சேர்ந்தவைகள், அல்லாமல் புத்தியை மாத்திரம் சேர்ந்தவைகளையும் இவ்விதமாக கொள்கைகளையும், அதன் பிரதானும்சங்களாக எடுத்துக்கொண்ட போதும் வாழ்க்கைக்கு சேர்ந்தவைகள் திருச்சபையின் பிரதானும்சங்களாக இல்லாதபோதும், அக்காலத்தில் மனிதனானவன் புத்தியின் இந்த நிலைமையில் கேவல இருட்டில் இருந்து, எல்லா விடங்களிலும் பொருள்களை முட்டி, குழிகளில்விழுகிற குருடனைப்போல் திரிகிறான். ஏனென்றால், சித்தமானது புத்தியில் பார்க்கவேண்டியது; புத்தியானது சித்தத்தில் பார்க்கக்கூடாது; அல்லது அதேவாகிறபடி, உயிரும், அதன் அன்பும், புத்தியை நினைக்கவும், பேசவும், செயல்படவும், வழி காட்டவேண்டும். அதற்கு எதிரிடையானது கூடாது; எதிரிடையானதாயிருந்தால் ஒரு தீமையிலிருந்து, பேய்த்தனமான அன்பிலிருந்துகூட புத்தியானது ஐம்புலன்கள் மூலமாய் தோன்றுகிற எதையும் பிடித்துக்கொண்டு அதைச்செய்ய சித்தத்துடன் சேரும். இந்த ஆலோசனைகளிலிருந்து அபிப்பிராயபேதங்களும் வேதப்புரட்டு

(3) களும் எங்கிருந்து வருகின்றனவென்று அறிந்துகொள்ளலாம். அப்படியிருந்தாலும் ஒவ்வொருவனும் புத்திவிஷயத்தில் எந்த சமயபேதத்திலிருந்தாலும், தீமைகளைப் பாவங்களாக நீக்கி, தனக்குள்ளே வேதப்புரட்டான பொய்களை ஸ்திரப்படுத்தாமல் விடும்பட்சத்தில், சீர்படுத்தப்பட்டு இரட்சிக்கப்படக்கூடியபடி முன்னறிந்து ஏற்பாடு செய்துவைக்கப்பட்டிருக்கிறது; ஏனென்றால், தீமைகளைப் பாவங்களாக நீக்குவதினால் சித்தமானது சீர்படுத்தப்படுகிறது, சித்தத்தின் மூலமாய் அப்பொழுது இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு முதலில் வருகிற புத்தியும் சீர்படுத்தப்படுகிறது. ஆண்டவரின் தெய்வத்தன்மையை ஒத்துக்கொள்ளுதலும், வேதத்தின் பரிசுத்தத்தை ஒத்துக்கொள்ளுதலும், தருமமென்று சொல்லப்பட்ட வாழ்க்கையாகிய, திருச்சபையின் மூன்று பிரதானும்சங்களிருக்கின்றன. தருமமாயிருக்கிற வாழ்விற்குதக்கபடி, ஒவ்வொருவனுக்கு விசுவாசமிருக்கிறது. வேதத்திலிருந்துதான், வாழ்வு எண்ணமாயிருக்கவேண்டுமென்கிற அறிவு உண்டாகிறது; ஆண்டவரிடமிருந்துதான் சீர்படுதலும் இரட்சிப்பும் வருகிறது. இந்த மூன்று மட்டும் திருச்சபையின் பிரதானும்சங்களென்று கைக்கொள்ளப்பட்டிருந்தால், புத்திசம்பந்தமான அபிப்பிராய பேதங்கள், அழகுள்ள பொருள்களில் வெளிச்சமானது நிறங்களை வேறுபடுத்துகிறதுபோலும், பலவித இரத்தினங்கள் அரசன் கிரீடத்துக்கு அழகுபடுத்துவதுபோலும், அதை வகுக்காமல் வேறுபடுத்தி மாத்திரம் இருக்கும்.

260. VII. சுத்தமாய் ஸ்தூல மனிதன், யூதேயாதேசத்து மதம் இன்னும் நீடித்திருக்கிற உண்மையிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறான். அதாவது, யூதர்கள் கிருஸ்துவர்கள் மத்தியில் வாழ்ந்தாலும், அநேக நூற்றாண்டுகளாயும் மதம் மாற்றசெய்யப்படவில்லை என்றும், வேதத்தில் கூறியிருக்கும் தீர்க்க தரிசனத்துக்கு தக்கபடி, ஆண்டவரை அறிக்கையிட்டு அவர்கள் நினைக்கிறபடி, கானான் தேசத்துக்கு மறுபடியும் வழிகாட்டயிருந்த மேஸ்சயாவாக அவரை ஒத்துக்கொள்ளுகிறதில்லை என்றும், அவரை மறுப்பதில் இடைவிடாமல் அவர்கள் பிடிவாத

மாய் நிற்கிறார்களென்றும், அப்படியிருந்து அது அவர்களுக்கு அனுகூலமாயிருக்கிற தென்றும் அவன் கவனிக்கிறான். ஆனால், இம்மாதிரி நினைத்து, ஆகையினால் தெய்வபரிபாலனத்தை ஆக்ஷேபிக்கிறவர்களுக்கு, வேதத்தில் யூதர்கள் என்பதால், திருச்சபையைச் சேர்ந்தவர்களும், ஆண்டவரை ஒத்துக்கொள்ளுகிறவர்களுமாகிய எல்லாரும் கருதப்படுகிறார்களென்றும், அவர்கள் உட்செலுத்தப்படவேண்டியதாக சொல்லப்படுகிற **கானானேன்தேசம்** என்பதால், ஆண்டவரின் திருச்சபை கருதப்படுகிற தென்றும், (2)தெரியாது; ஆனால் ஆண்டவரை மறுப்பதில் பிடிவாதமா யிருக்கிறார்கள்; ஏனென்றால், ஆண்டவரின் தெய்வத்தன்மையையும், அவருடைய திருச்சபையின் பரிசுத்தப் பொருள்களையும் அவர்கள் அங்கீகரித்து ஒத்துக்கொண்டால், அவர்கள் அவைகளை நிந்திக்கக்கூடிய தன்மையுடையவர்களா யிருக்கிறார்கள்; ஆகையினால், அவர்களைப்பற்றி ஆண்டவர் சொல்லுகிறதாவது: "அவர்கள் கண்களினால் காணாமலும், இருதயத்தினால் உணராமலும், குணப்படாமலு மிருக்கும்படிக்கும் நான் அவர்களை ஆரோக்கியமாக்காமல் இருக்கும்படிக்கும், அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்கள் இருதயத்தை கடினமாக்கினார்" (யோவா. XII. 40; மத்தே. XIII. 15; மார்க் IV. 12; லூக். VIII. 10; ஐசா, VI. 9-10). **குணப்படாமலிருக்கும் படிக்கும் நான் அவர்களை ஆரோக்கியமாக்காமலிருக்கும்படிக்கும்** என்று சொல்லப்பட்டது; ஏனென்றால், அவர்கள் குணப்படுத்தப்பட்டு ஆரோக்கியமாக்கப்பட்டிருந்தால், அவர்கள் தேவநிந்தை செய்திருப்பார்கள்; இறந்துபோகிற வரையில் ஒருவன் அவைகளில் வைக்கப்படக்கூடிய அளவு தவிர, எவனும் விசுவாசத்தின் உண்மைகளிலும் தருமத்தின் நன்மைகளிலும் உள்ளுக்குள்ளாய் ஆண்டவரால் சேர்க்கப்படக்கூடாதென்பது, (மேலே பி. 221-233 வரையில் சொல்லிய) தெய்வபரிபாலனத்தின் சட்டத்தை அது அனுசரித்திருக்கிறது; அவன் (3) சேர்க்கப்பட்டால் பரிசுத்தமானதை நிந்திப்பான். கிருஸ்துவர்களை விட அதிகமாய் பரிசுத்தமாகக் கொள்ளப்படுகிற அதன் ஆதிமூலமான பாஷையிலிருக்கும் வேதத்தின் பொருட்டு இந்த தேசத்தார் பத்திரப்படுத்தப்பட்டு, உலகத்தின் பெரும்பாகத்

திற்கு சிதரடிக்கப்பட்டார்கள்; வேதத்தின் ஒவ்வொரு விவரத்திலும் ஆண்டவருடைய தெய்வத்தன்மையிருக்கிறது; ஏனென்றால், ஆண்டவரிடமிருந்து புறப்படுவது தெய்வ நன்மையுடன் சேர்க்கப்பட்ட தெய்வ உண்மையாய் அது இருக்கிறது; இதன்மூலமாய் பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கையில் (பி, 62-69) காண்பிக்கப்பட்டபடி வேதமானது திருச்சபையுடன் ஐக்கியப்படுதலும், சுவர்க்கச் சந்நிதியுமாயிருக்கிறது; வேதமானது பக்தியாய் வாசிக்கப்பட்ட எந்த இடத்திலும் ஆண்டவருடையவும் சுவர்க்கத்தினுடையவும் சந்நிதியிருக்கிறது. இதுதான் தெய்வபரிபாலனத்தின் நோக்கம்; அதன்பொருட்டுதான், அவைகள் பத்திரப்படுத்தப்பட்டு உலகத்தின் ஓர் பெரும் பாகத்தில் சிதரடிக்கப்பட்டிருக்கின்றன. இறந்தபிறகு அவர்கள் கதி என்னவென்பது சூக்கும உலகத்தைப்பற்றியும் கடைசிதீர்ப்பை குறித்த தொடர்ச்சி எனும் நூலில் பார்க்கலாம்.

261. மேலே 238வதுபிரிவில் எடுத்துக்காட்டிய முக்கியாம்சங்கள் இப்பொழுது இவைகள் தான்; அவைகளினால் ஸ்தூல மனிதன் தெய்வ பரிபாலனத்துக்கு விரோதமாய் தானே ஸ்திரப்படுகிறான் அல்லது ஸ்திரப்படக்கூடும். ஸ்தூல மனிதனுக்கு, தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் காரணங்களாகக்கூட உபயோகப்படக்கூடியதும், மற்றவர்கள் மனதில் தோன்றி சில சந்தேகங்களை தூண்டக்கூடியதுமான மேலே 239வது பிரிவில் கூறிய மற்றவைகளும் இன்னும் பின் தொடருகின்றன.

262. I. முழுகிருஸ்துவ உலகமும், மூன்றுகடவுளர்களை ஆராதனை செய்கிறதாயிருக்கிற மூவராக, ஒரு கடவுளை ஆராதிக்கிறார்களென்பதும், இதுவரையில் அவர்களுக்கு கடவுள் என்பவர், ஒரு திரி ஏகத்துவமிருக்கிற ரூபத்திலும் சத்திலும் ஒருவரென்பதும், அந்த கடவுள் ஆண்டவரென்பதுமாகிய உண்மையிலிருந்து, தெய்வபரிபாலனத்துக்கு வீரோதமாய் ஒரு சந்தேகம் கிரகிக்கப்படலாம். தெய்வபரிபாலனத்தை வாதிப்போன், ஒவ்வொருவரும், தன்னில் தானே கடவுளாயிருக்கும்போது; மூன்றுபேர்கள் மூன்று கடவுளர் அல்லவா

என்று சொல்லக்கூடும், வேறு விதமாய் யார் நினைக்கக்கூடும்? நிஜமாகவே, வேறு விதமாய் யார் நினைக்கிறார்கள்? அதேனேசியஸ் என்பவரே நினைக்கமுடியாது; ஆகையினால், அவர் பெயரால் வரும் சமய கோட்பாட்டில், அவர் சொல்லுகிறதாவது: "கிருஸ்துவ உண்மையிலிருந்து ஒவ்வொருவரையும் கடவுளாகவும் ஆண்டவராகவும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தாலும், கிருஸ்துவ சமயத்திலிருந்து மூன்று கடவுளர் அல்லது மூன்று ஆண்டவர்கள் என்று சொல்லவும் பெயரிடவும் விடப்படாது". இது, நாம் மூன்றுகடவுளர்களையும் ஆண்டவர்களையும் ஒத்துக்கொள்ளவேண்டு மென்பதையும், ஆனால், மூன்றுகடவுளர்களையும், மூன்று ஆண்டவர்களையும், சொல்லவும் பெயரிடவும் விடப்படாத தென்பதையும் தவிர, வேறு அருத்தம் (2)கொள்ளுகிறதில்லை. கடவுள் ரூபத்தில் ஒருவராகக்கூட இருந்தாலொழிய அந்த ஒரு கடவுளை யார் எந்த விதத்தில் பார்க்கக்கூடும்? அந்த மூவருக்கும் ஒரே சத்து இருப்பதாக நினைக்கும் பட்சத்தில், ஒருவனுக்கு அந்த உணர்ச்சி உண்டாகுமென்று சொல்லப்பட்டால், இவ்விதமாக அவர்கள் ஒரேமனதாயிருந்து ஒத்துப் போகிறார்களென்பதையும், அப்படியிருந்தும் மூன்று கடவுளர்களாயிருக்கிறார்களென்பதையும் தவிர, இதிலிருந்து வேறு எதை யார் பார்க்கிறார்கள், அல்லது பார்க்கக்கூடும்? அதிக ஆழமாய் ஒருவன் நினைத்தால், அவன் தனக்குள்ளே சொல்லுகிறதாவது: "முடிவற்றதாயிருக்கிற தெய்வசத்து எப்படிபிரிக்கப்படக்கூடும்? அது நித்தியத்திலிருந்து மற்றொன்றை பெற்று, அவைகள் இரண்டிலிருந்தும் புறப்படுகிற இன்னும் வேறொன்றை எப்படி உண்டாக்கக்கூடும்? இது நினைக்கப்படாமல் நம்பப்படவேண்டு மென்று சொல்லப்படலாம்; ஆனால், நம்பப்படவேண்டு மென்று சொல்லப்படுவதைப்பற்றி யார் நினைக்கிறதில்லை? தன் சத்தில் விசுவாசமாயிருக்கிற ஒத்துக்கொள்ளுதலென்பது வேறுவிதமாய்எதிலிருந்துவருகிறது? நீ நம்புவதைவிட அநேகஇருதயங்களில் அரசாளுகிற சோசினியர் மதமும், ஆரியஸ் ஏற்படுத்திய மதமும், மூவராக கடவுளை நினைத்ததினால் உற்பத்தியாகவில்லையா? ஒரு கடவுளிடத்து விசுவாசமும், ஆண்டவர் அந்த ஒரு கடவுளென்பதும் திருச்சபையாகிறது; ஏனென்றால், தெய்வீக திரியேகத்துவம் அவரில் இருக்

கிறது. அது அப்படியிருக்கிறதென்பது, ஆண்டவரைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கை எனும் நூலில், ஆரம்பத்தி (3) லிருந்து கடைசிவரையில் பார்க்கப்படலாம். ஆனால், இன்றைக்கு ஆண்டவரைக்குறித்து என்ன நினைக்கப்படுகிறது? அவர் கர்ப்பம் தரித்த பிதாவாகிய ஏகோவாவிடமிருந்து கடவுளாகவும், அவர் பிறந்த கன்னிகை மரியம்மாளிடமிருந்து மனிதனாகவும், இவ்விதமாக அவர் கடவுளாகவும் மனிதனாகவும் நினைக்கப்படுகிறதில்லையா? ஆனால், அவரிலிருக்கும் கடவுளும் மனிதனும், அல்லது அவருடைய தெய்வத்தன்மையும் மானிடத்தன்மையும் ஒருங்கே என்றும் ஆன்மாவும் சரீரமும் ஒன்றாயிருப்பதுபோல் அவைகள் ஒன்றென்றும், யார் நினைக்கிறார்கள்? இது எவனுக்காவது தெரியுமா? திருச்சபையின் பண்டிதர்களைக் கேளுங்கள், அது தங்களுக்குத் தெரியாதென்று அவர்கள் சொல்லுவார்கள். அப்படியிருந்தாலும், எங்குமுள்ள கிருஸ்துவ உலகமுழுவதிலும், ஏற்றுக்கொள்ளப்பட்ட திருச்சபையின் கொள்கையிலிருந்து அது எடுக்கப்பட்டிருக்கிறது; அது பின்வருவது: "கடவுளுடைய குமாரனாகிய, நம்முடைய இயேசு கிருஸ்து நாதர் கடவுளாகவும் மனிதராகவுமிருக்கிறார்; அவர் கடவுளாகவும் மனிதராகவுமிருந்தாலும், இரண்டல்லாமல் ஒரே கிருஸ்துதானிருக்கிறார்; தெய்வீகமானது மானிடமானதை தானே எடுத்துக்கொண்டபடியினால், அவர் ஒருவராயிருக்கிறார்; நிஜமாகவே அவர் ஒருவரானபடியினால், அவர் முழுமையும் ஒருவரே; ஆன்மாவும் சரீரமும் ஒரு மனிதனாகிறது போல, கடவுளும் மனிதனும் ஒரு கிருஸ்துவாயிருக்கிறார்கள்." இது அதனேசியஸ் என்பவர் ஏற்படுத்திய சமயகோட்பாடு அல்லது சமயத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது: அவர்கள் அதைப் படித்தபோது, ஆண்டவரை கடவுளாக அல்லாமல் மனிதனாக மாத்திரம் நினைத்தபடியினால், இது அவர்களுக்கு தெரியாது. (4) அதே ஜனங்களை, பிதாவாகிய கடவுளிடமிருந்தா அல்லது அவருடைய சொந்த தெய்வத்தன்மையிலிருந்தா, யாரிடமிருந்து அவர் கர்ப்பம் தரிக்கப்பட்டாரென்று தெரியுமா என்று கேட்டால், பிதாவாகிய கடவுளிடமிருந்து அவர் கர்ப்பம் தரிக்கப்பட்டார் என்று அவர்கள்கூட மறுமொழி சொல்லுவார்கள்;

ஏனென்றால், இது வேதவாக்கியத்துக்கு அனுசரித்து இருக்கிறது. அப்படியானால், ஆன்மாவும் சரீரமும் ஒன்றாகிறதுபோல, பிதாவும் அவருமே ஒன்றல்லவா? அவர் இரண்டு தெய்வங்களிலிருந்து கர்ப்பம் தரிக்கப்பட்டாரென்றும், அவருடைய சொந்த தெய்வத் தன்மையிலிருந்தால், அது அவருடைய பிதாவென்றும் யார் நினைக்கக்கூடும்? ஆண்டவருடைய தெய்வத்தன்மையைப்பற்றியும், அவருடைய மானிடத்தன்மையைப்பற்றியும், உன் அபிப்பிராயம் என்னவென்று நீ கேட்டால், அவருடைய தெய்வீகத் தன்மையானது பிதாவின் சத்திலிருந்தும், மானிடத்தன்மை தாயினுடைய சத்திலிருந்தும், வந்ததென்றும், அவருடைய தெய்வத்தன்மை பிதா வுடனிருப்பதாகவும் அவர்கள் சொல்லுவார்கள்; அவருடைய மானிடத்தன்மை எங்கேயிருக்கிறது என்று பிறகு நீ கேட்டால், அவர்கள் மறுமொழி சொல்லமாட்டார்கள்; ஏனென்றால், தங்கள் அபிப்பிராயத்தில், அவருடைய தெய்வத் தன்மையையும் மானிடத்தன்மையையும் பிரித்து, தெய்வத்தன்மையை பிதாவினுடைய தெய்வத்தன்மைக்கு சமமாகவும், மானிடத் தன்மையை மற்ற ஒருமனிதனுடைய மானிடத்தன்மைபோல் செய்கிறார்கள்; இவ்விதமாக ஆன்மாவையும் சரீரத்தையும்கூட தாங்கள் பிரிக்கிறதாக அவர்களுக்குத்தெரியாது; அதுவுமல்லாமல் இவ்விதமாக ஒரு தாயிடமிருந்துமாத்திரம் ஒரு பகுத்தறிவுள்ள மனிதன் பிறந்திருப்பானென்கிற எதிர்பேச்சை அவர்கள் பார்க்
(5)கிறதுமில்லை. ஆண்டவருடைய மானிடத்தன்மையைக் குறித்து, மற்ற எந்த மனிதனுடைய மானிடத் தன்மையைப் போல் அது இருந்ததாகஅவன் மனதில் பதியச்செய்த அபிப்பிராயத்திலிருந்து, ஒரு கிருஸ்துவனானவன், கருதரித்தது முதல் ஆண்டவருடைய ஆன்மா அல்லது உயிர் ஏகோவா வாகவே இருந்ததென்றும், இருக்கிறதென்றும், சொல்லப்பட்ட போதிலும், ஒரு தெய்வீகமான மானிடத்தன்மையைக்குறித்து, நினைக்கச்செய்ய முடியாதென்று நேரிட்டிருக்கிறது. இப்பொழுது காரணங்களை எல்லாம் சேர்த்து, அதிலிருந்து எல்லா பொருள்களும் உண்டாகிறதும், பிதாவென்று சொல்லப்படுகிறதுமாகிய தெய்வமே கூடவும், குமாரன் என்று சொல்லப்படுகிற தெய்வ மனிதனும் பரிசுத்த ஆவி

என்று சொல்லப்படுகிற வெளிவரும் தெய்வமும், இருக்கிற ஆண்டவரை மாத்திரம் தவிர, பிரபஞ்சத்துக்கு வேறு எந்த கடவுளாவது இருக்கிறாரா என்றும், இவ்விதமாக அந்த கடவுள் ரூபத்திலும் சத்திலும் ஒருவரே என்றும், அந்த கடவுள் ஆண்டவ
(6) ரென்றும் யோசித்துப்பார். ஆண்டவரே மத்தேயுவில் "ஆகையால் நீங்கள் புறப்பட்டு போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுங்க ளென்று" (மத்தே, XXVIII. 19), சொல்லியபோது, அவரே மூவரை சொன்னார் என்று நீங்கள் பிடிவாதம் செய்தால், அதற்கு உடனே முன்வரும் வாக்கியத்தி லிருந்தும், உடனே பின்வரும் வாக்கியத்திலிருந்தும், இப்பொழுது மகிமை படுத்தப்பட்ட தன்னிடமே தெய்வீக திரியேகத்துவம் இருந்ததாக தெரியப்படுத்த இதை அவர் சொன்னாரென்று வெளிப்படையாயிருக்கிறது. உடனே முன்வருகிற வாக்கியத்தில், வானத்திலும் பூமியிலும் எல்லா சக்தியும் அவருக்குக் கொடுக்கப்பட்டதாகச் சொல்லுகிறார்; உடனே பின்வருவதில், உலகத்தின் முடிவு பரியந்தம் அவர் அவர்களுடன் கூட யிருப்பதாகச் சொல்லுகிறார்; இவ்விதமாக மூவரைப்பற்றியல்லாமல் தன்னையே குறித்துப் பேசுகிறார். இப்பொழுது தெய்வபரிபாலனத்தைப்பற்றி அது கிருஸ்து
(7) வர்களை ஒரு கடவுளை மூவராகஆராதிக்கவும் அதாவது மூன்று கடவுளர்களை ஆராதிக்கவும், ஏன் விட்டதென்பதைப்பற்றியும், அவர்களுக்கு இதுவரையில் ஒரு திரியேகத்துவமிருக்கிற கடவுள் ரூபத்திலும் சத்திலும் ஒருவரென்றும், அந்த கடவுள் ஆண்டவரென்றும், ஏன் தெரியவில்லை என்பதைப்பற்றியும் பேசுவோம். அதற்கு ஆண்டவர் காரணமல்ல, ஆனால் மனிதன்தானே காரணம்; ஆண்டவரைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கையில் எடுத்துக்காட்டிய எல்லா வாக்கியங்களிலிருந்தும் விசதமாகிறபடி, ஆண்டவர் தன்னுடைய வேதத்தில் தெளிவாய் கற்பித்திருக்கிறார்; அவருடைய தெய்வத்தன்மையும் மானிடத்தன்மையும் இரண்டல்லாமல், ஆன்மாவையும் சரீரத்தையும் போல சேர்க்கப்பட்டிருக்கிற ஒருவரென்றும் சொல்லப்படுகிற எல்லாதிருச்சபையின் கொள்கையிலும்கூட, அவர் அதை கற்பித்திருக்கிறார்.

(8) ஆனால் தெய்வத்தன்மையும் மானிடத்தன்மையும் அவர்கள் பிரித்ததற்கும் தெய்வத்தன்மையை பிதாவாகிய ஏகோவாவின் தெய்வத்தன்மையோடும், மானிடத்தன்மையை மற்ற ஒரு மனிதனிட மானிடத்தன்மையோடும் சரிப்படுத்தியதற்கும் முதல் காரணம், திருச்சபையானது எழுந்தபிறகு ஆண்டவருடைய தெய்வ சக்தியை தனக்கே மாற்றிக்கொண்ட பாபிலோனியாவில் சீர்கெட்டது என்பதா யிருக்கிறது. ஆனால் அது தெய்வ சக்தியென்று சொல்லப்படாமல் மானிட சக்தி என்று சொல்லப்பட, ஆண்டவருடைய மானிடத்தன்மையை மற்ற ஒரு மனிதனுடைய மானிடத் தன்மைபோல் செய்தார்கள். பின்னிட்டு, திருச்சபை சீர்படுத்தப் பட்டு, பிதாவாகிய கடவுள் குமாரன் பொருட்டு இரக்கம்கொள்வார் என்கிற பக்திமாத்திரம் இரட்சிப்படைய ஒரேவழி என்று ஏற்றுக் கொள்ளப்பட்டபோது, ஆண்டவருடைய மானிடத் தன்மை வேறுவிதமாய் மதிக்கமுடியாமல் போய்விட்டது; ஏனென்றால், அவருடைய தர்ம நியமங்களுக்குத் தக்கபடி வாழ்கிறவன் தவிர, மற்ற எவனும் ஆண்டவரை அணுகி, இருதயத்தில் வானத்துக்கும் பூமிக்கும் கடவுளாக ஒத்துக்கொள்ள முடியாது. ஒவ்வொருவனும் தான் நினைக்கிறமாதிரி பேச கடமைப்பட்டிருக்கிற சூக்கும உலகத்தில், எவனும் உலகத்தில் கிருஸ்துவனாக வாழ்ந்திருந்தாலொழிய இயேசு என்கிற பெயரைக்கூடச் சொல்ல முடியாது; அவருடைய திருநாமம் அசுத்தப்படுத்தப் படாதபடி யிருக்க, அவருடைய தெய்வபரிபாலனத்தி லிருந்து இது ஏற்படுகிறது.

263. இப்பொழுதுசொல்லியது அதிகதெளிவாய்த்தோன்றும்படி, ஆண்டவரைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கையில், (பி. 60-61) முடிவில் கொண்டுவரப்பட்டவைகளை நான்சேர்க்கிறேன். அவைகளாவன: "ஆண்டவரில் கடவுளும் மனிதனும் கொள்கையை அனுசரித்து இரண்டல்லவென்பதும், ஆனால் ஆன்மாவும் சரீரமும் ஒன்றாயிருப்பது போல, ஒருவரென்பதும் முழுவதும் ஒருவரென்பதும், அவர் சொல்லிய அடியில்கண்டது போல அநேக விஷயங்களிலிருந்து தெளிவாய்த் தோன்றுகிறது.

பிதாவும் தானும் ஒன்றென்றும், பிதாவின் எல்லா பொருள்களும் தன்னுடையதென்றும், தன்னுடையதெல்லாம் பிதாவினுடைய தென்றும்,தான் பிதாவிலும்,பிதா தன்னிலுமிருப்பதாகவும்,எல்லா பொருள்களும் தன்னுடைய கையில் கொடுக்கப்பட்டிருப்பதாக வும், தனக்கு எல்லாசக்தியு மிருப்பதாகவும், தான் வானத்துக்கும் பூமிக்கும் கடவுளென்றும், தன்னை நம்புகிறவர்களுக்கு சதாகால வாழ்வு உண்டென்றும், கடவுளுடைய கோபம் தன்னை நம்பாத வன் பேரில் இருப்பதாகவும், இன்னமும், தெய்வத் தன்மையும் மானிடத்தன்மையும் சுவர்க்கத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட தென்றும், அந்த இரண்டு விஷயத்திலும் தான் கடவுளின் வலது கைப்பக்கம் உட்காருகிறதாகவும், அதாவது தான் சர்வ வல்லமை யுள்ளவரென்றும், அவருடைய தெய்வீக மானிடத் தன்மையைப் பற்றி, வேதத்திலிருந்து திரளாய் மேலே எடுத்துக் காண்பித்த இன்னும் அநேக விஷயங்களும், அவைகளெல்லாம் சத்தில்போல ரூபத்திலும், தன்னில் ஒரு திரியேகத்துவமிருக்கிற கடவுள் ஒருவ (2) ரென்றும், அந்த கடவுள் ஆண்டவரென்றும் சாட்சிகொடுக் கின்றன. ஆண்டவரைக்குறித்த இந்த விஷயங்களெல்லாம் இப் பொழுது முதல்முதல் ஏன் பிரசுரம் செய்யப்படுகிறது என் பதற்கு காரணம், வெளிப்படுத்தின சுவிசேஷத்தில் (அதிகாரங்கள் XXI, XXII) முன்சென்றதின் முடிவில் இது முதன்மையானதாக யிருக்கும் ஓர் புதிய சபை ஏற்படுத்தப்பட வேண்டுமென்று முன் னறிந்து சொல்லப்பட்டிருக்கிற தென்பதா யிருக்கிறது. சுவர்க் கத்துக்கும் பூமிக்கும் கடவுளாக ஆண்டவரை மாத்திரம் ஒத்துக் கொள்ளுகிறவர்கள் தவிர, வேறு யாரும் பிரவேசிக்க முடியாத புதிய எருசலேம் என்பதால், அங்கே அருத்தம் கொள்ளப்பட்டது இந்த சபைதான்; ஆகையினால் இந்த சபையானது அங்கே ஆட்டுக் குட்டியின் மனைவி என்று சொல்லப்பட்டது. சர்வ வியாபகமான சுவர்க்கமானது ஆண்டவரை மாத்திரம் ஒத்துக்கொள்ளுகிறதென் றும், அவரை ஒத்துக்கொள்ளாதவர்கள் சுவர்க்கத்தில் சேர்க்கப் படுகிறதில்லையென்றும், நான் வெளிப்படையாய் தெரியச் சொல் லக்கூடும்; ஏனென்றால், சுவர்க்கமானது ஆண்டவரிடமிருந்து சுவர்க்கமா யிருக்கிறது. அன்பிலிருந்தும் பக்தியிலிருந்தும்

வந்த இந்த ஒத்துக்கொள்ளுதலே, அவர்கள் ஆண்டவரிலும், ஆண்டவர் அவர்களிலும் இருக்கும்படியாக யோவானில் ஆண்டவரே கற்பிக்கிறபடி, செய்கிறது: "நான் என் பிதாவிலும், நீங்கள் என்னிலும், நான் உங்களிலும் இருக்கிறதை அந்நாளிலே நீங்கள் அறிவீர்கள்" (XIV, 20). மறுபடியும் அதிலேயே, "என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன். நானே திராட்சக்கொடி, நீங்கள் கொடிகள்; ஒருவன் என்னிலும், நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுந்த கனிகளைக் கொடுப்பான்; என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது. ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால் அவன் எறியப்படுவான்" (XV. 4-6; XVII. (3) 22-23). இது வேதத்திலிருந்து முன்னமே அறிந்துகொள்ளப்படவில்லை, என்பதற்கு காரணம், அப்படி அறிந்துகொள்ளப்பட்டிருந்தால், அது இன்னும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்காது என்பதாயிருக்கிறது; ஏனென்றால், கடைசி தீர்ப்பு இன்னும் முடியவில்லை, அதற்குமுன் நரகத்து சக்தி சுவர்க்கத்து சக்திக்குமேல் பிரபலமாயிருந்தது; மனிதனானவன் சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியில் இருக்கிறான். ஆகையினால், முன்னிட்டே அறிந்துகொள்ளப்பட்டிருந்தால், பிசாசானது அதாவது நரகம், மனிதர்களுடைய இருதயங்களிலிருந்து அதை பறித்து, மேலும் அதை அசுத்தப்படுத்தியிருக்கும். நரகத்தின் சக்தியினுடைய இந்த நிலைமை இப்பொழுது முடிந்துபோன கடைசி தீர்ப்பினால் முழுமையும் உடைக்கப்பட்டது. அந்த தீர்ப்பு முதலும், ஆகையினால் இப்பொழுதும் வெளிச்சம்உண்டாக்கப்படவும், புத்தியுள்ளவனாயிருக்கவும் விரும்புகிற ஒவ்வொரு மனிதனும் அப்படியிருக்கலாம்."

264. II. இதுவரையில், வேதத்தின் ஒவ்வோரு விவரத்திலும் ஒரு ஞானார்த்தம் இருப்பதாகவும், வேதத்தின் பரிசுத்தம் அதிலிருந்து வருவதாகவும், மனிதர்களுக்குத்தெரியாது என்கிற உண்மையிலிருந்து, தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் ஒரு சந்தேகம் கிரகிக்கப்படலாம்; ஏனென்றால், இது ஏன் இப்பொழுது முதல்முதல் வெளிப்படுத்தப்பட்டது? திருச்சபையின் சிரேஷ்ட அத்தியக்ஷ குரு மூலமாய் அல்லாமல், இந்த மனிதன் அல்லது அந்த மனிதன் மூல

மாய் ஏன் வெளிப்படுத்தப்பட்டது? என்கிற கேள்விகளைக் கொண்டு தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாக ஒரு சந்தேகம் கிரகிக்கப்படலாம். ஆனால் ஒரு சிரேஷ்ட அத்தியக்ஷகுருமூலமாகவா அல்லது அக்குருவின் வேலைக்காரன் மூலமாகவா வெளிப்படுத்துவதென்பது ஆண்டவருடைய சந்தோஷம்; இருவருடைய சுபாவமும் அவருக்குத் தெரியும். ஆனால் வேதத்தின் அருத்தம் முன்னிட்டு ஏன் வெளிப்படுத்தப்படவில்லை என்பதற்கு காரணம், I. அப்படி வெளிப்படுத்தப்பட்டிருந்தால் திருச்சபையானது அதை நிந்தித்திருக்கும், அதனால் வேதத்தின் பரிசுத்தத்தையே அசுத்தப்படுத்தியிருக்கும். II. அதுவுமல்லாமல், வேதத்தின் ஞானார்த்தம் கொண்ட உத்தமமான உண்மைகள் கடைசிதீர்ப்பு முடிந்தபிறகு, பரிசுத்த எருசலேம் என்பதனால் கருதப்படுகிற புதிய சபையானது ஆண்டவரால் ஏற்படுத்தப்பட நேரிடுகிறவரையில், ஆண்டவரால் வெளிப்படுத்தப்படவுமில்லை என்பதுமா யிருக்கிறது. ஆனால் இத்த விஷயங்கள் பிரத்தியேகமாய் பரிசோதனை (2) செய்யப்படவேண்டும். முதலாவது வேதத்தின் ஞானார்த்தம்முன்னிட்டே வெளிப்படுத்தப்படவில்லை என்பதற்கு காரணம், அது அப்படி வெளிப்படுத்தப்பட்டிருந்தால் திருச்சபை அதை நிந்தித்திருக்கும், அதனால் வேதத்தின் பரிசுத்தத்தையே நிந்தித்திருக்குமென்பதா யிருக்கிறது. திருச்சபையானது, அது ஏற்படுத்தபட்ட பிறகு நெடுநாளைக்கு பின்னிட்டல்லாமல், பாபிலோனியாவுக்கும் பின்னிட்டு பிலிஸ்தியாவிற்கும் திருப்பப்பட்டது; பாபிலோனியா நிஜமாக வேதத்தை ஒத்துக்கொண்டும், பரிசுத்த ஆவி தீர்க்கதரிசிகளுக்கு புகட்டியது போல், தங்களுடைய மேலான அதிகாரத்தை செலுத்துவதில் அவர்களை புகட்டுகிறதென்று சொல்லுவதினால், அதை நிந்தித்தது. அவர்கள் வேதத்தை ஒத்துக்கொள்ளுகிறார்களென்பது, பேதுருவுக்கு ஆண்டவர் சொல்லிய வார்த்தைகளினால் ஏற்படுத்தப்பட்ட பிரதிகுருத்தொழிலின் பொருட்டா யிருக்கிறது; அப்படியிருந்தும் வேதமானது அவர்களுடன் ஒத்துப்போகாதபடியினால் அதை அவர்கள் நிந்நித்திருக்கிறார்கள். இந்த காரணத்துக்காககூட ஜனங்களிடமிருந்து அது எடுத்துக்கொள்ளப்பட்டு, சிலர்மாத்திரம் அதை வாசிக்கிற சன்னியாசி ஆசிரமங்களில், வைக்

கப்படுகிறது. ஆகையினால், ஆண்டவரும், அதேகாலத்தில் எல்லா தேவதா ஞானங்களும் இருக்கப்பட்ட வேதத்தின் ஞானார்த்தம் வெளிப்படுத்தப்பட்டிருந்தால், வேதமானது சப்தார்த்தத்தில் அடங்கியிருக்கிற பொருள்களாகிய அதின் இறுதிப் பொருள் (3) களில்மட்டும் இப்பொழுது இருக்கிறபடியல்லாமல், மிகவும் அந்தரங்கமானவைகளில் கூட நிந்திக்கப்பட்டிருக்கும். தருமத்துக்கு வேறான விசுவாசம் என்று கருதப்படுகிற பிலிஸ்தியா, வேதத்தின் ஞானார்த்தத்தைக்கூட நிந்தித்திருக்கும்; ஏனென்றால், அது இரட்சிப்பை முன் காண்பித்தபடி, தாங்கள் செய்யக் கூடிய நன்மைகளில் அல்லாமல், அவர்கள் நினைத்துப் பேசக் கூடிய சில வார்த்தைகளில் வைக்கிறது; இவ்விதமாக இரட்சிக்காததை இரட்சிப்பதாகவும் அது செய்கிறது, மேலும், நம்பப்பட வேண்டியதிலிருந்து புத்தியை நீக்குகிறது, வேதத்தின்ஞானார்த்தமிருக்கப்பட்ட வெளிச்சத்துடன் அவைகளுக்கு என்ன சம்பந்தமிருக்கிறது? அது இருட்டாக திருப்பப்படாதா? ஸ்தூலஅர்த்தம் அப்படி திருப்பப்பட்டபோது ஞானார்த்தத்தை என்ன செய்யப் படக்கூடாது? தருமத்திலிருந்து வேறான விசுவாசத்தில் தானே ஸ்திரப்பட்டவர்களில் எவனாவது, அதினாலேயே நீதி என்றுகாட்டுவதினால், உயிரின் நன்மை என்னவென்றும், ஆண்டவரிடத்தும் அயலானிடத்தும் அன்பு என்னவென்றும், தருமமென்னவென்றும், தருமத்தின் நன்மைகள் என்னவென்றும், நற்கிரியைகள் என்னவென்றும், அவைகளை செய்தலென்னவென்றும், அல்லது அதன் சாரத்தில் விசுவாசம் கூட என்னவென்றும், அதை அமைக்கிற எந்த உத்தமமான உண்மை என்னவென்றும் தெரிந்து கொள்ள விரும்புகிறான்? அவர்கள் அநேக புஸ்தகங்கள் எழுதி, விசுவாசம் என்பதை மாத்திரம் ஸ்திரப்படுத்துகிறார்கள்; இப்பொழுதே சொல்லப்பட்ட எல்லா விஷயங்களும் அந்த விசுவாசத்திலிருப்பதாக அவர்கள் சொல்லுகிறார்கள், வேதத்தின் ஞானார்த்தம் முன்னிட்டே வெளிப்படுத்தப்பட்டிருந்தால், மத்தேயுவில் "உன் கண்கெட்டதாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் இருளாயிருக்கும்; இப்படி உன்னிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்தால், அவ்விருள் எவ்வளவு அதிகமாயிருக்கும்" என்று

ஆண்டவர் சொல்லியபடி நடந்திருக்குமென்று இதிலிருந்து விசதமாகிறது (VI. 23). வேதத்தின் ஞானார்த்தத்தில் கண் என்ப (4)தால், புத்தி யென்று கருதப்படுகிறது. இரண்டாவது: அதுவு மல்லாமல் வேதத்தின்ஞானார்த்தமிருக்கிற உத்தமமான உண்மைகள் கடைசிதீர்ப்பு முடிந்து பரிசுத்த எருசலேம் என்பதினால் கருதப்பட்ட புதிய திருச்சபை ஆண்டவரால் ஏற்படுத்தப்பட நேரிடுகிறவரையில் அவரால் வெளிப்படுத்தப்படவில்லை. கடைசி தீர்ப்பு முடிந்தஉடன் உத்தமமானஉண்மைகள் வெளிப்படுத்தப்படுமென்றும், ஒரு புதிய திருச்சபை ஏற்படுத்தப்படுமென்றும், வேதத்தின் ஞானார்த்தம் வெளிப்படுத்தப் படுமென்றும், வெளிப்படுத்தின சுவிசேஷத்தில் ஆண்டவரால் முன்னறிந்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கடைசி தீர்ப்புமுடிந்து போய்விட்டதென்பது, கடைசி தீர்ப்பைக்குறித்த ஒரு சிறிய நூலிலும், மறுபடியும் அதன் தொடர்ச்சியிலும் காண் பிக்கப்பட்டிருக்கிறது; மேலும், ஒழிந்துபோக வேண்டிய வான மும் பூமியும் என்பதினால் இதுதான் கருதப்பட்டது என்பதும் (வெளி-XXI. 1), அவைகளில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. உத் தமமான உண்மைகள் அக்காலத்தில் வெளிப்படுத்தப்பட இருக் கின்றனவென்பது, வெளிப்படுத்தின சுவிசேஷத்தில் இந்தவார்த்தை களால் முன்னறிந்து சொல்லப்பட்டிருக்கிறது: ''சிங்காசனத்தின் மேல் வீற்றிருந்தவர், இதோ நான் சகலத்தையும் புதிதாக்குகி றேன்'' (XXI. 5; XIX. 17, 18; XXI, 18-21; XXII, 1, 2). அக்கா லத்தில்வேதத்தின் ஞானார்த்தம் வெளிப்படுத்தப்படவேண்டியிருக் கிறது என்பது (XIX, 11-16); அதின்பேரில் உட்கார்ந்தவர் கடவு ளின்வார்த்தை என்றும்சொல்லப்பட்டும் ஆண்டவர்களுக்குஆண்ட வரும் அரசர்களுக்கு அரசராகவுமிருந்த வெள்ளைக்குதிரை என்பதி னால் இதுதான் கருதப்பட்டது;அந்தவிஷயத்தைப்பற்றி வெள்ளைக் குதிரையைக் குறித்து எழுதிய சிறு நூலைப் பார்க்கவும். பரிசுத்த மான எருசலேம் என்பது அப்பொழுது ஆண்டவரால் ஏற்படுத்த இருந்த புதிய திருச்சபை என்று கருதப்படுகிறது என்பது, இது நிச்சயப்படுத்தப்படுகிற ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நக (5) ரத்து கோள்கை எனும் நூலில் (பிரி. 62-65) பார்க்கலாம். இதி லிருந்து வேதத்தின் ஞானார்த்தமானது, ஆண்டவரை மாத்திரம்

ஒத்துக்கொண்டு ஆராதிக்கிறதும், அவருடைய வார்த்தை பரிசுத்த மாக பிடிக்கிறதும், தெய்வ உண்மைகளை நேசித்து, தருமத்தி லிருந்து பிரிந்த விசுவாசத்தை தள்ளுகிறதுமான, ஒருபுதிய திருச் சபைக்கு வெளிப்படுத்தப்பட இருந்ததென்பது, இப்பொழுது விசதமாகிறது. ஆனல் வேதத்தின் இந்த அருத்தத்தைக் குறித்து 'பரிசுத்த வேதத்தைக்குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கையில் அநேக விஷயங்களை அறிந்துகொள்ளலாம் (பிரி. 5-26 லும், பின் வரும் பிரிவுகளிலும்): ஞானர்த்தம் என்பது என்னவென்றும், (பி 5-26), பொதுவாகவும் சிறப்பாகவும் ஞானர்த்தமானது வேதத் தின் எல்லா பொருள்களிலு மிருக்கிறதென்றும் (பி. 9-17), ஞானர்த்தத்திலிருந்து தான் வேதமானது தெய்வீகமாய் புகட் டப்பட்டு, ஒவ்வொரு வார்த்தையும் பரிசுத்தமா யிருக்கிறதென் றும் (பி. 18, 19), ஞானர்த்தமானது இதுவரையில் தெரியப்படா மல் இருந்ததென்றும், அது ஏன் முன்னிட்டே வெளிப்படுத்தப் படவில்லையென்றும் (பி. 20-25), ஞானர்த்தமானது இனிமேல் ஆண்டவரிட மிருந்து உத்தமமான உண்மைகளில் இருந்தா லொழிய எவனுக்கும் கொடுக்கப்படாதென்றும் (பி. 26), அங்கே (6)பார்க்கலாம்; இந்த ஆலோசனைகளிலெல்லா மிருந்து ஆண்டவ ரின் தெய்வபரிபாலனத்திலிருந்து தான் ஞானர்த்தமானது தற் காலம்வரையில் உலகத்துக்குத் தெரியாமல் மறைத்துவைக்கப் பட்டு சுவர்க்கத்தில், தாங்கள் ஞானத்தை அதிலிருந்து அடைகிற தேவர்களுக்குள் இடையில் ஜாக்கிரதையாய் வைக்கப்பட்டதென் றும், இப்பொழுது விசதமாகும். அந்த அர்த்தமானது மோசே வுக்கு முன்னிருந்த பூர்வீகர்களுக்குள் தெரிந்து கொள்ளப்பட்டு, அபிவிர்த்தியும் கூட செய்யப்பட்டது; ஆனல், அவர்களுடைய சந்ததியார்கள் அவர்களுடையவேதமும், அதனல் அவர்கள் சமய மும் அடங்கியிருந்த அன்னுவயங்களை பலவிதமான விக்கிரகாரா தனைகளாக திருப்பியபடியினுலும், எகிப்தியர்கள் அவைகளை இந் திரஜாலங்களாக திருப்பினபடியினுலும்,மேலே கொடுத்த காரணங் களுக்காக ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தால், இஸ்ரவேல் தேசத்து பிள்ளைகளிடமிருந்து முதலிலும் பின்னிட்டு கிருஸ்து

வர்களிடமிருந்தும் மூடப்பட்டது; இப்பொழுது ஆண்டவருடைய புதிய சபைக்கு முதலில் திறக்கப்படுகிறது.

265. III. தீமைகளைப்பாவங்களாக நீக்குதல் கிருஸ்துமதமே என்பது, இதுவரையில் மனிதற்களுக்குத்தெரியாமல் போய்விட்டதென்கிற உண்மையிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் ஒரு சந்தேகம் கிரகிக்கப்படலாம். இதுதான் கிருஸ்துமதமே என்று புதிய எருசலேம் நகரத்தைக்குறித்த வாழ்க்கை போதம் எனும் நூலில் ஆரம்பத்திலிருந்து கடைசிவரையில் காண்பிக்கப்பட்டிருக்கிறது; தருமத்திலிருந்து பிரிந்த விசுவாசமானது அதை ஏற்றுக்கொள்ளுதற்கு ஒரு விகாதமாயிருப்பதினால், அதுகூட சொல்லப்பட்டிருக்கிறது. ஏறக்குறைய எல்லாருக்கும் அது தெரியாதபடியினால் தீமைகளை பாவங்களாக நீக்குதல் கிருஸ்துமதமே என்று மனிதர்களுக்குத் தெரியவில்லை என்று சொல்லப்படுகிறது; அப்படி யிருந்தாலும்,மேலே பார்க்கக்கூடியபடி(பி. 258)ஒவ்வொருவனுக்கும் அது தெரியும். இதுவரையில் ஏறக்குறைய எல்லாருக்கும் இது தெரியாதென்பதற்கு காரணம்,வேறான விசுவாசமானது, அதை அழித்துவிட்டதென்பதா யிருக்கிறது; ஏனென்றால், எந்த நல்ல கிருத்தியமும் தருமத்தின் நன்மையும் அல்லாமல், விசுவாசம் மாத்திரம் இரட்சிக்கிறதென்றும் அவர்கள் சட்டத்தின் பந்தத்திற்குள் இல்லாமல் சுதந்திரத்திலிருப்பதாகவும், கூட அது உறுதியாய் சொல்லுகிறது. இப்பேர்ப்பட்ட விஷயங்களை அநேக தடவைகளில்கேட்டவர்கள், உயிரின் தீமையையாவது அதன் நன்மையையாவது அதற்கப்புறம் நினைக்கிறதில்லை; அதுவுமன்றி தன்னுடைய சுபாவத்திலிருந்து ஒவ்வொரு மனிதனும் இந்த அபிப்பிராயத்தைத் தழுவச் சாய்கிறான்; அவன் ஒருதடவை தழுவினபோது அவன் உயிரின் நிலைமையைப்பற்றி அப்புறம் நினைக்கிறதில்லை. அதினால் தான் தீமைகளைப் பாவங்களாக நீக்குதல் கிருஸ்துமதமே என்று (2) தெரிந்திருக்கப்படவில்லை. அது தெரிந்து கொள்ளப்படாமலிருக்கிறது என்பது சூக்கும உலகத்தில் எனக்கு வெளிப்படுத்தப்பட்டது. உலகத்திலிருந்து புதிதாய் வந்த ஆயிரத்துக்கு மேற்பட்டவர்களை தீமைகளை பாவங்களாக நீக்குதல் மதமே என்று

உங்களுக்குத் தெரியுமா என்று நான் கேட்டிருக்கிறேன்; அவர்களுக்கு இது தெரியாதென்றும், முன்னிட்டு கேட்கப்படாத இது ஒரு புதிய சங்கதி என்றும், ஆனால் அவர்கள் தங்களிடமிருந்தே நன்மை செய்ய முடியாதென்றும், சட்டத்தின் பந்தத்தில் அவர்கள் இல்லையென்றும் கேழ்விப்பட்டிருப்பதாகச்சொல்லி யிருக்கிறார்கள். ஒரு மனிதன் தன்னைத்தானே பரிசோதித்து, தன்பாவங்களைப் பார்த்து, மனம் திரும்பி பிறகு புதிய வாழ்வை ஆரம்பிக்கவேண்டுமென்றும், இல்லாவிட்டால் பாவங்கள் மன்னிக்கப்படுகிறதில்லையென்றும், பாவங்கள் மன்னிக்கப்படாவிட்டால், மனிதர்கள் இரட்சிக்கப்படுகிறதில்லை என்றும், பரிசுத்த போஜனத்துக்கு போனபோதெல்லாம் இது அவர்களுக்கு உறக்க வாசிக்கப்பட்டதென்றும், தங்களுக்குத் தெரியாதா என்று நான் கேட்டபோது, அந்த விஷயங்களைப் பற்றி தாங்கள் கவனிக்கவில்லை என்றும், இராப்போஜனத்தின் மூலமாய் பாவமன்னிப்புத் தங்களுக்கு உண்டென்பதையும், விசுவாசமானது தங்களுக்குத் தெரியாமலே மீறி எல்லாவற்றையும் செய்கிறதென்பதையும் மாத்திரம் கவனித்ததாகவும் அவர்கள் (3) பதில் கொடுத்திருக்கிறார்கள். உங்களுடைய சிறு பிள்ளைகளுக்கு தசாக்ஞையை ஏன் நீங்கள் கற்பித்தீர்களென்றும் எந்த தீமைகள் தள்ளவேண்டிய பாவங்களென்று அவர்களுக்கு தெரிய நீங்கள் இதை செய்யவில்லையா யென்றும், அல்லது இந்த விஷயங்களை அவர்கள் செய்யாமல்,தெரிந்து கொண்டு நம்பவேண்டுமென்று செய்தீர்களா என்றும், ஆகையினால், இது புதியதென்று ஏன் சொல்லப்படுகிற தென்றும், நான் மறுபடியும் சொல்லிய போது அதற்கு அவர்கள் தங்களுக்கு அவைகள் தெரிந்திருக்கிறதென்றும், அப்படியிருந்தும் தெரியாதிருக்கிறதென்றும், தாங்கள் விபசாரம் செய்யும்போது ஆறுவது கட்டளையையும், திருடும் போதும் அல்லது மோசம்செய்யும்போதும் ஏழாவது கட்டளையையும், இவ்விதமே மற்றவர்களையும் தாங்கள் எப்பொழுதும் கவனிக்கிறதில்லையென்றும், இன்னும் குறைவாய் இப்பேர்ப்பட்ட விஷயங்கள் தெய்வசட்டத்துக்கு விரோதமா யிருக்கிறதென்றும், அதனால் கடவுளுக்கு விரோதமா யிருக்கிறதென்றும் கவனிக்கவேயில்லையென்றும், மாத்திரம் பதில்அளிக்க சக்தியுள்ளவர்களா

(4)யிருந்தார்கள். திருச்சபையினுடையவும் வேதத்தினுடையவும் கொள்கைகளிலிருந்து, தீமைகளைப் பாவங்களாக தள்ளி வெறுப்பில் வைத்தல் கிருஸ்து சமயமே ஆகிறதென்றும், ஒவ்வொருவனும், அவைகளைத்தள்ளி அவைகளை வெறுக்கிற அளவு விசுவாசத்தை உடைத்தாயிருக்கிறனென்றும், ரூபகாரம் செய்கிற அநேக இதர விஷயங்களை நான் சொல்லியபோது, அவர்கள் பேசாமலிருந்திருக்கிறர்கள். ஆனல் வாழ்க்கையை அனுசரித்து ஒவ்வொருவனுக்கும் விசுவாசமிருப்பதினல், எல்லாரும் வாழ்க்கையைக்குறித்து பரிசோதிக்கப்பட்டு கிருத்தியங்களை அனுசரித்து தீர்ப்பு செய்யப்படுவதையும், எவனும் வாழ்க்கைக்கு வேறன விசுவாசத்தை அனுசரித்து அப்படிச் செய்யப்படாததையும், (5)அவர்கள் பார்த்தபோது, இது நிஜமென்று நம்பச்செய்யப்பட்டார்கள். அநேகமாக கிருஸ்துவ உலகம் இதை தெரிந்திருக்கவில்லை என்பது, ஒவ்வொருவனும் விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்தில் செயல்பட விடப்பட்டிருக்கிறனென்கிற தெய்வ பரிபாலனத்தின் சட்டத்திலிருந்து ஏற்படுகிறது; அதைப்பற்றி மேலே (பி. 71-99; பி. 100-128) பார்க்கவும்; மேலும், எவனும் சுவர்க்கத்திலிருந்து நேராயல்லாமல், வேதத்தின் மூலமாயும், கொள்கை மூலமாயும், அதிலிருந்து பிரசங்கம் செய்வதினலேயும், கற்பிக்கப்படுகிறனென்கிற சட்டத்திலிருந்தும் (மேலே பி. 154-174), அதனுடன்கூட தெய்வபரிபாலனத்தின் சட்டங்களாய்கூடயிருக்கிற அனுமதி சட்டங்களிலிருந்து, அது ஏற்படுகிறது. இந்த விஷயத்தைப்பற்றி அதிகமாய் மேலே 258வது பிரிவில் பார்க்கலாம்.

274. * இறந்த பிறகு மனிதன் மனிதனுகயிருக்கிறனென்று மனிதர்களுக்கு இதுவரையில் தெரியாதென்பதும், இது முன்னிட்டு வெளிப்படுத்தப்படவில்லை என்பதுமாகிய உண்மையிலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் ஒரு சந்தேகம் கிரகிக்கப்படலாம். தீமைகளை பாவங்களாக நீக்காதவர்களில், மனிதன் இறந்த பிறகு உயிர்

* பிரிவு ஏற்படுத்துதல் முதல் நூலை அனுசரித்து இருக்கிறது. குறிப்புகளின் பொருட்டு அது மாற்றப்பட முடியாது.

51

இருக்கிறதில்லை என்கிற நம்பிக்கை உள்ளுக்குள்ளாய் மறைந்து கிடக்கிறது என்பது, இது அவர்களுக்கு தெரியாமலிருக்கிறது என்பதற்கு காரணமாயிருக்கிறது; ஆகையினால், மனிதன் இறந்த பிறகு மனிதனாக இருக்கிறானென்றாவது, கடைசி தீர்ப்பு நாளில் அவன் மறுபடியும் எழும்பவேண்டுமென்றாவது எப்படி சொன்ன போதிலும், அது அவ்வளவு முக்கியமான சங்கிதி அல்லவென்று நினைக்கிறார்கள்; அகஸ்மாத்தாய் மரித்தோர் உயிர்த்தெழுதல் என்பதில் ஒரு நம்பிக்கை வந்தால், மனிதன் தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிறதாவது: "மற்றவர்களுக்கு இருப்பதைவிட எனக்கு ஒன்றும் அதிக கெடுதியாயிருக்காது; நான் நரகத்துக்குப்போனால் இன்னும் அநேகருடன்கூட இருப்பேன், அம்மாதிரியே சுவர்க்கத்துக்குப் போனாலும் அப்படியே இருப்பேன்." அப்படியிருந்தாலும், எந்த சமயத்தையாவது உடையவர்கள், எல்லாரிடத்திலும், இறந்த பிறகு மனிதர்களாக இருக்கிறோமென்கிற ஓர் அறிவு மனதில் பதியச்செய்யப்பட்டிருக்கிறது; மனிதர்களைப்போல் அல்லாமல் ஆன்மாக்களைப்போல் அவர்கள் இருக்கிறார்களென்கிற அபிப்பிராயம் தங்களுடைய சொந்த விவேகமே மனதைக் கலக்கினவர்களிடத்தில் மாத்திரம் நிலைத்திருக்கிறது; மற்றவர்களிடத்தில் இல்லை. எந்த சமயமாவது உடைய ஒவ்வொருவனிடத்திலும், இறந்த பிறகு மனிதர்களாக இருக்கிறார்களென்கிற ஒரு அறிவு மனதில் பதிய செய்யப்பட்டிருக்கிற தென்கிறது பின்வரும்
(2)ஆலோசனைகளால் விசதமாகிறது: I. இறக்கும்போது வேறு விதமாய் யார் நினைக்கிறான்? II. இறந்தவர்களைக் குறித்து துக்கப்படும்போது, எந்த புகழ்வோன் அவர்களை சுவர்க்கத்துக்கு உயர்த்தி, தேவர்கள் மத்தியில் வைத்து அவர்களோடு பேசிக் கொண்டும் சுகத்தை அனுபவித்துக்கொண்டு மிருப்பதாக சொல்
(3)லாதவன்? அதுவுமன்றி மற்றவர்கள் தெய்வமாக்கப்பட்டார்கள். III. சாதாரண ஜனங்களில் யார், தான் நன்றாய் வாழ்ந்திருந்தால், இறந்த பிறகு திவ்யமான சுவர்க்கத்துக்கு வந்து, வெள்ளையான துணிகளால் உடுத்தப்பட்டு, நித்திய வாழ்வை அனுபவிக்கலா
(4) மென்று நம்பாதவன்? IV. இறந்துபோகும் சமயத்தில், ஒருவனுக்கு அதையே அல்லது அதைப்போன்றதை சொல்லாத எந்த

குருவிருக்கிறான்? அவன் அவைகளைச்சொல்லும்போது, தான் கடைசி தீர்ப்பை அப்பொழுது நினைக்காதபட்சத்தில், அவன் (5)கூட அவைகளை நம்புகிறான். V. தன்னுடைய சிறிய பிள்ளைகள் சுவர்க்கத்திலிருக்கிறார்களென்றும், இறந்த பிறகு தான் அன்பு பாராட்டிய மனைவியை தான் பார்க்கலாமென்றும் யார் நம்புகிறதில்லை? அவர்கள் பேய்களென்றும், இன்னும் குறைவாய் பிரபஞ்சத்தை சுற்றி மிதந்து கொண்டு இருக்கிற ஆன்மாக்கள் அல்லது மனதுகள் என்று யார் நினைக்கிறார்கள்? VI. கால வரைக்கு மிஞ்சி நித்தியவாழ்விற்கு சென்றவர்களின் நிலைமையைப்பற்றியும் கதியைப்பற்றியும், ஏதாவது சொல்லப்பட்டபோது யார் எதிர்த்துப் பேசுகிறார்கள்? இவர்களுடையவும் அவர்களுடையவும் நிலைமையும்கதியும் அவ்விதமாயிருக்கிறதென்று அநேகருக்கு நான் சொல்லியிருக்கிறேன். தங்களுடைய கதியானது இன்னும் தீர்மானிக்கப்படவில்லை என்றும், ஆனால் அது தீர்ப்பு காலத்தில் வருமென்றாவது ஒருவனாவது சொல்லுவதை நான் இன்னும் கேட்டதில்லை. VII. தேவர்கள், சித்திரம் எழுதப்பட்டபோதாவது பிரதிமையாக செதுக்கப்பட்டபோதாவது பார்க்கும்போது, அவ்விதமானவர்கள் என்று யார் ஒத்துக்கொள்ளுகிறதில்லை? கல்விமான்களில் சிலர் நினைத்தபடி, அப்பொழுது அவர்கள் சரீர மில்லாத ஆவிகளென்றும், மூடுபனிகளென்றும், அல்லது மேகங்களென்றும் யார் நினைக்கிறார்கள்? VIII. உரோமை மார்க்கத்தார்கள் தங்களுடைய தெய்வபக்தர்கள் சுவர்க்கத்தில் மானிடர்களென்றும், மற்றவர்கள் வேறு எங்கேயோ இருப்பதாகவும் நம்புகிறார்கள்; மகமத்தியர்கள், தங்களுடைய இறந்தவர்களைப்பற்றி அம்மாதிரியே நினைக்கிறார்கள்; ஆப்பிரிக்காவில் உள்ளவர்கள் இதை மற்றவர்களைவிட அதிகமாக நம்புகிறார்கள்; அதேமாதிரி அநேக இதர தேசத்தா(9)ரும் நம்புகிறார்கள்; அப்படியானால், வேதத்திலிருந்து தெரிந்துகொண்ட, சீர்படுத்தப்பட்ட கிருஸ்துவர்கள் எதை நம்பக்கூடாது? IX. ஒவ்வொருவன் மனதிலும் பதிய செய்யப்பட்டிருக்கிற இந்த அறிவிலிருந்துகூட, சிலர் கீர்த்தி அழிவின்மையை நாடுகிறார்கள்; ஏனென்றால், அந்த அறிவானது சிலரில் அவ்வித அவாவுக்கு திருப்பப்பட்டு, அவர்களை பராக்கிரம சாலிகளாகவும் யுத்தத்தில்

(10) வீரமுள்ளவர்களாகவும் செய்கிறது. X. இந்த அறிவானது எல்லாரிலும், நடப்பட்டிருக்கிறதா என்று சூக்கும உலகத்தில் விசாரணை செய்யப்பட்டது. புறம்பான சிந்தனைக்கு சேர்ந்த தங்களுடைய ஸ்தூல அபிப்பிராயத்தில் அல்லாமல் உள்ளான சிந்தனைக்கு சேர்ந்த தங்களுடைய சூக்கும அபிப்பிராயத்தில் எல்லாரிடத்திலும் நடப்பட்டிருப்பதாக கண்டுபிடிக்கப்பட்டது. இறந்த பிறகு மனிதன் மனிதனாக இருக்கிறானென்று இப்பொழுது முதலில் வெளிப்படுத்தப்பட்டதென்கிற உத்தேசத்திலிருந்து தெய்வபரிபாலனத்துக்கு விரோதமாய் எந்த சந்தேகமும் கிரகிக்கப்படக்கூடாதென்று இவைகளிலிருந்து விசதமாகும். மனிதனுடைய இந்திரிய சம்பந்தமானது மாத்திரம் தான் நம்பப்படவேண்டியதை பார்க்கவும் உணரவும் கோருகிறது; அதற்கு மேலே நினைக்காதவன், தன் உயிரின் நிலைமை விஷயத்தில், இரவின் இருட்டில் இருக்கிறான்.

---

## மோட்சமாயிருக்கிற ஒரு நோக்கத்தின் பொருட்டு, தீங்குகளுக்கு இடம் கொடுக்கப்படுகிறது.

275. மனிதனானவன் தான் சிருட்டிக்கப்பட்ட அன்பில்பிறந்திருந்தால், அவன் எந்த தீமையிலும் இருக்கமாட்டான்; நிஜமாகவே, அதுவுமன்றி, தீமை என்பது என்னவென்றுகூட அவனுக்குத்தெரியாது; ஏனென்றால், தீமையில் இல்லாதிருந்தவன், இவ்விதமாக தீமையில் இருக்காதவன், தீமை என்பது என்னவென்று தெரிந்துகொள்ள முடியாது; இது அல்லது அது தீமை என்று அவனுக்கு சொல்லப்பட்டால், அது இருக்கக்கூடுமென்று அவன் நம்பமாட்டான். இந்த நிலைமைதான், ஆதாமும் அவனுடைய

மனைவியாகிய ஏவாளுமிருந்த குற்றமற்ற நிலைமை; நிருவாணத்தைப்பற்றி, அவர்கள் வெட்கப்படாதது, அந்த நிலைமையைகருதினது. நன்மை தீமை என்கிற அறிவை விளக்கும் மாத்திலிருந்து பரித்து தின்றது என்பதினால், மனிதன் கெட்ட பிறகு அடைந்த தீமையின் அறிவு கருதப்படுகிறது. மனிதன் சிருட்டிக்கப்பட்ட அன்பு, தனக்கே போல அயலானுக்கும் நன்றாகவும், அதைவிட மேலாகவும் கூட தான் கோறவும், ஒரு பெற்றவர் தன்னுடைய பிள்ளைகளிடத்து இருக்கிறதை விட வேறுவிதமாய் அல்லாமல், அயலானுக்கு நன்மைசெய்யும்போது, அந்த அன்பின் ஆனந்தத்தில் தான் இருக்கவும், உண்டாகும் அயலானிடத்து அன்பாயிருக்கிறது. இந்த அன்பானது நிஜமாக மானிடத்தன்மையுடையதாயிருக்கிறது; ஏனென்றால், அறிவில்லாத மிருகங்கள் உடைத்தாயிருக்கிற, ஸ்தூல அன்பிலிருந்து பிரத்தியேகப்படுத்திக் காட்டப்படுகிற சூக்குமமானது, அதிலிருக்கிறது. மனிதன் அந்த அன்பில் பிறந்திருந்தால், ஒவ்வொருமனிதனும், இப்பொழுது இருக்கிறபடி, அறிவின்மையின் கடும் இருளில் அவன் பிறந்திருக்காமல், ஆனால் அறிவின் ஓர் ஒளியில் அதிலிருந்து ஓர் புத்தியில் பிறந்திருப்பான்; இவைகளுக்குள்ளேகூட அவன் சீக்கிரம் வருவான். நிஜமாகவே, முதலில் அவன் ஒரு நாற்கால் மிருகம்போல் நகர்ந்துபோவான், ஆனால், தானே தன் காலினால் எழுந்துகொள்ள தனக்குள்ளே நடப்பட்டிருக்கும் முயற்சியுடன் அப்படிச்செய்வான்; ஏனென்றால், ஒரு நாற்கால் மிருகத்தைப்போல் எவ்வளவு இருந்தபோதிலும், அவன் தன்னுடைய முகத்தை கீழே பூமிபக்கம் திருப்பாமல், சுவர்க்கம் பக்கம் முன்னே திருப்புவான்; முகத்தை மேலே திருப்பக்கூட சக்தியுள்ளவனாயிருக்க தானே மேலேஎழுவான்.

276. ஆனால், அயலானிடத்து அன்பு என்பது தன்னையே நேசித்தலாக திருப்பப்பட்டபோதும், இந்த ஆசை அதிகரித்தபோதும், அக்காலத்தில் மானிட அன்பு மிருக அன்பாக திருப்பப்பட்டது; மனிதனானவன் சரீரத்தின் மூலமாய் உணர்வதை நினைக்கக்கூடுமென்பதும், ஒன்றை மற்றொன்றிலிருந்து விவேகத்துடன் வரையறுக்கக் கூடுமென்பதும், போதிக்கப்படக்கூடுமென்

பதும், தேசாசாரமானவனுகவும் சன்மார்க்கனுகவும் பரமார்த்த மானவனுகவும் கூடுமென்பதுமாகிய வித்தியாசத்துடன், அவன் மனிதனுயிருப்பதிலிருந்து மிருகமாயினுன். ஏனென்றுல், முன் சொல்லியபடி, ஒரு மனிதனுக்கு பரமார்த்தமானதென்பது உண்டு; அதனுல் அவன் மிருக பிராணியிலிருந்து வரையறுக்கப்படுகிறுன்; ஏனென்றுல், இதனுல், தேசாசாரமான தீமையும் நன்மையும் என்ன வென்றும், பிறகு, சன்மார்க்க தீமையும் நன்மையும் என்ன வென்றும், அதனுடன், தான் இஷ்டப்பட்டால் பரமார்த்த தீமையும் நன்மையும் என்ன வென்றும், தெரிந்து கொள்ள அவன் சக்தியுள்ளவனுயிருக்கிறுன். அயலானிடத்து அன்பு என்பது தன்னையே நேசித்தலாக மாற்றப்பட்டபோது, மனிதனுனவன் அறிவினுடையவும் பகுத்தறியும் விவேகத்தினுடையவும் வெளிச்சத்தில், இனி பிறக்காமல், சரீரமுள்ளதென்றும் இந்திரிய சம்பந்தமானதென்றும் சொல்லப்படுகிற உயிரின் மிகவும் இறுதியானவைகளில் இருப்பதனுல், அஞ்ஞானத்தின் தடித்த இருட்டில் பிறந்து, பரமார்த்தமானது எப்பொழுதும் கூடவேயிருந்துகொண்டு, போதனையால் இதிலிருந்து ஸ்தூல மனதின் உள்ளான பாகங்களுக்குள் பிரவேசிக்கச்செய்யப்படக்கூடும். சரீரமுள்ளதும் இந்திரியசம்பந்தமானதும் என்றுசொல்லப்பட்ட உயிரின் இறுதிப்பொருளினும், அதனுல் அஞ்ஞானத்தின் தடித்த இருட்டினும் ஏன் பிறக்கிறுனென்பதற்கு காரணம் பின்வருவதில் (2) அறிந்துகொள்ளலாம். அயலானிடத்து அன்பும் தன்னையே நேசித்தலும் எதிரிடையான ஆசைகளென்று எவனும் அறிந்து கொள்ளலாம்; ஏனென்றுல் அயலானிடத்து அன்பு என்பது, தன்னிடமே யிருந்து எல்லாருடைய க்ஷேமத்தையும் கோருகிறது, ஆனுல் தன்னையே நேசித்தலென்பது, எல்லாரிடமிருந்து தனக்கு மாத்திரம் க்ஷேமத்தைக் கோருகிறது; அயலானிடத்து அன்பு எல்லாருக்கும் ஊழியம் செய்ய விரும்புகிறது, தன்னையே நேசித்தல், எல்லாரும் தனக்கு ஊழியம் செய்யவேண்டுமென்று விரும்புகிறது; அயலானிடத்து அன்பு எல்லாரையும் தன் சகோதரர்கள் போலவும், சிநேகிதர்கள் போலவும் மதிக்கிறது, ஆனுல், தன்னையே நேசித்தல், எல்லாரையும் தன்னுடைய வேலைக்காரர்களாகவும்,

அப்படி உதவாவிட்டால், விரோதிகளாகவும் மதிக்கிறது; சுருங்கச் சொல்லில், அது தன்னையே மாத்திரம் மதிக்கிறது; மற்றவர்களை மனிதர்களாகவே நினைக்கிறதில்லை; அவர்களை இருதயத்தில் குதிரைகளையும் நாய்களையும்விட குறைந்த மதிப்பில் வைக்கிறது; அது அவர்களை ஒன்றுக்கும் உதவாதவர்களாக நினைக்கிறபடியினால், அவர்களுக்கு தீங்கு செய்வதில் யாதொரு குற்றம் இருப்பதாகக்கூட நினைக்கிறதில்லை; அதிலிருந்து தான் வெறுப்புகளும், பழிவாங்குதலும், விபசாரங்களும், வேசித்தனங்களும், திருடுகளும், மோசங்களும், பொய்களும், அபகீர்த்தி உண்டாக்குதலும், கடுமைகளும், குரூரங்களும், மற்ற இவ்விதமான தீமைகளும் வருகின்றன. பிறந்தது முதல் ஒவ்வொருவனுமிருக்கிற தீமைகள் இவைகள் தான். மோட்சமாயிருக்கிற ஒரு நோக்கத்தின் பொருட்டு, அவைகளுக்கு இடங்கொடுக்கப்படுகிறதென்பது பின்வரும் ஒழுங்கில் காண்பிக்கப்படும். I. ஒவ்வொரு மனிதனும் தீமையாயிருக்கிறான், அவன் சீர்படுத்தப்பட தீமையிலிருந்து தூரமாய் கொண்டுபோகப்படவேண்டும். II தீமைகள் தோன்றினால் ஒழிய நீக்கப்படமுடியாது. III. தீமைகள் நீக்கப்படுகிற அளவு, அவைகள் மன்னிக்கப்படுகின்றன. IV. தீமைக்கு இடங்கொடுத்தல், இவ்விதமாக இரட்சிப்பு உண்டாகும் நோக்கத்தின் பொருட்டு இருக்கிறது.

277. (*a*)—**ஒவ்வொரு மனிதனும் தீமையிலிருக்கிறான், சீர்படுத்தப்பட தீமையிலிருந்து தூரமாய் கொண்டுபோகப்பட வேண்டும்.** ஒவ்வொரு மனிதனுக்கும் பரம்பரையான தீமை உண்டென்றும், அதிலிருந்து, மனிதனானவன், இதர அநேக தீமைகளின் மோகங்களிலிருக்கிறானென்றும், திருச்சபையில் தெரிந்திருக்கிறது; அதனால் தான் மனிதன் தன்னிடமேயிருந்து நன்மையை செய்யமாட்டான்; ஏனென்றால், தீமையானது, தீமையை தனக்குள் வைத்திருக்கிற அவ்வித நன்மையைத் தவிர, வேறு நன்மையைச் செய்கிறதில்லை; அதன் உள்ளிருக்கும் தீமையானது, தன்பொருட்டே நன்மை செய்கிறதாகவும், இவ்விதமாக, அது தோன்றும்படியாக மாத்திரம் செய்கிறதாகவுமிருக்கிறது. இந்த தீமையானது பெற்றோர்

களிடமிருந்து பரம்பரையாய் வருகிறதென்று தெரிந்திருக்கப்படுகிறது. அது ஆதாமும் அவனுடைய மனைவியிடமுமிருந்து வந்ததாகச் சொல்லப்படுகிறது, ஆனால் இது ஒரு தப்பிதம்; ஏனென்றால், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த பெற்றோரிடமிருந்து அதில் பிறந்திருக்கிறான், இந்த பெற்றவர் தன்னுடைய சொந்த பெற்றவரிடமிருந்து அதில் பிறந்திருக்கிறான், அவனும் அவனுடைய பெற்றவரிடமிருந்து பிறந்திருக்கிறான்; ஆகையால், அது ஒருவரிடமிருந்து மற்றவருக்கும், ஒன்றன்பின் ஒன்றாய் மாற்றப்படுகிறது; இவ்விதமாக அது அதிகரிக்கப்படுகிறது; ஒரு குவியலைப்போலாகிறவரையில் வளர்ந்து,சந்ததிக்கு அனுப்பப்படுகிறது. அதனால்தான் மனிதனில் எதுவும் சரியாயில்லாமல், அவன் முழுமையும் தீமையாயிருக்கிறான். மற்றவர்களைவிட தன்னையே அதிகமாய் நேசித்தல் தீமையென்று யார் உணருகிறது? அதனால் அது தீமைகளுக்குத் தலைமையாயிருந்த போதிலும் அது தீமையென்று (2) யாருக்குத் தெரியும்? பெற்றோர்களிடமிருந்தும், பாட்டன்மார்களிடமிருந்தும் முப்பாட்டன்மார்களிட மிருந்தும் வந்த ஒரு பரம்பரையான சுபாவம் இருக்கிறதென்பது சம்சாரங்களும் குடும்பங்களும், தேசத்தாரும்கூட முகத்தினால் மாத்திரம் ஒருவரிலிருந்து ஒருவர் வகையறுக்கப்படுவது போலவும், முகங்களென்பவை மனங்களின் அச்சுகளென்பதுபோலவும், மனங்கள் அன்பைச்சேர்ந்த ஆசைகளுக்குத் தக்கபடி யிருக்கின்றனவென்பதும் போலவும், உலகத்தில் தெரிந்திருக்கும் அநேக விஷயங்களிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது. சில சமயங்களில் கூட ஒரு முப்பாட்டன் முகமானது ஒரு பேரன் அல்லது பிரபௌத்திரனில் திரும்புகிறது. முகத்திலிருந்து மாத்திரம் ஒரு மனிதன் யூதனா அல்லவாஎன்றும், அதனுடன் சில ஜனங்கள் எந்த வமிசத்திலிருந்து உற்பத்தியானவர்களென்றும் எனக்குத் தெரியும்; அதேகூட மற்றவர்களுக்கும் தெரியுமென்று நான் சந்தேகிக்கிறதில்லை. அன்பைச்சேர்ந்த ஆசைகள் இவ்விதமாக பெறப்பட்டு பெற்றோர்களிடமிருந்து பரம்பரியமாய் வியாபிக்கச் செய்யப்பட்டால், தீமைகளும் (3) அம்மாதிரியே செய்யப்படுகின்றன என்பது தொடருகிறது; ஏனென்றால், அவைகள் ஆசைகளைச் சேர்ந்தவை. ஆனால் இந்த

ஒப்பனை எதிலிருந்து வருகிறது என்பது இப்பொழுது சொல்லப்படவேண்டும். ஒவ்வொருவனுடைய ஆன்மாவும், தகப்பனிடமிருந்து வருகிறது, அது தாயினுல் ஒரு சரீரத்தால் மாத்திரம் உடுத்தப்படுகிறது. ஆன்மாவானது தகப்பனிடமிருந்து வருகிறதென்பது, சற்று முன்சொல்லியதிலிருந்து மட்டுமல்லாமல் இதர அநேக குறிகளிலிருந்தும்கூட ஏற்படுகிறது; இதனுடன் ஒரு காப்பிரிக்கு அல்லது மூருக்கு, வெண்மையான அல்லது ஐரோப்பிய ஸ்திரியிடம் பிறந்த குழந்தை கருப்பு நிறமாய் பிறக்கிறதென்பதிலிருந்தும், முக்கியமாய் விதையிலிருந்து கர்ப்பதாரணம் சம்பவிக்கிறதினுலும், விதையானது தாயினுல் சரீரத்தை உடுத்துக்கொள்ளுகிறதா யிருப்பதினுலும், ஆன்மாவானது விதையிலிருக்கிற தென்பதிலிருந்தும், ஏற்படுகிறது. விதையானது, தகப்பனுர் இருக்கும் அன்பின் முதல் உருவமாயிருக்கிறது; அந்த அன்பின் மிகவும் அந்தரங்கமான ஆசைகளாயிருக்கிற அதன் நெருங்கிய உற்பவங்களோடு, அவனுடைய அரசாளும் அன்பின் உருவமாய் (4) அது இருக்கிறது. ஒவ்வொருவனிடத்திலும், இந்த ஆசைகள் சன்மார்க்கவாழ்வின் தகுதிகளுடனும், கொஞ்சமட்டும் தேசாசாரமான வாழ்வினுடையவும், கொஞ்சமட்டும் பரமார்த்த வாழ்வினுடையவும் நன்மைகளோடும் மறைக்கப்படுகின்றன; இவைகள் தான் துஷ்டர்கள் விஷயத்திலும் கூட உயிரின் புறம்பானதாகின்றன. இந்த உயிரின் புறம்பானதில், ஒவ்வொரு குழந்தையும் பிறக்கிறது; அதிலிருந்து தான் அது அன்பு பாராட்டத்தக்கதாயிருக்கிறது; ஆனுல், குழந்தையானது பாலியத்திற்கு அல்லது இளமைக்கு வளரும்போது, அது அந்த புறம்பானதிலிருந்து உள்ளானவைகளுக்கும், கடைசியில் அதனுடைய தகப்பனுருடைய அரசாளும் அன்புக்கும் வருகிறது; இது தீமையானதாயிருந்து, பலவிதத்தினுல் உபாத்தியாயர்களால் குணம் மாற்றப்பட்டு வளைக்கப்படாவிட்டால், அது அவனுடைய தகப்பனுருடையதா யிருந்ததுபோல் கூட அவனுடைய அன்பாகிறது: அப்படியிருந்தாலும் தீமையானது வேருேடழிக்கப்படுகிறதில்லை: ஆனுல் நீக்கமாத்திரம் படுகிறது; அதைப்பற்றி பின்வருவதில்

பேசலாம். இவைகளிலிருந்து ஒவ்வொரு மனிதனும் தீமையிலிருக்கிறனென்பது விசதமாகிறது.

277. (b) மனிதனானவன் சீர்திருத்தப்படும் பொருட்டு, தீமையிலிருந்து தூரமாக கொண்டு போகப்படவேண்டு மென்பது வியாக்கியான மில்லாமலே வெளிப்படையாயிருக்கிறது; ஏனென்றால், உலகத்தில் தீமையிலிருப்பவன், உலகத்தை விட்டுப்போன பிறகும் தீமையிலிருக்கிறன்; ஆகையினால், உலகத்திலிருந்து தீமை நீக்கப்படாவிட்டால், அது பின்னிட்டு நீக்கப்படமுடியாது. மரம் விழுந்த விடத்திலேயே அது கிடக்கிறது. அதே மாதிரிகூட மனிதனுடைய உயிரானது, அவன் இறந்த பிறகு அவ்வித சுபாவமுடையதாகவேயிருக்கிறது. மேலும், ஒவ்வொருவனும் தன்னுடைய கிரியைகளின்படி தீர்மானிக்கப்படுகிறன்; அவர்கள் மறுபடியும் கணக்கிடப்படுகிறர்களென்பதல்ல, ஆனால், அவன் அவைகளுக்கு மறுபடியும் திரும்பி, அதேமாதிரி நடப்பதினால் என்க; ஏனென்றால், மரணம் என்பது, மனிதன் அப்பொழுது சீர்படுத்தப்படமுடியாதென்கிற வித்தியாசத்தோடு, உயிரின் தொடர்ச்சியாயிருக்கிறது. எல்லா சீர்படுதலும் முழுமையும் அதாவது மூலகாரணங்களிலும் அதே காலத்தில் இறுதிப்பொருள்களிலும் நிறைவேற்றப்படுகின்றன; இறுதிப்பொருள்கள் மூலகாரணங்களுக்குத் தகுந்தபடி உலகத்தில் சீர்படுத்தப்படுகின்றன, பின்னிட்டு அப்படி செய்யப்படமுடியாது; ஏனென்றால், இறந்த பிறகு மனிதன் தன்னுடன் கொண்டுபோகிற உயிரின் இறுதிப்பொருள்கள் சலனமற்று, சோர்ந்து மூச்சு விடுகின்றன, அதாவது தன்னுடைய உள்ளானவைகளுடன் ஒன்றுக செயல்படுகின்றன.

278. (a). (II). **தீமைகள் தோன்றினாலொழிய நீக்கப்படமுடியாது.** தீமைகள் தோன்றும் நோக்கத்தோடு மனிதன் அவைகளை செய்யவேண்டு மென்கிறது அல்லாமல், ஆனால், அவனுடைய கிரியைகளை மட்டுமல்லாமல், அவனுடைய சிந்தனைகளைப் பற்றிகூடவும், சட்டங்களுக்கும் அவமானத்துக்கும் பயப்படாவிட்டால், அவன் என்ன செய்வானென்பதைப்பற்றியும், முக்கியமாய்,

அவன் இடைவிடாமல் அவைகளைச்செய்கிறபடியினால், தன்னுடைய ஆன்மாவில் எந்த தீமைகளுக்கு இடங்கொடுந்து பாவங்களாக நினைக்கிறதில்லை என்பதையும் பற்றியும், அவன் பரிசோதனை செய்யவேண்டும் என்பது, அருத்தமாயிருக்கிறது. எது நன்மையானதென்றும், எது தீமையானதென்றும், மனிதன் தெரிந்து விவேகத்துடன் அறிந்துகொண்டு, ஒத்துக்கொள்ளும் பொருட்டும், அதனுடன், தன்னுடைய சித்தம் என்ன குணமுடையதென்றும், அல்லது அவன் எதின்பேரில் அன்பு பாராட்டுகிறான், எதை விரும்புகிறானென்றும் தான் பார்க்கும் பொருட்டும், மனிதன் தன்னைத்தானே பரிசோதிக்க, ஒரு புத்தியானது, அதுவும் சித்தத்துக்கு வேறாக அவனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மனிதன் இதைப்பார்க்க, உயர்ந்த அல்லது உள்ளான சிந்தனையிலிருந்து, தாழ்ந்ததும் புறம்பானதுமாகிய சிந்தனைக்குள் சித்தமானது என்னசெய்கிறதென்று அவன் பார்க்கும் பொருட்டு, அவனுடைய புத்திக்கு உயர்ந்ததும் தாழ்ந்ததுமான சிந்தனையும், அல்லது உள்ளான அல்லது புறம்பான சிந்தனையும் கொடுக்கப்பட்டிருக்கிறது; இதை அவன் ஒரு மனிதன் தன் முகத்தைக் கண்ணாடியில் பார்ப்பதுபோல் பார்க்கிறான்; அவன் அதைப்பார்த்து, பாவம் என்னவென்று தெரிந்துகொண்டபோது, ஆண்டவருடைய உதவியை வேண்டிக்கொண்டால், அதை இச்சிக்காமல் தள்ளுவான், பின்னிட்டு அதற்கு விரோதமாய் நடப்பான்; சுவேச்சையாய் இல்லாவிட்டாலும் சண்டையினால் அதை தடுத்து, கடைசியில் அருவருப்பில் வைத்து பகைக்கக்கூடும்; அதற்கு முன் அல்லாமல், அப்பொழுது தான் அவன் முதலில் தீமையானது தீமையென்றும், நன்மையானது நன்மையென்றும் பார்த்து உணருகிறான். ஒருவன் தன்னுடைய தீமைகளை பார்த்தலும், அவைகளை பெற்றுக்கொண்டு அதனால் தான் தப்பு செய்ததாக ஒத்துக்கொள்ளுதலும், பின்னிட்டு அவைகளிலிருந்து நீங்கி விடுதலும் தான், (2) தன்னைத்தானே பரிசோதனை செய்த லென்பது. இது தான் கிருஸ்து சமயமென்று தெரிந்தவர்கள் மாத்திரம் தருமத்தையும் பக்தியையும் உடைத்தாயிருப்பதினாலும், இவர்கள் மாத்திரம் ஆண்டவரால் நடத்தப்பட்டு, அவரிடமிருந்து நன்மை செய்கிற

படியினாலும், இவர்கள் சிலராயிருப்பதினால், இந்த வேலை செய்யா விட்டாலும், தங்களுக்கு சமயமிருப்பதாக நினைக்கிறவர்களைப் பற்றி சிலது சொல்லப்படவேண்டும். அவர்கள் இவர்கள் தான்: 1. எல்லா பாவங்களையும் செய்ததாக தாங்களே ஒத்துக்கொண்டு, தங்களுக்குள்ளே எந்த ஒரு பாவத்தையும் தேடாதவர்கள். 2. சமயத்திலிருந்து அந்த சோதனையை விட்டு விடுகிறவர்கள். 3. உலக விஷயங்கள் பொருட்டு பாவங்களைப்பற்றி ஒன்றும் நினைக் காமல், அதனால் அவைகளைத் தெரியாதவர்கள். 4. அவைகளுக்கு அனுகூலமாய் இருந்து, அதனால் தெரிந்துக்கொள்ள முடியாதவர் கள். 5. இவர்கள் எல்லாருடைய விஷயத்திலும், பாவங்கள் தோன்றுகிறதில்லை, ஆகையினால், நீக்கப்படமுடியாது. 6. கடைசி யாய், தீமைகளானது சோதனையில்லாமலும், தோற்றுகையில்லா மலும், ஏற்றுக்கொண்டதாக ஒத்துக்கொள்ளாமலும், தப்பென்று ஒத்துக்கொள்ளாமலும், அவைகளை எதிர்க்காமலும், ஏன் நீக்கக் கூடாதென்பதற்கு, இதுவரையில் தெரியாமல் இருந்த காரணம் வெளிப்படையாக சொல்லப்படவேண்டும்.

278. (இரண்டாவது). ஆனால் இந்த விஷயங்கள் ஒவ்வொன் றாய் பரிசோதிக்கப்படவேண்டும்; ஏனென்றால், அவைகள் கிருஸ் துவ மதத்தில் மனிதன் செய்யவேண்டிய முதன்மையானவைகள்; முதலாவது: எல்லா பாவங்களையும் செய்ததாக ஒத்துக்கொண்டு ஒரு பாவத்தையும் தனக்குள்ளேயேதேடாமலிருக்கிறவர்களைப்பற்றி, "நான் ஒருபாவி, நான் பாவத்தில் பிறந்திருக்கிறேன்; தலை முதல் பாதம் வரையில் என்னிடத்தில் ஒன்றும் சரியாய் இல்லை; நான் தீமை யைத்தவிர வேறு ஒன்றுமில்லை, நல்ல கடவுளே! என் பேரில் இரக்கம்கொள்ளும், என்னை மன்னியும், என்னை சுத்தம் செய்யும், என்னை காப்பாற்றும், தூய்மையிலும், நீதி மார்க்கத்திலும், என்னை நடக்கச்செய்யும், இவ்விதமாய் அவர்களில் ஒவ்வொருவ னும் பலவிதமாய் சொன்னபோதிலும், தன்னையே பரிசோதித் துப் பார்க்கிறதில்லை. ஆகையினால், எந்த ஒரு தீமையும் அவனுக்கு தெரியாது; மேலும் தனக்கு ஒன்றும் தெரியாததை எவனும் நீக்கமுடியாது, இன்னும் குறைவாய், அதற்கு விரோதமாய்

சண்டை செய்யமுடியாது: தப்பு ஒத்துக்கொண்ட பிறகு, சிரசு முதல் உள்ளங்கால்வரையில் அவன் அசுத்தமாயும் கழுவாமலும் இருந்தபோதிலும், தான் சுத்தமாயும் கழுவப்பட்டு மிருக்கிறதாக கூட தானே நம்புகிறுன்; ஏனென்ருல், எல்லாரின் தப்பிதம் ஒத்துக்கொள்ளுதலும், எல்லாரையும் தூங்கவைத்தலாகிறது, கடைசியில் எல்லாருக்கும் குருட்டுத்தனத்தைகொண்டுவருகிறது; சூனியமான எந்த ஒரு தனித்ததுமில்லாத ஒரு சர்வவியாபகமான தைப் போலிருக்கிறது. இரண்டாவது: சமயத்தை அனுசரித்து (2)தேடாமல் விட்டுவிடுகிறவர்களைப்பற்றி. அவர்கள் முக்கியமாய் விசுவாசத்திலிருந்து தருமத்தை பிரிக்கப்பட்டவர்கள்; ஏனென்ருல், அவர்கள் தங்களுக்குள்ளே நினைத்துக்கொள்ளுகிறதாவது: "என்னிடத்தில் இருப்பது எதுவும் நன்மையா தீமையாவென்று நான் ஏன் தேடவேண்டும்? தீமையானது என்னை தண்டிக்காதபோது, அதை ஏன் தேடவேண்டும்? அல்லது நன்மை என்னை இரட்சிக்காதபோது நன்மையை ஏன் தேடவேண்டும்? சிந்தனை செய்யப்பட்டு, நம்பிக்கையோடும் விசுவாசத்தோடும் அறிவிக்கப்பட்ட பக்திதான், எல்லாபாவங்களிலிருந்தும் குற்றமில்லை என்று ஏற்படுத்தி சுத்தம் செய்கிறதாயிருக்கிறது. ஒருதடவை நான் குற்றமில்லை என்று ஏற்படுத்தப்பட்டால் நான் கடவுள் முன்பாக பரிபூரணமா யிருக்கிறேன். நிஜமாகவே நான் தீமையிலிருக்கிறேன்; ஆனுல் இது செய்யப்பட்டவுடன், கடவுள் இதை துடைத்து விடுகிருர். ஆகையினுல், அது அப்புறம் தோன்றுகிறதில்லை." இவ்விதமான மற்றவைகளையும் சொல்லுகிருர்கள். ஆனுல், எந்த நன்மையும் அதற்கு சொந்தமாகாதபடியினுல், அவ்வித விஷயங்கள் எந்த உண்மையுமில்லாத வெறும் வார்த்தைகளென்று கண்களை திறந்து பார்த்தால் யார் அறிந்துகொள்ளுகிறதில்லை? ஒருவன் ஓரே காலத்தில் நரகத்தையும் சதாகால நரகதண்டனையையும் நினைத்துகொண்டிருந்தால், யார் நம்பிக்கையோடும், விசுவாசத்தோடும்கூட நினைத்து அம்மாதிரி பேசமாட்டார்கள்? அப்பேர்ப்பட்ட மனிதன் உண்மையைப்பற்றியாவது நன்மையைப்பற்றியாவது, இன்னும் கொஞ்சம் எதையும் தெரிந்துகொள்ள விரும்புகிருனு? உண்மையைப்பற்றி அவன் சொல்லுகிறதாவது: "அந்த விசுவாசத்தை

ஸ்திரப்படுத்துகிறதைத்தவிர, உண்மை என்பதென்ன? நன்மையைப்பற்றி அவன் சொல்லுகிறதாவது: "அந்த விசுவாசத்திலிருந்து என்னிடமிருப்பதைவிட நன்மை என்பதென்ன?" ஆனால், அது என்னிடமிருக்கவேண்டுமானால் நான் அதை என்னிடமேயிருந்துபோல செய்யக்கூடாது. ஏனென்றால், அது புகழ்ச்சிக்கு இடமானது. புகழச்சியை நாடி செய்யும் நன்மை நன்மையல்ல". ஆகையினால் தீமை என்பது, என்னவென்று அவன் தெரிந்து கொள்ளாத வரையில் கூட அவன் எல்லாவிசாரணையும் விட்டுவிடுகிறான். அப்பொழுது, தனக்குள்ளே எதை பரிசோதித்துப்பார்ப்பான்? அவனுடைய நிலைமையானது, தீமைகளின் மோகங்களுடைய உள்ளேவைத்து அடைக்கப்பட்ட தீயானது அவன் மனதின் உள்ளானவைகளை எரித்து வாசல் வரையிலேகூட பாழாக்கும்படியானதாக அப்பொழுது ஆகிறதில்லையா? சுவாலையானது தோன்றாதபடி இந்த வாசலைமாத்திரம் அவன் பாதுகாக்கிறான்; ஆனால், இறந்தபிறகு இது திறக்கப்படுகிறது. அப்பொழுது அது எல்லாரும் பார்க்கக்கூடியதாயிருக்கிறது. மூன்றாவது: உலக விஷயங்களின் பொருட்டு பாவங்களைப் பற்றி ஒன்றும் நினைக்காமல், ஆகையினால் அவைகளைப்பற்றி தெரியாமலிருக்கிறவர்களைப்பற்றி, இவர்கள் தான் தங்களுக்குள்ளே, "அதைப்பற்றி எனக்கென்ன? நான் அதைப்பற்றி யோசிக்க வேண்டியதில்லை," என்று சொல்லிக்கொண்டு, தங்களுடைய சமயத்தின் எந்தபொய்யிலிருந்து தூரமாய் கொண்டுபோகிற எந்த உண்மைகளையும் ஒத்துக்கொள்ளாதவர்களாயும், எல்லாவற்றிற்கும் மேலாய் உலகத்தை நேசிக்கிறவர்களாயுமிருக்கிறார்கள். இவ்விதமாக தாங்கள் அதை கேட்கும் காலத்திலேயே உண்மையை தள்ளுகிறார்கள்; அவர்கள் அதைக்கேட்டால் அதை மூச்சுவிடாதபடி செய்கிறார்கள். இந்த ஜனங்கள் பிரசங்கத்தை கேட்கும்போது ஏறக்குறைய அதே மாதிரி செய்கிறார்கள்; சில வசனங்களைத் தவிர அதில் எதையும் கியாபகத்தில் வைக்கிறதில்லை, மேலும் அந்த விஷயத்தின் எதையும் அப்படி வைக்கிறதில்லை. உண்மைகள் விஷயத்தில் இம்மாதிரி நடக்கிறபடியினால், நன்மை என்பது என்னவென்று அவர்களுக்கு தெரியாது; ஏனென்றால் நன்மையும் உண்மையும் ஒன்றாக

செயல் படுகின்றன; உண்மையிலிருந்து வராத நன்மையிலிருந்து, பொய்களிலிருந்து தர்க்கித்தலினால் செய்யப்படுகிறதை நன்மை என்றுகூட சொல்லப்பட்டாலொழிய தீமையின் அறிவுகிடையாது. முட்களில் விழுந்த விதை என்பதால், கருதப்பட்டவர்கள் இவர்கள் தான்; அவர்களைப்பற்றி ஆண்டவர் இவ்விதமாகப்பேசுகிறார்: "சில விதை முள்ளுள்ள இடங்களில் விழுந்தது; முள் வளர்ந்து, அதை நெருக்கிப்போட்டது. இவர்கள் தான் வேதத்துக்கு செவி கொடுக்கிறவர்கள்; ஆனால், இந்த உலகத்தின் கவலையும், ஐசுவரியத்தின் மயக்கமும், வசனத்தை நெருக்கிப் போடுகிறபடியினால், அது (4)பலனற்றதாய்ப்போய்விடுகிறது" (மத்தே. XIII, 7, 22; மார்க்கு IV. 7, 19; லூக். VIII. 7, 14,). நான்காவது: **பாவங்களுக்கு அனுகூலமாயிருந்து அதனால் அவைகளைப்பற்றித் தெரியாதவர்களைக்குறித்து.** இவர்கள்தான், கடவுளை ஒத்துக்கொண்டு, வழக்கமான சடங்குகளை அனுசரித்து அவரை ஆராதித்து, பாவமாயிருக்கிற ஒரு தீமை பாவமல்லவென்று தங்களுக்குள்ளே ஸ்திரப்படுகிறவர்களாயிருக்கிறார்கள்: ஏனென்றால், அவர்கள் அதற்கு போலிநியாயங்களாலும் தோற்றங்களாலும் மாறுவேஷம்போட்டு, அவ்விதமாக அதன் துன்மார்க்கத்தை மறைக்கிறார்கள்; இதை செய்தபிறகு, அதற்கு அனுகூலமாயிருந்து, அதை தங்களுடைய சினேகிதமாகவும் நன்றாய்த் தெரிந்ததாகவும் செய்கிறார்கள். கடவுளை ஒத்துக்கொள்ளுகிறவர்கள், இதை செய்கிறார்களென்று சொல்லப்படுகிறது; ஏனென்றால், எல்லா பாவமும் கடவுளுக்கு விரோதமாயிருக்கிறபடியினால் மற்றவர்கள் எந்த தீமையையும் பாவமாக நினைக்கிறதில்லை. ஆனால், உதாரணங்கள் தெளிவிக்கட்டும். லாபத்தின் பேரில் ஆசையுள்ளவன், தான் கற்பிக்கிற காரணங்களிலிருந்து சில விதமோசங்களுக்கு இடங்கொடுக்கலாமென்று நினைக்கும்போது, தீமையானது பாவமில்லை என்று செய்கிறான்; விரோதிகள் பேரில் சலஞ்சாதிக்கலாமென்கிற அனுகூலபக்ஷத்தில் தானே ஸ்திரப்படுகிறவனும் அப்படியே செய்கிறான்; விரோதிகளாக இல்லாதவர்களை சண்டைகாலத்தில் கொள்ளையடிக்க அனுகூலமாக ஸ்திரப்(5) படுகிறவனும் அப்படியே செய்கிறான். ஐந்தாவது, **இவர்கள் விஷயத்தில் பாவங்கள் தோன்றுகிறதில்லை, ஆகையினால் நீக்கப்பட**

முடியாது. தோன்றாத எல்லா தீமையும் தனக்கே தானே ஒற்றடம் போட்டுக்கொள்ளுகிறது; அது சாம்பலின் கீழிருக்கும் மரத்திலிருக்கும் தீ போலவும், திறக்கப்படாத ஒரு காயத்திலிருக்கும் கெட்டுப்போன இரத்தம்போலவுமிருக்கிறது; ஏனென்றால், உள்ளே வைக்கப்படுகிற எல்லா தீமையும் அதிகரித்து, எல்லாம் முடிவாகிறவரையில் ஓய்கிறதில்லை. ஆகையினால், எந்த தீமையும் உள்ளே வைக்கப்படாதபடி, கடவுளுக்கு அனுகூலமாகவும் அவருக்கு விரோதமாகவும், அதனுடன் திருச்சபையின் பரிசுத்தப் பொருள்களுக்கு அனுகூலமாகவும், அவைகளுக்கு விரோதமாகவும், நினைக்கவும், உலகத்தில் அதற்காக தண்டிக்கப்படாமலிருக்கவும், ஒவ்வொருவனுக்கும் இடங்கொடுக்கப்படுகிறது. இதைப்பற்றி ஆண்டவர் ஏசாயாவில் பின்வருமாறு சொல்லுகிறார்: "உள்ளங்கால் தொடங்கி உச்சந்தலைமட்டும் அதிலே சுகமேயில்லை; அது காயமும், வீக்கமும், நொதிக்கிற இரணமுமுள்ளது; அது கீழ்பிதுக்கப்படாமலும், கட்டப்படாமலும், எண்ணெயினால் ஆற்றப்படாமலுமிருக்கிறது. உங்களைக்கழுவி சுத்திகரியுங்கள்; உங்கள் கிரியைகளின் பொல்லாப்பை என் கண்களுக்கு மறைவாக அகற்றிவிட்டு, தீமை செய்தலைவிட்டு ஓயுங்கள்; நன்மைசெய்ய படியுங்கள்; உங்கள் பாவங்கள் சிவேரென்றிருந்தாலும், உறைந்தமழையைப்போல் வெண்மையாயிருக்கும்; அவைகள் இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப்போலாகும். மாட்டோம் என்று எதிர்த்து நிர்பீர்களாகில் பட்டயத்துக்கு இரையாவீர்கள்" (I. 6, 16, 17, 18, 20;); பட்டயத்துக்கு இரையாகுதலென்பது, தீமை (6) யின் பொய்யினால் அழிந்துபோதலை கருதுகிறது. ஆறாவது: தீமைகள், பரிசோதனையில்லாமலும், தோற்றமில்லாமலும், ஒத்துக்கொள்ளாமலும், தப்பு ஒத்துக்கொள்ளாமலும் அவைகளை எதிர்க்காமலும் ஏன் நீக்கப்படமுடியாது என்பதற்கு இதுவரையில் மறைந்திருந்த காரணம். முன் சென்ற பக்கங்களில் சர்வவியாபகமான சுவர்க்கமானது நன்மையின் ஆசைகளுக்கு தக்கபடியும், சர்வவியாபகமான நரகமானது நன்மையின் ஆசைகளுக்கு எதிரிடையான தீமையின் மோகங்களுக்கு தக்கபடிக்கும், ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கிறதென்று சொல்லப்பட்டது. ஒவ்வொரு மனிதனும் தன்

ஆன்மா சம்பந்தப்பட்டவரையில் ஏதோ ஒரு கூட்டத்திலிருக்கிறன்; அவன் நன்மையினிடத்து அன்பிலிருந்தால், சுவர்க்கத்தைச்சேர்ந்த கூட்டத்திலும். ஆனால், அவன் தீமையின் மோகத்திலிருந்தால்,நரகத்தைச்சேர்ந்த கூட்டத்திலுமிருக்கிறன். மனிதனுக்கு அவன் உலகத்திலிருக்கும்போது இது தெரியாது, அப்படியிருந்தும், அவனுடைய ஆவி சம்பந்தப்பட்ட வரையில் ஏதோ ஒரு கூட்டத்திலிருக்கிறன்; அது அல்லாமல் அவன் உயிரோடிருக்கமாட்டான், அதன் மூலமாய் அவன் ஆண்டவரால் ஆளப்படுகிறன். அவன் நரகத்துக்கடுத்த ஓர்கூட்டத்திலிருந்தால், ஆண்டவரால் அவருடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்குத்தக்கபடி தவிர,வேறுவிதமாய் அதிலிருந்து வெளியே கொண்டுபோகப்படமுடியாது; அவைகளில், மனிதனுனவன் தான் அங்கேயிருப்பதாக அறிந்துகொண்டு, அதை விட்டு வெளியேபோக விரும்பி, அப்படிச்செய்தலும் தன்னிடமேயிருந்து செய்ய முயற்சி செய்யவேண்டுமென்பது ஒன்று. இதை மனிதன், தான் உலகத்திலிருக்கும்போது செய்யக்கூடும், இறந்தபிறகு செய்யமுடியாது; ஏனென்றல், அப்பொழுது அவன், உலகத்திலிருக்கும்போது தானே சேர்ந்துகொண்ட கூட்டத்தில் எக்காலமும் இருக்கிறன். ஏன் மனிதன் தன்னைத்தானே பரிசோதித்து, தன் பாவங்களைப் பார்த்து ஒத்துக்கொண்டு, மனம் திரும்பி, பின்னிட்டு சாகுமளவும் ஒரே பிடியாய் பிடிக்கவேண்டுமென்பதற்கு, இது தான் காரணம். அது அப்படியிருக்கிறதென்று, அதிக அனுபவத்திலிருந்து முழு நம்பிக்கை உண்டாகும் வரையில் கூட நான் ஸ்திரப்படுத்தக்கூடும்; ஆனால் அனுபோக சாட்சியத்தைக் கொண்டுவர இது இடமல்ல.

279. III. **பாவங்கள் நீக்கப்படுகிற அளவு, அவைகள் மன்னிக்கப்படுகின்றன.** பாவங்களானது மன்னிக்கப்பட்டபோது, அவைகள் மனிதனிடமிருந்து பிரிக்கப்பட்டு, தள்ளப்பட்டதாகக் கூட நம்புதலும், மனிதனுடைய உயிரின் நிலைமை எதிரிடையான நிலைமைக்குக்கூட ஒரு நொடி நேரத்தில் மாற்றப்படக்கூடுமென்றும், இவ்விதமாக மனிதன் தீமையிலிருப்பதிலிருந்து, நன்மைக்கு வரக்கூடுமென்றும், அதனால், நரகத்திலிருந்து நடத்தப்பட்டு,

சுவர்க்கத்துக்கு நேராய் மாற்றப்படக்கூடுமென்றும், இதுவும் ஆண்டவருடைய உடனுன இரக்கத்தால் செய்யப்படக்கூடுமென்றும் நம்புதலும், இக்காலத்தின் குற்றம். ஆனால், இந்த நம்பிக்கையையும் அபிப்பிராயத்தையும் கொண்டவர்களுக்கு, தீமை என்ன என்பதும், நன்மை என்னவென்பதும் கொஞ்சம்கூட தெரியாதவர்களாயிருக்கிறார்கள்; மனிதனுடைய உயிரின் நிலைமையைப்பற்றி அவர்களுக்கு யாதொன்றும் தெரியாது; சித்தத்துக்குச்சேர்ந்த ஆசைகள், மனதின் சுத்தமாய் அங்க சம்பந்தமான பொருள்களின் நிலமைகளினுடைய கேவல மாறுபாடுகளும் பேதங்களுமென்றும், புத்திக்கு சேர்ந்த சிந்தனைகள், அந்த பொருள்களின்உருவத்தினுடைய கேவல மாறுபாடுகளும்பேதங்களுமென்றும், ஞாபகமென்பது அந்த மாறுதல்களின் அசையாத நிலைமை என்றும், அவர்களுக்கு முழுமையும் தெரியாது. இவைகளெல்லாம் தெரிந்தபோது, எந்த தீமையையும் படிப்படியாய் அல்லாமல் நீக்க முடியாதென்றும், பாவத்தை மன்னித்தல் அதை நீக்குதல் அல்லவென்றும், தெளிவாய் அறிந்துகொள்ளக்கூடும். ஆனால், இவைகள் எல்லாம் ஒரு சங்கிரக உருவமாகச் சொல்லப்பட்டது; அவைகளெல்லாம் ரூபிக்கப்பட்டாலொழிய, நிஜமாக ஒத்துக்கொள்ளப்படக்கூடும், அப்படியிருந்தாலும் கிரகிக்கப்படமுடியாது; கிரகிக்கப்படாதது கையினால் சுற்றப்பட்ட ஒரு சக்கிரத்தைப்போலிருக்கிறது; ஆகையினால், மேலே சொன்னவைகள் ஒன்றன் பின் ஒன்றாய் அவைகள் சொல்லப்பட்டிருக்கிற ஒழுங்கில் மெய்பிக்கப்படவேண்டும். தீமைகள் மன்னிக்கப்பட்டபோது, அவைகள் பிரிக்கப்பட்டு தள்ளப்பட்டதாகக்கூட நம்புதல் இக்காலத்தின் குற்றம். மனிதன் பிறந்திருப்பதும், நிஜமாகவே அதை தானே தன்மனதில் படிந்து வைக்கிறதுமான எல்லா தீமையும் மனிதனை விட்டுப் பிரிக்கப்படாமல், ஆனால் தோன்றாத அளவு நீக்கப்படுகிறது என்று, சுவர்க்கத்திலிருந்து தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது. தீமைகள் மன்னிக்கப்பட்டபோது தள்ளப்பட்டு முகத்திலிருந்து தண்ணீரால் அழுக்கு கழுவப்படுவதுபோல, அலம்பப்பட்டு துடைக்கப்படுகிறதென்கிற ஓர் நம்பிக்கையில் உலகத்தில் அநேகரிருப்பதுபோல நானும் முன்

னிட்டு இருந்தேன். ஆனால் தீமைகளோடும் பாவங்களோடும் அப்படியல்ல; அவைகள் எல்லாம் நிற்கின்றன; மனம் திரும்பின பிறகு அவைகள் மன்னிக்கப்படும் காலத்தில், மத்தியிலிருந்து பக்கங்களுக்கு எடுத்துவைக்கப்படுகின்றன; பிறகு, மத்தியிலிருப்பது, பார்வைக்கு நேராயிருப்பதினால், பகல் வெளிச்சத்தில் போலத் தோன்றுகிறது; பக்கங்களிலிருப்பது நிழலிலும் சில சமயங்களில் இரவு இருட்டிலும் போல இருக்கிறது: தீமைகள் பிரிக்கப்படாமல், வேறு இடத்துக்கு எடுத்துவைக்கப்படுகிறதினாலும், அதாவது பக்கங்களுக்கு அனுப்பப்படுகிறபடியினாலும், மனிதனானவன் மத்தியிலிருந்து சுற்றிலுமிருக்கிற பாகங்களுக்கு மாற்றப்படக்கூடுமாகையாலும், தள்ளிவிடப்பட்டதாக தான் நம்பியிருந்த தன்னிட தீமைகளுக்கு திரும்பக்கூட நேரிடக்கூடும். ஏனென்றால், மனிதனானவன் ஒரு ஆசையிலிருந்து மற்றொரு ஆசைக்குப்போகவும், சில சமயங்களில் எதிரிடையானதற்குக் கூடபோகவும், அவ்விதம் ஒரு மத்தியில் அல்லது நடுவிலிருந்து மற்றொன்றுக்குப் போகவும் கூடியவனாயிருக்கிறான்; மனிதனுடைய ஆசை, அவன் அதிலிருக்கும் போது, மையமாகிறது; ஏனென்றால், அவன் அதன் சந்தோஷத்(3)திலும் வெளிச்சத்திலுமிருக்கிறான். இறந்த பிறகு, ஆண்டவரால் சுவர்க்கத்துக்கு உயர்த்தப்படுகிற சில மனிதர்களிருக்கிறார்கள்; ஏனென்றால், அவர்கள் நன்றாய் வாழ்ந்து, அப்படியிருந்தாலும், தங்கள் பாவங்கள் ஒன்றுமில்லாமல் அழுக்கில்லாமலும் தூய்மையாகவும் இருப்பதாகவும், ஆகையால் தாங்கள் குற்றம் சாட்டப்பட்ட நிலைமையில் இல்லை என்றும், ஓர் நம்பிக்கையைத் தங்களுடன் கொண்டுபோனார்கள். வெள்ளை உடுப்புகள் தீமைகளிலிருந்து சுத்தப்படுத்தப்பட ஓர் நிலைமையை காண்பிக்கிறபடியினால், தங்கள் நம்பிக்கையை அனுசரித்து, அவர்கள் முதலில் வெள்ளை உடுப்புகளால் உடுத்தப்படுகிறார்கள். ஆனால் பின்னிட்டு, உலகத்தில் போல, எல்லா தீமைகளிலுமிருந்து கழுவப்பட்டதுபோலவும், ஆகையினால் மற்றவர்களைப்போல் அவர்கள் இன்னமும் பாவிகள் அல்லவென்று தற்பெருமை சொல்லிக்கொள்ளவும் நினைக்க ஆரம்பிக்கிறார்கள்; அது, மனது உப்புதலிலிருந்தும், தங்களோடேயே ஒப்பிட்டு மற்றவர்களை அலக்ஷியம் செய்வதி

லிருந்தும் பிரிக்கமுடியாது; பிறகு, தங்களுடைய மனக்கற்பனையான நம்பிக்கையிலிருந்து நீக்கப்பட, அவர்கள் சுவர்க்கத்திலிருந்து வெளியே அனுப்பப்பட்டு, தாங்கள் உலகத்தில் செய்துகொண்ட தங்கள் தீமைகளுக்கு அனுப்பப்படுகிறார்கள்; அதே காலத்தில், தங்களுக்கு முன் தெரியாத பரம்பரையான தீமைகளில்கூட தாங்கள் இருப்பதாகக் காண்பிக்கப்படுகிறார்கள்: தங்களுடைய தீமைகள் தங்களிடமிருந்து பிரிக்கப்படாமல் நீக்கப்படுகிறதென்று மாத்திரமும், இவ்விதமாக தங்களிட மிருந்தே தாங்கள் அசுத்தமானவர்களென்றும், நிஜமாகவே தாங்கள் தீமையைத் தவிர வேறு ஒன்றுமில்லையென்றும், ஆண்டவரால் தீங்குகளிலிருந்து பிடிக்கப்பட்டு நன்மைகளில் வைக்கப்படுகிறார்களென்றும், இது தங்களிடமிருந்தேபோல் அவர்களுக்குத் தோன்றுகிறதென்றும், இவ்விதமாக ஒத்துக்கொள்ள செய்யப்பட்டபோது, ஆண்டவரால் அவர்கள் சுவர்க்கத்துக்கு மறுபடியும் உயர்த்தப்படுகிறார்கள். (4) இரண்டாவது: **மனிதனுடைய உயிரின் நிலைமை ஒரு நொடி நேரத்தில் மாற்றப்படக் கூடுமென்றும், இவ்விதமாக மனிதன் தீமையிலிருப்பதைவிட்டு நல்லவனுகலாமென்றும், அதனுல் நரகத்திலிருந்து வெளியே கொண்டுபோகப்பட்டு, நேராய் சுவர்க்கத்துக்கு மாற்றப்படக் கூடுமென்றும், இதுவும் ஆண்டவரின் ஆலசியமில்லாத இரக்கத்தினுல் செய்யப்படுமென்றும் நம்புதல் இக்காலத்தின் குற்றம்.** விசுவாசத்திலிருந்து தருமத்தைப் பிரித்து, மோக்ஷத்தை விசுவாசத்தில் மாத்திரம் வைக்கிறவர்கள், இந்த பிழையிலிருக்கிறார்கள்; ஏனென்றால், அந்த விசுவாசத்துக்குச் சேர்ந்த கேவல சிந்தனையும், வார்த்தைகளின் உச்சாரணமும் நம்பிக்கையுடனும் நிச்சயத்துடனும் செய்யப்பட்டால், 'குற்றமில்லை என்று தீர்ப்புசெய்து இரட்சிக்கின்றனவென்று அவர்கள் உத்தேசிக்கிறார்கள்; இதுகூட அநேகரால் தட்சணமே செய்யப்படுகிறதென்றும், முன்னிட்டு அல்லாமல் போனுலும், ஒரு மனிதன் இறக்கும் காலத்தில் செய்யப்படுகிறதென்றும் நினைக்கப்படுகிறது. இவ்விதமானவர்கள், மனிதனுடைய உயிரின் நிலைமை ஒருநொடிநேரத்தில் மாற்றப்படக்கூடு மென்பதையும், மனிதனுனவன் ஆலசியமில்லாத இரக்கத்தினுல் இரட்சிக்கப்படக்கூடு மென்பதையும் தவிர, வேறுவிதமாய் நினைக்கமுடி

யாது. ஆனால் ஆண்டவருடைய இரக்கம் தட்சணமே வரப்பட்டதல்ல என்பதும், மனிதனானவன் கெட்டவனாயிருப்பதைவிட்டு ஒரு நொடிநேரத்தில் நல்லவனாக முடியாதென்பதும், இளம்பிராயத்திலிருந்து முடிவுபரியந்தம் தெய்வபரிபாலனத்தின் இடைவிடாத தொழிற்பாட்டினால் தவிர, நரகத்திலிருந்து கொண்டுபோகப்பட்டு, சுவர்க்கத்துக்கு மாற்றப்படமாட்டானென்பதும், இந்த நூலின் கடைசிபாகத்தில் பார்க்கப்படலாம்.* தெய்வபரிபாலனத்தின் எல்லா சட்டங்களும், மனிதனுடைய சீர்படுதலையும், இவ்விதமாக அவனுடைய மோக்ஷத்தையும் கொடுக்கிறதாகவும், ஆகையால், பிறந்தது முதல் நரகத்துக்கு அடுத்ததாயிருக்கிற அவனுடைய நிலைமையை சுவர்க்கத்துக்கு அடுத்ததாயிருக்கிற எதிரிடையான நிலைமைக்குத் திருப்ப கோருகிறதாகவும், மனிதன் தீமையிலிருந்தும் அதன் சந்தோஷத்திலிருந்தும் பின்வாங்கி, நன்மையிலும் அதன் சந்தோஷத்திலும் பிரவேசிக்கிறதற்குத் தக்கபடி, இது படிப்படியாய் மாத்திரம் செய்யப்படக்கூடு மென்கிறதாகவும் மாத்திரம் (5) இங்கே நாம் சொல்லுவோம். மூன்றாவது: அப்படி நம்புகிறவர்களுக்கு தீமை என்னவென்றும், நன்மை என்னவென்றுமே ஒன்றும் தெரியாது. ஏனென்றால், தீமையானது தெய்வ ஒழுங்குக்கு எதிரிடையாய் செயல்படுதலினுடையவும் நினைத்தலினுடையவும் மோகத்தின் சந்தோஷம் என்றும், நன்மையானது தெய்வ ஒழுங்காக அனுசரித்து செயல்படுதலினுடையவும் நினைத்தலினுடையவும் ஆசையின் சந்தோஷம் என்றும், ஒவ்வொரு தனித்த தீமைக்குள்ளும் பிரவேசித்து அதை உண்டாக்குகிற அநேக ஆயிரங்கள் கணக்கான மோகங்கள் இருக்கின்றனவென்றும், அதே மாதிரி ஒவ்வொரு தனித்த நன்மைக்குள்ளும் பிரவேசித்து அதை உண்டாக்குகிற அநேக ஆயிரங்கள் கணக்கான ஆசைகள் இருக்கின்றன வென்றும், இந்த ஆயிரங்கள் கணக்கானவைகள் மனிதனுடைய அந்தரங்க பாகங்களில் அதேகாலத்தில் எல்லாம் மாற்றப்பட்டாலொழிய ஒன்று மாற்றப்பட முடியாதென்று சொல்லும்படி, அவ்வித ஒழுங்கிலும் சம்பந்தத்திலுமிருக்கிறதென்றும், அவர்களுக்குத் தெரியாது. இந்த சங்கதி தெரியாதவர்கள், தங்களுக்கு ஒரு தனித்த பொருளாகத்தோன்றுகிற தீமையானது இலகு

வாய் நீக்கப்பட்டு, ஒரு தனித்த பொருளாகக்கூடத் தோன்றுகிற நன்மையானது, அதற்குப்பதிலாக கொண்டுவரப்படக்கூடுமென்கிற நம்பிக்கை அல்லது அபிப்பிராயத்தை வைத்திருக்கலாம். இவர்களுக்குத் தீமை என்னவென்றும், நன்மை என்னவென்றும் தெரியாதபடியினால், இவர்கள் சடிதியான மோக்ஷமும், ஆலசியமில்லாத இரக்கமும் கொடுக்கப்படுகின்றன வென்கிற அபிப்பிராயத்தைக் கொள்ளவேண்டும்; ஆனால் அவைகள் முடியாதென்பது, இந்த (6) நூலின் கடைசிபகுதியில் அறிந்துக்கொள்ளப் படலாம். நான்காவது: **தட்சணமான இரட்சிப்பும், ஆலசியமில்லாத இரக்கமும் உண்டென்று நம்புகிறவர்களுக்கு சித்தத்துக்குச் சேர்ந்த ஆசைகள் மனதின் சுத்தமாய் அங்கசம்பந்தமான பொருள்களின் நிலைமைகளுடைய மாறுதல்களென்றும், புத்திக்குச்சேர்ந்த சிந்தனைகள் அந்த பொருள்களின் உருவத்தின் மாறுதல்களும் பேதங்களுமென்றும், ஞாபகம் இந்த மாறுதல்களுடையவும் பேதங்களுடையவும் ஸ்திரமான நிலைமை என்றும் தெரியாது.** ஆசைகளும் சிந்தனைகளும், பதார்த்தங்களாயிருக்கிற பொருள்களிலும், அவைகளின் உருவங்களிலும் தவிர, கொடுக்கப்படுகிறதில்லை என்கிற வாக்குமூலத்தை யார் ஏற்றுக் கொள்ளுகிறதில்லை? அவைகள் பொருள்களாலும் உருவங்களாலும் நிறைந்த மூளையிலிருப்பதினால், உருவங்கள் சுத்தமாய் அங்கசம்பந்தமானதென்று சொல்லப்படுகிறது. நாக்காக இருக்கிற அதன் உருவத்திலிருந்து வேறாய் உருசியும், காதாயிருக்கிற அதன் உருவத்திற்கு வேறாய் கேட்டலும், கண்ணாயிருக்கிற அதன் உருவத்திலிருந்து வேறாய் பார்வையும், கொடுக்கப்படாததைப்போல, பொருளாயுள்ள உருவத்திலிருந்து வேறாய் சிந்தனை கொடுக்கப்படாதிருக்கும்போது, ஆசைகளும் சிந்தனைகளும், கெட்டியான பொருள்களிலிருக்கிறதில்லை யென்றும், காற்றிலும் ஆகாய நுண்ணணுவிலும் தோன்றுகிற பிரதிமைகளைப்போல், சூட்டினாலும் வெளிச்சத்தினாலும் மாற்றப்பட்ட புகைகளென்றும் நினைக்கும் சிலருடைய மனோராச்சியங்களைப்பார்த்து பகுத்தறிவுடைய எவனும் சிரிக்காதிருக்கமாட்டான். மூளையை பரிசோதித்துப்பார், அதேமாதிரி கணக்கற்ற பொருள்களும் நார்களும் இருக்கிறதென்றும், அங்கக்கிரமத்தோடு நிர்

மிக்கப்படாதது ஒன்றும் அங்கே யில்லை யென்றும், நீ அறிந்து (7)கொள்வாய். இந்த கண்ணாரக்கண்ட ரூபகாரத்தைத்தவிர வேறு எது வேண்டியிருக்கிறது? ஆனால், அங்கே ஆசை என்பது என்ன? சிந்தனை என்பது என்ன? என்று கேட்கப்படுகிறது. சரீரத்தில் பொதுவாகவும் சிறப்பாகவும் உள்ள எல்லா பொருள்களிலிருந்தும் அது கிரகிக்கப்படலாம்; ஒவ்வொன்றும் அதன் இடத்தில் ஸ்திரப்படுத்தப்பட்ட அநேக ஆந்திரீகங்கள் அங்கேயிருக்கின்றன; அவைகள் தங்கள் தொழில்களை நிலைமையினுடையவும் உருவத்தினுடையவும் மாறுதல்களாலும் பேதங்களாலும் செய்கின்றன. அவைகள் தங்களுடைய சொந்த தொழில்களில் உடன் படுகின்றனவென்பது தெரிந்திருக்கிறது; இரைப்பை தனக்கு சொந்தமானதிலும், குடல்கள் தங்களுக்கு சொந்தமானவைகளிலும், மூத்திர பிண்டங்கள் தங்களுடையவைகளிலும், கல்லீரலும் கணையமும், மண்ணீரலும் தங்களுடையவைகளிலும், இருதயமும் சுவாசாசயமும் தங்களுடையவைகளிலும், தங்கள் சொந்த தொழில்களில் உடன் படுகின்றன; இவைகளெல்லாம் உள்ளேயிருந்து தங்களுடைய வேலைகளுக்கு ஏவப்படுகின்றன; உள்ளேயிருந்து ஏவப்படுதல் என்பது நிலைமையினுடையவும் உருவத்தினுடையவும் மாறுதல்களாலும் பேதங்களாலும் நடக்கிறது. மனதின் சுத்தமாய் அங்க சம்பந்தான பொருள்களின் தொழிற்பாடுகள், சரீரத்தின் அங்க சம்பந்தமான பொருள்களின் தொழிற்பாடுகள் ஸ்தூலமானதென்பதும், மனதைச்சேர்ந்தவைகள் சூக்குமமானதென்பதும், அந்த இரண்டும் அன்னுவயங்களால் ஒன்றாகிறதென்பதுமாகிய வித்தியாசத்துடன், இவைகளைப்போலிருக்கின்றன வென்று, இதிலிருந்து விசதமாகலாம். (8)ஆசைகளாகவும் சிந்தனைகளாகவுமிருக்கிற மனதின் அங்க சம்பந்தமான பொருள்களின் நிலைமையினுடையவும், உருவத்தினுடையவும், மாறுதல்களினுடையவும், பேதங்களுடையவும் சுபாவம் கண்ணுக்கு வெளியில் காட்டமுடியாது; அப்படியிருந்தாலும், பேசுவதிலும் பாடுவதிலும் சுவாசாசயத்தின் நிலைமையினுடைய மாறுதல்களிலிருந்தும், பேதங்களிலிருந்தும், ஒரு கண்ணாடியில் பார்ப்பதுபோல அவைகளைப் பார்க்கலாம். ஒரு அன்னுவயம்கூட

பிருக்கிறது; ஏனென்றால், பேசுவதிலும் பாடுவதிலும் குரல் சுத்தமும், பேச்சின் வார்த்தைகளாயிருக்கிறதும், பாடுதலின் ஸ்வர பேதங்களாயிருக்கிறதுமான அதன் தெளிவொலியும், சுவாசாசயங்களால் உண்டாக்கப்படுகின்றன; சத்தமானது ஆசையுடன் அன்னுவயப்படுகிறது, பேச்சு சிந்தனையுடன் அன்னுவயப்படுகிறது. அவைகள் இவைகளிலிருந்துகூட நிர்மாணிக்கப்படுகின்றன; சுவாசாசயங்களிலிருக்கும் அங்க சம்பந்தமான பொருள்களின் நிலைமையிலும் உருவத்திலும் உண்டாகும் மாறுதல்களாலும் பேதங்களாலும், சுவாசாசயத்திலிருந்து சுவாசக்குழல் மூலமாய் குரல்வளையிலும், தொண்டைக்குழியிலும், பிறகு நாக்கிலும், முடிவாய் உதடுகளிலும் இது செய்யப்படுகின்றன. சத்தத்தின் நிலைமையினுடையவும் உருவத்தினுடையவும் முதல் மாறுதல்களும் பேதங்களும், சுவாசாசயங்களில் முதலில் சம்பவிக்கிறது; இரண்டாவது, சுவாசக்குழலிலும் குரல்வளையிலும், மூன்றாவது, அதன் துவாரங்களின் பலவித வெடிப்புகளால் தொண்டைக் குழியிலும், நான்காவது, மேல்வாயிக்கும் பற்களுக்கும் அதன் பல சேர்வைகளால் நாக்கிலும், ஐந்தாவது, அவைகளின் பலவித உருவங்களால் உதடுகளிலும் சம்பவிக்கின்றன. அங்க சம்பந்தமான உருவங்களின் நிலைமையின் கேவல மாறுதல்களும் பேதங்களும் இடைவிடாது செய்யப்பட்டால், பேச்சாகவும் பாடுதலாகவுமிருக்கிற சத்தங்களையும் அவைகளின் தெளிவொலிகளையும் உண்டாக்குகின்றன வென்று, இவைகளிலிருந்து விசதமாகும். சத்தமும் பேச்சும், மனதின் ஆசைகளிலிருந்தும் சிந்தனைகளிலிருந்தும் உண்டாகிறபடியினால், ஏனென்றால் அவைகள் அவைகளிலிருந்து வருகிறபடியினாலும், அவைகள் இல்லாமல் இல்லாதபடியினால் சித்தத்தின் ஆசைகள், மனதின் சுத்தமாய் அங்க சம்பந்தமான பொருள்களின் நிலைமையினுடைய மாறுதல்களாயும் பேதங்களாயுமிருக்கின்றனவென்றும், புத்தியின் சிந்தனைகள் சுவாசாசயங்களிலிருப்பதுபோல, அந்தப்பொருள்களின் உருவத்தினுடைய மாறுதல்களும் பேதங்களுமாயிருக்கின்றனவென்றும் (9) வெளிப்படையாயிருக்கிறது. ஆசைகளும் சிந்தனைகளும் மனதினுடைய உருவங்களின் நிலைமையினுடைய கேவல மாறுதல்களா

யிருக்கிறபடியினால், ஞாபகம் என்பது இந்த மாறுதல்களின் ஸ்திரமான நிலைமையைத்தவிர வேறு ஒன்றுமில்லை என்றுஏற்படுகிறது. ஏனென்றால், அங்க சம்பந்தமான பொருள்களில் நிலைமையின் எல்லாமாறுதல்களும் பேதங்களும் ஒரு தடவை மாமூலான பிறகு, அவைகள் ஸ்திரமாயிருக்கின்றன. இவ்விதமாக சுவாசாசயங்கள் சுவாசக்குழலில் நானாவித சத்தங்களை விளைவிக்கவும், அதனுடன் தொண்டைக்குழியில் அவைகளை விகற்பிக்கவும், நாக்கினால் அவைகளை உச்சரிக்கவும், வாயில் அவைகளை வேறாகப்பிரிக்கவும், பழக்கப்படுத்தப்படுகின்றன; இந்த அங்க சம்பந்தமான பாகங்கள், இந்த மாறுதல்களுக்கு ஒருதரம் பழக்கப்படுத்தப்பட்டால், இவைகள் அவைகளில் இருக்கின்றன. மேலும் இவைகள் மறுபடியும் உண்டாக்கப்படலாம். அந்த மாறுதல்களும் பேதங்களும், சரீரத்திலிருக்கும் அங்கங்களைவிட மனதுக்குச் சேர்ந்த அங்கங்களில் எல்லையின்றி அதிக பூரணமாயிருக்கின்றன வென்பது, எல்லா சம்பூர்ணங்களும் அந்தஸ்துகளுக்கு தக்கபடியும் அவைகளை அனுசரித்தும்,அதிகரித்து ஏறுகின்றனவென்று காண்பிக்கப்பட்ட **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் (பி. 199-204) சொன்னதிலிருந்து விசதமாகிறது. இந்த விஷயங்களைப்பற்றி கீழே அதிகமாய் பார்க்கலாம் (பி. 319).

280. மன்னிக்கப்பட்டபோது பாவங்கள் அம்மாதிரியே நீக்கப்படுகிறதென்பதுகூட, இக்காலத்து தப்பிதமானகருத்து. மனம் திரும்புதலினால் தங்களிடமேயிருந்து பாவங்களை நீக்காதிருந்தாலும், நற்கருணையினால் அவைகள் தங்களிடமிருந்து நீக்கப்பட்டதாக நம்புகிறவர்கள், இந்த பிழையிலிருக்கிறார்கள்; விசுவாசத்தினால் மாத்திரம் தாங்கள் இரட்சிக்கப்படுவதாக நம்புகிறவர்கள்கூட அதிலிருக்கிறார்கள்; அதனுடன் உரோமன் காதொலிக் ஏற்பாடுகளினால், இரட்சிக்கப்படுவதாக நம்புகிறவர்களும் அதிலிருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் தட்சணமான இரக்கமும், ஆலசியமில்லாத இரட்சிப்பும் உண்டென்று நம்புகிறார்கள். ஆனால் இது தலைகீழாக்கப்படும்போது, பாவங்கள் நீக்கப்பட்டபோது, அவைகள் மன்னிக்கக்கூடப்படுகிறதென்கிற ஒரு உண்மையாகிறது; ஏனென்

ருல், மனம் திரும்புதல் மன்னிப்புக்கு முன்வருகிறது, மனம் திரும்புதல் அல்லாமல் மன்னிப்புகிடையாது. ஆகையினுல், ஆண்டவர் பாவமன்னிப்புக்காக மனம் திரும்புதலைப்பற்றி பிரசங்கிக்க தன் சீஷர்களை கட்டளையிட்டார் (லூக்கா. XXIV. 47); யோவான் பாவ மன்னிப்புக்காக மனந்திரும்புதலின் ஞானஸ்நானத்தை பிரசங்கித்தார் (லூக் III. 3). ஆண்டவர் எல்லாருடைய பாவங்களையும் மன்னிக்கிருர்; அவர் குற்றம்சாட்டி பழிசுமத்தமாட்டார்; அப்படியிருந்தாலும், அவருடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அநுசரித்து தவிர, அவர் அவைகளை நீக்கமுடியாது; பேதுரு, என் சகோதரன் எனக்கு விரோதமாய் குற்றம் செய்துவந்தால் நான் எத்தனைதரம் மன்னிக்கவேண்டும், ஏழுதரமட்டுமோ என்று கேட்டபோது, ஆண்டவர், ஏழுதரமாத்திரமல்ல, ஏழெழுபது தரம் மட்டும் மன்னிக்கவேண்டுமென்று அவனுக்குச் சொன்னபடியினுல், (மத்தே, XVIII. 21, 22) இரக்கமாகவே இருக்கிற ஆண்டவர் எதை மன்னிக்கமாட்டார்?

281. IV. **இவ்விதமாக தீமைக்குஇடங்கொடுத்தல், மோக்ஷம் உண்டாகும் அபிப்பிராயத்தின் பொருட்டாயிருக்கிறது.** மனிதனுனவன் தான் நினைப்பதும் இச்சிப்பதுமான எதையும் சொல்லவும் செய்யவும், முழு சுதந்தரத்திலில்லாமல், நினைக்கவும் இச்சிக்கவும் மாத்திரம் முழு சுதந்தரத்திலிருக்கிருனென்று தெரிந்திருக்கிறது. ஏனென்ருல், அவன் ஒரு நாஸ்திகனைப்போல நினைக்கவும், கடவுளை மறுக்கவும், வேதத்தினுடையவும் திருச்சபையினுடையவும் பரிசுத்தப்பொருள்களை நிந்தனைசெய்யவும் கூடும்; நிஜமாகவே, வார்த்தையினுலும் செய்கையினுலும் கூட, அவைகளை முழு நிர்மூலமாகக் கூட அழிக்க அவன் விரும்பலாம்; ஆனுல் தேசாசாரமான சட்டங்களும், சன்மார்க்கசட்டங்களும், திருச்சபைசட்டங்களும் இதை தடுக்கின்றன; ஆகையினுல் அவன் நினைப்பதினுலும், இச்சிப்பதினுலும், உத்தேசிப்பதினுலும், அப்படியிருந்தும் செய்யாமனும் அந்த பக்தியில்லாததும் துஷ்டத்தனமுள்ளதுமான விஷயங்களை உள்ளுக்குள்ளாய் போஷிக்கிருன். நாஸ்திகனுக இல்லாத ஒரு மனிதன், மோசத்துக்கும், விரகதாபத்துக்கும், பழி

வாங்குதலுக்கும், இன்னும் இதர பைத்தியங்களுக்கும் சேர்ந்த விஷயங்களைப்போன்ற, தீமையைச் சேர்ந்த மற்ற விஷயங்களை நினைக்கக்கூட முழு சுதந்தரத்திலிருக்கிருன்; இதைக்கூட அவன் சிலசமயங்களில் செய்கிருன். மனிதனுக்கு முழு சுதந்தர மிருந்தாலொழிய அவன் இரட்சிக்கப்படாமல் போவதுமட்டுமல்லாமல்,
(2) முழுமையும் அழிந்துபோவானென்று யார் நம்பக்கூடும்? இப்பொழுது காரணம் கேட்கப்படும்:—ஒவ்வொரு மனிதனும் பிறந்ததுமுதல் பலவித தீமைகளிலிருக்கிருன்; இந்த தீமைகள் அவனுடைய சித்தத்திலிருக்கின்றன; சித்தத்தில் இருக்கும் விஷயங்கள் பேரில் அன்பு பாராட்டப்படுகின்றன; ஏனென்ருல், ஒரு மனிதன் அந்தரங்கத்திலிருந்து இச்சிப்பதை நேசிக்கிருன்; அவன் அன்புபாராட்டுவதை இச்சிக்கிருன்; சித்தத்தின் அன்பு புத்தியில் பாய்ந்து, அங்கே அதன் சந்தோஷத்தை உணரும்படி செய்கிறது; அதிலிருந்து அது சிந்தனைகளுக்குள்ளும் அதனுடன் உட்குறிப்புகளுள்ளும் வருகிறது. ஆகையினுல், மனிதனுனவன் தன்னில் பாம்பரையாய் நடப்பட்டிருக்கிற தன்னுடைய சித்தத்தின் அன்பிற்கு தக்கபடி நினைக்க இடம் கொடுக்கப்பட்டாலொழிய, அந்த அன்பானது உள்ளே மூடப்பட்டிருக்கும், எந்தவிதத்திலும் மனிதனுடைய பார்வைக்கு வராது; பார்வைக்கு தெரியாத தீமையினிடத்து அன்பு, ஒளிப்பிடத்திலிருக்கும் விரோதியைப்போலவும், ஒரு புண்ணிலிருக்கும் கெட்ட இரத்தம்போலவும், இரத்தத்திலிருக்கும் விஷம்போலவும், அல்லது மார்பிலிருக்கும் அழுகுதலைப்போலவுமிருக்கிறது. இவைகள் உள்ளே மூடிவைக்கப்பட்டால், மரணத்தை உண்டாக்கும். ஆனுல் நிஜமாகவே, ஒரு மனிதனுனவன், அவனுடைய உயிரின் அன்பினுடைய தீமைகளை, உட்குறிப்பு விஷயத்தில் அவ்வளவு தூரம் கூட நினைக்க விடப்பட்டால், வியாதிகள் ஸ்தூல சாதனங்களால் சௌக்கியப்படுத்தப்படு
(3) வது போல, அவைகள் சூக்கும சாதனங்களால் சொஸ்தமாக்கப்படுகின்றன. ஒரு மனிதனுனவன் அவனுடைய உயிரின் அன்பினுடைய சந்தோஷங்களுக்கு தக்கபடி நினைக்கவிடப்படாவிட்டால், என்ன குணமுடையவனுவான் என்பது, இப்பொழுது விவரிக்கப்படவேண்டும். அவன் இன்னமும் ஒரு மனிதனுக

யிருக்கமாட்டான்; மானிடத்தன்மையே அமைந்திருக்கிற சுவேட்சை என்றும், பகுத்தறிவுடைமை என்றும் சொல்லப்பட்ட தன்னுடைய இரண்டு மனோசக்திகளை அவன் இழந்துவிடுவான்; அந்த தீமைகளின் சந்தோஷங்கள், கதவை திறக்கும்படியாக அவ்வளவு தூரம் கூட அவன் மனதின் அந்தரங்க பாகங்களில் குடியிருக்கும்; 'அப்பொழுது அவன் அவர்களைப்போல பேசுவதையும் செய்வதையும் விட வேறுவிதமாய் செய்ய அவனுக்கு சக்தியிருக்காது' இவ்விதமாக தானே மாத்திரம் பைத்தியக்காரனா யிருப்பதல்லாமல், உலகத்தின் முன்பாகக்கூட அப்படியிருப்பான்; கடைசியில் தன்னுடைய நிருவாணத்தை மூடக்கூட அவனுக்கு புத்தியிருக்காது. ஆனால், அவன் அவ்விதம் ஆகாதபடி, தன்னுடைய பரம்பரையான தீமைகளை நினைக்கவும் இச்சிக்கவும் நிஜமாகவே விடப்படுகிறான், ஆனால் அவைகளை பேசவும் செய்யவும் விடப்படுகிறதில்லை; இதற்குள்ளே, அவன் அவனுடைய சிந்தனையில் கூட பிரவேசித்து, இந்த பைத்தியங்களை நீக்குகிற தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதுமாகிய விஷயங்களை கற்றுக்கொள்ளுகிறான்; இந்த வழிவகைகளால் அவன் ஆண்டவரால் சொஸ்தப்படுத்தப் படுகிறான், அப்படியிருந்தாலும் பைத்தியங்களை எதிர்க்க சக்தியுள்ளவனா யிருக்க, அவன் கடவுளை ஒத்துக்கொண்டு அவருடைய உதவிக்கு பிரார்த்தித்தாலொழிய, கதவை பாதுகாக்க தெரிந்துகொள்வதைவிட அதிகமாய் சௌக்கியப்படுத்தப் படுகிறதில்லை; அவன் அவைகளை அப்பொழுது எவ்வளவு எதிர்க்கிறானோ அவ்வளவு, அவன் அவைகளை தன்னுடைய உட்குறிப்புகளில் சேர்க்கிறதில்லை, கடைசியில் அவனுடைய
(4) சிந்தனைகளில் சேர்க்கிறதில்லை. ஆகையினால், மனிதனுடைய உயிரின் அன்பு அது ஒளித்திருக்கும் இடங்களிலிருந்து அவனுடைய புத்தியின் வெளிச்சத்துக்கு வெளியே வரவேண்டுமென்கிற நோக்கத்தின் பொருட்டு, தான் பிரியங்கொள்ளுகிறபடி நினைத்தல், மனிதனுடைய சுதந்தரத்தில் இருக்கிறபடியினாலும், தன்னுடைய தீமையைப்பற்றி அவன் வேறுவிதமாய் யாதொன்றையும் தெரிந்துகொள்ளமாட்டா னாகையாலும், இவ்விதமாக அதை தள்ள தெரிந்துகொள்ளமாட்டானாகையாலும், தன்னில் பூர்வஸ்தி

திக்கு கொண்டுவரப்பட எந்த இடமும் இல்லாதபடிக்கும், பெற்றோர் தீமை சந்ததிக்கு மாற்றப்படுகிறபடியினால், அவன் குழந்தைகளை பெற்றால்அவன் குழந்தைகளில் எந்த இடமும் இல்லாதபடிக்கும், அவ்வளவு பரிமாணம் அவனில் அது அதிகரிக்குமென்று பின் தொடருகிறது. ஆனால் ஆண்டவர் இது அப்படி யில்லாதபடி முன்னறிந்து ஏற்பாடு செய்துவைக்கிறார்.

282. ஒவ்வொரு மனிதனிலும் யிருக்கும் புத்தியை சொஸ்தப்படுத்தி, அவ்விதமாய் தீமையையன்றி, நன்மையைப்பற்றி நினைக்கச்செய்யவும், இதுவும், பலவித பயங்களினாலும், அற்புதங்களினாலும், இறந்துபோனவர்களுடன் பேசுவதினாலும், மனோ தோற்றங்களினாலும், கனவுகளினாலும், அப்படி செய்யவும் ஆண்டவரால் முடியும். ஆனால், புத்தியைமாத்திரம் குணப்படுத்தல் என்பது மனிதனை புறம்பாய் குணப்படுத்தலாகும்; ஏனென்றால், புத்தியும் அதன் சிந்தனையும் மனிதனுடைய உயிரின் புறம்பானதா யிருக்கிறது, சித்தமும் அதன் ஆசையும், அவனுடைய உயிரின் அந்தரங்கமானதா யிருக்கிறது; ஆகையினால், புத்தியை மட்டும் குணப்படுத்துதல், உள்ளே மூடப்பட்டு, வெளியேபோகாமல் முழுமையும் தடுக்கப்பட்டிருக்கிற உள்ளிருக்கும் அபகாரபுத்தி முதலில் சமீபத்திலிருக்கும் பாகங்களையும், பிறகு தூரத்திலிருக்கும் முழு பாகங்களையும், முழுமையும் அழுகிப்போகிறவரையில் கூட அழிக்கிற உபசாந்தி குணப்படுதலாயிருக்கும். சித்தம் தானே முதலில் குணப்படுத்தப்பட வேண்டும்; அதுவும், புத்தியின் உட்பெருக்கு அதற்குள் இல்லாதபடியினால், அவ்விதத்தில் அல்லாமல், புத்தியினிடமிருந்து வரும் உபதேசத்தாலும் போதனையாலும், அப்படி செய்யப்படவேண்டும். புத்திமாத்திரம் குணப்படுத்தப்பட்டால், எவனுடைய நாசித்துவாரங்கள் சமீபத்திலும் அவைகள் கொண்டுவரப்படாதபடி, பிணத்திலிருந்து அவ்வளவு சுமால துர்க்கந்தத்தை சீக்கிரம் இழுக்கக்கூடிய சுகந்த திரவியங்களாலும் ரோசாப்பூக்களினாலும் அழுகிப்போகாமல் வைக்கப்பட்ட அல்லது மூடப்பட்ட இறந்துபோன சரீரத்தைப்போல் மனிதனானவன் ஆய்விடுவான். சித்தத்தின் தீமையான அன்பு தடைசெய்யப்

பட்டால், புத்தியிலுள்ள சுவர்க்கத்துக்கடுத்த உண்மைகள் விஷயத்திலும் அம்மாதிரிதான் இருக்கும்.

283. தீமைகளை உத்தேசிக்கிற அளவுகூட நினைக்க ஏன் மனிதன் விடப்படுகிருனென்பதற்கு காரணம், முன் சொல்லியபடி, தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதுமாகிய பொருள்களால் நீக்கப்படவேண்டுமென்பதா யிருக்கிறது; ஒரு தீமையானது, நியாயமானதற்கும், தருமமானதற்கும், விரோதமா யிருக்கிறதென்றும், கௌரவமுடையதற்கும் யுக்தமானதற்கும், நன்மைக்கும் உண்மைக்கும் விரோதமாயிருக்கிறதென்றும், ஆகையினுல், அமைதிக்கும், சந்தோஷத்துக்கும், உயிரின் வரங்களுக்கும் விரோதமா யிருக்கிறதென்றும், அவன் நினைக்கும்போது அது செய்யப்படுகிறது. இந்த மூன்றுபொருள்களால், ஆண்டவர் மனிதனுடைய சித்தத்தின் ஆசையை குணப்படுத்துகிருர்; நிஜமாகவே, முதலில், பயங்களினுலும், பின்னிட்டு அன்புகளினுலும் அப்படி செய்கிருர். ஆனுல் அவ்வளவு தூரம்கூட தீமைகள் மனிதனிலிருந்து பிரிக்கப்பட்டு எறியப்படுகிறதில்லை, ஆனுல் பக்கங்களுக்குமாத்திரம் நீக்கப்பட்டு தூரமாய் அனுப்பப்படுகின்றன; அவர்கள் அங்கேயிருக்கும்போதும், நன்மை மத்தியிலிருக்கும்போதும், தீமைகள் தோன்றுகிறதில்லை; ஏனென்ருல், மத்தியிலிருப்பது ஏதாகிலும், நேராய் பார்வையிலிருந்து, பார்க்கப்பட்டு அறிந்துகொள்ளப் படுகிறது. ஆனுல், நன்மை மத்தியிலிருந்தபோதிலும்,பக்கங்களிலிருக்கிற தீமைகள் கீழே அல்லது வெளியே சென்ருலொழிய, மனிதனுனவன் அதனுல் நன்மையிலிருக்கிறதில்லை; அவைகள் மேலே அல்லது உள்ளுக்குள்ளாய் பார்த்தால், அவைகள் நீக்கப்படவில்லை; ஏனென்ருல், மத்திக்கு திரும்ப அவைகள் இன்னும் போராடுகின்றன. மனிதனுனவன் தன்னுடைய தீமைகளை பாவங்களாக நீக்கும்போது, அவைகள் கீழே அல்லது வெளியே போகப் பார்க்கின்றன, அவன் அவைகளை துவேஷிக்கும்போது இன்னும் அதிகமாய் அப்படி செய்கின்றன; ஏனென்ருல், அவன் அப்பொழுதுஅவைகளை தகாதென்றுதள்ளி நரகத்துக்கு சமர்ப்பித்து அவ்விடத்தைப் பார்க்கச் செய்கிருன்.

284. மனிதனுடைய புத்தியானது, நன்மை தீமை இரண்டையும், உண்மை பொய் இரண்டையும் ஏற்பதாயிருக்கிறது; ஆனால், மனிதனுடைய சித்தம் தானே அப்படியில்லை; இது, தீமையிலாவது நன்மையிலாவதுயிருக்கவேண்டியிருக்கிறது; அது இரண்டிலுமிருக்காது; ஏனென்றால் சித்தமானது மனிதனாகவேயிருக்கிறது, அவனுடைய உயிரின் அன்பு அங்கேயிருக்கிறது. ஆயினும், புத்தியில், நன்மையும் தீமையும் உள்ளானதும் புறம்பானதும்போல பிரிந்திருக்கின்றன; ஆகையினால் மனிதனானவன், அந்தரங்கமாய் தீமையிலும், புறம்பாய் நன்மையிலும் இருக்கக்கூடும்; அப்படியிருந்தாலும், ஒருமனிதன் சீர்படுத்தப்படும்போது, நன்மையும் தீமையும் ஒருமிக்க கொண்டுவரப்படுகின்றன, அப்பொழுது ஒரு விரோதமும் சண்டையும் உண்டாகின்றன; அது உக்கிரமானதாயிருந்தால் சோதனை என்று சொல்லப்படுகிறது; ஆனால், உக்கிரமானதாயில்லாவிட்டால், திராட்சரசமது அல்லது அதிக வெறி உண்டாக்கும் சாராயத்தினுடைய புளித்துப் பொங்குதல்போலவும் இருக்கிறது. அப்பொழுது நன்மை வெற்றியடைந்தால், தீமையானது அதன் பொய்யுடன் தாரதம்மியம் பார்க்கையில் வண்டல்கள் ஒரு பாத்திரத்தின் அடியில் விழுவதுபோல், பக்கங்களுக்கு நீக்கப்படுகின்றன; நன்மையானது புளித்து பொங்கினபிறகு உதாரமான திராட்சரசமது போலவும் தெளிந்த சக்தியுள்ள சாராயம் போலவுமாகிறது. ஆனால் தீமைஜெயித்தால், அப்பொழுது நன்மையானது அதன் உண்மையுடன் பக்கங்களுக்கு நீக்கப்பட்டு, புளித்துபொங்காத திராட்சமதுவைப் போலவும், சக்தியுள்ள சாராயத்தைப்போலவும், கலங்கலானதாகவும் உபத்திரவகரமானதாகவுமாகிறது. வேதத்தில் புளித்தமாவென்பது, தீமையின் பொய்மை கருதுகிறபடியினால், புளித்து பொங்குதலுக்கு உவமானம் காட்டப்பட்டது (ஓசியா. VII. 4; லூக்கா XII. 1 மற்றஇடங்களிலும்).

---

**தெய்வபரிபாலனம் கெட்டவர்களோடும் நல்லவர்களோடும் சமமாயிருக்கிறது.**

285. நல்லவனுனும் கெட்டவனுனும், ஒவ்வொருமனிதனிலும், ஒன்று புத்தியாகிறதும், மற்றது சித்தமாகிற இரண்டு மனோசக்திகளிருக்கின்றன. புத்தியை உருவாக்குகிற மனோசக்தி, அவன் அறிந்துகொண்டு நினைக்க சக்தியுள்ளவனுயிருக்கிருனென்பதாயிருக்கிறது; ஆகையினுல், இந்த மனோசக்தி பகுத்தறிவுடைமையென்று சொல்லப்படுகிறது. சித்தத்தை உருவாக்குகிற மனோசக்தி, அவன் அப்படி சுவேச்சையாய் செய்யவும் அதாவது,நினைக்கவும் அதிலிருந்துகூட யுக்திக்கும் அல்லது பகுத்தறிவுடைமைக்கும், இது எதிரிடையாயில்லாத பட்சத்தில் பேசவும் செய்ல்படவும், சக்தியுள்ளவனு யிருக்கிருனென்பதா யிருக்கிறது; ஏனென்ருல்,சுவேச்சையாய் நடத்தல் என்பது,தான் இச்சிக்கும்போதெல்லாம், செயல்படுதலும், தான் இச்சிக்கிறதற்கு தக்கபடி செயல்படுதலுமாயிருக்கிறது. இந்த இரண்டு மனோசக்திகளும், மனிதன் நினைத்துசெய்யும், பொதுவாயும் சிறப்பாயும் எல்லாபொருள்களிலும், முதலிலிருந்து கடைசிவரையில் சாசுவிதமாகவும் தொடர்ச்சியாகவுமிருப்பதினுலும், மனிதனிடத்தில் தன்னிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து அவனிடத்தில் இருக்கிறபடியினுலும், அவைகளிலிருக்கும்போது ஆண்டவரின் சந்நிதி, தனித்த நுண்ணிய பொருள்களிலும் கூடவும், நிஜமாகவே மனிதனுடைய புத்தியினுடையவும் சிந்தனையினுடையவும், அதனுடன் அவனுடைய சித்தத்தினுடையவும் ஆசையினுடையவும், அதிலிருந்து அவனுடைய பேச்சினுடையவும் செய்கையினுடையவும் மிகவும் நுண்ணிய ஒவ்வொரு தனித்தபொருளிலும் இருப்பதாக ஏற்படுகிறது. எந்த ஒரு தனித்த நுண்ணிய பொருளிலிருந்தாவது, இந்த மனோசக்திகளை நீர் நீக்கினுல், நீர் அதை ஒரு மனிதனைப்போல, நினைக்
(2) கவும் பேசவும் முடியாது. மனிதனனவன் இந்த இரண்டு மனோசக்திகள் மூலமாய் நினைக்கவும் பேசவும், தேசாசாரமானதும் சன்மார்க்கமானது மட்டுமல்லாமல், பரமார்த்தமானதுமாகிய உண்மைகளை அறிந்து கொள்ளவும், நன்மைகளைப்பார்க்கவும்,

அதனுடன் சீர்படுத்தப்படவும் குணப்படுத்தப்படவும், சுருங்கச் சொல்லில், அவைகளின் மூலமாய் ஆண்டவருடன் சேர்க்கப்படக் கூடவும், அதனால் எக்காலமும் உயிரோடிருக்கவும், சக்தியுள்ளவனாயிருக்கிறானென்றும், முன்னமே திரளாய் காண்பிக்கப்பட்டிருக்கிறது; அதனுடன் நல்லவர்கள் மாத்திரமல்ல, கெட்டவர்களும் கூட, இந்த இரண்டு மனோசக்திகளை உடைத்தாயிருக்கிறார்களென்றும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த மனோசக்திகள் மனிதனில் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், மனிதனுக்கு தனது சொந்தமாக பிரத்தியேகமாக வைக்கப்படாதபடியினாலும்,— ஏனென்றால், தெய்வமானது தனது சொந்தமாக மனிதனுக்கு உரித்தாக்கப்படமுடியாமல், அவனுடன் சேர்க்கப்பட்டும், அதனால் அவனுடைய சொந்தமாக தோன்றக்கூடும்,— மனிதனிடத்தில் இந்த தெய்வமானது அவனுடைய, மிகவும் நுண்ணிய ஒவ்வொரு பொருளிலுமிருக்கிறபடியினாலும், ஆண்டவர் நல்லவனைப் போல கெட்டவனிடத்திலுமிருக்கிற ஒவ்வொரு நுண்ணிய தனித்த பொருளிலும் அரசாட்சி செய்கிறாரென்று ஏற்படுகிறது; ஆண்டவருடைய அரசியல் என்பது தெய்வபரிபாலனமென்று சொல்லப்பட்டதாயிருக்கிறது.

286. மனிதன் சுதந்திரத்திலிருந்து விவேகத்தை அனுசரித்து, அதாவது, சுதந்தரமென்றும் பகுத்தறிவுடைமையென்றும் சொல்லப்பட்ட இரண்டு மனோசக்திகளிலிருந்தும் செயல்படலாமென்பது, தெய்வபரிபாலனத்தின் ஒரு சட்டமாகையினாலும், ஒரு மனிதன் செய்வது தன்னிடமே இருந்துவருவதுபோல், ஆகையினால் தன்னுடைய சொந்தமாகத் தோன்றுகிறதென்பதும் தெய்வபரிபாலனத்தின் ஓர் விதியானபடியினாலும், அதனுடன் மனிதன் தீமைகளிலிருந்து வழிகாட்டப்பட, அவைகளுக்கு இடம் கொடுக்கப்படவேண்டுமென்பதும் ஓர் விதியானபடியினாலும், மனிதன் அந்த மனோசக்திகளை துர்வினியோகப்படுத்தி, விவேகத்தை அனுசரித்த சுதந்தரத்திலிருந்து தனக்கு இஷ்டமான எதையும் ஸ்திரப்படுத்தலாமென்று ஏற்படுகிறது; ஏனென்றால், தான் இச்சிக்கும் எது ஒன்றும் தானே விவேகத்தை அனுசரித்து

இருந்தாலும் இல்லாவிட்டாலும், அதை விவேகத்தை அனுசரித்த தாகச் செய்யக்கூடும். ஆகையினால் சிலர், உண்மை என்பது என்ன? நான் விரும்பும் எதையும் உண்மையானதாகச் செய்ய எனக்கு சக்தியில்லையா? உலகம்கூட அப்படிச் செய்கிறதில்லையா? என்று சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்லுகிறவன், ஏது வாதங்களோடு சொல்லுகிறான். மிகவும் பெரிய ஒரு பொய்யை எடுத்துக்கொண்டு, அதை ருஜுப்படுத்தும்படி, ஒரு சூட்சும புத்தியுள்ளவனுக்கு சொன்னால், அவன் அப்படியே செய்வான். உதாரணமாக, மனிதன் ஓர் மிருகமென்றும், அல்லது, ஆன்மாவானது, தன் வலையி லிருக்கும், சிறிய சிலம்பி போன்றிருந்து, சிலந்தி தன்னுடைய நூலினால் செய்கிறதுபோல சரீரத்தை ஆளுகிறதென்றும், அவனை ருஜுப்படுத்தச் சொன்னால், அல்லது, சமயமென்பது ஒரு நிர்பந் தக்கட்டுத்தவிர வேறொன்றுமில்லை என்றும் ருஜுப்படுத்தச்சொன் னால், இவைகளில் எதையும் அது உண்மைபோல் தோன்றுகிற வரையில் ருஜுப்படுத்துவான். ஓர் தோற்றமானது என்னவென் றும், அதுவுமன்றி குருட்டு நம்பிக்கையினால் உண்மையாக ஏற்றுக் கொண்ட ஓர் பொய் என்னவென்றும் அவனுக்கு தெரியாதபடி (2) யினால், எது அதிக சுலபமானது? இதிலிருந்து தான் மனிதனா வன், தெய்வபரிபாலனம் என்பது, புத்தியினுடையவும் சித்தத்தி னுடையவும் மிகவும் நுண்ணிய ஒவ்வொரு தனித்த பொருளிலும் அல்லது, அதேவாகிறபடி, நல்லவனாகிலும் கெட்டவனாகிலும், ஒவ்வொரு மனிதனுடைய சிந்தனைகளுடையவும் ஆசைகளுடைய வும் மிகவும் நுண்ணிய ஒவ்வொரு பொருளிலும் இருக்கிறதென் கிற இந்த உண்மையை, மனிதன் அறிந்து கொள்ள முடியாது. இவ்விதமாக தீமைகளும்கூட ஆண்டவரிடமிருந்து வருமென்கிற சிந்தனையால், அவன் முக்கியமாய் பிரமைபடைகிறான். ஆனால், அப்படியிருந்தும், தீமையின் கொஞ்சம்பாகம் கூட ஆண்டவரிட மிருந்து வாரமல், மனிதன், நினைப்பதினுடையவும், இச்சிப்பதி னுடையவும், பேசுவதினுடையவும், தன்னிடமே யிருந்து செயல் படுவதினுடையவும், தோற்றத்தை தன்னிலேயே ஸ்திரப்படுத்து வதினால், அவனிடமிருந்து வருகிறதென்பது, இப்பொழுது பின் வருவதில் அறிந்து கொள்ளப்படலாம்; அது தெளிவாய் அறிந்து

*கொள்ளப்படும்பொருட்டு இந்த ஒழுங்கில் நிச்சயப்படுத்தப்படும்: I. தெய்வபரிபாலனமானது நல்லவர்களோடு மட்டுமல்லாமல் கெட்டவர்களிடத்திலும்கூட, மிகவும் நுண்ணிய தனித்தபொருள்களிலும் சர்வவியாபகமா யிருக்கிறது, என்றாலும் அது அவர்களுடைய தீமைகளிலில்லை. II. கெட்டவர்கள் தாங்களே தீமைகளுக்கு இடைவிடாமல் வழிகாட்டிக் கொள்ளுகிறார்கள், ஆனால் ஆண்டவர் தீமைகளுக்கு தூரமாக அவர்களை இடைவிடாமல் நடத்துகிறார். III. கெட்டவர்கள், தங்கள் சொந்தவிவேகம் எல்லாமென்றும், தெய்வபரிபாலனம் ஒன்றும் இல்லையென்றும் நம்புகிறவரையில், ஆண்டவரால் தீமைக்கு தூரமாகவும் நன்மைக்குள்ளாகவும் முழுமையும் நடத்தப்பட மாட்டார்கள். IV. ஆண்டவர் நரகத்தை எதிரிடையானவைகளால் ஆளுகிறார்; உலகத்தில் உள்ள கெட்டவர்களை புறம்பானவைகள் விஷயத்தில் அல்லாமல் அந்தரங்கமான விஷயங்களில் நரகத்தில் ஆளுகிறார்.*

237. I. தெய்வபரிபாலனமானது, நல்லவர்கள் விஷயத்தில் மட்டுமல்லாமல், துன்மார்க்கர்கள் விஷயத்திலும் கூட மிகவும் நுண்ணிய தனித்த பொருள்களிலும் சர்வ வியாபகமா யிருக்கிறது; என்றாலும், அவர்களுடைய தீமைகளில் அது இல்லை. *தெய்வபரிபாலனம் மனிதனுடைய சிந்தனைகளினுடையவும், ஆசைகளினுடையவும், மிகவும் நுண்ணிய தனித்த பொருள்களிலும் இருக்கிறதென்று மேலே காண்பிக்கப்பட்டது; அதனால், மனிதனானவன் தன்னிடமே யிருந்து எதையும் நினைக்கவும் இச்சிக்கவும் முடியாதென்று அறிந்துகொள்ளப்படவேண்டியது; ஆனால், அவன் நினைத்து இச்சித்து, அதிலிருந்து சொல்லி செய்கிறதாகிய ஒவ்வொன்றும், உட்பெருக்கிலிருந்து வருகிறது; நல்லதா யிருந்தால், சுவர்க்கத்திலிருந்துவரும் உட்பெருக்கிலிருந்துவருகிறது; கெட்டதாயிருந்தால் நரகத்திலிருந்து வருகிற உட்பெருக்கிலிருந்து வருகிறது; அல்லது அதேவாகிறபடி, நன்மையானது ஆண்டவரிடமிருந்துவரும் உட்பெருக்கிலிருந்து வருகிறது, தீமையானது மனிதனுடையசொந்த தன்மையிலிருந்து வருகிறது. ஆனால், சுவர்க்கத்திலிருந்து அல்லது ஆண்டவரிடமிருந்து உட்பாய்கிறதற்கும், நரகத்திலிருந்து*

அல்லது மனிதனுடைய சொந்த தன்மையிலிருந்து உட்பாய்வதற்கும், ஓர் வித்தியாசம் செய்யப்படுகிறபடியினால், இவைகள் கஷ்டத்துடன் கிரகிக்கப்படக்கூடுமென்று எனக்குத் தெரியும்; என்றாலும், தெய்வபரிபாலனம், மனிதனானவன் தன்னிடமேயிருந்து எதையும் நினைக்கவும் இச்சிக்கவும் முடியாதபடி, மனிதனுடைய சிந்தனைகளுடையவும் ஆசைகளுடையவும் மிகவும் நுண்ணிய தனித்தபொருள்களிலும் இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. என்றாலும், அவன் நரகத்திலிருந்து கூடவும், மறுபடியும் தன்னுடைய சொந்த தன்மையிலிருந்தும் அப்படி செய்யக்கூடுமென்று சொல்லப்படுகிறபடியினால், ஒரு எதிர்ப்பேச்சு இருப்பதாகத் தோன்றுகிறது. அப்படியிருந்தாலும் அப்படி ஒன்றுமில்லை. அப்படி இல்லையென்பது அந்த விஷயத்தைத் தெளிவிக்கிற சில விஷயங்கள் முந்தி சொல்லப்பட்டபிறகு, பின்வருவதில் அறிந்து கொள்ளப்படலாம்.

288. எவனும் தன்னிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து நினைக்கக்கூடுமென்பது, சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள் எல்லாரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள்; ஆனால், நரகத்திலிருக்கும் பேய்களெல்லாம், தன்னையே தவிர வேறுயாரிடமிருந்தும் நினைக்கமுடியாதென்று சொல்லுகின்றன; என்றாலும், இந்த ஆவிகளுக்கு, தன்னிடமேயிருந்து அவைகளில் ஒன்றுகூட நினைக்கிறதில்லை என்றும் நினைக்கமுடியாதென்றும், ஆனால் அது உட்பெருக்கினால் உண்டாகிறதென்றும் அநேக சமயங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது; ஆனால் அது வீணாய்ப்போய்விட்டது; அவைகள் ஏற்றுக்கொள்ள இஷ்டப்படவில்லை; ஆயினும், அநுபவம், முதலில், நரகத்துபேய்கள் விஷயத்தில் கூட சிந்தனையினுடையவும் ஆசையினுடையவும் ஒவ்வொன்றும், சுவர்க்கத்திலிருந்து வருகிறதென்று கற்பிக்கும்; ஆனால், உள்ளேபாயும் நன்மை அங்கே தீமையாகவும், உண்மை பொய்யாகவும், இவ்விதமாக ஒவ்வொன்றும் எதிரிடையானதாக மாற்றப்படுகிறது. இது பின்வரும் மாதிரி காண்பிக்கப்பட்டது: வேதத்திலிருந்து எடுத்த ஒரு உண்மை, சுவர்க்கத்திலிருந்து கீழே அனுப்பப்பட்டு, நரகத்

தின் மேல் பாகத்திலிருந்தவர்களால் பெற்றுக்கொள்ளப்பட்டது, அவர்களால், தாழ்ந்தபாகங்களுக்கும், மிகவும் அதிகமாய் தாழ்ந்த பாகங்களுக்கும்கூட அனுப்பப்பட்டது; அது செல்லும் வழியில், பொய்யாகவும், கடைசியில் உண்மைக்கு முழுமையும் எதிரிடையான பொய்யாகவும் அது படிப்படியாய் திருப்பப்பட்டது; அது தங்களில் மாறிக்கொண்டிருந்தவர்கள், வேறு விதமாய் அறிந்துகொள்ளாமல், அந்த பொய்யானது தங்களிடமேயிருந்து வந்ததாக நினைத்துக்கொண்டிருந்தார்கள்; அப்படியிருந்தாலும்; அது, சுவர்க்கத்திலிருந்து வந்து, மிகவும் தாழ்ந்த நரகத்துக்கு போகிற, இவ்விதமாய் பொய்யாக்கப்பட்டு கெடுக்கப்பட்ட உண்மையாயிருந்தது. இது மூன்று நான்கு தடவைகளில் அப்படி செய்யப்படுவதை நான் கேழ்விப்பட்டிருக்கிறேன். நன்மை விஷயத்திலும் அது அப்படியே செய்யப்படுகிறது; இது, சுவர்க்கத்திலிருந்து கீழே பாய்ந்து போகும்போது, நன்மைக்கு எதிரிடையான தீமையாக மாற்றப்படுகிறது. அதனால் ஆண்டவரிடமிருந்து வரும் உண்மையும் நன்மையும், பொய்யிலும் தீமையிலும் இருப்பவர்களால் பெற்றுக்கொள்ளப்பட்டபோது முழுமையும் மாற்றப்பட்டு, முதல் உருவம் தோன்றாதபடிகூட வேறு ஒரு உருவமாக மாறுகிறது. ஒவ்வொரு துன்மார்க்கன் விஷயத்திலும் அம்மாதிரியே சம்பவிக்கிறது; ஏனென்றால், அவன் தன் ஆவி சம்பந்தப்பட்டவரையில் நரகத்திலிருக்கிறான்.

289. அதுவுமன்றி, நரகத்திலிருக்கும் எவனும் தன்னிடமேயிருந்தன்றி, தன்னைச் சுற்றியிருக்கும் மற்றவர்களிடமிருந்து நினைக்கிறனென்றும், அன்றியும் பின் சொன்னவர்கள்கூட தங்களிடமிருந்தே யல்லாமல், மற்றவர்களிடமிருந்து நினைக்கிறார்களென்றும், சிந்தனைகளும் ஆசைகளும் தன்னிடமே யிருந்து வருகிறதுபோல அல்லாமல், வேறுவிதமாய் எவனுக்கும் தெரியாமல் ஒரு கூட்டத்திலிருந்து வேறு கூட்டத்துக்கு ஒழுங்காய் செல்லுகின்றன வென்று எனக்கு அடிக்கடி காண்பிக்கப்பட்டிருக்கிறது. தங்களிடமிருந்தே தாங்கள் நினைத்ததாகவும் இச்சித்ததாகவும் நம்பின சிலர்கள், ஓர் கூட்டத்திற்கு அனுப்பப்பட்டு

அதில் நிருத்தப்பட்டார்கள்; தங்களுடைய சிந்தனைகள் வழக்கமாய் படர்ந்த அடுத்த கூட்டங்களுடன் போக்குவரவு நீக்கப்பட்டது: பிறகு, அந்தக்கூட்டத்தின் ஆவிகள் நினைத்ததைவிட வேறு விதமாய் நினைக்கவும், எதிரிடையாய் நினைக்க தாங்களே பலவந்தம் செய்துக்கொள்ளவும், அவர்களுக்கு சொல்லப்பட்டது; ஆனால், அவர்கள் அப்படிசெய்வது முடியாதென்று ஒத்துக்கொண் (2) டார்கள். இது அநேகர் விஷயத்தில் செய்யப்பட்டது; எவனும் தன்னிடமே இருந்தல்லாமல் மற்றவர்களிடமிருந்து நினைக்கிறதாகவும், அன்றியும் பின் சொன்னவர்களும் தங்களிடமிருந்தே நினைக்கிறதில்லை யென்றும், எல்லாரும் சுவர்க்கத்திலிருந்துவரும் உட்பெருக்கினாலும், சுவர்க்கமும் ஆண்டவரிடமிருந்துவரும் உட்பெருக்கினாலும் நினைக்கிறதாகவும் நம்பியிருந்த லேபினிட்ஸ் என்பவர் விஷயத்திலும் கூட இது செய்யப்பட்டது. சிலர் இதை ஆலோசனை செய்து அது ஆச்சரியகரமாயிருக்கிறதென்றும், தோற்றத்துக்கு முழுவிரோதமாய் இருப்பதால், அதை நம்ப எவனும் செய்யப்படமாட்டானென்றும், அப்படியிருந்தாலும், அது முழுமையும் நிச்சயப்படுத்தப்பட்டபடியினால், அவர்கள் அதை மறுக்கமுடியாதென்றும் சொன்னார்கள். அப்படியிருந்தாலும், அவர்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போதுகூட, இவ்விதமாய் தீமையைநினைப்பதினால் தாங்கள் தப்பிதத்தில் இல்லை யென்றும், மேலும், தீமையானது இவ்விதமாக ஆண்டவரிடமிருந்து வருகிறதுபோல தோன்றுகிறதென்றும், அதனுடன் ஆண்டவர்மட்டும் இவ்விதமான பலவிதங்களில் எல்லாரையும் நினைக்கும்படி எப்படி செய்கிறாரென்று தாங்கள் கிரகிக்கமுடியவில்லை என்றும், அவர்கள் சொன்னார்கள். ஆனால் இந்த மூன்று விஷயங்களும் பின்வருவதில் தெளிவிக்கப்படவேண்டும்,

290. முன்னமே உதாரணமாய் சொல்லிய அனுபவங்களுக்கு, இதுகூட சேர்க்கப்படவேண்டும்:—ஆண்டவரால், ஆவிகளோடும் தேவர்களோடும் பேசும்படியாக எனக்கு அருள் செய்யப்பட்டபோது, இந்த இரகசியம் உடனே எனக்கு வெளிப்படுத்தப்பட்டது; ஏனென்றால், நன்மையாயிருந்தால், ஆண்டவரிட

மிருந்து அது வந்தபடியினுலும், தீமையாயிருந்தால் அது நர கத்திலிருந்து வந்தபடியினுலும், எதுவும் என்னிடமிருந்து வரா திருக்கையில், என்னிடமே இருந்து நான் நினைத்ததாகவும் இச்சித் ததாகவும், மற்றவர்களைப்போல நான் நம்பினதாக சுவர்க்கத்தி லிருந்து எனக்கு சொல்லப்பட்டது. விஷயம் அம்மாதிரி யிருந்த தென்று, கூட என்னிடத்தில் செலுத்தப்பட்ட பற்பல சிந்தனை களாலும் ஆசைகளாலும் காட்டப்பட்டது; மேலும் படிப்படியாய் அதைப்பார்த்து உணர எனக்கு அருள் செய்யப்பட்டது; ஆகை யினுல், பின்னிட்டு, எந்த தீமையானது என்னுடைய சித்தத்தில் விழுந்த உடனே அல்லது எந்த பொய்யாவது என்னுடைய சிந்த னையில் விழுந்த உடனே, அது எங்கிருந்து வந்ததென்று கண்டு பிடிக்கதேடினேன்; இது எனக்கு வெளிப்படுத்தப்பட்டது, மே லும் அது வந்தவர்களிடமிருந்து பேசவும், அவர்களுக்கு தப் பென்று ருஜுப்படுத்தவும், பின்வாங்க அவர்களைப் பலவந்தம் செய்யவும், அவ்விதமாக தங்களுடைய தீமையையும்பொய்யையும் மறுபடியும் எடுத்துக்கொண்டு தங்களுக்கேவைத்துக்கொள்ளவும், என்னுடைய சிந்தனையில் இனிமேல் இவ்விஷயங்களை பதியச்செய் யாமலிருக்கவும்கூட, எனக்கு அருள் செய்யப்பட்டது. இது ஆயி ரம் தடவைகளில் செய்யப்பட்டது; இந்த நிலைமையில் அநேக வருஷங்களாக இருந்திருந்தேன், இன்னும் அதில் இருக்கிறேன்: என்றுலும், மற்றவர்களைப்போல் வித்தியாசமில்லாமல், என்னிட மிருந்தே நினைக்கிறதாகவும் இச்சிக்கிறதாகவும் எனக்கே தோன் றுகிறது; ஏனென்றுல், தகுந்த பிரிவில் மேலே காண்பித்தபடி ஒவ்வொருவனுக்கும் அம்மாதிரி தோன்றவேண்டுமென்பது ஆண் டவருடைய தெய்வபரிபாலனத்தைச் சேர்ந்தது. என்னிடமிருந் தே எதையும் நான் நினைக்கிறதில்லை என்பதும், இச்சிக்கிறதில்லை என்பதும், ஆகையினுல், எதோ ஒரு காலியாயுள்ள பொருளைப் போல் நான் இருக்கிறேன் என்பதும் தவிர, வேறுவிதமாங் பார்க் காமல், புது சீஷர்களாகிய ஆவிகள் இந்த என்னுடைய நிலைமை யைப்பற்றி ஆச்சரியப்படுகிறுர்கள்; ஆனுல் இந்த இரகசியத்தை அவர்களுக்கு சொல்லியிருக்கிறேன்; இன்னும், நான்கூட அதிக அந்தரங்கமாய் நினைப்பதாகவும், நரகத்திலிருந்து வருவதை

தள்ளி, சுவர்க்கத்திலிருந்து வருவதை ஏற்றுக்கொண்டு, என்னுடைய புறம்பான சிந்தனைக்குள்பாய்வது, சுவர்க்கத்திலிருந்துவருகிறதா நரகத்திலிருந்துவருகிறதா என்பதைப் பார்ப்பதாகவும், அப்படியிருந்தும், அவர்களே நினைக்கிறதுபோல், என்னிடமேயிருந்து நினைக்கிறதாகவும் இச்சிக்கிறதாக எனக்கே தோன்றுகிறதாகவும், அவர்களுக்குக் காண்பித்திருக்கிறேன்.

291. எல்லா நன்மையும் சுவர்க்கத்திலிருந்து வருகிறதென்பதும், எல்லா தீமையும் நரகத்திலிருந்து வருகிறதென்பதும், உலகத்தில் தெரியாத பொருள்களுக்கு சேர்ந்ததல்ல. திருச்சபையில் ஒவ்வொருவனுக்கும் அது தெரிந்திருக்கிறது. திருச்சபையில் குருத்துவத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட எவன், எல்லா நன்மையும் கடவுளிடமிருந்துவருகிறதென்றும், சுவர்க்கத்திலிருந்து அவனுக்கு கொடுக்கப்படாத எதையும் தன்னிடமேயிருந்து மனிதன் எடுத்துக்கொள்ள முடியாதென்றும், அதனுடன் பிசாசு மனிதர்களுடைய சிந்தனைகளில் தீமைகளை பதியச்செய்து, அவர்களை துன்மார்க்கத்துக்குத் திருப்பி, தீமைகளை செய்ய தூண்டுகிறதென்றும், கற்பிக்கிறதில்லை? ஆகையினால், பரிசுத்தமான வைராக்கியத்திலிருந்து தான் பிரசங்கம் செய்கிறதாக நம்புகிற குரு, பரிசுத்த ஆவி தனக்கு கற்பிக்கவேண்டுமென்றும், தன்னுடைய சிந்தனைகளையும் பேச்சுகளையும் நடத்தவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார்; தாங்கள் அவ்விதமாக பிரவர்த்திக்கச் செய்யப்பட்டதாக புத்தியுடன் பார்த்ததாக சிலர் சொல்லுகிறார்கள்; அவர்களுடைய பிரசங்கம் சிலாகிக்கப்பட்டபோது, தாங்கள் தங்களிடமிருந்தேயல்லாமல் கடவுளிடமிருந்து பேசினதாக, அவர்கள் பக்தியாய் பிரதி உத்தரமாய் சொல்லுகிறார்கள். ஆகையினால்கூட, எவனாவது ஒருவன் நன்றாய் பேசுவதையும் நன்றாய் செய்வதையும் அவர்கள் பார்க்கும்போது, அவன் அப்படிசெய்ய கடவுளால் வழிகாட்டப்பட்டானென்று அவர்கள் சொல்லுகிறார்கள்: வேறுமுறையில், எவனாவது ஒருவன் துன்மார்க்கமாய் பேசி, துன்மார்க்கமாய் நடப்பதை அவர்கள் பார்க்கும்போது, அவன் அப்படிசெய்ய பிசாசினால் வழிகாட்டப்பட்டானென்று அவர்கள் சொல்லுகிறார்

கள். திருச்சபை பேசுதலில் அப்படிப்பட்ட வித மிருக்கிறதாக தெரிந்திருக்கிறது; ஆனால் அது அப்படியிருப்பதாக யார் நம்புகிறது?

292. ஒரு மனிதன் நினைக்கிறதும் இச்சிக்கிறதும் அதிலிருந்து அவன் பேசுகிறதும், செய்கிறதுமாகிய எல்லாம், **உயிரின்** ஒரே ஒரு ஊற்றிலிருந்து உள்ளேபாய்கிறது; என்றாலும், உயிரின் ஒரே ஒரு ஊற்றாகிய ஆண்டவர், மனிதன் தீமையையும் பொய்யையும் நினைப்பதற்கு காரணமல்லவென்பது, ஸ்தூல உலகத்தில் இந்த விஷயங்களால் தெளிவிக்கப்படலாம்: அதனுடைய சூரியனிடமிருந்து சூடும் வெளிச்சமும் புறப்படுகிறது. அந்த இரண்டும் கண்களுக்கு முன்பாகத் தோன்றுகிற எல்லாவிஷயங்களிலும் பொருள்களிலும் பாய்கின்றன; நல்ல விஷயங்களிலும் அழகுள்ள பொருள்களிலும் மாத்திரமல்லாமல், கெட்ட விஷயங்களிலும் குரூபியான பொருள்களிலும்கூட பாய்ந்து அவைகளில் பலவிதமான பொருள்களை உண்டாக்குகின்றன: ஏனென்றால், அவைகள் நல்ல பழங்களைத்தருகிற மரங்களில் மாத்திரமல்லாமல், கெட்ட பழங்களைத்தருகிற மரங்களிலும்கூடவும், நிஜமாகவே, பழங்களிலேகூடவும் பாய்ந்து, அவைகளின் வளர்ச்சியை உண்டாக்குகின்றன; அதேமாதிரி, அவைகள் நல்லவிதையிலும், அதனுடன் களைப்புல்லிலும் பாய்கின்றன; அப்பொழுது மறுபடியும், நல்ல உபயோகமுள்ள அல்லது சுகமுள்ள புதர்களிலும், கெட்ட உபயோகமுள்ள அல்லது விஷமுள்ள புதர்களிலும் பாய்கின்றன; என்றாலும், தீமை உண்டாக காரணமில்லாத அது அதே சூடாகவும், அதே வெளிச்சமாகவுமிருக்கிறது; ஆனால் இது ஏற்றுக்(2)கொள்ளும் விஷயங்களிலும் பொருள்களிலும் இருக்கிறது. கீச்சிடும் ஆந்தையும், கொம்புள்ள ஆந்தையும், விரியன் பாம்பும் அமைந்துள்ள முட்டைகளை அவயங்காக்கிற சூடு, ஒரு புறாவும், அழகுள்ள பட்சியும், அன்னப்பட்சியும், மறைந்துகிடக்கிற முட்டைகளை அது அவயங்காக்கும்போது செய்கிறதுபோலவே அதே மாதிரி செய்கிறது. ஒரு பெட்டைக்கோழியின் கீழே இருவித முட்டைகளையும் வைத்தால், தன்னில் தானே கெடுதி ஒன்றுமில்லாத அதன் சூட்டினால் அவைகள் குஞ்சு பொரிக்கும். அப்படியானால்,

கூட்டிற்கும் அந்த கெட்டதும் தீங்கானதுமான பொருள்களுக்கும் பொதுவீனது என்ன? சதுப்பானதும், மலமுள்ளதும், அழுகினதும், வெளிறினதுமாகிய பொருள்களுக்குள் பாயும் கூடு, அது திராட்சரச சம்பந்தமுள்ளதும், வாசனையுள்ளதும், வளருகிறதும், உயிருள்ளதுமான பொருள்களில் பாயும்போது எதை 'செய்கிறதோ அதையேசெய்கிறது. காரணமானது கூட்டில் அல்லாமல், ஆனால் ஏற்றுக்கொள்ளும் பொருளிலிருப்பதாக யார் அறிந்துகொள்ளுகிறதில்லை? ஒரே வெளிச்சம்கூட ஒரு பொருளில் சந்தோஷகரமான நிறங்களையும், மற்றதில் பொருந்தாத நிறங்களையும் காண்பிக்கிறது; அது தானேகூட பிரகாசப்படுத்திக் கொண்டு, கண் கூசும்படியான வெள்ளை நிறமுள்ள பொருள்களில் பிரகாசிக்கின்றது; அது கருப்பு நிறத்துக்குச் சாய்கிற (3) பொருள்களில் மந்தாரமானதாகவும் இருளுள்ளதாகவுமாகிறது. சூக்கும உலகத்திலும் அது அப்படித்தான் இருக்கிறது. அங்கே கூட தங்களுடைய விஷயங்களிலும் பொருள்களிலும், அந்த சூரியனிடமிருந்து பாய்கிற, ஆண்டவராயிருக்கிற அதன் சூரியனிடமிருந்து சூடும் வெளிச்சமும் இருக்கின்றன. அங்கே பொருள்கள் தேவர்களாகவும், ஆவிகளாகவும், முக்கியமாய் தன்னிஷ்டமானதும் அறிவுக்கடுத்ததுமான பொருள்களாகவு மிருக்கின்றன; அங்கே சூடு என்பது வெளிவரும் பரமஇச்சாசத்தி, அங்கே வெளிச்சம் வெளிவரும் பரமஞானசத்தி. ஒன்று மற்றொன்றுக்கு வித்தியாசமாய் ஏன் ஏற்றுக்கொள்ளப்படுகிறது என்பதற்கு இவைகள் காரணமல்ல; ஏனென்றால், ஆண்டவர் சொல்லுகிறதாவது: "அவர் தீயோர் மேலும் நல்லோர் மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள் மேலும் அநீதியுள்ளவர் மேலும் மழையை பெய்யப்பண்ணுகிறார்" (மத்தே V. 45). மேலான அருத்தத்தில் சூரியன் என்பதினால் பரம இச்சாசத்தியும், மழை என்பதினால் பரமஞானசத்தியும் அருத்தம் கொள்ளப்படுகிறது.

293. மனிதனிலிருக்கும் சித்தத்தையும் புத்தியையும் குறித்து தேவர்களுக்குள்ள அபிப்பிராயத்தை இதனுடன் சேர்க்

கிறேன். அது, எந்த மனிதனிலும் அவனுக்கு சொந்தமான ஒரு கிரெயின் நிறையுள்ள சித்தமும் விவேகமும் கிடையாது என்பதாயிருக்கிறது; எவனாவது ஒருவனிடத்தில் ஒரு கிரெயின் நிறையுள்ளது இருந்தால், சுவர்க்கமாவது நரகமாவது நிற்காது என்றும், முழு மானிடஜாதியும் நாசமடையுமென்றும், அவர்கள் சொல்லுகிறார்கள். உலகம் சிருட்டிக்கப்பட்டது முதல் பிறந்தவர்கள் எவ்வளவோ அவ்வளவு கோடானகோடி ஜனங்கள் சேர்ந்து, நரகமும் சுவர்க்கமும் உண்டாகிறதென்பது, காரணமென்று அவர்கள் சொல்லுகிறார்கள்; அவைகள், சுவர்க்கமானது ஒரு அழகுள்ள மனிதனுயும் நரகமானது ஒரு பயங்கரமான மனிதனுயு மாகி, இந்த பக்கமும் அந்தபக்கமும் ஒரு ஏகமாக ஒன்றன்கீழ் ஒன்றாய் அவ்வித ஒழுங்கில் வைக்கப்படுகின்றன. எவனாவது ஒருவனுக்கு ஒரு கிரெயின் நிறையுள்ள தன்னுடைய சொந்த சித்தமும் புத்தியும் இருந்தால், அந்த ஏகத்வம் உண்டாகாது, ஆனால் வேறு வேறாய் கிழிக்கப்படும்; ஆண்டவர் எல்லாமாயும் அவைகள் சுத்தமாய் சூனியமாயும் இருக்கும்போது தவிர, ஒப்புறவையும் மாரு நிலைமையையும் உடைத்தாயிருக்கமுடியாத அந்த தெய்வீகமான உருவம் அதனுடன் அழிந்துபோகும். தன்னிடமே இருந்து நினைத்து இச்சித்தல், பிரதானமாய் தெய்வீகமான தென்பதும், கடவுளிடமிருந்து இச்சித்து செய்தல் பிரதானமாய் மானிடத்தன்மை என்பதும், இன்னும் ஒரு காரணமாயிருக்கிறதென்று அவர்கள் சொல்லுகிறார்கள்; தெய்வமே எந்த மனிதனுக்கும் உரித்தாக்கப்பட முடியாது; ஏனென்றால், இவ்விதமாக மனிதன் கடவுளாவான். இதை ஞாபகத்தில் வையுங்கள்; இறந்தபிறகு நீங்கள் சூக்கும உலகத்திற்கு வரும்போது, நீங்கள் விரும்பினால், தேவர்களால் அது ஸ்திரப்படுத்தப்படும்வரை பார்ப்பீர்கள்.

294. எவனும் தன்னிடமிருந்து அல்லாமல், மற்றவர்களிடமிருந்து நினைக்கிறதாகவும், மற்றவர்கள் எல்லாம் தங்களிடமேயிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து சுவர்க்கத்தின் மூலமாய் வரும் உட்பெருக்கினால் நினைக்கிறதாகவும் சிலர் நம்பினபோது, அவர்கள் இவ்விதமாக தீமையை செய்வதற்கு நிந்திக்கப்படக்

கூடாதென்றும், மேலும், இவ்விதமாக தீமையானது ஆண்டவரிட மிருந்து வருவதாக தோன்றுகிறதென்றும், அதனுடன் கூட, எல்லாரையும் அவ்வளவு பலவிதமாய் நினைக்க ஆண்டவர்மட்டும் செய்வாரென்று தாங்கள் கிரகிக்கிறதில்லை என்றும், ஆச்சரியத் துடன் சொன்னார்களென்று மேலே (பி. 289) சொல்லப்பட்டது. காரணங்களிலிருந்து காரியங்களை அல்லாமல், காரியங்களிலிருந்து மாத்திரம் காரியங்களை நினைக்கிறவர்களுடைய சிந்தனைகளுக் குள்ளே இந்த மூன்று பொருள்களும் பாயவேண்டுமாகையால், காரணங்களிலிருந்து எடுத்து, தெளிவாக்கப்பட வேண்டுமென் (2) பது அவசியமாகிறது. முதலாவது, அவர்கள் இவ்விதமாக தீமை செய்ததற்காக நிந்திக்கப்பட இருக்கமாட்டார்கள். ஏனென் றால், ஒரு மனிதன் நினைக்கும் ஒவ்வொன்றும் தனக்குள் மற்றவர் களிடமிருந்து உட்பாய்ந்தால், குற்றமானது அது யாரிடமிருந்து உட்பாய்கிறதோ, அவர்களிடத்திலிருக்கிறது போல் தோன்று கிறது; அப்படியிருந்தாலும், குற்றமேகூட அதைப் பெற்றுக் கொள்பவனிடமிருக்கிறது; ஏனென்றால், அவன் அதை தன் னுடையதாக பெற்றுக்கொள்ளுகிறான், வேறுவிதமாய் அறிந்து கொள்ள அவனுக்கு தெரிகிறதுமில்லை, அவன் விரும்புகிறது மில்லை; ஒவ்வொருவனும், தன்னுடைய சொந்தமாக யிருக்கவும், தன்னாலேயே நடத்தப்படவும், முக்கியமாய் தன்னிடமேயிருந்து நினைக்கவும் இச்சிக்கவும் விரும்புகிறான்; ஏனென்றால், இது ஒவ் வொரு மனிதனுமிருக்கிற சொந்த தன்மையைப்போல் தோன்று கிற சுதந்தரமாகவே யிருக்கிறது; ஆகையினால், அவனுக்கு தான் நினைக்கிறதும் இச்சிக்கிறதும் மற்றவனிடமிருந்து வருகிறதாக தெரிந்திருந்தால், இன்னமும் தன்னுடைய சொந்த எஜமானனாக அல்லாமல் கட்டுப்பட்டவனாகவும் அடிமையாகவும் தனக்கே தோன்றும். இவ்விதமாக அவன் உயிரின் எல்லா சந்தோஷங்களும் (3)கடைசியில் மானிடத்தன்மையுமே அழிந்துபோகும். இது அப் படி யிருக்கிறதென்று அடிக்கடி ருஜுப்படுத்தப்படுவதை பார்த் திருக்கிறேன். தாங்கள் மற்றவர்களால் நடத்தப் படுகிறார்க ளென்று அறிந்துகொள்ளவும் உணரவும் சிலருக்கு அருள் செய் யப்பட்டிருக்கிறது; பலவீனமுள்ள மனதை உள்ளவர்போல

தாங்கள் செய்யப்பட்டதாக, அவர்கள் அப்பொழுது அவ்வளவு கோபநெருப்பு மூட்டப்பட்டவர்களானார்கள். தாங்கள் இச்சிக்கிற படி நினைக்கவும், தாங்கள் நினைக்கிறபடி இச்சிக்கவும், விடப்படா ததைவிட நரகத்தில் தாங்கள் கட்டுப்பட்டு வைக்கப்பட விரும்பு கிறதாக அவர்கள் சொன்னார்கள். அப்படிச்செய்ய விடப்படாதது, சரீரம்விஷயத்தில் கட்டுப்பட்டு யிருப்பதைவிட, அதிக பிரயாச மானதாகவும், தாங்கக்கூடாததாகவும், இருக்கிற தங்களுடைய உயிரையே பந்தப்படுதலா யிருக்கிறதென்று அவர்கள் சொன்னார் கள். தாங்கள் நினைக்கிறபடியும் இச்சிக்கிறபடியும் பேசவும் செய் யவும் விடப்படாததை, கட்டுப்பட் டிருக்கிறதாக அவர்கள் சொல்லவில்லை; ஏனென்றால், பேசுவதிலும் செய்வதிலும் அடங்கி யிருக்கிற தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய வாழ்வின் (4) சந்தோஷம், அதை தடுத்து, அதேகாலத்தில் அதை தணிக் கிறதுபோலிருக்கிறது. இப்படியிருக்கையில், மனிதனானவன் தான் மற்றவர்களால் நினைக்க நடத்தப்படுகிறதாக தெரிந்துகொள்ள விரும்பாமல், தன்னிடமே யிருந்து நினைக்க விரும்புகிறதினாலும், அவன் அப்படிச் செய்கிறதாக நம்புகிறதினாலும்கூட, தானே தப் பிதத்தில் இருக்கிறதாக பின் தொடருகிறது; அதுவுமல்லாமல், தான் நினைப்பதை அவன் நினைக்க விரும்புகிறவரையில் பழியை தன்னிடமிருந்து நீக்கமுடியாது; ஆனால் அதை நினைக்க அவன் நேசிக்காவிட்டால், அந்த மற்றவர்களோடு இருக்கும் சம்பந்தத்தி லிருந்து தானே விடுதலை செய்துகொள்ளுகிறான். ஒரு பொருளா னது தீமையானதென்று, அவன் அறிந்துகொள்ளும்போது, இது சம்பவிக்கிறது, ஆகையினால், அதைத்தள்ளி அதிலிருந்து விட்டு நீங்கவிருக்கிறான். அப்பொழுதுகூட அந்த தீமையிலிருக்கும் கூட் டத்திலிருந்து, ஆண்டவரால் அவன் பிரிக்கப்பட்டு, அது இல்லா திருக்கும் ஒரு கூட்டத்திற்கு மாற்றப்படுகிறான். ஆனால் அவன் தீமையை தெரிந்துகொண்டு, அதை நீக்காவிட்டால், தப்பித மானது அவன் பேரில் சுமத்தப்பட்டு, அந்த தீமை உள்ளவனாக குற்றம் சாட்டப்படுகிறான். ஆகையினால் மனிதனானவன் தன்னிட மிருந்தே யிருந்து செய்கிறதாக நம்புகிற எதுவும், ஆண்டவரிட மிருந்தல்லாமல் மனிதனிடமிருந்து செய்யப்படுகிறதாக சொல்லப்

(5) படுகிறது. இரண்டாவது, **இவ்விதமாக தீமையானது ஆண்டவரி**
**டமிருந்து வருவதாகத் தோன்றுகிறது.** ஆண்டவரிடமிருந்து உள்ளே
பாயும் நன்மையானது நரகத்தில் தீமையாகவும், உண்மையானது
பொய்யாகவும் திருப்பப்படுகிறதென்கிறதாகிய மேலே (பி-288)
காண்பித்ததிலிருந்து, இது தீர்மானமாக நினைக்கப்படலாம். ஆனால்
'தீமையும் பொய்யும், நன்மையிலிருந்தும் உண்மையிலிருந்தும்
இவ்விதமாக ஆண்டவரிடமிருந்து வராமல் மேலே (பி-292) முழு
மையும் காண்பிக்கப்பட்டபடி கூட, தீமையிலும் பொய்யிலும்
இருக்கிறதும், உள்ளே பாய்வதை திருப்பி புரட்டுகிறதுமாகிய
ஏற்றுக்கொள்ளும் பொருளிலிருந்து வருகிறதாக, யார் அறிந்து
கொள்ளமுடியாது? ஆனால், மனிதனிடமிருக்கும் தீமையும் பொய்
யும் எங்கிருந்து வருகின்றன என்பது, முன்சென்ற பக்கங்களில்
அடிக்கடி காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டவர் கெட்டவர்களி
லிருக்கும் தீமைகளை நீக்கி, அவைகளுக்கு பதிலாக நன்மைகளைக்
கொண்டுவந்து, இவ்விதமாக முழு நரகத்தையும் சுவர்க்கமாக
மாற்றி எல்லாரையும் இரட்சிக்கக் கூடுமென்று நம்பினவர்கள்
விஷயத்தில் ஒரு சோதனையானது கூட, சூக்கும உலகத்தில் செய்
யப்பட்டது; ஆனால் இது முடியாத காரியமென்பது, சடிதியான
மோக்ஷமும் உடனான இரக்கமும் சொல்லப்படப்போகிற இந்த
நூலின்முடிவில், அறிந்துகொள்ளப்படலாம். மூன்றாவது: **ஆண்ட**
(6)**வர் மாத்திரம் எல்லாரையும் அவ்வளவு பலவிதமாய் நினைக்கச்**
**செய்யக்கூடுமென்று அவர்கள் கிரகிக்கிறதில்லை.** ஆண்டவருடைய இச்
சாசத்தி முடிவற்றது; அவருடைய ஞானசத்தி முடிவற்றது; அன்
பினுடையவும் ஞானத்தினுடையவும்முடிவற்ற பொருள்கள் ஆண்
டவரிடமிருந்து புறப்படுகின்றன; அவைகள் சுவர்க்கத்திலுள்ள
வர்கள் எல்லாருள்ளும், அதிலிருந்து நரகத்திலுள்ளவர்கள் எல்லா
ருள்ளும், இந்த இருவகையாரிடமிருந்து உலகத்தில் உள்ளவர்கள்
எல்லாருள்ளும் பாய்கின்றன. ஆகையினால், எவனுக்கும் தான்
நினைக்கிறேனென்றும்,இச்சிக்கிறேனென்றும்இல்லாமல்போகாது;
ஏனென்றால், முடிவற்ற பொருள்கள் முடிவற்றதாய் எல்லா
பொருள்களாயிருக்கின்றன. ஆண்டவரிடமிருந்து புறப்படும்
அந்த முடிவற்ற பொருள்கள் சர்வ வியாபகமாய் மாத்திரமல்லா

மல், அதிக வெவ்வேறாய்கூட உட்பெருக்கெடுக்கின்றன; தெய்வமானது மிகவும் தனித்த பொருள்களிலிருந்து கூட சர்வ வியாபகமா யிருக்கிறது: இந்த தெய்வீகமான மிகவும் தனித்தபொருள்கள், மேல் காண்பித்தபடி சர்வவியாபகமான தென்று சொல்லப்பட்டதா யிருக்கிறது; மிகவும் தெய்வீக தனித்த பொருள் முடிவற்றதாய்க் கூட இருக்கிறது. இதிலிருந்து ஆண்டவர் மாத்திரம் ஒவ்வொருவனையும் தன்னுடைய குணத்துக்கு தக்கபடியும், அவருடைய சொந்த தெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அனுசரித்தும், நினைக்கவும் இச்சிக்கவும் செய்கிறாரென்று விசதமாகிறது. ஆண்டவரி லிருக்கிறதும், அவரிடமிருந்து புறப்படுகிறதுமான எல்லா பொருள்களும் முடிவற்றவைகளென்று மேலேயும் (பி. 46-69), பதிபசுபாச விளக்கமெனும் நூலினும் கூட (17-22) காண்பிக்கப்பட்டிருக்கிறது.

295. II. **துன்மார்க்கர்கள் தொடர்ச்சியாய் தீமைகளில் தாங்களே நடத்திக்கொள்ளுகிறார்கள், ஆனால் ஆண்டவர் தீமைகளிலிருந்து தூரமாக தொடர்ச்சியாய் அவர்களை நடத்துகிறார்.** நல்லவர்கள் விஷயத்தில் ஆண்டவருடைய தெய்வபரிபாலனத்தின் குணம், துன்மார்க்கர்களிடத்தில் அவர் குணத்தைவிட அதிக சுலபமாய் அறிந்துகொள்ளப்படுகிறது; பின் கூறியது இப்பொழுது பிரஸ்தாபம் செய்யப்படுகிறபடியினால், இந்த வரிசையில் சொல்லப்படவேண்டும்: I. ஒவ்வொரு தீமையினும் கணக்கற்ற பொருள்களிருக்கின்றன. II. தன்னிடமேயிருந்து ஒரு துன்மார்க்கன் இடைவிடாமல் தன்னுடைய சொந்த தீமைகளில் தானே ஆழமாய் வழிகாட்டிக்கொள்ளுகிறான். III. துன்மார்க்கர்களுடன் தெய்வபரிபாலனம், இடைவிடாமல் தீமையிலிருந்து பின் வாங்குதல் இருக்கும் நோக்கத்தோடு, இடைவிடாமல் தீமையை செய்யப்படவிடுவதாய் இருக்கிறது. IV. தீமையிலிருந்து பின்வாங்குதல், ஆண்டவரால் கணக்கற்றதும் அதிக இரகசியமான வழிகளில் செய்யப்படுகின்றன.

296. ஆகையினால், துன்மார்க்கர்கள் விஷயத்தில் தெய்வபரிபாலனம் பிரத்தியேகமாய் பார்க்கப்பட்டு, இவ்விதமாக கிரகிக்

கப்பட மேலே கூறிய விஷயங்கள், அவைகள் கொண்டுவரப்பட்ட ஒழுங்கில் விளக்கப்படவேண்டும். முதலாவது: **ஒவ்வோரு தீமையிலும் கணக்கற்றபொருள்களிலும் இருக்கின்றன.** மனிதனுடைய பார்வையில், ஒவ்வொரு தீமையும், ஒருகலப்பற்ற பொருளாகத்தோன்றுகிறது; பகையும் பழிவாங்குதலும், திருடும் மோசமும், விபசாரமும் வேசித்தனமும், கர்வமும் அகந்தையும், இவைபோன்றவைகளும் அப்படி தோன்றுகின்றன; ஒவ்வொரு தீமையிலும், ஒரு மனிதனுடைய சரீரத்தில் நார்களும் நாடிகளும் இருப்பதைவிட, அதிகமாய் கணக்கற்ற பொருள்கள் இருப்பதாக தெரிந்திருக்கப்படவில்லை. ஏனென்றால், ஒரு துன்மார்க்கன் மிகவும் குறைந்த ரூபத்தில் ஒரு நரகமாயிருக்கிறான்; நரகத்தில் அநேகரிருக்கிறார்கள், அங்கே ஒவ்வொருவனும், பயங்கரமானவனாகயிருந்தாலும், உருவத்தில் மனிதனைப்போலிருக்கிறான்; அங்கேயிருக்கும் எல்லா நார்களும் நாடிகளும் தலைகீழாய் புரட்டப்பட்டிருக்கின்றன; ஆவியே தனக்கே ஒரு பொருளாக தோற்றம் காட்டிக்கொண்டு, தன்னில் தானே நரகமாயிருக்கிறது; ஆனால், ஆவிக்குள் கணக்கற்றபொள்கள் இருக்கிறதுபோல, அவ்வளவு அநேகம் அந்த தீமையின் மோகங்கள் இருக்கின்றன; ஏனென்றால், ஒவ்வொருவனும், சிரசு முதல்பாதம் வரையில் தன்னுடைய சொந்த தீமையாகவும், அல்லது தன்னுடைய சொந்த நன்மையாகவும் இருக்கிறான். ஆகையினால், ஒரு துன்மார்க்கன் அவ்விதமாயிருப்பதினால், அவன், வேறாய் தீமைகளாயிருக்கிறதும், தீமையின் மோகங்களென்று சொல்லப்படுகிறதுமான கணக்கற்ற பல பொருள்களால் அமைந்த ஒரு தீமை என்று விசதமாகிறது. அந்த பொருள்களெல்லாம் அவைகள் இருக்கும் ஒழுங்கில், ஆண்டவரால் முன்னிலைமைக்கு கொண்டுவரப்பட்டு மாற்றப்படவேண்டுமென்றும்; மனிதன் சீர்படுத்தப்படவேண்டு மென்றும், மனிதனுடைய வாழ்நாளில் ஆரம்ப காலமுதல் அவன் கடைசி காலம்வரையில் படிப்படியாய் தெய்வபரிபாலனத்தினால் தவிர (2) இது செய்யப்பட முடியாதென்றும், இந்த ஆலோசனைகளால் ஏற்படுகிறது. நரகத்திலிருக்கும் தீமையின் ஒவ்வொரு இச்சையும், காண்பிக்கப்படும்போது, ஒரு பறவை நாகம்போலும் அல்

லது குக்குட சர்ப்பம்போலும், அல்லது விரியன் பாம்புபோலும், கொம்புள்ள ஆந்தைபோலும், சாக்குருவிபோலும், இவைபோன்ற மற்றவைகள்போலும், எதோ ஒரு தீங்கான பிராணியைப்போல் தோன்றுகிறது; ஒரு துன்மார்க்கன் தேவர்களால் பார்க்கப்படும் போது, அவனிடத்திலிருக்கும் தீமைகளுக்குள்ளே மோகங்களின் இச்சைகள் அம்மாதிரியே தோன்றுகின்றன. இச்சைகளின் இந்த உருவங்களெல்லாம், ஒன்றன்பின் ஒன்றாய் மாற்றப்படவேண்டும்; ஆவி சம்பந்தப்பட்டவரையில், ஒரு பயங்கரமான மனிதனைப்போலவும், அல்லது ஒரு பிசாசுபோலவும் தோன்றுகிற மனிதனேகூட, ஒரு அழகுள்ள தேவனைப்போல் இருக்க, மாற்றப்படவேண்டும்; மேலும், தீமையின் ஒவ்வொரு இச்சையும், சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களின் நன்மையினுடைய ஆசைகள், காண்பிக்கப்பட்ட போது தோன்றுகிறதுபோல, ஒரு ஆட்டுக்குட்டிபோலவும், ஆடு போலவும், அல்லது புறுபோலவும், மணிப்புறுபோலவும் தோன்றும்படியாக, அவ்விதமாய் மாற்றப்படவேண்டியிருக்கிறது; ஒரு பறவை நாகத்தை ஆட்டுக்குட்டியாகவும், குக்குட சர்ப்பத்தை ஆடாகவும், ஆந்தையை புறுவாகவும் மாற்றுதல், அதன் விதையிலிருந்து, தீமையை வேரோடழிப்பதினாலும், அதற்குப்பதிலாக நல்ல விதையை நடுவதினாலும் படிப்படியாய் மாத்திரம் செய்யப்படக்கூடும். ஆனால், இது, மரங்களை ஒட்டுவதில், வேர்களும், அடிமரத்தின் சிலபாகமும் நின்றும், ஒட்டிவைத்த கிளை பழைய வேறின் மூலமாய் பிரித்தெடுத்த சாரத்தை நல்லபழம் உண்டாகிற சாரமாகத்திருப்புவதுபோல, ஒப்பீடாய் மாத்திரம் செய்யப்படக்கூடும். ஒட்டிவைக்கவேண்டிய கிளை, ஜீவமரமாயிருக்கிற ஆண்டவரைவிட வேறு எந்த மூலத்திலும் எடுக்கப்படமுடியாது; அதுகூட ஆண்டவருடைய வார்த்தைகளை அனுசரித்து இருக்கிறது (யோவா. XV. 1-7). இரண்டாவது: ஒரு துன்மார்க்கன் தன்(3)னிடமேயிருந்து, தன்னுடைய சொந்த தீமைகளுக்குள், ஆழமாய் தானே இடைவிடாமல் செல்லுகிறான். மனிதன், ஆண்டவரிடமிருந்துவரும் நன்மையை தீமையாக மேல் சொல்லியபடி திருப்புகிறபடியினால், எல்லா தீமையும் அவனிடமிருந்துவரும் காரணத்தின் பொருட்டு, அவனிடமேயிருந்து வந்ததென்று சொல்

லப்பட்டது: ஒரு துன்மார்க்கன் தீமையில் ஆழமாய்ப்போவதின் காரணமே, அவன் இச்சித்து தீமையை செய்கிறதற்குத் தக்கபடி, நரக சம்பந்தமான கூட்டங்களில் அதிக அந்தரங்கமாயும், அதிக ஆழமாயுங்கூட அவன் உட்செல்லுகிறான் என்பதாயிருக்கிறது; இதிலிருந்து தீமையின் சந்தோஷம் வளருகிறது; கடைசியில் எதுவும் இதமானதாயில்லாதபடி, இது அவனுடைய சிந்தனைகளில் அவ்வளவு குடிகொள்ளுகிறது. மேலும், நரகத்துக்கடுத்த கூட்டங்களில் மிகவும் அந்தரங்கமாகவும் ஆழமாகவும் தானே பிரவேசித்தவன், கயிற்றினால் சுற்றிக்கட்டப்பட்டதுபோல ஆகிறான்; ஆனால் அவன் உலகத்தில் இருக்கிறவரையில், கயிறு கட்டப்பட்டிருப்பதை உணருகிறதில்லை. அவைகள், சந்தோஷமுண்டாக்குதலின் பொருட்டு தான் நேசிக்கிற மிருதுவான ஆடுமயிர் போலவும், அல்லது பட்டின் மெதுவான நூல்கள் போலவும் இருக்கின்றன; ஆனால், இந்த கட்டுகள் இறந்த பிறகு மிருதுவாயிருப்பதிலிருந்து கடினமாகின்றன; சந்தோஷம் கொடுப்பதை (4)விட்டு விட்டு, மனதை வருத்துகிறவைகளாகின்றன. தீமையின் சந்தோஷம், அதிகமாகின்றது என்பது, திருடுகளிலிருந்தும், கொள்ளைகளிலிருந்தும்,களவுகளிலிருந்தும், சலஞ்சாதித்தலிலிருந்தும், கொடுங்கோண்மைகளிலிருந்தும், லாபம் அடையும் ஆசையிலிருந்தும், மற்றவைகளிலிருந்தும் தெரிந்துகொள்ளப்படுகிறது. கர்ம சித்திக்கும், தன்னிஷ்டமான சீராட்டுதலுக்கும் தக்கபடி, இந்த விஷயங்களில் சந்தோஷத்தின் உயர்ச்சியை யார் உணருகிறதில்லை? தான் விட்டுவிடக்கூடாதபடி, ஒரு திருடன் திருடுகளில் அவ்வளவு சந்தோஷத்தை காண்கிறானென்று தெரிந்திருக்கிறது; ஆச்சரியமானது என்னவென்றால், அவனுக்குக் கொடுக்கப்பட்ட பத்து நாணயங்களைப்பார்க்கிலும், ஒரு திருடின நாணயத்தின் பேரில், அவனுக்கு அதிக அன்பு இருக்கிறதென்றும் தெரிந்திருக்கிறது. துர்வினியோகத்துக்குத்தக்கபடி தீமையானது பலயீனத்தை உண்டாக்குமென்று முன்னறிந்து ஏற்படுத்தப்படாதிருந்தால், விபசாரங்கள் விஷயத்திலும் அப்படியே இருக்கும். அப்படியிருந்தாலும் அநேகர் விஷயத்தில், அதைப்பற்றி நினைத்தலினுடையவும் பேசுதலினுடையவும் சந்தோஷம் இருக்கிறது; இன்

(5) னும் அதிகம் இல்லாவிட்டாலும், தொட்டுப்பார்க்கும் ஆசை இன்னும் இருக்கிறது. ஆனால் சித்தத்திலிருந்தும், அதேகாலத்தில் சிந்தனையிலிருந்தும் அவன் தீமைகளைச் செய்கிறபடியினால், இது ஒருவன் நரக•சம்பந்தமான கூட்டங்களில் அதிக அந்தரங்கமாகவும், அதிக ஆழமாயும் பிரவேசிப்பதனால் வருகிறதென்று தெரிந்திருக்கப்படவில்லை; சித்தத்தில் இல்லாமல் அவைகள் சிந்தனையில் மாத்திரம் இருந்தால், தீமையுடன் ஒரு நரக சம்பந்தமான கூட்டத்துக்கு இன்னும்வராமலிருக்கிறான்; ஆனால் தீமைகள்கூட சித்தத்திலிருக்கும்போது அவன் அதில் பிரவேசிக்கிறான். அவன் அப்பொழுதுகூட இந்த தீமையானது பத்துகற்பனைகளின் தருமநியமங்களுக்கு எதிரிடையாயிருக்கிற தென்றும், இந்த கற்பனைகளை தெய்வீகமானதென்றும் கூட நினைத்து, மதித்தால், அப்பொழுது உத்தேச பூர்வமாய் அதை செய்து, அதனால், உண்மையான மனம் திரும்புதலினால் தவிர அவன் வழிகாட்டப்படாத
(6) படி ஓர் ஆழத்தில் தானே அமிழ்ந்துபோகிறான். தன் ஆவிசம்பந்தப்பட்டவரையில் ஒவ்வொரு மனிதனும், சூக்கும உலகத்தில் எதோ ஒரு கூட்டத்தில் இருப்பதாகத் தெரிந்திருக்கவேண்டும்; ஒரு துன்மார்க்கன் நரகத்துக்கு சேர்ந்த கூட்டத்திலிருக்கிறான்; ஒரு நல்லமனிதன் ஒரு சுவர்க்கத்துக்கு சேர்ந்த கூட்டத்திலிருக்கிறான். ஆழ்ந்த ஆலோசனையிலிருக்கும்போது, அங்கேகூட அவன் சில சமயங்களில் தோன்றுகிறான். பேச்சுடன் சத்தமானது ஸ்தூல உலகத்தில் காற்றில்தானே பறவுகிறதுபோல், சிந்தனையுடன் ஆசையானது சூக்கும உலகத்தின் கூட்டங்களில் தானே பரவுகிறது என்றும்கூட தெரிந்திருக்கவேண்டும்; ஒரு அன்னுவயம்கூட யிருக்கிறது; ஏனென்றால், ஆசையானது சத்தத்துடனும், சிந்தனை பேச்சுடனும், ஒத்துப்போகிறபடியினால்
(7) ஒரு அன்னுவயமு மிருக்கிறது. மூன்றாவது: **துன்மார்க்கர்களிடத்தில் தெய்வபரிபாலனமானது இடைவிடாமல் அதிலிருந்து பின்வாங்குதல் இருக்கும்பொருட்டு தீமைக்கு இடைவிடாமல் இடங்கொடுப்பதாயிருக்கிறது.** துன்மார்க்கர்கள் விஷயத்தில் தெய்வபரிபாலனமானது இடைவிடாத அநுமதியாயிருக்கிறது; ஏனென்றால், அவர்களின் வாழ்விலிருந்து தீமையைத் தவிர வேறொன்றும்

வெளியே வரமாட்டாது; மனிதன் நன்மையிலிருந்தாலும் தீமையி லிருந்தாலும்,ஒரே காலத்தில் இரண்டிலுமிருக்கமுடியாது; அதுவு மன்றி, அவன் வெதுவெதுப்பானவனு யிருந்தாலொழிய ஒன்றன் பின் ஒன்ருய் இருக்கவும் முடியாது; உயிரின் தீஷம மனிதனுல் தவிர சித்தத்திலும்,அதன் மூலமாய் சிந்தனையிலும், ஆண்டவரால் (8)உட்செலுத்தப்படுகிறதில்லை; இதற்குதான் அனுமதி என்று சொல்லப்படுகிறது: ஒரு துன்மார்க்கன் இச்சிக்கிறதும் நினைக்கி றதுமான எல்லா பொருள்களும் அனுமதியைச் சேர்ந்தபடியினுல், நல்லவனுகிலும் கெட்டவனுகிலும் ஒவ்வொரு மனிதனிலும் மிகவும் நுண்ணிய தனித்த பொருள்களிலும் இருக்கிற தெய்வபரிபாலனம் அங்கே என்னமாயிருக்கிறது என்கிற கேழ்வி உண்டாகிறது. ஆனுல் அது முடிவின்பொருட்டு இடைவிடாமல் இடங் கொடுக் கிறதென்பதிலும், மற்றவைகளுக்கு அல்லாமல் முடிவுக்குசேர்ந்த பொருள்களுக்கு இடங்கொடுக்கிற தென்பதிலும், அனுமதியின் பேரில் வெளியே போகும் தீமைகளை ஒத்துப்போகாததை அனுப்பிவிட்டும், தெரியப்படாத வழிகளில் அவைகளைத் தள்ளி விட்டும், அது இடைவிடாமல் பரிசோதனை செய்து பிரித்து சுத் தப்படுத்துகிற தென்பதிலும் அடங்கியிருக்கிறது. இவைகள் எல் லாம் முக்கியமாய் மனிதனுடைய உள்ளிருக்கும் சித்தத்திலும், இதிலிருந்து அவனுடைய அந்தரங்கமான சிந்தனையிலும் செய்யப் படுகின்றன. அனுப்பப்பட்டு தள்ளப்படவேண்டிய பொருள்கள், மறுபடியும் சித்தத்தினுல் பெற்றுக்கொள்ளாதபடி, முன் அறிந்து ஏற்பாடுசெய்வதில் தெய்வபரிபாலனம் தொடர்ச்சியாயிருக்கிறது. ஏனென்ருல், சித்தத்தினுல் பெற்றுக்கொள்ளப்பட்ட எல்லா பொருள்களும் மனிதனுக்கு உரித்தாக்கப்படுகிறது; ஆனுல், சித் தத்தினுல் அல்லாமல் சிந்தனையினுல் பெற்றுக்கொள்ளப்பட்டவை கள் பிரிக்கப்பட்டு துரத்தப்படுகின்றன. முன்சொல்லியபடி சாசு வத பின்வாங்குதல் இருக்கும் பொருட்டு, தொடர்பான அனு மதியாயிருக்கும் தீமையுடன் இதுதான் ஆண்டவருடைய (9) தொடர்பான தெய்வபரிபாலனமா யிருக்கிறது. இவைகளைப் பற்றி மனிதனுக்கு ஒன்றும் தெரியாது; ஏனென்ருல், அவன் அவைகளைப் பார்க்கிறதில்லை. தீமைகள் அவனுடைய உயிரின்

அன்பினுடைய இச்சைகளின் தீமைகளா யிருக்கின்றன-வென்பது, அவன் ஏன் அவைகளைப் பார்க்கிறதில்லை என்பதற்குமுக்கிய காரணமாயிருக்கிறது; மேலும், இந்த தீமைகள் எவனுக்கும் கவனிக்காத இன்பங்களாகத் தவிர, தீமைகளாக உணரப்படுகிறதில்லை. அவனுடைய அன்பின் சந்தோஷங்களை யார் பார்க்கிறார்கள்? அவனுடைய சிந்தனையானது ஒருநதியின் நீரோட்டத்தினால் கொண்டு போகப்பட்ட ஒரு படகைப்போல் அவைகளில் மிதக்கின்றன; முழு சுவாசத்துடன் சுவாசம் உள்ளே வாங்கப்பட்ட ஒரு சுகந்தமுள்ள காற்று போல் அங்கே பார்க்கப்படுகிறது; அவனுடைய புறம்பான சிந்தனையில், அவைகளிலிருந்து சிலவற்றைமாத்திரம் அவன் பார்க்கக்கூடும்; அப்படியிருந்தாலும், அவைகள் தீமைகள் என்று நன்றாய்த் தெரிந்தாலொழிய அவன் அவைகளை அங்கே கவனிக்கிறதில்லை. ஆனால் இதைப்பற்றி பின்வருவதில் அதிகம் (10)பேசுவோம். நான்காவது: மனிதன் தீமையிலிருந்து பின்வாங்குதல், கணக்கற்றதும் மிகவும் இரகசியமான வழிகளில் ஆண்டவரால் செய்யப்படுகிறது. இவைகளில் சிலது எனக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது; ஆனால் அவைகள் மிகவும் சாதாரணமானவைகள்; அவைகளாவன: மனிதனுக்கு ஒன்றும்தெரியாத மோகங்களின் இன்பங்கள், மனிதனுடைய ஆன்மாவைச் சேர்ந்த அந்தரங்க சிந்தனைகளில், கூட்டங்களாகவும் அல்லது கட்டுகளாகவும் அதிலிருந்து, ஆனந்தத்தினுடையவும், மனோகரத்தினுடையவும், லோபித்தனத்தினுடையவும், ஏதோ ஒரு உணர்ச்சியில் தோன்றுகிற அவனுடைய புறம்பான சிந்தனைகளில் அனுப்பப்படுகின்றன என்பவைகள். அவைகள் அங்கே அவனுடைய சகஜமானதும், சிற்றின்ப சம்பந்தமாகிய ஆனந்தங்களில் கலக்கப்படுகின்றன; பிரிக்கிறதற்கும் சுத்தம் செய்வதற்கும் அதனுடன் பின் வாங்குதற்கும், நீக்குதற்கும், வழிவகைகள் அங்கே யிருக்கின்றன. அந்த வழிவகைகள், தியானத்தினுடையவும் சிந்தனையினுடையவும், உபயோகங்களா யிருக்கிற சில முடிவுகளின் பொருட்டு மனனத்தினுடையவும் சந்தோஷங்களால் முக்கியமா யிருக்கின்றன; உபயோகங்களாயிருக்கிற முடிவுகள், எவனுடைய வேலையினுடையவும் உத்தியோகத்தினுடையவும் சிறப்பானவைகளும்

தனித்தவைகளும் எவ்வளவு அநேகம் இருக்கின்றனவோ அவ்வளவு இருக்கின்றன. மறுபடியும் சில சமயங்களில் வருகிற சந்தோஷமில்லாத பொருள்களைத் தவிர, ஒரு ஊருக்குறியவனும்,சன்மார்க்கமானவனும்,பரமார்த்தமானவனுமாகிய மனிதனைத் தோன்றும் பொருட்டு உண்டாகும் மனனத்தின் ஆனந்தங்கள் எவ்வளவு இருக்கின்றனவோ, அவ்வளவு அநேகம் அவைகள் இருக்கின்றன. இந்த இன்பங்கள் புறம்பான மனிதனில் இருக்கும் அவனுடைய அன்பைச் சேர்ந்தபடியினால், இவைகள், பிரித்தலுக்கும், சுத்தப் படுத்தலுக்கும், கழிவுக்கும், அந்தரங்கமான மனிதனுடைய
(11) தீமையின் மோகங்களின் ஆனந்தங்களுடைய பின்வாங்குதலுக்கும், வழிவகைகளா யிருக்கின்றன. லாபங்கள் அல்லது சிநேக கூட்டுகளை தன்னுடைய உத்தியோகத்தின் பலன்களாக அல்லது உபயோகங்களாக மதிக்கிற ஒரு அநீதியான நியாயாதிபதியை உதாரணமாக எடுத்துக்கொள்; அந்தரங்கமாய் அவன் இடைவிடாமல் அவைகளிலிருக்கிறான்; ஆனால் புறம்பாய், சட்டம் தெரிந்து நியாயமானவனைப்போல நடக்க அவன் போராடுகிறான். சட்டங்களுடையவும் நியாயாபாசத்தினுடையவும் ஒரு இணக்கம் இருக்கிறதாகத் தோன்றும்பொருட்டு பாத்தியதையைவளைக்கவும், திருப்பவும்,சரிப்படுத்தவும், அவ்விதமாக திருத்தவும் முடியும்படியாக தியானத்தினுடையவும், சிந்தனையினுடையவும், ஆலோசனையினுடையவும், கருத்தினுடையவும் சந்தோஷத்தில் அவன் நிலையாய் இருக்கிறான்;அதுவுமன்றி, தன்னுடைய அந்தரங்கமான சந்தோஷம் சூழ்ச்சியினாலும், மோசங்களாலும், வஞ்சனைகளாலும் ஒளிப்பான திருடுகளாலும், இன்னும் இதர பொருள்களாலும் உண்டாக்கப்பட்டிருக்கிறதாகவும், தீமையினுடைய மோகங்களின் அவ்வளவு அநேக சந்தோஷங்களால் உண்டாக்கப்பட்டிருக்கிற அந்த சந்தோஷமானது, நியாயமாகவும் உண்மையாகவும் இருக்கதோன்றுகிறதின் சந்தோஷங்கள் இருக்கிற புறம்பான சிந்தனையின் பொதுவானதும் சிறப்பானதுமாகிய எல்லா பொருள்களிலும் அரசாளுகிறதாகவும், அவனுக்குத் தெரியாது. அந்தரங்கமான சந்தோஷங்கள் இறைப்பையில் பலவித போஜனங்கள் கலக்கப்பட்டிருக்கிறதுபோல கலக்கப்பட்டு, இந்த புறம்பான

சந்தோஷங்களில் விடப்படுகின்றன; அங்கே அவைகள் பிரிக்கப் பட்டு, சுத்தப்படுத்தப்பட்டு வெளிப்பட செய்யப்படுகின்றன; அப் படியிருந்தாலும், மோகங்களின் அதிக கொடிய சந்தோஷங்கள் விஷயத்தில் மாத்திரம் இது செய்யப்படுகிறது; ஏனென்றால், ஒரு துன்மார்க்கன் விஷயத்தில் குறைந்த கொடுமையான தீமையி லிருந்து, அதிக கொடுமையான தீமைகளினுடையவைகள் தவிர வேறு இதர பிரிவினையும், சுத்தப்படுத்தலும், பின்வாங்குதலும் சம்பவிக்கிறதில்லை; ஆனால் நல்லவன் விஷயத்தில் அதிக கொடு மையான தீமையின் பிரிவினையும், சுத்தப்படுத்தலும், பின் (12)வாங்குதலும் மாத்திரம் அல்லாமல், குறைவான கொடுமை யான தீமையினுடையவைகளும் கூட சம்பவிக்கிறது. நன்மை யானதும் உண்மையானதும், நியாயமானதும் மனப்பூர்வமானது மாகியவைகள் பேரில் கொள்ளும் ஆசைகளின் சந்தோஷங்களால் இது செய்யப்படுகிறது; மனிதனானவன் தீமைகளைப் பாவங்க ளாக மதித்து, அதனால் அவைகளைத் தள்ளி வெறுத்து இன்ன மும் அவைகளுக்கு விரோதமாய் சண்டை செய்கிறதற்கு தக்க படி, இன்னும் அந்த ஆசைகளில் அவன் பிரவேசிக்கிறான்; இரட்சிக்கப்பட்டவர்களை எல்லாம் ஆண்டவர் பரிசுத்தப்படுத்து கிறது இந்த வழிவகைகளால் தான். கீர்த்தியையும் கௌரவத்தை யும் சில சமயங்களில் செல்வத்தையும் மதிக்கிற புறம்பான வழி வகைகளால் அதே ஜனங்களை அவர் சுத்தப்படுத்துகிறார். அப்படி யிருந்தாலும், பின் கூறியவைகளில், அயலானிடத்து அன்பின் சந்தோஷங்களாகும்பொருட்டு ஒழுங்குபடுத்தப்பட்டு தகுதியாக் கப்படுகிற நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் (13) ஆசைகளின் சந்தோஷங்கள் இவைகளில் ஆண்டவரால் நடப்படுகின்றன. தீமையின் மோகங்களுடைய சந்தோஷங்களை எந்த உருவத்திலாவது உடனே ஒருவன் பார்த்தால், அல்லது எந்த இந்திரிய போதத்திலாவது அவன் அவைகளை பிரத்தியேக மாய் பார்த்தால், அவைகள் நிரூபிக்கக்கூடாதபடி அவ்வளவு ஏராளமானதா யிருப்பதை அவன் பார்த்து அறிந்து கொள்வான்; ஏனென்றால், நரகம் முழுமையும் தீமையின் எல்லா மோகங் களின் ஒரு உருவத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லை, மற்றொன்

ன்றைப்போல்வும் அல்லது மற்றொன்றாகவும் சரியாயிருக்கிற தீமை யின் மோகம் அங்கே இருக்கிறதில்லை, அதுவுமன்றி சதாகாலம் யிரையில் இருக்கவும் முடியாது; இந்த கணக்கற்ற மோகங்களைப் பற்றி மனிதனுக்கு யாதொன்றும் தெரியாது, இன்னும் அவைகள் எப்படி சேர்க்கப்பட்டிருக்கின்றனவென்று சுத்தமாய் தெரியாது; அப்படி யிருந்தாலும், தன்னுடைய தெய்வபரிபாலனத்தினால் எல்லா ஒழுங்கிலும் வரிசையிலும் செய்யப்படுகிற, அவர்கள் பிரிக்கப்பட வேண்டுமென்கிற நோக்கத்துடன், ஆண்டவர் அவை கள் வெளியே வர இடைவிடாமல் இடங்கொடுக்கிறார். மிகவும் குறைந்த உருவத்தில், ஒரு நல்ல மனிதன் சுவர்க்கமா யிருப்பது (14) போல், துன்மார்க்கன் குறைந்த உருவத்தில் ஒரு நரகமா யிருக்கிறான். தீமைகளிலிருந்து பிரித்தல். ஆண்டவரால் கணக் கற்ற வழிகளிலும் மிகவும் இரகசியமான வழிகளிலும் செய்யப் படுகிறதென்பது, சரீரத்தில் ஆன்மாவானது இரகசியமாய் செய் பவைகளிலிருந்து தவிர, வேறு விதத்தில் நன்றாய் அறிந்துகொள் ளப்பட்டு, இவ்விதமாக தீர்மானிக்கப்பட முடியாது. அவைகளில் மனிதன் தெரிந்துக்கொள்ளப்பட்டவைகள் பின் வருபவைகளா யிருக்கின்றன: தான் சாப்பிடப்போகிற உணவை, அவன் பார்த்து, அதன் வாசனையினால் அறிந்துகொண்டு, பசியினால் அபேட்சித்து, உருசிபார்த்து, பற்களினால் கடித்து, நாக்கினால் சுருட்டி அன்ன வாகி வரையிலும் அவ்விதமாய் இறைப்பைக்குள் தள்ளுதல் என்பதா யிருக்கிறது. ஆனால் தான் அவைகளை உணராதபடியி னால், மனிதனுக்கு ஒன்றும் தெரியாத ஆன்மாவின் இரகசியமான தொழிற்பாடுகள் இவைகளா யிருக்கின்றன: இறைப்பை ஏற்றுக் கொண்ட சாப்பாட்டை சுருட்டி, கரைக்கும் மருந்தினால் அதைத் திறந்து, பிரித்து, அதாவது அதைஜீரணம் செய்து, அங்கே திறக் கும் சிறிய வாய்களுக்கும் அவைகளை குடிக்கும் இரத்த நாளங் களுக்கும் அதன் தகுந்த பாகங்களை கொடுக்கிறதென்பதும், சில வற்றை இரத்தத்திற்கும், சிலவற்றை நிணநீர் ஓடும் நரம்புகளுக் கும், சிலவற்றை மணிக்குடலின் பாலுக்குரிய நரம்புகளுக்கும், சில வற்றை கீழே பெருங்குடலுக்கும் கொடுக்கிறதென்பதும், கடைசி யில் மணிக்குடலில், அதன் கொள்கலத்திலிருந்து மார்பிற்கு

அடுத்த குழாய் மூலமாய் கொண்டுபோகப்பட்ட அன்னசாரம், (Vena cava) என்னும் அசுத்த இரத்தக்குழாய்க் குள்ளும், அவ்வித மாய் இருதயத்திற்குள்ளும், இருதயத்திலிருந்து சுவாசாசயங்களி லும், அதிலிருந்து இருதயத்தின் இடது சடரத்தின் மூலமாய் இரத்த மூலாதாரத்துக்கும், இதிலிருந்து அதன் கிளைகள் மூல மாய் முழு சரீரத்தின் ஆந்திரிகங்களுக்கும், மூத்திரபிண்டங் களுக்கும் கொண்டுபோகப்படுகிறது என்பதுமா யிருக்கின்றன. அந்த ஆந்திரிகம் ஒவ்வொன்றிலும், ஒரு இரத்தத்தின் பிரிவினை யும், இரத்த சுத்தப்படுத்தலும், வேற்றியல்புள்ள பொருள்களை அதிலிருந்து நீக்குதலும் சம்பவிக்கிறது; இருதயமானது, அதன் இரத்தம் வடிகட்டப்பட்டபிறகு (அது Carotids என்று சொல்லப் பட்ட இரத்த தாதுக்கள் மூலமாய் செய்யப்படுகிறது) மூளைக்கு எப்படி காண்பிக்கிற தென்பதையும், மூளையானது அந்த இரத் தத்தை உயிர்ப்பித்து மார்பை அடுத்த குழாய் அன்னசாரத்தை உட்செலுத்துகிற இடத்துக்கு மேலே (Vena cava) என்னும் இரத் ததாதுவில் எப்படி திரும்பக்கொடுக்கிறதென்பதையும், அவ்வித மாய் இருதயத்துக்கு மறுபடியும் கொண்டுபோகிறதென்பதையும் (15) பேசவேண்டியதில்லை; இவைகளும், இதைத்தவிர கணக்கற்ற மற்றவைகளும், ஆன்மா சரீரத்தில் இரகசியமாய் செய்யும்கிரியை களா யிருக்கின்றன: இந்த கிரியைகளைப்பற்றி மனிதனுக்கு ஒன் றும் தெரியாது; அங்காதிபாத சாஸ்திரம் பயிலாதவனுக்கு அவை களைப்பற்றி ஒன்றும் தெரியாது. அப்படி யிருந்தாலும் அதைப் போன்றவைகள் மனிதனுடைய மனதின் அந்தரங்கத்தில் நடக் கின்றன; ஏனென்றால், மனதிலிருந்து தவிர சரீரத்தில் எதுவும் நடக்கமுடியாது; ஏனென்றால், மனிதனுடைய மனது அவனுடைய ஆவியாயிருக்கிறது, அவனுடைய ஆவியானது, சரீரத்தில் செய் யப்பட்டவைகளெல்லாம் ஜடமாய் செய்யப்படுகிறதென்கிறதும், மனதில் செய்யப்பட்டவைகள் எல்லாம் சூக்குமமாய் செய்யப்படு கிறதென்கிறதுமாகிய தனிமையான வித்தியாசத்துடன், சமமாய் ஒரு மனிதனுயிருக்கிறது; ஒரு பூரணமான ஒப்பனை யிருக்கிறது. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, தெய்வபரிபாலனம் ஒவ் வொரு மனிதனிலும், கணக்கற்ற வழிகளிலும், அதிக இரகசிய

மான வழிகளிலும் வேலை செய்கிறதென்றும், அவனை இரட்சிக்கும் பொருட்டு தொழிற்படுகிறபடியினுல், அவனை சுத்தப்படுத்தல் அதன் இடைவிடாத நோக்கமென்றும், புறம்பான மனிதனிலிருக்கும் தீமைகளை நீக்குதலைவிட மனிதனுக்கு வேறு கடமையில்லை என்றும் வெளிப்படையா யிருக்கிறது. ஆண்டவரை வேண்டிக்கொண்டால், மீதி இருப்பவைகளை அவர் சித்தப்படுத்துகிறுர்.

297. III. **துன்மார்க்கர்கள் தங்கள் சொந்த புத்தி எல்லாமாயும், தெய்வபரிபாலனம் ஒன்றுமில்லாததாயும் நம்புகிறவரையில் தீமையிலிருந்து தூரமாய் நன்மைக்குள் ஆண்டவரால் நடத்தப்படமுடியாது.** ஒரு மனிதன் இது அல்லது அது, பொது நன்மைக்கும், உபயோகமானதற்கும், தன் தேசத்தாருடையவும், பல தேசத்தாருடையவும் சட்டத்துக்கும் எதிரிடையா யிருக்கிறதென்று நினைக்கும்பட்சத்தில், அவன் தானே தீமையிலிருந்து நீக்கிக் கொள்ளக்கூடுமென்று தோன்றுகிறது. ஒரு துன்மார்க்கன் தானே கூறுகூறாய் பிரித்தும், புத்தியுடனும் தெளிவாய் நினைக்கும்படியாக, பிறப்பினுலாவது அனுபவத்தினுலாவது அவ்விதமா யிருந்தால், ஒரு நல்லவனைப்போல அவனும் இதைச் செய்யக்கூடும். அப்படி யிருந்தாலும், தீமையிலிருந்து அவன் தானே பின்வாங்க முடியாது; ஏனென்றுல் விஷயங்களை பிரத்தியேகமாய்கூட தெரிந்துகொண்டு உணரும் மனோசக்தி மேலே முழுதும் காண்பிக்கப்பட்டபடி, ஆண்டவரால் நல்லவன் கெட்டவன் ஒவ்வொருவனுக்கும் ஒரே மாதிரி கொடுக்கப்பட்டிருக்கிறது; அப்படியிருந்தாலும், மனிதன் அந்த மனோசக்தியின் மூலமாய் தீமையிலிருந்து தானே விடுதலை செய்துகொள்ளமாட்டான்; ஏனென்றுல், தீமையானது சித்தத்தைச் சேர்ந்திருக்கிறது, புத்தியானது, அறிவு உண்டாக்கியும், கற்பித்தும் வெளிச்சத்துடன் தவிர சித்தத்தில் பாய்கிறதில்லை; சித்தத்தின் சூடு, அதாவது மனிதனுடைய உயிரின் அன்பு, தீமையின் மோகங்களிலிருந்து எரிந்துகொண்டிருந்தால், நன்மையின் ஆசை விஷயத்தில் அப்பொழுது அது குளிர்ந்து போகிறது; ஆகையினுல் அவன் அதை பெற்றுக்கொள்ளாமல், அதை தள்ளுகிறுன் அல்லது அணைத்து விடுகிறுன், அல்லது எதோ ஒரு கல்பனை செய்த பொய்யினுல் அதை தீமையாக திருப்புகிறுன்.

குளிர்ந்த மரங்களில் பாயும்போது, அதேமாதிரி செய்ல்படுகிற கோடைகால வெளிச்சம் விஷயத்தில் சமமாய் தெளிவாயிருக்கிற மாரிகாலத்துவெளிச்சம், இவ்விஷயத்தில் இருப்பதுபோல இதிலும் இருக்கிறது. ஆனால் இது பின்வரும் ஒழுங்கில் அதிக பூரணமாய் அறிந்துகொள்ளலாம்: I ஒருவனுடைய சொந்தபுத்தி சித்தமானது தீமையிலிருக்கும் போது பொய்யைத்தவிர வேறொன்றையும் பார்க்கிறதில்லை; அதுவுமன்றி வேறு எதையும் விரும்புகிறதில்லை, பார்க்கவும் முடிகிறதில்லை. II. ஒருவனுடைய சொந்தபுத்தி அப்பொழுது உண்மையைப் பார்த்தால், அது தானே நீக்குகிறது அல்லது அதை பொய்படுத்துகிறது. III. தெய்வபரிபாலனம் மனிதனை இடைவிடாமல் உண்மையைப்பார்க்க செய்கிறது; மேலும் அம்மாதிரியே அதை அறிந்துகொள்ளும் ஆசையையும், அதை பெற்றுக்கொள்ளும் ஆசையையும் கொடுக்கிறது. IV. மனிதனானவன் தன்னாலல்லாமல் ஆண்டவரால், அதனால் தீமையிலிருந்து நீக்கப்படுகிறான்.

298. ஆனால் தீமையிலிருந்தாலும் நன்மையிலிருந்தாலும், இவ்விதமாக, நிறங்கள் இரண்டிலும் ஒரேமாதிரி இருக்கிறபடியினால், மாரிகாலத்து அல்லது கோடைகாலத்து வெளிச்சத்திலிருந்தாலும் பகுத்தறிவுள்ள மனிதன் இவைகளை அறிந்துகொள்ளும் பொருட்டு, அவைகளின் ஒழுங்கில் அவைகள் விவரிக்கப்படவேண்டும். முதலாவது: **சித்தமானது தீமையிலிருக்கும்போது ஒருவனுடைய சொந்த புத்தியானது பொய்யைத்தவிர வேறொன்றையும் பார்க்கிறதில்லை, அதுவுமன்றி வெறு எதையும்பாாக்க விரும்புகிறதுமில்லை, முடிகிறதுமில்லை.** இது சூக்கும உலகத்தில் அடிக்கடி காண்பிக்கப்பட்டிருக்கிறது. இறந்த பிறகு சம்பவிக்கிறபடி, ஒவ்வொரு மனிதனும், ஸ்தூல தேகத்தை போட்டு விட்டு சூக்கும தேகத்தை எடுத்துக்கொள்ளுகிறபடியினால், ஒரு ஆவியாகும் போது, புறம்பானதென்றும், அந்தரங்கமானதென்றும் சொல்லப்பட்ட அவன் உயிரின் இரண்டு நிலைமைகளில் முறைப்பிரகாரம் பிரவேசிக்கச்செய்யப்படுகிறான். புறம்பான நிலைமையிலிருக்கும் போது, பகுத்தறிவுள்ளவனும், புத்தியுள்ளவனுமாகிய மனிதன்

உலகத்திலிருக்கும்போது செய்கிறதுபோல் பகுத்தறிவுடனும் புத்தியுடனும் பேசி, செயல்படுகிறான்; சன்மார்க்கமான வாழ்விற்கும் தேசசார வாழ்விற்கும் சேர்ந்த அநேக விஷயங்களை மற்றவர்களுக்கு அவன் கற்பிக்கவும்கூட கூடும்; அவன் ஒரு போதகனாயிருந்திருந்தால், பரமார்த்தவாழ்விற்கு சேர்ந்த விஷயங்களை அவன் கற்பிக்கவும் கூடும். ஆனால் இந்த புறம்பான நிலைமையிலிருந்து அவனுடைய அந்தரங்கமான நிலைமைக்குகொண்டு வரப்பட்டு, புறம்பானது தூங்கவிடப்பட்டு, உள்ளானது எழுப்பப்பட்டால், அப்பொழுது அவன் கெட்டவனாயிருந்தால், தோற்றம் மாற்றப்படுகிறது; பகுத்தறிவுள்ளவனாயிருப்பதைவிட்டு, இந்திரிய சுக சம்பந்தமுள்ளவனாகிறான், புத்திசாலியாயிருப்பதைவிட்டு பைத்தியக்காரனாகிறான்; ஏனென்றால், அவன் அப்பொழுது அவனுடைய சித்தத்தினுடையவும், அதன் சந்தோஷத்தினுடையவும் தீமையிலிருந்து, இவ்விதமாக தன் சொந்த விவேகத்திலிருந்து, நினைத்து, துன்மார்க்கம் ஞானமென்றும், தந்திரம் விவேகமென்றும் நம்பி, பொய்யைத்தவிர வேறொன்றையும் அவன் பார்க்கிறதுமில்லை, தீமையைத்தவிர வேறொன்றையும் செய்கிறதுமில்லை; தன் சொந்த விவேகத்திலிருந்து தானே ஒரு கடவுள் என்று நம்பி, முழுமனதுடன் குற்றமுள்ள தொழில்களை உட்கொள்ளு
(2) கிறான். இந்தவிதமான பைத்தியங்களை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். ஆவிகள் இந்த மாறிமாறிவரும் நிலைமைகளில் ஒரு மணிநேரத்திற்குள் இரண்டு மூன்று தடவைகள் விடப்படுவதை நான் பார்த்தும்கூட இருக்கிறேன்; அப்பொழுது, தங்களுடைய மூடத்தனங்களை பார்க்கவும், அவைகளை ஒத்துக்கொள்ளவும்கூட அவர்களுக்கு அருள் செய்யப்பட்டது; என்றாலும், பகுத்தறிவுள்ளதும் சன்மார்க்கமானதுமான ஒரு நிலைமையிலிருக்க அவர்கள் விரும்பவில்லை, ஆனால் தங்கள் சொந்த இஷ்டப்படி, இந்திரிய சுக சம்பந்தமானதும் பைத்தியம் பிடித்ததுமான அந்தரங்க நிலைமைக்கு தாங்களே திரும்பிக் கொண்டார்கள்; ஏனென்றால், அவர்கள் உயிரின் அன்பினுடைய சந்தோஷம் அதிலிருந்தபடியினால், மற்றதைவிட இதை அதிகமாய் நேசித்தார்கள். தன்னுடைய புறம்பான ரூபத்தில் துன்மார்க்கன் இவ்வித

மானவனென்றும், அந்தரங்கமான நிலைமைக்குவரும் போதுஇவ் வித மாறுரூபம் அடைகிறனென்றும் யார் நம்பக்கூடும்? மனிதனவன் தன் சித்தத்தின் தீமையிலிருந்து நினைத்து செயல்படும் போது, அவனுடைய சொந்த விவேகத்தின் குணம் என்னவென்று, இந்த அனுபவத்திலிருந்து மாத்திரம் விசதமாகலாம். நல்லவர்கள் விஷயத்தில் சங்கதி வேறுமாதிரி; புறம்பான நிலைமையிலிருந்து உள்ளான நிலைமைக்கு கொண்டுவந்து விடப்பட்ட போது, அவர்கள் இன்னும் அதிக புத்திசாலிகளாகவும் அதிக (3) சன்மார்க்கமானவர்களாகவுமாகிறார்கள். இரண்டாவது: **ஒருவடைய சொந்த விவேகம் பிறகு உண்மையை அறிந்துகொண்டால், அது தானே திரும்பிக்கொள்ளுகிறது அல்லது அதை பொய்ப்படுத்துகிறது.** மனிதனுக்கு ஒரு சொந்த தன்மையும், புத்தி சம்பந்தமான சொந்த தன்மையுமிருக்கிறது; தன்னிஷ்டமான சொந்த தன்மை தீமையானது, புத்தி சம்பந்தமான சொந்த தன்மை அதிலிருந்து வரும் பொய்யாயிருக்கிறது; மனிதனுடைய சித்தம் என்பதால் பின் கூறியதும் மாம்ச சித்தம் என்பதனால் (யோவா. I. 13) முன் கூறியதும் கருதப்படுகிறது. தன்னிஷ்டமான சொந்த தன்மை, அதன் சாரத்தில் தன்னையே நேசித்தலாயிருக்கிறது, புத்தி சம்பந்தமான சொந்ததன்மை அந்த அன்பிலிருந்துவரும் கர்வமாயிருக்கிறது; இந்த இரண்டும் இரண்டு விவாகமான கூட்டாளிகளைப்போல் இருக்கிறது, அவைகளின் விவாகம் தீமையினுடையவும் பொய்யினுடையவும் விவாகமென்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு கெட்ட ஆவியும் தான் நரகத்திலிருப்பதற்கு முன் இந்த விவாகத்தில் பிரவேசிக்கச் செய்யப்படுகிறது; அது அங்கேயிருக்கும் காலத்தில் தன்னுடைய தீமையை சந்தோஷமாக உணருகிறபடியினால், அதைத் தான் நன்மைஎன்று சொல்லும் காரணத்தினால், நன்மை என்பது என்னவென்று அதற்கு தெரியாது; அப்பொழுது உண்மையை விட்டுவிட்டு தூரமாக திரும்பி போய் விடுகிறது; கண் அழகுள்ளதை பார்க்கிறது போல, தன்னுடைய தீமையோடு ஒத்துப்போகிற பொய்யை அது பார்க்கிறதினாலும், காதானது இனிமையானதை கேட்கிறதுபோல அதைக் (4) கேட்கிறபடியினாலும், அதைப் பார்க்கவும் விரும்புகிறதில்லை.

மூன்றுவது: தெய்வபரிபாலனமானது மனிதனை இடைவிடாமல் உண்மையைப் பார்க்கும்படி செய்து, அதனுடன் அதை அறிந்துகொள்ளவும் பெற்றுக்கொள்ளவும் ஆசையை கொடுக்கிறது. தெய்வபரிபாலனமானது உள்ளானவைகளிலிருந்து செயல்பட்டு, அதன் மூலமாய் புறம்பானவைகளிலும், அல்லது ஸ்தூல மனிதனிலிருக்கும் பொருள்களில் சூக்குமமானதிலிருந்து பாய்கிறபடியினால், இது செய்யப்படுகிறது. சுவர்க்கத்து வெளிச்சத்தினால் புத்தியை பிரகாசிக்கச்செய்து, சுவர்க்கத்து சூட்டினால், சித்தத்தை உயிர்ப்பிக்கிறது. சுவர்க்கத்து வெளிச்சம், அதன் சாரத்தில் பரம ஞான சக்தியாயிருக்கிறது, சுவர்க்கத்து சூடு, அதன் சாரத்தில் பரம இச்சாசத்தியா யிருக்கிறது; பரம ஞானசத்தியிலிருந்து உண்மையைத் தவிர வேறே யாதொன்றும் உள்ளே பாயாது, பரம இச்சா சத்தியிலிருந்து நன்மையைத் தவிர வேறு யாதொன்றும் உள்ளே பாயாது; பின் கூறியதிலிருந்து ஆண்டவர் புத்தியில் உண்மையைப் பார்க்கும் ஆசையையும், அதனுடன் அதை அறிந்து கொண்டு அதை ஏற்றுக்கொள்ளும் ஆசையையும் கொடுக்கிறது; இவ்விதமாக ஒரு மனிதனானவன் வெளி பார்வைக்கு மாத்திரமல்லாமல் உள்ளானதற்கும்கூட மனிதனாகிறான். யார் பகுத்தறிவுள்ளவனாகவும் பரமார்த்தமானவனாகவும் தோன்ற விரும்புகிறதில்லை? மற்றவர்களால் உண்மையான மனிதன் என்று அவன் நம்பப்பட அப்படி தோன்ற அவன் விரும்புகிறானென்று யாருக்கு தெரியாது? ஆகையினால் அதே காலத்தில் உள்ளே அல்லாமல், புறம்பான உருவத்தில் மாத்திரம் அவன் பகுத்தறிவுள்ளவனாகவும் பரமார்த்தமானவனாகவு மிருந்தால், அவன் ஒரு மனிதனா? நாடக சாலையில் ஆட்டக்காரனைப் போலவும், ஏறக்குறைய மனிதனைப் போன்ற முகத்தையுடைய வாலில்லாக் குரங்கைப்போலவும் தவிர அவன் வேறு ஒன்றுவானா? மற்றவர்களுக்கு தோன்றும்படியாக தான் விரும்புகிறபடி, அகத்தினு மிருக்கப்பட்டவன் மாத்திரம் மனிதனென்று இதனால் தெரிந்திருக்கப்பட மாட்டாதா? ஒன்றை ஒத்துக்கொள்ளுகிறவன் மற்றதையும் ஒத்துக்கொள்ளவேண்டும். ஆனால் ஒருவனுடைய சொந்தபுத்தி புறம்பானதின் பேரில் மாத்திரம் மானிட உருவத்தை கொண்டுவரும்; ஆனால் தெய்வபரி

பாலனம் அந்த உருவத்தை உள்ளானவைகளின் பேரிலும், உள்ளானவைகளின் மூலமாய் புறம்பானவைகளின்பேரிலும், கொண்டு வருகிறது; அப்படி கொண்டுவரப்பட்டபோது, மனிதன் மனிதனாக இருக்கிறதாக தோன்றுகிறதுமட்டுமல்லாமல், ஆனால் அவன்
(5) மனிதனாகவேயிருக்கிறான். நான்காவது: அதனால் மனிதனானவன், தன்னாலேயல்லாமல் ஆண்டவரால் தீமையிலிருந்து நீக்கப்படுகிறான். தெய்வபரிபாலனமானது உண்மையை அறிந்துகொள்ள மனிதனுக்கு சக்திகொடுத்து, அதேகாலத்தில் அதன் பேரில் அவனுக்கு ஆசையை உண்டாக்கும்போது, அவன் தீமையிலிருந்து நீக்கப்படலாமென்பது, உண்மையானது காண்பித்து கற்பிக்கிறது என்பதால் ஏற்படுகிறது; இவ்விதமாக காண்பிக்கப்பட்டு கற்பிக்கப்பட்டதை சித்தமானது செய்யும்போது, அது உண்மையுடனே தானே சேர்ந்துகொண்டு, தானே உண்மையை நன்மையாக திருப்புகிறது; ஏனென்றால், உண்மையானது, அதன் அன்பினுடையதாகிறது, அன்பைச்சேர்ந்தது நன்மையாயிருக்கிறது. எல்லா சீர்திருத்தலும் உண்மையினால் செய்யப்படுகிறது, அது இல்லாமல் ஒன்றும் செய்யப்படுகிறதில்லை; ஏனென்றால், உண்மையில்லாமல் போனால், சித்தமானது தன்னுடைய தீமையில் இடைவிடாமல் இருக்கிறது; அது புத்தியுடன் கூடி யோசித்தால், அது
(6) கற்பிக்கப்படுகிறதில்லை, ஆனால் தீமையானது பொய்களால் ஸ்திரப்படுத்தப்படுகிறது. விவேகம் விஷயத்தில் அது கெட்டவனோடுபோல, நல்லவனுடனும், தனக்கு தன்னுடைய சொந்தமானதாகவும், தகுந்ததாகவும் தோன்றுகிறது; இதைத்தவிர, ஒரு நல்லமனிதனானவன், ஒரு கெட்ட மனிதனைப்போல், தன்னுடைய சொந்தமானதுபோல் விவேகத்திலிருந்து செயல்படகடமைப்பட்டிருக்கிறான்; ஆனால் தெய்வபரிபாலனத்தை நம்புகிறவன், தீமையிலிருந்து நீக்கப்படுகிறான்; அப்படி நம்பாதவன் நீக்கப்படுகிறதில்லை; தீமையானது பாவமென்று ஒத்துக்கொண்டு, அதிலிருந்து நீக்கப்பட விரும்புகிறவன் நம்புகிறான்; அவ்விதமாய் ஒத்துக்கொண்டு விரும்பாதவன் நம்புகிறதில்லை. இந்த இரண்டுவித அறிவுக்கும் உள்ளவித்தியாசம், தன்னில் தானே இருப்பதாக நம்புவதற்கும், தன்னில் தானே இல்லாததாக நம்புவதற்கும் அப்படி

யிருந்தும் தன்னில் தானே போல், நம்புதற்கும் உள்ள வித்தியா சம்பேபாலிருக்கிறது; மேலும் அது, தன்னையே போன்ற ஒரு உள்ளானது இல்லாத புறம்பானதற்கும், தன்னைபோன்ற உள்ளானது இருக்கும் ஒரு புறம்பானதற்கும் உள்ளவித்தியாசம்போலகூட இருக்கிறது; இவ்விதமாக அரசர்களையும், இராஜகுமாரர்களையும், சேனாபதிகளையும் பாவனை காட்டும் பரிகாசக்காரர்களுடையவும் ஆட்டக்காரர்களுடையவும், வார்த்தைகளுக்கும் அபிநயங்களுக்கும், அரசர்களுக்கும் இராஜகுமாரர்களுக்கும் சேனாபதிகளுக்கும் உள்ளவித்தியாசம் போலிருக்கிறது; பின்கூறியவர்கள் உள்ளும் புறம்பும் இரண்டிலும் அவ்விதமா யிருக்கிறார்கள், ஆனால் மற்றவர்கள் புறம்பாய் மாத்திரம் அப்படி யிருக்கிறார்கள். புறம்பானது நீக்கப்பட்டபோது அவர்களை நாடகக்கவிகள் என்றும், கூத்தர்களென்றும், ஆட்டக்காரர்களென்றும் சொல்லப்படுகிறார்கள்.

299. IV. **ஆண்டவர் நரகத்தை எதிரிடையானவைகளால் ஆளுகிறார்; உலகத்திலுள்ள கெட்டவர்களை, நரகத்தில் புறம்பானவைகளில் அல்லாமல் உள்ளானவைகள் விஷயத்தில் ஆளுகிறார்.** சுவர்க்கத்தினுடையவும் நரகத்தினுடையவும் குணத்தை அறியாதவன், மனிதனுடைய மனதின் குணத்தை தெரிந்துகொள்ள முழுமையும் சக்தியற்றவனா யிருக்கிறான்; மனிதனுடைய மனது இறந்த பிறகு இருக்கும் அவனுடைய ஆவியாயிருக்கிறது. மனிதனுடைய மனது அல்லது ஆவி, அதன் உருவத்தில் முழுமையும் சுவர்க்கம் அல்லது நரகம் இருக்கப்பட்டதா யிருக்கிறதென்பது அதற்கு காரணமாயிருக்கிறது; ஒன்று மிகப் பெரியதென்பதும், மற்றது சின்னஞ்சிறியதென்பதும், அல்லது ஒன்று பாவனா ரூபமென்பதும் மற்றது அச்சென்பதும் தவிர மிகவும் கொஞ்சம் கூட வித்தியாசமுமில்லை: ஆகையினால், ஒரு மனிதனானவன் மனது அல்லது ஆவி சம்பந்தப்பட்டவரையில் மிகவும் குறைந்த உருவத்தில் ஒரு சுவர்க்கம் அல்லது நரகத்தைப் போலிருக்கிறான்; ஆண்டவரால் நடத்தப்பட்டவன் ஒரு சுவர்க்கமா யிருக்கிறான்; தன்னுடைய சொந்த தன்மையினால் நடத்தப்பட்டவன் ஒரு நரகமா யிருக்கிறான். இப்படி யிருக்கையில், சுவர்க்கம் என்ன குணமுடையதென்

றும், நரகம் என்ன குணமுடைய தென்றும் தெரிந்துகொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டபடியினுலும், மனிதனுடைய மனது அல்லது ஆவி சம்பந்தப்பட்டவரையில் அவனுடைய குணம் என்னவென்று தெரிந்துகொள்வது முக்கியமானபடியினுலும், இரண்டையும் சுருக்கமாய் விவரிக்க நான் விரும்புகிறேன்.

300. சுவர்க்கத்தி லிருப்பவர்க ளெல்லாம், நன்மையின் ஆசைகளைத் தவிரவும், அதிலிருந்து உண்மைகளின் சிந்தனைகளைத் தவிரவும் வேறொன்றுமில்லை; நரகத்திலிருப்பவர்களெல்லாம் தீமையின் மோகங்களைத் தவிரவும், அதிலிருந்து பொய்யின் மனக்கல்பனைகளைத் தவிரவும் வேறொன்றுமில்லை; நரகத்தில் தீமையின் மோகங்களும் பொய்யின் மனோகல்பனைகளும், சுவர்க்கத்திலிருக்கும் நன்மையின் ஆசைகளுக்கும் உண்மையின் சிந்தனைகளுக்கும், நேர் எதிரிடையாக இருக்கும்படி இரண்டு பக்கங்களிலும் அவைகள் அப்படி ஒழுங்காய் வைக்கப்படுகின்றன; ஆகையினுல், நரகமானது சுவர்க்கத்துக்கு கீழ் அதற்கு நேர்விரோதமாய், எதிரில் அதாவது ஒருவருக்கொருவர் எதிரான வழிகளில் பூச்சக்கரத்தின் மறுபுறத்தார் போல நின்றுகொண்டு, இவ்விதமாய் தவிழ்க்கப்பட்டு, உள்ளங்காலுக்கு எதிர்பக்கத்தில் சந்தித்து, குதிக்காலினுல் உதைத்துக்கொண்டிருக்கும் இரண்டு மனிதர்களைப்போல் இருக்கிறது. சில வேளைகளில் கூட, சுவர்க்கம் சம்பந்தப்பட்டவரையில் நரகமானது இவ்வித நிலையில் அல்லது அவ்விதமாய் திருப்பப்பட்டிருந்தது. நரகத்தி லிருப்பவர்கள் தீமையின் மோகங்களை சிரசாகவும், நன்மையின் ஆசைகளை பாதங்களாகவும் செய்கிறுர்களென்பது காரணமா யிருந்தது; ஆனுல், சுவர்க்கத்திலிருக்கிறவர்கள், நன்மையின் ஆசைகளை சிரசாகவும், தீமையின் மோகங்களை உள்ளங்காலாகவும் செய்கிறுர்கள்; அதினுல் தான் அன்னியோன்னியமான எதிரிடை உண்டாகிறது. சுவர்க்கத்தில், நன்மையின் ஆசைகளும், அதிலிருந்து உண்மையின் சிந்தனைகளும் இருக்கின்றன வென்றும், நரகத்தில் தீமையின் மோகங்களும், அதிலிருந்து பொய்யின் மனக்கல்பனைகளும் இருக்கின்றன வென்றும் சொல்லப்பட்டது; இவ்விதமாக ஆவிகளும்

தேவர்களும் அங்கேயிருக்கிறார்களென்று, இது அருத்தம்கொள்ளுகிறது; ஏனெனென்றால் ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த ஆசையாய் அல்லது தன்னுடைய சொந்த மோகமாயிருக்கிறான்; சுவர்க்கத்து ஒரு தேவன் தன்னுடைய சொந்த ஆசையாயிருக்கிறான், நரகத்து ஒரு ஆவி தன்னுடைய சொந்த மோகமாயிருக்கிறான்.

301. சுவர்க்கத்து தேவர்கள் நன்மையின் ஆசைகளாகவும், அதிலிருந்து உண்மையின் சிந்தனைகளாகவும் இருக்கிறார்களென்பது, அவர்கள் பரம இச்சாசத்தியையும், பரம ஞானசத்தியையும் ஆண்டவரிடமிருந்து பெற்றுக் கொள்பவர்களான படியினாலும், நன்மையின் எல்லா ஆசைகளும், பரம இச்சாசத்தியிலிருந்தும், உண்மையின் சிந்தனைகள் எல்லாம் பரம ஞானசத்தியிலிருந்தும் வருகிறபடியினாலும் ஏற்படுகிறது. ஆனால் நரகத்து ஆவிகள், தீமையின் மோகங்களாகவும், அதிலிருந்து பொய்யின் மனக் கல்பனைகளாகவும் இருக்கிறார்களென்பது, அவர்கள் தன்னையே நேசித்தலிலும், தங்களுடைய சொந்த அறிவிலும் இருக்கிறபடியினாலும், தீமையின் எல்லா மோகங்களும், தன்னையே நேசித்தலிலிருந்தும், பொய்யின் கல்பனைகள் ஒருவனுடைய சொந்த அறிவிலிருந்தும் வருகிறபடியினாலும் ஏற்படுகிறது.

302. சுவர்க்கத்தில் ஆசைகளினுடையவும், நரகத்தில்மோகங்களினுடையவும் ஏற்பாடுகள் ஆச்சரியமானதா யிருக்கிறது, அது ஆண்டவருக்கு மாத்திரம் தெரிந்திருக்கிறது; ஒவ்வொன்றிலும், பொதுவினமாகவும், சிறப்பினமாகவும் சிறப்படைவிக்கப்பட்டு, ஒன்றாக செயல்பட சேர்க்கப்பட்டிருக்கின்றன; அவைகள் பொதுவினமாகவும் சிறப்பினமாகவும் வரையறுக்கப்பட்டிருக்கிறபடியினால், அதிக பெரியதும் அதிக சிறியதுமான கூட்டங்களாக வரையறுக்கப்பட்டிருக்கின்றன; ஒன்றாக செயல்பட, அவைகள் அப்படி சேர்க்கப்பட்டிருக்கிற படியினால், மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களையும் போல அவைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகையினால் சுவர்க்கமானது அதன் உருவத்தில், தன் ஆன்மா பரம இச்சாசத்தியாகவும் பரம ஞானசத்தியாகவும், ஆகையினால்

ஆண்டவராகவு மிருக்கிற ஒரு அழகுள்ள மனிதனைப்போல் இருக்கிறது; நரகமானது, அதன் உருவத்தில், தன் ஆன்மா தன்னையேயும் தன்னுடைய சொந்த புத்தியையும், நேசிக்கிறதாகவும், அதனால் பிசாசாகவும் இருக்கிற குரூபமான மனிதனைப்போலவு மிருக்கிறது; ஏனென்றால், தனிமையான பிரபுவாய் அங்கே யிருக்கிற ஒரு பிசாசும் கிடையாது, ஆனால் தன்னையே நேசித்தல் அப்படி சொல்லப்படுகிறது.

303. ஆனால் சுவர்க்கத்தினுடையவும் நரகத்தினுடையவும் குணம் நன்றாய் தெரிந்திருக்கும் பொருட்டு நன்மையின் ஆசைகளுக்கு பதிலாக நன்மையின் சந்தோஷங்களும், தீமையின் மோகங்களுக்கு பதிலாக தீமையின் சந்தோஷங்களும் வைக்கப்படட்டும்; சந்தோஷங்கள் இல்லாமல், எந்த ஆசையும் மோகமும் இருக்கிறதில்லை; ஏனென்றால், ஒவ்வொருவனுடைய உயிரையும் இவைகள் உருவாக்குகின்றன. இந்த இன்பங்கள் தான் நன்மையின் ஆசைகளைக் குறித்தும், தீமையின் மோகங்களைக் குறித்தும், மேல்கூறிய விதமாய் வரையறுக்கப்பட்டும் சேர்க்கப்பட்டவைகளாயு மிருக்கின்றன. தன்னுடைய சொந்த ஆசையின் சந்தோஷம் சுவர்க்கத்து ஒவ்வொரு தேவனையும் நிரப்பி சுற்றிக்கொண்டிருக்கிறது; ஒரு பொதுவான சந்தோஷம் சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டத்தையும் நிரப்பி சுற்றிக்கொண்டிருக்கின்றது; எல்லாருடைய சந்தோஷமும் சேர்ந்து அல்லது ஒரு அதிகமான பொது சந்தோஷம் சர்வவியாபகமான சுவர்க்கத்தை நிரப்பி சுற்றிக்கொண்டிருக்கிறது. அதேமாதிரியாக தன்னுடைய சொந்த மோகத்தின் சந்தோஷம் நரகத்திலுள்ள ஒவ்வொரு ஆவியை நிரப்பி சுற்றிக்கொண்டிருக்கிறது, ஒரு பொதுவான சந்தோஷம் நரகத்திலுள்ள ஒவ்வொரு கூட்டத்தையும், எல்லாருடைய சந்தோஷம் அல்லது மிகவும் அதிகமான பொது சந்தோஷம் எல்லா நரகத்தையும் நிரப்பி சுற்றிக்கொண்டிருக்கிறது. சுவர்க்கத்து ஆசைகளும், நரகத்து மோகங்களும், மேல்கூறியபடி, ஒன்றுக்கொன்று நேர் விரோதமாய் இருப்பதினால், சுவர்க்கத்து சந்தோஷம் பொறுக்கமுடியாதபடி, நரகத்தில் அவ்வளவு சந்தோஷமற்ற

தாயிருக்கிறதென்று வெளிப்படையா யிருக்கிறது; வேறு முறைமையில் நரகத்து சந்தோஷம், பொறுக்கமுடியாதபடி சுவர்க்கத்தில் அவ்வளவு சந்தோஷமற்றதா யிருக்கிறது, அதனால் ஒவ்வாமையும் வெறுப்பும், பிரிவினையும் உண்டாகின்றன.

304. இந்த சந்தோஷங்கள் சிறப்பாய் ஒவ்வொருவனுடையவும், பொதுவாய் எல்லாருடையவும் உயிரை உருவாக்குகிறபடியினால், அவைகள், அவைகளில் இருப்பவர்களால் இந்திரிய கிராகியமாய் அறிந்துகொள்ளப்படுகிறதில்லை; ஆனால், அவைகளின் எதிரிடையானவைகள், அவைகள் சமீபமாய் வரும்போது, முக்கியமாய் அவைகள் நாற்றங்களாக திருப்பப்படும்போது, இந்திரிய கிராகியமாய் அறிந்துகொள்ளப்படுகிறது; ஏனென்றால்,ஒவ்வொரு சிறப்பான சந்தோஷமும், ஒரு நாற்றத்துடன் அன்னுவயப் படுகிறது, சூக்கும உலகத்தில் அதேவாக மாற்றப்படக்கூடும்; அப்பொழுது சுவர்க்கத்திலிருக்கும் பொது சந்தோஷமானது ஒரு தோட்டத்தின் நாற்றம்போல், அங்கே யிருக்கும் புஷ்பங்களிலிருந்தும் பழங்களிலிருந்தும் வரும் நறுமணங்களுக்கு தக்கபடி பலவிதமாய் இந்திரிய கிராகியமாய் அறிந்துகொள்ளப்படுகிறது; நரகத்திலிருக்கும் பொது சந்தோஷமானது, பலவித அழுக்குகள் போடப்பட்ட தங்கும் தண்ணீர்போல, அங்கே யிருக்கும் அழுகியதும் அபகாரமாகியதுமாகிய பொருள்களிலிருந்துவரும் கெட்ட நாற்றங்களுக்கு தக்கபடி பலவிதமாய் யூகமாய் அறிந்துகொள்ளப்படுகிறது. ஆனால், சுவர்க்கத்திலிருக்கும் நன்மையின் எந்த ஆசையின் சந்தோஷமும், நரகத்திலிருக்கும் தீமையின் மோகத்தின் சந்தோஷமும், எப்படி உணரப்படுகின்றதென்பது தெரிந்துகொள்ளக்கூட எனக்கு அருள் செய்யப்பட்டது; ஆனால் அதை இங்கே விவரித்தால் விரியும்.

305. உலகத்திலிருந்து புதிதாய்வந்த அநேகர் தங்களுடைய உயிரின் கதி, தங்கள் அன்பின் ஆசைகளுக்கு தக்கபடி யிருக்குமென்று, தங்களுக்கு தெரிந்திருக்கவில்லை என்று முறையிடுவதை நான் கேட்டிருக்கிறேன்; தங்களுக்கு சந்தோஷமா யிருந்ததை

தாங்கள் நேசித்தபடியினால், உலகத்திலிருந்தபோது அந்த ஆசைகளைப்பற்றியும், இன்னும் குறைவாய் அவைகளின் சந்தோஷங்களைப்பற்றியும், தாங்கள் நினைக்கவே இல்லையென்றும், ஒவ்வொருவனுடைய கதியும் விவேகத்திலிருந்து வரும் சிந்தனைகளுக்கு தக்கபடியும், முக்கியமாய் தெய்வபக்தியிலிருந்தும், விசுவாசத்திலிருந்தும், கூட வருகிற சிந்தனைகள்படிக்கும் இருக்குமென்றும் மாத்திரம் தாங்கள் நம்பியிருந்ததாகவும், அவர்கள் சொன்னார்கள். உயிரின் தீமை சுவர்க்கத்துக்கு இதமானதல்லவென்றும், கடவுளுக்கு சந்தோஷமில்லாததென்றும், ஆனால், நரகத்துக்கு இதமானதென்றும், பிசாசுக்கு சந்தோஷமானதென்றும், மற்றமுறையில், உயிரின் நன்மை சுவர்க்கத்துக்கு இதமானதென்றும், கடவுளுக்கு சந்தோஷமானதென்றும், ஆனால் நரகத்துக்கு ஒவ்வாததென்றும், பிசாசுக்கு சந்தோஷமில்லாததென்றும், அதனால்கூட தீமையானது தன்னில் தானே நாறுகிறதென்றும், நன்மையானது தன்னில்தானே நறுமணமுடையதென்றும், தாங்கள் விரும்பியிருந்தால், அவர்கள் இதை அறிந்துகொண்டுயிருக்கலாமென்றும், தாங்கள் விரும்பி இருந்தால், இதை தெரிந்துகொண்டிருக்கக்கூடுமாகையால், அவர்கள் ஏன் தீமைகளை நரகத்துக்கு அடுத்ததென்றும் பேய்த்தனமுள்ளதென்றும் நீக்கவில்லையென்றும், தீமைகள் சந்தோஷமா யிருந்தபடியினால் மாத்திரம் அவைகளை அவர்கள் ஏன் கடாட்சித்தார்களென்றும் பதில் கொடுக்கப்பட்டது. இப்பொழுது அவர்களுக்கு தீமையின் சந்தோஷங்கள் அவ்வளவு கெட்ட நாற்றமுடையதாயிருப்பது தெரிந்திருக்கிறபடியினால், அவைகளால் நிறைந்தவர்கள் சுவர்க்கத்துக்கு வரமுடியாதென்று அவர்களுக்கு தெரிந்தும்கூட யிருக்கலாம். இந்த உத்திரம் கேட்டபிறகு, அம்மாதிரியான சிந்தனைகளில் இருந்தவர்களுடன் அவர்கள் அண்டிக்கொண்டார்கள்; ஏனென்றால், வேறுஇடத்தில் அல்லாமல் அங்கே தான் அவர்கள் மூச்சுவிடக்கூடும்.

306. சுவர்க்கத்தையும் நரகத்தையும் குறித்து, இப்பொழுது சொல்லிய அபிப்பிராயத்திலிருந்து, மனிதனுடைய மனது என்ன

குணமுடையதென்று விசதமாகலாம்; ஏனென்ருல், முன்சொல்லியபடி, மனிதனுடைய மனது அல்லது ஆவி மிகவும் குறைந்த உருவத்தில் சுவர்க்கம் அல்லது நரகமாக இருக்கிறது; அதாவது அதன் உள்ளானவைகள் பெரியதும் சிறியதுமான கூட்டங்களைப் போல் பொதுவினங்களாகவும் சிறப்பினங்களாகவும் வரையறுக்கப்பட்டு, ஒன்ருக செயல்படும்படியாக சேர்க்கப்பட்டிருக்கும் ஆசைகளாகவும் அதிலிருந்து சிந்தனைகளாகவு மிருக்கின்றன; மேலும், ஆண்டவர், சுவர்க்கத்தையும் நரகத்தையும் ஆளுகிறது போல் அதேமாதிரியாய் அவைகளை ஆளுகிருர் என்றும் விசதமாகலாம். மனிதனுனவன் மிகவும் குறைந்த உருவத்தில் ஒரு நரகமல்லது சுவர்க்கமா யிருக்கிருனென்பது 1758ம் வருஷத்தில் **லண்டன்** நகரத்தில் பிரசுரம் செய்த **சுவர்க்கத்தையும் நரகத்தையும்** குறித்த நூலில் பார்க்கப்படலாம் (பி. 51–87).

307. இப்பொழுது ஆண்டவர் நரகத்தை எதிரானவைகளால் ஆளுகிருர் என்பதும், உலகத்தில் உள்ள கெட்டவர்களை, புறம்பானவைகள் விஷயமல்மாமல், உள்ளானவைகள் விஷயத்தில் அவர் நரகத்தில் ஆளுகிருரென்பதுமாக, தற்காலம் ஆலோசனையிலிருக்கும் விஷயத்தைப்பற்றிப் பேசலாம். **ஆண்டவர் நரகத்தை எதிரானவைகளால்** ஆளுகிருரென்கிற முதல் விஷயத்தைப்பற்றி, மேலே (பி. 288, 289) சுவர்க்கத்து தேவர்கள், அன்பிலும், ஞானத்திலும், அல்லது நன்மையின் ஆசையிலும், அதிலிருந்து உண்மையின் சிந்தனையிலும் தங்களிடமிருந்தேயல்லாமல், ஆண்டவரிடமிருந்து அப்படியிருப்பதாகவும், மேலும் நன்மையும் உண்மையும் சுவர்க்கத்திலிருந்து நரகத்துக்குள்ளே பாய்கிறதாகவும், அங்கேயிருப்பவர்களுடைய மனதுகளின் உள்ளானவைகள் எதிரிடையான திக்குகளில் திருப்பப்பட்டிருப்பதினுல், அங்கே நன்மையானது தீமையாகவும், உண்மையானது பொய்யாகவும் திருப்பப்படுகிறதாகவும் காண்பிக்கப்பட்டது. நரகத்திலுள்ள எல்லா பொருள்களும், சுவர்க்கத்திலுள்ள எல்லாபொருள்களுக்கும் எதிரிடையாயிருப்பதினுல், ஆண்டவர் நரகத்தை எதி(2) ரிடையானவைகளால் ஆளுகிருரென்று ஏற்படுகிறது. இரண்

டாவது: **உலகத்திலுள்ள கெட்டவர்களை ஆண்டவர் நரகத்தில் ஆளுகிறார்.** மனிதன் தன் ஆவி சம்பந்தப்பட்டவரையில் சூக்கும உலகத்திலும், அங்கே எதோ ஒரு கூட்டத்திலும் இருப்பதினால் இது சம்பவிக்கிறது; அவன் கெட்டவனாயிருந்தால், ஒரு நரக சம்பந்தமான கூட்டத்திலும், நல்லவனாயிருந்தால் சுவர்க்கத்துக்குசம்பந்தப்பட்ட கூட்டத்திலும் இருக்கிறான்; ஏனென்றால், தன்னில் தானே சூக்குமமாயிருக்கிற மனிதனுடைய மனது, இறந்தபிறகு அவன் கூட வருகிற சூக்கும பிராணிகள் மத்தியில் தவிர வேறு இடங்களில் இருக்கமுடியாது; அது அப்படியிருக்கிறதென்றும் கூட மேலே சொல்லப்பட்டு, காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், ஒரு மனிதனானவன், அந்த கூட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கும் ஒரு ஆவியைப்போல் அதேமாதிரி அங்கே யிருக்கிறதில்லை; ஏனென்றால், மனிதனானவன் சீர்படுத்தப்படும் நிலைமையில் இடைவிடாமலிருக்கிறான்; ஆகையினால், அவன் கெட்டவனாயிருந்தால், அவனுடைய உயிரையும் அதன் மாறுதல்களையும் அனுசரித்து, ஆண்டவரால், நரகத்தின் ஒரு கூட்டத்திலிருந்து மற்றதற்கு மாற்றப்படுகிறான்; ஆனால் சீர்படுத்தப்பட தானே விட்டால், அவன் நரகத்திலிருந்து வெளியேபோக வழிகாட்டப்பட்டு, சுவர்க்கத்துக்கு உயர்த்தப்பட்டு, அங்கேகூட ஒரு கூட்டத்திலிருந்து மற்றதற்கு அவன் மாற்றப்படுகிறான்; இறக்கும்வரையில்கூட இது நடக்கிறது; அதன் பிறகு அவன் அங்கே ஒரு கூட்டத்திலிருந்து மற்ற கூட்டத்திற்கு அப்புறம் அவன் கொண்டுபோகப்படுகிறதில்லை; ஏனென்றால், அப்பொழுது அவன் எந்த சீர்படும் நிலைமையிலும் இன்னும் இல்லாமல், வாழ்விற்கு தக்கபடி தான் இருக்கிற நிலைமையில் இருக்கிறான். ஆகையினால், ஒரு மனிதனானவன் இறக்கும் போது அவன் சொந்த இடத்தில் எழுதிவைக்கப்படுகிறான்.

(3) மூன்றாவது: **ஆண்டவர் உள்ளானவைகள் விஷயத்தில் உலகத்தில் உள்ள கெட்டவர்களை இவ்விதமாக ஆளுகிறார், புறம்பானவிஷயங்களில் வேறுவிதமாய் ஆளுகிறார்.** ஆண்டவர் மனிதனுடைய மனதின் அந்தரங்கங்களை இப்பொழுது சொல்லிவந்தபடி ஆளுகிறார்; ஆனால், புறம்பானவைகளை, சுவர்க்கத்துக்கும் நரகத்திற்கும் மத்தியிலுள்ள ஆவிகள் உலகத்தில் ஆளுகிறார். மனிதனானவன், அநேக

மாய், அவன் உள்ளானவைகளில் இருப்பதைவிட புறம்பானவை களில் இருப்பது, வித்தியாசமாயிருப்பது காரணமாயிருக்கிறது; ஏனென்றால், புறம்பானவைகளில் ஒளியுள்ள ஒரு தேவனைப்போல அவன் நடித்தபோதிலும், உள்ளானவைகளில் இருள் நிறைந்த ஆவியாக யிருக்கலாம்; ஆகையினால், அவனுடைய புறம்பானது ஒருவழியிலும் உள்ளானது வேறுவழியிலும் ஆளப்படுகிறது. அவன் உலகத்திலிருக்கிறவரையில், அவனுடைய புறம்பானது ஆவிகள் உலகத்தில் ஆளப்படுகிறது, ஆனால் உள்ளானது சுவர்க் கத்திலாவது நரகத்திலாவது ஆளப்படுகிறது; ஆகையினால் கூட, அவன் இறக்கும்போது, அவன் முதலில் ஆவிகள் உலகத்திற்கு வருகிறான், அங்கே அவனுடைய புறம்பானதற்கு வருகிறான்; இதுவும் அங்கே நீக்கப்படுகிறது; அது செய்யப்பட்டபிறகு, அவன் எழுதிவைக்கப்படுகிற தன்னுடைய சொந்த இடத்துக்கு கொண்டுபோகப்படுகிறான். ஆவிகள் உலகம் என்னவென்றும், அதன் குணம் என்னவென்றும், 1758ம் வருஷத்தில் லண்டன் நகரத்தில் பிரசுரம் செய்யப்பட்ட சுவர்க்கத்தையும் நரகத்தையும் குறித்த நூலில் (பி. 421-535) பார்க்கப்படலாம்.

---

**தெய்வபரிபாலனம் எவனுக்கும் தீமையை அல்லது நன்மையை பிரத்தியேகமாய் தனதாக்குகிறதில்லை, ஆனால் மனிதனுடைய சொந்த புத்தியே இரண்டையும் தனதாக்கிக் கொள்ளுகிறது.**

308. ஏறக்குறைய ஒவ்வொருவனாலும், மனிதனானவன் தன்னிடமேயிருந்து நினைத்து இச்சிக்கிறதாகவும், அதிலிருந்து தன்னிடமேயிருந்து பேசுகிறதாகவும், செயல்படுகிறதாகவும் நம்பப்படுகிறது. விஷயம் அப்படி யிருக்கிறதென்கிற தோற்றம் முடியாத காரியமாயிருக்கிற உண்மையாய் தன்னிடமேயிருந்து

நினைத்தலிலிருந்தும், இச்சித்தலிலிருந்தும், பேசுதலிலிருந்தும், செயல்படுதலிலிருந்தும், கொஞ்சம்கூட மாறுபடாதபடி அவ்வளவு வலிமையுள்ளதா யிருக்கிறதினால், தன்னிடமே இருந்து தீர்மானிக்குங்கால் வேறுவிதமாய் யார் நினைக்கக்கூடும்? பதிபசுபாச விளக்கம் எனும் நூலில், ஒரே ஒரு உயிர் இருக்கிறதென்றும், மனிதர்கள் உயிரைப் பெற்றுக்கொள்பவர்கள் என்றும், மேலும் மனிதனுடைய சித்தம் அன்பின் கொள்கலமென்றும், அவனுடைய புத்தி ஞானத்தின் கொள்கலமென்றும் நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது; அந்த இரண்டும் அதாவது அன்பும் ஞானமும் அந்த ஒரே ஒரு உயிரா யிருக்கின்றன. மேலும் அங்கே கூட அது சிருஷ்டியிலிருந்தும், அதிலிருந்தும் இடைவிடாமல் தெய்வபரிபாலனத்திலிருந்தும் அது வருகிறதென்றும், இந்த உயிரானது மனிதனில் தன்னுடையது போலவும், அதனால், அது தன்னுடைய சொந்தம் போலவும் அவ்வித ஒப்பனையில் தோன்ற வேண்டுமென்றும், ஆனால் இது, மனிதன் ஒரு கொள்கலமாயிருக்கும் நோக்கத்தின்பொருட்டு, ஒரு தோற்றமென்றும் நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும், மேலே (பி. 288-294), எந்த மனிதனும் தன்னிடமே யிருந்தல்லாமல் மற்றவர்களிடமிருந்து நினைக்கிறதாகவும், அதுவுமன்றி, இந்த மற்றவர்களும் தங்களிடமே இருந்தல்லாமல் எல்லாரும் ஆண்டவரிடமிருந்தும் நினைக்கிறதாகவும், நல்லவன் கெட்டவன் இருவகையார் விஷயத்திலும், இது இப்படியிருப்பதாகவும், மேலும் இது, கிருஸ்துவ உலகத்தில், முக்கியமாய் எல்லா நன்மையும் உண்மையும், அதனுடன் எல்லா ஞானமும், இவ்விதமாக விசுவாசமும் தருமமும், ஆண்டவரிடமிருந்து வருவதாக சொல்வதுமட்டுமல்லாமல்,நம்புகிறவர்களுக்கு இது தெரிந்திருக்கிறதாகவும், மேலும், எல்லா தீமையும் பொய்யும் பிசாசினிடமிருந்து அல்லது நரகத்திலிருந்து வருகிறதாக (2) வும்கூட மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இவைகளிலெல்லாமிருந்து, ஒரு மனிதன் நினைத்து இச்சிக்கிற ஒவ்வொன்றும் உள்ளே பாய்கிறதென்பதைத் தவிர, வேறு எந்த தீர்மானமும் பின்தொடர முடியாது; எல்லா பேச்சும் காரணத்திலிருந்து காரியத்தைப்போல சிந்தனையிலிருந்து பாய்கிறதினாலும், அதே

மாதிரி சித்தத்திலிருந்து எல்லா கிரியைகளும் பாய்கிறபடியினு லும், ஒரு மனிதன் பேசுகிறதும் செய்கிறதும், ஒவ்வொன்றும் கூட உற்பன்னமாயும் அல்லது நடுவாயும் இருந்தபோதிலும், உள்ளே பாய்கிறது என்று ஏற்படுகிறது. ஒரு மனிதன் பார்க்கிற தும், கேட்கிறதும், முகருகிறதும், ருசிபார்க்கிறதும், உணரு கிறதுமாகிய எல்லாம் உள்ளே பாய்கிறதென்பது மறுக்க முடி யாது; ஒரு மனிதன் நினைக்கிறதும் இச்சிக்கிறதுமாகியது,ஏன் அப் படி செய்யக்கூடாது? புறம்பான புலன்களின் அல்லது சரீரத் தின் அவயவங்களுக்குள், இவ்விதமான பொருள்கள் ஸ்தூல உலகத்தில் நடக்கிறதுபோல் பாய்கின்றன என்பதும், அந்தரங்க மான புலன்களின் அல்லது மனதின் அவயசம்பந்தமானபொருள் களில், இவ்விதமான பொருள்கள் சூக்கும உலகத்தில் நடக்கிறது போல் பாய்கின்றன என்பதும் தவிர, வேறு எந்த வித்தியாச மாவது இருக்கக்கூடுமா? அதனால் புறம்பான புலன்களின் அல் லது சரீரத்தின் அவயவங்கள் ஸ்தூலப் பொருள்களுக்கு கொள் கலங்களாயிருப்பது போல், உள்ளான புலன்களின் அல்லது மன தின் அங்க சம்பந்தமான பொருள்கள், சூக்கும பொருள்களுக்கு கொள்கலங்களா யிருக்கின்றன. மனிதன் நிலைமை இவ்விதமா (3) யிருக்கையில், அவனுடைய சொந்த தன்மை என்பது என்ன? அவனுடைய சொந்த தன்மை, இந்த விதமான பொருள்களுக்கு கொள்கலமா யிருக்கிறதினால் அமைந்தில்லை. இந்த சொந்த தன்மையானது, பெற்றுக்கொள்ளும் விஷயத்தில் அவனுடைய குணத்தைவிட வேறொன்றுமாய் இல்லாதபடியினால், அது உயிரின் சொந்த தன்மையாயில்லை; ஏனென்றால், சொந்ததன்மை என்ப தால் தன்னிடமே யிருந்து தான் வாழ்வதாகவும், ஆகையினால் தன்னிடமே யிருந்து நினைத்து இச்சிக்கிறதாகவும்தவிர, வேறொன் றையும் எவனும் அறிந்து கொள்ளுகிறதில்லை; இந்த சொந்த தன்மையானது மனிதனில் இல்லை என்பதும் நிஜமாக எந்தமனித னிடத்திலும் இருக்க முடியாதென்பதும் மேலே கூறிய விஷயங் களிலிருந்து ஏற்படுகிறது.

309. ஆனால், சூக்ஷ்ம உலகத்தில் சிலரிடமிருந்து நான் கேள்விப்பட்டதை சொல்லுகிறேன். அவர்கள் தங்களுடைய சொந்த புத்தியே எல்லாமென்றும், தெய்வபரிபாலனமானது ஒன்றுமில்லாததென்றும், நம்பினவர்களுக்கு சேர்ந்தவர்களாயிருந்தார்கள். இந்த அல்லது அந்த விதமானதின் பொருளாயும், இந்த அல்லது அந்த விதமானதின் அங்கமாயும், இந்த அல்லது அந்த விதமானதின் உருவமாகவும், மனிதன் இருத்தலே அவனுடைய சொந்த தன்மையென்று சொல்ல இஷ்டப்பட்டாலொழிய, அவனுக்கு சொந்த தன்மை இல்லையென்று நான் சொன்னேன்; ஆனால் கருதப்பட்டது இந்த சொந்த தன்மையல்ல; ஏனென்றால், அது அவனுடைய குணமாக மாத்திரம் இருக்கிறது; மேலும், எந்த மனிதனுக்கும், சொந்ததன்மை இருப்பதாக சாதாரணமாய் அறிந்துக்கொள்ளப் படுகிறபடி, எந்த சொந்த தன்மையும் கிடையாது. தங்கள் சொந்த மனக்கல்பனையில் ஆட்சிக்காரர்களென்றுகூட சொல்லப்படக்கூடிய தங்களுடையசொந்த விவேகத்துக்கு எல்லாவற்றையும் ஆரோபித்தவர்கள், நாசித்துவாரங்களிலிருந்து ஒரு சுவாலை தோன்றும்படியாக அவ்வளவு கோபங்கொண்டு, "அசத்தியாபாசமானதும் உன்மத்தமானதுமாகிய விஷயங்களை நீ பேசுகிறாய்; இவ்விதமாக ஒரு மனிதன் சூனியமாகவும் வெறுமையாகவும் இருக்கமாட்டானா? அல்லது ஒரு அபிப்பிராயமாகவும் வீணெண்ணமாகவும், அல்லது செதுக்கிய பிரதிமையாகவும் கற்பாவையாகவும் இருக்கமாட்டானா? (2) ஆனால், மனிதன் தன்னிடமேயிருந்து, வந்த உயிரென்றும், ஞானமும் விவேகமும் கடவுளிடமிருந்து உள்ளே பாய்கிறதில்லையென்றும், ஆனால் மனிதனிலேயே இருக்கிறதென்றும், இம்மாதிரியே கூட தருமத்தைச் சேர்ந்த நன்மையும் பக்தியைச் சேர்ந்த உண்மையும் இருக்கிறதென்றும், நம்புதல் அசத்தியாபாசமானதென்றும், உன் மத்தமானதென்றும்மாத்திரம் நான் பதில் சொல்லக்கூடும். பின்கூறிய இவைகளை ஒருவன் தனக்கே ஆரோபித்தல் ஒவ்வொருஞானியாலும் பைத்தியமென்று சொல்லப்படுகிறது, அதனால் அது அசத்தியாபாசமாககூட இருக்கிறது; மேலும், அப்படி செய்கிறவர்கள் மற்றவன் ஒருவனுடைய வீட்டையும்

சொத்தையும் அனுபவித்து, அங்கே யிருக்கும்போது அவைகள் தங்களுடைய சொந்தமென்று தாங்களே ஒப்புக்கொள்ளுகிறவர்கள் போலவும், அல்லது தங்கள் எஜமானனுக்கு சேர்ந்தவைகள் எல்லாம் தங்களுடையதாக நம்புகிற நிர்வாகக்காரன் போலவும், விசாரணை கருத்தாக்கள் போலவும், அல்லது தங்கள் எஜமானனால் வர்த்தகம்செய்ய நாணயங்கள் கொடுக்கப்பட்டு, அதற்கு ஒரு கணக்கும் ஒப்பிக்காமல் தங்களுடையதுபோல அவைகளை வைத்துக்கொண்டு, அவ்விதமாக திருடர்களைப் போலவும் நடந்த ஊழியக் (3)காரர்கள் போலவும், இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரையும் பற்றி அவர்கள் பைத்தியக்காரர்களென்றும், நிஜமாகவே, அவர்கள் சூனியமென்றும் வெறுமைஎன்றும், அதனுடன் அவர்கள் மாயாவாதிகளென்றும் சொல்லலாம்; ஏனென்றால், தங்களுக்குள்ளேயே ஆண்டவரிடமிருந்து, உயிரின் சொரூபமாகவே யிருக்கிற நன்மையும், அதுவுமல்லாமல் அதனால் உண்மையும் அவர்கள் உடைத்தாயிருக்கிறதில்லை. ஆகையினால், அவ்விதமானவர்கள் இறந்தவர்களென்றும், அதேமாதிரி சூனியமென்றும் வெறுமையென்றும் (ஐசாயா XI-17. 23லிலும் வேறு இடங்களிலும்) ஒரு பிரதிமை செய்யப்பட்டவர்களென்றும், மறுபடியும் செதுக்கிய பிரதிமைகள் என்றும் கற்பாவைகளென்றும்கூட சொல்லப்படுகிறார்கள். ஆனால் இந்த ஒழுங்கில் யோசிக்கப்படப்படுகிற பின் வருவதில் இவைகளைப்பற்றி அதிகம் பேசலாம். I. ஒருவனுடைய சொந்த விவேகம் என்னவென்பதும் தனக்கு சொந்தமில்லாத விவேகம் என்னவென்பதும். II. மனிதனானவன் தன்னுடைய சொந்த விவேகத்திலிருந்து, எல்லா நன்மையும் உண்மையும் தன்னிடமேயிருந்தும், தன்னிலேயும் இருப்பதாக தானே ஒப்பி தன்னுடன் ஸ்திரப்படுகிறான்; அதேமாதிரி எல்லா தீமையுடனும் பொய்யுடனும் செய்கிறான். III. மனிதன் தானே ஒப்புக்கொண்ட ஒவ்வொன்றும், அவன் தன்னிலேயே ஸ்திரப்படுத்திக் கொண்ட ஒவ்வொன்றும், அவனுடைய சொந்த தன்மையாக அவனில் நிற்கிறது. IV. உண்மையானபடி, எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்தும், எல்லா தீமையும் பொய்யும் நரகத்திலிருந்தும் வருகிறதாக மனிதன் நம்பினால், அவன் நன்மையை தனதாகவே செய்

துக்கொண்டு, அதை புகழ்ச்சிக் கிடமானதாக செய்யமாட்டான், அதுவுமன்றி தீமையை தனக்கே உரித்தாக செய்துகொண்டு, அதனுல் அந்த குற்றவாளியாக செய்துகொள்ளமாட்டான்.

310. I.* **ஒருவனுடைய சொந்த விவேகம் என்னவென்பதும் தனக்கு சொந்தமில்லாத விவேகம் என்னவென்பதும்.** தங்களுக்குள்ளேயே தோற்றங்களை ஸ்திரப்படுத்தி, அவைகளை உண்மைகளாக செய்கிறவர்கள், தங்களிடமேயிருந்து வந்த விவேகத்தில் இருக்கிறுர்கள்; முக்கியமாய், தன்னிடமே இருந்துவந்த விவேகம் எல்லாமாகிறதென்கிறதும்,மேலேகாண்பித்தபடி அதை உண்டாக்குகிற விவரங்கள் இல்லாவிட்டால், சூனியமாகிறதென்கிற ஒரு சர்வவியாபகமான சட்டத்தைதவிர தெய்வபரிபாலனம் யாதொன்றுமில்லை என்பதுமாகிய தோற்றம் அவ்விதமானது. அவர்கள் போலி நியாயங்களில்கூட சிக்கிக்கொண்டு இருக்கிருர்கள்; ஏனென்ருல், ஒரு உண்மையாக ஸ்திரப்படுத்தப்பட்ட ஒவ்வொரு தோற்றமும், ஒருபோலி நியாயமாகிறது; போலி நியாயங்களால் தாங்களே ஸ்திரப்படுகிற அளவு, அவர்கள் தாவரசங்கம சாஸ்திரீகளாகிருர்கள். இந்த இந்திரியபோதமானது முக்கியமாய்சிந்தனையோடு ஒன்ருக செயல்படுகிறபடியினுல், சரீர இந்திரியங்கள் சிலதால், முக்கியமாய் பார்க்கும் இந்திரிய போதத்தால், அதேகாலத்தில் அறிந்துகொள்ள அவர்கள் சக்தியுள்ளவர்களாக யிருக்கிறதைத் தவிர, அவ்வளவு தூரம் அவர்கள் எதையும் நம்புகிறதில்லை; முடிவில் அவர்கள் இந்திரிய சுக சம்பந்தமானவர்களாகிருர்கள். பிரகுருதிக்கு அனுகூலமாய், கடவுளுக்கு விரோதமாக, தாங்களே ஸ்திரப்பட்டால், தங்களுடைய மனங்களின் உள்ளானவைகளை மூடி, ஒரு திரைபோன்றதை போட்டு, பின்னிட்டு, அந்ததிரைக்கு மேலேயிருப்பதை எதையும் அல்லாமல் திரைக்குக்கீழே யிருப்பதை நினைக்கிருர்கள். இந்த இந்திரியபோக சம்பந்தமானவர்கள், பூர்வீகர்களால், அறிவு விருக்ஷத்தின் சர்ப்பங்களென்று சொல்லப்பட்டார்கள்; தாங்களே ஸ்திரப்படுகிறது போல, தங்களுடைய மனதின் உள்ளானவைகளை தாங்கள் மூடி, மூக்குவரையிலும்கூட மூடுகிறதாக சூக்கும உலகத்தில் அவர்களைப்பற்றி சொல்லப்பட்

டிருக்கிறது; ஏனென்றால், மூக்கானது, உண்மையின் உணர்ச்சியை கருதுகிறது, ஆகையால், அவர்களுக்கு யாதொன்று மில்லை. அவர் (2)கள் என்ன குணமுள்ளவர்கள் என்று இப்பொழுது சொல்லப் படவேண்டும். அவர்கள் மற்றவர்களைவிட அதிக சூட்சும புத்தியுள்ளவர்களாகவும், தந்திர முள்ளவர்களாகவும், சமத்காரமான வாதிப்போர்களாகவும், இருக்கிறார்கள்; அவர்கள் சூட்சும புத்தியையும் தந்திரத்தையும், அறிவென்றும் ஞானமென்றும் சொல்லுகிறார்கள்; அது வன்றி அவர்களுக்கு அவைகளைப்பற்றி வேறு விதமாய் ஒன்றும் தெரியாது. இவ்வித நடத்தையில்லாதவர்களை, முக்கியமாய் கடவுளை ஆராதித்து, ஒரு தெய்வபரிபாலனத்தை ஒத்துக்கொள்ளுகிறவர்களை, பேதைகளென்றும் மடையர்களென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள், தங்களுக்கு ஒன்றும் தெரியாத தங்களுடைய மனதின் உள்ளான ஒழுக்கங்கள் விஷயத்தில், கொலைகளையும், விபசாரங்களையும், திருடுகளையும், பொய்சாட்சியங்களையுமே பார்த்தால் அவைகள் கணக்கில் இல்லை என்று நினைக்கிற மேக்கோவேலியர்கள் என்று சொல்லப்பட்டவர்களைப் போலிருக்கிறார்கள்; அவைகளுக்கு விரோதமாய் அவர்கள் தர்க்கித்தால், அவ்வித நடத்தையுள்ளவர்களென்று தோன்றுதபடி, (3) முழுமையும் விவேகத்திலிருந்து அது வருகிறது, உலகத்தில் மனிதனுடைய உயிரைப்பற்றி, ஒரு மிருகத்தின் உயிரைப்போல மாத்திரம் அது இருப்பதாகவும், இறந்த பிறகு மனிதனுடைய உயிரைப்பற்றி, பிணத்திலிருந்து அல்லது கல்லறையிலிருந்து எழுந்து மறுபடியும் ஸ்திரமாய் அப்படியே இறந்துபோகிற உயிருள்ள ஆவியைப்போல், அது இருப்பதாகவும் மாத்திரம் அவர்கள் நினைக்கிறார்கள். இந்த பைத்தியத்திலிருந்துதான் ஆவிகளும் தேவர்களும், காற்றினால் செய்யப்பட்டிருக்கிறார்களென்றும், சதாகால வாழ்வை நம்ப கற்பிக்கப்பட்டிருக்கிறவர்கள் விஷயத்தில், மனிதர்களுடைய ஆன்மாக்கள் அதே சுபாவமுடையதென்றும், இவ்விதமாக பார்க்கிறதில்லை யென்றும், கேட்கிறதில்லை என்றும் பேசுகிறதில்லையென்றும், ஆகையினால், அவைகள் குருடும்செவிடும் ஊமையானவைகளென்றும், தங்கள் காற்று பூதத்தில் மாத்திரம் நினைக்கிறதென்றும் ஒரு அபிப்பிராயம் உண்டாகிறது. வேறு

ஒன்ருய் ஆன்மா எப்படியிருக்குமென்று அவர்கள் சொல்லுகிருர் கள். சரீரத்துடன்கூட புறம்பான புலன்கள் இறந்துபோகவில் லையா? ஆன்மா சரீரத்துடன் மறுபடியும்சேர்க்கப்படுவதற்கு முன் அவைகளை நாம் எடுத்துக்கொள்ளமுடியாது. இறந்தபின் ஆன் மாவின் நிலைமையைக்குறித்து அவர்கள் பரமார்த்தமாய் அல்லா மல், இந்திரிய சுக சம்பந்தமாய் மாத்திரம் கிரகிக்கக்கூடுமாகை யால், அந்த அபிப்பிராயத்தை அவர்கள் ஸ்திரப்படுத்தி யிருக் கிருர்கள்; இல்லாவிட்டால் சதாகாலவாழ்வைக் குறித்த நம்பிக்கை அழிந்துபோயிருக்கும். தன்னையே நேசித்தலை உயிரின் நெருப் பென்றும், ஒரு இராஜ்யத்தில் பலவிதமான உபயோகங்களை செய்ய தூண்டுதல்என்றும், சொல்லி, தங்களுக்குள்ளேயே அதை முக்கியமாய் ஸ்திரப்படுத்துகிருர்கள். அவர்கள் அவ்வித நடத் தையுள்ளவர்களானபடியினுல், அவர்கள்கூட தங்களுடை விக் கிரகங்களாயிருக்கிருர்கள்; அவர்களுடைய சிந்தனைகள், போலி நியாயங்களாகவும், போலி நியாயங்களிலிருந்தும்,வருகிறபடியினுல் பொய்யின் பிரதிமைகளாயிருக்கின்றன; மோகங்களின் சந்தோ ஷங்களை அவர்கள் கடாட்சிக்கிறபடியினுல், அவர்கள் சாத்தான் களும் பிசாசுகளுமாயிருக்கிருர்கள்; தீமையின் மோகங்களை தங்க ளுக்குள்ளேயே ஸ்திரப்படுத்துகிறவர்கள் சாத்தான்களென்றும், அவைகளின்படி வாழ்கிறவர்களை பிசாசுகளென்றும் சொல்லப் படுகின்றன. மிகவும் தந்திரமானவர்களும், இந்திரியசுக சம்பந்த (4) மானவர்களும் என்ன குணமுடையவர்கள் என்று தெரிந்து கொள்ளக்கூட எனக்கு அருள்செய்யப்பட்டது. அவர்களுடைய நரகமானது, பின்புறத்தில், கீழே ஆழத்திலிருக்கிறது, யார் கண் களுக்கும் தெரியாதிருக்க அவர்கள் விரும்புகிருர்கள்; ஆகையினுல் தங்களுடைய வீணெண்ணங்களா யிருக்கிறதும், பூதகணங்கள் என்று சொல்லப்படுகிறதுமான ஆவேசங்களைப்போல அங்கே பறந்துகொண்டிருப்பதாக அவர்கள் தோன்றுகிருர்கள். அவர் களில் சிலர் அந்த நரகத்திலிருந்து, அவர்களுடைய நடத்தை எனக்கு தெரியும்பொருட்டு ஒருதடவை வெளியே விடப்பட்டார் கள்; பிடர்த்தலையண்டையின் கீழ் என் கழுத்தை அவர்கள் உடனே அணைந்துகொண்டார்கள்; அதிலிருந்து, என்னுடைய ஆசைகளில்

பிரவேசித்தார்கள்; என்னுடைய சிந்தனைகளில் பிரவேசிக்க அவர்கள் விரும்பவில்லை; அதை அவர்கள் சமர்த்துடன் நீக்கினார்கள்; தீமையின் மோகங்களாயிருக்கிற என்னுடைய ஆசையின் எதிரிடையானவைகளுக்கு அவைகள் உணர்ச்சியின்றி வளைக்கும் எண்ணத்துடன், என்னுடைய ஆசைகளை ஒன்றன்பின் ஒன்றாய் வேறுபடுத்தினார்கள்; அவர்கள் சிந்தனைகளை தொடாத படியினால் ஆண்டவர் அதை தடுக்காதிருந்தால், எனக்கு தெரியாமலே அவர்கள் அவைகளை வளைத்து தலைகீழாக்கி யிருப்பார்கள். தெய்வ பரிபாலனம் என்று எந்த ஒரு பொருளும் உண்டென்று உலகத்
(5) தில் நம்பாதவர்களும், மற்றவர்களிடத்தில் அவர்களுடைய லோபித்தனங்களையும் ஆசைகளையும் தவிர வேறொன்றையும் பரிசோதிக்காதவர்களும் அவ்விதமாகிறார்கள்; இவ்விதமாக, அவர்கள் பேரில் அதிகாரம் பெருகிறவரையில் அவர்களை நடத்துகிறார்கள்; மற்றவன் ஒருவனுக்கும் தெரியாதபடி, அவ்வளவு கள்ளத்தனமாயும் தந்திரமாயும், இதை அவர்கள் செய்கிறபடியினாலும், இறந்தபிறகு தங்களைப்போலவே அவர்கள் ஆகிறபடியினாலும், சூக்கும உலகத்திற்கு வந்தவுடனே அந்த நரகத்தில் அவர்கள் போடப்படுகிறார்கள். சுவர்க்கத்து வெளிச்சத்தில் பார்த்தால் ஒரு மூக்கில்லாமல் தோன்றுகிறார்கள்; விசேஷமான தென்னவென்றால் அவர்கள் அவ்வளவு தந்திரமுள்ளவர்களா யிருந்தாலும், மற்றவர்களை விட அதிக இந்திரியசுக சம்பந்தமுள்ளவர்களா யிருக்கிறார்
(6) கள். ஒரு இந்திரிய சுகமுள்ள மனிதனை பூர்வீகர்கள்ஒரு சர்ப்பமென்று சொன்னபடியினாலும், அவ்விதமான மனிதன் மற்றவர்களைவிட சூக்கும புத்தியுள்ளவனாகவும், தந்திரமானவனாகவும் விவேகமாக வாதிப்போனாகவும் இருப்பதினாலும், "சர்ப்பமானது சகல காட்டுஜீவன்களைப் பார்க்கிலும் தந்திரமுள்ளதா யிருந்ததென்று"(ஆதியா.,III 1.) சொல்லப்படுகிறது; ஆண்டவர் சொல்லுகிறதாவது: "ஆகையால் சர்ப்பங்களைப்போல வினையுடையவர்களாகவும் புறாக்களைப்போல் கபடற்றவர்களாயும் இருங்கள், (மத்தே X 16)"மேலும், பழைய பாம்பென்றும், பிசாசென்றும் சாத்தான் என்றும் அம்மாதிரியே சொல்லப்பட்ட "வலு சர்ப்பமானது ஏழு தலைகளையும் பத்து கொம்புகளையும், தன் தலைகளின்மேல் ஏழு

முடிகளையும்'' உடைத்தாயிருக்கிறதாக சொல்லப்படுகிறது(வெளி. XII. 3, 9). ஏழு தலைகள் என்பதால், தந்திரம் கருதப்படுகிறது; பத்துகொம்புகள் என்பதால், போலி நியாயங்களால் போதித்து சம்மதிக்கசெய்யும் சக்தியையும், ஏழுமுடிகளால் வேதத்தினுடையவும், அசுத்தப்படுத்தப்பட்ட திருச்சபையினுடையவும் பரிசுத்தப் பொருள்கள் கருதப்படுகின்றன.

311. ஒருவனுடைய சொந்த விவேகத்தைக் குறித்தும், அதில் இருப்பவர்களைக்குறித்தும் சொல்லிய இந்த விவரங்களால் தன்னுடைய சொந்தமில்லாத விவேகம் என்ன குணமுடையதென்றும், தன்னுடைய சொந்த விவேகத்தின் குணம் என்னவென்றும், அதிலிருக்கப்பட்டவர்களின் குணம் என்னவென்றும் அறிந்துகொள்ளலாம்; அதாவது தன்னுடைய சொந்தமில்லாத விவேகம் புத்தியும் ஞானமும் மனிதனிடமிருந்து வருகிறதாக தங்களுக்குள்ளேயே ஸ்திரப்படாதவர்களின் விவேகமா யிருக்கிறது; ஏனென்றால், ஒருவன் தன்னிடமே யிருந்து எப்படி ஞானமுள்ளவனா யிருக்கக்கூடும்? தன்னிடமே யிருந்து எப்படி நன்மை செய்யக்கூடும்?என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இதை அவர்கள் சொல்லும்போது, அவர்கள் உள்ளுக்குள்ளாய் நினைக்கிற படியினால், அது அப்படியிருக்கிறது தங்களுக்குள்ளேயே அறிந்துகொள்ளுகிறார்கள்; எவனாவது ஒருவன் புறம்பாய் மாத்திரம் நினைக்கக்கூடுமென்று அவர்களுக்கு தெரியாதபடியினால், மற்றவர்களும்கூட முக்கியமாய் கற்றவர்களும் அப்படி நினைக்கிறார்க (2) ளென்றுகூட அவர்கள் நம்புகிறார்கள். அவர்கள் தோற்றங்களை எந்த ஸ்திரப்படுத்துதலினாலும், போலி நியாயங்களில் இல்லை; ஆகையினால், கொலைகளும், விபசாரங்களும், திருடுகளும், பொய்சாட்சியங்களும் பாவங்களென்று அவர்கள் தெரிந்துகொண்டு உணருகிறார்கள்; ஆகையினால் அவைகளை தள்ளுகிறார்கள்; மேலும் துன்மார்க்கம் ஞானமல்லவென்றும் தந்திரம் விவேகமல்லவென்றும் அவர்களுக்குத்தெரியும்; போலி நியாயங்களிலிருந்து விவேகமுள்ள தர்க்கங்களை கேட்கும்போது அவர்கள் ஆச்சரியப்பட்டு, தங்களுக்குள்ளேயே சிரிக்கிறார்கள். இந்திரியசுக சம்பந்தமான

துடன் இருக்கிறது போல, அவர்கள் விஷயத்தில் உள்ளானதற்கும் புறம்பானதற்கும், அல்லது மனதின் சூக்குமமானதற்கும், ஸ்தூலமானதற்கும், மத்தியில் ஒரு திரை இல்லாதது இதற்கு காரணமாயிருக்கிறது. ஆகையினால், அவர்கள் சுவர்க்கத்திலிருந்து உட்பெருக்கை அடைகிறார்கள்; அதனால், அவர்கள் அவ்வித (3) விஷயங்களை உள்ளுக்குள்ளாய் பார்க்கிறார்கள். அவர்கள் மற்றவர்களைவிட அதிக கபடமற்றும் உண்மையாயும் பேசி, பேசுவதில் அல்லாமல் வாழ்க்கையில் ஞானத்தை வைக்கிறார்கள். அவர்கள் ஒப்பீடாய் ஆட்டுக் குட்டிகளையும் ஆடுகளைப்போலவும் இருக்கிறார்கள். தங்களுடைய சொந்த விவேகத்திலிருப்பவர்கள், ஓநாய்களைப்போலவும் குள்ளநரிகளைப்போலவு மிருக்கிறார்கள்: மேலும் அவர்கள், ஒரு வீட்டிலிருந்து கொண்டு, ஜன்னல்கள் மூலமாய் சுவர்க்கத்தைப் பார்க்கிறவர்கள் போலிருக்கிறார்கள்; ஆனால் தங்களுடைய சொந்த விவேகத்திலிருக்கிறவர்கள் ஒரு வீட்டின் அடித்தளத்தில் வசித்து, தங்கள் ஜன்னல்கள் மூலமாய் பூமியின் மட்டத்துக்கு கீழே யிருப்பதை மாத்திரம் பார்க்கிறவர்கள் போலிருக்கிறார்கள்; மேலும் ஒரு மலையின் பேரில் நின்று கொண்டு தங்களுடைய சொந்த விவேகத்திலிருக்கிறவர்களை பள்ளத்தாக்குகளி (4) லும், காடுகளிலும் திரிகிறவர்களை பார்க்கிறவர்கள் போல் அவர்கள் இருக்கிறார்கள். இந்த ஆலோசனைகளிலிருந்து ஒருவனிடமே யிருந்து வாராத விவேகம், ஆண்டவரிடமிருந்து வந்த விவேகமென்றும், தன்னிடமே இருந்து வந்த விவேகத்தைப் போல், புறம்பானவைகளில் அதேமாதிரியான தோற்றமுடையதென்றும், ஆனால் அந்தரங்கங்களில் முழுமையும் அதற்குவேறானதென்றும் விசதமாகும். தன்னிடமே யிருந்து வாராத விவேகம், அந்தரங்கங்களில் சூக்கும உலகத்தில் ஒரு மனிதனைப்போல் தோன்றுகிறது; ஆனால் தன்னிடமேயிருந்து வந்த விவேகம், அந்த விவேகத்திலிருக்கப்பட்டவர்கள், பகுத்தறிவுடைமையையும், சுதந்தரத்தையும், அல்லது அறிந்துகொள்ளும் மனோசக்தியையும், இச்சிக்கும் மனோசக்தியையும், அதிலிருந்து பேசும் சக்தியையும், செயல்படும் சக்தியையும் இன்னும் உடைத்தாயிருக்கிறார்களென்பதும், அந்த மனோசக்திகளால், தாங்களும்

மனிதர்களென்றுகூட பாசாங்கு செய்யக்கூடு மென்பதுமாகிய இந்த சங்கதியிலிருந்து மாத்திரம் வெளிவேஷமாய் உயிருள்ள ஒரு பிரதிமைபோல தோன்றுகிறது. தீமைகளும் பொய்களும் உயிரோடிருக்காமல், நன்மைகளும் உண்மைகளும் மாத்திரம் அப்படி யிருப்பதினால், அவைகள் அவ்விதமான பிரதிமைகளா யிருக்கின்றன; தங்களுடைய பகுத்தறிவுடைமையிலிருந்து இது அவர்களுக்கு தெரியுமாகையால், (ஏனென்றால் அது அவர்களுக்கு தெரியாவிட்டால், அவைகளை அவர்கள் கல்பனை செய்யமாட்டார்கள்) தங்களுடைய குணுபாசங்களில் ஓர் மானிட உயிரை உடைத்(5)தாயிருக்கிறார்கள். ஒரு மனிதன் தான் உள்ளுக்குள்ளாயிருக்கிறதுபோல இருக்கிறானென்றும், அதனால், புறம்பாய் இருக்கத் தோன்றவிரும்புகிறபடி அந்தரங்கமாய் இருக்கிறவன் மனிதனென்றும் அந்தரங்கமாய் அல்லாமல், புறம்பாய் மாத்திரம் மனிதனுயிருக்கிறவன் ஒரு பிரதிமையென்றும், யார் தெரிந்துகொள்ளக் கூடாது? கடவுளைப்பற்றியும், சமயத்தைப்பற்றியும், நியாயத்தைப் பற்றியும், உண்மையைப்பற்றியும் நீ பேசுகிறதுபோல் நினைத்துக் கொள். நீ ஒரு மனிதனுகயிருப்பாய்; அக்காலத்தில் தெய்வபரிபாலனம் உன்னுடைய விவேகமாயிருக்கும், ஒருவனிடமிருந்துவரும் விவேகம் பைத்தியமென்று மற்றவர்களிடத்தில் நீ பார்ப்பவர்களைப்போல் பார்ப்பாய்.

312. II **மனிதனுனவன் தன்னிடமே யிருந்துவந்த விவேகத்தினுல் எல்லா நன்மையும் உண்மையும் தன்னிடமே யிருந்து வருவதாகவும், தன்னிலேயே யிருப்பதாகவும், அதேமாதிரி எல்லா தீமையும் பொய்யும் இருப்பதாகவும், தன்னையே போதித்து சம்மதிக்கச் செய்து தன்னிலேயே ஸ்திரப்படுகிறான்.** இந்த விஷயத்தைப்பற்றி தர்க்கித்தலானது, ஸ்தூல நன்மைக்கும் உண்மைக்கும் சூக்கும நன்மைக்கும் உண்மைக்கும் இருக்கும் ஒப்பனையினால் நடக்கட்டும். கண்ணின் முன்பாக நன்மை உண்மை என்பதென்ன? அங்கே அழகுள்ளதென்று சொல்வது உண்மையல்லவா, அழகுள்ளதை பார்ப்பதினால் சந்தோஷம் உணரப்படுகிறபடியினால், சந்தோஷமுள்ளதென்று அங்கே சொல்லுவது நல்லதல்லவா என்றும்

கேட்பதில் நல்லதும் கெட்டதும் எது? இன்னிசையுள்ளதென்று சொல்லப்படுவது அங்கே உண்மையானதல்லவா? இன்னிசையான சப்தங்களை கேட்பதினால் ஒரு வசியம் அனுபவிக்கப்படுகிறபடியினால், மனதைக் கவரத்தக்கது என்று சொல்லுவது அங்கேநன்மையானதல்லவா என்றும், மற்ற புலன்கள் விஷயத்திலும் அம்மாதிரியே கூட யிருக்கிறதென்றும் கேட்கப்படுகிறது. இதிலிருந்து ஸ்தூல உண்மையும் நன்மையும் என்னவென்று வெளிப்படையாகிறது. இப்பொழுது, சூக்கும உண்மையும் நன்மையும் என்னவென்று யோசிக்கலாம். சூக்கும உண்மையானது சூக்கும பொருள்களில் அழகுள்ளதும், இன்னிசையானதும் தவிர வேறு ஒன்ற? சூக்கும நன்மையானது, அதன் அழகையும் அல்லது இன்னிசையையும் பார்க்கிறதினால் உண்டாகிற சந்தோஷத்தையும் வசியத் (2) தையும் தவிறவேறு ஒன்ற? மற்ற ஒன்றைப்பற்றி சொல்லியதிலிருந்து வேறுவிதமாய் ஒன்றைப்பற்றியும், அல்லது ஸ்தூலமானதைப்பற்றி சொல்லியதிலிருந்து சூக்குமமானதைப்பற்றியும்வேறு ஏதாவது சொல்லப்படக்கூடுமா என்று இப்பொழுது பாாக்கலாம். கண்ணிலிருக்கும் அழகும் சந்தோஷமும் பொருள்களிலிருந்து உள்ளே பாய்கின்றனவென்றும், காதிலுள்ள இன்னிசையும் வசியமும் கீதாவாத்திய கருவிகளிலிருந்து உள்ளேபாய்கிறதென்றும், ஸ்தூலமானதைப்பற்றிசெல்லப்படுகிறது. மனதினுடைய அங்கசம்பந்தமான பொருள்களில் அங்கே வித்தியாசமாயிருப்பதென்ன? மனதின் அங்கசம்பந்தமான பொருள்களைப்பற்றி, இவைகள் அவைகளிலிருப்பதாகவும், ஸ்தூல பொருள்களையும் அல்லது சரீரத்தின் புலன்களையும் பற்றி, இவைகள் அவைகளில் உள்ளே பாய்கின்றனவென்றும் சொல்லப்படுகிறது. ஆனால் அவைகள் உள்ளே பாய்கின்றனவென்று ஏன் சொல்லப்படுகிறதென்று கேழ்க்கப்பட்டால் ஒரு தூரம் தோன்றுகிறபடியினால், அது அப்படி சொல்லப்படுகிறதென்கிறதைவிட வேறுவிதமான பிரதியுத்திரம் கொடுக்க முடியாது. ஆனால் மற்ற சங்கதியில், அவைகள் அவைகளி லிருக்கின்றனவென்று ஏன் சொல்லப்படுகிறது? எந்த தூரமும் தோன்றாதபடியினால், அது அப்படி யிருக்கிறதென்று சொல்வதைவிட வேறு எந்த பிரதியுத்திரமும் கொடுக்க முடியாது. மனிதன் பார்க்

கிறதையும் கேட்கிறதையும் குறித்த நம்பிக்கையிலிருந்து, அவன் நினைக்கிறதையும் அறிந்து கொள்ளுகிறதையும் குறித்த வேறான நம்பிக்கையை உண்டாக்குகிறது தூரத்தின் தோற்றமென்று ஏற்படுகிறது; ஆனால்இது ஸ்தூலமானது யிருப்பதுபோல, சூக்குமமானது தூரத்தில் இல்லையென்று தெரிந்துக்கொள்ளப்பட்டபோது, தவரிப்போய்விடுகிறது. சூரியனையும் சந்திரனையும் அல்லது ரோம் நகரத்தையும் கான்ஸ்டான்டிநோபில் நகரத்தையும் நினைத்துப்பார்: இந்த சிந்தனையானது, பார்ப்பதினால் அல்லது கேட்பதினால் அடைகிற அனுபவத்துடன் சேர்க்கப்படாதிருக்கும் பட்சத்தில், அவைகள் சிந்தனையில் தூரமில்லாமல் இருக்கிறதில்லையா? அப்படியானால், சிந்தனையில் எந்த தூரமும் தோன்றாதபடியினால், நன்மையும் உண்மையும் அதனுடன் தீமையும் பொய்யும் அங்கேயிருக்கின்றனவென்றும், உள்ளே பாய்கிறதில்லை யென்றும் நீ ஏன் உன்னையே போதித்து சம்மதிக்கச் செய்துக்கொள்ளுகிறாய்? இதனுடன் சூக்கும உலகத்தில் சாதாரணமாயிருக்கிற (3)இந்த அனுபவத்தை சேர்க்கிறேன்: ஒரு ஆவியானது, மற்ற ஒரு ஆவிக்குள் தன்னுடைய சிந்தனைகளையும் ஆசைகளையும் செலுத்தக்கூடும். பின் கூறியது, உள்ளே செலுத்தப்பட்டது தன்னுடைய சொந்த சிந்தனைக்கும் ஆசைக்கும் சேர்ந்த தென்பதைத் தவிர வேறு ஒன்றும் அறியாது; இது அங்கே மற்ற ஒருவனிடமிருந்து நினைத்தல் என்றும், மற்ற ஒருவனிடத்தில் நினைத்தல் என்றும் சொல்லப்படுகிறது. நான் இதை ஆயிரம் தடவைகளில் பார்த்திருக்கிறேன், நானேகூட நூறுதடவைகளில் அதை செய்திருக்கிறேன்; அப்படியிருந்தாலும் தூரத்தின் தோற்றம் கவனிக்கத் தக்கதாயிருந்தது. ஆனால், இந்த சிந்தனைகளையும் ஆசைகளையும் உட்செலுத்தினது வேறொருவரென்று அவைகளுக்கு தெரிந்த உடனே மிக கோபம் கொண்டு, தாங்களே திரும்பிப்போய்விட்டன; ஆயினும், உள்ளுக்குள்ளான பார்வையில் அல்லது சிந்தனையில், தூரமானது, புரம்பான பார்வை அல்லது கண்ணில் போல கண்டுபிடிக்கப்பட்டா லொழிய தோன்றுகிறதில்லை யென்றும், அதிலிருந்து தான் (அல்லது தூரத்தின் தோற்றத்திலிருந்து) உட்பெருக்கு இருக்கிறதென்கிற நம்பிக்கை வருகிறதென்றும்

(4) அவைகள் ஒத்துக்கொண்டன. இதனுடன் என்னுடைய பிரதி தின அனுபவத்தைச் சேர்க்கிறேன். துன்மார்க்கமான ஆவிகள் என்னிடத்திலும் என்னிடமிருந்தும் அல்லது நானே அவைகளை நினைத்ததுபோலவும் எனக்கு தோன்றிய தீமைகளையும் பொய்களையும் என்னுடைய சிந்தனைகளில் அடிக்கடி உட்செலுத்தின; ஆனல் அவைகள் பொய்களென்றும் தீமைகளென்றும் எனக்கு தெரிந்திருந்தபடியினல், அவைகளை உட்செலுத்தினது யார் என்று நான் விசாரித்திருக்கிறேன்; அப்படி செய்தவர்கள் கண்டு பிடிக்கப்பட்டு துரத்தப்பட்டார்கள்; அவர்கள் எனக்கு வெகுதூரத்திலிருந்தார்கள். இதிலிருந்து எல்லா தீமையும் அதன் பொய்யுடன் நரகத்திலிருந்து உள்ளே பாய்கிறதென்றும், எல்லா நன்மையும் அதன் உண்மையுடன் ஆண்டவரிடமிருந்து உள்ளே பாய்கிறதென்றும், இரண்டும் மனிதனில் இருந்ததாக தோன்றுகிறதாய் விசதமாகலாம்.

313. தங்களுடைய சொந்த விவேகத்திலிருக்கிறவர்களின் குணமும், தங்களுக்கு சொந்தமில்லாத விவேகத்திலிருப்பவர்கள் இவ்விதமாக தெய்வபரிபாலனத்திலிருப்பவர்கள் குணமும், வேதத்தில் ஒன்று ஜீவமரமென்றும், நன்மை தீமை அறிவை விளக்கும் மரமென்றும், சொல்லப்படுகிற இரண்டுமரங்கள் இருந்த ஏடன் தோட்டத்திலிருந்த ஆதாம் என்பதினும், அவனுடைய மனைவியாகிய ஏவாள் என்பதினுலும், பின் கூறிய மரத்திலிருந்து அவர்கள் தின்றதினுலும் விவரிக்கப்படுகிறது. ஆதாம் என்பதாலும், அவனுடைய மனைவி ஏவாள் என்பதாலும், உள்ளுக்குள்ளான அல்லது ஞானுர்த்தத்தில், பின் வந்த திருச்சபைகளைவிட அதிக மேன்மையாகவும் சுவர்க்க சம்பந்தமுடைய தாகவுமிருந்த, இந்த பூமியின்பேரில் இருந்த ஆண்டவரின் மிகவும் பூர்வீகமான திருச் (2) சபை கருதப்பட்டு, விவரிக்கப்பட்டிருக்கிறதென்பது மேலே (பி. 241)ல் பார்க்கலாம். மற்றவைகளின் அருத்தம் பின் வருமாறு இருக்கின்றது: ஏடன் தோட்டத்தினல், அந்த திருச்சபையின் மனிதர்களுடைய, ஞானம் கருதப்படுகிறது; ஜீவவிருக்ஷம் என்பதினல், தெய்வபரிபாலனம் விஷயத்தில் ஆண்டவரையும், அறி

வைவிளக்கும் மரமென்பதினுல், தன்னுடைய சொந்தவிவேகம் விஷயத்தில் மனிதனையும், கருதப்படுகின்றன; தன்னையே நேசித்தலாயும், தன்னுடைய சொந்த புத்தியின் கர்வமாகவும், இவ்விதமாக பிசாசாகவும், சாத்தானுகவும் தன்னில் தானேயிருக்கிற மனிதனுடைய இந்திரிய சுக சம்பந்தமானதையும், அவனுடைய சொந்த தன்மையையும், சர்ப்பம் என்பது அருத்தம் சொள்ளுகிறது; அறிவைவிளக்கும் மரத்திலிருந்து தின்றலினுல், ஆண்டவரிடமிருந்தல்லாமல், அதனுல் ஆண்டவருடைய தல்லாமல், மனிதனிடமிருந்தும், அதனுல் மனிதனுடையதாகவும், நன்மையையும் உண்மையையும் தனதாக்கல் கருதப்படுகின்றது. நன்மையும் உண்மையும் மனிதனிலிருக்கும் தெய்வப்பொருள்களே யானபடியினுல், (ஏனென்ருல், நன்மை என்பதினுல், அன்பின் ஒவ்வொரு பொருளும், உண்மை என்பதினுல் ஞானத்தின் ஒவ்வொருபொருளும் கருதப்படுகிறது) மனிதன் இவைகளை தன்னுடையதாகவே பாத்தியம் பாராட்டினுல், தான் கடவுளைப்போலிருக்கிருனென்பதைவிட வேறு விதமாய் நம்பமுடியாது; ஆகையினுல், "நீங்கள் இதை புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப்படுமென்றும், நீங்கள் நன்மை தீமை அறிந்து தேவர்களைப்போல் இருப்பீர்களென்றும்" (ஆதியா. III. 5) சர்ப்பம் சொன்னது. அப்படியே கூட, நரகத்தில், தன்னையே நேசித்தலினும், அதிலிருந்து, தங்கள் சொந்த புத்தியின் கர்வத்திலும் இருப்பவர்கள் செய்கிருர்கள். சர்ப்பத்துக்கு சிட்சை விதித்தல், ஒருவனுடைய சொந்த அன்பையும் தன்னுடைய சொந்த புத்தியையும் சிட்சை செய்தல் என்று அருத்தம்கொள்ளுகிறது; ஏவாளை சிட்சை செய்தலென்பதினுல், தன்னிஷ்டமான சொந்ததன்மையை சிட்சை செய்தலென்று அருத்தம் கொள்ளப்படுகிறது, ஆதாம் சிட்சை செய்யப்படுதல், என்பதினுல் விவேக சம்பந்தமான சொந்த தன்மையை சிட்சை செய்யப்படுதல் கருதப்படுகிறது; அவனுக்கு பூமி கொண்டுவரப் போகிற முள் என்பதினுலும், நெருஞ்சில் என்பதனுலும், கேவல பொய்யும் தீமையும் அருத்தம் கொள்ளப்படுகின்றன; தோட்டத்திலிருந்து வெளியே தள்ளப்படுவதால், ஞானம் இல்லாமல் செய்யப்படுதல் அருத்தம் கொள்ளப்படுகிறது; ஜீவவிருட்சத்

துக்கு போகும்வழியை பாதுகாத்தல் என்பதினால், வேதத்தினுடையவும், திருச்சபையினுடையவும் பரிசுத்தப்பொருள்கள் பங்கம் செய்யப்படாமல் இருக்கும் பொருட்டு, ஆண்டவர் எடுத்துகொள்ளும் கவலை கருதப்படுகிறது; தங்களுடைய நிருவாணத்தை மூடிய அத்திமரத்து இலைகள் என்பதினால், அவர்களுடைய அன்பினுடையவும் கர்வத்தினுடையவும் பொருள்கள் மறைக்கப்பட்ட சன்மார்க்கமான உண்மைகள், அருத்தம் கொள்ளப்படுகின்றன; அவர்கள் பின்னிட்டு உடுத்தப்பட்ட தோல் மேலங்கியினால், தாங்கள் மாத்திரம் இருந்த உண்மையின் தோற்றங்கள் கருதப்படுகின்றன. அந்த விஷயங்களுக்கு இது தான் ஞானார்த்தம். ஆனால், இஷ்டப்படுகிறவன் சப்தார்த்தத்தில் இருக்கட்டும்; சுவர்க்கத்தில் அம்மாதிரி அறிந்துகொள்ளப்படுகிறதென்று மாத்திரம் அவனுக்கு தெரிந்திருக்கட்டும்.

314. தங்களுடைய சொந்தபுத்தியிலிருந்து உணர்வழிந்தவர்கள், என்ன குணமுடையவர்கள் என்பது, உள்ளுக்குள்ளான தீர்ப்புகளின் விஷயங்களில் உதாரணமாக, உட்பெருக்கைப்பற்றியும், சிந்தனையைப்பற்றியும், உயிரைப்பற்றியும் அவர்களுடைய மனோபாவங்களிலிருந்து விசதமாகலாம். கண்பார்வையானது, புத்தியாயிருக்கிற மனதின் உள்பார்வைக்குள் பாய்கிறது என்கிறது போலவும், காதுகேட்டல், புத்தியாக கூடயிருக்கிற உள்ளுக்குள்ளாய் கேட்டலுக்குள் பாய்கிறதுபோலவும், உட்பெருக்கைப்பற்றி அவர்கள் தலை கீழாய் நினைக்கிறார்கள்; சித்தத்திலிருந்து புத்தியானது கண்ணிலும் காதிலும் பாய்ந்து, அந்தபுலன்களை செய்கிறது மட்டுமல்லாமல், ஸ்தூல உலகத்தில் தன்னுடையகருவிகளாக அவைகளை உபயோகப்படுத்துகிறதென்றும்கூட அவர்கள், அறிந்துகொள்ளுகிறதில்லை. ஆனால், இது தோற்றத்தின்படி இல்லாதபடியினால், ஸ்தூலமானது சூக்குமமானதற்குள் பாய்கிறதில்லை என்றும், சூக்குமமானது ஸ்தூலமானதற்குள் பாய்கிறதென்றும் மாத்திரம் சொன்னால், அதை அவர்கள் அறிந்துகொள்ளுகிறதில்லை; ஆனால் அப்பொழுதுகூட அவர்கள், சூக்குமமென்பது, அதிக சுத்தமான ஸ்தூலமான பொருளைத்தவிர வேறு என்ன

வென்றும், கண்ணானது அழகுள்ள எதை ஒன்றைப்பார்த்தாலும், காதானது இன்னிசையுள்ள எதை ஒன்றைக்கேட்டாலும், புத்தியாயும் சித்தமாயுமிருக்கிற மனதானது, சந்தோஷப்படுகிறதென்று பிரத்தியக்ஷமாயில்லையாயென்றும் கூட, அவர்கள் இன்னமும் நினைக்கிறார்கள். கண்ணானது தன்னிடமேயிருந்து பார்க்கிறதில்லையென்றும், அதுவுமன்றி, நாக்கானது தன்னிடமேயிருந்து ருசி பார்க்கிறதில்லையென்றும், நாசித்துவாரங்கள் தங்களிடமேயிருந்து வாசனைபார்க்கிறதில்லை யென்றும், சருமம் தன்னிடமேயிருந்து உணருகிறதில்லை என்றும், ஆனால் அங்கே இந்திரியங்களால் பார்க்கிறதும், அதனால் அதன் குணத்திற்கு தக்கபடி மாறுதல் அடைகிறதும், மனிதனுடைய மனது அல்லது ஆன்மாவென்றும், அப்படியிருந்தாலும், மனிதனுடைய மனது அல்லது ஆன்மா அவைகளை தன்னிடமேயிருந்து அல்லாமல் ஆண்டவரிடமிருந்து உணருகிறதென்றும், வேறு விதமாய் நினைத்தல் தோற்றங்களிலிருந்து நினைத்தலென்றும், இவைகள் ஸ்திரப்படுத்தப்பட்டால், (2) போலி நியாயங்களிலிருந்து நினைத்தலென்றும், அவர்களுக்கு தெரியாது. சிந்தனையைப்பற்றி, அது அதன் பதார்த்தங்களுக்குதக்கபடி விகர்ப்பிக்கப்பட்டதும், தேர்ச்சிக்குதக்கபடி பெரியதாக்கப்பட்டதுமான காற்றில் மாற்றப்பட்ட எதோ ஒன்றென்றும், இவ்விதமாக, சிந்தனைகளின் பாவனைகள் காற்றில் தோன்றும் விண்வீழ்க்கொள்ளிகள்போல் பிரதிமைகளென்றும், ஞாபகம் என்பது அவைகள் பதியச்செய்யப்பட்டிருக்கிற ஒரு சிறு பீடமென்றும், சிந்தனைகள், பார்வையும் கேட்டலும் தங்களுடையவைகளிலிருப்பதுபோல், சுத்தமாய் அங்க சம்பந்தமான பொருள்களிலிருக்கின்றனவென்று தெரிந்துகொள்ளாமல், அவர்கள் சொல்லுகிறார்கள். மூளையை மாத்திரம் அவர்கள் பரிசோதித்துப் பார்த்தால், அவ்வித பொருள்களால் நிறைந்திருக்கிறதென்று அவர்கள் அறிந்துகொள்வார்கள்; நீ அவைகளுக்கு தீங்கு செய்தால், உனக்கு அறிவு கெட்டு போகும்; நீ அதை அழித்தால் இறந்துபோவாய். ஆனால், சிந்தனை என்னவென்றும், ஞாபகம் (3)என்னவென்றும் மேலே (பி. 279 முடிவில்) பார்க்கலாம். உயிரைப்பற்றி, ஒரு உயிருள்ள சரீரம் உறுப்புள்ளதாய் தானே நகருகி

றதுபோல, பலவழிகளில் உணரப்படதானே செய்கிற பிரகுருதி யின் எதோ ஒரு முயற்சி என்பதைத்தவிர, அவர்களுக்கு வேறொ ன்றும் தெரியாது. பிரகுருதி அப்படிதான் உயிரோடியிருக் கிறதென்று சொன்னால், இதை மறுத்து, ஆனால் பிரகுருதி உயிரைக்கொடுக்கிறதென்று அவர்கள் சொல்லுகிறார்கள். சரீ ரம் இறந்து போகும்போது உயிரானது அப்பொழுது சித ரடிக்கப்படுகிறதில்லையா என்று சொன்னால், அவர்கள் ஆன்மா வென்று சொல்லப்பட்ட காற்றின் ஓர் அணுவில் உயிர் நிற்கிறதாக மறுமொழி சொல்லுகிறார்கள். பின்பு, கடவுள் என்பது என்ன, அவரே உயிர்தானே அல்லது இல்லையா என்று சொன்னால், அதற்கு அவர்கள் மௌனமாயிருந்து, தாங்கள் நினைப்பதை தெரி யப்படுத்த விரும்புகிறதில்லை. பரம இச்சாசத்தியையும் பரமஞான சக்தியையும் உயிரே தான் என்று நீங்கள் ஒத்துக்கொள்ளமாட் டீர்களா என்று சொன்னால், அன்பு என்பதென்ன ஞானம் என் பது என்னவென்று கேட்கிறார்கள். ஏனென்றால், தங்களுடைய போலி நியாயங்களில் அவைகள் என்னவென்றும், அதுவுமன்றி கடவுள் என்னவென்றும் அவர்கள் அறிந்துகொள்ளுகிறதில்லை. மனிதன் எல்லா தீர்மானங்களையும் தோற்றங்களிலிருந்தும், அத னால் போலி நியாயங்களிலிருந்தும், உரிஞ்சுகிறானென்கிற கார ணத்தினால், அவன் தன்னுடைய சொந்த விவேகத்தினால் எப்படி மதிகெட்டவனாகின்றானென்று அறிந்துகொள்ளும் பொருட்டு, இவைகளெல்லாம் கொண்டுவரப்பட்டது.

316. * மனிதனுடைய சொந்த விவேகமானது எல்லா நன் மையும் உண்மையும் மனிதனிடமிருந்து வருகிறதென்றும், மனி தனிலிருக்கிறதென்றும், ஏன் சம்மதிக்கச்செய்து, ஸ்திரப்படுத்து கிறது என்பதற்கு காரணமானது, அவனுடைய சொந்த விவே கம், மனிதனுடைய தன்னிஷ்டமான சொந்த தன்மையாயிருக்கிற தன்னையே நேசித்தலிலிருந்து, உள்ளே பாய்கிற அவனுடைய புத்தி சம்பந்தமான சொந்த தன்மையாயிருக்கிற தென்பதாயிருக்

* கணக்கில் மூலகிரந்தத்தை அனுசரித்திருக்கிறது.

கிறது; மேலும், சொந்த தன்மையானது எல்லா பொருள்களை யும் தன்னுடையதாக செய்கிறதைத் தவிர வேறுவிதமாய் செய் யாது; ஏனென்றால் அவன் அதிலிருந்து உயர்த்தப்படமுடியாது. ஆண்டவரின் தெய்வபரிபாலனத்திலிருந்து நடத்தப்படுகிறவர் கள் எல்லாம், சொந்த தன்மையிலிருந்து உயர்த்தப்படுகிறார்கள்; அப்பொழுது அவர்கள், எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவ ரிடமிருந்துவருவதாக அறிந்துகொள்ளுகிறார்கள்; நிஜமாகவே, ஆண்டவரிடமிருந்து மனிதனிலிருப்பது, எப்பொழுதும் ஆண் டவருடையதென்றும், எக்காலத்திலும் மனிதனுடையதல்ல வென்றும் கூட அவர்கள் அறிந்துகொள்ளுகிறார்கள். வேறுவித மாய் நம்புகிறவன், தன் எஜமானன் கொடுத்துவைத்த சாமான்களை தன்னிடம் வைத்துக்கொண்டு, தனது சொந்தமாக பாத்தியம் பாராட்டி, அவைகளை தனதாக்குகிறவனைப் போலிருக்கிறான்; அவன் வீட்டுகாரியக்காரன் அல்லாமல் திருடனாயிருக்கிறான்; மனி தனுடையசொந்த தன்மை தீமையைத்தவிர வேறொன்றுமில்லாத படியினால், அவன் அவைகளை தன்னுடைய தீமையில் அமிழ்த்தி, அதனால் மலத்தில் அல்லது காடியில் போடப்பட்ட முத்துகளைப் போல் அவைகள் அழிக்கப்படும்.

317. III. **மனிதன் தானே சம்மதிக்க செய்துகொண்டதும், தன்னிலேயே ஸ்திரப்படுத்திக் கொண்டதுமாகிய ஒவ்வொன்றும், தன் னில் தன்னுடைய சொந்த தன்மையாக நிற்கிறது.** எந்த உண்மை யும் ரூபகாரம் செய்த பொருள்களிலிருந்து தவிர அறிந்துகொள்ள முடியாதென்று அநேகரால் நம்பப்படுகிறது; ஆனால் இது ஒரு பொய். ஒரு இராஜ்யம் அல்லது பிரஜாதிபத்தியத்தின் தேசசம் பந்தமானதும், மிதசிலவு சம்பந்தமானதுமாகிய விஷயங்களில் உப யோகமாயும் நன்மையாயும் இருக்கப்பட்டவைகள், அங்கேயிருக் கும் அநேக நியாயசட்டங்களும் விதிகளும் தெரியாமல் அறிந்து கொள்ளப்பட முடியாது; அதுவுமன்றி, சட்டங்கள் தெரிந்தா லொழிய நியாயவிசாரணை சம்பந்தமான விஷயங்களிலும், ஒரு மனிதன் பூதசாஸ்திரங்களில் கற்பிக்கப்பட்டாலொழிய, பிரகுருதி சாஸ்திரத்திலும், ரசவாதசாஸ்திரத்திலும், அங்காதிபாத சாஸ்

திரத்திலும், யந்திரசாஸ்திரத்திலும், இவை முதலியவைகளில் போல ஸ்தூல பொருள்களிலும் அறிந்து கொள்ளப்பட முடியாது. ஆனால், சுத்தமாய் பகுத்தறிவுள்ளதும், சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதுமாகிய பொருள்களில், உண்மைகள் மனிதனானவன் சரியான கல்வியினால் சற்று பகுத்தறிவுள்ளவனாகவும், சன்மார்க்கமானவனாகவும், பரமார்த்தமானவனாகவும் இருக்கும் பட்சத்தில், அவைகளினுடைய வெளிச்சத்திலிருந்தே தோன்றுகின்றன. நினைக்கிறதாயிருக்கிற தன் ஆன்மா விஷயத்தில், ஒவ்வொரு மனிதனும், சூக்கும உலகத்தில் இருக்கிறானென்பதும், அங்கேயிருப்பவர்களுக்குள் ஒருவனென்பதும், அதனால், தன்னுடைய புத்தியின் உள்ளானவைகளை தெளிவித்து, உத்திரவு செய்கிறது போலிருக்கிற சூக்கும வெளிச்சத்தில் இருக்கிறான் என்பதும், இதற்கு காரமாணயிருக்கிறது. ஏனென்றால், சூக்கும வெளிச்சமானது தன் சத்தில் ஆண்டவருடைய ஞானசத்தியின் தெய்வ உண்மையாயிருக்கிறது. அதனால்தான் மனிதனானவன் கூறுபடுத்தி நினைக்கவும், நியாய விசாரணை சம்பந்தமான விஷயங்களில், நியாயமானதும் சரியானதுமாகியதைப்பற்றி தீர்மானம் செய்யவும், சன்மார்க்க வாழ்வில் எது கௌரவமுடையது என்றும், பரமார்த்த வாழ்வில் எது நன்மையானதென்றும் பார்க்கவும், மேலும், ஸ்திரப்பட்ட பொய்களிலிருந்து தவிர இருட்டில் விழாத அநேக உண்மைகளையும் பார்க்கவும், சக்தியுள்ளவனா யிருக்கிறான். மனிதனானவன் ஒப்பீடாய், ஒருவனுடைய முகத்திலிருந்து, அவனுடைய மனதை ஏறக்குறைய அறிந்து கொண்டு, ஒவ்வொரு மனிதனிலும் சுபாவமானதைத் தவிர வேறு எந்த அறிவுமில்லாமல், அவனுடைய பேச்சின் சப்தத்திலிருந்து, அவனுடைய ஆசைகளை பார்க்கிறது போல, இவைகளை அறிந்து கொள்ளுகிறான். இயல்பானதா யிருக்கிற தனக்கு தேவையானவைகளை உட்பெருக்கினால் தெரிந்துகொள்ளாத எந்த பிராணியும் இல்லாதிருக்கும்போது, மனிதனானவன் கொஞ்சமாவது, பரமார்த்தமாகவும் சன்மார்க்கமாகவு மிருக்கிற, அவன் உயிரின் உள்ளானவைகளை உட்பெருக்கிலிருந்து ஏன் பார்க்கக்கூடாது? ஒரு பட்சிக்கும் தன் கூண்டைக்கட்டவும், அதன் முட்டைகளையிடவும், அதன் குஞ்சுகளைப் பொறிக்கவும், தன்

உணவை தெரிந்தெடுக்கவும், இயற்கை அறிவுகள் என்று சொல்லப்பட்ட இன்னும் இதர ஆச்சரியமானவைகளும் தெரியும்.

318. ஆனால், மனிதனுடைய நிலைமையானது ஸ்திரப்படுத்துதலிலிருந்தும், அதிலிருந்து போதித்து சம்மதிக்கச்செய்வதிலிருந்தும், எப்படி மாற்றப்படுகிறதென்று, பின்வரும் ஒழுங்கில் இப்பொழுது சொல்லப்படவேண்டும். I. ஸ்திரப்படுத்தப்படாதது ஒன்றுமில்லை, உண்மையைவிட பொய்யானதை அதிகமாய் ஸ்திரப்படுத்தலாம். II. பொய்யானது ஸ்திரப்படுத்தப்பட்ட போது, உண்மை தோன்றுகிறதில்லை; ஆனால் ஸ்திரப்பட்ட உண்மையிலிருந்து, பொய்யானது பிரத்தியக்ஷமாகிறது. III. ஒருவன் தான் இஷ்டப்படுகிற எதையும் ஸ்திரப்படுத்த சக்தியுள்ளவனாயிருத்தல் விவேகம் அல்ல, அது மிகவும் கெட்ட மனிதர்களிடத்தில் கூட இருக்கக்கூடிய சூட்சுமபுத்தியாய் மாத்திர மிருக்கிறது. IV. புத்தி சம்பந்தப்பட்டதாயும் அதே காலத்தில் தன்னிஷ்டமானதாயு மில்லாத ஸ்திரப்படுத்தலு மிருக்கிறது; ஆனால் தன்னிஷ்டமான ஸ்திரப்படுத்துதல் எல்லாம் புத்திசம்பந்தமானதாய் கூடயிருக்கிறது. V. தன்னிஷ்டமானதும், அதே காலத்தில் புத்தி சம்பந்தமானதுமான தீமையின் ஸ்திரப்படுத்துதல் என்பது, மனிதனை தன்னுடைய சொந்த விவேகமானது எல்லாமென்றும், தெய்வபரிபாலனம் ஒன்றுமில்லை என்றும், நம்பச்செய்கிறது; ஆனால் புத்திசம்பந்தமான ஸ்திரப்படுத்துதல் மாத்திரம் அப்படி செய்கிறதில்லை. VI. சித்தத்திலிருந்தும், அதேகாலத்தில் புத்தியினாலும் ஸ்திரப்படுத்தப்பட்ட ஒவ்வொன்றும், எப்பொழுதும் நிற்கிறது; ஆனால், புத்தியினால் மாத்திரம் ஸ்திரப்படுத்தப்பட்டது அப்படி நிற்கிறதில்லை. முதல் சொன்னதைக்குறித்து: **ஸ்திரப்படுத்தப்படக் கூடாதது ஒன்றுமில்லை, உண்மையைவிட பொய்யானதை அதிகமாய் ஸ்திரப்படுத்தலாம்.** நாஸ்திகர்களால், பிரபஞ்ச சிருட்டிகர்த்தா கடவுளல்லவென்றும், பிரகுருதியே தன்னுடைய சிருட்டிகர்த்தாவென்றும், சமயமென்பது ஒரு பந்தமாக மாத்திரம் இருக்கிறதென்றும், இதுகூட பேதைகளுக்கும் சாமர்னிய ஜனங்களுக்கும் ஏற்பட்டதென்றும், மனிதன் ஒரு மிருகத்தைப்

போலிருக்கிறுனென்றும், அவைகளில் ஒன்றைப்போல் இறக்கிறுனென்றும், மேலும், விபசாரங்கள் செய்யவிடப்படக்கூடியதென்றும், அம்மாதிரியே, ஒளிப்பான திருடும், மோசங்களும், மோசமான உபாயங்களும் விடப்படக்கூடியதென்றும், தந்திரம்விவேகமென்றும், துன்மார்க்கம் ஞானமென்றும் ஸ்திரப்படுத்தப் படும்போது, வேறு எதுதான் ஸ்திரப்படுத்தப்படக்கூடாது? தன்னுடைய சொந்த மதபேதத்தை ஸ்திரப்படுத்தாதவன் யார்? கிருஸ்துவ உலகத்தில் ஆளுகிற இரண்டு சமயபேதங்களுக்கும் ஸ்திரப்படுத்துதல் நிறைந்த புஸ்தகங்கள் இல்லையா? கிரகிக்க கஷ்டமான பத்து வேதப்புரட்டுகளை கூட உண்டுபண்ணி, ஒரு சூட்சும புத்தியுள்ளவனை, அவைகளை ஸ்திரப்படுத்த சொல்லுங்கள், அவன் அவைகளை எல்லாம் ஸ்திரப்படுத்துவான். பின்னிட்டு அப்படி ஸ்திரப்படுத்தப்படுதலிலிருந்து மாத்திரம் நீ அவைகளைப் பார்த்தால், பொய்களை உண்மைகளைப் போல் நீ பார்க்கமாட்டாயா? எல்லாபொய்யும் ஸ்தூல மனிதனில் அதன் தோற்றங்களிலிருந்தும், போலி நியாயங்களிலிருந்தும், பிரகாசிக்கிறபடியினுலும், உண்மையானது பரமார்த்த மனிதனில் மாத்திரம் பிரகாசிக்கிறதினுலும், பொய்யானது உண்மையை விட அதிகமாய் ஸ்திரப்

(3) படுத்தப்படக் கூடுமென்று வெளிப்படையாயிருக்கிறது. பொய்யானது உண்மையைப்போலவும், தீமையானது நன்மையைப்போலவும் தோன்றுகிறவரையில், ஒவ்வொருபொய்யும், ஒவ்வொரு தீமையும் ஸ்திரப்படுத்தப்படக் கூடுமென்று தெரிந்திருக்கும் பொருட்டு, உதாரணமாக வெளிச்சம் இருட்டென்றும், இருட்டு வெளிச்சமென்றும் ரூபகாரம் செய்யப்படட்டும். வெளிச்சம் என்பதே என்ன? வென்றும், கண்ணில் அதன் நிலைமைக்கு தக்கபடி தோன்றுகிற ஏதோ ஒன்று மாத்திரம் அல்லவா? வென்றும், மூடப்பட்டிருக்கிற கண்ணுக்கு வெளிச்சம் என்பதென்ன? வென்றும், வெளிச்சத்தை இருட்டாகவும், இருட்டை வெளிச்சமாகவும், பார்க்கும்படியான கண்களை வெளவால்களும் ஆந்தைகளும் உடைத்தாயிருக்கிறதில்லையா? வென்றும் சொல்லப்படாதா? இதேமாதிரி பார்த்த சில மனிதர்களைப்பற்றியும் இருட்டில் இருந்தபோதிலும் ஒருவரை ஒருவர் பார்க்கிற சில நரக சம்

பந்தமானவர்களைப் பற்றியும் நான் கேழ்விப்பட்டிருக்கிறேன். மனிதன் தன்னுடைய கனவில் நடுராத்திரியில் வெளிச்சத்தை உடைத்தாயிருக்கிறதில்லையா? ஆகையினால் இருட்டு வெளிச்சமல்லவா, வெளிச்சம் இருட்டல்லவா? இதைப்பற்றி என்ன? உண்மை உண்மையா யிருப்பதுபோல வெளிச்சம் வெளிச்சமாயிருக்கிறது என்றும், பொய் பொய்யா யிருக்கிறதுபோல இருட்டு இருட்டாயிருக்கிறதென்றும் பதில் கொடுக்கப்படலாம். இன்னும் (4) ஒரு உதாரணம் எடுத்துக்கொள்ளலாம்: ஒரு அண்டங்காகம் வெண்மையானது என்று ரூபகாரம் செய்யப்படட்டும். அதன் கருப்பு நிறமானது, நிஜமான பட்சியாயில்லாத ஒரு சாயை என்று சொல்லப்படாதா? அதன் இறகுகள் உள்ளுக்குள்ளாய் வெண்மையா யிருக்கிறது; அதன் சரீரமும் அப்படியேயிருக்கிறது; இந்தப்பொருள்களால் தான், அந்த அண்டங்காகம் உண்டாக்கப்பட்டிருக்கிறது. அதன் கருப்பு நிறம் ஒரு சாயையாயிருப்பதினால், அண்டங்காகம் கிழமாகும்போது வெண்மையாகிறது; இவ்விதமானவைகள் பார்க்கப்பட்டிருக்கின்றன. கருப்பு என்பதே பிரதானமாய் வெண்மையைத்தவிர வேறு என்ன? கருப்பு கண்ணாடியை பொடியாக்கு, தூளானது வெள்ளையாயிருப்பதை நீர் பார்ப்பீர். ஆகையினால், அண்டங்காகம் கருப்பாயிருப்பதாக நீ சொன்னால், உண்மையிலிருந்தல்லாமல், நீ சாயையிலிருந்து பேசுகிறாய். ஆனால், இதைப்பற்றி என்ன? இந்தவிதயாக எல்லா பட்சிகளும் வெண்மையானதென்று சொல்லப்படலாம் என்று பதில் சொல்லப்படலாம். சரியான விவேகத்துக்கு, இவைகள் எல்லாம் எதிரிடையாயிருந்தபோதிலும், உண்மைக்கு நேராய் எதிரிடையான பொய்யும், நன்மைக்கு நேராய் எதிரிடையான தீமையும், ஸ்திரப்படுத்தப்படக்கூடுமென்று அறிந்துகொள்ளப் (5) பட எடுத்து காட்டப்பட்டது. இரண்டாவது: **பொய்யானது ஸ்திரப்படுத்தப்பட்டபோது, உண்மை தோன்றுகிறதில்லை; ஆனால் ஸ்திரப்படுத்தப்பட்ட உண்மையிலிருந்து, பொய்யானது பிரத்தியக்ஷமாகிறது.** எல்லா பொய்யும் இருட்டிலிருக்கிறது, எல்லா உண்மையும் வெளிச்சத்திலிருக்கிறது; இருட்டில் எதுவும் தோன்றுகிறதில்லை, அதுவுமன்றி, நிஜமாகவே, ஒன்றை தொட்டுப்பார்த்தால்

ஒழிய அது என்னவென்று தெரிகிறதில்லை; வெளிச்சத்தில் அது வேறுமாதிரியிருக்கிறது. ஆகையினால்கூட, வேதத்தில் பொய்கள் இருட்டென்று சொல்லப்படுகின்றன, அதனால், பொய்களிலிருக்கப்பட்டவர்கள் இருட்டிலும், மரணத்தின் சாயையிலும் நடக்கிறதாக சொல்லப்படுகிறார்கள்; மற்றப்படி, உண்மைகள் அங்கே வெளிச்சம் என்று சொல்லப்படுகின்றன; ஆகையினால், உண்மை
(6)களில் இருக்கப்பட்டவர்கள் வெளிச்சத்தில் நடப்பதாகவும்ஒளியின்குமாரர்கள் என்றும்சொல்லப்படுகிறார்கள்.பொய்யானது ஸ்திரப்படுத்தப்பட்டபோது, உண்மை தோன்றுகிறதில்லை என்பதும், ஸ்திரப்படுத்தப்பட்ட உண்மையிலிருந்து பொய்யானது பிரத்தியக்ஷமாகிறதென்பதும், அநேக விஷயங்களிலிருந்து வெளிப்படையாகிறது. உதாரணமாக வேதமானது கற்பித்தால் ஒழிய எந்த பரமார்த்த உண்மையையும் யார் அறிந்துகொள்ளக்கூடும்? வேதமிருக்கப்பட்ட வெளிச்சத்தினாலும், அறிவு உண்டாக்கப்பட இஷ்டப்படுகிறவனிடத்திலும் தவிர,நீக்கப்படமுடியாத தடித்த இருட்டு மாத்திரம் இருக்காதா? திருச்சபையின் கலப்பற்ற உண்மையை ஒத்துக்கொண்டால் ஒழிய, தன்னுடைய பொய்களை எந்த சமயபுரட்டன் அறிந்துகொள்வான்? அவன் முன்னிட்டு அதைப்பார்க்கிறதில்லை. தருமத்திலிருந்து வேறான விசுவாசத்தில் தாங்களே ஸ்திரப்பட்டவர்களுடன் நான் பேசியிருக்கிறேன்: அன்பையும் தருமத்தைப்பற்றியும், வேலைகளையும் கிருத்தியங்களைப்பற்றியும், கட்டளைகள்படி நடத்தலைப்பற்றியும், அவைகள்படி செய்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவனென்பதைப்பற்றியும், ஞானி என்பதைப் பற்றியும், அவைகளை செய்யாதவன் மூடனென்பதைப்பற்றியும், வேதத்தில்சொல்லியிருக்கும் அநேகவிஷயங்களை பார்த்திருக்கிறீர்களா என்று அவர்களைக்கேட்டபோது, அதற்கு அவர்கள், அவைகளை வாசிக்கும் காலத்தில் அவைகள் விசுவாசத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லையென்று அறிந்துகொண்டதாகவும், ஆகையினால் தங்களுடைய கண்களை மூடிக்கொண்டதுபோல், அவைகளை கவனிக்க
(7)வில்லை என்றும் சொன்னார்கள். பொய்களில் தாங்களே ஸ்திரப்பட்டவர்கள், ஒரு சுவற்றின்பேரில் குறிகளை பார்த்து, மாலை இருட்டில், தங்களுடைய மனோபாவத்தில் அந்த குறிப்பிட்ட

பாகத்தை பகல் வெளிச்சம் வந்தபோது மறைந்துபோகிற ஒரு குதிரை சவாரி செய்வோன்போலவும், அல்லது ஒரு மனிதனைப் போல பார்க்கிறவர்கள்போலவும், இருக்கிறார்கள். கற்புடைமையின் பரமார்த்த சுத்தத்தில் இருப்பவன் தவிர யாருக்கு விபசாரத்தின் பரமார்த்த அசுத்தம் தெரியும்? அயலானிடத்து அன்பிலிருந்து நன்மையிலிருக்கப்பட்டவன் தவிர, வேறு யாருக்கு பழிவாங்குதலின் கொடுமை தெரியும்? விபசாரியாயுள்ளவன் எவன், அல்லது பழிவாங்க ஆசையுள்ளவன் எவன், அந்த விஷயங்களின் சந்தோஷங்களை நரகத்துக்கு அடுத்ததென்று சொல்லுகிறவர்களையும்,மற்றப்படி, விவாகசம்பந்தமான அன்பினுடையவும் அயலானிடத்துகாட்டும் அன்பினுடையவும் சந்தோஷங்களை, சுவர்க்கத்துக்கு அடுத்ததென்று சொல்லுகிறவர்களையும், இவர்கள் (8)போன்ற மற்றவர்களையும் பரிகாசம் செய்யாதிருக்கிறான். மூன்றாவது: தனக்கு இஷ்டமானதை ஸ்திரப்படுத்த சக்தியுள்ளவனுயிருத்தல் விவேகமல்ல, அது சூட்சும புத்தியாய் மாத்திரம் இருக்கிறது; அது மிகவும்கெட்ட மனிதர்களிடத்தில் கூட இருக்கலாம். எந்த உண்மையும்தெரியாதவர்களும், அப்படியிருந்தும் உண்மையையும் பொய்யையும் ஸ்திரப்படுத்தக்கூடியவர்களுமாகிய மிகவும் சாமர்த்தியமுடைய சில ஸ்திரப்படுத்தப்பட்டவர்கள் இருக்கிறார்கள்; அவர்களில் சிலர் உண்மை என்பது என்ன? அப்பேர்பட்டது ஏதாவது ஒன்று இருக்கிறதா? நான் உண்மையாகும்படி செய்கிறதுதானே உண்மை? என்று சொல்லுகிறார்கள். என்றாலும், உலகத்தில், இவர்கள் விவேகிகள் என்று நம்பப்படுகிறார்கள்; அப்படியிருந்தாலும், அவர்கள் சுவற்றிற்கு கரைபோடுகிறவர்களாய்மாத்திரம் யிருக்கிறார்கள். உண்மையை உண்மையாக அறிந்துகொண்டு, இடைவிடாமல் பார்க்கப்பட்ட உண்மைகளால், இதை ஸ்திரப்படுத்துகிறவர்கள் தவிர வேறு யாரும் விவேகிகள் அல்ல. ஆனால், ஸ்திரப்படுத்தலின் வெளிச்சத்துக்கும், உண்மையை அறிந்துகொள்ளுதலின் வெளிச்சத்துக்கும், வித்தியாசம் பார்க்கமுடியாதபடியினால், இந்த இரண்டு வகுப்பினர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை பார்க்க முடியாது. ஸ்திரப்படுதலின் வெளிச்சத்திலிருக்கிறவர்கள் உண்மையை அறிதலின் வெளிச்சத்தில் கூட இருக்கிறார்களென்பதைத்

தவிர வேறுவிதமாய் தோன்றுகிறதில்லை; அப்படி யிருந்தபோதி லும், அவைகளுக்குள்ள வித்தியாசம் நிஜமில்லாத வெளிச்சத்துக் கும் நிஜமான வெளிச்சத்துக்கும் உள்ள வித்தியாசத்தைப்போ லிருக்கிறது; சூக்கும உலகத்தில் நிஜமில்லாத வெளிச்சம், உள்ளே பாயும் நிஜமான வெளிச்சம் இருட்டாக திருப்பப்படுகிறதா யிருக்கிறது. நரகத்தில் அநேகரிடத்தில் அவ்விதமான நிஜமில் லாத வெளிச்சமிருக்கிறது; அவர்கள் நிஜவெளிச்சத்துக்கு அனுப் பப்பட்டால் ஒன்றையும் பார்க்கிறதில்லை. இந்த ஆலோசனைகளி லெல்லாமிருந்து, ஒருவன் தான் இஷ்டப்படுவதை ஸ்திரப்படுத்த சக்தியுள்ளவனு யிருத்தல் சாதுரியமாக மாத்திரம் இருக்கிறதென் றும், அது மிகவும் கெட்டவர்களிடத்தில் கூட யிருக்கலா மென் றும் விசதமாகிறது. நான்காவது: தன்னிஷ்டமானதாய் கூட இல் (9) லாத ஒரு புத்தி சம்பந்தமான ஸ்திரப்படுதலிருக்கிறது, ஆனுல் எல்லா தன்னிஷ்டமான ஸ்திரப்படுதலும் புத்தி சம்பந்தமானதாய்கூட யிருக்கிறது. இதை உதாரணங்களால் விவரப்படுத்தப்படட்டும். தருமத்திலிருந்து வேருன விசுவாசத்தை ஸ்திரப்படுத்தி, தரு மத்தின் வாழ்வை வாழ்கிறவர்களும், பொதுவாக, கொள்கையின் பொய்யை ஸ்திரப்படுத்தி, அப்படியிருந்தும் அதன்படி வாழாத வர்களும் தான், தன்னிஷ்டமான ஸ்திரப்படுதலில் கூட அல்லா மல், புத்திசம்பந்தமான ஸ்திரப்படுதலில் இருக்கப்பட்டவர்கள். ஆனுல், கொள்கையின் பொய்யை ஸ்திரப்படுத்தி, அதன்படி வாழ்கிறவர்கள், தன்னிஷ்டமான ஸ்திரப்படுதலிலும், புத்திசம் பந்தமான ஸ்திரப்படுதலிலும் இரண்டிலும் இருக்கப்பட்டவர் கள். புத்தி சித்தத்தில் ஓடாமல், சித்தம் புத்தியில் ஓடுகிறது என் பது காரணமா யிருக்கிறது. இதிலிருந்துகூட தீமையின் பொய் என்னவென்றும், தீமைக்கு சேராதபொய் என்னவென்றும் கூட இதிலிருந்து விசதமாகிறது. தீமைக்கு சேர்ந்திராத பொய் நன்மையுடன் சேர்க்கப்படலாம், தீமையின் பொய் அப்படி செய் யப்பட முடியாது; தீமைக்கு சேராத பொய்யானது, சித்தத்தில் அல்லாமல் புத்தியிலிருக்கும் பொய்யாயிருக்கிற தென்பதும், ஆனுல் தீமையின் பொய்யானது, சித்தத்திலிருக்கும் தீமையி லிருந்து உண்டாகிற புத்தியிலிருக்கும் பொய்யாயிருக்கிற தென்

(10) பதும் காரணமாயிருக்கிறது. ஐந்தாவது: சுவேச்சாப் பூர்வ மானதும் புத்தி சம்பந்தமானதுமாகிய தீமையின் ஸ்திரப்படுதல் தன்னிடமே யிருந்துவந்த விவேகம் எல்லாமென்றும், தெய்வபரிபாலனம் ஒன்றுமில்லை என்றும், மனிதனை நம்பச்செய்கிறது; ஆனால் புத்திசம்பந்தமான ஸ்திரப்படுதல் மாத்திரம் அப்படிச் செய்கிறதில்லை. உலகத்திலிருக்கும் தோற்றங்களிலிருந்து, தங்களுடைய சொந்த விவேகத்தை தங்களிடத்திலேயே ஸ்திரப்படுத்தி, அப்படியிருந்தும் தெய்வபரிபாலனத்தை மறுக்காதவர்கள் அநேகர் இருக்கிறார்கள்; அப்பேர்ப்பட்டவர்கள் விஷயத்தில், புத்திசம்பந்தமான ஸ்திரப்படுதல் மாத்திரம் இருக்கிறது; ஆனால் தெய்வபரிபாலனத்தை அதேகாலத்தில் மறுக்கிறவர்கள் விஷயத்தில், சுவேச்சாபூர்வமான ஸ்திரப்படுதலும் கூட யிருக்கிறது; ஆனால் இது, போதித்து சம்மதிக்கச் செய்தலுடன் சேர்ந்து, பிரகுருதியை ஆராதிப்பவர்களிடமும், அதனுடன் தன்னையே ஆராதிப்பவர்களுடனும் முக்கிய
(11)மாய் இருக்கிறது. ஆறாவது: சித்தம் புத்தி என்கிற இரண்டினாலும் ஸ்திரப்படுத்தப்பட்ட ஒவ்வொன்றும் எக்காலத்திலும் நிற்கிறது; ஆனால் புத்தியினால் மாத்திரம் ஸ்திரப்படுத்தப்பட்டது அப்படியில்லை. ஏனென்றால், புத்தியைச் சேர்ந்தது மட்டும், மனிதனில் இல்லை; அவனுக்கு வெளியே யிருக்கிறது; அது சிந்தனையில் மாத்திரம் இருக்கிறது; சித்தத்தில் ஒத்துக்கொள்ளப்பட்டது தவிர, எதுவும் மனிதனுக்குள் பிரவேசித்து அவனுடையதாக்கப்படுகிறதில்லை; ஏனென்றால், இது அவனுடைய உயிரினுடைய அன்பின் ஒரு பாகமாகிறது. இது சதாகாலம் நிற்கிறது என்பது இப்பொழுது வரும் பிரிவில் காண்பிக்கப்படும்.

319. சித்தத்தினாலும் புத்தியினாலும் ஸ்திரப்படுத்தப்பட்ட ஒவ்வொன்றும் எப்பொழுதும் நிற்கிறது; ஏனென்றால், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த அன்பாயிருக்கிறான், அவனுடைய அன்பு அவன் சித்தத்துக்கு சேர்ந்திருக்கிறது; மேலும், அன்புக்கு சேர்ந்தவைகள் எல்லாம் நன்மை என்று சொல்லப்படுகிறபடியினால், ஒவ்வொருமனிதனும் அவனுடைய நன்மையாயிருக்கிறான், அல்லது தீமையாயிருக்கிறான். தீமை விஷயத்திலும்

அப்படியே. மனிதனானவன் தன்னுடைய சொந்த அன்பாயிருக்கிற படியினால், அவன் அவனுடைய சொந்த அன்பின் உருவமாகவு மிருக்கிறான், அவனுடைய சொந்த உயிரின் அன்பினுடைய அவயமென்று சொல்லப்படலாம். மேலே 279வது பிரிவில் ஒரு மனிதனுடைய அன்பின் ஆசைகளும், அதிலிருந்து வரும் சிந்தனைகளும், அவனுடைய மனதின் அங்க சம்பந்தமான பொருள்களினுடைய உருவத்தினுடையவும் நிலைமையினுடையவும் மாறுதல்களும் வேறுபாடுகளுமா யிருக்கின்றனவென்று சொல்லப்பட்டது. இந்த மாறுதல்களும் வேறுபாடுகளும் என்னவென்றும், என்ன குணமுடையதென்றும், இப்பொழுது சொல்லப்படவேண்டும். இருதயத்தில் சுருங்குதல் பெருகுதலென்று சொல்லப்படுகிறதும், சுவாசாசயத்தில், தங்களுடைய வட்டங்களை ஒன்று விட்டு ஒன்றாய் பெருகுதலும், குறைத்தலுமான ஒரு காரியமாயிருக்கிற மூச்சுவிடுதலும் வாங்குதலும் என்று சொல்லப்படுகிறதுமாகிய ஒன்றுவிட்டு ஒன்றான விரிதலும் சுருங்குதலுமாயிருக்கிறதென்று, இவைகளைப்பற்றி ஒரு அபிப்பிராயம் இருதயத்திலிருந்தும் சுவாசாசயங்களிலிருந்தும் கொள்ளலாம். இவைகள் எல்லாம் இருதயத்தினுடையவும் சுவாசாசயங்களினுடையவும் நிலைமையின் மாறுதல்களும் வேறுபாடுகளுமா யிருக்கின்றன. சரீரத்தின் இதர ஆந்திரிகங்களிலும், இரத்தத்தையும் ஜீவஇரசத்தையும் பெற்றுக்கொண்டு மேலே கொண்டுபோகிற அவைகளின் இந்த இனமானவைகளிலும் கூட அவ்விதமான மாறுதல்கள் சம்ப(2)விக்கின்றன. மனிதனுடைய ஆசைகளுக்கும் சிந்தனைகளுக்கும் பதார்த்தங்களா யிருக்கிற மனதின் அவயவசம்பந்தமான உருவங்களில் அம்மாதிரியான மாறுதல்கள் மேலே காண்பித்தபடி சம்பவிக்கின்றன; வித்தியாசம் என்னவென்றால், அவைகளின் விரிவுகளும் அமுக்குதல்களும், ஸ்தூலபாஷையின் வார்த்தைகளால் சொல்லக்கூடாதபடிக்கும், உயிரை ஏற்றுக்கொள்ளக்கூடிய உருவங்களாக ஆச்சரியப்படும்படியாய் சேர்க்கப்பட்டிருக்கிற சதாகாலமிருப்பதும் வளைந்ததுமான சுழிரேகைகள் இருப்பதுபோல், சுருக்கப்பட்டதும் விரிக்கப்பட்டதுமான சுழலுகிற சலனங்களாக இருப்பதாக அவைகளை சொல்லக்கூடிய சூக்கும பாஷை

யின் வார்த்தைகளால் மாத்திரம் சொல்லக்கூடியதாயுமிருக்கிற, (3) ஒப்பீடாய் அவ்வளவு உயர்ந்த சம்பூரணத்திலிருக்கின்றன. ஆனால் கெட்டவர்கள் விஷயத்தில் இந்த சுத்தமான அவயவசம்பந்தமான பொருள்களும் உருவங்களும் என்ன குணமுடையதென்பதும், நல்லவர்கள் விஷயத்தில் அவைகள் என்ன குணமுடையதென்றும், இப்பொழுது சொல்லப்படவேண்டும். நல்லவர்களிடத்தில் அவர்களுடைய சுழியான சலனம் முந்தியும், கெட்டவர்கள் விஷயத்தில் பிந்தியுமிருக்கிறது; முன்னே நோக்கும் சுற்றுகளை உடைத்தாயிருக்கிற பொருள்களும் உருவங்களும் ஆண்டவர்பக்கம் திருப்பப்பட்டு, அவரிடமிருந்து உட்பெருக்கை அடைகிறது; ஆனால் பின் நோக்கும் சுழியுள்ள சலனங்களை உடைத்தாயிருக்கிறவைகள் நரகம் பக்கம் திருப்பப்பட்டு, அதிலிருந்து உட்பெருக்கை பெற்றுக்கொள்ளுகிறது. அவைகள் எவ்வளவு பின்னிட்டு திருப்பப்பட்டிருக்கின்றனவோ, அவ்வளவு பின்னால் திறந்தும், எதிரில் மூடப்பட்டும் இருக்கின்றன; மறுமுறையில், அவைகள் எவ்வளவு முன்நோக்கி திருப்பப்பட்டிருக்கின்றனவோ, அவ்வளவு எதிரில் திறக்கப்பட்டு பின்புறத்தில் (4) மூடப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து ஒரு கெட்ட மனிதன் எந்தவித உருவத்தில் அல்லது எந்தவித அங்கத்தில் இருக்கிறானென்றும், ஒரு நல்ல மனிதன் எந்தவித உருவத்தில் அல்லது எந்தவித அங்கத்தில் யிருக்கிறானென்றும், அதாவது, அவர்கள் எதிரிடையான திக்குகளில் திரும்புகிறார்களென்று விசதமாகிறது; அப்படி திரும்புதல் ஒருதடவை செய்விக்கப்பட்டால், பின்னிட்டு வளைக்கப்பட முடியாதாகையினால், மனிதன் இறக்கும்போது இருக்கிறது போல, அவ்விதமாகவே எப்பொழுது மிருக்கிறானென்று வெளிப்படையாயிருக்கிறது. அந்த திருப்புதலை செய்கிறதும் அல்லது மாற்றுகிறதும் கவிழ்கிறதும் மனிதனுடைய சித்தத்தின் அன்பாய்தான் இருக்கிறது; ஏனென்றால், மேலே கூறியபடி, ஒவ்வொருவனும் அவனுடைய சொந்த அன்பாயிருக்கிறான். அதனால் தான், இறந்தபிறகு ஒவ்வொருவனும், தன்னுடைய சொந்த அன்பு போகும்வழியில் போகிறான்; நல்ல அன்பில் இருக்கப்பட்டவன் சுவர்க்கத்துக்கும், கெட்ட அன்பிலிருக்

கப்பட்டவன் நரகத்துக்கும் போகிறுர்கள்; அதுவுமன்றி, ஒவ்வொருவனும், தன்னுடைய ஆளுகிற அன்பு இருக்கப்பட்ட கூட்டத்தில் தவிர வேறு எங்கும் ஒய்ந்து நிற்கிறதில்லே. ஆச்சரியமானது என்னவென்ருல், ஒவ்வொருவனுக்கும் வழி தெரியும்; அவன் தன்னுடைய நாசித்துவாரங்கள் மூலமாய் அதை மணந்து பார்த்ததுபோலிருக்கிறது.

320. IV. உண்மையாயிருக்கிறதுபோல், மனிதனவன் எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிற தென்றும், எல்லா தீமையும் பொய்யும் நரகத்திலிருந்து வருகிறதென்றும், நம்பிளுல், அவன் நன்மையை தனதாகவே செய்துகோண்டு, அதை புகழ்ச்சிக் கிடமானதாக செய்யமாட்டான்; அதுவுமன்றி தீமையை தனதாகவே செய்துகோண்டு, அதைச் செய்த குற்றவாளியாக தானே செய்துகோள்ளமாட்டான். ஆனுல், ஞானமும் விவேகமும் மனிதடமிருந்து வருகிறதென்றும், அவனுடைய மனது சம்பந்தமான அமைப்பின் நிலேமைக்கு தக்கபடி (இதைப்பற்றி மேலே பிரிவு 319ல் பார்க்கவும்) அவைகள் உள்ளே பாய்கிறதில்லே என்றும், ஓர் தோற்றத்தை தங்களுக்குள்ளேயே ஸ்திரப்படுத்திக்கொண்டவர்களின் நம்பிக்கைக்கு இவைகள் எதிரிடையாயிருப்பதிளுல், அவைகள் ரூபகாரம் செய்யப்படவேண்டும்; தெளிவின் பொருட்டு பின்வரும் ஒழுங்கில் இது சொல்லப்படும். I. ஞானமும் விவேகமும் மனிதனிடமிருந்து வருகிறதென்கிற தோற்றத்தை தன்னிலேயே ஸ்திரப்படுத்தி, அதளுல் அவனில் அவன் சொந்தமாயிருக்கப்பெற்றவன் தான் மனிதனுயல்லாமல், ஒரு மிருகம் அல்லது கற்பாவையாக இருப்பதாக தவிர, வேறு விதமாய் பார்க்கமாட்டான்; அப்படியிருந்தாலும் எதிரிடையானது உண்மையாயிருக்கிறது. II. உண்மையாயிருக்கிறதுபோல, எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், எல்லா தீமையும் பொய்யும் நரகத்திலிருந்து வருகிறதென்றும், நம்புதலும் நினேத்தலும் ஆகாதகாரியம் போல் தோன்றுகிறது; அப்படியிருந்தாலும், அது உண்மையான மானிடத்தன்மையாயும், ஆகையால் தேவதா சம்பந்தமான நிலேமையாயுமிருக்கிறது.

III. அப்படி, நம்புதலும் நினைத்தலும், ஆண்டவரின் தெய்வத்தன்மையை ஒத்துக்கொள்ளாதவர்களுக்கும், தீமைகளை பாவங்களாக ஒத்துக்கொள்ளாதவர்களுக்கும் முடியாது; ஆனால் அந்த இரண்டு விஷயங்களை ஒத்துக்கொள்ளுகிறவர்களுக்குமுடியும். IV. இந்த இரண்டையும் ஒத்துக்கொள்ளுகிறவர்கள், தங்களுக்குள்ளேயிருக்கும் தீமைகளை மாத்திரம் யோசித்து, தாங்கள் அவைகளை நீக்கி; அவைகளை பாவங்களாக வெறுப்பில்லைவைக்கிற அளவு, அவைகளை அவைகள் வந்த நரகத்துக்கு தங்களிடமிருந்து தள்ளிவிடுகிறார்கள். V. இவ்விதமாக தெய்வபரிபாலனமானது தீமையையாவது நன்மையையாவது எவனுக்கும் தனதாக செய்கிறதில்லை, ஆனால் மனிதனுடைய சொந்த விவேகம் இரண்டையும் தனதாக்கிக் கொள்ளுகிறது.

321. ஆனால், இந்த விஷயங்கள் அவைகள் சொல்லப்பட்ட ஒழுங்கில் விவரிக்கப்படவேண்டும். முதலாவது: ஞானமும் விவேகமும் மனிதனிடமிருந்து வருகிறதேன்கிறதும், அவனுடைய சொந்தமாக அவனிலிருக்கிறதேன்கிறதுமாகிய தோற்றத்தை தன்னிலே ஸ்திரப்படுத்துகிறவன், தான் ஒரு மனிதனாக அல்லாமல் ஒரு மிருகம் அல்லது கற்பாவையாக இருப்பதாக தவிர வேறுவிதமாக பார்க்கமாட்டான்; அப்படியிருந்தாலும் எதிரிடையானது உண்மையாயிருக்கிறது. தெய்வபரிபாலனத்தின் சட்டத்திலிருந்து தான், மனிதனானவன் தன்னிடமேயிருந்துபோல் நினைக்கவும், தன்னிடமேயிருந்துபோல விவேகமாய் நடக்கவும் வேண்டும், அப்படியிருந்தாலும், இது ஆண்டவரிடமிருந்து வருவதாக ஒத்துக்கொள்ளவேண்டும். அதனால் தான், தன்னிடமேயிருந்துபோல, விவேகமாய் நினைத்து செயல்பட்டு, அதேகாலத்தில் இது ஆண்டவரிடமிருந்து வருவதாக ஒத்துக்கொள்ளுகிறவன், ஒரு மனிதனாயிருக்கிறானென்று ஏற்படுகிறது; ஆனால், தான் நினைக்கிறதும் செய்கிறதுமாகிய எல்லாம் தன்னிடமேயிருந்து வருவதாக தானே ஸ்திரப்படுகிறவனும், அதுவுமல்லாமல், ஞானமும் விவேகமும் ஆண்டவரிடமிருந்துவருகிறதாக தெரிந்தபடியினால், அந்த உட்பெருக்கு இன்னும் காத்திருப்பவனும் மனிதனல்ல;ஏனென்றால்,இவன் ஒரு

கற்பாவையைப்போலாகிறான், மற்றவன் மிருகத்தைப்போலாகிறான், உட்பெருக்குக்கு எதிற் பார்க்கிறவன் கற்பாவையைப்போலிருக்கிறானென்பது, விசதமாயிருக்கிறது; ஏனென்றால், அவன் கைகளை தொங்கவிட்டுக்கொண்டு, கண்களை சிமிட்டாமல், மூடிக்கொண்டு அல்லது திறந்துகொண்டு, நினைத்தலில்லாமலும், மூச்சு (2) விடாமலும், நிற்க வேண்டும் அல்லது சலனமற்று உட்கார வேண்டும். அவனுக்கு அப்பொழுது என்ன உயிர் இருக்கிறது? தான் நினைப்பதும் செய்வதுமாகிய எல்லாம் தன்னிடமேயிருந்து வருகின்றனவென்று நம்புகிறவன் ஒரு மிருகத்தைப்போலிருக்கிறானென்பதுகூட விசதமாயிருக்கிறது; ஏனென்றால், அவன், நிஜமாக மானிடமானதாயிருக்கிற பரமார்த்த பகுத்தறிவுள்ள மனதிலிருந்து அல்லாமல், மனிதனுக்கும் மிருகத்துக்கும் பொதுவாயிருக்கிற ஸ்தூல மனதிலிருந்து மாத்திரம் அவன் நினைக்கிறான்; ஏனென்றால், இந்தமனது, கடவுள் மாத்திரம் தன்னிடமேயிருந்து நினைப்பதாகவும், மனிதன் கடவுளிடமிருந்து நினைப்பதாகவும் ஒத்துக்கொள்ளுகிறது: ஆகையினால், கூட, அவ்விதமான மனிதனுக்கு, ஒரு மனிதன் பேசுகிறானென்பதும், ஒரு மிருகம் சத்தம் செய்கிறதென்பதும் தவிர, ஒரு மனிதனுக்கும் மிருகத்துக்கும் (3) இருக்கும் வேறு வித்தியாசம் தெரியாது; அந்த இரண்டும் ஒரே மாதிரி இறந்துபோகின்றன என்று அவன் நம்புகிறான். உட்பெருக்கை எதிர்பார்க்கிறவர்களைப்பற்றி, இன்னும் அதிகம் சொல்லப்படவேண்டும். இருதயத்திலிருந்து அதை விரும்புகிற சிலர், சிந்தனையில் உயிர்ப்புள்ள பார்வையின் மூலமாய் அல்லது பிரதி உத்திரத்தில் மௌனமானதும், அரிதாய் வெளிப்படையானதுமான பேச்சினால், அப்போதைக்கப்போது ஏதோ ஒரு பதிலை அடைகிறார்கள் என்பதுதவிர, அவர்கள் எந்த உட்பெருக்கையும் பெற்றுக்கொள்ளுகிறதில்லை; தாங்கள் இஷ்டப்படுகிறது போலவும், தங்களால் கூடிய அளவும் நினைத்து செயல்படவேண்டுமென்றும், விவேகமாய் நடக்கிறவன் விவேகி என்றும், மூடத்தனமாய் நடக்கிறவன் மூடன் என்றும், அப்பொழுது தெரிவிக்கப்படுகிறது; எதை நம்பவேண்டுமென்றும் எதை செய்யவேண்டுமென்றும் அவர்கள் எப்பொழுதும் கற்பிக்கப்படுகிற

தில்லை; தோற்றத்தின்படி தன்னிடமே யிருந்துபோல, ஒவ்வொரு வனும் விவேகத்தை அனுசரித்து சுதந்தரத்திலிருந்து செயல் படும்பொருட்டு இருக்கிற, மானிட பகுத்தறிவுடைமையும் சுதந் தரமும் அழிந்துபோகாதபடி யிருக்க, இப்படி கற்பிக்கப் படுகிற தில்லை. எதை நம்பவேண்டுமென்றும், எதை செய்யவேண்டுமென் றும், உட்பெருக்கினால் கற்பிக்கப்படுகிறவர்கள், ஆண்டவரானும், அல்லது எந்த சுவர்க்கத்து தேவனாலும் அல்லாமல், உற்சாக முள்ள ஒரு குவேக்கர் மதத்தைசேர்ந்தவனாலும் அல்லது மோரே வியர் கருத்துடையவனாலும், கற்பிக்கப்பட்டு துர்மார்க்கத்துக்கு திருப்பப்படுகிறார்கள். ஆண்டவரிடமிருந்துவரும் உட்பெருக்குக ளெல்லாம் விவேகத்தை தெளிவிப்பதினாலும், உண்மையின்பேரில் ஆசை கொள்வதினாலும், பின் கூறியதின் மூலமாய் முன்கூறிய (4) திலும் சம்பவிக்கிறது. இரண்டாவது: உண்மையா யிருக்கிறது போல, நன்மையானதும் உண்மையானதுமாகிய ஒவ்வொன்றும் ஆண்டவரிடமிருந்து வருகிறதாகவும், தீமையானதும் பொய்யானது மாகிய ஒவ்வொன்றும் நரகத்திலிருந்து வருகிறதேன்றும், நம்பி நினைத் தல் முடியாத காரியம்போல் தோன்றுகிறது; அப்படியிருந்தாலும் அது தான் உண்மையான மானிட நிலைமையாயும், ஆகையினால் இவ்வித மாக தேவதா சம்பந்தமான நிலைமையாகவுமிருக்கிறது. வேறு ஒன் றும் அதிகமாய் சொல்லாத பட்சத்தில் எல்லா நன்மையும் உண் மையும் கடவுளிடமிருந்து வருகிறதாக நம்புதலும் நினைத்தலும் கூடுமென்று தோன்றுகிறது. அது வேதசாஸ்திர பக்திக்கு அனு சரித்திருக்கிற தென்பது காரணமாயிருக்கிறது; அந்த பக்திக்கு விரோதமாய் நினைத்தல் கூடாது. ஆனால், எல்லா தீமையும் பொய் யும், நரகத்திலிருந்து வருகிறதென்று நம்புதலும் நினைத்தலும், முடியாத காரியமாய் தோன்றுகிறது; ஏனென்றால், இவ்விதமாக மனிதன் ஒன்றையும் நினைக்கமுடியாதென்றுகூட நம்பப்படக்கூ டும். அப்படியிருந்தாலும், நரகத்திலிருந்து செய்தபோதிலும், மனி தன் தன்னிடமேயிருந்து போல நினைக்கிறான்; ஏனென்றால், எந்த உற்பத்திஸ்தானமாயிருந்தபோதிலும், சிந்தனையானது, மனிதனில் தன்னுடைய சொந்தமாக தோன்றும்படி, ஆண்டவர் ஒவ்வொரு வனுக்கும் அருள்செய்கிறார்; இல்லாவிட்டால், அவன் மனிதனாக

வாழமாட்டான்; அதுவுமன்றி மேலே அடிக்கடிகாண்பிக்கப்பட்ட படி, அவன் நரகத்திலிருந்து வெளியே நடத்தப்பட்டு சுவர்க்கத்
(5) தில் கொண்டுபோகப்பட அதாவது சீர்திருத்தப்படமாட்டான். ஆகையினல்கூட, மனிதன் தீமையிலிருந்தால், அவன் நரகத்திலிருப்பதாகவும், தீமையிலிருந்து நினைத்தால், நரகத்திலிருந்து நினைப்பதாகவும், தெரிந்துகொண்டு, அதிலிருந்து நினைக்க ஆண்டவர் அருள் செய்கிறார்; மேலும் நரகத்திலிருந்து அவன் தப்பித்துக்கொள்ளுகிறவழி வகைகளை ஆராய்ச்சி செய்யவும், அதிலிருந்து நினைக்காதிருக்கவும், ஆனல் சுவர்க்கத்துக்கு போய் அங்கே ஆண்டவரிடமிருந்து நினைக்கவும், அவனுக்கு சக்தியைக்கூட அவர் கொடுக்கிறார்; மேலும் அவர் அவன் தனக்கு இஷ்டமானதை தெரிந்தெடுத்துக் கொள்ள சுதந்தரத்தைத் தருகிறார். இதிலிருந்து மனிதனனவன் தன்னிடமிருந்தேபோல, தீமையையும் பொய்யையும் நினைக்கலாமென்றும், இதுவும் அதுவும் தீமையானதென்றும் பொய்யானதென்றும் நினைக்கலாமென்றும், அதனல் தன்னிடமேயிருந்து வருகிறது என்பது, ஒரு தோற்றமாக மாத்திரம் இருக்கிறதென்றும் அறிந்துகொள்ளலாம்; அந்த தோற்றமில்லாவிட்டால் அவன் மனிதனகமாட்டான். நிஜமாக மானிடநிலைமை, ஆகையினல் தேவதா சம்பந்தமான நிலைமை என்பது, உண்மையிலிருந்து நினைத்தலாயிருக்கிறது; மனிதன் தன்னிடமேயிருந்து நினைக்கிறதில்லை என்பதும், ஆனல், தோற்றத்தின்படி தன்னிடமேயிருந்துபோல நினைக்க ஆண்டவரால் அவனுக்கு சக்தி கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதும் உண்மை. மூன்ருவது: ஆண்டவரின் தெய்வத்தன்மையை ஒத்துக்கொள்ளாதவர்களுக்கும், தீமைகளை பாவங்களாக
(6) ஒத்துக்கொள்ளாதவர்களுக்கும், அம்மாதிரி நம்புதலும் நினைத்தலும் முடியாதகாரியம்; ஆனல், இந்த இரண்டு விஷயங்களையும் ஒத்துக்கொள்ளுகிறவர்களுக்கு அது முடியும். ஆண்டவர் மாத்திரம் மனிதனுக்கு சிந்தனையையும் சித்தத்தையும் கொடுக்கிறபடியினல், அவருடைய தெய்வீகத்தன்மையை ஒத்துக் கொள்ளாதவர்களுக்கு அது முடியாது; ஆண்டவருடைய தெய்வீகத்தன்மை பிரிக்கப்படுவதாக ஒத்துக்கொள்ளாதவர்கள், தங்களிடமேயிருந்து நினைப்பதாக நம்புகிறார்கள். தீமைகள் பாவங்களென்று ஒத்துக்கொள்

ளாதவர்களுக்குக் கூட அது முடியாதென்பது, அவர்கள் நரகத்திலிருந்து நினைப்பதினால் ஏற்படுகிறது; அங்கே ஒவ்வொருவனும் தன்னிடமேயிருந்து நினைப்பதாக பாவிக்கிறான்; ஆனால் இந்த இரண்டு விஷயங்களையும் ஒத்துக்கொள்ளுகிறவர்களுக்கு அது முடியுமென்று மேலே (பி-288-294) திரளாய் சொல்லப்பட்ட (7) வைகளால் விசதமாகும். நான்காவது: **இந்த இரண்டும் மாத்திரம் ஒத்துக்கொள்ளுகிறவர்கள், தங்களுக்குள்ளே யிருக்கும் தீமைகளை யோசித்து, அவர்கள் எவ்வளவு அவைகளைத் தள்ளி, பாவங்களாக வெறுப்பில் வைக்கிறார்களோ, அவ்வளவு அவைகள் புறப்பட்டு வந்த நரகத்தில் தங்களிடமேயிருந்து போட்டுவிடுகிறார்கள்.** தீமையானது நரகத்திலிருந்தும், நன்மையானது சுவர்க்கத்திலிருந்தும் வருகிறதென்று யாருக்குதெரியாது, அல்லது யார் தெரிந்து கொள்ள முடியாது? ஆகையினால் மனிதனானவன் தீமையை எவ்வளவு தள்ளி அதை வெருப்பில் வைக்கிறானோ, அவ்வளவு அவன் நரகத்தை தள்ளி, அதன் பேரில் பிரீதியற்றவனாயிருக்கிறானென்று யாருக்குத் தெரியாது? எவனாவது ஒருவன் எவ்வளவு தீமைகளைத் தள்ளி அதை வெறுப்பில் வைக்கிறானோ, அவ்வளவு நன்மைகளை இச்சித்து நேசிக்கிறானென்றும், அதனால் அவ்வளவு அவன் நரகத்திலிருந்து ஆண்டவரால் எடுக்கப்பட்டு சுவர்க்கத்துக்கு வழி காட்டப்படுகிறானென்றும், யாருக்கு தெரியாது? ஒவ்வொரு பகுத்தறிவுள்ள மனிதனுக்கும், ஒரு சுவர்க்கமும் நரகமுமிருக்கின்றன வென்றும், தீமையானது தன் சொந்த உற்பத்தியிலிருந்தும், நன்மை தனது சொந்த உற்பத்திஸ்தானத்திலிருந்தும், வருகிறதென்றும் தெரிந்திருக்கும்பட்சத்தில், அவன் இவைகளை அறிந்துகொள்ள சக்தியுடையவனாயிருக்கிறான். ஒருமனிதன் தன்னைத்தானே பரிசோதித்தலாகவே யிருக்கிற, தன்னிடமேயிருக்கும் தீமைகளை யோசித்து, அவைகளை நீக்கினால், அவன் அப்பொழுது நரகத்திலிருந்து விடுவித்துக் கொண்டு, தன்பின்னால் அதை போட்டுவிட்டு, சுவர்க்கத்தில் பிரவேசித்து, அங்கேஆண்டவரை நேருக்குநேராய் பார்க்கிறான். மனிதன் இதைச்செய்வதாக சொல்லப்படுகிறது, ஆனால் அவன் அதை தன்னிடமேயிருந்து போல செய்கிறான், அப்படியிருந்தாலும் ஆண்டவரிடமிருந்து

அப்படி செய்கிறான். ஒரு மனிதனானவன் நல்ல இருதயத்துடனும் தெய்வபக்தியுள்ள விசுவாசத்துடனும், இந்த உண்மையை ஒத்துக்கொண்டால், அப்பொழுது புதிய விதை உண்டாகிறவரையில், அதன் வளர்ச்சியுடன் உள்ளுக்குள்ளாய் சேர்ந்திருக்கிற ஒரு விதையிலுள்ள விஸ்தாரமாய் பலிக்கிற மூலகாரணத்தைப்போலவும், ஒரு மனிதன் தனக்கு ஆரோக்கியமானதாய் ஒரு தடவை ஒத்துக்கொண்ட சாப்பாட்டின் பேரில் உண்டாகும் பசியினிடத்தில் இருக்கும் சந்தோஷத்தைப் போலவும், அவன் பின்னிட்டு நினைக்கிறதும், தன்னிடமே யிருந்துபோல் செய்கிறதுமான ஒவ்வொன்றிலும் உள்ளுக்குள்ளாய் அது மறைந்து கிடக்கிறது; சுருங்கச்சொல்லில், அவன் நினைத்து செய்கிற ஒவ்வொன்றிலும், அது இருதயத்தையும் ஆன்மாவையும் போல இருக்கிறது.

(8) ஐந்தாவது: இவ்விதமாக தெய்வபரிபாலனமானது எவனுக்கும் நன்மையையாவது தீமையையாவது தனதாக செய்கிறதில்லை, ஆனால் மனிதனுடைய சொந்த விவேகமே இரண்டையும் தனதாக்குகிறது. இப்பொழுது சொல்லப்பட்டதிலிருந்து எல்லாம் இது ஏற்படுகிறது. தெய்வபரிபாலனத்தின் நோக்கம் நன்மையாயிருக்கிறது; ஆகையினால் அதன் தொழிற்பாடுகளிலெல்லாம் இதை அது யோசிக்கிறது. ஆகையினால், எவனுக்கும் நன்மையை அது உரித்தாக்குகிறதில்லை. ஏனென்றால், நன்மையானது இவ்விதமாய் புகழ்ச்சிக்கு இடமானதாகும்; அதுவுமன்றி, அது எவனுக்கும் தீமையை உரித்தாக்குகிறதில்லை; ஏனென்றால், இவ்விதமாக அந்த குற்றம் செய்ததாக அவன்பேரில் ஏற்படுத்தும். அப்படியிருந்தாலும் மனிதனானவன் இரண்டையும் தன்னுடைய சொந்ததன்மையிலிருந்து செய்கிறான்; ஏனென்றால், இது நன்மையைத்தவிர வேறு ஒன்றுமில்லை; அவனுடைய சித்தத்தின் சொந்ததன்மை தன்னையே நேசித்தலாயிருக்கிறது, அவனுடைய புத்தியின் சொந்த தன்மை, அவனுடைய சொந்த விவேகத்தின் கர்வமாயிருக்கிறது; மேலும் இதிலிருந்து தான் அவனுடைய சொந்த விவேகமும் வருகிறது.

---

## ஒவ்வொருவனும் சீர்படுத்தப் படக்கூடியவனு யிருக்கிறுன், தலைவிதி என்பது கிடையாது.

322. சரியான விவேகம், எவனும் நரகத்துக்கு அல்லாமல் சுவர்க்கத்துக்கு பூர்வமே நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறுனென்று அதிகாரத்துடன் சொல்லுகிறது; ஏனென்றுல் எல்லாரும் மனிதர்களாக பிறந்திருக்கிறுர்கள், அதனுல் கடவுளுடைய பிரதிமை அவர்களில் இருக்கிறது. உண்மையை அறிந்துகொண்டு, நன்மையை செய்ய அவர்கள் சக்தியுள்ளவர்களா யிருக்கிறுர்களென்பதில் கடவுளுடைய பிரதிமை அவர்களில் இருக்கிறது. உண்மையை அறிந்துகொள்ள சக்தி யுடைத்தாயிருத்தல், பரமஞான சக்தியிலிருந்து வருகிறது, நன்மையை செய்ய சக்தியுடைத்தா யிருத்தல் பரம இச்சாசக்தியிலிருந்து வருகிறது; பைத்தியமில்லாத மனிதனில் இருக்கிற கடவுளின் பிரதிமை இந்த சக்திதான்; அது நிர்மூலமாக்கப்படுகிறதில்லை. அதனுல் தான் அவன் தேசாசாரமானவனுகவும் சன்மார்க்கனுகவும் செய்யப்படக்கூடும், தேசாசாரமானவனுகவும் சன்மார்க்கனுகவு மிருக்கப்பட்டவன் பரமார்த்தமானவனுகவும் செய்யப்படலாம்; ஏனென்றுல் தேசாசாரமானதும் சன்மார்க்கமானதும் பரமார்த்தமானதின் கொள்கலமாயிருக்கிறது. தான் நகரவாசியாயிருக்கும் இராச்சியத்தின் சட்டங்களை தெரிந்துகொண்டு, அதன்படி வாழ்கிறவன் தேசாசாரமானவன் என்று சொல்லப்படுகிறுன்; இந்த சட்டங்களை தன்னுடைய சன்மார்க்க போதனைகளாகவும் நீதிகளாகவும் செய்துகொண்டு, விவேகத்தைக்கொண்டு அதன்படி வாழ்கிறவன் சன்மார்க்கன் (2) என்று சொல்லப்படுகிறுன். ஒரு தேசாசாரமான வாழ்வும், சன்மார்க்கமான வாழ்வும், பரமார்த்த வாழ்வின் கொள்கலமாய் எப்படி யிருக்கின்றனவென்று நான் இப்பொழுது சொல்லுகிறேன்:—அந்த சட்டங்களின்படி, தேசாசார சட்டங்களாகவும் சன்மார்க்க சட்டங்களாகவும் மாத்திரமல்லாமல், தெய்வீக சட்டங்களாக கூட நீர் வாழ்ந்தால், நீர் பரமார்த்தமானவனுகிறீர். கொலை செய்யப்படாதென்றும், மற்றவன் பெஞ்சாதியுடன் விபசாரம் செய்யப்படாதென்றும், திருடு கூடாதென்றும், பொய்

சாட்சியம் சொல்லக்கூடாதென்றும், மற்றவனுடையதை பங்கப் படுத்தக் கூடாதென்றும், சட்டங்களால் நிர்ணயிக்காத அவ்வளவு அநாகரீகமான ஒரு தேசத்தார் இல்லை. தேசாசாரமானவனும் சன்மார்க்கமானவனும் ஒரு நல்ல நகரவாசியாக இருக்க அல்லது இருக்கிறதாக தோன்றும்பொருட்டு இந்த சட்டங்களின்படி நடக்கிறான்; ஆனால், அவன் அதே காலத்தில் இந்த சட்டங்களை தெய்வீகமாக நினைக்காவிட்டால், அவன் தேசாசாரமானவனாக வும், சன்மார்க்கமான ஸ்தூல மனிதனாகவு மாத்திரம் இருக்கிறான்; அவன் அவைகளை தெய்வீகமாகக்கூட நினைத்தால், அவன் தேசா சாரமானவனும், சன்மார்க்கமானவனுமாகிய பரமார்த்த மனிதனாகி றான். வித்தியாசம் என்னவென்றால், பின்கூறியவன் பூலோகராஜ் யத்தின் நல்ல நகரவாசியாக மாத்திரம் இருப்பதல்லாமல், சுவர்க்க இராஜ்ஜியத்தின் நல்ல நகரவாசியாகக்கூட இருக்கிறான்; முன்கூறிய வன், சுவர்க்க இராஜ்ஜியத்தின் நகரவாசியா யல்லாமல், பூலோக இராஜ்ஜியத்தின் நகரவாசியாக மாத்திரம் இருக்கிறான். அவர்கள் செய்யும் நன்மைகள் பேதம் காட்டுகின்றன; தேசாசாரமானவ னும் சன்மார்க்கமானவனுமாகிய ஸ்தூல மனிதர்கள் செய்யும் நன்மைகள், தங்களுக்குள்ளேயே நன்மையல்ல; ஏனென்றால், உலகமும் மனிதனும் அவைகளிலிருக்கிறார்கள்; தேசாசாரமானவ னும் சன்மார்க்கமானவனுமாகிய பரமார்த்த மனிதர்கள் செய்யும் நன்மைகள் தாமே நன்மையாயிருக்கின்றன; ஏனென்றால், ஆண்ட (3) வரும் சுவர்க்கமும் அவைகளிலிருக்கின்றன. ஒவ்வொரு மனி தனும், தான் தேசாசாரமானவனும் சன்மார்க்கமானவனுமாகிய ஸ்தூல மனிதனாக செய்யப்பட பிறந்திருப்பதினால், தான் தேசா சாரமானவனும் சன்மார்க்கமானவனுமாகிய பரமார்த்த மனிதனாக செய்யப்படக்கூட பிறந்திருக்கிறான் என்று இந்த ஆலோசனை களிலெல்லாமிருந்து விசதமாகும். அது கடவுளுக்கு விரோதமா யிருப்பதினால், அவன் கடவுளை ஒத்துக்கொண்டு தீமை செய்யக் கூடாதென்பதும், ஆனால் கடவுளுக்கு ஒத்து இருப்பதால், நன்மை செய்யவேண்டுமென்பதும் மாத்திரம் அவசியமா யிருக்கிறது. அவனுடைய தேசாசாரமானதும் சன்மார்க்க மானதுமாகிய செயல்கள் அதனால் ஆவியையும் உயிரையும் அடைகின்றன; அப்

படியில்லாவிட்டால் ஆவியும் இல்லை, ஆகையினால் அவைகளில் உயிருமில்லை. ஆகையினால், ஸ்தூலமனிதன் எவ்வளவு தேசாசார மாயும் சன்மார்க்கமாயும் நடந்தாலும் இறந்தவனென்று சொல் லப்படுகிறான்; ஆனால், பரமார்த்தமான மனிதன் உயிருள்ளவ
(4) னென்று சொல்லப்படுகிறான். ஆண்டவருடைய தெய்வபரி பாலனத்தினால் தான், ஒவ்வொரு தேசத்தாருக்கும் ஏதோ ஒரு சமயமிருக்கிறது; ஒவ்வொரு மதத்தினுடைய முதன்மையான காரியம் ஒரு கடவுளிருப்பதாக ஒத்துக்கொள்ளுதலா யிருக்கிறது; ஏனென்றால், அப்படியில்லாவிட்டால் அது ஒரு மதம் என்று சொல்லப்படாது; தங்களுடைய மதத்தின்படி வாழ்கிற அதாவது தீமையானது கடவுளுக்கு விரோதமாயிருப்பதினால் அதைசெய்யா திருக்கிற ஒவ்வொரு தேசத்தாரும், தங்களுடைய ஸ்தூலமானதில் பரமார்த்தமானது ஏதோ ஒன்றை அடைகிறார்கள். கடவுளுக்கு விரோதமா யிருப்பதினால், இந்த அல்லது அந்த தீமையை தான் செய்யமாட்டேனென்று சில புறமதஸ்தர்கள் சொல்லுவதைக் கேட்கும் போது, "இந்தமனிதன் இரக்ஷிக்கப்பட வில்லையா?" என்றுதானே நினைத்துக்கொள்ளாதவன் யார்? வேறுவிதமாய் அது இருக்கமுடியாதென்று தோன்றுகிறது. சரியானவிவேகம் இதை அவனுக்குச் சொல்லுகிறது. மற்றபடி ஒரு கிருஸ்துவனானவன், "நான் இந்த தீமை அந்த தீமை என்று கவனிக்கிறதில்லை, அது கடவுளுக்கு விரோதமாய் இருக்கிறது என்று செல்லுவதினால் என்ன அருத்தம் என்றும்" சொல்லுவதை கேட்கும்போது, "இந்த மனிதன் இரக்ஷிக்கப்படுகிறானா", அது முடியாதகாரியம் என்றும் யார் சொல்லாதவன்? சரியான விவேகம் இதையும் கூட
(5) சொல்லுகிறது. "நான் கிருஸ்துவனாக பிறந்தேன், நான் ஞான ஸ்நானம் பெற்றிருக்கிறேன், எனக்கு ஆண்டவர் தெரியும், நான் வேதத்தை வாசித்திருக்கிறேன். நற்கருணையில் சேர்ந்திருக்கி றேன்" என்று அவன் சொல்லி கொலைகளையும் அதை ஏவும் பழி வாங்குதலையும், விபசாரங்களையும், ஒளிப்பான திருடுகளையும், பொய் சாட்சியத்தையும், அல்லது பொய்யையும், பலவித கொடு மைகளையும் பாவங்களாக மதிக்காவிட்டால், அவைகள் எல்லாம் என்னத்திற்கு உதவும்? அப்பேர்ப்பட்ட மனிதன் கடவுளையும் அல்

லது எந்த சதாகால வாழ்வைக் குறித்து நினைக்கிறான்? இவைகள் இருக்கிறதாக அவன் நினைக்கிறான்? அவ்விதமான மனிதன் இரக்ஷிக்கப்பட மாட்டானென்று சரியான விவேகம் சொல்லுகிறதில்லையா? இவைகள் எல்லாம் கிருஸ்துவனைப் பற்றிசொல்லப்பட்டது; ஏனென்றால், கிருஸ்துவனைவிட புறசமயத்தான் தன் வாழ்விலிருக்கும் சமயத்திலிருந்து கடவுளைப்பற்றி நினைக்கிறான். ஆனால் இந்த விஷயங்களைப்பற்றி, பின்வரும் ஒழுங்கில் பின்வருவதில் அதிகம் சொல்லப்படும். I. சிருட்டியின் நோக்கம், மானிடஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்கவேண்டுமென்பது. II. அதனால்தான், தெய்வபரிபாலனத்திலிருந்து, ஒவ்வொருமனிதனும் இரக்ஷிக்கப்பட சக்தியுள்ளவனா யிருக்கிறான்; கடவுளை ஒத்துக்கொண்டு நன்றாய் வாழ்கிறவர்கள் இரக்ஷிக்கப்படுகிறார்கள். III. மனிதன் இரக்ஷிக்கப்படாவிட்டால், மனிதன் தானே தப்பிதத்திலிருக்கிறான். IV. இவ்விதமாக எல்லாரும் சுவர்க்கத்துக்கு முன் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள், எவனும் நரகத்துக்கு நியமிக்கப்பட்டிருக்கவில்லை.

323. **சிருட்டியின் நோக்கம் மானிடஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்கவேண்டு மேன்பதா யிருக்கிறது.** சுவர்க்கமானது, மனிதர்களாய் பிறந்தவர்களைத்தவிர வேறு யாராலும் அமைக்கப்படவில்லை என்பது (1758வருஷத்தில் லண்டன் நகரத்தில் பிரசுரம்செய்யப்பட்ட) சுவர்க்கமும் நரகமும் எனும் நூலினும் மேலேயும்கூட காண்பிக்கப் பட்டிருக்கிறது; சுவர்க்கம் மற்றவர்களால் அமைக்கப்படாதபடியினால், சிருட்டியின் நோக்கம் மானிட ஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க வேண்டுமென்பதாயிருக்கிறதென்று ஏற்படுகிறது. சிருட்டியின் நோக்கம் இதுதான் என்று நிஜமாகவே மேலே மெய்பிக்கப்பட்டது (பி. 27-45); ஆனால் இந்த விஷயங்களை விவரிப்பதினால் இன்னும் அதிகத் தெளிவாய் பார்க்கலாம்: I. ஒவ்வொரு மனிதனும் தான் எக்காலமும் இருக்க சிருட்டிக்கப்பட்டிருக்கிறான். II. ஒவ்வொரு மனிதனும் எக்காலமும் பரமானந்தத்தை அனுபவிக்கும் நிலைமையிலிருக்க சிருட்டிக்கப்பட்டிருக்கிறான். III. இவ்விதமாக ஒவ்வொரு மனிதனும் தான்

சுவர்க்கத்துக்கு வர சிருட்டிக்கப் பட்டிருக்கிறுன். IV. பரம இச்சாசத்தியானது இதை இச்சிப்பதைவிட வேறு விதமாய் ஒன்றும் செய்யமுடியாது; பரம ஞானசத்தியானது, அதை முன்னறிந்து ஏற்பாடு செய்வதைவிட வேறு ஒன்றும் செய்யமுடியாது.

324. தெய்வபரிபாலனமானது, சுவர்க்கத்தில் சேர்ப்பதைவிட வேறு எந்த தெய்வசங்கற்பமும் அல்லவென்றும், வேறு ஒன்ருக அது மாற்றப்படாதென்றும், இந்த ஆலோசனைகளிலிருந்து அறிந்துகொள்ளக்கூட கூடுமாகையால், சிருட்டியின் நோக்கம் மானிடஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க வேண்டுமென்பதாயிருக்கிறதென்று, இங்கே சொல்லலாம்; அவைகள் பின் வரும் ஒழுங்கில் மெய்ப்பிக்கப்பட வேண்டும். முதலாவது: **ஒவ்வொரு மனிதனும் சதாகாலமிருக்க சிருட்டிக்கப்பட்டிருக்கிறுன். பதி பசுபாசவிளக்கம்** எனும் நூலில் மூன்ருவது ஐந்தாவது பாகங்களில், ஒவ்வொரு மனிதனிலும், ஸ்தூலமானதென்றும், சூக்குமமானதென்றும், அதிசூக்குமமானதென்றும், மூன்றுவித உயிரின் அந்தஸ்துகள் இருக்கின்றனவென்றும், இந்த அந்தஸ்துகள் ஒவ்வொரு மனிதனிலும், மெய்யாய் இருக்கின்றனவென்றும், ஆனல், மிருகங்களில் ஸ்தூலமென்று சொல்லப்பட்ட மனிதனில், இறுதியான அந்தஸ்துக்கு ஒத்த உயிரின் ஒரு அந்தஸ்துமாத்திரம் இருக்கிறதென்றும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. மனிதனுனவன் தன்னுடைய உயிரை ஆண்டவரிடத்து உயர்த்துவதினல், பரமஞான சத்திக்கு சேர்ந்த விஷயங்களை அறிந்துகொள்ளவும், பரம இச்சா சக்திக்கு சேர்ந்த விஷயங்களை இச்சிக்கவும், இந்தவிதமாக தெய்வத்தை ஏற்றுக்கொள்ளவும், சக்தியுள்ளவனுக மிருகங்களுக்கு மேலே அவ்வித நிலைமையிலிருக்கிறுன் என்று அதிலிருந்து ஏற்படுகிறது; தன்னிலேயே தெய்வத்தைப்பார்த்து அறிந்துகொள்ளும்படியாக அதை பெற்றுக்கொள்ள சக்தியுள்ளவன் ஆண்டவருடன் சேர்ந்திருப்பதும், இந்த ஐக்கியத்தால் சதாகாலம் வாழ்வ(2)தும் தவிர வேறு விதமாய் இருக்கமாட்டான். ஆண்டவர் தன்னுடைய தெய்வீக தன்மையை கொடுக்கக்கூடிய, தன்னையே போன்ற பிரதிமைகளையும் சாயல்களையும் கூட சிருட்டித்திருந்தா

லொழிய, பிரபஞ்ச எல்லா சிருட்டி விஷயத்திலும் அவருக்கு என்ன சம்பந்தமிருக்கும்? அப்படியல்லாவிட்டால், சிருட்டி என்பது, எதோ சிலதை இருக்கச் செய்கிறதும், இல்லாதிருக்கச் செய்கிறதும், ஜீவிக்கவும், ஜீவிக்காதிருக்கவும் செய்கிறதும், இதுவும் கூட தான் தூரத்திலிருந்துகொண்டு, ஒரு நாடகசாலையின் பேரில் போல கேவல மாறுதல்களையும், இடைவிடாத வேறுபாடுகளையும், செய்ய நினைக்கவும் சக்தியுள்ளவரா யிருக்கவேண்டு மென்கிற நோக்கமும் தவிர, வேறு என்னமாகும்? இந்த சிருட்டிக்கப்பட்ட பொருள்கள் தெய்வத்தை இன்னும் அதிக சமீபமாய் பெற்றுக் கொள்ளவும், அதைப்பார்த்து உணரவும் வேண்டிய பொருள்களுக்கு உபயோகப்பட, அவைகள் இருந்தா லொழிய, இவைகளில் தெய்வீகமானது என்ன இருக்கும்? தெய்வமானது குறையாத மகிமையுடையவருனபடியினுல், அவர் தனக்கே மாத்திரம் அவைகளை வைத்துக்கொள்ளுவாரா? அப்படி செய்யவும் கூடுமா? ஏனென்றுல், அன்பானது தனக்கு சொந்தமானதை மற்ற ஒன்றுக்கு பகிர்ந்து கொடுக்கவும், நிஜமாகவே, தன் சொந்தமானதில் எவ்வளவு கொடுக்கக்கூடுமோ அவ்வளவை கொடுக்கவும் விரும்புகிறது. அப்படியானுல் முடிவற்றதா யிருக்கிற பரம இச்சாசத்தி என்ன செய்யமுடியாது? அது கொடுத்து மறுபடியும் பிடுங்கிக் கொள்ளுமா? இப்படிச்செய்தல், உள்ளுக்குள்ளாய் சூனியமாயிருக்கிற, அழிந்து போகும்படியா யிருக்கிறதை கொடுத்தலாக இல்லையா? ஏனென்றுல், அது அழிந்துபோகும்போது, ஒன்றுமில்லாமல் போகிறது; இருக்கப்பட்டது அதில் இல்லாமலிருக்கிறது. ஆனுல், அது இருக்கிறதையும் அல்லது இல்லாமல் போகாததை (3) யும் கொடுக்கிறது; இதுதான் நித்தியமானது. ஒவ்வொரு மனிதனும் எப்பொழுதும் உயிரோடிருக்க, அவனில் இறந்து போகக்கூடியது நீக்கப்படுகிறது. அவனுடைய சாவுக்குரியபாகம், அது இறப்பதினுல் நீக்கப்படுகிற அவனுடைய ஸ்தூல சரீரமாயிருக்கிறது. இவ்விதமாக, அவனுடைய மனதாயிருக்கிற மரணமடையாத பாகம், மூடப்படாமலிருக்கிறது, அவன் அப்பொழுது மானிடஉருவமுள்ள ஆவியாகிறுன்; அவனுடைய மனதுதான் அந்த ஆவி. மனிதனுடைய மனது இறந்துபோக முடியாதென்

பது, பூர்வகாலத்து இருஷிகள் அல்லது ஞானிகளால் அறிந்து கொள்ளப்பட்டது; ஏனென்றால், ஆன்மா அல்லது மனது ஞானமுள்ளதா யிருக்க சக்தி யிருக்கும்போது, எந்த வழியில் இறக்குமென்று அவர்கள் சொன்னார்கள். இந்த விஷயத்தைப்பற்றி அவர்களுடைய உட்கருத்து சிலருக்குத்தான் இக்காலத்தில் தெரியும். ஆனால், அவர்களுடைய பொதுவான உணர்ச்சியில் சுவர்க்கத்திலிருந்து இறங்கியது அதுதான்; அதாவது கடவுள் ஞானமேயென்பதும், அதில் மனிதன் பங்காளியென்பதும், கட
(4) வுள் இறக்காதவர் அல்லது நித்தியமானவ ரென்பதும் தான். தேவர்களோடு பேச எனக்கு அருள் செய்யப்பட்ட படியினால், நான் அநுபவத்திலிருந்து கூட சிலதை சொல்லுகிறேன். அநேக நூற்றாண்டுகளுக்கு முன் இருந்தவர்களுடனும், ஜலப்பிரளயத்துக்கு முன்னிருந்தவர்களுடனும், அதற்கு பின் இருந்த சிலருடனும், ஆண்டவர் வந்திருந்த காலத்தில் இருந்தவர்களுடனும், அவருடைய சிஷர்கள் ஒருவனுடனும், பின்வந்த நூற்றாண்டுகளிலிருந்த அநேகருடனும் நான் பேசியிருக்கிறேன்: அவர்கள் எல்லாம் மத்திய வயசுள்ளவர்களாகத்தோன்றி யிருக்கிறார்கள்; மரணமென்பது நரக தண்டனையைத்தவிர வேறு அது என்னவென்று தெரியாதென்று சொல்லியுமிருக்கிறார்கள். மேலும், குற்றமற்று வாழ்ந்தவர்கள், சுவர்க்கத்துக்கு வரும்போது, உலகத்தில் தங்கள் வாலிப வயசாயிருக்கிற வயசுக்கு வந்து, அதில் சதாகாலமிருக்கிறார்கள்; உலகத்தில் கிழவர்களாயும் தள்ளாட்டமானவர்களாயு மிருந்தவர்கள் கூட அப்படி ஆய்விடுகிறார்கள்; ஸ்திரீகள், கிழவிகளாகவும் மடிப்பு விழுந்தவர்களாகவு மிருந்த போதிலும், யௌவனஸ்திதிக்கும் அழகுக்கும் திரும்புகிறார்கள். மனிதன்
(5) இறந்தபிறகு சதாகாலம் உயிரோடிருக்கிறானென்பது, சுவர்க்கத்து வாழ்வு என்பது நித்தியவாழ்வு என்று சொல்லப்படுகிற வேதத்திலிருந்து வெளிப்படையாகிறது; அப்படி சொல்லும் இடங்கள்: மத்தே. XIX. 29; XXV. 46; மார்க், X. 17; லூக். X. 25; XVIII, 30; யோவா. III. 15, 16, 36; V. 24, 25, 39; VI. 27, 40, 68; XII. 50: உயிராக மாத்திரம் சொல்லுமிடங்கள்: மத்தே. XVIII: 8, 9; யோவா. V. 40; XX. 31. ஆண்டவர்கூட

சீடர்களுக்கு சொன்னதாவது: "நான் பிழைக்கிறபடியினால் நீங்களும் பிழைப்பீர்கள்" (யோவா. XIV, 19). உயிர்த்தெழுகையைக் குறித்து சொன்னதாவது: "தேவன் மரித்தோரின் தேவனாயிராமல், ஜீவனுள்ளோரின் தேவனாயிருக்கிறார், அவர்கள் இனி மரிக்
(6) கவுமாட்டார்கள்" (லூக். XX 36, 38). இரண்டாவது: ஒவ்வொரு மனிதனும் பரமானந்தத்தை அனுபவிக்கும் நிலைமையில் எப்பொழுதும் இருக்க சிருட்டிக்கப்பட்டிருக்கிறான். அது அதன் பயனாக ஏற்படுகிறது; ஏனென்றால், மனிதன் சதாகாலம் வாழவேண்டுமென்று இச்சிக்கிறவன், பரமானந்தத்தை அநுபவிக்கும் நிலைமையில் கூட இருக்கவேண்டுமென்று விரும்புகிறான். இது இல்லாமல் நித்தியகால வாழ்வு என்னமாயிருக்கும்? எல்லா அன்பும் மற்றவனுடைய நன்மையைக் கோருகிறது; பெற்றோர்களின் அன்பு தங்களுடைய குழந்தைகளின் நன்மையை விரும்புகிறது; மணமகளுடைய அன்பும் கணவனுடைய அன்பும், தன்னுடைய மணமகளுடைய நன்மையையும் மனைவியினுடைய நன்மையையும் கோருகிறது; சிநேகிதத்தின் அன்பு சிநேகிதர்களுடைய நன்மையைக்கோருகிறது; அப்படியானால் தெய்வத்தின் இச்சாசத்தி விரும்பாதது எது? நன்மை என்பது சந்தோஷமல்லாமல் வேறு என்ன? தெய்வ நன்மை என்பது சதாகால பரமானந்தம் தவிர வேறு என்ன? ஒவ்வொரு நன்மையும், அதன் சந்தோஷத்திலிருந்து அல்லது ஆனந்தத்திலிருந்து நன்மை என்று சொல்லப்படுகிறது; கொடுக்கப்பட்டு அநுபவிக்கப்பட்டது நிஜமாகவே நன்மை என்று சொல்லப்படுகிறது, ஆனால், அது சந்தோஷத்தை கொடுப்பதாக இருந்தாலொழிய, தானே நன்மையாயிராது, கனியற்ற நன்மையாயிருக்கிறது. இதினால், நித்திய வாழ்வு நித்திய பரமானந்தமாய்க்கூட யிருக்கிறது. மனிதனுடைய இந்த நிலைமை சிருட்டியின் நோக்கமாயிருக்கிறது; சுவர்க்கத்துக்கு வருகிறவர்கள் மாத்திரம் அந்த நிலைமையிலிருக்கிறார்களென்பது ஆண்டவருடைய குற்றமாயில்லாமல், மனிதனுடைய குற்றமாயிருக்கிறது. மனிதன் குற்றமுள்ளவனாயிருக்கிறானென்பது, பின்வருவதில்
(7) அறிந்துகொள்ளலாம். மூன்றாவது: இவ்விதமாக, ஒவ்வொரு மனிதனும் சுவர்க்கத்துக்கு வரும்பொருட்டு சிருட்டிக்கப்பட்டிருக்கி

ருன். சிருட்டியின் நோக்கம் இதுதான்; ஆனால், எல்லாரும் சுவர்க்கத்துக்கு வருகிறதில்லை என்பது, சுவர்க்கானந்தத்துக்கு எதிரிடையாயிருக்கிற நரக சந்தோஷங்களில் அவர்கள் மனது படிந்திருக்கிறது என்பதினால் ஏற்படுகிறது; சுவர்க்க ஆனந்தத்தில் இல்லாதவர்கள் சுவர்க்கத்தில் பிரவேசிக்கமுடியாது; ஏனென்றால், அதை அவர்கள் பொருக்கமாட்டார்கள். சூக்கும உலகத்துக்கு போகிற எவனும் சுவர்க்கத்துக்கு ஏறுவதை தடுக்கப்படுகிறதில்லை; ஆனால், நரக சந்தோஷத்திலிருக்கிறவன், அங்கே வரும்போது, அவனுடைய இருதயம், துடிக்கிறது, மூச்சுவிட பிரயாசைப்படுகிறான், அவன் உயிர் கைவிட ஆரம்பிக்கிறது, அவன் வியாகூலத்திலிருக்கிறான், அவன் வேதனையிலிருக்கிறான், நெருப்பு சமீபத்தில் போடப்பட்ட சர்ப்பம்போல் அவன் புரளுகிறான்; எதிரி(8)டையானது எதிரிடையானதற்கு விரோதமாய் செயல்படுகிறது என்பதினால் இது இப்படி சம்பவிக்கிறது. ஆனால், அப்படியிருந்தாலும், அவர்கள் பிறந்த மனிதர்களாயிருந்தபடியினால், அதனால் நினைக்கும் சக்தியையும் இச்சிக்கும் சக்தியையும் உடைத்தாயிருப்பதினாலும், அதிலிருந்து பேசும் சக்தியையும் செய்யும் சக்தியையும் உடைத்தாயிருப்பதினாலும், அவர்கள் இறந்துபோகமாட்டார்கள். தங்களைப்போலவே உயிரின் சந்தோஷத்தில் இருக்கப்பட்டவர்கள் தவிர மற்றவர்களோடு அவர்கள் வாழமாட்டார்களானபடியினால், அப்பேர்ப்பட்டவர்களிடத்தில் அவர்கள் அனுப்பப்படுகிறார்கள். ஆகையினால், தீமையின் சந்தோஷங்களிலிருக்கப்பட்டவர்கள் தங்கள் சொந்தமானவர்களிடத்தில் அனுப்பப்படுகிறார்கள்; நன்மையின் சந்தோஷத்திலிருக்கிறவர்கள், தங்களுக்கு சேர்ந்தவர்களிடம் அனுப்பப்படுகிறார்கள். இன்னும் அதிகமாய், நன்மையின் சந்தோஷத்திலிருப்பவர்களை தொந்தரை செய்யாதபட்சத்தில், ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்த தீமையிலிருக்கக்கூட விடப்படுகிறான்; ஆனால், தீமையினிடத்து நன்மைக்கு விரோதமான ஒரு பகையிருப்பதினால், அந்த தீமையானது நன்மைக்கு உபாதி செய்வதைவிட வேறுவிதமாய் நடக்கமுடியாதபடியினால், நன்மையாயிருப்பதற்கு கெடுதி செய்யாதபடிக்கு, நரகத்தில் தங்களுடைய சொந்த இடங்

களுக்கு நீக்கப்பட்டு போடப்படுகிறார்கள்; அங்கே அவர்கள் (9) சந்தோஷம் சந்தோஷமில்லாததாக திருப்பப்படுகிறது. ஆனால், மனிதனானவன் சுவர்க்கத்துக்குப்போக சிருட்டியினாலேயே அப்படியிருக்கிறானென்பதையும், அதனால் அவ்விதமாய் பிறந்திருக்கிறானென்பதையும் இது மறுத்துரைக்கிறதில்லை; ஏனென்றால், பாலபருவத்தில் இறக்கிற ஒவ்வொரு குழந்தையும் சுவர்க்கத்துக்குப்போய் அங்கே உலகத்தில் ஒரு மனிதன் செய்யப்படுவதுபோல் வளர்க்கப்பட்டு, கற்பிக்கப்பட்டு, நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொள்ளும் ஆசையின் மூலமாய், ஞானத்தில் பதியப்பெற்று, ஒரு தேவனாகிறான். அம்மாதிரியேகூட உலகத்தில் வளர்க்கப்பட்டு, கற்பிக்கப்பட்ட மனிதன் விஷயத்தில் இருக்கலாம். ஏனென்றால், குழந்தையிலிருப்பது போலவே அதே அவனிடத்திலிருக்கிறது. சூக்கும உலகத்தில் குழந்தைகளைப்பற்றி, லண்டன் நகரத்தில் 1758ஆம் வருஷத்தில் பிரசுரம் (10) செய்த **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலை (பி. 329-345) பார்க்கவும்: ஆனால் உலகத்தில் அநேகர் விஷயத்தில் அம்மாதிரி ஏன் நடக்கிறதில்லை என்பதற்கு காரணம் ஸ்தூல அந்தஸ்து என்று சொல்லப்படுகிற தங்கள் உயிரின் முதல் அந்தஸ்தை நேசித்து, அதிலிருந்து நீங்கி பரமார்த்தமாக விரும்புகிறதில்லை என்பதாயிருக்கிறது. உயிரின் ஸ்தூலபடியையே யோசித்தால், அது தன்னையும் உலகத்தையுமே நேசிக்கிறது; ஏனென்றால், உலகத்தில் வழங்குகிறதா யிருக்கிற பஞ்சேந்திரியங்களோடு அது ஒட்டிக்கொண்டிருக்கிறது; உயிரின் சூக்குமபடியையே யோசித்தால், அது ஆண்டவரையும் சுவர்க்கத்தையும் அதனுடன் தன்னையும் உலகத்தையும் நேசிக்கிறது; ஆனால் ஆண்டவரையும் சுவர்க்கத்தையும் அதிக உயர்ந்ததாகவும், பிரதானமானதாகவும், பிரபலமானதாகவும், தன்னையும் உலகத்தையும் மிக தாழ்ந்ததாகவும், காரணமானதாகவும், உபயோகமானதாகவும் நேசிக்கிறது. (11) நான்காவது: **பரம இச்சாசக்தி இதை விரும்பவேண்டியிருக்கிறது, பரமஞானசக்தி அது விஷயம் முன்னறிந்து ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறது.** தெய்வத்தின் சத்து **பரம இச்சாசத்தி** என்றும், **பரம ஞானசத்தி** என்றும், **பதிபசுபாச விளக்கம்** எனும் நூலில் முழுமை

யும் காண்பிக்கப்பட்டிருக்கிறது; அங்கே (பி. 358-370) ஒவ்வொரு மானிட கருவிலும் ஆண்டவர் இச்சாசத்திக்கு ஒன்றையும், ஞானசக்திக்கு மற்றதையும், ஆக இரண்டு கொள்கலங்களையும், இச்சாசத்தியின் கொள்கலம் மனிதனுடைய இனிவரும் சித்தத்துக்கும், ஞானசத்தியின் கொள்கலம் அவனுடைய இனிவரும் புத்திக்குமாக செய்கிறுரென்றும், அவ்விதமாக ஒவ்வொரு மனிதனுக்கும் நன்மையை இச்சிக்கும் சக்தியையும் உண்மையை அறிந்துகொள்ளும் சக்தியையும் கொடுத்திருக்கிறு ரென்றும் (12) மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டவரால் மனிதனுக்கு இந்த இரண்டு மனோசக்திகளும் கொடுக்கப்பட்டிருப்பதினுலும், அதனுல் தனக்கே சொந்தமானதில் இருப்பதுபோல மனிதனுடன் அவைகளில் அவர் இருக்கிறபடியினுலும், அவருடைய இச்சாசக்தியானது மனிதன் சுவர்க்கத்துக்கு வரவேண்டுமென்றும், அங்கே சதாகால சுகத்தை அனுபவிக்க வேண்டுமென்றும், இச்சிக்கவேண்டியதாயிருக்கிறதென்றும்,ஞானசக்தியானது அதை முன்னறிந்து ஏற்பாடுசெய்துவைக்க வேண்டியதா யிருக்கிறதென்றும் வெளிப்படையாயிருக்கிறது. ஆனுல், அவருடைய இச்சாசத்தியிலிருந்து தான், மனிதனுனவன் சுவர்க்கத்து ஆனந்தத்தை தன்னுடைய சொந்தமாக தன்னிலேயே உணரவேண்டி யிருப்பதினுலும், மனிதனுனவன், தன்னிடமே யிருந்துபோல, நினைக்கிறதும் இச்சிக்கிறதும், பேசுகிறதும், செயல்படுகிறதுமாகிய எல்லா தோற்றத்திலும் வைக்கப்பட்டாலொழிய இது சம்பவிக்காமல் போகுமானபடியினுலும், அவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அனுசரித்து தவிர வேறு விதயாய் மனிதனை நடத்தமுடியாது.

325. II. அதனுல் தான் தெய்வபரிபாலனத்திலிருந்து ஒவ்வொரு மனிதனும் இரக்ஷிக்கப்பட சக்தியுள்ளவனு யிருக்கிருன்; கடவுளை ஒத்துக்கொண்டு கிரமமாய் வாழ்கிறவர்கள் இரக்ஷிக்கப்படுகிருர்கள். ஒவ்வொரு மனிதனும் இரக்ஷிக்கப்பட சக்தியுள்ளவனுயிருக்கிருனென்று மேலேமெய்ப்பித்தவைகளிலிருந்து வெளிப்படையாயிருக்கிறது. கிருஸ்துவ உலகத்தில் மாத்திரம் ஆண்டவர் தெரிந்

திருக்கிறபடியினாலும், வேதமானது அங்கே மாத்திரம் இருப்பதினாலும், ஆண்டவருடைய திருச்சபை கிருஸ்துவ உலகத்தில் மாத்திரம் இருப்பதாக தாத்பரியப்படுகிறார்கள். அப்படியிருந்தாலும், கடவுளின் திருச்சபையானது பொதுவானதென்றும், அல்லது முழு உலகத்திலும் விரிந்திருக்கிறதென்றும், பரவப்பட்டிருக்கிறதென்றும், அதனால்கூட, ஆண்டவரை தெரிந்து கொள்ளாதவர்கள் மத்தியிலும் வேதமில்லாதவர்கள் மத்தியிலும் அப்படியிருக்கிறதென்றும் நம்புகிற அநேகரிருக்கிறார்கள்; அது அவர்கள் குற்றமல்லவென்றும், அவர்களுடைய அறியாமையை தாங்களே ஜெயிக்கமுடியாதென்றும், மற்றவர்களைப்போல் சரியாய் அவர்களும் மனிதரா யிருக்கும்போது, சிலர் நரகத்துக்கே பிறந்திருக்க வேண்டுமென்பது கடவுளுடைய அன்புக்கும் இரக்கத்துக்கும் எதிரிடையா யிருக்கிற தென்றும், அவர்கள் சொல்லு(2) கிறார்கள். இப்படியிருக்கையில், கிருஸ்துவர்களில் எல்லாருமில்லாவிட்டாலும் அநேகர் ஓர் இணக்கம் என்றுகூட சொல்லப்பட்ட திருச்சபையானது பொதுவானதென்று நம்புகிறபடியினால், எல்லா சமயங்களிலும் பிரவேசித்து, அந்த ஐக்கியத்தை உண்டாக்குகிற, திருச்சபையின் மிகவும் பொதுவான கொள்கைகள் இருக்கின்றனவென்று ஏற்படுகிறது. இந்த மிகவும் பொதுவான கொள்கைகள் கடவுளையும், வாழ்க்கையின் நன்மையையும் ஒத்துக்கொள்ளுதல் என்பது பின்வரும் ஒழுங்கில் அறிந்துகொள்ளப்படும்: I. கடவுளை ஒத்துக்கொள்ளுதல், கடவுள் மனிதனுடன் ஐக்கியப்படுதலையும், மனிதன் கடவுளுடன் ஐக்கியப்படுதலையும் உண்டாக்குகிறது; கடவுளை இல்லை என்று சொல்லுதல் பிரிவினையை உண்டாக்குகிறது. II. ஒவ்வொருவனும் கடவுளை ஒத்துக்கொண்டு, தன்னுடைய வாழ்வின் நன்மைக்குதக்கபடி அவருடன் சேர்க்கப்படுகிறான் III. வாழ்க்கையின் நன்மை அல்லது சரியாய் வாழ்தல், என்பது, தீமைகள் மதத்திற்கு விரோதமாயும் அதனால் கடவுளுக்கு விரோதமாயும் இருப்பதினால் அவைகளை நீக்குதலாயிருக்கிறது. IV. இவைகள் தான், ஒவ்வொருவனும் இரக்ஷிக்கப்படக்கூடிய எல்லா சமயங்களின் பொதுவான கொள்கைகளாயிருக்கின்றன.

326. ஆனால், இந்த கேள்விகள் ஒன்றன்பின் ஒன்றாய் பரிசோதிக்கப்பட்டு ரூபகாரம் செய்யப்படவேண்டும். முதலாவது: கடவுளை ஒத்துக்கொள்ளுதல், மனிதனுடன் கடவுள் ஐக்கியத்தையும், கடவுளுடன் மனிதன் ஐக்கியத்தையும் உண்டாக்குகிறது; கடவுளை இல்லை எனல் பிரிவினையை உண்டாக்குகிறது. சன்மார்க்க வாழ்க்கையிலிருந்தால், கடவுளை ஒத்துக்கொள்ளாதவர்களும், அவரை ஒத்துக்கொள்ளுகிறவர்களைப் போல் இரக்ஷிக்கப்படக் கூடுமென்று சிலர் நினைக்கலாம். அவர்கள் ஒத்துக்கொள்ளுதல் எதை சித்தியாக்குகிறது? அது சிந்தனையாக மாத்திரம் இல்லையா? ஒரு கடவுள் இருக்கிறாரென்று எனக்கு நிஜமாக தெரிந்த போது, கடவுளை நான் சுலபமாக ஒத்துக்கொள்ளமாட்டேனா? அவரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன், ஆனால் நான் அவரைப்பார்த்ததில்லை. அவரைப்பார்க்கும்படி செய்யுங்கள், பின்னிட்டு நான் நம்புகிறேன் என்று சொல்லுகிறார்கள். கடவுளை நிராகரிக்கிறவர்கள் அநேகர் பேச்சு, கடவுளை ஒத்துக்கொள்ளுகிறவர்களோடு தன்னிஷ்டமாய் தர்க்கிக்கவிட்டால், இவ்விதமாய் இருக்கிறது. ஆனால், கடவுளை ஒத்துக்கொள்ளுதல் சேர்க்கிறதென்பதும், அவரை நிராகரித்தல் பிரிக்கிறதென்பதும், எனக்கு தெரிந்த சூக்கும உலகத்தில் உள்ள சில விஷயங்களால், உதாரணங்களால் தெளிவிக்கப்படும். அங்கே, எவனாவது ஒருவன் மற்றவனை நினைத்துக்கொண்டு அவனோடு பேசவிரும்பினால், மற்றவன் உடனே எதிரில் தோன்றுகிறான்; இது அங்கே சாதாரணம், எப்பொழுதும் நடக்காமல் போகிறதில்லை. ஸ்தூல உலகத்தில் போல், சூக்கும உலகத்தில் தூரம் என்பது இல்லாமல், தூரத்தின் (2) தோற்றம் மாத்திரம் இருக்கிறது என்பது இதற்கு காரணமாயிருக்கிறது. இன்னும் ஒரு சந்தர்ப்பம் என்னவென்றால், மற்றவனைக்குறித்து கொஞ்சம் தெரிந்திருத்தலிலிருந்து, சிந்தனையானது சமுகத்தை ஏற்படுத்துகிறதுபோல், மற்றவனிடத்து கொள்ளும் ஆசையிலிருந்து, அன்பானது ஐக்கியத்தை உண்டாக்குகிறது; அதிலிருந்து அவர்கள் ஒன்றாய் சேருதலும், சினேகிதமாய் பேசுதலும், ஒரு வீட்டில் அல்லது ஒரு கூட்டத்தில் வாழ்தலும், அடிக்கடி சந்தித்தலும், ஒருவருக்கொருவர் உப

யோகமானவைகளை செய்தலும் ஏற்படுகிறது. மற்றவனை நேசிக்காதஒருவன், இன்னும் அதிகமாய், மற்றவனைவெறுக்கிற ஒருவன், அவனைப்பார்க்காதது அல்லது, சந்திக்காதது போலவும், தான் நேசிக்காத அளவு அல்லது, வெறுக்கிற அளவு அவர்கள் தூரமாயிருக்கிறதுபோலவும் நிஜமாகவே, அவன்எதிரிலிருந்து, அப்பொழுது அந்த பகையை நினைத்தால், தோன்றாமல் போகிறது (3) போலவும், எதிரிடையானதும்கூட சம்பவிக்கின்றன. இந்த சில உதாரணங்களால், சூக்கும உலகத்தில் சந்நிதி எங்கேயிருந்து வருகிறதென்றும், ஐக்கியம் எங்கேயிருந்து வருகிறதென்றும் விசதமாகும்; அதாவது சந்நிதியானது மற்றவனைப் பார்க்கும் ஆசையோடு அவனை நினைத்தலிலிருந்தும், ஐக்கியமானது அன்பைச்சேர்ந்த ஆசையிலிருந்தும் வருகிறதென்று விசதமாகும். மானிடமனதிலிருக்கும் எல்லா விஷயங்களிலும் அப்படியேயிருக்கிறது; அதில் கணக்கற்ற விஷயங்களிருக்கின்றன, ஒவ்வொன்றும் மற்றவைகளோடு ஆசைகளுக்குத் தக்கபடியும் அல்லது ஒன்று மற்றொன்றை நேசிக்கிறதுபோலவும் பொருந் (4)தப்பட்டு சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த ஐக்கியமானது, பொதுவானதிலும் சிறப்பானதிலும் தன்னையே போலவேயிருக்கிற சூக்கும ஐக்கியமாயிருக்கிறது. இந்த சூக்கும ஐக்கியமானது பொதுவாகவும், சிறப்பாகவும், சூக்கும உலகத்தோடும் ஸ்தூல உலகத்தோடும், ஆண்டவருடைய ஐக்கியத்திலிருந்து, தன் உற்பத்தியை அடைகிறது. எவனுவது, ஒருவன் ஆண்டவரை எவ்வளவு தெரிந்துகொண்டு, அந்த அறிவிலிருந்து அவரை நினைக்கிறானே, அவ்வளவு ஆண்டவர் சந்நிதி தருகிறார் என்றும், எவனுவது ஒருவன் அன்பின் ஆசையிலிருந்து, எவ்வளவு அவரை ஒத்துக்கொள்ளுகிறானே, அவ்வளவு ஆண்டவர் அவனுடன் சேர்க்கப்படுகிறாரென்றும், மறுமுறையில், ஒருவன் ஆண்டவரை எவ்வளவு தெரிந்துகொள்ளாமலிருக்கிறானே, அவ்வளவு ஆண்டவர் வாராமல்போகிறார் என்றும், ஒருவன் அவரை எவ்வளவு இல்லையென்று சொல்லுகிறானே, அவ்வளவு பிரிக்கப்படுகிறு (5)னென்றும், அதிலிருந்து வெளிப்படையாகிறது. ஆண்டவர் மனிதனுடைய முகத்தை தன்னிடமே திருப்பி, பிறகு அவனை

நடத்துகிறார் என்பது ஐக்கியத்தின் பயனாயிருக்கிறது; நரகமானது மனிதனுடைய முகத்தை தன்னிடமே திருப்பி அவனுக்கு வழிகாட்டுகிறது என்பது பிரிவினையின் விளைவாயிருக்கிறது. ஆகையினால், சுவர்க்கத்து தேவர்கள் எல்லாம் தங்களுடைய முகங்களை, சூரியனாக ஆண்டவர்பக்கம் திருப்புகிறார்கள்; நரகத்து பேய்கள் எல்லாம் அவருக்கு தூரமாக தங்கள் முகங்களை திருப்பிக் கொள்ளுகிறார்கள். இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து கடவுளை ஒத்துக்கொள்ளுவதால் என்ன சித்தியாகிறதென்றும், அவரை மறுத்தலால் என்ன சித்தியாகிறதென்றும் வெளிப்படையாயிருக்கிறது. உலகத்திலிருக்கும்போது கடவுளை நிராகரிக்கிறவர்கள், இறந்த பிறகும் அவரை நிராகரிக்கிறார்கள்; மேலே பிரிவு 319ல் விவரித்தபடி அவர்கள் உருவாக்கப்படுகிறார்கள்; உலகத்(6)தில் செய்விக்கப்பட்ட சரீரக்கட்டு எப்பொழுதும் நிற்கிறது. இரண்டாவது: **ஒவ்வொருவனும், தன்னுடைய வாழ்வின் நன்மைக்குத் தக்கபடி கடவுளை ஒத்துக்கொண்டு அவருடன் சேர்க்கப்படுகிறான்.** சமயத்திலிருந்து ஏதாவது கொஞ்சம் தெரிந்தவர்கள் எல்லாரும் கடவுளை அறிந்துகொள்ளக்கூடும்; அவர்கள் அறிவிலிருந்தும் ஞாபகத்திலிருந்தும் கூட கடவுளைப்பற்றிப் பேசக்கூடும்; சிலர் புத்தியிலிருந்து அவரைப் பற்றி நினைக்கக்கூடும்; ஆனால் இது, மனிதன் நன்றாய் வாழாவிட்டால், சந்நிதியைவிட வேறொன்றையும் விளைவிக்கிறதில்லை; ஏனென்றால், அவன், துன்மார்க்கமாய் வாழ்ந்தால் செய்யப்படுகிறதுபோல, கடவுளிடமிருந்து தூரமாய், நரகம் பக்கமாய் தானே திரும்பிக்கொள்ளக்கூடும். ஆனால், சரியாய் வாழ்கிறவர்கள் தவிர வேறுயாரும் இருதயத்தில் கடவுளை ஒத்துக்கொள்ளமாட்டார்கள்; தங்களுடைய வாழ்க்கைகளின் நன்மைக்கு தக்கபடி, ஆண்டவர் இவர்களை நரகத்திலிருந்து தூரமாய், திருப்பி தன்னிடமே கொண்டுவருகிறார். அவர்கள் மட்டும் கடவுளை நேசிக்கிறார்களென்பது காரணமாயிருக்கிறது; ஏனென்றால், அவைகளை செய்வதில், அவர்கள், அவரிடமிருந்துவருகிற தெய்வீகப்பொருள்களை நேசிக்கிறார்கள்; கடவுளிடமிருந்துவரும் தெய்வீகப்பொருள்கள், அவருடைய சட்டத்தின் தர்ம நியமங்களாயிருக்கின்றன; இவைகள் கடவுளாயிருக்கின்றன; ஏனென்றால்

அவரே தன்னுடைய சொந்த வெளிபடும் தெய்வமாயிருக்கிறார்; இது தான் கடவுளை நேசித்தல் என்பது. ஆகையினால் ஆண்டவர் சொல்லுகிறதாவது: "என்னுடைய கற்பனைகளைப் பெற்றுக் கொண்டு, அவைகளைக் கைக்கொள்ளுகிறவனே என்னிடத்தில் அன்பாயிருக்கிறான், என்னில் அன்பாயிராதவன் என் வசனங்
(7)களைக் கைக்கொள்ளமாட்டான் (யோவான். XIV. 21, 24)". தசாக்ஞையின் மேஜைகள், ஒன்று கடவுளுக்கும், மற்றது மனிதனுக்குமாக இரண்டு இருப்பதற்கு இது தான் காரணம். மனிதன் தன்னுடைய சொந்த மேஜையிலிருப்பதை பெற்றுக்கொள்ளும்படி, கடவுள் இடைவிடாமல் பிரயாசைப்படுகிறார். ஆனால், மனிதன் தன்னுடைய மேஜையிலிருப்பவைகளைச் செய்யாவிட்டால், கடவுளுடைய மேஜையிலிருப்பவைகளை இருதயத்தின் ஒப்புதலுடன் ஏற்றுக்கொள்ளுகிறதில்லை; அவன் ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவன் சேர்க்கப்படுகிறதில்லை. ஆகையினால், இரண்டு மேஜைகளும் ஒன்றாகும்படி சேர்க்கப்பட்டு, உடன்படிக்கை மேஜைகள் என்று சொல்லப்பட்டன; மேலும் உடன்படிக்கை என்பது ஐக்கியத்தைக் கருதுகிறது. ஒவ்வொருவனும் கடவுளை ஒத்துக்கொண்டு, தன்னுடைய வாழ்க்கையின் நன்மைக்கு தக்கபடி அவருடன் சேர்க்கப்படுகிறானென்பதற்கு காரணம், வாழ்க்கையின் நன்மை, ஆண்டவரிலிருப்பதும், அதனால் ஆண்டவரிடமிருந்து வருவதுமான நன்மையுடன் ஒத்திருக்கிறதென்பதாயிருக்கிறது; ஆகையினால், மனிதனானவன் வாழ்க்கையின் நன்மையில் இருக்கும் காலத்தில் ஐக்கியம் சம்பவிக்கிறது. வாழ்க்கை
(8)யின் தீமையுடன் எதிரிடையானது சம்பவிக்கிறது; இது ஆண்டவரைத் தள்ளுகிறது. மூன்றாவது: வாழ்க்கையின் நன்மை அல்லது நன்றாய் வாழ்தல், தீமைகள் மதத்திற்கு விரோதமாயும், ஆகையினால் கடவுளுக்கு விரோதமாயும் இருக்கிறபடியினால், அவைகளை நீக்குதலாயிருக்கிறது. இது வாழ்க்கையின் நன்மை, அல்லது நன்றாய் வாழ்தல் என்பது, புதிய எருசலேம் நகரத்து வாழ்க்கைப் போதத்தில் முதலிலிருந்து கடைசிவரையில் முழுமையும் நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது. கோயில்களைக்கட்டுகிறதும், அவைகளை அலங்கரித்து நைவேத்தியங்களை அதில் நிரப்புவதும், பரதேசிக்கு தருமவைத்

திய சாலையையும் புகலிடங்களையும் கட்டுவதில் பணத்தை சில வழிப்பதும், பிரதிதினமும் பிச்சையிடுவதும், விதவைகளுக்கும் அநாத பிள்ளைகளுக்கு உதவி செய்வதும், போன்ற நன்மைகளை நீர் திரளாய் செய்தும், ஆராதனையின் பரிசுத்த சடங்குகளை நீர் ஜாக்கிரதையாய் கவனித்தும், நிஜமாகவே, இருதயத்திலிருந்து போல அவைகளைப்பற்றி நினைத்து, பேசி, பிரசங்கம் செய்தும்; தீமைகளை கடவுளுக்கு விரோதமான பாவங்களாக நீக்காவிட்டால், இந்த நன்மைகள் எல்லாம் நன்மைகள் அல்ல என்றும், தீமையானது இன்னும் அதற்குள்ளாயிருப்பதினால், அவைகள் வெளிவேஷமானதென்றும் அல்லது புகழ்ச்சிக்கு இடமானதென்றும், நான் அதனுடன் சுகமாய் சேர்த்துகிறேன். ஏனென்றால், ஒவ்வொருவனுடைய வாழ்க்கையும், அவன் செய்கிற எல்லாவற்றிலும் ஒவ்வொன்றிலுமிருக்கிறது. நல்ல கிரியைகள், அவைகளிலிருந்து தீமைகளை நீக்குதலினால் மாத்திரம் நல்லவைகளாகின்றன. இதனால் தீமைகள், மதத்திற்கும், ஆகையினால் கடவுளுக்கும் விரோதமாயிருப்பதினால், அவைகளை நீக்குதல் நன்றாய் வாழ்தல் என்று (9) வெளிப்படையாகிறது. நான்காவது: **இவைகள் ஒவ்வொருவனும் இரக்ஷிக்கப்படக்கூடிய எல்லா சமயங்களின் பொதுவான மார்க்கங்களாயிருக்கின்றன.** கடவுளை ஒத்துக்கொள்ளுதலும், தீமை கடவுளுக்கு விரோதமாயிருப்பதினால் அதை செய்யாதிருத்தலும், ஒரு சமயத்தை சமயமாக்குகிற இரண்டு விஷயங்கள் இவைகள் தான்; இவைகளில் ஒன்று இல்லாவிட்டால், அது ஓர் சமயமென்று சொல்லப்படமுடியாது; ஏனென்றால், கடவுளை ஒத்துக்கொண்டு தீமை செய்தல் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கிறது; மேலும், நன்மைசெய்தலும் கடவுளை ஒத்துக்கொள்ளாதிருத்தலும், அம்மாதிரியே எதிரிடையாயிருக்கிறது; ஏனென்றால் ஒன்று மற்றொன்றில்லாமல் நிலைத்திருக்காது. ஏறக்குறைய எவ்விடத்திலும், ஏதோ ஒரு சமயமிருக்கவும், ஒவ்வொரு சமயத்திலும் இந்த இரண்டு நீதிகள் இருக்கவும், ஆண்டவரால் முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது; கடவுளை ஒத்துக்கொண்டு தீமையானது அவருக்கு விரோதமாயிருக்கிறபடியினால், அதை செய்யாத ஒவ்வொருவனும் சுவர்க்கத்தில் ஓர் இடம் அடையவேண்டுமென்றும்

கூட, ஆண்டவரால் முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஏனென்றால், சுவர்க்கமானது மொத்தத்தில், தனது உயிர் அல்லது ஆன்மா ஆண்டவராயிருக்கிற ஒரு மனிதனை சாயல்காட்டுகிறது; அந்த சுவர்க்க மனிதனில், சுவர்க்கத்து பொருள்களுக்கும் ஸ்தூலப்பொருள்களுக்கும் உள்ள வித்தியாசத்தைப்போல (10) ஓர் வித்தியாசத்துடன், ஒரு ஸ்தூல மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களுமிருக்கின்றன. ஆந்திரீகங்கள் என்று சொல்லப்பட்ட இரத்த நாடிகளிலிருந்தும், நரம்புக்குறிய நார்களிலிருந்தும் வரும் உருவாக்கப்பட்ட உருவங்கள் மாத்திரம் மனிதனில் இருக்கிறதென்பது மட்டுமல்லாமல், அதனுடன்கூட சருமங்களும், ஜவ்வுகளும், தசை நார்களும், குருத்தெலும்களும், எலும்புகளும், நகங்களும், பற்களும்கூட இருக்கின்றனவென்று தெரிந்திருக்கிறது. பின்கூறிய இவைகள் அங்ககிரமத்துடன் நிர்மிக்கப்பட்ட உருவங்களேயேவிட தாழ்ந்த அளவு உயிருள்ளதாயிருக்கின்றன; அவைகளுக்கு அவைகள் வெள்ளை நரம்புகளாகவும் போர்வைகளாகவும் உதைகால்களாகவும் உதவுகின்றன. சுவர்க்கமாயிருக்கிற சுவர்க்க மனிதன் தன்னில் இவைகள் எல்லாம் இருக்கும் பொருட்டு, ஒரு சமயத்தாரால் மாத்திரம் உண்டாக்கப்படாமல் அநேக சமயத்தாரால் அமையப்பெற வேண்டும்; ஆகையினால் திருச்சபையின் அந்த இரண்டு சர்வவியாபகமான நீதிகளையும் தங்கள் வாழ்க்கையில் கொண்டு வருகிறவர்கள், அந்த சுவர்க்க மனிதனில் அதாவது சுவர்க்கத்தில் ஓர் இடம் பெற்று தங்கள் அந்தஸ்த்துக்கு தக்கபடி சுகத்தை அனுபவிக்கிறார்கள். ஆனால், இந்த விஷயங்களைப்பற்றி மேலே (பி. 254) அதிகம் (11) பார்க்கலாம். இந்த இரண்டு நீதிகளும் ஒவ்வொரு சமயத்திலும் முதன்மையானதென்பது, தசாக்ஞை கற்பிப்பது அந்த இரண்டுதானென்கிற உண்மையிலிருந்து விசதமாகலாம். அதுதான் வேதத்தின் முதலாவது. அது சீனாய்மலையின் பேரிலிருந்து ஏகோவாவினால் உயிருள்ள சத்தத்தினால் பிரசித்தம் செய்யப்பட்டு, இரண்டு கற்பலகைகளின்பேரில் கடவுளுடைய விரலினால் எழுதப்பட்டது; அப்புறம், பெட்டியில் வைக்கப்பட்டு அது ஏகோவா என்று சொல்லப்பட்டு, கூடாரத்திலும், எருசலேம் நக

ரத்து கோவிலிலிருக்கும் புண்ணியஸ்தலத்திலும், மிகப் பரிசுத்தமான இடமாயிற்று; அங்கே யிருக்கும் எல்லா பொருள்களும் அதிலிருந்து மாத்திரம் பரிசுத்தமாயிருந்தது; **எருசலேம் நகரத்து வாழ்க்கைப்போதம்** எனும் நூலில் (பி. 53-61) சொல்லப்பட்ட பெட்டியிலுள்ள தசாக்ஞையைக் குறித்து வேதத்தில் சொல்லியிருக்கும் இன்னும் இதர விஷயங்களிலிருந்தும் விசதமாகும்; அதனுடன் பின்வருவதை சேர்க்கிறேன்: தசாக்ஞைஎழுதப்பட்ட இரண்டு மேஜைகளிருந்த பெட்டி பெலிஸ்தர்களால் பிடிக்கப்பட்டு, அஸ்தோத்தில் **தாகோன்** கோவிலிலே வைக்கப்பட்டதென்றும், அந்த **தாகோன்** அதன் முன்பாக தரையிலே விழுந்து கிடந்ததென்றும், பின்னிட்டு சரீரத்திலிருந்து கிழிக்கப்பட்ட தலையும் இரண்டு கைகளும் வாசல்படியின் பேரில் கிடந்ததென்றும், அஸ்தோத்தினுடையவும், எக்ரோனுடையவும் ஜனங்கள் அநேக ஆயிரங்கள் கணக்காய் அந்த பெட்டியின் பொருட்டு மூலவியாதியினால் வாதிக்கப்பட்டு, சுண்டெலிகளால் அவர்கள் பூமி பாழாக்கப்பட்டதென்றும், அதனுடன்கூட, பெலிஸ்தர், தங்கள் தேசத்தாரின் அதிபதிகள் சொன்ன ஆலோசனையின்பேரில் மூலவியாதியின் சாயலானபடி செய்த ஐந்து பொன்சுரூபங்களையும், பொன்னால் செய்த ஐந்து சுண்டெலிகளையும், ஒருபுதிய வண்டியையும் செய்து, அதின்பேரில் பெட்டியையும், பெட்டி அண்டையில் பொன்னால் செய்த மூலவியாதி சாயலான சுரூபங்களையும் சுண்டெலிகளையும் வைத்தார்களென்றும், வழியில் வண்டியின் முன்பாக அலரின இரண்டு பசுக்களைக் கொண்டு, இஸ்ரவேல் குமாரர்களுக்கு அந்தப்பெட்டியை அனுப்பினார்களென்றும் அவர்களால் அந்த பசுக்களும் வண்டியும் பலியாகக்கொடுக்கப்பட்டதென்றும் (1. சாமு V, VI), வேதத்திலிருந்து தெரிந்திருக்
(12) கிறது. இவைகளுக்கெல்லாம் அருத்தம் என்னவென்று இப்பொழுது சொல்லப்படவேண்டும். பெலிஸ்தர் என்பவர்கள் தருமத்திலிருந்து பிரிந்த விசுவாசத்திலிருக்கிறவர்களை குறித்தது; **தாக்கோன்** என்பது, அந்த சமயபத்ததியை சாயல்காட்டினது; அவர்கள் வாதிக்கப்பட்ட மூல வியாதிகள், பரமார்த்த அன்பிலிருந்து பிரிக்கப்பட்டால், அசுத்தமாயிருக்கிற ஸ்தூல அன்புகளை

கருதினது; சுண்டெலிகள் என்பது, உண்மைகளை பொய்ப்படுத்து கைகளினால், திருச்சபையின் நாசத்தை கருதினது; பெட்டியை திருப்பி அனுப்பிய புதுவண்டி, ஸ்தூலமான புதுகொள்கையை கருதினது; ஏனென்றால் வேதத்தில் தேர் என்பது பரமார்த்த உண்மையிலிருந்து வந்த கொள்கைகளை கருதுகிறது; பசுக்கள் நல்ல ஸ்தூல ஆசைகளை கருதினது; பொன்னினால் செய்த மூல வியாதி சாயலானவைகள், சுத்தப்படுத்தப்பட்டு நல்லதாக செய்யப்பட்ட ஸ்தூலமான ஆசைகளை கருதினது; பொன்னால் செய்த சுண்டெலிகள் நன்மையினால் நீக்கப்பட்ட திருச்சபையின் நாசத்தை கருதினது; ஏனென்றால், வேதத்தில் பொன்னென்பது நன்மையைக்கருதுகிறது. வழியில் பசுக்கள் அலறுதல் ஸ்தூல மனிதனுடைய தீமையின் மோகங்கள், நல்ல ஆசைகளாக திரும்புதலின் கஷ்டத்தை கருதினது; பசுக்களும் வண்டியும் சர்வாங்கதகனங்களாக செலுத்தப்பட்டது என்பது, இவ்விதமாக ஆண்டவர் சமா (13)தானப்படுத்தப்பட்டார் என்பதைக் கருதுகிறது. அந்த சரித்திர சம்பந்தப்பட்ட வசனங்களால் பரமார்த்தமாய் கருதப்பட்டது இவைகள் தான். ஒரு அருத்தமாக அவைகளைச்சேர்த்து, பொருந்தபண்ணு. பெலிஸ்தர் என்பதால் தருமத்திலிருந்து பிரிக்கப்பட்ட விசுவாசத்தில் இருக்கிறவர்கள் சாயல் காட்டப்படுகிறார்களென்பது விசுவாசத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கைஎனும் நூலில் பார்க்கலாம் (பி. 47-54). அதில் அடக்கம் செய் திருக்கப்பட்டதசாக்ஞையின் பொருட்டு அந்த பெட்டியானது, திருச்சபையின் மிகவும் பரிசுத்தமான பொருள் என்று புதிய எருசலேம் நகரத்து வாழ்க்கை போதத்தில் (பி. 53-61) பார்க்கலாம்.

327. III. மனிதன் இரட்சிக்கப்படாவிட்டால், அவனே குற்றஞ் சாட்டுதலுக்கு ஆளாயிருக்கிறான். கேட்ட உடனே ஒவ்வொரு பகுத்தறிவுள்ள மனிதனும், எதிரிடையானவைகளானபடியினால், தீமையானது நன்மையிலிருந்து வராதென்கிறதும், நன்மையானது தீமையிலிருந்து வராதென்கிறதும், அதனால், நன்மையிலிருந்து நன்மையைத்தவிர வேறொன்றும் வராதென்கிறதும், தீமையிலிருந்து தீமையைத்தவிர வேறொன்றும் வராதென்கிறது

மாகிய உண்மையை ஒத்துக்கொள்ளுகிருன். இந்த உண்மை ஒத்துக்கொள்ளப்பட்டபோது, நன்மையானது, நல்லவன் அல்லாமல் கெட்டவன் ஏற்றுக்கொண்டால், அது தீமையாக மாற்றப் படும் என்கிறதுகூட ஒத்துக்கொள்ளப்படுகிறது; ஏனென்ருல், ஒவ்வொரு உருவமும், தனக்குள்ளே பாய்வதை, மேலே (பி.292ல்) பார்க்கக்கூடியபடி, தன்னுடைய சொந்த குணமுடையதாகத்திருப்புகிறது. தன் சாரத்திலேயே ஆண்டவர் நன்மையானபடியினுல், அல்லது நன்மையேயானபடியினுல், தீமையானது அவரிடமிருந்து வராதென்றும், அதுவுமன்றி அவரால் உண்டாக்கப் படாதென்றும், ஆனுல், நன்மையானது, தன்னுடைய உருவம் தீமையின் உருவமாயிருக்கிற, ஏற்றுக்கொள்ளும் பொருளால் தீமையாக மாற்றப்படுமென்றும் வெளிப்படையாயிருக்கிறது. தன் சொந்த தன்மை விஷயத்தில் மனிதன் அவ்விதமான பொருளாயிருக்கிருன்; இது இடைவிடால் ஆண்டவரிடமிருந்து நன்மையை அடைந்து, தீமையின் ஒரு உருவமாயிருக்கிற தன்னுடைய சொந்த உருவத்தின் குணமாக இடைவிடாமல் அதை திருப்புகிறது. அவன் இரட்சிக்கப்படாவிட்டால், மனிதனே குற்றம் சாட்டுகைக்கு ஆளாயிருக்கிருனென்று, இதிலிருந்து பின் (2) தொடருகிறது. தீமையானது நிஜமாகவே நரகத்திலிருந்து வருகிறது; ஆனுல், ஒரு மனிதன் அதிலிருந்து, அதைத் தன்னுடைய சொந்தமாக ஏற்றுக்கொண்டு, அதனுல், அதைத் தனதாகவே செய்துகொள்ளுகிறபடியினுல், தீமையானது மனிதனிடமிருந்து வந்ததென்ருவது நரகத்திலிருந்து வந்ததென்ருவது சொன்னுல் ஒன்றேயாகிறது. ஆனுல், ஒரு சமயம்கூட அழிந்து போகிறவரையில் தீமையை தனதாக்குதல் எங்கிருந்து வருகிறதென்பது, பின்வரும் வரிசையில் சொல்லப்படவேண்டும்: I. காலப்போக்கில், ஒவ்வொரு சமயமும் குறைந்துபோய் முடிவு செய்யப்படுகிறது. II. ஒவ்வொரு சமயமும், மனிதனிருக்கும் ஆண்டவருடைய பிரதிமையை தலை கீழாய் திருப்புவதினுல், குறைந்துபோய் முடிவு செய்யப்படுகிறது. III. தொடர்பான தலைமுறைகளில், பரம்பரையான தீமை இடைவிடாமல் அதிகரிப்பதினுல் இது சம்பவிக்கிறது. IV. அப்படியிருந்தாலும், ஒவ்வொருவ

னும் இரட்சிக்கப்பட சக்தியுள்ளவனுயிருக்க, ஆண்டவரால் முன் னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. V. முந்திய பாழாய் போன திருச்சபைக்குப்பதிலாய் ஒரு புதிய திருச்சபை தொடரக் கூட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

328. ஆனுல் இந்த விஷயங்கள், அவைகளின் வரிசைகளில் ரூபகாரம் செய்யப்படவேண்டும். முதலாவது: காலப் போக்கில், ஒவ்வோரு மதமும் குறைந்து கோண்டேவந்து முடிவு செய்யப்படு கிறது. இந்த பூமியின்பேரில் ஒன்றன்பின் ஒன்ருய் அநேக சபைகள் இருந்திருக்கின்றன; ஏனென்ருல், மானிட ஜாதி இருக்குமிடங்களி லெல்லாம், ஒரு சபையிருக்கிறது; சிருட்டியின் நோக்கமாயிருக் கிற சுவர்க்கமானது, மேலே நிச்சயப்படுத்தப்பட்டபடி மானிட ஜாதியிலிருந்து ஏற்படுகிறது. இப்பொழுதுதான் மேலே(பி.326)ல் காண்பித்தபடி, கடவுளை ஒத்துக்கொண்டு நன்ருய் வாழ்கிறதா யிருக்கிற திருச்சபையின் இரண்டு சர்வத்தையும் குறித்த விஷ யங்களிலிருந்தாலொழிய, எவனும் சுவர்க்கத்துக்கு வரமுடியாது. அதிலிருந்து, இந்த பூமியின்பேரில் மிகப் பூர்வகாலம் முதல் தற் காலம் வரையில்கூட திருச்சபைகள் இருந்திருக்கின்றன வென் பது ஏற்படுகிறது. இந்த சபைகள், இஸ்ரவேல் தேசத்து திருச் சபையையும் யூதர்கள் திருச்சபையையும் தவிர மற்றவைகள், சரித்திர சம்பந்தமாய் அல்லாமல், வேதத்தில் சொல்லப்பட்டிருக் கின்றன; அப்படியிருந்தாலும் அதற்கு முன் மற்றவைகள் இருந் தன, அவைகள் தேசங்கள் பெயர்களாலும் ஜனங்கள் பெயர்க (2) ளாலும் அவைகளைக்குறித்த சில குறிப்புகளாலும் மாத்திரம் அங்கே விவரிக்கப்பட்டிருக்கின்றன. முதலாயிருந்த மிகவும் பூர் வீக சபை, ஆதாம் என்பவனுலும் அவனுடைய மனைவி ஏவாள் என்பவளாலும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பூர்வசபை என்று சொல்லப்படயிருந்த பின் வந்த திருச்சபை நோவா என் பவனுலும், அவனுடைய மூன்று குமாரர்களாலும், அவர்கள் சந்ததியாலும் விவரிக்கப்பட்டிருக்கிறது. இது பெரியதாயும், ஜார்டன் நதி இருபக்கத்திலுமுள்ள கானேன் தேசமும், சிரியாவும், அசிரியாவும், சால்டியாவும் மிசேபடோமியாவும்

எகிப்தும், அரேபியாவும், டைரும் சைடனுமாகிய, ஆசியாவின் அநேக இராச்சியங்களில் பரவினதாயுமிருந்தது. பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கையில் சொல்லப் பட்டிருந்த பூர்வீக வார்த்தை இத்தேசத்தார்களுக்குள் இருந்தது (பி. 101, 103). இந்த திருச்சபையானது அந்த இராச்சியங்களி லிருந்ததென்பது, வேதத்தின் தீர்க்க தரிசனத்துக்கு அடுத்த பாகங்களில் அவைகளைப்பற்றி சொல்லியிருக்கிற பல விஷயங்களி லிருந்து விசதமாகிறது. ஆனால், இந்த சபையானது, எபிரேய திருச்சபையை உற்பத்தியான ஏபேர் என்பவரால் அதிசயிக்கும் படியாய் மாற்றப்பட்டது. இந்த சபையில், பலி மூலமான ஆரா தனை முதலில் ஏற்படுத்தப்பட்டது. எபிரேய திருச்சபையி லிருந்து, இஸ்ரவேல் தேசத்து திருச்சபையும், யூதர்கள் சபை யும் பிறந்தன; ஆனால், இது அங்கே எழுதப்படயிருந்த வேதத்
(3) தின் பொருட்டு, கம்பீரமாய் ஏற்படுத்தப்பட்டது. தலை பசும் பொன்னும், மார்பும் புயங்களும் வெள்ளியும், வயிறும் தொடை யும் வெண்கலமும், கால்களும் பாதங்களும் இரும்பும், களிமண் ணும், இவைகளினால் செய்யப்பட்டதும், நெபுசட்நெஜார் என்ப வரால் ஓர் கனவில் பார்க்கப்பட்டதுமான சிலை என்பதினால், இந்த நாலு திருச்சபைகளும் கருதப்படுகின்றன (தானியல் II. 32,33). அதுவுமன்றி, பொன்யுகம் என்பதினாலும், வெள்ளியுகம் என்ப தினாலும், வெண்கலயுகம் என்பதினாலும், இரும்புயுகம் என்ப தினாலும் வேறுயாதொன்றும் கருத ்படுகிறதில்லை. யூதர் திருச் சபைக்கு பின்னிட்டு கிருஸ்து திருச்சபை வந்தது என்பது நன் ருய்த்தெரிந்திருக்கிறது. இந்த சபைகள் எல்லாம் காலப்போக் கில் முடிவு என்று சொல்லப்படுகிற கடைசிவரையில் குறைந்து
(4) கொண்டுபோனதென்று வேதத்திலிருந்துகூட அறிந்து கொள்ளப்படலாம். தங்கள் சொந்த விவேகத்தின் கர்வம் என் பது கருதப்படுகிற, அறிவு மரத்திலிருந்து சாப்பிடுவதினால் உண்டான மிகவும் பூர்வ திருச்சபையின் முடிவு, ஜலப் பிரளயத் தினால் விவரிக்கப்பட்டிருக்கிறது. பூர்வ திருச்சபையின் முடிவு, வேதத்தின் சரித்திர சம்பந்தமானதும் தீர்க்கதரிசின சம்பந்த மானதுமாகிய பாகங்களில், இரண்டிலும் சொல்லப்பட்ட தேசத்

தார்களின் பலவித அழிவுகளினாலும், முக்கியமாய், கானான் தேசத்திலிருந்து இஸ்ரவேல் குமாரர்களால் பலதேசத்தார்கள் துரத்தப்படுவதினாலும், விவரிக்கப்பட்டிருக்கிறது. எருசலேம் நகரத்திலிருந்த கோவிலை அழித்தல் என்பதினாலும், இஸ்ரவேல் தேசத்து ஜனங்களை சதாகால அடிமைத் தனத்துக்கும், யூதர்களை பாபிலோனியாவுக்கும் கொண்டுபோதல் என்பதினாலும், கடைசியில், கோவிலையும், அதேகாலத்தில் எருசலேம் நகரத்தையும், இரண்டாவது தடவை அழிக்கப்படுதல் என்பதினாலும், அந்த தேசத்தாரை சிதறடித்தல் என்பதினாலும், இஸ்ரவேல் தேசத்தினுடையவும் யூதர்களுடையவும் திருச்சபை முடிவு செய்யப்படுதல் கருதப்படுகிறது; அந்த முடிவு, தீர்க்கதரிசிகளிலும், தானியல் (IX. 24, 27) லும் அநேக இடங்களில் முன்னறிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், கிருஸ்துவசபையானது, அதின் முடிவு பரியந்தம் படிப்படியாய் அழிக்கப்படுதல் ஆண்டவரால், மத்தேயு XXIV விலும், மார்க்கு. XIII லும், லுக் XXI லும் விவரிக்கப்பட்டிருக்கிறது; அதின் முடிவே வெளிப்படுத்தின சுவிசேஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, ஒரு சபையானது காலப்போக்கில் குறைந்து கொண்டே போய் முடிவு செய்விக்கப்படுகிறது என்பது விசதமாகலாம்; அம்மாதிரி (5)யே ஒரு மதமும் ஆய்விடுகிறது. இரண்டாவது: ஒவ்வொரு சமயமும் மனிதனில் கடவுளின் பிரதிமையை தலைகீழாய் திருப்புதலினால் குறைந்துகொண்டேபோய் முடிவு செய்விக்கப்படுகிறது. மனிதனானவன் கடவுளின் சாயல்படி கடவுளின் ரூபத்தில், மனிதன் சிருட்டிக்கப்பட்டிருக்கிறானென்பது தெரிந்திருக்கிறது (ஆதியா.I. 26); ஆனால் கடவுளின் ரூபம் என்னவென்றும், கடவுளின் சாயல் என்னவென்றும் சொல்லப்படவேண்டும். கடவுள் மாத்திரம் அன்பாயும் ஞானமாயுமிருக்கிறார்; மனிதனானவன் அந்த இரண்டுக்கும் ஒரு கொள்கலமாயிருக்கும்படிக்கும், அவனுடைய சித்தம், பரம இச்சாசத்தியின் கொள்கலமாகவும், அவனுடைய புத்தி பரம ஞானசத்தியின் கொள்கலமாகவும், இருக்கும்படிக்கும் சிருட்டிக்கப்பட்டான். இந்த இரண்டு கொள்கலங்களும் சிருட்டி முதல் மனிதனில் இருக்கிறதென்பதும், அவைகள் மனிதனை

உண்டாக்குகிற தென்பதும், கர்பப்பையில் ஒவ்வொருவர் இடத்தி லும், அவைகள் உருவாக்கப்படுகின்றன வென்பதும்,மேலேகாண் பிக்கப்பட்டது. ஆகையினுல், மனிதன் கடவுளின் ரூபமாய் இருத் தல் என்பது, அவன் பரம ஞானசத்தியை பெற்றுக்கொள்பவனு யிருக்கிருனென்று அருத்தம் கொள்ளுகிறது; அவன் கடவுளின் சாயலாயிருக்கிருனென்பது, அவன் பரம இச்சாசத்தியைப் பெற் றுக்கொள்பவனு யிருக்கிருனென்று அருத்தம் கொள்ளுகிறது; ஆகையினுல், புத்தி என்று சொல்லப்பட்ட கொள்கலம், கடவு ளின் ரூபமாயிருக்கிறது, சித்தம் என்று சொல்லப்பட்ட கொள் கலம், கடவுளின் ஒரு சாயலாயிருக்கிறது. ஆகையினுல், மனித னுனவன் ஒரு கொள்கலமா யிருக்க சிருட்டிக்கப்பட்டு உருவாக் கப் பட்டிருப்பதினுல், அவனுடைய சித்தமானது கடவுளிட மிருந்து அன்பைப் பெற்றுக்கொள்ளவும், அவனுடைய புத்தி யானது கடவுளிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்ளவும், அவன் சிருட்டிக்கப்பட்டு உருவாக்கப்பட்டிருக்கிரு னென்று ஏற்படுகிறது; மனிதனுனவன் கடவுளை ஒத்துக்கொண்டு அவர் கட்டளைகள்படி நடந்தால், இவைகளை அவன் அடைகிருன்; ஆனுல் மதத்திலிருந்து கடவுளைக்குறித்தும், கற்பனைகளைக்குறித்தும், அவ னுக்கு இருக்கும் அறிவு பிரமாணத்துக்கு தக்கபடியும் அதேபிர மாணம் உண்மைகள் தெரிந்திருங்கிறபடியும், அதிகமாய் அல்லது கொஞ்சமாய் அடைகிருன்; ஏனென்ருல், உண்மைகள் கடவுள் என்னவென்றும், அவர் எப்படி ஒத்துக்கொள்ளப்பட வேண்டு மென்றும், அதனுடன் கட்டளைகள் என்னவென்றும், அவைக ளின்படி மனிதன் எப்படி வாழவேண்டுமென்றும் கற்பிக்கின்றன.

(6) கடவுளின் ரூபமும் அவருடைய சாயலும் மனிதனில் அழிக் கப்படவில்லை, ஆனுல், அவைகள் அழிக்கப்பட்டதுபோலிருக்கின் றன; ஏனென்ருல், மேலே அடிக்கடி சொல்லப்பட்ட, சுவேட்சை என்றும் பகுறித்தவுடைமை என்றும் சொல்லப்பட்ட அவனு டைய இரண்டு மனேசக்திகளில் அவைகள் பதியப்பட்டு இருக் கின்றன; மனிதனுடைய சித்தமாயிருக்கிற பரம இச்சாசத்தியின் கொள்கலத்தை, அவன் தன்னையே நேசித்தலின் கொள்கலமாக வும், தன்னுடைய புத்தியாயிருக்கிற பரம ஞானசத்தியின் கொள்

கலத்தை தன்னுடைய சொந்த விவேகத்தின் கொள்கலமாகவும் செய்தபோது, அவைகள் அப்பொழுது அழிக்கப்பட்டதுபோல் ஆய்விட்டன. இந்த வழிவகையால், கடவுளின் ரூபத்தையும் சாயலையும் அவன் தலை கீழாய்த் திருப்பினன்; ஏனென்றால், அவன் இந்த கொள்கலங்களை கடவுளுக்குத் தூரமாக தன்னிடமே திருப்பிக்கொண்டான், அதனால் தான் சிருட்டியிலே, அவைகள் இவ்விதமாய் முன்னிட்டு திறந்தும், பின்புறம் மூடியும் யிருந்தபோதிலும், மேலே மூடியும் கீழே திறந்தும், அல்லது எதிரில் மூடியும் பின்புறம் திறந்துமிருக்கின்றன. அவைகள் இவ்விதமாக தலை கீழாய் திறந்தும் மூடியுமிருக்கும்போது, அன்பு அல்லது சித்தத்தின்கொள்கலம் நரகத்திலிருந்து அல்லது அதன் சொந்த தன்மையிலிருந்து உட்பெருக்கை அடைகின்றது; அதேமாதிரி ஞானத்தின் கொள்கலம் அல்லது புத்தியும் அப்படியே அடைகிறது. இதிலிருந்து தான் திருச்சபைகளில், கடவுளை ஆராதிப்பதற்குப்பதிலாக மனிதர்களை ஆராதிப்பதும், உண்மையின் கொள்கைகளிலிருந்து ஆராதனைக்குப் பதிலாக பொய்யின் கொள்கைகளிலிருந்து ஆராதிப்பதும், தோன்றியிருக்கிறது; பின்கூறியது மனிதனுடைய சொந்த விவேகத்திலிருந்தும், மற்றது தன்னையே நேசித்தலிலிருந்தும் உண்டாகிறது. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, காலப்போக்கில் ஒரு மதமானது குறைந்து கொண்டேபோய், மனிதனில் கடவுளின் ரூபத்தைத் தலைகீழாய் (7) திருப்புவதினால் முடிவு செய்விக்கப்படுகிறதென்று வெளிப்படையாயிருக்கிறது. மூன்றாவது: **இது தொடர்பான தலை முறைகளில் பரம்பரையான தீமை இடைவிடாது அதிகரிப்பதினால் சம்பவிக்கிறது.** பரம்பரையான தீமையானது அறிவு விருட்சத்திலிருந்து தின்றதினால் ஆதாமிடமிருந்தும் அவனுடைய மனைவி ஏவாளிடமிருந்தும் வரவில்லை என்றும், ஆனால் அது பெற்றோர்களால் தங்களுடைய சந்ததியில் தொடர்பாய் உண்டாகி பெயர்த்து நடப்படுகிறதென்றும், இவ்விதமாய் இடைவிடாது அதிகரிப்பதினால் தொடர்பான தலைமுறைகளில் மிகவும் அதிகமாய்க் கெட்டுப் போகிறதென்றும், மேலே சொல்லி நிச்சயப்படுத்தப்பட்டது. அதனால் தீமையானது அநேகரிடத்தில் மிகவும் கெட்டதாய்ப்

போகும்போது, அது தன்னிடமேயிருந்து அநேகரிடம் தீமையைப் பரப்புகிறது; ஏனென்றால், எல்லா தீமையிலும், துன்மார்க்கத்துக்குக் கொண்டுபோகும் ஆசையிருக்கிறது; அது சிலரில் நன்மைக்கு விரோதமாக கோபத்தில் எரிந்துவிழுகிறது; அதனால்தான் தொத்து ஏற்படுகிறது. இது திருச்சபையிலிருக்கும் அதிகாரிகளையும், நடத்துவோர்களையும், தலைவர்களையும்பிடித்துக் கொண்டபோது, அந்த சமயமானது திருப்பப்பட்டு, உண்மைகளாயிருக்கிற குணமாகும் வழிகள், பொய்களினால் கெட்ட வழிக்குத் திருப்பப்படுகிறது. இவைகளிலிருந்து பின்பு திருச்சபையில், அது முடிவாகும் வரையில், தொடர்பான நன்மையின் (8) நாசமும்,உண்மையின் கேடும் உண்டாகின்றன. நான்காவது: **அப்படியிருந்தாலும், ஒவ்வோருவனும் இரட்சிக்கப்பட சக்தியுள்ளவனயிருக்க ஆண்டவரால் முன்னறிந்து ஏற்பாடு செய்துவைக்கப்பட்டிருக்கிறது.** எவ்விடத்திலும் ஒரு மதம் இருக்கவேண்டுமென்றும், ஒவ்வொரு மதத்திலும், கடவுளை ஒத்துக்கொள்ளுதலும், கடவுளுக்கு விரோதமாய் இருப்பதினால்,தீமைசெய்யாதிருத்தலுமாகிய மோக்ஷத்தின் இரண்டு முக்கியமான அம்சங்கள் இருக்கவேண்டுமென்றும்,ஆண்டவரால் முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பக்தி விஷயங்கள் என்று சொல்லப்பட்ட புத்தியைச் சேர்ந்தவைகளும், அதிலிருந்து சிந்தனையைச் சேர்ந்ததுமாகிய மற்ற விஷயங்கள், ஒவ்வொருவனுக்கும் அவன் வாழ்விற்கு தக்கபடி முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன; ஏனென்றால், அவைகள் வாழ்க்கையின் உடந்தையானவைகள்; அவைகள் பிரதானம்சங்களை ஏற்றுக்கொள்வதற்கு முன்னிட்டாலும், முன்னிட்டே உயிரை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. . நன்றாய் வாழ்ந்து கடவுளை ஒத்துக்கொண்டவர்கள் எல்லாம் இறந்தபிறகு, தேவர்களால் கற்பிக்கப்படக்கூட முன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்புறம், உலகத்தில் இந்த இரண்டு சமயத்தின் பிரதானம்சங்ளில் இருந்தவர்கள் வேதத்திலிருக்கிறபடி திருச்சபையின் உண்மைகளை ஏற்றுக்கொண்டு, ஆண்டவரை சுவர்க்கத்துக்கும் திருச்சபைக்கும் கடவுளாக ஒத்துக்கொள்ளுகிறார்கள்; இதை அவர்கள் ஆண்டவருடைய தன்மைக்கு வேறான அவருடைய

மானிடத்தன்மையை குறித்த ஓர் அபிப்பிராயத்தை உலகத்தி லிருந்து கொண்டுவந்த கிருஸ்துவர்களைவிட அதிக சுலபமாய் பெற்றுக்கொள்ளுகிறார்கள். இளம்பிராயத்தில் இறந்துபோகிறவர் கள் எல்லாம், எங்கே பிறந்திருந்தபோதிலும், இரட்சிக்கப்பட வேண்டுமென்று கூட முன்னறிந்து ஆண்டவரால் ஏற்பாடு செய்
(9) யப்பட்டிருக்கிறது. எல்லா மனிதர்களுக்கும் இறந்த பிறகு கூடுமானால், வாழ்க்கையை சீர்படுத்த ஓர் சமயம்கூட கொடுக்கப் பட்டிருக்கிறது; அவர்கள் தேவர்கள் மூலமாய் ஆண்டவரால் கற் பிக்கப்பட்டு நடத்தப்படுகிறார்கள்; அப்பொழுது அவர்கள் இறந்த பிறகு உயிரோடிருப்பதாகவும், ஒரு சுவர்க்கமும் நரகமும் இருப்பதாகவும் தெரிந்து கொள்ளுகிறபடியினால், அவர்கள் முத லில் உண்மையைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள்; ஆனால் உலகத் தில் கடவுளை ஒத்துக்கொள்ளாமலும், தீமைகளை பாவங்களாக தள்ளாமலுமிருந்தவர்கள் கொஞ்சகாலம் பொருத்து உண்மைகளை வெறுத்து, பின்னடைகிறார்கள்; இருதயத்தில் அல்லாமல் உதடு களினாலே அவைகளை ஒத்துக்கொண்டவர்கள், எண்ணெய் இல்லா மல் விளக்குகளை வைத்துக்கொண்டு, மற்றவர்களை எண்ணெய்க் காக கெஞ்சி, போய்விட்டு, பின்னிட்டு கொண்டுவந்தும், விவாகத் துக்கு சேர்த்துக் கொள்ளப்படாத மதிகெட்ட கன்னிகைகளைப் போலிருக்கிறார்கள். விளக்குகள் பக்தியின் உண்மைகளையும், எண் ணெய் தருமத்தின் நன்மையையும் கருதுகின்றன. இதிலிருந்து, தெய்வபரிபாலனமானது, ஒவ்வொருவனும் இரட்சிக்கப்படக்கூடு மாகவும், அப்படி மனிதன் இரட்சிக்கப்படாவிட்டால், அவனே
(10) குற்றத்திலிருப்பதாகவும் நிற்கிறதென்று விசதமாகிறது. ஐந்தாவது: முன் அழிந்துபோன திருச்சபைக்குப் பதிலாக ஒரு புதிய திருச்சபை தோடரவேண்டு மென்பதும்கூட முன்னறிந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மிகவும் பூர்வகாலமுதல் இம்மாதிரியே நடந்து வருகிறது; அதாவது ஒரு முன் திருச்சபை அழிக்கப் பட்டபோது ஒரு புதிய சபை பின் தொடர்ந்தது. மிகவும் பூர்வ சபைக்குப் பின்னிட்டு பூர்வ சபை வந்தது; பூர்வசபைக்குப் பின், இஸ்ரவேல் தேசத்து அல்லது யூதர்களுடைய சபை வந்தது; இதற்குப்பின் கிருஸ்துவ திருச்சபை வந்தது; வெளிப்படுத்தின

சுவிசேஷத்தில் இதற்குப் பின் கூட, ஒரு புதிய சபை தொடர இருக்கிறதென்று முன்னரே சொல்லப்பட்டிருக்கிறது; சுவர்க்கத்திலிருந்து இறங்கும் புதிய எருசலேம் என்பதினுல், அங்கே அந்த சபை அருத்தம் கொள்ளப்படுகிறது. முன் அழிந்துபோன திருச்சபைக்கு பதிலாக ஒரு புதிய சபை தொடர ஆண்டவரால் ஏன் ஏற்படுத்தப்பட்ட தென்பதற்கு காரணம், பரிசுத்த வேதத்தைக் குறித்த புதியஎருசலேம் நகரத்து கொள்கையில் பார்க்கப்படலாம் (பி. 104-113).

329. IV. இவ்விதமாக எல்லாரும் சுவர்க்கத்துக்கு பூர்வமே விதிக்கப்பட்டிருக்கிருர்கள்; எவனும் நரகத்துக்கு முன் விதிக்கப்பட வில்லை. ஆண்டவர் எவனையும் நரகத்துக்கு கீழே தள்ளுகிறதில்லை என்றும், ஆவியானது தானே அங்கே தள்ளிக்கொள்ளுகிறதென்றும், சுவர்க்கமும் நரகமும் எனும் நூலில் 1758 வருஷத்தில் லண்டன்நகரத்தில் பிரசுரிக்கப்பட்ட நூலில் பிரிவுகளில்(545-550)காண்பிக்கப்பட்டிருக்கிறது. இது ஒவ்வொரு கெட்டவனும், தெய்வ பக்தியில்லாதவனுமாகிய மனிதன் விஷயத்தில் இறந்தபிறகு சம்பவிக்கிறது; அதேமாதிரி அவ்வித மனிதன் விஷயத்திலும் உலகத்தில் சம்பவிக்கிறது; வித்தியாச மென்னவென்ருல், உலகத்தில் அவன் சீர்படுத்தப்படக்கூடுமென்பதும், இரட்சிப்பின் வழிவகைகளைத் தழுவி, அவைகளை மனதில் பதிய வைக்கப்படக் கூடுமென்பதும், ஆனுல் உலகத்தைவிட்டுப்போன பிறகு அப்படிசெய்யமுடியாதென்பதுமாயிருக்கிறது. தீமைகள் தசாக்ஞையிலிருக்கும் தெய்வசட்டங்களுக்கு விரோதமாயிருப்பதினுல், அவைகள் தள்ளப்படவேண்டுமென்பதும், ஒரு கடவுளிருக்கிருரென்று ஒத்துக் கொள்ளப்படவேண்டு மென்பதுமாகிய, இந்த இரண்டு விஷயங்களுக்கு இரட்சிப்பின் வழிவகைகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. தீமைகளை நேசிக்காவிட்டால், இது ஒவ்வொருவனுலும் செய்யப் படக்கூடும்; ஏனென்ருல், ஆண்டவர், தீமைகளை நீக்க சக்தியுள்ளவனுயிருக்கும் பொருட்டு அவனுடைய சித்தத்திலும், அவன் ஒரு கடவுள் இருக்கிருரென்று நினைக்க சக்தியுள்ளவனு யிருக்கும் பொருட்டு அவனுடைய புத்தியிலும், சக்தியுடன் இடைவிடாமல்

உள்ளே பாய்கிறூர்; அப்படி யிருந்தாலும் எவனும் மற்றதை அதேகாலத்தில் செய்யாவிட்டால், ஒன்றை செய்ய முடியாது; ஏனென்றால், ஒன்று ஆண்டவருக்கும், மற்றது மனிதனுக்குமாக இருக்கிற தசாக்னையின் இரண்டு மேஜைகள் சேர்க்கப்பட்டிருக்கிறது போல, அந்த இரண்டும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆண்டவர் தன்னுடைய மேஜையிலிருந்து ஒவ்வொரு மனிதனேயும் தெளிவித்து அவனுக்கு சக்தியைக் கொடுக்கிறூர்; ஆனல், மனிதனுனவன் தனக்கு ஏற்பட்ட மேஜையிலிருக்கிற விஷயங்களே செய்கிறஅளவு சக்தியையும் அறிவையும் அடைகிறூன்; இதற்கு முன்னிட்டு, அந்த இரண்டும் ஒன்று மற்ருென்றின் பேரில் இருப்பதாகவும், கெட்டியாய் மூடப்பட்டிருப்பதாயும் தோன்றுகின்றன; ஆனல், மனிதனுனவன் தனக்கு சம்பந்தப்பட்ட மேஜையில் இருக்கப்பட்டவைகளே செய்கிற அளவு அவைகள் முத்திரை நீக்கப்பட்டு (2) திறக்கப்படுகின்றன. தசாக்னை என்பது, மூடப்பட்டு சிறு குழந்தைகளாலும் பிள்ளேகளாலும் மாத்திரம் திறக்கப்படுகிற ஒரு சிறிய புஸ்தகம் அல்லது கிரந்தம் தவிர இக்காலத்தில் வேறு என்னமா யிருக்கிறது? வயது கொஞ்சம் முதிர்ந்த எவனேயாவது பார்த்து, இது தசாக்னைக்கு விரோதமாயிருக்கிறது, அதை செய்யவேண்டாமென்று சொல்லிப்பார், அதை யார் கேட்கிறூர்கள்? ஆனல், இது தெய்வ சட்டங்களுக்கு விரோதமாயிருக்கிறது. அதை செய்யவேண்டாமென்று நீர் சொன்னல், இதை அவன் கவனிப்பான். அப்படி யிருந்தாலும் தசாக்னை சொல்லும் கட்டளேகள் தெய்வ சட்டங்களாகவே யிருக்கின்றன. சூக்குமஉலகத்தில், அநேகரிடம் இது சோதனே செய்யப்பட்டது; அப்பொழுது தசாக்னையைப் பற்றி சொல்லப்பட்டபோது, அதை அவர்கள் இகழ்ச்சியுடன் தள்ளினூர்கள். அப்படி செய்ததற்கு காரணம், மனிதனுடைய மேஜையா யிருக்கிற இரண்டாவது மேஜையில் தசாக்னையானது தீமைகள் நீக்கப்படவேண்டுமென்று கற்பிக்கிறது என்பதாயிருந்தது; பக்தியில்லாமையாலாவது, கிரியைகள் ஒன்றையும் செய்கிறதில்லே, ஆனல் பக்திமாத்திரம் அப்படி செய்கிறதென்கிற ஒரு சமய நம்பிக்கையிலிருந்தாவது, அவைகளே நீக்காதவன், தனக்கு இனி உபயோகமில்லாத சிறுபிள்ளேகள்

புஸ்தகம் செய்யப்படுவது போல், தசாக்ஞையானது கொஞ்சம் இகழ்ச்சியுடன் பேசப்படுவதை எப்பொழுதும் கேட்கிறான். (3) இவைகளெல்லாம், தான் இரட்சிக்கப்பட ஒருவன் விரும்பினால், அப்படி இரட்சிக்கப்படக்கூடிய வழிவகைகளின் அறிவு அல்லது சக்தி அவனுக்கு இல்லாமல் போகாதென்று தெரிந்திருக்க சொல்லப்பட்டது. இதனால் எல்லாரும் சுவர்க்கத்துக்கு முன் விதிக்கப்பட்டிருக்கிறார்களென்றும், எவனும் நரகத்துக்கு அப்படி ஏற்படுத்தப்படவில்லை என்றும் ஏற்படுகிறது. நரக தண்டனையாயிருக்கிற மோட்சமில்லாததற்கு முன் விதிக்கப்பட்டிருக்கிறதென்பதை அநேகர் நம்புவதினாலும், இந்த நம்பிக்கையானது பாழ்படுத்துகிறதாயும், விவேகமானதுகூட அதிலிருக்கும் பைத்தியத்தையும் குரூரத்தையும் பார்த்தாலொழிய நீக்கப்படாததாயு மிருப்பதினாலும், பின்வரும் வரிசையில் சொல்லப்பட வேண்டும். I. சுவர்க்கத்துக்கு ஏற்படுத்தப்பட்டது தவிர எந்த தெய்வ சங்கற்பமும், பரம இச்சாசத்திக்கும் அதன் முடிவின்மைக்கும் எதிரிடையா யிருக்கிறது. II. சுவர்க்கத்துக்கு தவிர எந்த தெய்வ சங்கற்பமும், பரம ஞானசக்திக்கும் அதன் முடிவின்மைக்கும் எதிரிடையாயிருக்கிறது. III. திருச்சபைக்குள் பிறந்தவர்கள் மாத்திரம் இரட்சிக்கப்படுகிறார்களென்பது பைத்தியம் பிடித்த மதபேதம். IV. மானிடஜாதியில் எவனாவது தெய்வ சங்கற்பத்திலிருந்து நரகதண்டனை யடைகிறானென்பது குரூரமானமதபேதம்.

330. ஆனால் சாதாரணமாய் தெரிந்தபடி முன் லபி என்பதில் நம்பிக்கை வைத்தல் எவ்வளவு தீங்கானதாயிருக்கிறதென்பது தெளிவாகும்பொருட்டு, இந்த நான்கு சித்தாந்தங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டு, ஞபகாரம் செய்யப்படவேண்டும். முதலாவது: சுவர்க்கத்துக்கு ஏற்படுத்தப்பட்டது தவிர வேறு எந்த முன் லபியும் முடிவற்றதா யிருக்கிற பரம இச்சாசத்திக்கு எதிரிடையா யிருக்கிறது. ஏகோவா அல்லது ஆண்டவர், பரம இச்சாசத்தி என்பதும், அவர் முடிவற்றவர் என்பதும், எல்லா உயிரின் சொரூபமென்பதும், அதனுடன் கடவுளின் சாயல்படி அவருடைய பிரதிமையில் மனிதன்

சிருட்டிக்கப்பட்டா னென்பதும், **பதிபசுபாசம்** எனும் நூலில் விவரிக்கப்பட்டிருக்கிறது; ஒவ்வொருமனிதனும் கருப்பையில் ஆண்டவரால் மூன்னமே நிச்சயப்படுத்தப் பட்டபடிக்கூட, அந்த சாயல்படி அந்த பிரதிமையில் உருவாக்கப்படுகிறபடியினுல், ஆண்டவர் எல்லா மனிதருக்கும் **பரலோக பிதாவாக** யிருக்கிருரென்றும், மனிதர்கள் அவருடைய பரமார்த்த குமாரர்களென்றும் தொடருகிறது; அம்மாதிரியே கூட **ஏகோவா** அல்லது **ஆண்டவர்** வேதத்தில் சொல்லப்படுகிருர், மனிதர்களும் அப்படியே சொல்லப்படுகிருர்கள்; ஆகையினுல் அவர் சொல்லுகிறதாவது: "பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று சொல்லாதிருங்கள்; பரலோகத்திலிருக்கிற ஒருவரே உங்களுக்குப் பிதாவா யிருக்கிருர்" (மத்தே, XXIII. 9). அதனுல், உயிர் சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரம் **'அவர் பிதாவாகவும்**, சரீரமாயிருக்கிற உயிரின் போர்வை சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரம் பூமியிலுள்ள பிதா பிதாவாயிருக்கிறதாகவும், அருத்தம் கொள்ளப்படுகிறது; ஆகையினுல், பரலோகத்தில் ஆண்டவரைவிட வேறு எந்த பிதாவும் சொல்லப்படுகிறதில்லை. அந்த உயிரை கெட்டவழிக்கு திருப்பாதவர்கள் அவருடைய குமாரர்களென்றும், அவருக்கு பிறந்தவர்களென்றும் (2) வேதத்தில் அநேக வாக்கியங்களிலிருந்து வெளிப்படையாகிறது. ஆகையினுல், **பரம இச்சாசத்தி** நல்லவனுகிலும் கெட்டவனுகிலும், ஒவ்வொரு மனிதனிலும் இருக்கிறதாகவும், அதனுல், பரம இச்சாசத்தியாயிருக்கிற ஆண்டவர் பூமியின்பேரில் ஓர் பிதா தன்னுடைய பிள்ளைகளை நடத்துகிறதைவிட வேறுவிதமாய் அவர்களை நடத்தமாட்டாரென்கிறதாகவும், மேலும் பரம இச்சாசத்தியானது முடிவற்றதானபடியினுல், முடிவற்று அதிகமாய் நடத்துவார் என்கிறதாகவும், இன்னமும், ஒவ்வொருவனுடைய உயிரும் அவரிடமிருந்து வருகிறபடியினுல், அவர் எவனையும் விட்டு விலகமாட்டாரென்கிறதாகவும், விசதமாகலாம். அவர் கெட்டவர்களிடமிருந்து விலகிப்போகிறதாகத் தோன்றுகிறது; ஆனுல், அவர் அன்பினுல் அவர்களை இன்னும் நடத்தினுலும், கெட்டவர்கள் அவரை விட்டு விலகிப்போகிருர்கள்; ஆகையினுல், ஆண்டவர் சொல்லுகிறதாவது: "கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்

படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்கு திறக்கப்படும்; உங்களில் எந்த மனுஷனாகிலும் தன்னிடத்தில் அப்பத்தைக் கேட்கிற தன் மகனுக்குக் கல்லைக் கொடுப்பானா? ஆகையால், பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளை கொடுக்க அறிந்திருக்கும் போது, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா?" (மத்தே. VII, 7-11). அவர் வேறு இடத்தில் சொல்லுகிறதாவது: "அவர் தீயோர்மேலும், நல்லோர் மேலும், தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள் மேலும் அநீதியுள்ளவர்கள் மேலும், மழையைப் பெய்யப்பண்ணுகிறார்" (மத்தே, V, 45). திருச்சபையில் ஆண்டவர் எல்லாருடைய இரட்சிப்பை விரும்புகிறாரென்றும், யாருடைய மரணத்தையும் விரும்புகிறதில்லை என்றும் கூட தெரிந்திருக்கிறது. இந்த ஆலோசனைகளிலிருந்து, சுவர்க்கத்துக்கு ஏற்படுத்தப்பட்டது தவிர வேறு எந்த முன் விதியும் பரம இச்சாசத்திக்கு விரோதமாய் இருக்கிறதென்று அறிந்து கொள்ளலாம். (3) இரண்டாவது: **சுவர்க்கத்துக்கு ஏற்படுத்தப்பட்டது தவிர வேறு எந்த முன்விதியும் முடிவற்றதாயிருக்கிற பரம ஞானசத்திக்கு எதிரிடையாயிருக்கிறது.** பரம இச்சாசத்தியானது தன்னுடைய சொந்த பரம ஞானசத்தியினால், ஒவ்வொரு மனிதனும் இரட்சிக்கப்படக்கூடிய வழிவகைகளை முன்னறிந்து செய்துவைக்கிறது; ஆகையினால், சுவர்க்கத்துக்குத் தவிர வேறு எந்த முன் லபியும் இருக்கிறதாக சொல்லுதல், மேல் சொல்லியபடி எல்லாருக்கும் வழிவகைகளிருந்தும், முடிவற்றதாயிருக்கிற தெய்வபரிபாலனத்திலிருந்து அவைகள் உற்பத்தியாயும் இருக்கையில், இரட்சிப்பு இருக்கிற வழிவகைகளை அது முன்னறிந்து செய்யாதென்று சொல்லுவதாயிருக்கிறது. ஆனால், இரட்சிக்கப்படாதவர்கள் ஏன் இருக்கிறார்களென்பதற்கு காரணம், பரம இச்சாசத்தியானது மனிதனானவன் தன்னிலேயே சுவர்க்கத்து சுகத்தையும் பரமானந்தத்தையும் உணரவேண்டுமென்பதாயிருக்கிறது; ஏனென்றால், அப்படியில்லாவிட்டால், அது அவனுக்கு சுவர்க்கமாயிருக்காது; மனிதனுக்கு தன்னிடமே

யிருந்து தான் நினைப்பதாகவும், இச்சிப்பதாகவும் தோன்றினல், ஒழிய இது முடியாது; ஏனென்றால், இந்த தோற்றமில்லாமல் அவனுக்கு எதுவும் அவனுடையதாக்க செய்யப்படமுடியாது, அதுவுமன்றி அவன் மனிதனுகவு மிருக்கமாட்டான். இதன், பொருட்டு தான் பரம இச்சாசத்தியிலிருந்து வருகிற பரம ஞான (4) சத்திக்கு சேர்ந்த தெய்வபரிபாலன மிருக்கிறது. ஆனல், எல்லாரும் சுவர்க்கத்துக்கு முன் விதிக்கப்பட்டிருக்கிறார்களென் பதும் யாரும் நரகத்துக்கு முன் விதிக்கப்படவில்லை என்பது மாகிய உண்மையை இது பலயீனப்படுத்துகிறதில்லை; ஆனலும், இரட்சிப்பு வழிவகைகள் இல்லாவிட்டால், அது அப்படி செய் யும் ஆனல் இரட்சிப்பு அடையும் வழிவகைகள் ஒவ்வொருவனுக் கும் முன்னமே ஏற்படுத்தப்பட்டிருக்கிற தென்பதும், எந்த சம யத்தை சேர்ந்தவர்களாயிருந்தாலும் நன்றாய் வாழ்கிறவர்கள் எல்லாருக்கும் அங்கே ஒரு இடம் கிடைக்கும்படியாக சுவர்க்க மானது இருக்கிறதென்பதும் மேலே காண்பிக்கப்பட்டது. மனித னவன், எல்லாவித பழங்களையும் உற்பத்தி செய்கிற பூமியைப் போல இருக்கிறான்; அந்த சக்தியினல் பூமி பூமியாயிருக்கிறது, கெட்ட பழங்களையும்கூட அது உற்பத்தி செய்கிறது என்பது, நல்ல பழங்களையும் கூட உற்பத்தி செய்யும் சக்தியை தடுக்கிற தில்லை; ஆனல், கெட்ட பழங்களைத்தவிர வேறு யாதொன்றையும் உற்பத்தி செய்யும் சக்தி எப்பொழுதும் அதற்கு இல்லாவிட்டால் இது அதை தடுக்கும். மனிதன் வெளிச்சத்தின் கிரணங்களை தன்னிலேயே பலவர்ணமுடையதாக செய்கிற ஒரு பொருளைப் போலக்கூடயிருக்கிறான்; அது இன்பத்தைக்கொடுக்காத நிறங்களை மாத்திரம் காண்பித்தால், வெளிச்சம் இதற்குக் காரணமாகாது; வெளிச்சத்தின் கிரணங்கள் இன்பமான நிறங்களாக மாற்றப்பட (5)லாம். மூன்றாவது: **திருச்சபைக்குள் பிறந்தவர்கள்மாத்திரம் இரட் சிக்கப்படுகிறார்களென்பது ஒரு பைத்தியம் பிடித்த மதபேதம்.** திருச் சபையில் பிறக்காதவர்களும், அதில் பிறந்தவர்களைப்போல, சமமாய் மனிதர்களா யிருக்கிறார்கள், அவர்களும் ஒரே விதமாக சுவர்க்கத்திலிருந்து உற்பத்தியானவர்கள்; சமமாய் உயிருள்ள மரணமற்ற ஆன்மாக்களா யிருக்கிறார்கள். கடவுளிருக்கிறாரென்

றும், தாங்கள் நன்றாய் வாழவேண்டுமென்று ஒத்துக்கொள்ளுகிற ஒரு மதம் அவர்களுக்குக்கூட இருக்கிறது; மேலே காண்பித்தபடி கடவுளை ஒத்துக்கொண்டு நன்றாய் வாழ்கிறவன், அவனுடைய அந்தஸ்துக்கு தக்கபடி பரமார்த்தமாய், இரட்சிக்கப்படுகிறான். ஆனால், அவர்கள் ஞானஸ்நானம் பெறவில்லையே என்று ஆக்ஷேபிக்கிறார்கள்; ஆனால் ஞானஸ்நானம் கொடுத்தல், பரமார்த்தமாய் கழுவப்பட்டவர்களைத் தவிர அதாவது தூயகுணம் அடைய செய்யப்படுகிறவர்களைத் தவிர வேறு யாரையும் இரட்சிக்கிறதில்லை;
(6) ஏனென்றால், ஞானஸ்நானம் இதற்கு ஒரு அடையாளமாகவும் ஞாபகார்த்தமாகவுமிருக்கிறது. ஆண்டவர் இவர்களுக்கு தெரியாதென்றும், ஆண்டவர் இல்லாமல் மோக்ஷம் கிடையாதென்றும் ஆக்ஷேபிக்கப்படுகிறது; ஆனால் ஆண்டவர் ஒருவனுக்கு தெரிந்திருக்கிறதென்கிற காரணத்தினால் எவனுக்கும் இரட்சிப்பு கிடையாது. அவருடைய கட்டளைகள்படி அவன் நடக்கிறான் என்பதினால் அது கிடைக்கிறது; ஆண்டவர் கடவுளை ஒத்துக்கொள்ளுகிற ஒவ்வொருவனுக்கும் தெரிந்திருக்கிறார்; ஏனென்றால், (அவரே, மத்தேயு XXVIII. 18லிம் வேறு இடங்களிலும்) கற்பிக்கிறபடி பரலோகத்துக்கும் பூமிக்கும் கடவுளாயிருக்கிறார். இன்னமும், திருச்சபைக்கு சேராதவர்கள், கிருஸ்துவர்களைவிட கடவுளைக்குறித்து ஒரு மனிதனைக அதிகமாய் அபிப்பிராயமுடையவர்களாகயிருக்கிறார்கள்; கடவுளை ஒரு மனிதனைகக்கருதி, நன்றாய் வாழ்கிறவர்கள், ஆண்டவரால் ஒத்துக்கொள்ளப் படுகிறார்கள்; கிருஸ்துவர்கள் செய்யாததுபோல், கடவுள் உருவத்திலும் சத்தியிலும் ஒருவராகக்கூட அவர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள். அவர்களும்கூட தங்கள் வாழ்வில் கடவுளை நினைக்கிறார்கள்; ஏனென்றால், தீமைகளை கடவுளுக்கு விரோதமான பாவங்களென்று அவர்
(7) கள் நினைக்கிறார்கள்; இதை செய்கிறவர்கள், தங்கள் வாழ்வில் கடவுளை நினைக்கிறார்கள். கிருஸ்துவர்களுக்கு தரும நியமங்கள் வேதத்திலிருக்கிறது; ஆனால், வாழ்வின் எந்த தரும நியமத்தையும், அதிலிருந்து எடுத்துக்கொள்ளுகிறவர்கள் சிலர்தான். பாப்புமார்க்கத்தார்கள் அதை வாசிக்கிறதில்லை; தருமத்திலிருந்து பிரிந்த பக்தியிருக்கப்பட்ட சீர்திருத்தப்பட்டவர்கள் வாழ்வுக்கு

சம்பந்தப்பட்ட அங்கே இருக்கும் விஷயங்களை கவனிக்காமல், பக்திக்கு சம்பந்தபட்டவைகளை மாத்திரம் கவனிக்கிறார்கள்; என்றாலும், முழுவேதமும் வாழ்க்கை போதத்தைத் தவிர வேறொன்றுமில்லை, கிருஸ்துமதம் ஐரோப்பாவில் மாத்திரம் இருக்கிறது; மகமத்திய மதமும் புறச்சமயங்களும் ஆசியாவிலும், இந்தியாவிலும், ஆபிரிக்காவிலும், அமெரிக்காவிலு மிருக்கின்றன; பூமியின் இந்தபாகங்களில் மானிடஜாதி, கிருஸ்து பாகங்களிலிருப்பதைவிட பத்துமடங்கு அதிகமாயிருக்கிறார்கள்; பின்கூறியதில், வாழ்வில் சமயத்தை வைக்கிறவர்கள் சிலர்தான். இந்த பின் கூறியவர்கள் மாத்திரம் இரட்சிக்கப்படுகிறார்க ளென்றும், முன்கூறியவர்கள் தண்டிக்கப்படுகிறார்களென்றும், மனிதனுக்கு வாழ்வினாலல்லாமல் பிறப்பினாலேயே மோட்சம் இருக்கிறதென்றும், நம்புவதைவிட அதிக பைத்தியம்பிடித்தது எதாயிருக்கக்கூடும்? ஆகையினால் ஆண்டவர் சொல்லுகிறதாவது: "அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோக ராஜ்யத்தில் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோப்பு, என்பவர்களோடே பந்தியிருப்பார்கள். ராஜ்யத்தின் புத்திரரோ புறம்பான இருளிலே தள்ளப்படுவார்கள்" (மத்தே. VIII, 11, 12). நான்காவது: மானிட ஜாதியில் எவனும் முன்லபி என்பதிலிருந்து நரக தண்டனைக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறானென்பது ஒரு குரூரமான சமயபுரட்டு. ஏனென்றால், அன்பேயாகவும் இரக்கமேயாகவும் இருக்கப்பட்ட ஆண்டவர், இவ்விதமான பெரிய மனித கூட்டத்தை நரகத்துக்குப் பிறக்கவிட்டிருக்கிறாரென்றும், அநேக அல்லது கோடிக்கணக்கானவர்கள் நரகத்துக்குப் போய் தண்டனையடைய பிறந்திருக்கிறார்களென்றும், அதாவது பேய்களாகவும் சாத்தான்களாகவும் பிறந்திருக்கிறார்களென்றும், அவர் தன்னுடைய ஞானசத்தியிலிருந்து, நன்றாய் வாழ்ந்து, கடவுளை ஏற்றுக்கொள்ளுகிறவர்கள் சதாகால நெருப்பிலும் வேதனையிலும் போடப்படாதபடி, முன் ஏற்பாடு செய்யவில்லையென்றும், நம்புதல் குரூரமாயிருக்கிறது. ஆண்டவர் இடைவிடாமல், எல்லாருக்கும் சிருட்டி கர்த்தாவாகவும் இரட்சகராகவும் இருக்கிறார்; அவர் மட்டும் தான் எல்லாரையும் நடத்துகிறார், யாருடைய மரணத்தையும் விரும்புகிறதில்லை; ஆகையினால், அவருடைய ஆதரவிலும்,

மேற்பார்வையிலும் இருக்கப்பட்ட இவ்வளவு பெரிய கூட்டமான தேசத்தார்களும், ஜனங்களும், முன் லபி என்பதினால் பேயிக்கு இரையாக கொடுக்கப்பட வேண்டுமென்பதை நம்புதலும் நினைத்தலும் குரூரமாயிருக்கிறது.



**ஆண்டவர் தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு எதிரிடையாக நடக்க முடியாது; ஏனென்றால், அவைகளுக்கு விரோதமாய் நடத்தல், தன்னுடைய பரம இச்சாசத்திக்கு விரோதமாயும், தன்னுடையஞானசத்திக்கு விரோதமாயும், இவ்விதமாக தனக்கே விரோதமாகவும் நடத்தலாக இருக்கும்.**

331. பதிபசுபாச விளக்கம் எனும் நூலில் ஆண்டவர் பரம இச்சாசத்தி என்றும், பரம ஞானசத்தி என்றும், இந்த இரண்டும், ஒவ்வொன்றும் இருக்கிறதும் வாழ்கிறதுமாகிய சொரூபமே என்றும், உயிரே என்றும் காண்பிக்கப்பட்டது; அவைகள் அவரிடமிருந்து புறப்படுகிறதாகவும், அதனுடன்கூட வெளிவரும் தெய்வம் அவரே என்றும்கூட காண்பிக்கப்பட்டது. ஆண்டவரிடமிருந்து புறப்படுகிறவைகளி லெல்லாம், தெய்வ பரிபாலனம் முதன்மையானது; ஏனென்றால், இது, பிரபஞ்சம் சிருட்டிக்கப்பட்ட நோக்கத்தில் இடைவிடாமல் இருக்கிறது. சாதனங்களால் முடிவினுடைய தொழிலும், விருத்தியும், தெய்வபரிபாலனம் என்று சொல்லப்படுகிறது. இப்படியிருக்கையில், வெளிவரும் தெய்வமானது அவரேயா யிருப்பதினாலும், தெய்வபரிபாலனமானது வெளிவருகிற முதன்மையான பொருளா யிருப்பதினாலும், அவருடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு விரோதமாய் நடத்தல் அவருக்கே விரோதமாய் நடத்தல் என்று

(2) ஏற்படுகிறது. கடவுள் ஒழுங்கு என்று சொல்லப்படுவது போல், ஆண்டவர் தெய்வபரிபாலனம் என்றுகூட சொல்லப்படலாம்; ஏனென்றால், தெய்வபரிபாலனமானது, மனிதனுடைய இரட்சிப்பை முதன்மையாய் சூழ்ந்துகொண்டிருக்கும் தெய்வ ஒழுங்காயிருக்கிறது; சட்டங்களால் அமைந்திருப்பதினால், எந்த ஒழுங்கும் அவைகள் இல்லாமல் நிலைக்காதபடியினாலும், ஒவ்வொரு சட்டமும் ஒழுங்கிலிருந்து, அது ஒழுங்கு என்றுகூட நிலைக்கிறபடியினாலும், அதிலிருந்து கடவுள் ஒழுங்காயிருப்பது போல், அவர் தன்னுடைய சொந்த ஒழுங்கின் சட்டமாக கூட இருக்கிறாரென்று ஏற்படுகிறது. அம்மாதிரியே கூட ஆண்டவர் தன்னுடைய சொந்ததெய்வபரிபாலனமாயிருப்பதுபோல், தன்னுடைய சொந்த பரிபாலனத்தின் சட்டமாகக்கூட இருக்கிறாரென்று, தெய்வபரிபாலனத்தைப்பற்றி சொல்லவேண்டும். அதனால்தான் ஆண்டவர் தன்னுடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு விரோதமாய் நடக்கமுடியாதென்று வெளிப்படையாகிறது; ஏனென்றால், அவைகளுக்கு எதிரிடையாய் நடத்தல், தனக்கே விரோதமாய் (3) நடத்தலாகும். இன்னமும், எந்த கிரியையும் ஒரு பொருளின் பேரிலும், இதுவும் சில கருவிகளாலும் நடத்தப்படவேண்டும். ஒரு பொருளின்பேரில் அல்லாமலும் கருவிகள் இல்லாமலும் ஒரு கிரியையும் செய்யமுடியாது. தெய்வபரிபாலனம் செயல்படக்கூடிய பொருள் மனிதன்; மனிதனுக்கு ஞானம் உண்டாகிற தெய்வீக உண்மைகளும், அவனுக்கு அன்பு உண்டாகிற தெய்வீக நன்மைகளும் கருவிகளா யிருக்கின்றன. தெய்வபரிபாலனம் இந்த கருவிகளால் மனிதனுடைய மோக்ஷமா யிருக்கிற அதன் நோக்கத்திற்கு வேலை செய்கிறது; ஏனென்றால் ஒருமுடிவை இச்சிக்கிறவன், அதை முடிக்க கருவிகளையும் கூட தேடுகிறான். ஆகையினாலே கூட அப்படி செய்ய விரும்புகிறவன் ஒரு முடிவை ஏற்படுத்திக்கொண்டால், அதை கருவிகளால் செய்கிறான். ஆனால், இவைகளெல்லாம் பின்வரும் ஒழுங்கில் பரிசோதித்தால் அதிக விசதமாகும். I. மனிதனை இரட்சிக்க, தெய்வபரிபாலனத்தின் தொழில் அவனுடைய பிறப்பிலேயே ஆரம்பித்து, முடிவுபரியந்தம் வரையிலும், பின்னிட்டு சதாகாலம் வரையிலும் இடைவிடா

திருக்கிறது. II. தெய்வபரிபாலனத்தின் செயல், சுத்தஇரக்கத்தினல், கருவிகளால் இடைவிடாமல் நடத்தப்படுகிறது. III. உடனே உண்டாகும் இரக்கத்திலிருந்து தட்சணமான மோக்ஷம் கிடையாது. IV. உடனே உண்டாகும் இரக்கத்திலிருந்து தட்சணமான மோக்ஷம் திருச்சபையில் உக்கிரகமான பறக்கும் சர்ப்பமாயிருக்கிறது.

332. I. மனிதனை இரட்சிக்குந் தெய்வபரிபாலனத்தின் கிரியை, அவன் பிறந்தபோதே ஆரம்பித்து அவன் முடிவுபரியந்தம் கூடவும், பின்னிட்டு சதாகாலமும் இடைவிடாமல் நடக்கிறது. மானிடஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க வேண்டுமென்பதே பிரபஞ்சத்தை சிருட்டித்தலின் கருத்தென்றும், இந்த கருத்தானது அதன் தொழிற்பாட்டிலும் அதன் விருத்தியிலும் தெய்வ பரிபாலனம் மனிதர்களை இரட்சிக்க பிரயாசைப்படுதலா யிருக்கிறதென்றும், மனிதனுக்கு வெளியே யிருக்கிறதும், அவனுக்கு உதவுகிறதுமாகிய எல்லா பொருள்களும், பிராணிவர்க்கத்திலும் விருக்ஷ வர்க்கத்திலும் தாவர வர்க்கத்திலும் ஆகிய மூன்று வர்க்கத்திலும் இருக்கிற எல்லா பொருள்களுக்கும், மொத்தத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற சிருட்டியின் இரண்டாம்தரமான நோக்கங்களாயிருக்கின்றனவென்றும் மேலே காண்பிக்கப்பட்டது. அங்கேயிருக்கும் பொருள்கள் முதல் சிருட்டியில் ஏற்படுத்தப்பட்ட தெய்வ ஒழுங்கின் சட்டங்கள்படி இடைவிடாமல் நடந்துகொண்டிருக்கையில், மானிடஜாதி மோக்ஷம் அடைய வேண்டுமென்கிற முதன்மையான நோக்கமானது, தெய்வபரிபாலனத்தின் சட்டங்களாயிருக்கிற தன் ஒழுங்கின் சட்டங்கள்படி இடைவிடாமல் (2) நடக்க எப்படி முடியாது? ஒரு கனி தரும் மரத்தை கவனித்துப்பாருங்கள்; அது ஒரு சிறிய விதையிலிருந்து ஒரு மெல்லிய முளையாக முதலில் புறப்பட்டு, பின்னிட்டு படிப்படியாய் ஒரு தண்டாக வளர்ந்து, இலைகளால் மூடப்பட்ட கிளைகளைப் பரப்பி, பின்னிட்டு மலர்களை வெளிபிட்டு, கனிகளை ஈந்து, அதற்குள் அது நீடித்திருக்க புதிய விதைகளை வைக்கிறதில்லையா? ஒவ்வொரு செடி விஷயத்திலும், வயலிலிருக்கும் பூண்டுவிஷயத்திலும் அவ்

விதமே நடக்கிறது, எல்லா பொருள்களும் அவைகளிலிருக்கும் ஒவ்வொன்றும் முதலிலிருந்து கடைசிவரைக்கும் அவைகளுடைய ஒழுங்குகளின் சட்டங்களுக்கு தக்கபடி இடைவிடாமலும் ஆச்சரியகரமாயும் வளர்கிறதில்லையா? மானிட ஜாதியிலிருந்து ஒரு சுவர்க்கத்தை உண்டாக்க வேண்டு மென்கிற முதன்மையான நோக்கமும், அம்மாதிரி ஏன் வளரக்கூடாது? தெய்வபரிபாலனத்தின் சட்டங்கள்படி இடைவிடாமல் நடக்காமலிருக்கிறது, (3) அதன் விருத்தியில் ஏதாவது இருக்குமா? ஒருமனிதனுடைய உயிருக்கும் ஒரு மரத்தின் வளர்ச்சிக்கும் ஒரு சரிப்படுகை யிருக்கிறபடியினால், அவைகளுக்குள்ளே ஒரு ஒப்பு அல்லது இணை ஏற்படுத்தலாம்:— மனிதனுடைய இளம்பிராயம் விதையிலிருந்து உண்டாகிற ஒரு மரத்தின் மெல்லிய முளைக்கு ஒப்பீடாயிருக்கிறது; அவனுடைய பிள்ளைப்பிராயமும் வாலிபமும் அந்த முளையானது, சிறு கிளைகளோடு ஒரு தண்டாக வளர்கிற அந்த முளையைப் போலிருக்கிறது; ஒவ்வொரு மனிதனிலும் முதலில் பதியச்செய்யப்படுகிற ஸ்தூலமான உண்மைகள், கிளைகள் மூடப்படுகிற இலைகளைப்போலிருக்கின்றன; வேதத்தில் கிளைகள் என்பது வேறு எதையும் கருதுகிறதில்லை; நன்மை உண்மைகளின் விவாகத்தை அல்லது பரமார்த்த விவாகத்தை மனிதன் அறிந்துகொள்ள ஆரம்பித்தல், வசந்தகாலத்தில் மரமானது உண்டாக்குகிற மலர்கள் போலிருக்கின்றன; பரமார்த்த உண்மைகள் அந்த புஷ்பங்களின் இதழ்களா யிருக்கின்றன. பரமார்த்த விவாகத்தின் முதன்மையான பொருள்கள் ஆரம்பக் கனியைப்போலிருக்கின்றன; தருமத்தின் நன்மைகளா யிருக்கிற பரமார்த்த நன்மைகள் கனிகளைப்போலிருக்கின்றன; அவைகள்கூட வேதத்தில் கனிகள் என்பதால் கருதப்படுகின்றன; அன்பிலிருந்து வரும் ஞானத்தின் உற்பத்திகள், அவைகளால் மனிதன் ஒரு தோட்டம்போலும் சுவர்க்கம் போலுமாகிற விதைகளைப்போலிருக்கின்றன. மனிதன் வேதத்தில் ஒரு மரத்தினால் விவரிக்கப்பட்டிருக்கிறான்; அன்பிலிருந்து வரும் ஞானம் ஒரு தோட்டத்தினாலும், விவரிக்கப்பட் டிருக்கிறது. (4) ஈடன் தோட்டம் வேறொன்றையும் கருதுகிறதில்லை; மனிதன் நிஜமாகவே, விதையிலிருந்து உண்டான ஒருகெட்ட மரமாயிருக்

கிருன்; அப்படி யிருந்தாலும், ஜீவமரத்திலிருந்து எடுத்த சிறு கிளைகள், அவனுள் வைக்கலாம் அல்லது அவனுடன் ஒட்டி வைக்கலாம். அதனுல் பழைய வேரிலிருந்து எடுத்த ரசம் நல்ல மரமாகிற ரசமாக திருப்பப்படுகிறது. மரங்களின் வளர்ச்சியிலும் குணப்படுதலிலும் தெய்வபரிபாலனத்தின் அவ்வளவு இடைவிடாத ஒரு விருத்தி யிருக்கும்போது, ஆண்டவரின் பின்வரும் வாக்கியங்களின்படி, மரங்களைவிட அதிகம் மதிப்புள்ள மனிதர்களை சீர்படுத்துதலிலும் குணப்படுத்துதலிலும், அது எல்லா வழிவகையாலும் இடைவிடாது இருக்கவேண்டுமென்பது தெரிந்திருக்க இந்த ஒப்பு செய்யப்பட்டது: "இரண்டு காசுக்கு ஐந்து அடைக்கலான் குருவிகளை விற்கிருர்களல்லவா? அவைகளில் ஒன்ருகிலும், தேவனுல் மறக்கப்படுகிறதில்லை. உங்கள் தலையிலுள்ள மயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்கிறது. ஆகையால் பயப்படாதிருங்கள். அநேகம் அடைக்கலான் குருவிகளைப் பார்க்கிலும், நீங்கள் விசேஷித்தவர்களா யிருக்கிறீர்கள். கவலைப்படுகிறதினுல், உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான். மிகவும் அற்பமான காரியம் முதலாய் உங்களால் செய்யக்கூடாதிருக்க, மற்றவைகளுக்காக, நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட்டு புஷ்பங்கள் எப்படி வளர்கிறதென்று கவனித்துப் பாருங்கள்; இப்படியிருக்க அற்ப விசுவாசிகளே இன்றைக்கு காட்டிலிருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படுகிற புல்லுக்கு தேவன் இவ்விதமாக உடுத்துவித்தால், உங்களுக்கு உடுத்துவிப்பது அதிக நிச்சயமல்லவா?" (லூக் XII. 6, 7, 25-28,)

333. மனிதனை இரட்சிக்க, தெய்வபரிபாலனத்தின் கிரியை அவன் பிறந்தபோது ஆரம்பித்து, அவன் முடிவு பரியந்தம் கூட தொடருவதாக சொல்லப்படுகிறது. இதை அறிந்துகொள்ள ஆண்டவர் மனிதன் எந்த குண முள்ளவனென்பதை பார்த்தும், அவன் என்னமாயிருக்க விரும்புகிருனென்பதையும், இவ்விதமாக அவன் என்னமாயிருக்கப் போகிருனென்பதையும், முன்னறிந்து கொள்ளுகிருரென்றும், அவன் ஒரு மனிதனுயிருக்க, ஆகையினுல் மரணமில்லாதிருக்க, அடிக்கடி காண்பிக்கப்பட்டபடி அவன் சித்

தத்தின்படி நடக்கும் சுதந்தரம் நீக்கப்படக்கூடா தென்றும் தெரிந்திருக்கவேண்டும். ஆகையினால், ஆண்டவர், இறந்த பின் அவனுடைய நிலைமையை முன்னறிந்து, அவன் பிறந்தது முதல் முடிவு பரியந்தம் அதற்காகத் தகுந்த ஏற்பாடுசெய்து வைக்கிறார். துன்மார்க்கர்கள் விஷயத்தில், அவர்களை தீமைக்குப் போவதற்கு இடம் கொடுத்து இடைவிடாமல் அவர்களை பின்னுக்கு இழுப்ப தாகிய ஓர் ஏற்பாட்டை செய்து வைத்திருக்கிறார்; ஆனால் நல்ல வர்கள் விஷயத்தில், அவர்களை இடைவிடாமல், நன்மைக்கு வழி காட்டுவதாகிய ஏற்பாடு செய்துவைத்திருக்கிறார். இவ்விதமாக தெய்வபரிபாலனமானது, மனிதர்களை இரட்சிக்கும் வேலையில் இடைவிடாமலிருக்கிறது; ஆனால் இரட்சிக்கப்பட இஷ்ட முள்ள வர்கள் தவிர வேறு அதிகமாய் யாரும் இரட்சிக்கப்படுகிறதில்லை, கடவுளை ஒத்துக்கொண்டு அவரால் நடத்தப்படுகிறவர்கள் இரட் சிக்கப்பட விரும்புகிறார்கள்; கடவுளை ஒத்துக்கொள்ளாமல் தங் களையே தாங்கள் நடத்திக்கொள்ளுகிறவர்கள், அப்படி இஷ்டப் படுகிறதில்லை; ஏனென்றால், இவர்கள் சதாகால வாழ்வையும் மோக்ஷத்தையும் நினைக்கிறதில்லை, மற்றவர்கள் அப்படி செய் கிறார்கள். ஆண்டவர் இதைப்பார்க்கிறார்: அப்படியிருந்தும், தான் விரோதமாய் நடக்கமுடியாத தெய்வபரிபாலனத்தின் சட்டங்களை அனுசரித்து இடைவிடாமல் அவர்களை நடத்துகிறார்; ஏனென் றால், அப்படி செய்தலானது, தனக்கே விரோதமாய் நடத்தலா யிருக்கிற, தன்னுடைய சொந்த பரம இச்சாசத்திக்கும் பரம ஞான (2) சத்திக்கும் விரோதமாய் நடத்தலாயிருக்கும். இப்படியிருக் கையில், இறந்த பிறகு எல்லாருடைய நிலைமைகளையும் ஆண்ட வர் பார்க்கிறபடியினாலும், இரட்சிக்கப்பட இஷ்டமில்லாதவர் கள் நரகத்தில் அடையும் இடங்களையும், இரட்சிக்கப்பட விரும்பு கிறவர்கள் சுவர்க்கத்தில் அடையும் இடங்களையும் கூட அவர் பார்க்கிறபடியினாலும், துஷ்டர்கள் விஷயத்தில், தீமைக்குவிட்டு, பின் இருப்பதினாலும், நல்லவர்கள் விஷயத்தில் நன்மைக்கு வழி காட்டுவதினாலும் அவரவர்கள் இடங்களை முன்னமே ஏற்படுத்து கிறாரென்று பின் தொடருகிறது; மேலும், ஒவ்வொருவனும் பிறந்தது முதல் முடிவுகாலம் வரையில் இது இடைவிடாமல்

செய்யப்பட்டாலொழிய, சுவர்க்கம் நிலைக்காது, அதுவுமன்றி நரகமும் நிலைக்காது; ஏனென்றால், அந்த முன் உணர்ச்சியும் முன் ஜாக்கிரதையும் இல்லாவிட்டால், சுவர்க்கமும் நரகமும் தாறுமாறாய் தவிர வேறு ஒன்றாயிருக்காது. ஒவ்வொருவனுக்கும் முன் உணர்ச்சியினால், ஆண்டவரால் அவன் இருக்கவேண்டிய சொந்த இடம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்பது மேலே பார்க்கலாம் (3) (பி. 202, 203). இது இந்த ஒப்பனையால், தெளிவிக்கப்படலாம். ஒரு வில்வித்தைக்காரன் அல்லது போர்ச்சேவகன் ஒரு குறி பார்த்து, அந்த குறியிலிருந்து, அதற்கப்பால் ஒரு சமமான கோடு ஒரு மயில் தூரம் இழுக்கப்பட்டால், தன்னுடைய குறியில் ஒரு மயிர் அகலம் தப்பினபோதிலும், அந்த மைல் முடிவிலிருக்கும் அம்பு அல்லது குண்டு, அந்த குறிக்கப்பால் இழுக்கப்பட்ட சமமான கோட்டிலிருந்து வெகு தூரத்தில் போய்விழும். ஆண்டவர், இறந்தபின் ஒவ்வொருவனுடைய இடத்தையும் முன்னறிந்து ஏற்படுத்துவதில் நித்தியத்தை மிக நொடி நேரம்கூட மதிக்காமல் போனால் அம்மாதிரிதான் நேரிடும். ஆனால் எல்லா வருங்காலமும் நிகழ்காலமாகவும், எல்லா நிகழ்காலமும் நித்தியமாகவும் ஆண்டவருக்கு இருக்கிறபடியினால், அவரால் இது செய்யப்படுகிறது. தான் செய்வதில் எல்லாம் தெய்வபரிபாலனம் முடிவற்றதையும் நித்தியமானதையும் மதிக்கிறதென்பது மேலே (பி. 46-69 214-லும், பின்வரும் பிரிவுகளிலும்) பார்க்கலாம்.

334. ஒவ்வொரு தேவனும் ஞானத்தில் சதாகாலம் வரையில் பூர்ணமாக்கப்படுகிறபடியினால், தெய்வபரிபாலனத்தின் கிரியை சதாகாலம்வரையில் நீடிக்கிறதாகக்கூட சொல்லப்படுகிறது; ஆனால் ஒவ்வொருவனும் தான் உலகத்தை விடும்போது இருந்த நன்மையினிடத்தும் உண்மையினிடத்தும் கொண்ட ஆசைக்குத் தக்கபடி பூர்ணமாக்கப்படுகிறான். சதாகாலம் வரைக்கும் பூர்ணமாகிறது இந்த பிரமாணம் தான்; அந்த பிரமாணத்திற்கு அப்பாலிருக்கிறது ஏதாகிலும், தேவனுக்குவெளியேயிருக்கிறது உள்ளே இல்லை; அவனுக்கு வெளியே இருப்பது, அவனுக்குள்ளே பூர்ணப்படுத்தப்படமுடியாது. மற்றவர்களை மன்னித்து அவர்களுக்கு

கொடுக்கிறவர்கள் அதாவது தருமத்தின்நன்மையிலிருக்கப்பட்டவர்கள் மடியிலே, போடப்படுகிற "அமுக்கி, குலுக்கி, சரிந்து விழும்படியான நல்ல அளவு" என்பதனால் (லூக். VI. 37,38), இது தான் கருதப்படுகிறது.

335. **II. தெய்வபரிபாலனத்தின் தொழிற்பாடு, சுத்தமான இரக்கத்திலிருந்து, சாதனங்களால் இடைவிடாமல் நிறைவேற்றப்படுகிறது.** தெய்வபரிபாலனத்துக்கு சேர்ந்த வழிவகைகளும் மாதிரிகளும் இருக்கின்றன, அதன் சாதனங்கள் தான், மனிதன் மனிதனாகிறதற்கும், புத்தி விஷயத்திலும் சித்தம் விஷயத்திலும் பரிபூரணப்படுகிறதற்கும் கருவிகள்; அதன் விதங்கள் தான் இவைகள் எல்லாம் செய்யப்படும் மாதிரிகள். மனிதன் மனிதனாகிறதற்கும் புத்தி விஷயத்தில் பரிபூரணமாக்கப்படுவதற்கும் கருவிகள், உண்மைகள் என்கிற சாதாரணவார்த்தையால் சொல்லப்படுகின்றன; அவைகள் சிந்தனையில் அபிப்பிராயங்களாயும் ஞாபகத்தில் பொருள்களாகவும் சொல்லப்படுகின்றன. தாங்களே அவைகள், பூதசாஸ்திரங்கள் உற்பத்தியாகிற அறிவுகளாயிருக்கின்றன. இந்த வழிவகைகள் எல்லாமே யோசித்துப்பார்த்தால், சூக்குமமாயிருக்கின்றன; ஆனால், அவைகள் ஸ்தூலப்பொருள்களிலிருப்பதால், அவைகளின் போர்வையினால் அல்லது உடுப்பினால், அவைகள் ஸ்தூலமாகத் தோன்றுகின்றன; அவைகளில் சிலது உருவமுள்ளதாகத் தோன்றுகின்றன. இந்த வழிவகைகள் எண்ணில் முடிவற்றதாயும், விகற்பத்தில் முடிவற்றதாயிருக்கின்றன; அவைகள் ஏறக்குறைய கலப்பற்றதாயும் அல்லது கலப்புள்ளதாயும், ஏறக்குறைய பூரணமானதாயும் அல்லது பூரணமல்லாத தாயுமிருக்கின்றன. ஸ்தூலமான தேசாசாரவாழ்வையும், அதனுடன் பகுத்தறிவுள்ள சன்மார்க்க வாழ்வையும், சுவர்க்க சம்பந்தமான பரமார்த்த வாழ்வையும், உருவுபடுத்தி, (2)பரிபூரணமாக்கும் வழிவகைகள் இருக்கின்றன. இந்த வழிவகைகள், மனிதனுடைய இளம்பிராயம் முதல், அவன் வாழ்நாளின் கடைசிவரையிலும், பின்னிட்டு அனந்தகாலம் வரையிலும் ஒருவகை மற்றதற்கு பின் ஒன்றன் பின் ஒன்றாய் தொடர்ந்துவருகின்றன. அவைகள் பின் தொடர்ந்து அதிகரிக்கிறதினால், முன்

வந்த சம்பத்துகள் பின்வந்த சம்பத்துகளுக்கு வழிவகைகளாகின்றன; ஏனென்றால், மத்திய காரணங்களாக உருவாக்கப்பட்ட ஒவ்வொன்றிலும் அவைகள் பிரவேசிக்கின்றன; ஏனென்றால் இந்த காரணங்களிலிருந்து, ஒவ்வொரு காரியமும் அல்லது ஒவ்வொரு முடிவும், தானே தோற்றுவிக்கிறதாயிருக்கிறது, அதனால் ஒரு காரணமாகிறது, இவ்விதமாக பின் சம்பத்துகள், ஒன்றன் பின் ஒன்றாய், வழிவகைகளாகின்றன; இது அனந்தகாலம் நடக்கிறபடியினால், அந்த விருத்தியை மூட முடிவான அல்லது கடைசி காரியம் ஒன்றுமில்லை. ஏனென்றால், அனந்த காலமென்பது முடிவில்லாதது போல், அனந்தகாலம் வரையில் அதிகரிக்கிற ஞானம் முடிவற்றதாயிருக்கிறது. ஒரு ஞானி விஷயத்தில், ஞானத்துக்கு ஓர் முடிவிருந்தால், அதன் இடைவிடாத பெருகுதலினும் செழிப்பாக்குதலினும், அமைந்திருக்கிற அவன் ஞானத்தின் ஆனந்தம் அழிந்து போகும்; அப்படியே அவன் உயிரின் சந்தோஷமும் அழிந்து போகும்; அதற்குப் பதிலாக, அதில் மாத்திரம் சுவர்க்கத்துவாழ்வு இல்லாத, மகிமையின் சந்தோஷம் தொடரும்; அப்பொழுது ஞானியானவன், இன்னமும் வாலிபனைப் போலாகாமல், ஒருகிழ (3) வனைப்போலவும், கடைசியில் தள்ளாட்டமானவனாகிறான். ஒரு சுவர்க்கத்திலுள்ள ஞானியின் ஞானமானது, எப்பொழுதும், விர்த்தியாகிக்கொண்டு வந்தாலும், தேவதாஞானம் பரம ஞானசத்தியை தொடும்படியாக அவ்வளவு சமீபத்தில் செல்லுகிறதில்லை; அது, ஒரு அதிகல மண்டலத்தை அடுத்து இழுக்கப்பட்ட ஒரு நேரான கோடு, எப்பொழுதும் தொடாமல், இடைவிடாமல் சமீபிக்கிறதென்று சொல்லப்படுவது போலவும், வட்டத்தை சதுரமாக் குதலைக்குறித்து சொல்லப்படுவதுபோலவும், ஒப்பிடாயிருக்கிறது. இதிலிருந்து, மனிதன் மனிதனாக இருக்கவும், புத்தி விஷயத்தில் அவன் பரிபூரணமாக்கப்படும் பொருட்டும், தெய்வபரிபாலனம் செயல்படுகிற வழிவகைகளால் என்ன கருதப்படுகிறதென்றும், இந்த வழிவகைகள் உண்மைகள் என்கிற ஒரு சாதாரணவார்த்தையால் சொல்லப்படுகின்றனவென்றும் விசதமாகும். சித்தம் விஷயத்தில், மனிதனானவன் உருவாக்கப்பட்டு பரிபூரணமாக்கப்படுகிற வழிவகைகள்கூட அவ்வளவு அநேகமாயிருக்கின்றன; ஆனால்

இவைகள் நன்மைகள் என்கிற பொதுவானவார்த்தையால் சொல்லப்படுகின்றன; இவைகளிலிருந்து, மனிதனுக்கு அன்புவருகிறது, ஆனால் மற்றவைகளிலிருந்து அவனுக்கு ஞானம்வருகிறது. அவைகளின் ஐக்கியம் மனிதனை உண்டாக்குகிறது; ஏனென்றால், ஐக்கியமிருக்கிறதுபோல, அப்படியே மனிதனுமிருக்கிறான். இந்த ஐக்கியம்தான், நன்மையினுடையவும் உண்மையினுடையவும் விவாகம் என்று சொல்லப்படுகிறது.

336. ஆனால், மனிதனை உருவாக்கவும், அவனை பரிபூரணப் படுத்தவும், வழிவகைகளின் பேரிலும், வழிவகைகளாலும் தெய்வ பரிபாலனம் செயல்படுகிற விதங்கள்கூட எண்ணிலும் விகற்பத்திலும் முடிவற்றதாயிருக்கின்றன; பரம இச்சாசக்தியிலிருந்து வரும் பரமஞானசத்தியின் தொழிற்பாடுகள், மனிதனை இரட்சிக்க எவ்வளவு இருக்கின்றனவோ அவ்வளவு கணக்கற்றதாயிருக்கின்றன. இவ்விதமாக, மேலே சொல்லப்பட்ட, தன் சட்டங்கள்படி தெய்வபரிபாலனத்தின் தொழிற்பாடுகள் எவ்வளவு இருக்கின்றதோ, அவ்வளவு கணக்கற்றதாயிருக்கின்றன. இந்த விதங்கள் மிகவும் இரகசியமானவைகளாயிருக்கின்றன என்பது, மனிதனுக்கு அறிதாய் ஒன்றும் தெரியாத சரீரத்தின்பேரில் ஆன்மாவின் தொழிற்பாடுகளினால் தெளிவிக்கப்படுகின்றது; உதாரணமாக, கண், காது, மூக்கு, நாக்கு, சருமமாகிய இவைகள் எப்படி உணருகிறதென்றும், இறைப்பை எப்படி ஜீரணம் செய்கிறதென்றும், மணிக்குடல், அன்னரசத்தையும், பித்தாசயம் இரத்தத்தையும், எப்படி பிரயாசைப்பட்டு செய்கிறதென்றும், அதை கணையம் என்கிற ஓர் வயிற்றிலிருக்கும் அவயமும் மண்ணீரலும் எப்படி சுத்தப்படுத்துகிறதென்றும், அதிலிருந்து, மூத்திர பிண்டங்கள் அசுத்தமான க்சிவுகளை எப்படிப்பிரிக்கிறதென்றும், இருதயமானது அதை எப்படி சேர்த்து பகிர்ந்து கொடுக்கிறதென்றும், சுவாசாசயங்கள் அதன் அசுத்தங்களை எப்படி நீக்குகிறதென்றும், மூளையானது அதை எப்படி புதிதாக சுத்தப்படுத்தி, அதை புதிதாக உயிர் கொடுக்கிறதென்றும், எந்த அறிவுக்கும் எட்டக்கூடாத எல்லாம் இரகசியங்களாகயிருக்கிற கணக்கற்ற இதர பொருள்

களும் மனிதனுக்குத் தெரியாது. தெய்வபரிபாலனத்தின் இரகசியமான தொழிற்பாடுகளில் இன்னும் குறைவாய் தான் பிரவேசிக்கக்கூடுமென்று இதிலிருந்து வெளிப்படையாகிறது; அதன் சட்டங்கள் தெரிந்திருக்கின்றன என்பது போதும்.

337. தெய்வபரிபாலனம் எல்லாவற்றையும் சுத்தமான இரக்கத்திலிருந்து செய்கிறது; ஏனென்றால், தெய்வசத்து சுத்த அன்பாயிருக்கிறது; இது தான் பரமஞானசத்தியினால் தொழிற்படுகிறது; இந்த தொழிற்பாடு தான் தெய்வபரிபாலனம் என்று சொல்லப்படுகிறது. பின்வரும் காரணங்களுக்காக இந்த சுத்த அன்பு சுத்த இரக்கமாயிருக்கிறது: I. தாங்களே ஒன்றும் செய்ய முடியாததாயிருக்கிற உலகம் முழுமையும் உள்ள எல்லா மனிதர்கள் விஷயத்திலும் அது சேட்டிக்கிறது. II. கெட்டவர்கள் விஷயத்திலும், அநீதியானவர்கள் விஷயத்திலும், நல்லவர்கள் விஷயத்திலும், நீதிமான்கள் விஷயத்திலும், அது சமமாய் சேட்டிக்கிறது. III. அது முன்கூறியவர்களை நரகத்தில் நடத்துகிறது, பின்கூறியவர்களை அதிலிருந்து மீட்கிறது. IV. அது இடைவிடாமல் அவர்களுடன் சேர்ந்து அங்கே போராடி, அவர்களுக்காக பேயுடன் அதாவது நரகத்திலிருக்கும் கெடுதிகளுக்கு விரோதமாய் சண்டை செய்கிறது. V. இதன் பொருட்டு அது உலகத்துக்கு வந்து அநேக சோதனைகளுக்கும், சிலுவையின் உபாதியாயிருந்த அவைகளில் கடைசியானதற்கும் உட்பட்டது VI. அது சுத்தமில்லாதவர்களை சுத்தமுள்ளவர்களாகவும், பைத்தியக்காரர்களை சொஸ்த் புத்தியுள்ளவர்களாகவும், செய்ய இடைவிடாமல் தொழிற்படுகிறது. இவ்விதமாக சுத்த இரக்கத்திலிருந்து அது இடைவிடாமல் கஷ்டப்படுகிறது.

338. III. **தட்சணமான இரக்கத்திலிருந்து தட்சணமான மோக்ஷம் உண்டாகாது.** முன் சென்ற பிரிவுகளில், மனிதனை இரட்சிக்க செய்யும் தெய்வபரிபாலனத்தின் கிருத்தியம், அவன் பிறக்கும்போது ஆரம்பித்து, அவன் ஆயுள் பரியந்தமும், பின்விட்டு அனந்த காலம்வரையில் நீடித்திருக்கிறது என்றும், அதனுடன்

கூட, இந்த கிருத்தியம் சுத்த இரக்கத்திலிருந்து, சாதனங்களால் இடைவிடாமல் நடக்கிறதென்றும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இவைகளிலெல்லாமிருந்து தட்சணமான மோக்ஷமென்றும், தட்சணமான இரக்கமென்றும் ஒன்றுமில்லை யென்று ஏற்படுகிறது. ஆனால், திருச்சபையையும் அல்லது சமயத்தையும் சேர்ந்தவை களைக்குறித்து புத்தியிலிருந்து ஒன்றையும் நினைக்காத அநேகர், தட்சணமான இரக்கத்திலிருந்து தாங்கள் இரட்சிக்கப்படுகிறதாக வும், ஆகையால், மோக்ஷம் என்பது தட்சணம் வரக்கூடியதாகவும் நம்புகிறபடியினாலும், அப்படி இருந்தாலும் இது உண்மைக்கு விரோதமாயிருக்கிறபடியினாலும், மேலும் கெடுதியான நம்பிக் கையாயிருப்பதினாலும், அதன் ஒழுங்கில் அது யோசிக்கப்பட வேண்டும் மென்பது முக்கியமானது. I. தட்சணமான இரக்கத்தி லிருந்துவரும் தட்சணமான மோக்ஷத்தைக் குறித்த நம்பிக்கை, மனிதனுடைய ஸ்தூலமான நிலைமையிலிருந்து எடுத்துக்கொள் ளப்பட்டிருக்கிறது. II. ஸ்தூல நிலைமையிலிருந்து முழுமையும் வேறான சூக்கும நிலையைக்குறித்த அஞ்ஞானத்திலிருந்து இந்த நம்பிக்கை வருகிறது. கிருஸ்துவ உலகத்திலுள்ள எல்லா திருச் சபைகளின் கொள்கைகள், உள்ளுக்குள்ளாய் பார்த்தால், தட்சண மான இரக்கத்திலிருந்துவரும் தட்சணமான மோக்ஷத்துக்கு எதிரிடையாயிருக்கிறது; அப்படியிருந்தாலும், திருச்சபையின் (2) புறம்பான மனிதர்கள் அதை ஏற்படுத்துகிறார்கள். முதலா வது, தட்சணமான இரக்கத்திலிருந்து, வரும் தட்சணமான மோக்ஷ த்தைக்குறித்த நம்பிக்கை மனிதனுடைய ஸ்தூலமான நிலைமையி லிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. ஸ்தூலமான மனிதன் தன்னுடைய சொந்த நிலைமையிலிருந்து, சுவர்க்கத்து சந்தோஷம், உலகத்து சந்தோஷத்தைப்போலிருக்கிற தென்பதையும், அது உள்ளே பாய்ந்து அதேமாதிரி பெற்றுக்கொள்ளப்படுகிறதென்பதையும் தவிர வேறுவிதமாய் ஒன்றையும் தெரிந்திருக்கவில்லை; உதாரண மாக, அது, ஏழையாயிருந்து பணக்காரனாய், அதனால் விசனமுள்ள தரித்திர நிலைமையிலிருந்து, ஐசுவரியமுள்ள சுகமான நிலைமைக்கு சென்றவன் நிலைமையை ஒத்தும், அல்லது தாழ்ந்த அந்தஸ்தில் இருந்து கௌரவமடைந்து, அதனால் இகழ்ச்சியிலிருந்து மகி

மைக்கு சென்றவன் நிலைமையை ஒத்தும், அல்லது துக்கப்படுகிற வீட்டிலிருந்து விவாக சந்தோஷத்துக்குபோகிறவன் நிலைமையை ஒத்தும், அது இருக்கிறதாகமட்டும் ஸ்தூலமனிதன் தெரிந்திருக்கிறான். இந்த நிலைமைகள் ஒரே நாளில் மாற்றக்கூடுமாகையாலும், இறந்த பிறகு மனிதன் நிலைமையைக்குறித்து வேறு எந்த அபிப்பிராயமும் கொள்ளாதபடியினாலும், தட்சணமான இரக்கத்திலிருந்து வரும் தட்சணமான மோக்ஷத்தில் நம்பிக்கை எங்கே
(3) யிருந்துவருகிற தென்று வெளிப்படையாயிருக்கிறது. உலகத்தில்கூட, அநேகர் ஒரு கூட்டத்திலும், ஒரு நாகரீகமான கூட்டத்திலும் இருந்து, எல்லாருமாக சந்தோஷமா யிருக்கலாம்; அப்படியிருந்தும் ஆன்மாக்கள் விஷயத்தில் எல்லாரும் வித்தியாசப்படுகிறார்கள்; இது ஸ்தூல நிலைமையில் சம்பவிக்கிறது. ஒருவனுடைய புறம்பான நிலைமை, மற்றவனுடைய புறம்பான நிலைமையுடன், அவர்களுக்குள் உள்ளான நிலைமைகள் எவ்வளவு வேறுமாதிரி இருந்தாலும், வசதிபண்ணிக்கொள்ளப் படலாம் என்பது காரணமாயிருக்கிறது. இந்த ஸ்தூல நிலைமையிலிருந்து மோக்ஷம் என்பது சுவர்க்கத்தில் தேவர்களுடன் சேர்க்கப்படுதல் மாத்திரம் என்றும், அந்த சேர்த்துக்கொள்ளலும் தட்சணமான இரக்கத்திலிருந்து சம்பவிக்கிறதென்றும் கூட, தீர்மானிக்கப்படுகிறது. ஆகையினால், சுவர்க்கமானது நல்லவனைப்போல் கெட்டவனுக்கும் கொடுக்கப்படக்கூடு மென்றும், அப்பொழுது, அது சந்தோஷத்தில் நிறைந்திருக்கிற தென்கிற வித்தியாசத்துடன் உலகத்திலிருப்பதுபோல, சகவாசமிருக்கிற தென்றும்கூட நம்
(4) பப்படுகிறது. இரண்டாவது: ஸ்தூல நிலைமையிலிருந்து முழுமையும் வேறான சூக்கும நிலைமையைக்குறித்த அஞ்ஞானத்திலிருந்து இந்த நம்பிக்கை வருகிறது. இறந்த பிறகு மனிதன் நிலைமையாயிருக்கிற சூக்கும நிலைமை, மேலே அநேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது; ஒவ்வொருவனும் தன் சொந்த அன்பா யிருக்கிறானென்றும், எவனும், தன்னை ஒத்த அன்பு உடையவர்கள் தவிர வேறு யாருடனும் வாழமாட்டானென்றும், மற்றவர்களுடன் சேர்ந்தபோது, தன்னுடைய சொந்த உயிரை சுவாசிக்க முடியாதென்றும், காண்பிக்கப்பட்டிருக்கிறது. இறந்த பிறகு ஒவ்வொரு

வனும் தன் சொந்த கூட்டத்துக்கும், அல்லது அவனைப்போன்ற அன்பு உடையவர்கள் கூட்டத்துக்கும் வருகிறதும், இவர்களை பந்துக்களாகவும் சிநேகிதர்களாகவும் ஒப்புக்கொள்ளுகிறதும் இதனால்தான்; ஆச்சரியமென்ன வென்றால், அவன் அவர்களை சந்தித்துப் பார்க்கும்போது, இளம்பிராயத்திலிருந்து தனக்குத் தெரிந்ததுபோல நடத்தலா யிருக்கிறது; இதைச் செய்கிறது சூக்கும பந்துத்வமும் சினேகிதமுமாம். நிஜமாக, இன்னும் கொஞ்சம் சொல்லுகிறேன், ஒரு கூட்டத்திலுள்ள எவனும், தன் சொந்த வீட்டைத்தவிர வேறு எந்த வீட்டிலுமிருக்கமாட்டான்; அந்த கூட்டத்தில் உள்ள ஒவ்வொருவனுக்கும், அவன் அந்த கூட்டத்தில் முதலில் பிரவேசிக்கிறபோது, அவனுக்காக தயார்செய்து வைக்கப்பட்டிருக்கிறதாகக்காண்கிற அவனுடைய சொந்த வீடானது இருக்கிறது. தன் சொந்த வீட்டுக்கு வெளியே மற்றவர்களோடு சகவாசம் செய்யலாம்; அப்படியிருந்தாலும் அவன் தன் சொந்த வீட்டைத்தவிர வேறு எங்கும் இருக்கமுடியாது. இன்னமும், வேறு ஒருவனுக்குச் சேர்ந்த அறையில், தன் சொந்த இடத்தைவிட வேறு எந்த இடத்திலும் எவனும் உட்காரமுடியாது. வேறு எங்கேயாவது உட்கார்ந்தால், தன்னுடைய தைரியத்தை விட்டது போலாகி, ஊமையாகிறான்; ஆச்சரியம் என்னவென்றால், ஒரு அறையில் பிரவேசிக்கும்போது ஒவ்வொருவனுக்கும் தன் சொந்த இடம் தெரியும். கோவில்களிலும், பிரசித்தமான சபைகளிலும்கூட, அவர்கள் சேர்ந்திருக்கும்போது அதே (5) சம்பவிக்கிறது. இவைகளிலிருந்து சூக்கும நிலைமையானது, ஸ்தூல நிலைமைக்கு முழுமையும் வேறானதென்றும், எவனும் தன்னுடைய அரசாளும் அன்பு இருக்கிற இடத்தைவிட வேறுஇடத்திலும் இருக்க முடியாதபடி, அவ்விதமா யிருக்கிறதென்றும் வெளிப்படையாகிறது; ஏனென்றால், அவன் உயிரின் சந்தோஷம் அங்கே யிருக்கிறது; ஒவ்வொருவனும், தன் உயிரின் சந்தோஷத்திலிருக்க விரும்புகிறான்; ஒரு மனிதனுடைய ஆன்மா வேறுஎங்கும் இருக்கமுடியாது; ஏனென்றால், இது அவனுடைய உயிரையும், நிஜமாகவே, அவன் சுவாசித்தலையுமே, அதனுடன் அவனுடைய இருதயத்தின் சலனத்தையும் அமைக்கிறது. ஸ்தூல உலகத்தில்

அது வேறுமாதிரி யிருக்கிறது, இந்த உலகத்தில், மனிதனுடைய புறம்பானது, இளம்பிராயமுதல், அவனுடைய உள்ளானதுக்கு சேர்ந்தவைகளைவிட வேறு சந்தோஷங்களை முகத்திலும், பேச்சிலும், சைகையிலும் நடிக்கமுழுமையும் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால், ஸ்தூல உலகத்தில் மனிதனுடைய நிலைமையிலிருந்து இறந்த பிறகு அவனுடைய நிலைமையைப்பற்றி ஓர் தீர்மானம் ஏற்படுத்தமுடியாது. ஏனென்றால், இறந்தபிறகு ஒவ்வொருவனுடைய நிலைமையும் சூக்கும நிலைமையாயிருக்கிறது; அந்த நிலைமையானது, ஸ்தூல உலகத்தில் வாழ்ந்ததினால், தனக்கே தான் சம்பாதித்துக்கொண்ட தன் சொந்த ஆசையின் சந்தோஷத்தில் தவிர வேறு எங்கும் இருக்கமுடியாதபடி அவ்விதமா யிருக்கிறது. (6) நரகத்தைச்சேர்ந்த சந்தோஷத்திலிருக்கிற எவனும் பொதுவான வார்த்தையாகிய சுவர்க்கானந்தம் என்று சொல்லப்பட்ட சுவர்க்க சந்தோஷத்தில் சேர்த்துக் கொள்ளப்பட முடியாதென்றும், அல்லது அதேவாகிறபடி, தீமையின் சந்தோஷத்திலிருக்கிற எவனும் நன்மையின் சந்தோஷத்தில் செலுத்தப்பட முடியாதென்றும், இதிலிருந்து தெளிவாய் விசதமாகும். இறந்தபிறகு எவனும் சுவர்க்கத்துக்கு ஏறுகிறதை தடுக்கப்படுகிறதில்லை என்பதிலிருந்து, அதை இன்னும் அதிக தெளிவாய்த் தீர்மானம் செய்யலாம்; அவனுக்கு வழிகாட்டப்படுகிறது; சந்தர்ப்பமும் கொடுக்கப்படுகிறது, மேலும் அவன் சேர்த்துக்கொள்ளப்படுகிறான்; ஆனால் அவன் சுவர்க்கத்துக்கு வந்து, தன் சுவாசத்தினால் அதன் சந்தோஷத்தை உள்ளே இழுக்கிறபோது, மார்பில் நோவு உண்டாய் இருதயத்தில் சித்தரவதை செய்யப்பட்டு நெருப்புசமீபத்தில் கொண்டுவரப்பட்ட ஒரு பாம்புபோல் துடிக்கிற ஒரு மூர்ச்சையை உணர ஆரம்பிக்கிறான்; சுவர்க்கத்துக்கு தூர வேறுபக்கமாயும் நரகத்துக்கு பக்கமாயும் முகத்தை திருப்பிக்கொண்டு, தூரமாக அதிக சீக்கிரமாய் ஓடிப்போய்விடுகிறான்; அதுவுமன்றி தன் அன்பை ஒத்த கூட்டத்திற்குள் வருகிறவரையில் ஓய்கிறதில்லை. இதனால் தட்சணமான இரக்கத்திலிருந்து எவனும் சுவர்க்கத்துக்கு வருகிறதில்லை என்று விசதமாகலாம்; ஆதலால், உலகத்தில் அநேகர் நினைக்கிறபடி வேண்டியது கேவல ஏற்கை மட்டுமல்ல;

அதுவுமன்றி, சடிதியான மோக்ஷம் என்கிறது ஒன்றுமில்லை; (7)ஏனென்றால், இது தட்சணமான இரக்கத்தை உத்தேசிக்கிறது. உலகத்திலிருக்கும்போது தட்சணமான இரக்கத்திலிருந்து தட்சணமான மோட்சத்தை நம்பினவர்கள் சிலர் இருந்தார்கள்; அவர்கள் ஆவிகளானபோது, தங்களுடைய நரக சந்தோஷம், அல்லது தீமையின் சந்தோஷம், தெய்வவல்லமையினாலும், அதே காலத்தில் தெய்வ இரக்கத்தினாலும்,சுவர்க்கத்து சந்தோஷமாகவும் அல்லது நன்மையின் சந்தோஷமாகவும், மாற்றப்படவேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள்; அவர்கள் அப்படி விரும்பினபடியினால், தேவர்களால் அப்படி செய்யப்படவேண்டு மென்று உத்திரவு கொடுக்கப்பட்டது; தேவர்கள் அதன் பேரில் அவர்களுடைய நரக சந்தோஷத்தை நீக்கினார்கள். ஆனால் இது அவர்களுடைய உயிரின் அன்பின் சந்தோஷமாய், அதனால் அவர்கள் உயிராகவே இருந்தபடியினால், அப்பொழுது,எல்லா அறிவும் எல்லா சலனமும் அற்று இறந்து போய்விட்டது போல் அவர்கள் இருந்தார்கள்; அதுவுமன்றி, தங்களுக்கு சொந்தமானதைத்தவிர வேறு எந்த உயிரையும் அவர்களுக்குள் சுவாசித்தல் முடியாததாயிருந்தது; ஏனென்றால், பின். திருப்பப்பட்டிருந்த அவர்களுடைய மனதினுடையவும் சரீரத்தினுடையவும், எல்லா பொருள்களும் திருப்பிப்போடமுடியாது. ஆகையினால், அவர்களுடைய உயிரின் அன்பினுடைய சந்தோஷத்தை உள்ளே செலுத்தப்படுத்தலினால், அவர்கள் உயிர்ப்பிக்கப்பட்டார்கள். இதன் பிறகு, அந்த நிலைமையில், தாங்கள் வெளிப்படுத்த இஷ்டமில்லாத பயங்கரமானதும் கொடுமையானதுமாகிய சிலவற்றை அந்தரங்கமாய் உணர்ந்ததாக, அவர்கள் சொன்னார்கள். ஆகையினால், எந்த நரகத்து ஆவியையும் சுவர்க்கத்து தேவனாக மாற்றுதலைவிட ஒரு ஆந்தையை மணிப்புறாவாகவும், அல்லது ஒரு சர்ப்பத்தை ஆட்டுக்குட்டியாகவும், மாற்றுதல் மிக சுலபமென்று சுவர்க்கத்தில் சொல்லப்படுகிறது. மூன்று (8) வது: கிருஸ்துவ உலகத்தில் திருச்சபைகளின் கொள்கைகள், அந்தரங்கமாய்ப் பார்க்கும்கால் தட்சணமான இரக்கத்திலிருந்து தட்சணமான மோக்ஷம் வரும் என்பதற்கு எதிரிடையா யிருக்கின்றன; அப்படியிருந்தாலும், திருச்சபையின் புறம்பான மனிதர்கள் அதை

ஸ்திரப்படுத்துகிறார்கள். எல்லா திருச்சபைகளின் கொள்கைகளும், அந்தரங்கமாய் பார்த்தால், வாழ்க்கையைக் கற்பிக்கின்றன. மனிதன் தன்னையே பரிசோதித்து, தன்னுடைய பாவங்களைப்பார்த்து ஏற்றுக்கொண்டு, அவைகளை செய்ததாக ஒப்புக்கொண்டு, மனம் திரும்பி, பிறகு புதிய வாழ்வு வாழவேண்டுமென்றும், கற்பிக்காத கொள்கையையுடைய திருச்சபை என்ன இருக்கிறது? இந்த எச்சரிப்பும், உத்திரவும் இல்லாமல் தேவபிரசாதத்துக்கு யார் சேர்க்கப்படுகிறார்கள்? விசாரித்துப் பாருங்கள், நீங்கள் நம்புவீர்கள். தசாக்ஞையின் தர்ம நியமங்களின்பேரில், தன்னுடைய கொள்கையை ஏற்படுத்தாத சபை என்னஇருக்கிறது? தசாக்ஞையின் தரும நியமங்கள் வாழ்க்கையின் தரும நியமங்களாயிருக்கின்றன. தான் கேட்டபோதே நன்றாய் வாழ்கிறவன் இரட்சிக்கப்படுகிறானென்றும், துன்மார்க்கமாய் வாழ்கிறவன் தண்டிக்கப்படுகிறானென்றும், ஒத்துக்கொள்ளாத திருச்சபையைச் சேர்ந்த ஏதாவது கொஞ்சம் இருக்கப்பெற்ற அந்த சபையின் மனிதன் யார் இருக்கிறான்? ஆகையினால், முழு கிருஸ்துவ உலகத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கையாய்க்கூட இருக்கிற அதனேசியஸ் என்பவர் ஏற்படுத்திய சமய கோட்பாட்டில், "உயிருடன் இருக்கிறவர்கள் பேரிலும் இறந்துபோனவர்கள்பேரிலும் தீர்ப்பு சொல்ல ஆண்டவர் வருவாரென்றும், அப்பொழுது, நன்மையை செய்திருக்கிறவர்கள் அனந்த கால வாழ்வில் பிரவேசிப்பார்களென்றும், தீமை செய்தவர்கள் சதாகால தீயில் பிரவேசிப்பார்க
(9) ளென்றும்" சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா திருச்சபைகளின் கொள்கைகளும், அந்தரங்கமாய் பார்த்தால், வாழ்க்கையைக் குறித்துச் சொல்லுகிறதென்று, இதிலிருந்து வெளிப்படையாகிறது; அவைகள் வாழ்க்கையைப்பற்றி கற்பிக்கிறபடியினால், மோட்சமானது வாழ்க்கைக்கு தக்கபடி இருக்கிறதென்று, அவைகள் கற்பிக்கின்றன; ஒரு மனிதனுடைய ஜீவன் ஒரு நொடிநேரத்தில் அவனுக்குள் ஊதப்படுகிறதில்லை, ஆனால், அது ஒன்றன்பின் ஒன்றாய் உருவாக்கப்பட்டு, அவன் தீமைகளை பாவங்களாக நீக்குகிறபோது சீர்படுத்தப்படுகிறது; ஆகையால், அவன் பாவம்என்னவென்று தெரிந்துகொண்டு, அதை ஒப்பி, ஏற்றுக்கொள்கையில்

தன்னுடைய சித்தத்தில் அதற்கு அனுகூலமாய் இல்லாமல், அதனால் அதைவிட்டு நீங்குகிறான்; பிரமக்கியானத்துக்குச் சேர்ந்த வழிவகைகளைக் கற்றுக்கொள்ளும்போதும் அப்படியே செய்கிறான். இந்த இரண்டு வழிகளாலும் மனிதனுடைய உயிர் உண்டாக்கப்பட்டு சீர்படுத்தப்படுகிறது; ஒரு நொடிநேரத்தில், அவைகள் உள்ளே செலுத்தப்படாது; ஏனென்றால், தன்னில் தானே நரகத்துக்கு அடுத்ததா யிருக்கிற பரம்பரையான தீமை நீக்கப்பட வேண்டும்; அதற்குப் புதிலாய், தன்னில்தானே சுவர்க்கத்துக்கு அடுத்ததாயிருக்கிற நன்மையானது நடப்படவேண்டும். இந்த பரம்பரையான தீமையிலிருந்து, புத்தி விஷயத்தில் ஒரு ஆந்தைக்கும், சித்தம் விஷயத்தில் ஒரு சர்ப்பத்துக்கும் மனிதனை ஒப்பிடலாம்; சீர்பட்ட மனிதனை புத்திவிஷயத்தில் ஒரு புராவுக்கும் சித்தம் விஷயத்தில் ஆட்டுக்கும் ஒப்பிடலாம். ஆகையினால், அதனால் தட்சணமான சீர்படுதலும் மோக்ஷமும், ஒரு புராவாக ஓர் ஆந்தையும், ஒரு ஆடாக ஓர் சர்ப்பமும், சடிதியாய் மாறுதலைப் போல், ஒப்பீடா யிருக்கும். ஆந்தையினுடையவும் சர்ப்பத்தினுடையவும் சுபாவம் நீக்கப்பட்டு, புராவினுடையவும் ஆட்டினுடையவும் சுபாவம் நடப்பட்டால் ஒழிய, இது முடியாதென்று மனிதன் உயிரைப்பற்றி தெரிந்திருக்கிறவன் எவன், அறிந்து
(10) கொள்ளுகிறதில்லை? ஒவ்வொரு விவேகமுள்ள மனிதனும், அதிக விவேகமுள்ளவனாகலா மென்றும், ஒவ்வொரு புத்திசாலியும் அதிக புத்தியுள்ளவனாகலாமென்றும், விவேகமும் ஞானமும், மனிதனுடன் வளரலாமென்றும், சிலர்விஷயத்தில் இளம் பிராயம்முதல் ஆயுள் பரியந்தம் வரையில் வளருகிறதென்றும், மனிதனானவன் இவ்விதமாக தொடர்ச்சியாய் பரிபூரணமாக்கப்படுகிறானென்றும், தெரிந்தும்கூட இருக்கிறது. அப்படியிருக்கையில்,சூக்கும விவேகமும் ஞானமும் ஏன் இன்னும் அதிகமாய் அப்படி பரிபூரணமாக்கப்படாது? இது ஸ்தூல அறிவுக்கும் ஞானத்துக்கும் மேலே இரண்டுபடி ஏறுகிறது; அப்படி அது ஏறும்போது, அது வாக்குக்கு எட்டாததாயிருக்கிற தேவதாசம்பந்தமானதாய்விடுகிறது. இது தேவர்கள் விஷயத்தில் அனந்த காலம் வரையில் அதிகரிக்கிறதென்று மேலே சொல்லப்பட்டது. அனந்த

காலம் வரையில் பரிபூரணமாக்க செய்யப்பட்டுக்கொண்டிருப்பது ஒரு நொடிநேரத்தில் பரிபூரணமாக்கப்படுதல் முடியாத காரியமென்று, தான் இஷ்டப்பட்டால், யார் கிரகிக்கமுடியாது?

339. இவைகளிலிருந்து மோக்ஷத்தை, வாழ்க்கையைக் கொண்டு அடைய நினைக்கிறவர்கள் எல்லாரும், தட்சணமான இரக்கத்திலிருந்து எந்த தட்சணமான மோக்ஷத்தையும் நினைக்காமல், தன்னுடைய தெய்வபரிபாலனத்தின் சட்டங்களுக்கு தக்கபடி, ஆண்டவர் அதிலும் அதினூலும் செயல்படுகிறதும், இவ்விதமாக அதன் மூலமாய் மனிதனனவன் ஆண்டவரால் தூய இரக்கத்தினல் நடத்தப்படுகிறதுமாகிய மோக்ஷ வழிவகைகளை நினைக்கிறூர்களென்று, இப்பொழுது வெளிப்படை யாகிறது. ஆனல், மோக்ஷமானது வாழ்க்கையிலிருந்து வருகிறதென்று நினைக்காதவர்கள், மோக்ஷமானது சடிதியில் வரக்கூடியதென்றும், இரக்கமும் உடனே வரக்கூடியதென்றும், தருமத்திலிருந்து பக்தியை பிரிக்கிறவர்கள் நினைக்கிறதுபோல நினைக்கிறூர்கள். தருமமானது வாழ்க்கையா யிருக்கிறது; பக்தியானது முன்னிட்டு இல்லாவிட்டாலும், சாகும்காலத்தில் கூட உடனே உண்டாக்கப் படலாமென்றும்கூட அவர்கள் நினைக்கிறூர்கள். மனம் திரும்புதல் இல்லாமல் பாவங்களை மன்னித்தல், பாவவிமோசனமென்றும் இவ்விதமாக மோக்ஷமென்றும் நம்பி, தேவபிரசாதத்தை அணுகுகிறவர்களும், அதனுடன், குருமார்களின் மன்னிப்புகளையும், அவர்கள் இறந்தவர்களுக்குச் சொல்லும் பிரார்த்தனைகளையும், மனிதர்களுடைய ஆன்மாக்கள் பேரில் தாங்களிருக்கிறதாக சொல்லும் சக்தியிலிருந்து அவர்கள் கொடுக்கும் கொடைகளையும் நம்புகிறவர்களும் இதை செய்கிறூர்கள்.

340. IV. **தட்சணமான இரக்கத்திலிருந்து வரும் தட்சணமான மோக்ஷம் திருச்சபையில் தீபோன்று பரக்கும் சர்ப்பமாயிருக்கிறது.** தீ போன்று பரக்கும் சர்ப்பம் என்பதால், நரகத்துக்கு அடுத்த நெருப்பிலிருந்து, பிரகாசிக்கும் தீமை கருதப்படுகிறது; ஐசாயாவில் சொல்லப்பட்ட தீபோன்று பரக்கும் சர்ப்பம் என்ப

தால் கருதப்படுவதேயாகும்: "முழு பெலிஸ்தியாவே, உன்னை அடித்த கோல் முறிந்ததென்று அக களிப்பாயிராதே: பாம்பின் வேறிலிருந்து கட்டு விரியன் தோன்றும்; அதன் கனிபறக்கிற அக்கினி சர்ப்பமாயிருக்கும்" (XIV. 29). தட்சணமான இரக்கத்திலிருந்து தட்சணமான மோக்ஷத்தில் நம்பிக்கையிருக்கும்போது, அவ்விதமான தீமை திருச்சபையில் பரக்கிறது; ஏனென்றால், அதனால், I. சமயமென்பது தள்ளப்படுகிறது. II. சமாதானம் உண்டாகிறது. III. தண்டனை ஆண்டவருக்கு ஆரோபிக்கப்படுகி (2)றது. அதனால் மதமென்பதுதள்ளப்படுகிறது என்கிற முதல் சொன்னதைப்பற்றி: சமயத்தின் பிரதானம்சங்களாகவும் சர்வவியாபகமானவைகளாகவும் ஏக காலத்தில் இருக்கிற இரண்டு விஷயங்கள் இருக்கின்றன; அவைகளாவன, கடவுளை ஒத்துக்கொள்ளுதலும் மனம் திரும்புதலும். எப்படி வாழ்ந்தபோதிலும், இரக்கத்தினால் மாத்திரம் மனிதர்கள் இரட்சிக்கப்படுகிறார்களென்று நம்புகிறவர்களுக்கு அந்த இரண்டும் அருத்தமில்லாத சங்கதிகளாயிருக்கின்றன; ஏனென்றால், "ஓ, கடவுளே என்பேரில் இரக்கம்கொள்ளும்," என்று சொல்லுவதைவிட வேறு என்ன அவசியமிருக்கிறது? மதத்தைச் சேர்ந்த எல்லா இதரவிஷயங்களைப் பற்றியும், அவர்கள் கனமான இருளிலிருக்கிறார்கள்; நிஜமாகவே கனத்த இருளை அவர்கள் நேசிக்கிறார்கள். கடவுளை ஒத்துக்கொள்ளுதலாயிருக்கிற திருச்சபையின் முதல் முக்கியாம்சத்தைப்பற்றி, கடவுள் என்பதென்ன? அவரையார் பார்த்திருக்கிறார்கள்? என்று மாத்திரம் நினைக்கிறார்கள். கடவுள் இருக்கிறார் என்றும் அவர் ஒருவர் என்றும் சொல்லப்பட்டால், அவர்களும் அவர் ஒருவர் என்கிறார்கள்; அவர் மூவர் என்று சொல்லப்பட்டால், அப்படியே மூவர் இருப்பதாகவும், ஆனால் அவர்கள் ஒருவர் என்று சொல்லப்படவேண்டுமென்றும்கூட, சொல்லுகிறார்கள். அவர்கள் (3) விஷயத்தில் இதுதான் கடவுளை ஒத்துக்கொள்ளுதல் என்பது, மனம் திரும்புதலாயிருக்கிற திருச்சபையின் இரண்டாவது முக்கியாம்சத்தைப்பற்றி, அவர்கள் நினைக்கிறதேயில்லை, அதனால் எந்த பாவத்தையும் நினைக்கிறதில்லை; கடைசியில் பாவம் என்கிற ஒரு பொருள் இருப்பதாகக்கூட அவர்களுக்கு தெரிகிறதில்லை. "ஒரு

கிருஸ்துவன் சட்டத்தின் பந்தத்தில் இல்லாதபடியினால், சட்டம் அவர்களை தண்டிக்கிறதில்லை'' என்றும், ''கடவுளே, உம்முடையகுமாரன் பொருட்டு என்பேரில் இரக்கம்கொள்ளும்'' என்று சொன்னால், நீ இரட்சிக்கப்படுவாய் என்றும் கேட்டு, அதிக மனதிருப்தியுடன் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அவர்கள் விஷயத்தில் இது தான் வாழ்க்கையின் மனம் திரும்புதல் என்று சொல்லுவது. ஆனால் மனம் திரும்புதல் என்பதை எடுத்து விடு, அல்லது அதேவாகிறபடி, சமயம் என்பதிலிருந்து வாழ்க்கையை பிரித்துவிடு, பிறகு ''என் பேரில் இரக்கம் கொள்ளும்'' என்கிற' கேவல வார்த்தைகளைத்தவிர என்ன நிற்கிறது? அதனால் தான், அந்த வார்த்தைகள் மூலமாய் மோக்ஷமானது தட்சணமான தென்பதைத்தவிர வேறுவிதமாய் முன்னிட்டு இல்லாமல் போனாலும், சாகுங்காலத்திலாது அவர்கள் சொல்லமுடியாது. ஓர் குகையிலிருக்கும் முக்காலியிலிருந்துவந்த தெரியாததும் தெளிவற்றதுமான ஒரு சத்தமென்பதும், அல்லது ஓர் விக்கிரகத்தின் தேவவாக்கிலிருந்து வந்த அறிந்துகொள்ளப்படாத ஒரு உத்தரம்போன்ற தென்பதும் தவிர, வேதம் என்பது அவர்களுக்கு என்னமாயிருக்கிறது? சுருங்கச்சொல்லில், மனம் திரும்புதல் என்பதை நீர் எடுத்துவிட்டால், அதாவது, மதத்திலிருந்து வாழ்க்கையைப்பிரித்துவிட்டால், அப்பொழுது, மனிதன் நரகத்து நெருப்பிலிருந்து பிரகாசிக்கிற தீமையைத்தவிரவும் அல்லது திருச்சபையில் இருக்குந் தீபோன்ற பரக்கிற சர்ப்பத்தைத்தவிரவும் என்னமாயிருக்கிறான்? ஏனென்றால், மனம்திரும்புதல் இல்லாவிட்டால், மனிதன் தீமையிலிருக்கி(4)றான், தீமை என்பது நரகமாயிருக்கிறது. இரண்டாவது: தூய இரக்கத்தினால் மட்டும் தட்சணமான மோக்ஷம் வருகிறதென்கிற நம்பிக்கையினால், வாழ்க்கையின் சமாதானம் உண்டாகிறது. வாழ்க்கையின் சமாதானம், இறந்த பிறகு உயிரில்லை என்கிற அவபக்தியுள்ள மனிதனுடைய நம்பிக்கையிலிருந்தும் அல்லது, மோக்ஷத்திலிருந்து வாழ்க்கையைப் பிரிக்கிறவனுடைய நம்பிக்கையிலிருந்தும் உண்டாகிறது. பின் கூறியவன், சதாகால வாழ்க்கையை நம்பினாலும், மோக்ஷமானது தூய இரக்கமாயிருப்பதினாலும், கடவுள் யாருடைய மரணத்தையும் விரும்பாதபடியினால் அவருடைய

இரக்கம் சர்வவியாபகமாயிருப்பதினாலும், நான் நன்றாய் வாழ்ந்தாலும், துன்மார்க்கமாய் வாழ்ந்தாலும், இரட்சிக்கப்படக்கூடும் என்று நினைக்கிறான். இரக்கமானது ஏற்றுக்கொண்ட சமயத்தில் சொல்லியபடி வேண்டிக்கொள்ளவேண்டுமென்கிற சிந்தனை ஒரு சமயம் தோன்றினால், முன்னிட்டு இல்லாவிட்டாலும், இறப்பதற்கு இது முன் செய்யப்படலாமென்று அவன் நினைக்கலாம். அந்த சமாதானத்தில் இருக்கும் ஒவ்வொருவனும் விபசாரங்களையும், மோசங்களையும், அந்நியாயங்களையும், கொடுமைகளையும், தேவநிந்தனைகளையும், பழிவாங்குதலையும் குற்றமாக நினைக்கிறதில்லை; ஆனால், தன்னுடைய ஆன்மாவையும் சரீரத்தையும் அவைகளுக்கு எல்லாம் கலகம் செய்யவிட்டு விடுகிறான்; அதுவுமன்றி பரமார்த்த தீமையும் அதன் மோகங்களும் என்னவென்று அவனுக்கு தெரியாது: இதைப்பற்றி வேதத்திலிருந்து அவன் எதையாவது கேழ்விப்பட்டால், அது ஒப்பீடாய், கருங்காலியின் பேரில் விழுந்து மீண்டு எழுகிற ஒரு பொருளைப்போலவும், ஒரு அகழில் விழுந்து (5) முழுகிப்போகிற ஒரு பொருளைப்போலவும் இருக்கிறது. மூன்றாவது: அந்த நம்பிக்கையினால், தண்டனையானது ஆண்டவருக்கு ஆரோபிக்கப்படுகிறது. ஆண்டவர் தூய இரக்கத்திலிருந்து ஒவ்வொருவனையும் இரட்சிக்க சக்தியுள்ளவராயிருக்கும்போது, மனிதன் இரட்சிக்கப்படாவிட்டால், மனிதன் அல்லாமல் ஆண்டவர்தான் தப்பிதத்திலிருக்கிறார் என்கிற தீர்மானத்தை யார் விலக்கக்கூடும்? இரட்சிப்புக்கு சாதனம் பக்தி என்று சொல்லப்படக்கூடும்; ஆனால், அந்த பக்தி கொடுக்கப்படமுடியாதபடி எந்த மனிதன் இருக்கிறான்? ஏனென்றால், உலகப்பொருள்களிலிருந்து பின் வாங்கப்பட்ட ஆன்மாவின் எந்த நிலைமையிலும் நிச்சயத்துடன்கூட மனதில் பதியச்செய்யப்படக்கூடிய சிந்தனையாக மாத்திரம் அது இருக்கிறது; "அந்த பக்தியை நானே எடுத்துக்கொள்ளமாட்டேன்" என்றுகூட அவன் சொல்லலாம்; அது கொடுக்கப்படாமல், மனிதன் தண்டிக்கப்பட்டால், இரட்சிக்க சக்தியைவைத்துக்கொண்டு அப்படி செய்ய இஷ்டமில்லாமல் போன ஆண்டவர் பேரில் தான் குற்றமென்பதைத்தவிர தண்டிக்கப்பட்டவன் வேறு எதை நினைக்கக்கூடும்? அவர் இரக்கமில்லாதவர் என்று சொல்லு

கிறதாக இது இல்லையா? மேலும், அவனுடைய பக்தியின் பிரகாசத்தில், அவர் தூய இரக்கத்திலிருந்து ஒரு நொடி நேரத்தில் அவர்கள் எல்லாரையும் இரட்சிக்க சக்தியுள்ளவராயிருந்தபோதிலும், அவ்வளவு அநேகர் நரகதண்டனைக் குள்படுவதை அவர் எப்படி பார்க்கக்கூடும் என்று அவன் சொல்லலாம். தெய்வத்துக்கு விரோதமாய் அருவருப்பான குற்றம் சாட்டுதல் என்று மாத்திரம் சொல்லப்படக்கூடிய இவைகளைப்போன்ற அநேகவிஷயங்களை அவன் சொல்லலாம். இந்த யோசனைகளிலெல்லாமிருந்து, தூய இரக்கத்திலிருந்துவரும் தட்சணமான மோக்ஷத்தை நம்புதல், திருச்சபையில் தீபோன்ற பரக்கும் சர்ப்பமென்று இப்பொழுது விசதமாகும்.

*　　*　　*　　*　　*　　*

(6) மீந்துபோன கர்கிதம் நிரப்பப்பட பின்வருவதை சேர்ப்பதை மன்னிக்கவேண்டும்.

அனுமதி பெற்று சில ஆவிகள் நரகத்திலிருந்து ஏறி, "நீர் ஆண்டவரிடமிருந்து அநேக விஷயங்களை எழுதியிருக்கிறீர்; எங்களைக் கேட்டு கூட சிலது எழுதும்" என்று எனக்குக் கூறின. என்ன எழுதட்டுமென்று நான் கேட்டேன். நல்லதாகிலும் கெட்டதாகிலும் ஒவ்வொரு ஆவியும் தன்னுடைய சொந்த சந்தோஷத்திலிருப்பதாகவும், ஒரு நல்ல ஆவி தன் நன்மையின் சந்தோஷத்திலும், ஒரு கெட்ட ஆவி தன் தீமையின் சந்தோஷத்திலும் இருப்பதாகவும், எழுதும்படி அவைகள் கூறின. உங்களுடைய சந்தோஷம் என்னவென்று நான் கேட்டேன். அது விபசாரம் செய்தல் திருடுதல், மோசம்செய்தல், பொய்சொல்லுதல் இவைகளின் சந்தோஷமென்று அவைகள் கூறின. மறுபடியும் நான், அந்த சந்தோஷங்கள் என்ன குணமுடையவை என்று கேட்டேன். அவைகள் மற்றவர்களால், மலத்திலிருந்து வரும் துர்க்கந்தங்களாகவும், பிணங்களிலிருந்து வரும் அழுகின நாற்றங்களாகவும், அசையாதமூத்திரத்திலிருந்து வரும் நோவு உண்டாக்கும் நாற்றங்களாகவும் உணரப்படுகின்றனவென்று அவைகள் கூறின. அவைகள் உங்களுக்கு சந்தோஷமாயிருக்கின்றனவா என்று நான் கேட்டேன். அவைகள் மிகவும் சந்தோஷமாயிருக்கின்றனவென்று பதில் கூறின. அப்படியானால் அவ்விதமான பொருள்களில் வசிக்கிற சுத்தமில்லா மிருகங்

களைப்போல நீங்கள் இருக்கிறீர்களென்று நான் சொன்னேன். அதற்கு அவைகள் நாங்கள் அப்படியிருந்தால் அப்படியே இருக்கிறோம்; ஆனால், இவ்விதமானவைகள் எங்கள் நாசித்துவாரங்களுக்கு சந்தோஷங்களாக (7) யிருக்கின்றனவென்று பதில் அளித்தன. உங்களிடமிருந்து இன்னும் என்ன எழுதவேண்டுமென்று நான் கேட்டேன். நல்ல ஆன்மாக்களையும் தேவர்களையும் உபத்திரவம் செய்யாதிருந்தால் ஒவ்வொருவனும், மனிதர்கள் சொல்லுகிறபடி அதிக அசுத்தமானவர்களும்கூட தன்னுடைய சொந்த சந்தோஷத்தில் இருக்கவிடப்படுகிறானென்றும், ஆனால் நாங்கள் அவர்களை தொந்திரவு செய்யாமல் விடமுடியாதபடியினால், தூரத்தப்பட்டு, நரகத்தில் தள்ளப்பட்டோம், இங்கே பயங்கரமான தண்டனைக் குள்ளாகிறோம் என்றும் எழுதும்படி அவைகள் கூறின. நல்லவர்களுக்கு ஏன் தொந்திரவு செய்தீர்களென்று நான் கேட்டேன். வேறுவிதமாய் செய்ய முடியாதென்று அவைகள் கூறின. அவைகள் எந்த தேவனையாவது பார்த்து, அவனைச்சுற்றியிருக்கும் தெய்வமண்டலத்தை உணரும்போது கோபாவேசம் அவைகளை பிடித்துக்கொண்டது போலிருக்கிறது. பிற்பாடு,இவ்விதமாக நீங்கள் காட்டு மிருகங்களைப்போல கூட இருக்கிறீர்களென்று நான் சொன்னேன். இதைக் கேட்டபோது, வெறுப்பின் தீபோன்று தோன்றிய கோபாவேசம் அவர்கள் பேரில் வந்தது. அவைகள் தீங்குசெய்யாதபடி, நரகத்துக்கு மறுபடியும் தூரத்தப்பட்டன.

சூக்கும உலகத்தில் துர்கந்தங்களாகவும் கெட்ட நாற்றங்களாகவும் இந்திரிய கிராகியமாய் அறிந்துகொள்ளப்பட்ட சந்தோஷங்களைக்குறித்து மேலே (பி. 303-305, 324) பார்க்கவும்.



# Translations from Swedenborg.

## (Divine Love and Wisdom).

# பதி பசு பாச விளக்கம்.

---

### D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு

பதி பசு பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு எனு மிரண்டையும் மயக்கமற காட்டுதற்கு வெளிப்படுத்தப்பட்டது, வேத வேதாந்த சிந்தாந்தங்களுக்குத் திறவுகோலாயுள்ள சிவ ஞான போதமாகும். அதன் பொருளை திருவருட் தோன்றலாகிய மாதவ சிவஞான சுவாமிகள், தெளிவாய் உணர்த்தினர். மேலும், நீலகண்ட சிவாச்சாரியார் பிரம சூத்திரத்துக்கு சைவ சித்தாந்த கோட்பாடுகளை அனுசரித்து பாஷியமும் இயற்றியுள்ளார். இந் நூலும், பதி பசு பாசம் என்பவைகளைக் குறித்தே சுத்தாத்துவித சைவ சித்தாந்தத்தை அனுசரித்து, அரும்பெறல் அனுபூதிமானு கிய சுவாமியார் ஸ்வீடன்பர்க் என்பவரால் இயற்றப்பட்டது. இது சிவஞானபோத கோட்பாடுகளுக்கு ஓர் பெரும் பாஷியமாகவே யிருக்கிறது. முன் கூறிய பாஷியங்கள் நவீன மேல் நாட்டு (Science) பூத சாஸ்திரங்களை அனுசரித்து எழுதப்பட்டவைகளல்ல. இந்நூல் அங்ஙனம் எழுதப்பட்டுள்ளது. இதுவரையில் உலகத்தில் வெளிவந்த நூல்கள் எல்லாம் தத்துவ திரயங்களைக் குறித்து, மனிதர்களுக்கு ஒரு திட்டமான அபிப்பிராயத்தை வெளியிடாமல் புதைப் பொருளாகக் கூறியதால் மானிடர் மயங்கி நின்றனர். இந்நூல் சூக்குமப் பொருள்களின் சுபாவத்தையும் உருவத்தையும் அதிசயிக்கத்தக்க நூதன வழியில் கூறி, அநேக நூற்றாண்டுகளாக தத்துவசாஸ்திரிகள் உலகத்தில் மலைவுற்ற அநேக விஷயங்களை மிக தெளிவாய் விளக்கிக்காட்டுகிறது. உதாரணமாக, அன்பு சிவசொரூபமாகவும், ஞானம் அதன் தடத்தமாகவும் நம் நூல்களில் கூறப்படினும், தத்துவத்திரயங்களுக்கு அவைகளை அரோபித்து, சிருட்டி முதலிய பல விஷயங்களை விளக்கிக் காட்டினவர் ஒருவருமில்லை. ஆதலின், இந்நூல் ஈசுவரனுடைய ஓர் புதிய வெளிப்பாடாக மிளிர்கின்றது. இதை யாவரும் வாசித்து, அதன் பெரும்பயனை அடையும் பொருட்டு பிரார்த்திக்கின்றனன்.

(504 பக்கங்கள்) குறைத்த விலை ரூ. 1-0-0

# TRANSLATIONS FROM SWEDENBORG

## பதி பசு பாச விளக்கம்.

**(Divine Love and Wisdom).**

நியு "ரிபார்மர்" பத்திராதிபர்

D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு.

**SOME SELECT OPINIONS.**

*திருச்சிறுப்பள்ளி ஹீபர் காலேஜ் தமிழ் வித்துவான் திரு வாளர்,* **ந. மு. வேங்கிடசாமி நாடார்** *கூறுவது :—*

*"மொழிபெயர்ப்பாசிரியர் கூறுவது போன்றே இந்நூலின் உண்மைகள் பல சைவ சித்தாந்தத்துடன் ஒத்துள்ளன......... தத்துவ ஆராய்ச்சி செய்யும் ஒவ்வொருவரும் அவ்வுண்மைகளை புதிய முறையில் வெளிப்படுத்தும் இந்நூலை வாங்கிப்படித்தலால் நல்லபயனெய்தலாகும்......தாங்கள் புரியும் பணி மிகவும் போற்றற்பாலதாகும். இந்நூலைப்படித்தலால் என் அறிவிற்கு தெளிவுவுண்டாகின்றது.*

**Mr. T. Ramalingam Pillay,** M. A., Head Tamil Translator to Travancore Government says :—

" You have placed the Tamil world under a deep and heavy debt of obligation to you by publishing this monumental work..............."

**Mr. M. S. Purnalingam Pillay,** B.A., L.T., Emeritus Professor of English and a great Tamil Scholar says : " The Tamil world will certainly appreciate him (Swedenborg) as a Western expounder of oriental mysticism and evaluate his advancement on scientific lines better than the " city building," " market going races." The labours of Mr. Chettiar during the past decade or so, to exhibit the great philosopher of Sweden to the thoughtful minds of India deserve every encouragement.

**The Hindu,** the leading daily of Madras says :—

" This Tamil rendering has its own intrinsic value as a notable addition to the library of works on Western Philosophy in Tamil."

**Bharata Dharma,** a famous religious Journal says :—" In this age of Science, religion has to be presented in a scientific garb, so that the facts of Science may lead to the confirmation of the claims of Faith. Emanuel Swedenborg, both a deep scholar in the Sciences and a devoted student of Faith attempted this task in his several works. A peculiar sanction which this great author claims for his conclusions is his own personal realizations of spiritual truths."

**செந்தமிழ்** :—*இதில் பதி, சிவ சூரியன், காரண காரிய வேற்றுமைகள், சிருட்டி, பசு என்னும் விஷயங்கள் சற்றேறத் தாழ சைவ சமயக்கொள்கைகளைப் பின்பற்றி எழுதப்பட்டு இருப்பனவாகத் தோன்றுகின்றன.*

**குறைத்த விலை ரூ. 1–0–0**

# TRANSLATIONS FROM SWEDENBORG.

## பரம இச்சாஞான தீபிகை

### (Tamil "Doctrine of Uses.")

### D. கோபால செட்டியார் மொழி பெயர்ப்பு.

அநாதி முத்த சித்துருவாகிய சிவபெருமானின் இச்சாஞான சத்திகளின் சுபாவத்தையும், விரிவான தொழிற்பாடுகளையும் குறித்து, இந்த ஞான நூல் எழுதப்பட்டுள்ளது. இது வரையில் கிரகிக்கமுடியாத சிதம்பர இரகசியங்கள் போன்ற அநேக தத்துவ சாஸ்திர உண்மைகள் இந்நூலில் யாவருமறிய முதல் முதல் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## Some Select Opinions.

**Mr. M. S. Purnalingam Pillay,** B. A., L. T., writes :—"His exposition of the relationship of the three great verities or entities in the way of the South Indian Saiva Siddhantam, is really admirable and the Tamil world cannot but be indebted to you for.............."

**Mr. T. Baktavatsalam Pillay,** B.A., writes :—"I commend the book to the public, and would exhort you to bring out works of the same kind in the near future for the edification of the religiously and philosophically inclined people."

**Mr. V M. Kalyanasundram Pillay,** B.A., B.L., writes :—"I heartily thank you for your valuable work on behalf of the Siddhanta Public of South India."

**திருவாளர் ந. மு. வெங்கிடசாமி நாடார்** :—"அன்பு ஞானம் என்பவைகளைப்பற்றிய சில புதிய கருத்துகள் இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன."

**சுதேசமித்திரன்**:—"கடவுள் ஆன்மா இவைகளைப்பற்றின திட்டமான அபிப்பிராயம் சில இதில் காணப்படும்."

**தமிழ்நாடு** :—"இத்தத்துவ நூலில் தெய்வ உண்மைகள் பல தென்படுகின்றன. கொள்கைகளனைத்தும் சைவசித்தாந்தத்தைத் தழுவியிருக்கின்றன. இதில் இறைவனது இச்சா சக்தியைப்பற்றியும், ஞானசக்தியைப்பற்றியும் எழுதப்பட்டிருக்கிறது. பரம இச்சாசக்தியை விவரிக்கப் புகுந்த இடத்தில் அன்பைக் குறித்து சில சிறந்த சித்தாந்தங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்திலுள்ள ஆன்மாவும், கடவுளும், சரீரமும் எப்படி வேலை செய்கின்றன வென்ற விவரங்கள் அவசியம் அறியவேண்டியவை. தத்துவ விசாரணை யுடையவ ரொவ்வொருவருக்கும் இந்நூல் இன்றியமையாத தென்று சிபார்சு செய்கிறோம். பிறரும் இதனை வாங்கி வாசித்து நல்லவழி ஒழுகி பயனடைவாராக."

குறைத்த விலை ரூ. 0-8-0

# D. Gopaul Chetty's Philosophical Works.

### A RARE PHILOSOPHICAL WORK !!!

## Chidambara Rahasyam Revealed.

**By D. Gopaul Chetty, Late Editor, "New Reformer" Madras.**

The secrets of worship at Chidambaram and other connected mysteries are for the first time explained in a scientific and elaborate manner, in this book. The treatment of the secret regarding God's stay in the heart of man, is wonderfully new and not known to India hitherto.

### SOME SELECT OPINIONS.

**The Hindu Organ,** the leading Saiva Siddhanta paper of Ceylon says :—" The author of the above book, Mr. D. Gopaul Chetty, is a well-known student of Saiva Siddhanta Philosophy. He has made notable contribution to Saiva Siddhanta Philosophy as the Editor of the "New Reformer" and by his exposition of Swedenborg's philosophy and its similarity with the tenets of Saiva Siddhanta. The present work as stated by the author is an attempt to explain the meaning of the sacred mysteries, connected with the Chidambaram Temple. In explaining the mysteries, the author draws his inspiration from Swedenborg . . . The spiritual principle on which the Temple is built and the mysteries connected with its worship are explained in the book. It is a book that deserves study and we commend it to all those who are anxious to know and understand the spiritual aspect of Siva's dance."

**Siddhantam,** the leading Saiva Siddhanta Magazine of Madras says :—" The author of the book is a great man who compares the tenets of Saiva Siddhanta with those of the philosopher, Swedenborg of the West and explains many subtleties. With the help of the Science of Correspondence stated by Swedenborg, the author reveals the secrets of worship at Chidambaram. This book treats the subject well in a new way." *(Tamil opinion translated.)*

**Mr. K. S. Surya Murthi Pillay,** Tamil scholar of great fame as an expounder of the inner sense of the Saiva Scriptures and Government Pensioner says :—

" I am in thankful receipt of your book, " Chidambaram Rahasyam Revealed." The way in which you have explained the subtleties of worship at the Temple by the help of Saiva Siddhanta and Swedenborg deserves praise. Such expositions are to-day and for ever an ambrosia to the intelligence of men. I pray God that He may condescend to grant you the power and the long life to publish several books containing such revealation."

**Price Re. 1-0-0.**

# Saivaism, the Religion of the Ancient Britons

BY

D. GOPAUL CHETTY

*Late Editor, "New Reformer," Madras, and author of several philosophical works.*

In this book, the author has proved for the first time that the religion of Ancient Britons was Saivaism.

## SOME SELECT OPINIONS.

**Prof. M. S. Purnalingam Pillay,** B.A., L.T., says :—"I am really glad that you have worked up with great care the idea of the dispersion of the Ancient Tamils after the floods as far as Erin in the west of Europe ... ..... Your attempt thus to bring the East and West nearer together is certainly laudable."

**Mr. K. Chidambaranatha Mudaliar,** B.A., Shiyali, says :—"I am sure considerable pains have been given to give shape to your ideas regarding the subjects and I heartily welcome them as a noble and successful attempt on a particularly interesting topic."

**Mr. K S. Surya Murthi Pillai,** a Tamil scholar of great fame says :—"The way to find out the agreement in principles of different religions are different and your successful endeavour is astonishing. The thanks of the truth loving persons and thinkers are due to you.... The book is worthy of serious study and of deep thinking."

**Mr. J. F. Hall,** I.C.S , C.I.E., says :—"Many thanks for your latest book entitled "Saivaism, the Religion of the Ancient Britons," which I am reading with interest."

**The Hindu Organ,** says :—"The above is the interesting and suggestive title of a booklet by Mr. D. Gopaul Chetty, Late Editor, "New Reformer," Madras and author of many philosophical works noted for originality of conception and forcefulness of expression...... Mr. Chetty concludes his thesis by saying that the facts enumerated above lead to the conclusion that the religion of the Druid and the Hindu sprang from a common source. It will thus be seen that Mr. Chetty has done ample justice to the theory he advances........ The subject is so well handled by the author that it hardly admits of any criticism, destructive or constructive."

**Siddhantam** says :—"We welcome this publication as a substantial addition to the historical research of comparative religion."

Price Re. 0-8-0.

# NEW REVEALATION

THROUGH

# SWEDENBORG

READ THE HOLY BOOKS OF THIS NEW REVEALATION THAT TRULY RECONCILES THE CLAIMS OF FAITH AND THE FACTS OF SCIENCE.

